# சங்க்ஷேபசாரீரகம்

இரண்டாம் பாகம்



ஸ்ரீ மஹேசுவரானந்தகிரி சுவாமிகள்

இயற்றிய

பதவுரையும் விசேஷ உரையும்

உ

கணபதி துணை

# சங்க்ஷேபசாரீரகம்

**ஸ்ரீ ஸர்வஜ்ஞாத்ம முனிவர் இயற்றியது**

கோயிலூர் ஆதீனம்

**ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகரின் சிஷ்யரும்**

புனவாசல் மடத்தின் தலைவருமான

**ஸ்ரீ மஹேசுவரானந்தகிரி சுவாமிகள்**

இயற்றிய பதவுரையுடனும்

**மதுசூதனசரசுவதி சுவாமிகள்**

இயற்றிய "சாரசங்க்ரஹம்" என்ற வியாக்யானத்தை
அனுசரித்து எழுதிய விசேஷ உரையுடனும்
கூடியது

---

**இரண்டாம் பாகம்**

2, 3, 4 அத்தியாயங்கள்

---

இஃது

முன்னாள் திருக்களர் கோ. ஆ. வீர. மடாலயத் தலைவர்
**ஸ்ரீ ம. கிருஷ்ணாநந்த சுவாமிகளின்**
பொருளுதவியால் பதிப்பிக்கப்பெற்று

இந்நாள் ஷை மடாலயத் தலைவர்
**ஸ்ரீ மு. கோ. கி. கிருஷ்ணசாமி சுவாமிகளால்**
வெளியீடு செய்யப்பெற்றது.

ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சகத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.
1980

 [இரண்டு பாகங்களும் விலை ரூ. 50/-

தபால் செலவு தனி

முதற் பதிப்பு — 1980

கோ. ஆ. வீர. மடாலய வெளியீடு
திருக்களர்

---

இந்நூல் கிடைக்குமிடம் :—

ஸ்ரீ மு. கோ. கி. கிருஷ்ணசாமி சுவாமிகள்
தலைவர்
கோ. ஆ. வீர. மடாலயம்
திருக்களர் போஸ்ட்
நடுவகளப்பாள் (வழி)
மன்னார்குடி தாலூகா, தஞ்சை ஜில்லா.

ॐ

द्वितीयोऽध्याये अकारादि क्रमेण

## ॥ श्लोकानुक्रमणिका ॥

---

श्लोकसंख्या

श्लोकसंख्या

श्लोकसंख्या

प



प्र



बा

श्लोकसंख्या

द्वितीयोऽध्यायः समाप्तः ॥

## तृतीयोऽध्याये अकारादि क्रमेण

## ॥ श्लोकानुक्रमणिका ॥

---

श्लोकसंख्या

श्लोकसंख्या



च



ज



ज्ञा

श्लोकसंख्या

श्लोकसंख्या

म



य

श्लोकसंख्या

श



स

श्लोकसंख्या

तृतीयोऽध्यायः समाप्तः ॥

चतुर्थोऽध्याये अकारादि क्रमेण

## ॥ श्लोकानुक्रमणिका ॥

अ

श्लोकसंख्या

व



श



स

## சங்க்ஷேபசாரீரகம் இரண்டாவது அத்தியாயத்தின் விஷயாநுக்கிரமணிகை

## மூன்றுவது அத்தியாயம்



## நான்காவது அத்தியாயம்

உ
சிவமயம்

# சங்க்ஷேபசாரீரகம்

## இரண்டாவது அவிரோத அத்தியாயம்

சங்கரம் சங்கராசார்யம் கேசவம் பாதராயணம்
ஸூத்ர பாஷ்ய க்ருதௌ வந்தே பகவந்தௌ புனः புன:

### பிரத்யக்ஷாதி விரோதத்தால் சமன்வயத்தின் ஆக்ஷேபம்

**அவதாரிகை**

பூருவாத்தியாயத்தில் வேதாந்தங்களுக்கு சத்திய ஞான ஆனந்த அத்வயப் பிரம்மத்தின்கண் சமன்வயம் நிருபிக்கப்பட்டது.

அதில் இச்சங்கையுண்டாகின்றது. அத்வயப் பிரம்மத்தின்கண் சமன்விதத் தன்மையால் அறியப்பட்ட வாக்கியத்தினுலேயே அதன் ஞானம் சம்பவித்தலால் விவக்ஷிக்கப்பட்ட அனைத்தும் சித்தித்ததேயாம். ஆதலின் இனி இந்த உத்தரக் கிரந்தத்தினுல் பயன் என்னை என. சமாதானம்: அதனுல் (பூர்வ அத்தியாயத்தினுல்) அத்வயப்பிரம்மத்தின் கண் பிரமாணத்தின் அபாவத்தால் ஏற்பட்ட அசம்பாவனை நிவர்த்திக்கப் பட்டதாயினும், அனுதி சம்சாரத்தில் உண்டான துவைதத்தை விஷயம் பண்ணுகின்ற பிரத்தியக்ஷம் முதலியவற்றில் திட பிராமாண்யத்தின் அபிமானத்தால் பிரமேயத்தின் அசம்பவத்தைக் கருதுகின்ற புருஷனுக்கு ஞானம் உண்டாயினும் அர்த்தத்தின் சாதகம் ஆகின்றதில்லை. அதனுல் பேதத்தை கிரகிக்கின்ற பிரத்தியக்ஷாதியின் அவிரோதத்தை நிருபணம் செய்யும் பொருட்டு இந்த இரண்டாவது அத்தியாயம ஆரம்பிக்கத்தக்கதாம் என்னும கருத்தால் கூறிய சமன்வயத்தை முதலில் ஆக்ஷேபிக்கின்ருர்:—

**சுலோகம்**

एवं समन्वयनिरूपणयाऽवबोधो
जातोऽप्यखण्डविषयो ननु वाक्यजन्यः ।

मानान्तरेण परिपीडित एव जातो
भेदप्रकाशनकृताऽक्षनिबन्धनेन ॥ १ ॥

பதவுரை

ननु-சங்கை

वाक्यजन्यः-முதலில் போலியாக வாக்கியத்தாலுண்டானதாய்

एवंसमन्वयनिरूपणया-பிறகு இவ்வாறு சமன்வயத்தை நிருபித்தலால்

अखण्डविषयः-அகண்டப்பிரம்மவிஷயகமாய்

अवबोधः-ஞானமானது

जातोऽपि-உண்டானபோதிலும்

मानान्तरेण-பிரத்தியக்ஷம் முதலிய இதரப்பிரமாணத்தால்

परिपीडित एव-பீடிக்கப்பட்டதாகவே

जातः-உண்டாயிற்று

விரோதத்தின் பொருட்டு பிரத்தியக்ஷத்தை விசேஷிக்கின்றார்

भेदप्रकाशनकृता-பேதத்தைப்பிரகாசஞ்செய்வதும்

अक्षनिबन्धनेन - பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலுண்டானதுமான ஞானத்தால் பாதிக்கப்பட்டதாகவே உண்டாயிற்று (1)

(அ) அற்றேல் பிரமாணந்தரத்தால் விரோத ஞானம் உண்டாகும்போது சாப்தஞானமே உண்டாகின்றதில்லை. விரோத ஞானமில்லாதபோது அதன் உற்பத்தியாமெனின் அப்படியானால் சமன்வய ஞானத்தின் பிறகு ஒரு தடவை உண்டான அந்த ஞானத்தினாலேயே புருஷார்த்தம் சித்தித்தலின் இந்த அத்தியாயத்தை ஆரம்பித்தலால் பயனின்றுமென்று சங்கித்து அயோக்கியத்தன்மையின் நிச்சயத்திற்கு சாப்த நிச்சயத்தின் பிரதிபந்தகத்தன்மை இருப்பினும் சாப்த ஞான மாத்திரத்தின் பிரதிபந்தகத்தன்மை இன்றும். உபேக்ஷையை மூலமாகவுடைய வாக்கியத்தினாலும் அவ்வாக்கியார்த்தத்தின் பிரதீதியைக்காண்டலின் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

मज्जत्यलाबु सहसाऽप्सु शिला प्लवन्त
इत्यादिकादभिहितादिव वाक्यजातात् ।
जातापि बुद्धिरपबाधितगोचरैव-
मद्वैतबुद्धिरपि भेदधियाऽऽत्मनि स्यात् ॥ २ ॥

अलाबु-உலர்ந்த சுரைக்குடுக்கை

सहसा अप्सु-உடனே ஜலத்தில்

मज्जति-மூழ்குகின்றது

शिलाः பெரியபாராங்கற்கள்

प्लवन्ते-மிதக்குகின்றன

इत्यादिकात्-என்பது முதலிய

अभिहितात्-கூறப்பட்ட

वाक्यजातात्-வாக்கிய சமுதாயத்தால்

बुद्धिः जातापि-ஞானமுண்டாயினும்

अपबाधित गोचरा एव-பாதிக்கப்பட்ட விஷயமுடையதாகவே உண்டாகின்றது

தார்ஷ்டாந்தத்தினைக்கூறுகின்றார்.

एवम्-இவ்வாறு

आत्मनि-ஆன்மாவின்கண்

अद्वैतबुद्धिरपि-வேதாந்தத்தாலுண்டான அத்வைதப்பிரம்மவிஷயக ஞானமும்

भेदधिया-பேதவிஷயகஞானத்தால்

स्यात्-பாதிக்கப்பட்ட விஷயமுடையதாகவே ஆகும் (2)

(அ) அற்றேல் ஓர் வஸ்துவின்கண் விருத்தமான இரு தர்மங்களை கிரகிக்கின்றதாய் இரு பிரமாணங்களிருக்குமாயின் அப்போது பலமுடைய ஓர் பிரமாணத்தால் பலமின்றிய மற்றொரு பிரமாணம் பாதிக்கப்படும். சுருதிக்கு விஷயமான ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களின் பிரவிருத்தி சம்பவிக்கின்றதில்லை. ஆதலின்

அவற்றால் சுருதியின் பாதம் எப்படிக்கூறும் என்றாசங்கித்து ஜீவனது சொரூபத்தில பிரத்தியக்ஷாதியின் பிவிருத்தி சம்பவிக்கின்றது என்னும் கருத்தால் கூறுகின்றார்—

अध्यक्षगोचरमनर्थमवैमि वाक्यं
निर्मुक्तमाह मम रूपमनर्थहेतोः ।
एवं च वेदशिरसोऽक्षनिबन्धनेन
ज्ञानेन बाधनमतीव हि दुर्निवारम् ॥ ३ ॥

अध्यक्षगोचरम्-யானை பிரத்தியக்ஷசித்தமான எனது வடிவத்தை

अनर्थमवैमि-பார்தமுடையதாக அறிகின்றேன்

वाक्यं -வேதாந்த வாக்கியமானது

मम रूपम्-எனது வடிவத்தை

अनर्थहेतोः- கருத்திருத்துவாதிடர்தம் அதன்காரண அவித்தை யாகிய இவைகளினின்றும்

निर्मुक्तमाह-விடுபட்டதாகக் கூறுகின்றது

एवं च-இவ்வாறுதுப்போது

वेदशिरसः-வேதாந்த வாக்கியத்திற்கு

अक्षनिबन्धनेन-பிரத்தியக்ஷத்தாலுண்டான

ज्ञानेन-ஞானத்தால்

बाधनम्-பாதம்

अतीव दुर्निवारम्-அத்தியந்தம் நீக்கமுடியாதாம்

என்னுடைய சொரூபத்தை பிரமாதிருத்தன்மை கருத்திருத்தன்மை நானுவித துக்கம் முதலியவற்றின் போக்திருத்தன்மை வடிவ அனர்த்தத்தால் கலக்கமுடையதாக அறிகின்றேன். “இவ்வான்மா பசி தாகம் சோகம் மோகம் சரை மரணம் இவைகளற்றதாயிருக்கின்றது. உலகத்தோருக்குள்ள துக்கத்தால் பற்றப்படுகிறதில்லை. புறம்பாயுளன் அசங்கன் இப்புருஷன் தத்வமசி” என்பது முதலிய வாக்கியம். என்னுடைய சொரூபத்தை அனர்த்தத்தின் ஏதுவான அவித்தை அதன் காரியங்களி

வீன்றும் விடுபட்டதாகக் கூறுகின்றது. இவ்வாறுகும்போது விருத்த விஷயக இரண்டு ஞானமும் சத்தியம் ஆகற்குந் தகுதி அன்றும். ஆதலின் எல்லா மகா ஜனங்களுக்கும் சம்மதமும் முதலில் பிரவிருத்தித்ததும் பிரத்தியக்ஷம் முதலியவற்றால் உண்டானதும் ஆன ஞானத்தால் வேதாந்த வாச்யத்திற்கு பாதத்தை நீக்கவே முடியாதாம். சத்தியஞானனந்தப் பிரம்மம் ஔபநிஷதத்தன்மை சுருதியினல் சுருதியினும் இதரப் பிரமாணத்திற்கு விஷயமாவதே இன்றும் அங்ஙனமாயினும் பிரத்தியக்ஷம் முதலியவற்றல் சித்தித்த பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மைக்கு விரோதமானதால் அதற்கு அனந்தத்தன்மை சிந்திக்காது. இவ்வாறு அநுபவத்தால் சித்தித்த பிரமாதா முதலிய சொரூப விசேஷமும் அதற்கு சித்திக்காது. ஆதலின் ஆண்டும் விரோதம் நீக்கமுடியாதாம் என்பது கருத்து (3)

(அ) அற்றேல் சுருதியோடு விரோதம் உண்டாகும்போது பரமார்த்த சத்தியத்தன்மை அம்சத்தால் அதற்கு உபஜீவியமற்ற பிரத்தியக்ஷாதி ஞானமே முதலில் பிரவிருத்தித்ததாயினும் இரஜதாபாவஞானத்தால் இரஜதப் பிரத்தியக்ஷம் போன்று பாதிக்கப்படுகின்றதெனின் அற்றன்று. தனது சமானபலமுடைய கருமகாண்டத்தோடு விரோதமிருத்தலால் தனது விஷயத்தின்கண் நிலைபெருத வேதாந்த வாக்கியத்திற்கு பிரத்தியக்ஷாதியை பாதிக்குந்தன்மை பொருந்தாமையின் என்னும் கருத்தால் கூறுகின்றார்:—

**कर्तृत्वमाह मम कर्मविधिर्नियोग-**
**संबन्धपूर्वकमपास्तसमस्तभेदम् ।**
**मामाह वेदशिरसो वचनं तथा च**
**सत्यस्य दुःस्थितमिवापतति प्रमात्वम् ॥ ४ ॥**

**कर्मविधिः** – தரிசபூர்ணமாசம் முதலிய கருமத்தை விதிக்கும் வாக்கியம்

**मम** – சொர்க்கத்தில் விருப்பமுள்ள எனக்கு

**नियोगसंबन्ध पूर्वकम्** – நியோக சம்பந்தத்தைப் பிரதிபாதித்தல் வாயிலாக அதன் அனுபபத்தியால்

**कर्तृत्वमाह** – கருத்திருத்தன்மையைக் கூறுகின்றது. அற்றேல் கருமத்தை விதிக்கின்ற இத்துணை மாத்திரத்தால் யாது விரோதம் சொல்லப்பட்டது எனுமிடத்து அந்த விரோதத்தினைக் கூறுகினுர்

**वेदशिरसो वचनं** – வேதாந்த வாக்கியம்

**अपास्तसमस्तभेदम्** –கருத்திருத்தன்மை முதலிய விசேஷமின்றிய நிர்விசேஷவடிவமாக

**मामाह** – என்னைக்கூறுகின்றது

**तथा च सति** - இவ்வாருகும்போது

**अस्य** – வேதாந்த ஜன்னிய ஞானத்திற்கு

**प्रमात्वम्** – பிராமாண்யம்

**दुःस्थितमिव** – நிலைபெருததே

**आपतति** – ஆகின்றது

கருத்திருத்தன்மை போக்திருத்தன்மைக்கு உபலக்ஷணமாம். பிரத்தியக்ஷாதியின் அனுக்கிரகத்தால் வலிமையடைந்துள்ள கரும காண்டத்தோடு விரோதமுண்டாகும்போது வேதாந்த வாக்கியத்தாலுண்டான ஞானத்திற்கு பிராமாண்யம் சித்திக்காதென்பது பொருள்.

உபஜீவ்யம் – ஆதாரம், ஆசிரயம் (4)

(அ) அற்றேல் பிரத்தியக்ஷாதிக்குப்போன்று வேதாந்தத்திற்கும் சமன்வய அத்தியாயத்தால் அத்வயப் பிரம்மத்தின்கண் கருமகாண்டத்திற்கு விரோதமில்லாமல் பிராமாண்யம் நிரூபிக்கப்பட்டமையின் கரும காண்டத்தால் பாதம் எங்ஙனமாம் என்ருசங்கித்து ஒரு வஸ்துவிற்கு ஒரே காலத்தில் இரண்டு வடிவம் (கருத்திருத்துவம் அகருத்திருத்வம்) பொருந்தாமையால் ஏதேனும் ஒரு வடிவத்திற்கு பாதம் சொல்லத்தக்கதாகும்போது பிரத்யக்ஷம் முதலியவற்றின் சமுதாயத்திற்கே சுருதியின் பாதகத்தன்மை பொருத்தமாம். சமான பலமுடைய சைன்யங்களோடு கூடிய இரண்டு இராஜாக்களுக்குள் ஒருவனுக்கு தேர், யானை, குதிரைகளின் அதிகத்தன்மையால் மற்றவனைப் பாதிக்குந்தன்மை காணப்படுகின்றதல்லவா ? என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர் :—

प्रत्यक्षकर्मवचसोरुभयोः समूहः
सामर्थ्यवाननुपनिषद्विषयापहारे।
एकैकमेव तु न पारयतेऽपहर्तुं
स्वार्थप्रकाशनविधावुभयोः समत्वात् ॥ ५ ॥

**प्रत्यक्षकर्मवचसोः**—பிரத்தியக்ஷமும் கருமத்தை விதிக்கும் வாக்கியமுமாகிய

**उभयोः समूहः**—இரண்டன் சமுதாயம்

**उपनिषद्विषयापहारे**—உபநிடதத்தின் விஷயமான அத்துவிதத்தைப் பாதிப்பதன்கண்

**सामर्थ्यवान्**—சாமர்த்தியமுடையது

**एकैकमेव तु**—ஒவ்வொன்றோ (தனித்தனிப் பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணம்)

**अपहर्तुं**—பிறவற்றை பாதிப்பதன்கண்

**न पारयते**—சாமர்த்தியமுடையதன்றாம்

எதனால் சாமர்த்தியமுடையதன்றாமென்னுமிடத்துக் கூறுகின்றார்

**स्वार्थप्रकाशनविधौ**—தத்தமது பொருளை விளக்குவதில்

**उभयोः**—இரண்டற்கும் அதாவது வேதாந்தத்திற்கும் தனித்தனி பிரத்தியக்ஷாதிகட்கும்

**समत्वात्**—சமத்தன்மையிருத்தலின் (5)

(அ) அற்றேல் பிரமாணத்தின் சமுதாயம் தனியே (வேறு) பிரமாணம் அன்றாம். பிரத்தியக்ஷாதி பிரமாணமும் ஒரே காலத்தில் தத்தம் பொருளை சாதிக்கின்றதில்லை. அதனாலேயே கூறிய திருஷ்டாந்தம் விஷமமாம். என்றாசங்கித்து கரும காண்டத்தால் உபகரிக்கப் பட்டுள்ளது பிரத்தியக்ஷமாம். இதனால் வேதாந்த வாக்கியத்தின் பாதகமாம். அல்லது பிரத்தியக்ஷாதியினால் உபகரிக்கப்பட்ட கரும காண்ட வாக்கியம் வேதாந்த வாக்கியத்தை பாதிப்பதாகுக என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

ज्यैष्ठ्यात् समर्थमथवाऽक्षजमेकमेव
तस्यैव कर्मविधिरस्तु सहायभूतः ।
प्रत्यक्षमेव विधिवाक्यसहायमेवं
ब्रह्मात्मवस्त्वपहरिष्यति को विरोधः ॥ ६ ॥

**ज्यैष्ठ्यात्** - நிரபேக்ஷத்தன்மையால் முதலில் பிரவிருத்தித்தலின்

**अक्षजमेकमेव**—பிரத்தியக்ஷமொன்றே

**समर्थम्** -வேதாந்தத்தைப் பாதிப்பதன்கண் ஆற்றலுடையது

**तस्यैव**—அந்த பிரத்தியக்ஷத்திற்கே

**कर्मविधिः**—கருமகாண்ட வாக்கியம்

**सहायभूतः**—சகாயமாக

**अस्तु अथवा**—இருக்கட்டும் அல்லது

**प्रत्यक्षमेव**—பிரத்தியக்ஷப் பிரமாணமே

**विधिवाक्य**—கருமகாண்ட வாக்கியத்திற்கு

**सहायमस्तु**—சகாயமாக இருக்கட்டும்

**एवं ब्रह्मात्मवस्तु**—இவ்வாறு பிரம்மான்ம வஸ்துவை

**अपहरिष्यति**—பாதிக்கும்

**को विरोधः**—இவ்வாறு பாதிப்பதன்கண் யாது விரோதம்

சமுதாய பக்ஷத்தில் கூறிய அருசியை சகாயம் என்பதனுல் வெளிப்படுத்துகின்ருர். பிரத்தியக்ஷாதியின் பிரமேயத்தை கரும வாக்கியத்தாலும் காண்பிக்கப்பட்டபோது பிரத்தியக்ஷாதி ஞானம் அப்ராமாண்ய சங்கை யற்றதாக ஆகின்றது. அதனுல் கர்மத்தை விதிக்கும் வாக்கியம் அதற்கு சகாயமாம் என்பது பொருள். **(6)**

## பின்ன விஷயகத்தன்மையால் பிரத்யக்ஷாதி விரோதமின்ருமெனல்

(அ) உத்தரம் கூறப்படுகின்றது. பிரத்தியக்ஷாதிகளுக்கு வியவகாரத்தில் உபயோகமுள்ள பொருளைபோதிப்பதில் சாமர்த்திய முடையதாந் தன்மையால் வியாவகாரிக பிராமாண்யமேயுளது. தத்துவத்தைப்

போதிக்குந்தன்மை வடிவ பிராமாண்யம் இன்ரும். அவற்றின் பொருளிற்த இனி கூறப்படும். யுத்திகளாலும், சுருதிகளாலும் பாதிக்கப் படுந்தன்மையுண்மையின். வியவகாரிக்கத்தகாத பிரம்ம விஷயக வேதாந் தங்களுக்கோ தத்துவத்தைப் போதிக்குந் தன்மை வடிவ பிராமாண்யமே ஆம். ஆதலின் அவைகளால் பிரத்தியக்ஷாதியின் விஷயத்தின்கண் சத்தியத் தன்மைக்கு பாதம் உளதாயினும் அதன் வியவகாரிகத் தன்மை பாதிக்கப்படுகின்றதில்லை. இதனுல் சுருதியின சம்மதமான அத்வைதப் பிரம்மத்தின்கண் அவைகளுக்கு விரோதமின்ரும். ஆதலால கருத்திருத் தன்மை முதலிய பிரபஞ்சம் பிரத்யக்ஷம் முதலியவற்றல் சித்தித்த தாயினும், அதற்த வியாவகாரிகத் தன்மை உண்மையால் ஆன்மாவிற்கு வாஸ்தவமாக நித்திய முகதத்துவாதியை பிரதிபாதிக்கும சுருதிக்கு யாதொரு குறையும் இன்ரும் என்னும் கருத்தால கூறுகினுர்:—

अत्रोच्यते न खलु वेदशिरांसि मुक्त्वा
किंचित् प्रमाणमिह तत्वनिवेदनाय ।
शक्नोति येन भवतीह विरोधशङ्का
वेदान्तवाक्यमुखतोऽवगते प्रतीचि ॥ ७ ॥

अत्र उच्यते–ஈண்டு உத்தரம் கூறப்படுகின்றது
इह–இவ்வுலகின்கண்
तत्वनिवेदनाय–தத்துவத்தையறிவித்தற்கு
वेदशिरांसि–வேதாந்த வாக்கியங்களை
मुक्त्वा–விட்டு வேருன
किंचित् प्रमाणम् -யாதொரு பிரமாணமும்
न शक्नोति–ஆற்றலுடையதன்ரும்
वेदान्तवाक्यमुखतः–வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியத்தால்
अवगते-அறியப்பட்ட
इह प्रतीचि–இந்தப் பிரத்தியகான்மாவின்கண்
विरोधशङ्का–விரோத சங்கை
येन भवति–எதனுல் உண்டாம்

பிரத்தியகான்மாவின்கண் பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்குப் பிரவிருத்தியின்மையால் விரோத சங்கை இன்றும் என்பது பொருள். (7)

अज्ञातमर्थमवबोधयदेव मानं
तच्च प्रकाशकरणक्षममित्यभिज्ञाः ।
न प्रत्यगात्मविषयादपरस्य तच्च
मानस्य संभवति कस्यचिदत्र युक्त्या ॥ ८ ॥

**अज्ञातमर्थम्**-அறியப்படாதபொருளை
**अवबोधयदेव**- அறிவிப்பதுவே
**मानम्**-பிரமாணமாம்
**तच्च**-அந்தப்பிரமாணமே
**प्रकाशकरणक्षमम्**-பொருளை விளக்குவதில் ஆற்றலுடையதாம்
**इतिअभिज्ञाः**-என்று பட்டபாதரும்வேதாந்திகளும் கூறுகின்றனர்.

அஃது பொருத்தமேயாம். சாதகத்தின் அபாவமாகிய நிமித்தத்தாலுண்டான பிரமேயத்தின் அசத்துவ சங்கையை எது நீக்குகின்றதோ அதுவே பிரமாணமாம். அதுவும் அறியப்படாத பொருளை விஷயம் செய்வதேயாம். இதனாலேயே பிரமேயத்தின் சத்தை (இருப்பு) பிரமாணத்தின் அதீனமாம் எனக்கூறுகின்றனர். அப்படிக்கின்றேல பிரமாணத்தைக்கூறுதல் வியர்த்தமாகும். ஆதலின் அறியப்படாத பொருளை விஷயமாக உடையதே பிரமாணமாம் என்க. அதனால் என்னை எனின் ஆண்டுக்கூறுகின்றார்.

**अत्रयुक्त्या**-ஈண்டு யுக்தியினல் விசாரித்துப்பார்க்கின்
**तच्च**-அதுவும் (அறியப்படாததையறிவிப்பதுவும்)
**प्रत्यगात्मविषयात्** - பிரத்தியகான்மாவை விஷயஞ்செய்கின்ற பிரமாணத்தினும்
**अपरस्य कस्यचित्**-இதரமான யாதொரு
**मानस्य**-பிரமாணத்திற்கும்
**न संभवति**-சம்பவிக்கின்றதில்லை

இவ்வுலகின்கண் அனன்மாவிற்கு அஞ்ஞாதத்தன்மை சம்பவியாமையால் அனன்மவிஷயக பிரமாணம் அஞ்ஞாத வஸ்துவையறிவிப்பதன்றும் என்பது பொருள். ஈண்டு இஃது அபிப்பிராயமாம் பிராமாண்யமானது இருக்கின்றபொருளை விஷயஞ்செய்யுந்தன்மை வடிவம் அன்றும். அஃது கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றின் பிரத்யக்ஷத்தின்கண்ணும் இருத்தலின் சத்யமாயுள்ள பொருளை விஷயம் செய்யுந்தன்மை வடிவமும் அன்றும் அர்த்தகிரியையின் யோக்கியத்தன்மைக்கு சத்பதார்த்தத்தன்மையை ஒப்பிடின் அநிர்வசநீய பிரபஞ்சத்தின்கண்ணும் அஃது சம்பவித்தலால் அதனை கிரகிக்கின்ற பிரத்யக்ஷாதிகளுக்கும் பிரபஞ்சத்தின் தாத்துவிகத்தன்மையை நிஷேதிக்கின்ற சுருதியோடு விரோதமின்மையின். பிரபஞ்சத்தின் அபாத்யத்தன்மை வடிவ சத்துவமும் அன்றும். தற்காலத்திலுள்ள அபாத்தியத்தன்மை சொப்பனபதார்த்தத்திலும் இருத்தலினாலும் பாதாபாவம் நேத்திராதிக்கு விஷயம் ஆகாமையாலும் என்க. இதனாலேயே மூன்று காலத்திய அபாத்தியத்தன்மையும் சத்துவம் அன்றும். எதிர்காலத்திலுள்ள பாதாபாவத்தை இப்பொழுது கிரகித்தற்கு முடியாமையானும் என்க பிரபஞ்சமும் சத்தியம் அன்றும். திருசியத்தன்மை முதலிய ஏதுக்களால் கிளிஞ்சில், வெள்ளி போன்று என்பது முதலிய அநுமானங்களாலும் அத்வைத, சுருதியாலும் சுருதார்த்தாபத்தியாலும் அதற்கு பாத்தியத்தன்மை, உண்மையானும், ஆதலால் அறியப்படாத பொருளை அறிவிக்குந்தன்மையே பிரமாணங்களிலுள்ள பிராமாண்யமாம் என்று சொல்லவேண்டும். அஞ்ஞானமும் ஆன்மாவின்கண் முன்பு நிரூபிக்கப்பட்டதாதலின் அசம்பவமின்றும், படம்முதலியவற்றின் பிரமாணங்களில் அவ்யாப்தியும் இன்றும் அதற்கும் அதன் அவச்சின்ன அஞ்ஞாத ஆன்ம கோசரஞானத்திற்கு அதன் அம்சத்தில் பிரமாணத்தன்மை உண்மையின் ஒரு ஞானம் உண்டாகும் போது அதனை விஷயம் செய்கின்ற வேறு ஞானம் இருப்பதன்கண் பிரமாணம் இன்றும். ஆதலின் வேறு ஞானத்தில் அவ்யாப்தி இன்றும் அஞ்ஞான நிவர்த்தியினும் வேறாக பிரமாணத்தின் பயன் சம்பவியாமையாலும் வியவகாரம் அஃதின்றி சம்பவியாமையின், பரோக்ஷஞானத்தின்கண்ணும் சம்ஸயயோக்யத்தன்மை முதலியவற்றின் நிவர்த்திவடிவ பயனுளதேயாம் அந்த அஞ்ஞாதத்தன்மையும் சிதான்மாவின்கண்ணே உள்ளது. ஜடவஸ்துவிற்கு இன்றும் என்று கூறப்பட்டது.

ஆதலின் ஜடவஸ்துவை கிரகிப்பதாக பிரமாணம் இன்றும். ஆதலால் ஆன்மாவின் ஏகத்தன்மையைப்போதிக்கும் சுருதிக்கு பிரத்தியக்ஷாதி பிரமாணத்தால் பாதம் இன்றும். இப்பொருள் விசாரித்து என்பதனால் கூறப்பட்டது. (8)

(அ) அற்றேல் கருத்திருத்தன்மை முதலிய வடிவ ஆன்மாவிற்கு அக்ஞாதத்தன்மை சம்பவித்தலால் அதனைக்கிரகிக்கின்ற பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களோடு விரோதம் இருத்தலால் ஆன்மாவிற்கு நித்ய முக்தத்தன்மை முதலியவற்றைப் போதிக்கும் சுருதிக்கு பாதமாம் எனின் ஆண்டுக் கூறுகின்றார்: —

सर्वं पराग्विषयमेव हि मानजातं
वेदावसानवचनानि तु वर्जयित्वा ।
यद्भौतिकं किमपि भौतिकगोचरं त-
द्रूपप्रदीपकनिदर्शनतः प्रसिद्धम् ॥ ९ ॥

**वेदावसानवचनानि** – வேதாந்த வாக்கியங்களை

**वर्जयित्वा** – விட்டு வேறான

**सर्वं मानजातम्** – கருத்திரு முதலியவற்றை விஷயஞ்செய்கின்ற பிரமாண சமூகமனைத்தும்

**पराग्विषयमेव** – அநான்மமாத்திரத்தை விஷயஞ்செய்வதேயாம்.

வேதாந்தத்தினும் வேறானதாய் அநுபவத்திற்குக் காரணமாவதால், கடாதிப்பிரத்தியக்ஷம் போன்று இவ்வாறுசுப்போது பாதமுமின்றாம், கருத்திருத்தன்மை முதலிய தருமமுடைய அகங்காரமும் அகங்கார விசிஷ்ட ஆன்மாவும் சுத்தான்மாவின்கண் கற்பிதமாதலால் அதன் சாக்ஷியாகிய சுத்தான்மாவிற்கே ஆன்மத்தன்மையுண்மையின் சுவப்பிரகாசவடிவ அவ்வான்மாவின்கண் பேதத்தைக்கவருகின்ற பிரமாணம் யாதொன்றுமின்றாம். ஆதலினால் அதனோடு சுருதி விரோதமின்றாம். இதனாலேயே திருஷ்டாந்தத்தின் கண்ணும் அவ்வவ்விசிஷ்ட சைதன்ய விஷயகத்தன்மை இருப்பினும் சாத்தியவைகல்யம் (குறைவு) இன்றாம் என்பது கருத்து. மேலும் பிரத்தியக்ஷாதி பிரமாணம் பௌதிக (பூதங்களின் காரிய) மாத்திரத்தை விஷயஞ்செய்வது, பௌதிகமாய்

பிரகாசகமாய் இருத்தலால் உருவம் முதலியவற்றை விளக்குகின்ற விளக்கு முதலியவை போன்று என்னும் கருத்தால் கூறுகின்றார்.

यत्किमपि भौतिकम् - யாதொன்று பூதகாரியமாமோ

तत् भौतिकगोचरम् - அது பூதங்களின் காரியத்தையே விஷயஞ் செய்வதாமென்பது

रूपप्रदीपक - உருவத்தை விளக்குகின்ற

निदर्शनतः - தீபதிருஷ்டாந்தத்தால்

प्रसिद्धम् - பிரசித்தமாம்

சித்தாந்தத்தின் கண்ணும் வேதாந்த வாக்கியங்களுக்கு சப்தமயத் தன்மையால் பௌதிகத்தன்மை உண்மையின் ஆண்டுவியபிசாரமாம் என்று சொல்லற்க. ஆநுபூர்வீ (முன்பின் தன்மை வடிவ) சுவரம் முதலிய விசேஷமுடைய வாக்கியவடிவ வேதத்திற்கு கயிற்று அரவம் போல் அஞ்ஞாத பிரம்ம விவர்த்தத்தன்மையால் பௌதிகத்தன்மை இன்மையின் சித்தாந்தத்தின்கண் மனதின் கண்ணும் வியபிசாரம் இன்றாம். அதனால் கவரப்படுகின்ற கடாதிக்கும் பூதகாரியத்தன்மை உண்மையின். அதன் சாட்சியாகிய சொப்பிரகாச ஆன்மாவிற்கு அதனால் கவரப்படுந்தன்மை இன்மையின் (9)

(அ) அற்றேல் அபௌதிக கோசரத்தன்மையின் கண்ணும் பௌதிகத்தன்மை சம்பவித்தலால் இந்த அனுமானம் அப்பிரயோஜகம் (அனுகூலதர்க்கம் இன்றியது) ஆம் என்று ஆசங்கித்து வியங்கிய வியஞ்சகங்களுக்கு சமான ஜாதியினையுடையதாந்தன்மை நியமத்தை திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

यद्व्यञ्जकं किमपि लौकिकमीक्षितं तद्-
व्यंग्येन तुल्यमत्रलोकितमत्र जात्या ।
दीपः प्रकाशकतया विदितो हि लोके
रूपेण तैजसतया सदृशः प्रसिद्धः ॥ १० ॥

अत्र लोके-இவ்வுலகின் கண்

यत्किमपि-யாதொன்று

लौकिकं–இலௌகிகமாகவும்

व्यञ्जकम्–வியஞ்சகமாகவும்

ईक्षितम्–பார்க்கப்பட்டதோ

तत्–அஃது

जात्या व्यङ्ग्येन तुल्यम्–வியங்கியத்தின் சமான ஜாதியுடையதாக

अवलोकितम्–பார்க்கப்பட்டது

दीपः–தீபமானது

प्रकाशकतया–உருவத்தைப்பிரகாசஞ்செய்வதாக

विदितः–அறியப்பட்டுளது

रूपेण–உருவத்தோடு

तैजसतया–தேஜஸ்தன்மையால்

सदृशः प्रसिद्धः–சமானமாமென்பது பிரசித்தமாம்

ஈண்டு இலௌகிக வியஞ்சகமென்பதனல் வேதாந்தத்தினும் வேருன பிரமாணம் தெரிசிப்பிக்கப்பட்டது. ஆதலால் வேதாநதத்தின் கண் வியபிசாரமின்ரும் உருவமனைத்தும் தேஜஸேயாம் என்னும் வேதாந் தத்தின் மரியாதையால் வியங்கிய வியஞ்சகங்களுக்கு சமான ஜாதி கூறப்பட்டது. அல்லது சாங்கியமதப்படி தேஜஸைப்பிரகிருதியாக வுடையதாந்தன்மையால் இவ்வாறு கூறப்பட்டது. (10)

(அ) அற்றேல் எல்லாமும் மனதினல் கவரப்படுகின்றது. அந்த மனது எல்லாவற்ருேடும் சமான ஜாதியுடையதன்று. ஒன்றற்கு எல்லாவற்ருேடும் சமான ஜாதியையுடையதாந்தன்மை சம்பவியாமையின் என்று சங்கித்துக்கூறுகின்ருர்.

बुद्धिः समस्तविषयावगमे प्रवृत्ता
साऽपि प्रकाश्यविषयेण समानजातिः ।
बुद्धिश्च भौतिकतया श्रुतिषु प्रसिद्धा
तेनास्तु साऽपि खलु भौतिकगोचरैव ॥ ११ ॥

बुद्धिः–மனமானது புறக்கரணங்களின் சகாயத்தால்

समस्तविषयावगमे–எல்லா விஷயங்களையும் அறிவதன்கண்

प्रवृत्ता-பிரவிருத்தித்தது

साऽपि-அந்த மனமும்

प्रकाशविषयेण-தன்னாலுண்டான பிரகாசவிஷயத்தோடு

समानजातिः-சமானஜாதியினையுடையது

மனதிற்கு பிரகாஸ்யத்தின் சமத்தன்மையினையே கூறுகின்றார்.

बुद्धिश्च-மனமும்

भौतिकतया-பௌதிகத்தன்மையால்

श्रुतिषु-சௌம்மியனே அன்னமயம் மனம் என்பது முதலிய சுருதிகளில்

प्रसिद्धा-பிரசித்தமாம்

तेन-அதனால்

साऽपि-அந்த மனமும்

भौतिकगोचरमेव-பௌதிகத்தை விஷயஞ்செய்வதாகவே

अस्तु-இருக்கட்டும்

அந்த மனமும் பூதங்களின் காரியத்தையே விஷயஞ்செய்வதாம் அன்னிய மதஸ்தர்களுக்கு போன்று ஆன்மா சுகம் முதலியவற்றை விஷயஞ்செய்வதின்றும். இவ்வாருகவே மனதினால கவரப்படுகின்ற எல்லாவற்றிற்கும் பூத வடிவத்தன்மை உண்மையின் மனதிற்கும் அத் தன்மை உண்மையின் பிரகாசியத்தோடு சமமாம் என்பது பொருள்.

(அ) இவ்வாறு ஆன்மாவிற்கே அக்ஞாதத்தன்மை உண்மையின் அக்ஞாதவஸ்துவை விஷயஞ்செய்கின்றவைக்கே பிரமாணத்தன்மை உண்மையின் பிரபஞ்சத்திற்கு பிரமாண விஷயத்தன்மை சம்பவிக்கின்ற தில்லை. பிரத்தியக்ஷம் உருவம் முதலிய விசேஷமுடையதன் கண்ணேயே பிரவிருத்தித்தலின் நிர்விசேஷ ஆன்மாவின்கண் அதன் பிரவிருத்தி பொருந்தாமையானும் அனுமானம் முதலியவற்றிற்கும் பிரத்தியக்ஷத்தை ஆசிரயித்திருக்குந்தன்மையால் சவிசேஷ வஸ்து மாத்திரத்தை விஷயம் செய்யுந்தன்மை உண்மையாலும் சாமான்யத்தால் திருஷ்ட அனுமானத்திற்கு விசேஷித்து வஸ்துவை நிச்சயிக்குந்தன்மை யின்மையாலும் பிரத்தியக்ஷாதிகளுக்கு அநாத்ம மாத்திரத்தை விஷயஞ் செய்யுந்தன்மையாமென்னும் அபிப்பிராயத்தால் முடிக்கின்றார்:—

एवं प्रमाणमखिलं बहिरर्थनिष्ठं
वेदान्तवाक्यमपहाय यथोक्तहेतोः ।
न प्रत्यगात्मविषयं श्रुतिरप्युवाच
स्पष्टं पराञ्चिवचसाऽर्थमिमं यथोक्तम् ॥ १२ ॥

एवं - இவ்வாறு

वेदान्तवाक्यमपहाय - வேதாந்த வாக்கியத்தினும்வேறான

प्रमाणमखिलम् - பிரமாணமனைத்தும்

बहिरर्थनिष्ठम् - புறப்பொருளின் கண்ணேயே பிரவிருத்தியினை யுடையது

यथोक्तहेतोः-கூறப்பட்ட ஏதுவால்

வேதாந்தத்தினும் வேறானதாய் அநுபவகாரணத்தன்மை வடிவ ஏதுவால் பிரத்யகான்மாவை விஷயஞ்செய்வதின்றாம். அதாவது பின்ன விஷயகத்தன்மையால் பிரத்தியக்ஷாதிகட்கு வேதாந்தத்தின் பாதகத் தன்மையின்றாம் என்பது பொருள். சுருதியுமிப்பொருளை தெரிசிப்பிக் கின்றதெனக்கூறுகின்றார்.

श्रुतिरपि-உபநிடதமும்

पराञ्चिवचसा-பகிர்முகமாக சிருஷ்டித்தார் என்னும் வசனத்தால்

यथोक्तम्-கூறப்பட்ட

इममर्थम्-இந்த அர்த்தத்தினை (12)

स्पष्टमाह-வெளிப்படையாகக்கூறிற்று

(அ) அந்த சுருதியினையே படிக்கின்றார் :—

पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूः
तस्मात्पराङ् पश्यति नान्तरात्मन् ।
कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्ष-
दावृत्तचक्षुरमृतत्वमिच्छन् ॥ १३ ॥

स्वयंभूः-பிரஜாபதியானவர்

खानि-இந்திரியங்களை

पराञ्चि–வெளிவிஷயத்தையுடையதாகவே

व्यतृणत्–இம்சித்தார் (பகிர்முகமாகவே சிருஷ்டித்தாரென்பது பொருள)

तस्मात्–அதனால்

पराङ्–வெளிவிஷயத்தினையே

पश्यति–இந்திரியங்கள் பார்க்கின்றன

न अन्तरात्मन्–உள்ளே ஆன்மாவை பார்க்கின்றதில்லை

अमृतत्वमिच्छन्–மோக்ஷத்தைப்பிச்சிக்கின்றவனும்

आवृत्तचक्षुः–இந்திரியங்களை நிக்கிரகஞ்செய்தவனும்

धीरः–தீரனுமான

कश्चित्–பதினுயிரத்திலொருவன்

प्रत्यगात्मानम्–பிரத்தியகான்மாவை

ऐक्षत्–பார்க்கின்ருன்

நாநாவித அனர்த்தங்களோடு கூடிய வெளிவிஷயங்களையுடைய தாந்தன்மையே இம்சையாம். பிரத்தியகான்மா இந்திரியத்திற்கு விஷயமன்று. இதனுலேயே அநுமிதிக்கும் விஷயமன்று அத்தியந்தம் அதீந்திரியமான அர்த்தத்தில் வியாப்தி முதலியவை சம்பவியாமையின் என்பது கருத்து. (13)

(அ) கருத்திரு முதலிய பிரபஞ்சத்தின் திருசியத்தன்மை விவாதமற்றதாம். இவ்வாறாகவே யாதொரு பிரத்தியக்ஷாதிப்பிரமாணம் தனது விஷயத்தின் கண் கருமபாவ (செயப்படுபொருள்) வடிவ திருசியத்தன்மையை விடாமல் ஈண்டு உலகின் கண் ஞான சாதனத் தன்மையால் பிரசித்தமோ அது சடப்பொருளை விஷயஞ்செய்வதாய் அநானம விஷயகமெனா அங்கீகரிக்கத்தக்கது நேத்திராதி போன்று என்னும் நியமத்தைக் கருதிக்கொண்டு கூறுகின்ருர் —

यत्कर्मभावमनपास्य निजप्रमेये
संवित्तिसाधनतया जगति प्रसिद्धम् ।
मानं जडार्थविषयं तदिहाभ्युपेयं
न प्रत्यगात्मविषयं कथितोपपत्तेः ॥ १४ ॥

यन्मानम्–யாதொரு பிரத்தியக்ஷாதிப்பிரமாணம்

निजप्रमेये–தனது விஷயத்தின்கண்

कर्मभावम्–திருசியத்தன்மையை

अनपास्य–தியாகஞ்செய்யாமல்

इह जगति–இவ்வுலகின்கண்

संवित्तिसाधनतया–ஞானத்தின் சாதனத்தன்மையால்

प्रसिद्धम्–பிரசித்தமோ

तत्–அந்தப்பிரமாணம்

अजडार्थविषयम्–சடப்பொருளை விஷயஞ்செய்வதாக

अभ्युपेयम्–அங்கீகரிக்கத்தக்கது

திரண்ட பொருளைக்கூறுகின்றார்.

तत् मानम्– அந்தப்பிரமாணம்

न प्रत्यगात्मविषयम्–பிரத்தியகான்மாவை விஷயஞ்செய்வதின்றும்

कथितोपपत्तेः–எது திருசியத்தன்மையை விடாமல் என்பதாதியாக இசசுலோகததின் பூருவபாகத்தில் கூறப்பட்ட யுக்தியினல்

திருசியத்தன்மைக்கு அனன்மத்தன்மை நியமமாதலால் அதன் பிரமாணத்திற்கு அநான்மாவை விஷயஞ்செய்யுந்தன்மை யுண்மையால் ஆன்மாவிற்கு அதிருசியத் தன்மையுண்மையின் இப்பொருள் அங்கீகரிக்கத்தக்கது என்பதனுல் சூசிப்பிக்கப்பட்டது. (14)

(அ) இவ்வாறிருக்கட்டும் அதனுலென்னை யென்றுசங்கித்து ஆன்ம மாத்திரத்தின்கண் பிருவிருத்தித்த வேதாந்தங்கட்கு பின்ன விஷயகத்தன்மையுண்மையால் பிரததியக்ஷாதிப் பிரமாணத்தால் பாத மின்ருமெ என்னுமபிப்பிராயத்தால் அவைகளுக்கு ஆன்ம விஷயகத்துவத்தை சாதிக்கின்றார்:—

यत्तु प्रमाणमवधीर्य निजप्रमेये
कर्मत्वमर्थमवबोधयितुं प्रवृत्तम् ।
तत् प्रत्यगात्मविषयं भवितुं क्षमेत
तत्त्वमसिवचनं न ततोन्यदस्ति ॥ १५ ॥

**यत्तु प्रमाणम्** - யாதொரு பிரமாணம்

**निजप्रमेये** - தனது விஷயத்தின்கண்

**कर्मत्वमवधीर्य** - கருமத்தன்மையைத் தியாகஞ்செய்து

**अर्थमवबोधयितुम्** - பொருளை அறிவித்தற்கு

**प्रवृत्तम्** - பிரவிருத்தித்ததோ

**तत्** - அந்தப்பிரமாணம்

**प्रत्यगात्मविषयम्** - பிரத்தியகான்மாவை விஷயஞ்செய்வதாக

**भवितुं क्षमेत** - ஆதற்கு யோக்கியமாம்

அத்தகைய பிரமாணம் யாதெனிற் கூறுகின்றார்

**तत् तत्त्वमादिवचनम्** - அஃது தத்துவமசி முதலிய வாக்கியமாம்

**ततः अन्यद् नास्ति** - அதனினுமன்னியமின்றாம்

வேதாந்தங்கள் சுவப்பிரகாசப்பிரத்தியகான்மாவின்கண் கடாதியின்கண் நேத்திரம் முதலியது ஸ்புரணத்தையுண்டுபண்ணுவது போன்று ஸ்புரணத்தையுண்டுபண்ணாமலேயே அதன் அவித்தையின் நிவிருத்தியின் பொருட்டு அதனுகாரவிருத்தியையுண்டு பண்ணுகின்றதென நியாயத்தால் உபபாதனஞ் செய்யப்பட்டது இப்பொருள் கருமத்தைப்பரித்தியாகஞ் செய்து என்பதாதியால் கூறப்பட்டது. **(15)**

**(அ)** அற்றேல் அஞ்ஞாதார்த்தத்தை யறிவிப்பது பிரமாணமாம் அஞ்ஞாதத்தன்மையுமான்மாவிற்கேயாம் என்று கூறப்பட்டது அஃது பொருத்தமன்று இதனையறியேனென அநாத்மாவின் கண்ணும் அஞ்ஞாதத்தன்மையின் ஞானம் காணப்படுதலின் என்றாசங்கித்து கடாதியின்கண் நேத்திராதியின் பிரவிருத்திக்கு முன்பே அஃது அறியப்படுகின்றதா அல்லது பிரமாணத்தால் அஃது (கடாதி) அறியப்பட்ட போது அவ்வஞ்ஞாதத்தன்மையின்றி பிரமாணத்தால் அறியப்படுதல் பொருந்தாது என்னும் அர்த்தாபத்தியால் அஃது (அஞ்ஞாதத்தன்மை) அறியப்படுகின்றதா ? முதற் பக்ஷம் சரியன்றெனக்கூறுகின்றார்.—

**नाज्ञाततावगतिरस्ति जडेषु पूर्वं**
**मेयेषु तत्स्फुरणकारणवर्जितत्वात् ।**

मानोदयान्न हि पुरा किमपीह मानं
नापि प्रमेयबलतो जडता हि तस्य ॥ १६ ॥

पूर्वम्-பிரமாணப்பிரவிருத்திக்கு முன்பு

मेयेषु जडेषु-ஞானத்திற்கு விஷயமான ஜட பதார்த்தங்களில

अज्ञातता अवगतिः-அஞ்ஞாதத்தன்மையின் ஞானம்

न अस्ति-இன்றும்

எதனாலின்றுமெனில் அதற்குக்கூறுகின்றார்

तत् स्फुरणकारणवर्जितत्वात्-அதன் (स्फुरण) ஞான காரணமின்மையின

அதனையே தரிசிப்பிக்கின்றார்

इह-கடாதி விஷயத்தின் அஞ்ஞாதத்தன்மையில்

मानोदयात् पुरा-பிரமாணப்பிரவிருத்திக்கு முன்னர்

किमपि मानं नहि-யாதொரு பிரமாணமுமின்றும்

நேத்திராதியின் பிரவிருத்திக்கு முன்பு நேத்திராதியினால் அஞ்ஞாதத்தன்மையின் ஞானம் சம்பவியாமையினாலும் பிறனது மதத்தில் அப்போது அதனைச்சாதிக்கும் சாக்ஷியின்மையினாலும் என்பது பொருள்.

प्रमेयबलतः-பிரமேயத்தின் சாமர்த்தியத்தாலும்

तस्य-அவ் அஞ்ஞாதத்தன்மையின்

नापि-சித்தியின்றும்

जडता हि-அஃது ஜடமாதலின் (16)

(அ) அற்றேல் ஆன்மாவைப்போன்று கடாதியே தன் கண் உள்ள அஞ்ஞானத்தை பிரகாசஞ்செய்வதாகுக என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

नाज्ञातताबगतये स्वयमेव बाह्यं
मेयं समर्थमवबोधविलक्षणत्वात् ।
नापि प्रमाणमवबोधकमस्ति किञ्चित्
मानोदयात्पुर इति स्फुटमभ्युपेयम् ॥ १७ ॥

**बाह्यं मेयं**-புறப்பொருள்

**स्वयमेव**-தானே

**अज्ञाततावगतये**-தன்னிடத்துள்ள அஞ்ஞாநத்தன்மையை விளக்குவதில்

**न समर्थम्**-சாமர்த்தியமுடையதன்றும்

**अवबोधविलक्षणत्वात्**-ஞானவடிவமின்மையின்

**स्फुटम्**-அபரோக்ஷமாகும்படிக்கு

**अवबोधकम्**-அறிவிக்கின்ற

**किञ्चित् प्रमाणम्**-யாதொரு பிரமாணமும்

**मानोदयात्पुरः**-பிரமாணப்பிரவிருத்தியினும் வேறாக

**अभ्युपेयं**-அங்கீகரிக்கத்தக்கதாக

**नापि अस्ति**-இன்றும்

நேத்திராதியினுலும் அதனது ஞானமின்றும் அஞ்ஞானத்திற்கு நேத்திராதியின் யோக்கியத்தன்மையின்மையின் மனதினுலும் அதன் ஞானமின்றும் மனோவியாபாரமின்றிய சுழுப்தி முதலியவற்றிலும் அஃது அறியப்படுதலின் அநுமானுதியினுலும் அதன் ஞானமின்றும் அதன் அநுபவம் பிரத்தியக்ஷமாதலால் அநுமானத்தின் பயனுகாமையின் கடாதியறியப்பட்டபோது அஃது (அறியப்படுதல்) பிறிதோராற்றுல் பொருந்தாமையால் (அஞ்ஞானமின்றி பொருந்தாமை வடிவ அர்த்தாபததியால்) அதன் ஞானமாமென்பதும் சரியன்று கடாதியின் கண் அஞ்ஞாதத்தன்மையின் ஞானமின்றி கடாதியின் ஞானத்தின்கண் பிரமைத்தன்மை சித்தியாமையால் அதன் (கடாதியின்) பிரமிதத் தன்மையே சித்தியாமையின் என்பது கருத்து. (17)

(அ) மேலும் முன்பு கடாதியின் அஞ்ஞாதத்தன்மையின் ஞானமில்லாவிடின் அதனையறியும் வேட்கை வாயிலாக பிரமாணத்தின் பிரவிருத்தி சம்பவியாமையால் பிரமேயத்தின் ஞானமுண்டாகாது. பிரயாதாவிற்கு அறியும் வேட்கையின்றி அதனையறியும் பொருட்டு நேத்திராதியின் வியாபாரத்தைச்செய்யுந்தன்மை சம்பவிக்கின்றதில்லை யல்லவா மற்றும் முன்பு கடாதியின அஞ்ஞாதத்தன்மையின் ஞானமில்லாதபோது அதன் ஸ்புரணம் பிரமாணத்தின் பயனுக சித்திக்காது.

அந்த ஸ்புரணத்திற்கு கடாதியின் சுவபாவத்துவ சங்கையை நீக்க முடியாமையின என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

नाज्ञाततामनवगम्य पुरा प्रवेशात्
मानस्य किंचिदपि मानबलेन बोद्धुम् ।
शक्नोति कश्चिदपि मानबलेन बुद्धं
किं वा स्वभाव इति निश्चयहेत्वभावात् ॥ १८ ॥

**मानस्य प्रवेशात्**–பிரமாணத்தின் பிரவிருத்திக்கு

**पुरा**–முன்பு

**अज्ञाततामनवगम्य**–கடாதியின் அஞ்ஞாதத்தன்மையையறியாமல்

**मानबलेन**–பிரமாணத்தின் வலிமையால்

**किंचिदपि**–அற்பமாவது

**बोद्धुम्**–(இஃது அறியப்பட்டது என்று) அறிதற்கு

**कश्चिदपि**–ஒருவனும்

**न शक्नोति**–சமர்த்தனன்றும்

எதனால் சமர்த்தனன்று என்னுமிடத்துக்கூறுகின்றார்

**मानबलेन**–பிரமாணத்தின் வலிமையால்

**बुद्धम्**- இஃது அறியப்பட்டதா

**किं वा स्वभावः**அல்லது கடத்தின் ஸ்புரணம் சுபாவமா

**इति निश्चयहेत्वभावात्**–என்று நிச்சயிக்கும் காரணமின்மையின்

நேத்திராதியின் வியாபாரத்தின் பின்னருண்டாவதால் ஞானம் நேத்திராதி ஜன்னியமாம் என நிச்சயமுண்டாகின்றது என்று சொல்லற்க முன்பு பிரமேயத்தின் அஞ்ஞாதத்தன்மையின் ஞானமில்லாதபோது நேத்திராதியின் வியாபாரத்தினனந்தரத் தன்மையையறிய முடியாமையின் என்பது கருத்து, ஸ்புரணம்=விளக்கம். (18)

(அ) கூறிய பொருளில் திருஷ்டாந்தத்தைக்கூறுகின்றார்:—

प्रक्षालनेन धवलं किमिदं बभूव
किं वा पुराऽपि धवलं स्वयमेव वस्त्रम् ।

इत्येवमेव न विवेक्तुमलं कदाचित्
यो दृष्टवान्न मलिनं वसनं पुरस्तात् ॥ १९ ॥

**यः**–யாதொரு மனிதன்
**मलिनं वसनं**–அழுக்கு வஸ்திரத்தை
**पुरस्तात्**–முன்பு (ஓர்போதும்)
**न दृष्टवान्**–கண்டிலனோ (அவன்)
**इदं वसनम्**–இந்த வஸ்திரமானது
**प्रक्षालनेन**–துவைத்தலினால்
**धवलं बभूव किं**–வெண்ணிறமாயிற்று
**किं वा पुराऽपि**–அல்லது முன்னமேயே
**स्वयमेव धवलं**–இயற்கையாகவே வெண்ணிறமுடையதா
**इत्येवमेव**–என்று இந்தப்பிரகாரம்
**विवेक्तुम्**–பிரித்தறிதற்கு
**कदाचित् न अलम्**–ஓர் போதும் சமர்த்தனுகான் (19)

(அ) தார்ஷ்டாந்தத்தினைக்கூறுகின்றார்:—

एवं पुरानधिगतं यदि नानुभूतं
मानेन बोधितमिदं प्रतिभाति मेयम् ।
न स्वप्रकाशमिति शक्यमिदं विवेक्तुं
केनापि नैव तदवस्थतयैव दृष्टेः ॥ २० ॥

**एवं पुरा**–இவ்வாறு முன்பு
**अनधिगतं**–வஸ்து அஞ்ஞாதமாக
**यदि न अनुभूतं**–அநுபவிக்கப்படவில்லையாயின்
**इदं मेयं**-இந்த விஷயம்
**मानेन बोधितं**–பிரமாணத்தினுலேயே அறிவிக்கப்பட்டதாகி
**प्रतिभाति**–விளங்குகின்றது
**न स्वप्रकाशमिति**–சுவப்பிரகாசத்தாலன்று என

**केनाऽपि**-ஒருவராலும்

**विवेक्तुम्**-பிரித்தறிதற்கு

**नैव शक्यम्**-முடியவே முடியாது

பிரித்தறிதற்கு எதனால் முடியாதென்னுமிடத்துக் கூறுகின்றார்

**तदवस्थतया एव**-விளங்குகின்ற அவஸ்தையாகவே

**दृष्टेः**-காணப்படுதலின் (20)

(அ) அற்றேல் சித்தாந்தத்தின்கண் கடாதியின்கண்ணுள்ள அஞ்ஞாதத்தன்மைக்கு சாக்ஷிபாஸ்யத்தன்மை சம்பவித்தலால் கடாதியைக் கிரகிப்பதாகவும் பிரமாணமேனுகாது எனின் சடவஸ்துவிற்கு அஃது (அஞ்ஞாதத்தன்மை) பொருந்தாமையின் அஃதிருப்பினும் அஞ்ஞானதிகட்கு சாக்ஷியின்கண் அத்தியஸ்தத்தன்மை சொல்லவேண்டும். சாக்ஷிக்கு வாஸ்தவமாக சாக்ஷிய (சாக்ஷிபாஸ்ய) பதார்த்தத்தோடு சம்பந்தம சம்பவியாமையின் சாக்ஷியும் தன்னேடு சம்பந்தமின்றிய வஸ்துவை யநுபவித்தற்கு சபர்த்தமாகின்றதில்லை ஆதலின் அநான்மாவைக் கிரகிப்பதாகப்பிரமாணமின்றுமென்னுங்கருத்தால் முடிக்கின்றார்:—

**अज्ञातमर्थमवबोधयितुं न शक्त-**
**मेवं प्रमाणमखिलं जडवस्तुनिष्ठम् ।**
**किं त्वप्रबुद्धपुरुषं व्यवहारकाले**
**संश्रित्य संजनयति व्यवहारमात्रम् ॥ २१ ॥**

**एवम्**-இவ்வாறு

**जडवस्तुनिष्ठम्**-சடவஸ்துவிஷயக

**अखिलं प्रमाणम्**-பிரமாணமனைத்தும்

**अज्ञातमर्थम्**-அஞ்ஞாத வஸ்துவை

**अवबोधयितुम्**-அறிவிப்பதற்கு

**शक्तं न**-சாமர்த்தியமுடையதன்றும்

அப்படியானல் பிரத்தியக்ஷாதி பிரமாணத்தையங்கீகரித்தல் வீணேயாமென்றுசங்கித்து கடாதியால் வளைபட்ட அஞ்ஞாத ஆன்மாவை ஆசிரயித்து விஷயஞ்செய்து அல்லது வியவகரிக்கின்ற அஞ்ஞானி

புருஷனை ஆசிரயித்து வியவகாரகாலத்தில் அதன் அஞ்ஞானம் நிவர்த்தியாகும்போது அபிவியக்த (வெளிப்பட்ட) சித்தினுல் விளங்குகின்ற கடாதியின வியவகாரத்தையுண்டுபண்ணுவதால் பிரத்தியக்ஷாதிகட்கு வியர்த்தத்தன்மையின்ருமென்று கூறுகின்ருர்

किं तु–ஆனல்

व्यवहारकाले–வியவகாரகாலத்தில்

अप्रबुद्धपुरुषम्–அஞ்ஞானி புருஷனை

संश्रित्य–ஆசிரயித்து

व्यवहारमात्रम्–வியவகாரமாத்திரத்தினை

संजनयति–உண்டு பண்ணுகிறது

ஆதலால் சடவஸ்துவை விஷயஞ்செய்கின்ற நேத்திராதி அனைத்தும் பிரமாணமன்ரும் ஆதலின் அவற்ருல் வேதாந்தத்திற்கு பாதம் எப்படியுண்டாம் என்பது கருத்து. (21)

## சருவதிருசியத்திற்கும் மித்தியாத்தன்மையை சாதித்தல்

(அ) அற்றேல் சருவ சடபதார்த்தங்களும் மித்தையாயின் கடாதிகட்கும் சுத்திரஜதாதிகட்கும் சத்தியத்தன்மையாலும் மித்தியாத்தன்மையாலும் சருவமஹாஜனங்களுக்கும் பிரசித்தமான வேற்றுமை சித்திக்காது. இவ்வாறு அவற்றின் ஞானங்கட்கும் பிரமைத்தன்மை அப்பிரமைத்தன்மை நிவர்த்தகத்தன்மை நிவர்த்தியத்தன்மை வடிவ வேற்றுமையும் சித்திக்காது என்ருசங்கித்து சருவமும் அந்தியஸ்தமாயினும் அப்படி அப்படி பூருவவாசனை முதலியவற்ருல் ஜன்னியத்தன்மை வடிவ அவாந்தர விசேஷத்தால் வேற்றுமை பொருத்தமாமென திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்:—

आबोधतः सकलमेव हि सत्यमिथ्या-
भ्रान्तिप्रमाण विनिवर्त्य निवर्तकत्वम्।
स्वप्नेऽपि दृष्टमिदमेवमिहापि जाग्र-
त्काले भवत्वखिलमापरमात्मबोधात् ॥ २२ ॥

**आबोधतः**–சாக்கிரமுண்டாகும் பரியந்தமும்

**स्वप्नेऽपि**–சொப்பனத்தின் கண்ணும்

**सत्यमिथ्या**–சத்தியத்தன்மை மித்தியாத்தன்மை

**भ्रान्ति प्रमाण**–பிராந்தித்தன்மை பிரமைத்தன்மை

**विनिवर्त्य निवर्तकत्वम्**–நிவர்த்தியத்தன்மை நிவர்த்தகத்தன்மை யாகிய

**सकलम्**–அனைத்தும்

**दृष्टमेव**–பார்க்கப்பட்டதேயாம்

சொப்பனத்தின்கண் சருவமும் மித்தையாயினும் சத்தியத்தன்மை மித்தியாத்தன்மை முதலிய வேற்றுமை எல்லோருக்கும் அநுபவ சித்தமாம் தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.

**इह जाग्रत्कालेऽपि**–ஈண்டு சாக்கிரத்தின்கண்ணும்

**एवम्**–இவ்வாறு சொப்பனம் போன்று

**इदमखिलम्**–இவ்வெல்லாமும்

**आपरमात्मबोधात्**–பிரம்மசாக்ஷாத்காரமுண்டாகும் பரியந்தமும்

**भवतु**–இருக்கும்

அற்றேல் "எந்தக்காலத்தில் இந்த வித்துவானுக்கு சருவமும் ஆன்மாவேயாமோ அந்தக்காலத்தில் எந்தக் கரணத்தால் எதைப் பார்ப்பன்" என்னும் சுருதி தெரிசனம் முதலிய சருவ வியவகாரத்தையும் நிஷேதிக்கின்றது இவ்வாறுக சாக்கிரத்தின்கண்ணும் எல்லாமுமிருக்கு மென்று எப்படி சொல்லப்படுகிறதெனின் வாஸ்தவந்தான் ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாகும்போது அவ்வாறுதான் அது பரியந்தமோ வியவகாரந்தொடர்ந்திருக்குமென்பது கருத்து. (22)

(அ) சொப்பன திருஷ்டாந்தத்தின்கண் கூறப்பட்ட வேற்றுமை யினையே விசேஷ திருஷ்டாந்தத்தை யாசிரயித்து விஸ்தரிக்கின்றார்:—

**स्वप्ने तप्तशिलाधिरोहणगता निश्रेयसोपायता**
**मिथ्या ब्राह्मणतर्पणादिनिलया सत्या तथा लौकिकी ।**
**तत्कसत्या तदहर्मृषैव विदितो निद्रानिवृत्तौ पुनः**
**स्वप्ने दृष्टमशेषमेव वितथं ग्राह्यं तथा जागरे ॥ २३ ॥**

स्वप्ने-சொப்பனத்தின்கண்

तप्तशिलाधिरोहणगता-தகிக்கப்பட்ட கல்லிலேறுதலிலுள்ள

निश्रेयसोपायता-மோக்ஷசாதனத்தன்மை

मिथ्या-பொய்யாம்

ब्राह्मणतर्पणादिनिलया-பிராம்மண சந்தர்ப்பணத்தின்கண்ணுள்ள (மோக்ஷசாதனத்தன்மை)

सत्या-சத்தியமாம்

தப்த சிலாதிரோஹணம் மோக்ஷசாதனமென்பது பௌத்தரது ஆகமத்தில் பிரசித்தமாம் சொப்பனத்தின் கணணேயே இலௌகிக வேற்றுமையினைக்கூறுகின்றார்.

तथा-அப்படியே

लौकिकी स्रक्-இலௌகிகமாலை

सत्या-சத்தியமாம்

तदहिः-அதன்கண் கற்பிக்கப்பட்ட சர்ப்பம்

मृषा एव-பொய்யேயாம் என

विदितः-அறியப்பட்டது

இவ்வாறுயின் எது எது எப்படியறியப்பட்டதோ அது அது அப்படியே இருக்கட்டுமே எனின் அற்றன்றெனக்கூறுகின்றார்.

पुनः-மறுபடி

निद्रानिवृत्तौ-நித்திரை நிவர்த்தியாகும்போது

स्वप्ने दृष्टम्-சொப்பனத்தில் காணப்பட்ட

अशेषमेव-அனைத்துமே

वितथम्-பொய்யாம்

தார்ஷ்டாந்தத்தை சுருக்கமாகக்கூறுகின்றார்

तथा-அவ்வாறே

जागरे-சாக்கிராவஸ்தையில்

ग्राह्यम्-கிரகிக்கத்தக்கது (83)

(அ) அந்த வேற்றுமையினையே விஸ்தரிக்கின்றார்:—

श्रेयःसाधनताऽग्निहोत्रनिलया सत्येति संगृह्यते
मिथ्या तप्तशिलाधिरोहणगता शिष्टैः परित्यज्यते ।
रज्जुः सत्यतया स्थितैव तदहिर्मिथ्यैव तावद्भवेत्
यावन्मूलतमोविदारणपटुर्विद्योदयो नागमत् ॥ २४ ॥

**यावत्**-எதுவரை

**मूलतमोविदारणपटुः**-சமுசாரத்திற்குக்காரணமான அஞ்ஞானத்தைக் கெடுப்பதில் சாமர்த்தியமுள்ள

**विद्योदयः**-ஞானத்தினுற்பத்தி

**न आगमत्**-உண்டாகவில்லையோ

**तावत्**-அது பரியந்தமும்

**अग्निहोत्रनिलया**-அக்கினிஹோத்திரத்தின் கண்ணுள்ள

**श्रेयःसाधनता**-மோக்ஷசாதனத்தன்மை

**सत्या इति**-சத்தியமாமென்று

**शिष्टैः**-அறிஞர்களால்

**संगृह्यते**-அங்கீகரிக்கப்படுகின்றது

**तप्तशिलाधिरोहणगता** - தகிக்கப்பட்ட கல்லின்மேலேறுதலிலுள்ள மோக்ஷசாதனத்தன்மை

**मिथ्या**-பொய்யாமென்று

**परित्यज्यते**-தள்ளப்படுகின்றது

**रज्जुः**-கயிறானது

**सत्यतया एव**-சத்தியமாகவே

**स्थिता**-உள்ளது

**तदहिः**-அதன்கண் தோற்றுகின்ற பாம்பு

**मिथ्या एव**-பொய்யே

**भवेत्**-ஆகும் (24)

(அ) அற்றேல் ஆகாசாதி சருவப்பிரபஞ்சமும் சொப்பனத்திற்கு சமானமாயின் அதுபோன்று விஞ்ஞான வடிவமாகவே எல்லாவற்றையும் சொல்லவேண்டும். அதனால் விஞ்ஞான வாதியின் மதத்தில் பிரவேசம் பிராப்தியாம் என வினவுகின்றான்:—

**ननु शाक्यभिक्षुसमयेन समः प्रतिभात्ययं च भगवत्समयः ।**
**यदि बाह्यवस्तु वितथं नु कथं समयाविमौ न सदृशौ भवतः ॥**

**ननु**-அற்றேல்

**अयं च भगवत्समयः**-இந்த வியாசபகவான் சங்கராசாரியார் முதலியோரின சித்தாந்தமானது

**शाक्यभिक्षु**-பௌத்த முனியின் (விஞ்ஞானவாதி)

**समयेन**-சித்தாந்தத்தோடு

**समः प्रतिभाति**-சமமாக விளங்குகின்றது

அற்றேல் விஞ்ஞானவாதியினல் வேதத்திற்கு பிராமாண்யத்தை யங்கீகரியாமையினல் அதனையங்கீகரிக்கின்ற பகவதுபாதரது சித்தாந்தத்திற்கு அவரது சித்தாந்ததோடு சமத்தன்மை எங்ஙனமாமெனின் அப்படியாயினும் விஞ்ஞானத்தினும் வேருக விஞ்ஞேயத்தையங்கீகரியாதபோது அதன் சமத்தன்மை ஏனின்றும் அவனுலும் அப்படியே யங்கீகரித்தலினல் என்று கூறுகின்ருர்.

**बाह्यवस्तु**-விஞ்ஞானத்தினும் வேருன வஸ்து

**यदि वितथम्**-அசத்தாயின்

**इमौ समयौ**-இந்த இருமதங்களும்

**सदृशौ**-சமானமாக

**कथं नु न भवतः**-ஏனகாது (25)

(அ) வியதிரேகமுகத்தால் கூறப்பட்ட இருமதங்களின் சமத்தன்மையை அன்வயத்தாலும் கூறுகின்ருர்:—

**यदि बोध एव परमार्थवपुर्नतु बोध्यमित्यभिमतं भवति ।**
**ननु चाश्रितं भवति बुद्धमुनेर्मतमेव कृत्स्नमिह मस्करिभिः ॥**

**बोध एव**-ஞானமாத்திரமே

**परमार्थवपुः**-சத்திய வடிவமாம்

**नतु बोध्यम्**-திருசியம் சத்தியமன்றும்

**इति यदि अभिमतं भवति**-என்றிவ்வாறு தங்களுக்கு சம்மதமாயின் (அப்போது)

बुद्धमुनेः:-விஞ்ஞான வாதியின்

मतमेव कृत्स्नम्-மதமனைத்துமே

दृष्टं-கண்டு

मस्करिभिः:-மூங்கில் தண்டத்தை தரித்த சந்நியாசிகளால்

आश्रितं भवति-ஆசிரயிக்கப்பட்டதாக

च ननु-ஆகின்றதேயாம் (26)

## கற்பிதமாயினும் விஜ்ஞானவாத வைஷம்யம்

(அ) விஞ்ஞானவாதிகள் ஞேயவஸ்து ஞானத்தின்கண் விளங்குவதால் ஞானத்தோடு அபின்னமேயாம் ஞானம்போன்று அப்படிக்கன்றேல் ஞானஞேயங்களுக்கு சம்பந்தம் சம்பவியாமையால் கிராஹ்ய கிராஹகத் தன்மை பொருந்தாமற்போம் ஆதலின் ஞானமே சத்தியம் அதனினும் வேறான விஷயம் அநாதிவாசனையால் அடைவிக்கப்பட்டதாய் அஸத்யாசி ஞானவடிவமாமெனக்கூறுகின்றனர் இவ்வாறு தங்களாலும் ஞானவடிவ ஆன்மாவின்கண் அதனினும் வேறான அனைத்தும் அத்தியஸ்தமாய் அதனோடபின்னமாய் சொல்லப்படுமானல் இருவருக்கும் சமத்தன்மை எவ்வாறின்றாகும் என்க

ஞானவடிவ ஆன்மாவின்கண் திருசியத்திற்கு கற்பிதத்தன்மையைக்கூறுதல் மாத்திரத்தினல் பிரம்மவாதியின் மதத்திற்கு பௌத்த மதத்தோடு சமத்தன்மையினுக்குமானல் எல்லாமதத்திற்கும் சமத்தன்மை பிராப்தியாம் சௌத்திராந்திகன் வைபாஷிகன் ஆகிய இவர்களோடு புறப்பொருளை அங்கீகரித்தலால் நையாயிகன் வைசேஷிகன் முதலானோருக்கு சமத்தன்மையுளதேயாம். விஞ்ஞானத்திற்கு க்ஷணிகவிநாசித்தன்மை யுண்மையால் விஞ்ஞானவாதத்தோடும் அவர்களுக்கு சமத்தன்மையுளது.

சருவப்பிரகாரத்தாலும் சமத்தன்மையோ எங்களுக்கும் விஞ்ஞானவாதியோடின்றாம். அவனுல் தீபதிருஷ்டாந்தத்தால் கிராஹ்ய கிராஹக கிரஹண (ஞேயம் ஞாதா ஞானம்)ங்கட்கு அபேதம் வாஸ்தவமாக அங்கீகரிக்கப்படுகிறது. பிரம்மவாதியினுலோ பரஸ்பரம் விருத்த சுபாவமுடைய கருத்தா கரணம் கிரியை கருமங்கட்கு அபேதம் சம்பவியாமையினுலும்

நான் நேத்திரத்தால் உருவத்தைக் காண்கின்றேனென அவைகளின் பேதம் அநுபவிக்கப்படுதலாலும் ஒரு வஸ்துவிற்கு கிராஹ்யதத்தன்மை கிரகிக்குந்தன்மை கிரியைத்தன்மை கரணத்தன்மை பொருத்தமன்றும். தீபத்திற்கும் தீபத்தால் பிரகாசிபத்தன்மை சம்பவிப்பதின்றும் அஃது பிரகாசவடிவமாதலினாலும் தீபத்தால் சாதிக்கத்தகுந்த அந்தகாரத்தின் நிவிருத்தி ஆண்டு சம்பவியாமையாலும் என்க.

பிரமாதா பிரமாணபிரமேயங்கட்கு பரஸ்பரம் தருமியின் சமான சத்தையுடைய பேதம் அங்கீகரிக்கப்படுகின்றது ஞானமோ அத்துவயமாம் ஆதலின் எந்தப்பிரகாரத்தாலும் சருவசமத்தன்மையின்றுமென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

**ननु मातृमानविषयावगतीरपरस्परं प्रति विभागवतीः ।**
**उपयन्भदन्तमुनिना सदृशः कथमेष वैदिकमुनिर्भवति ॥ २७ ॥**

**मातृमान**-பிரமாதாவையும் பிரமாணத்தையும்

**विषयावगती:**-விஷயத்தையும் ஞானத்தையும்

**अपरस्परं प्रति**-பரஸ்பரம்

**विभागवतीः**-பேதமுடையனவாக

**उपयन्**-அங்கீகரிக்கின்ற

**एष वैदिकमुनिः**-வேதோக்தமான சந்நியாசமுடைய இந்த சங்கராசாரியசுவாமி

**भदन्तमुनिना**-பௌத்தமுனியாகிய விஞ்ஞானவாதியோடு

**कथं सदृशः**-எப்படி சமத்தன்மையர்

**भवति**-ஆவர்

பிரமாதா = அந்தக்கரணவிசிஷ்டசீவன். பிரமாணம் = நேத்திராதி. விஷயம் = உருவம் முதலியவை. ஞானம் = நேத்திராதிஜன்னிய உருவம் முதலியவற்றின் ஆகாரமான அந்தக்கரணத்தின் விருத்தி. (27)

(அ) அற்றேல் தங்களாலும் பரஸ்பரம் பின்னமாக பிரமாதா பிரமாணம் முதலிய பிரபஞ்சம் அங்கீகரிக்கப்படுமாயின் ஆன்மாவிற்கு நிஷ்பிரபஞ்ச அத்வயத்தன்மை எவ்வாறு பொருந்துமென்று ஆசங்கித்து அதற்கு ஆன்மாவின்கண் அதன் அஞ்ஞானத்தால் கற்பிதத்தன்மை

யுண்மையின் அத்வைதத்திற்குக் குறைவின்றும் விஞ்ஞான வாதத்தோடு சமத்துவமுமின்றுமென்னுங் கருத்தால கூறுகின்றார்:—

परमात्मसंश्रयतमोजनितं प्रविभक्तमेव तु परस्परतः ।
स्थिरमभ्युपेतमिह नः समये ननु मातृमानविषयप्रभृति ॥ २८ ॥

मातृमानविषयप्रभृति—பிரமாதா பிரமாணம் விஷயம் முதலிய அனைத்தும்

परमात्मसंश्रय—பிரம்மத்தையாசிரயித்துள்ள

तमोजनितम्—அஞ்ஞானத்தாலுண்டானதும்

परस्परतः—அன்னியோன்னியம்

प्रविभक्तमेव—பிரிவுபட்டதும்

स्थिरम्—நிலையையுடையதுமாகவே

इह नः समये—ஈண்டு எமது மதத்தில்

अभ्युपेतम्—அங்கீகரிக்கப்பட்டுளது

ननु—இஃது நிச்சயம்

நிலையையுடையது என்னும் விசேஷணத்தால் பிரமாதா முதலிய அனைத்திற்கும் க்ஷணிகவிஞ்ஞானத்தினின்றும் விலக்ஷணத்தன்மை சூசிப்பிக்கப்பட்டது. (28)

(அ) அற்றேல் பரஸ்பரம் பின்னமான பிரமாதா முதலிய நான்கும் உலக வியவகாரத்திற்கு சாதனமாக அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது பிரமாதா முதலியவற்றின் வியவகாரத்தின் பொருட்டும் வேறுபிரமாதா முதலியவற்றை அங்கீகரித்தல் வேண்டும் இவ்வாறாகவே அனவஸ்தை பிராப்தியாம். அந்த பிரமாதா முதலியவற்றாலேயே அதன் கிரகணம் சம்பவிக்கின்றதில்லையாதலின் கருத்திரு கரும விரோதம் வருதலினென்றுசங்கித்து பிரமாண வியாபாரத்தால் எந்த வஸ்து விளங்குகின்றதோ அவ்விடத்திலேயே பிரமாதா முதலிய நான்கின் அபேக்ஷையாம். பிரமாதா முதலியவையோ சுகதுக்காதி போன்றும் கிளிஞ்சில வெள்ளிபோன்றும் அவித்தையினால் உண்டு பண்ணப்பட்டமையின் கேவல சாக்ஷி பாஸ்யமாம். சாக்ஷியும் உதாசீனபோத அத்வய ஆன்ம சொரூபமேயாம். ஆதலின் கரணம்

முதலியவற்றை அற்பமும் அபேக்ஷிக்கின்றதில்லை என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

**तमसा विनिर्मितमिदं सकलं चतुरः स पश्यति परः पुरुषः ।**
**अविकारिबोधवपुरद्वयकः करणैर्विना सकलसाक्षितया ॥ २९ ॥**

**तमसा विनिर्मितम्**—அஞ்ஞானத்தாலுண்டுபண்ணப்பட்ட
**इदं सकलं**—இவ்வெல்லாவற்றையும்
**चतुरः**—பிரமாதா முதலிய நான்கினையும்
**अविकारि**—நிருவிகாரமாயும்
**बोधवपुः**—ஞான வடிவமாயும்
**अद्वयकः**—அத்வயமாயும்
**परः पुरुषः**—யாதொரு பரம புருஷனுண்டோ
**सः**—அவ்வான்மாவே
**करणैर्विना**—நேத்திராதி கரணங்களில்லாமலேயே
**सकलसाक्षितया**—சருவத்திற்கும் சாக்ஷியாயிருக்குந்தன்மையால்
**पश्यति**—பார்க்கின்றது

இவ்வெல்லாவற்றையுமென்பதன் வியாக்கியானம் பிரமாதா முதலிய என்பது. நிருவிகார ஞானவடிவமென்பதனால் உதாசீன ஞானத்தால் அதற்கு சாக்ஷி சப்தத்தின் பொருள் கூறப்பட்டது. பார்த்தல் கிரியை கரணசாத்தியமாதலால் கரணங்களின்றி பார்க்கின்றது என்று எப்படிச் சொல்வது. அதன் கருத்தாவிற்கு உதாசீனத் தன்மைதான் எவ்வாறு சொல்வது என்னும் சங்கை சருவ சாக்ஷியென்பதனால் நிவர்த்திக்கப் பட்டது. உதாசீனமாயுள்ள மனிதனுக்கே உலகின்கண் சாக்ஷித் தன்மை பிரசித்தியாதலால் நிருவிகார நித்தியசைதன்யத்தாலேயே அதற்கு த்ருஷ்டிருத் தன்மையுண்மையின் கூறிய இரண்டு துஷணமு மின்றுமென்பது கருத்து. **(29)**

(அ) அற்றேல் உலகின்கண் பிரமாதாவிற்கே சாக்ஷித்தன்மை காணப்படுகின்றது. பிரமாத்ருத்தன்மையும் பிரமாண வியாபாரத்தால சாத்தியமாமாதலின் கரணங்களின்றி பார்க்கின்றான் என்று கூறப் பட்டது எப்படிப்பொருந்துமென்று ஆசங்கித்து உலகின்கண்ணும் எதன்

கண் எவன் சாக்ஷியாக வியவகரிக்கப்படுகின்ருனே அவன் அதனேடு சம்பந்தமற்றவனுகவே அதன் அகருத்திருத் தன்மையால் பிரசித்தமாம். அப்படிக் கன்றேல் அதன் கருத்திருத தன்மையால் அதன் சாக்ஷித் தன்மையின் வியவகாரம் பொருந்தாமையின். இவ்வாறு ஈண்டும் திருசிய பிரமாதிருத் தன்மை முதலிய பிரபஞ்ச சூனியவஸ்துவிற்கே சாக்ஷித்தன்மையாம். அதுவும் சொரூப சைதன்ய வடிவ அல்லது அவித்யா விருத்திவடிவ ஈக்ஷணத்திஞல் ஆம் ஆதலின் பிரமாண வியாபாரத்தின் அபேக்ஷையின்ருமென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர் :—

**निजमायया परिगतः पुरुषः परतन्त्रया तु निजया प्रभया ।**
**परिकल्पितं सकलमाकलयन् स हि साक्षितामुपगतो भवति ॥ ३० ॥**

**परतन्त्रया**–தன்னை யாசிரயித்ததும்

**निजमायया**–தன்னை விஷயஞ்செய்வதுமான மாயையால்

**परिगतः**–வியாப்த(உபகித)மான

**सः पुरुषः**–அந்த சாக்ஷி ஆன்மா

**निजया प्रभया**–சொரூப பிரகாசத்தால் அல்லது பிரபஞ்சாகார அவித்தையின் விருத்தியில் பிரதிபிம்பித்த சிதாபாசனுல்

**परिकल्पितं**–தன்னிடத்திற் கற்பிக்கப்பட்ட

**सकलम्**–எல்லாவற்றையும்

**आकलयन्**–அறிகின்றதாகி

**साक्षिताम्**–சாக்ஷித் தன்மையை

**उपगतः भवति**–அடைந்ததாகின்றது

மாயை சுதந்திரமாதலால் அதன் காரியத்திற்கும் ஆன்மாவின் அதீனத்தன்மையின்மையின் சம்பந்தம் சம்பவியாமையால் அதன் சாக்ஷித் தன்மை பொருந்தாது என்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு தன்னையாசிரயித்தது என்னும் விசேஷணமாம் தன்னிடத்திற் கற்பிக்கப்பட்ட என்பதாதியால் ஈசுவரனது சருவஞ்ஞத் தன்மை வடிவ சருவ சாக்ஷித்துவம் கூறப்பட்டது. சீவனுக்கு சுகாதியின் சாக்ஷித்

தன்மையோ அவித்தையோடு கூடிய சேதனத்திற்கே அந்தக்கரண உபாதியினுலென்றறிக. அப்படிக்கன்றேல (அந்தக்கரணுேபாதியை கொள்ளாக்கால்) அதிவியாப்தியாம். (3υ)

(அ) அற்றேல் "ஈண்டு நமது மதத்தின்கண் ஸ்திரமுடையதாக அங்கீகரிக்கப்பட்டது" என்னும் 28வது சுலோகத்தில் திருசியத்திற்கு ஸ்திரத்தன்மை கூறப்பட்டது. அஃது பொருந்தாது அஃது (ஸ்திரத் தன்மை) பிரத்தியக்ஷத்தால் சித்திக்கின்றதில்லை. தனது சமான காலத்தில் தனது விஷயத்தைக் கிரஹிக்கின்ற அந்தப் பிரத்தியக்ஷத் தால் அநேக க்ஷணத்தால் வரைந்துகொள்ளப்பட்ட வடிவினதாகிய ஸ்தாயித் தன்மை (நிலைப்பு) சித்தியாமையின், லிங்க (அநுமான)த் தாலுமன்றும். அதன் வியாப்தியை கிரஹிக்கின்ற ஸ்தலமின்மையின் ஆன்மாவும் விவாதத்திற்கு விஷயமாதலின். பிரத்திய பிஞ்ஞையால் ஆன்மாவின்கண் ஸ்திரத்தன்மை சித்தியாமென்று சொல்லற்க. சுவப்பிரகாச ஆன்மாவின்கண் அஃது (பிரத்தியபிஞ்ஞை) சம்பவியாமையின். சுவாலையின் பிரத்தியபிஞ்ஞைக்கு ஸ்திரத்தன்மை விஷயமாகாமையால் வேறிடத்தும் அதற்கு அஃது விஷயமாகாமையின் பிரத்தியபிஞ்ஞைக்குக் காரணமும் அற்பமுமின்றும். நேத்திராதிக்கு நிகழ்காலத்தில் சமீபத்திலுள்ள வஸ்துவின் ஞான மாத்திரத்தில் காரணத் தன்மையிருத்தலால் அது என்னுமம்சத்தில் சாமர்த்திய மின்மையின், சம்ஸ்காரத்திற்கு ஸ்மிருதி மாத்திரத்தை யுண்டுபண்ணுந் தன்மையிருத்தலால் இது என்னுமநுபவத்தில் சாமர்த்தியமின்மையின் அபிஞ்ஞாப்பிரத்தியக்ஷத்தையும் ஸ்மிருதியையும் உண்டுபண்ணுவதன் கண் பரஸ்பரம் அபேக்ஷையின்றியவைகளான நேத்திரசம்ஸ்காரங்கட்கு சேர்க்கை பொருந்தாமையானும் என்க. அவைகட்கு விஷயமும் சம்பவிக்கிறதில்லை தத்தை (அது என்னுந்தன்மை) இதந்தை (இது என்னுந்தன்மை) விசிஷ்டங்கட்கு ஓர் காலத்திலிருக்குந்தன்மை சம்பவியாமையால் அபேதம் சம்பவியாமையின் அதன் சொருபமும் ஒன்றுக சம்பவிக்கிறதில்லை. அவன் இவன் என்னும் வடிவம் பேத மாகும்போது உருவரசாதிஞானங்கட்குப்போன்று ஏகத்தன்மை பொருந்தாமையின் இவ்வாறு பிரமாணமின்மையின் பிரமாதா முதலியவை கட்கு ஸ்திரத்தன்மையின்றுமென்றுசங்கித்துக்கூறுகின்றார்:—

ग्राह्यग्राहकयोः स्थिरत्वगमनी तत्प्रत्यभिज्ञाप्रमा
नोपापत्स्यत चेदसेत्स्यदपि नौ सिद्धान्तयोस्तुल्यता ।
सा निर्वक्ष्यति सिद्धयतीति जगतः स्थैर्यं स्वरूपात्मकं
चैतन्यस्य च भङ्गुरत्वमिव मे सर्वस्य ते दर्शने ॥

**ग्राह्यग्राहकयोः**-பிரமாதா பிரமேயங்கட்கு

**स्थिरत्वगमनी** - அநேககாலஸ்தாயித்தன்மையை அடைவிப்பது

**तत्प्रत्यभिज्ञा**-அவைகளின் பிரத்தியபிஞ்ஞையாகிய

**प्रमा**-பிரமையாம்

**न उपापत्स्यत चेत्**-(அது) பொருத்தமன்றாயின்

**नौ सिद्धान्तयोः**-நம்மிருவரது சித்தாந்தத்திற்கும்

**तुल्यता**-சமத்தன்மை

**असेत्स्यदपि**-சித்திக்கும்

பிரமாதா முதலியவற்றின் ஸ்திரத்தன்மையை விஷயஞ் செய்கின்ற பிரத்தியபிஞ்ஞை நீ கூறிய பிரகாரத்தால் உண்டாகாதாயினும் அஃது அப்பிரமாணமாயினும் அப்போது சருவத்திற்கும் க்ஷணிகத்தன்மையுண்மையால் நம்மிருவரது சித்தாந்தமும் சமமாகும். பிரத்தியபிஞ்ஞை உண்டாகிறதில்லையென்பதில்லை அதற்கு பிரமாத்துவமும் நிருவகிக்கின்றதில்லையென்பதில்லை யாதலின் சகத்திற்கு ஸ்திரத்தன்மை சித்திக்கின்றதெனக்கூறுகின்றார்

**सा**-பிரத்தியபிஞ்ஞைவடிவ பிரமை

**निर्वक्ष्यति इति**-நிர்வியூடம் (திடம்) ஆகின்றதாதலின்

**मे जगतः**-எனது மதத்தில் சகத்திற்கும்

**चैतन्यस्य च**-சைதன்யத்திற்கும்

**स्थैर्यम्**- ஸ்திரத்தன்மை

**स्वरूपात्मकम्**-சொரூபவடிவமாக

**सिद्धयति**-சித்திக்கின்றது

ஸ்திரத்தன்மை சத்தின் சொரூபமென்பதன்கண் அவனுக்கு சம்மதமான திருஷ்டாந்தத்தைக்கூறுகின்றார்.

**ते दर्शने**–உனது மதத்தில்

**सर्वस्य**–எல்லாவற்றிற்கும்

**भङ्गुरत्वमिव**–க்ஷணிகத்தன்மை சொரூபமாவது போன்று

சுவாலை முதலியவற்றின்கண் வியபிசாரமாமாதலின் ஈண்டும் பிரத்தியபிஞ்ஞை ஸ்திரத்தன்மையை விஷயஞ்செய்வதாக ஆகின்ற தில்லை என்று சொல்லற்க. பாத அபாதங்களால் விசேஷமிருத்தலின் இவ்வாறு கொள்ளாக்கால் தனது சீவனமும் பொருந்தாமற்போமாதலின் அஃது பெரியோராலும் கூறப்பட்டுள்ளது. 'எவன் மோகத்தினுல் பாதம் அறியப்படாதாயினும் உத்பிரேக்ஷிக்கின்றனனே அவன் சருவ வியவகாரங்களிலும் சமுசயமுடையவனாய் நாசத்தையடைவன்' என.

ஸ்திரத்தன்மையின் காரணத்தின் அசம்பவமே பாதமாமென்னற்க. சேர்ந்துள்ள இந்திரிய சம்ஸ்காரங்கட்கே அதன் காரணத்தன்மை சம்பவித்தலின் அபிக்ஞாப்பிரத்தியக்ஷத்திலும் ஸ்மிருதியிலும் பரஸ்பரம் நிரபேக்ஷங்களாயினும் காரிய விசேஷத்தின் (பிரத்தியபிஞ்ஞையின்) கண் பரஸ்பராபேக்ஷை பொருந்துதலின் இந்திரியத்திற்கும் தீபத்திற்கும் கடாதியின் சம்யோகத்தின் கண்ணும் அந்தகார நிவிருத்தியின்கண்ணும் பரஸ்பரமபேக்ஷையின்றேனும் உருவஞானத்தின்கண் பரஸ்பராபேக்ஷை காணப்படுகின்றது. ஆதலால் காரணம் சம்பவித்தலின் பிரத்திய பிஞ்ஞையின் சொரூபத்திற்கு அபேதமும் சம்பவிக்கின்றது என்பது கருத்து தத்தை இதந்தை விசிஷ்டங்களுக்கு அபேதம் சம்பவியாமை யால் அவ்விசிஷ்ட வடிவ ஸ்திரத்தன்மை பிரத்தியபிஞ்ஞையின் விஷயமாக சம்பவிக்கின்றதில்லை என்று கூறிய சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு சொரூப வடிவ ஸ்திரத்தன்மை எனப்பட்டது. தத்தைஇதந்தைகளினுல் உபலக்ஷிக்கப்பட்ட வஸ்துவின் சொரூப வடிவ ஸ்திரத்தன்மை என்பது பொருள். சுவப்பிரகாச சைதன்னியத்தின்கண் பிரத்தியபிஞ்ஞை சம்பவியாமையால் ஸ்திரத்தன்மை சித்திக்கின்றதில்லை என்று யாதொன்று கூறப்பட்டதோ அது சரியன்று அதற்கு ஸ்திரத்தன்மை "பிறக்கிறதில்லை இறக்கிறதில்லை" என்பது முதலிய சுருதியினுல் சித்தித்தலின் என்னுங்கருத்தால் சைதன்யமெனப்பட்டது. உனது

மதத்தின்கண் க்ஷணிகத்தன்மை விஞ்ஞானத்திலும் வேறின்றும். விஞ்ஞானமாத்திரம் என்னும் மதத்திற்கு குறைவு வருதலின் அது போன்று ஸ்திரத்தன்மை வஸ்து மாத்திர சொரூபமாம். இதனாலேயே ஆகாரபேதத்தால் பிரத்தியபிஞ்ஞையின் பேதமாமென்பதும் கண்டிக்கப் பட்டது. ஞானம் க்ஷணிகம் என ஞானகாரம் பேதமாயினும் உனக்கு அஃது அபேதமாவது போன்று அஃது (பிரத்தியபிஞ்ஞையின் அபேதம்) பொருந்துதலின். இவ்வாறு க்ஷணிகத்தன்மை ஸ்திரத்தன்மைகட்கு வஸ்துவின் சொரூபமாத்திரத்தையுடன்படின் இருமதங்கட்கும் சமத் தன்மை பிராப்தியாம் என்று சொல்லற்க. சொரூப விசேஷத்தாலேயே இருமதங்கட்கும் பேதம் பொருந்துதலின். ஸ்திரத்தன்மை வாதத்தின் கண் பூருவகால உத்தரகாலங்களால் உபலக்ஷிக்கப்பட்ட பேதாபாவ வடிவம் வஸ்துவின் சொரூபம். க்ஷணிகத்தன்மை வாதத்தின்கண்ணோ அத்தகைய பேதவடிவம் வஸ்துவின் சொரூபம். ஆதலின் மகத்தான பேதமாம் என்பது கருத்து. (31)

## சாக்கிரசொப்பனங்களின் சமத்தன்மையில் சங்கை சமாதானங்கள்

(அ) இவ்வாறு சருவமும் கற்பிதமாயினும் விஞ்ஞானவாதியின் மதத்தோடு சமத்தன்மை பரிகரிக்கப்பட்டது. இப்போது "சொப்பனத் தின் கண்ணும் இது காணப்பட்டது இவ்வாறு ஈண்டுமாம்" என்ற இடத்தில் கூறப்பட்ட சொப்பனத்தின் சமத்தன்மை பொருத்தமன்று சாக்கிரசொப்பனங்கட்கு பரஸ்பரம் விலக்ஷணத்தன்மை யநுபவிக்கப் படுதலின் **वैधर्म्याच्च न स्वप्नादिवत्** "விருத்ததருமமுடைமையின் சொப்பனாதி போன்று அன்று" என சூத்திரக்காரராலும் சாக்கிரத்தில் பார்க்கப்பட்ட கடாதிகட்கு அதனினும் விலக்ஷணத்தன்மையைக்கூறி யிருத்தலாலும், சொப்பனவிலக்ஷணமான அது (சாக்கிரப்பிரபஞ்சம்) சத்தியமேயாம் என சங்கிக்கின்றான்:—

**ननु कल्पितं यदि हि जागरितं**
**वद कीदृशी खलु विलक्षणता ।**
**स्वपनादमुष्य भवतोऽभिमता**
**परिकल्पितत्वमुभयोस्तु समम् ॥ ३२ ॥**

**ननु**-சங்கை
**जागरितं**-சாக்கிரபதார்த்தம்
**यदि हि कल्पितं**-மித்தையாயின் (அப்போது)
**स्वपनाद्**-சொப்பன பதார்த்தத்தினின்றும்
**अमुष्य** இந்த சாக்கிரவஸ்துவிற்கு
**कीदृशी**-எத்தகைய
**विलक्षणता**-விலக்ஷணத்தன்மை
**भवतः**-தங்களுக்கு
**अभिमता**-சம்மதம்
**वद**-கூறுவீராக
**उभयोः**-சாக்கிர சொப்பனமிரண்டற்கும்
**परिकल्पितत्वं तु**-கற்பிதத்தன்மையோ
**समम्**-சமானமாம் (32)

(அ) சாக்கிர சொப்பனங்கட்கு மித்தியாத்தன்மை சமானமாயினும் சாக்கிரப்பிரபஞ்சத்திற்கு அவித்தையினும் வேறான தோஷ ஜன்னியத்தன்மையின்மையால் வியாவகாரிகத்துவமாம். நித்திரையாதியாலுண்டான சொப்பனத்திற்கோ அவித்தையினும் வேறான தோஷ ஜன்னியத்தன்மையால் பிராதிபாசிகத்துவமாம் ஆதலின் அநுபவ விரோதமின்றும் ஆண்டு வியாவகாரிகத்துவமென்பது வியவகாரஜனகத் தன்மையன்றும். அதன் அவஸ்தையில் சொப்பனத்தின் கண்ணும் வியவகாரம் காண்டலின் வேறவஸ்தையில் சாக்கிரகடாதிகட்கும் வியவகாரம் காணப்படாமையின் அவித்தையினும் வேறான காரணத்தால் அஜன்யத்துவம் வியாவகாரிகத்துவமென்பதும் சரியன்றும் கருமம் முதலியவற்றால் ஜன்னியமான ஆகாசாதிகட்கு அஃதின்மையின் அங்ஙனமாயினும் பிரமாதா இருக்குங்காலத்தில் பாதிக்கப்படாமை வியாவகாரிகத்துவமாம். அவன் இருக்கும்போது பாதிக்கப்படுந்தன்மை பிராதிபாசிகத்துவமாம் என்னுமபிப்ராயத்தால் கூறுகின்றார்:—

**न प्रमातरि सति प्रबाध्यते जागरः स्वपनदृष्टवस्तुवत् ।**
**मातृमानविषयोपलब्धिभिः साकमेव तमसो निराकृतेः ॥ ३३ ॥**

प्रमातरि सति-பிரமாதா இருக்குங்காலத்து

जागरः-சாக்கிரபதார்த்தம்

न प्रबाध्यते-பாதிக்கப்படுகின்றதில்லை

வியதிரேக திருஷ்டாந்தத்தைக்கூறுகின்றார்

स्वप्नदृष्टवस्तुवत्-சொப்பனத்தில் காணப்பட்ட பதார்த்தம்போல

சொப்பனம் சாக்கிரத்தில் பிரமாதா இருக்கும்போது பாதிக்கப் படுகிறது போன்று சாக்கிரத்தில் கடாதி பாதிக்கப்படுகிறதில்லை அப்படியானல் அதன் பாதம் எவ்வாறெனின் அதற்குக்கூறுகின்றார்.

मातृमान-பிரமாதா பிரமாணம்

विषयोपलब्धिभिः-விஷயம் ஞானம் இவைகளோடு

साकमेव-கூடவே

तमसः निराकृतेः-அஞ்ஞானத்தின் நிவர்த்தியமாதலின்

பிரமாதா—அந்தக்கரணவிசிஷ்டன் ஈண்டு சடமாய் என்னும் விசேஷணத்தையும் சேர்க்கவேண்டும் அதனல் ஆன்மாவின்கண் அதி வியாப்தியின்றும் பிரம்மான்ம ஐக்கிய சாக்ஷாத்காரத்தால் அவித்தை அதன் காரியபிரமாதா முதலியவற்றோடு கூடவே நிவர்த்தியாகின்றது. சொப்பனம் போன்று அந்தக்கரண விசிஷ்டனிருக்கும்போது நிவர்த்தி யாகின்றதில்லை இந்த விலக்ஷணத்தன்மையே சாச்கிரவஸ்துவினகண் அநுபவத்தாலும் சூத்திரத்தாலும் சித்திக்கின்றது.

அற்றேல் பாதமென்பது நிவர்த்தி மாத்திரமாயின் அப்போது பிரமாதா இருக்கும்போது சொப்பனத்திற்குப்போன்று கடாதிகட்கும் அஃது இருக்கின்றதேயாம். ஞானத்தால் நிவர்த்தி பாதமாமென்று சொல்லற்க. சாக்கிரத்திலுள்ள கடாதிகட்கும் ஈசுவரஞானத்தால் நிவர்த்தியத்தன்மையுண்மையினுலும் சொப்பனத்திற்கும் சுழுத்தி யவஸ்தையிற்போன்று சாக்கிரத்தின்கண்ணும் அன்னியத்தால் நாசம் சம்பவித்தலால் ஞானத்தால் நாசமின்மையினுலும் அந்த லக்ஷணம் சரியன்று. அவித்தையோடுகூட ஞானத்தால் நிவர்த்தி பாதமாம் என்பதும் சரியன்று சொப்பன லக்ஷியத்தின் கண்ணும் அஃதின்மை யின், பிரம்மஞானமிருக்கும்போதே சாக்கிரத்தின்கண் சொப்பனத்திற்கு நிவர்த்தியுண்டாதலின், பிரம்மத்தை விஷயஞ்செய்யும் சமானகாலத்தில்

இரண்டு (அஞ்) ஞானத்தில் ஒன்றன்கண் பிரமாணமின்றும் பிரயோஜன முமின்றும். சொப்பன சாக்ஷியின் கண்ணும் அஞ்ஞானம் சம்பவிக்கிற தில்லை. மித்தியாத்துவநிச்சயமும் பாதமன்றும். கடாதிகட்கு அந்தக் கரணத்தினது மித்தியாத்துவ நிச்சயமில்லாவிடினும் மித்தியாத்துவ நிச்சயம் சம்பவித்தலின் ஆதலால் இது துச்சமாமெனின் உத்தரம் சொல்லப்படுகின்றது.

சாக்கிரகாலத்தில் பிரமாதா இருக்கும்போது சொப்பனம் மித்தை என்று அறியப்படுகின்றது என்பது ஒருவருக்கும் விவாதமின்றும் இவ்வாறாகவே பிரமாதா இருக்கும்போது விரோதி ஞானத்தினதீனமான மித்தியாத்துவ நிச்சய யோக்கியத்துவம் சொப்பனம கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றின்கண் பிராதிபாசிகத்தன்மையாம் யாண்டு தைவகதியால் சாக்கிரத்தின்கண் பிராந்தியினனந்தரம் நித்திரையுண்டாகிறதோ அதைக் கிரகிக்கும பொருட்டு யோக்கியத்துவமெனப்பட்டது. இத்தகைய பாதாபாவம் பிரமாதா இருக்கும்போது யாண்டுளதோ அஃது வியாவ காரிகமாம் என்பது கருத்து. (33)

(அ) இவ்வாறு தேசகாலாதிகளிருக்கும் போது எது பாதிக்கப் படுகிறதோ அது பிராதிபாசிகமாம். எது பாதிக்கப்படுகிறதில்லையோ அது வியாவகாரிகமாமென வேறு லக்ஷணத்தையபிப்பிராயஞ்செய்து கூறுகின்றார்:—

**देशकालपुरुषैरवस्थया जागरस्य खलु कारणं तमः ।**
**साकमेव सहसा निरस्यते वेदवाक्यजनितात्मसंविदा ॥ ३४ ॥**

**जागरस्य**—சாக்கிரபதார்த்தத்திற்கு

**कारणं तमः**—காரணமான அஞ்ஞானமானது

**वेदान्तवाक्य जनित**—தத்துவமசிமகா வாக்கியத்தாலுண்டான

**आत्मसंविदा**—ஆன்மசாக்ஷாத்காரத்தால்

**देशकालपुरुषैः**—தேசகால சீவர்களோடும்

**अवस्थया साकमेव**—சாக்கிரம் முதலிய அவஸ்தைகளோடும் கூடவே

**सहसा**—உடனே

**निरस्यते**—நிவர்த்திக்கப்படுகின்றது

அவித்தை காரியத்தோடுகூட நிவர்த்தியாகின்றதென்பது பொருள் இதுவும் அவித்தை அதன் காரியங்கட்கு ஒரே காலத்தில் நிவர்த்தியா மென்னும் மதத்தால் கூறப்பட்டது. பாதத்தைப்பரிகரிக்கும் பொருட்டு வேதாந்தவாக்கிய எனப்பட்டது. அதாவது முக்கியாதிகாரிக்கு வேதாந்த வாக்கியத்தாலுண்டான ஆன்மஞானத்தால் மூலத்தோடு கூட சமுசாரம நிவர்த்தியாகின்றது ஆதலின் இப்போது பாதமின்றுமென்பது கருத்து. (34)

(அ) சொப்பனத்தில் காணப்பட்ட வஸ்துபோன்று என 33-வது சுலோகத்தில் கூறப்பட்ட வியதிரேக திருஷ்டாந்தத்தை வியாவகாரிக லக்ஷணத்தின் அதிவியாப்தியைப்பரிகரிக்கும் பொருட்டு விஸ்தரிக்கின்றார்;—

**स्वप्नदृष्टमिहरज्जुसर्पवत् देशकालपुरुषेषु बाध्यते ।**
**जागरः पुनरयं तथाविधं बाधकं न लभतेऽसमीक्षणात् ॥ ३५ ॥**

**इह**–ஈண்டு சாக்கிரத்தின்கண்

**देशकालपुरुषेषु**–தேசம் காலம் சீவர்களிருக்கும்போதே

**स्वप्नदृष्टं**–சொப்பனத்தில் பார்க்கப்பட்ட வஸ்துக்கள்

**रज्जुसर्पवत्**–கிளிஞ்சிலில் வெள்ளிபோல

**बाध्यते**–பாதிக்கப்படுகின்றது

இவ்வாறு மித்தியாத்தன்மை சமானமாயினும் சாக்கிரப்பிரபஞ்சத்திற்கு சொப்பனத்தின் விலக்ஷணத்தன்மை நன்கு சித்தித்தது என்னுங் கருத்தால் கூறுகின்றார்.

**पुनः अयं जागरः**–இந்த ச்சாக்கிரபதார்த்தமோ

**तथाविधं**–அத்தகைய (தேசகாலங்களிருக்கும்போதே)

**बाधकम्**–பாதத்தை

**न लभते**–அடைகின்றதில்லை

**असमीक्षणात्**–காணப்படாமையின்

பிரத்தியக்ஷத்தாலாவது அன்னிய பிரமாணத்தாலாவது அத்தகைய பாதம் அனுபவிக்கப்படாமையின் என்பது பொருள். (35)

(அ) சாக்கிரத்திற்கும் சொப்பனத்திற்கும் மித்தியாத்துவம் சமானமாயினும் கூறிய விலக்ஷணத்தன்மையால் சாக்கிரம் சத்தியம் சொப்பனம் அசத்தியம் என்னும் வியவஸ்தையினால் வியவகாரம் பொருத்தமாம் ஆதலின் திருசியப்பிரபஞ்சத்திற்கு (வியாவகாரிக) சத்தியத்தன்மை அதனால் சித்திக்கின்றது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

**तेन सत्यमिह जागरं विदुः स्वप्नविभ्रमविरुद्धधर्मकम् ।**
**आपरमात्मपरार्थदर्शनात् तेन बाधितवपुर्न सत्क्वचित् ॥ ३६ ॥**

**तेन**—கூறிய வியாவகாரிகலக்ஷணம் பொருந்துதலினால்

**इह**—ஈண்டு

**स्वप्नविभ्रम**—சொப்பனப் பிராந்தியினின்றும்

**विरुद्धधर्मकम्**—விரோததருமத்தினையுடைய

**जागरम्**—சாக்கிரவஸ்துவினை

**आपरमात्मपरार्थदर्शनात्**—பிரம்மசாக்ஷாத்காரபரியந்தம்

**सत्यं विदुः**—சத்தியமாக அறிகின்றனர்.

சாக்ஷாத்கார பரியந்தமென்பதில் நிமித்தத்தினைக்கூறுகின்றார்.

**तेन**—சாக்ஷாத்காரத்தினால்

**बाधितवपुः**—பாதிக்கப்பட்ட சொரூபம்

**क्वचित्**—ஓரிடத்தும்

**सत् न**—சத்தியமன்றாம்

எப்படி சொப்பனத்திற்கு பாதமுளதாயினும் பின்னரும் தோன்றுகின்றதோ பிரமாதா இருத்தலினால் இவ்வாறு தத்துவஞானத்தினால பாதிக்கப்பட்ட சாக்கிரப்பிரபஞ்சத்திற்கு பின்பு தோற்றமின்றாம் பிரமாதாவோடு கூடவே பாதிக்கப்பட்டமையின் என்பது பொருள் (36)

(அ) இவ்வாறு வியவஸ்தையோடு கூடிய வியவகாரத்தைப் பிரதிபாதனஞ்செய்தலால் சருவதிருசியத்திற்கும் மித்தியாத்துவ சமர்த்தனத்தின் பயனைக்கூறுகின்றார்:—

**तत्र सत्यमनृतं च भेदतः प्रत्यगात्मतमसा विकल्पितम् ।**
**प्रक्षिणोति परमात्मवस्तुगा बुद्धिवृत्तिरविचालिनी सती ॥ ३७ ॥**

**तत्र**–ஆண்டு அதாவது சாக்கிரப்பிரபஞ்சத்திற்கு சொப்பன விலக்ஷணத்தன்மையிருப்பினும் மித்தியாத்தன்மை சித்திரதபோது

**प्रत्यगात्मतमसा**– ஆன்மாவினஞ்ஞானத்தால்

**सत्यं चानृतं च**–மெய்யும் பொய்யுமாக

**भेदतः**–பேதமாக

**विकल्पितम्**–கற்பிக்கப்பட்ட அனைத்தையும்

**परमात्मवस्तुगा**–பரமான்மாவை விஷயஞ்செய்வதும்

**अविचालिनी**-ஸ்திரமுள்ளதுமாக

**सती**-இருக்கின்ற

**बुद्धिवृत्तिः**-அகண்ட பிரம்மாகார புத்தி விருத்தி

**प्रक्षिणोति** நாசஞ்செய்கின்றது

மெய்யும் பொய்யும் என்று உலக திருஷ்டியை யாசிரயித்துக் கூறப்பட்டது அல்லது முற்கூறிய விலக்ஷணத்தன்மையை யாசிரயித்து கூறப்பட்டது பரஸ்பரம் விருத்ததருமமுடையதாக கற்பிக்கப்பட்ட அனைத்தையும் மூலாஞ்ஞானத்தோடுகூட நாசஞ்செய்கின்றது. கூறிய விபாகத்தால் ஆன்மாவின்கண் கற்பிக்கப்பட்ட அவித்தை அதன் காரியமனைத்தையும் மித்தையாதலால் மகாவாக்கிய ஜன்னிய ஆன்ம சாக்ஷாற்காரம் நாசஞ்செய்கின்றது என்பது பொருள். (37)

(அ) அற்றேல் அநாதிகாலம் தொடங்கி ஆன்மாவின்கண் நிலைத்திருக்கின்ற அவித்தையையும் அதன் காரியமும் நீண்டகாலமுள்ளதும் அநுகூலமுமான திடவாசனைகளால் கட்டுப்பட்டிருத்தலின் அவைகட்கு க்ஷணமாத்திரமிருப்பதும் அவித்தையின் காரியமும் வாக்கிய ஜன்னியமுமான சாக்ஷாற்காரத்தினால் நிவர்த்தி எப்படிக்கூடுமென்றுசங்கித்து நீண்டகாலமிருத்தல் முதலியவை நிவர்த்திக்கத்தகாமைக்குக்காரண மன்றும். நியாயமதத்தில் பிராகபாவத்திற்கு நிவிருத்தியுண்மையின் நீண்டகாலமிருத்தல் முதலியவை நிவர்த்தகத்தன்மையிலும் நிமித்த மன்றும். மற்றுஞ் சத்தியத்தன்மை நிவர்த்தியாகாமைக்கு நிமித்தமாம். ஆன்மாவின்கண் அவ்வாறு காணப்படுதலின் ஞானத்தின்கண் அஞ்ஞாத விஷயகத்தன்மை நிவர்த்தகத்தன்மையில நிமித்தமாம்,

அஞ்ஞானத்திற்த தனது விஷயத்தைக்கோசரிக் (விஷயஞ்செய்) கின்ற ஞானத்தால் நிவர்த்தியத்தன்மையுண்மையின் அவித்தையும் அதன் காரியமும் அத்வயஞானன்மாவின்கண் வாஸ்தவமாக சம்பவியாமையால் அத்தியஸ்தமாம் ஆதலின் அதனைக் கோசரிக்கின்ற ஞானத்தால் அவிவியக்த சைதன்யத்தால் நிவர்த்தித்தற்கு அவசியம் முடியுமென்னு மபிப்ராயத்தால் கூறுகின்றார்:—

**नित्यबोधपरिपीडितं जगद्विभ्रमं नुदति वाक्यजा मतिः ।**
**वासुदेवनिहतं धनञ्जयो हन्ति कौरवकुलं यथा पुनः ॥ ३८ ॥**

**नित्यबोध**-நித்திய அத்வய ஞானததால்

**परिपीडितं**-பீடிக்கப்பட்ட (சத்துவமபகரிக்கப்பட்ட)

**जगद्विभ्रमम्**-சகத்தின் பிராந்தியை

**वाक्यजा मतिः**-நான் பிரம்மமென்னும் வாக்கியத்தாலுண்டான அகண்ட பிரம்மாகார அந்தக்கரண விருத்தி

**नुदति**-நாசஞ்செய்கின்றது

அந்தக்கரணவிருத்தி சடமாயினும் தகிக்கப்பட்ட இருப்புருண்டை போல் அதன் (சைதன்ய) சுபாவத்தையடைந்ததாகி நாசஞ்செய்கின்றது. வாக்கியத்தால் உண்டான ஞானமானது தன்னால் நிவர்த்திக்கத்தக்க வஸ்துவின்கண் அநிர்வாச்சியத்தன்மையை அபேக்ஷிக்கின்றது அதுவும் அதற்கு அதனதிஷ்டான சித்தின் அத்துவயத்தன்மையால் செய்யப் பட்டதாம் என்னுமபிப்பிராயத்தால் இவ்வாறு கூறப்பட்டதெனக்காண்க. ஈசுவரனது சாமர்த்தியத்தினுல் பீடிக்க (கெடுக்க)ப்பட்ட பதார்த்தங்கட்கு தனது காரிய ஆகந்துக நிமித்தந்தாலும் பாதத்தின்கண் திருஷ்டாந்தத் தைக்கூறுகின்றார்.

**वासुदेव**-மகாகாலவடிவ பரமேஸ்வரனுல்

**निहतम्**-கொல்லப்பட்ட

**कौरवकुलम्**-குருவம்சத்திலுள்ள துரியோதனுதிகளை

**धनञ्जयः**-அர்ச்சுனன் குருவம்சத்தில் உற்பன்னனுயினும்

**यथा पुनः**-எப்படி மறுபடியும்

**हन्ति**-கொல்லுகின்ருனே அப்படி விருத்தி நாசஞ்செய்கின்றது

இஃது பகவானாலும் கூறப்பட்டுளது ஹே அர்ச்சுன இந்தப் பீஷ்மத் துரோணாதியர் என்னால் முன்னமே கொல்லப்பட்டார்கள் இப்போது நிமித்தமாத்திரமாக இருக்கக்கடவாய் என. (38)

## பரமதத்தில் சத்தியாசத்தியத்தின் வேற்றுமை சித்தி யாதெனல்

(அ) இவ்வாறு தனது மதத்தின்கண் "சத்தியவஸ்து சத்தியமும் அநிருதமும் ஆயிற்று" என்னும் சுருதியினால் உலகப்பிரசித்தமான மெய்யும் பொய்யுமான வஸ்துக்களின் வேற்றுமையினையும் அதற்கு ஞானத்தால் நிவிருத்தியினையும் காண்பித்து பரமதத்தின்கண் இந்த மெய் பொய் என்னும் வேற்றுமை சித்திக்காதெனக்கூறுகின்றார்:—

**सत्यमेवमनृतं च दुर्लभं ब्रह्मवादिसमयाद्बहिः पुनः ।**
**सत्यतो यदि मृषा पृथग्भवेत् सत्यमेव तदपि प्रसज्यते ॥ ३९ ॥**

**ब्रह्मवादिसमयात्**–வேதாந்தியின் மதத்தினின்றும்

**बहिः पुनः**–வேறிடத்தில் பிரபஞ்சம் சத்தியமென்னும் மதத்தில்

**एवं सत्यमनृतं च**–இவ்வாறு சத்தியமும் அசத்தியமுமென

**दुर्लभम्**–(வேற்றுமை) சித்திக்காது

எதனால் சித்திக்காதெனின் சுத்திரஜதம் முதலியமித்தியாவஸ்து சத்தியவஸ்துவினின்றும் பின்னமா அல்லது அபின்னமா அல்லது பின்னாபின்னமா என்று விகற்பித்து முதற்பக்ஷத்தைத்தூஷிக்கின்றார்.

**सत्यतः**–சத்திய வஸ்துவினின்றும்

**मृषा**–மித்தியாவஸ்து

**यदि पृथग्भवेत्**-பின்னமாயின்

**तदपि**-அதுவும்

**सत्यमेव प्रसज्यते**–சத்தியமேயாகும்

சத்தியமாகாதாயின் தாத்துவிகசத்தியபேதத்திற்கு ஆசிரயத் தன்மை பொருந்தாமற் போமாதலின். அநிர்வசனீய வஸ்துவை அன்னியன் அங்கீகரியாமையின் நான்காவது விகற்பஞ்செய்யவில்லை.

(அ) இரண்டாவது மூன்றாவது விகற்பத்தைத்தூஷிக்கிறார்:—

सत्यतो यदि मृषा न भिद्यते सत्यमेव सुतरां तदिष्यताम् ।
न द्वयात्मकतयाऽनृतं मतं पक्षयोः कथितदूषणद्वयात् ॥४० ॥

**सत्यतः**-சத்தியவஸ்துவினின்றும்

**मृषा**–மித்தியாவஸ்து

**यदि न भिद्यते**–பின்னமன்றாயின் (அப்போது)

**तत् सुतराम्**–அது அத்தியந்தம்

**सत्यमेव**–சத்தியமாகவே

**इष्यताम्**–அங்கீகரிக்கப்படுகிறதாகும்

**अनृतम्**–மித்தியா வஸ்து

**द्वयात्मकतया**–பின்னு பின்ன வடிவமாக

**मतं (यदि)**–அங்கீகரிக்கப்படுமாயின்

**न**–அதுவும் சரியன்று

**पक्षयोः**–இரண்டு பக்ஷங்களிலும்

**कथितदूषणद्वयात्**–கூறப்பட்ட தூஷணமிரண்டும் வருதலின்

இரண்டாவது பக்ஷத்தில் சத்தியத்தினும் அபின்னமான வஸ்துவிற்கு மித்தியாத்தன்மை பொருந்தாமையின் அதுவும் சத்தியமேயாம் அல்லது மித்தியாவஸ்துவோடு அபின்னமான சத்தியவஸ்துவிற்கு மித்தியாத்தன்மை பிராப்தியாதலின் சத்தியாசத்தியத்தின் வேற்றுமை சித்திக்காது. பின்னுபின்ன மென்னும் மூன்றாவது பக்ஷத்தில் பின்னத்துவ பக்ஷத்திலும் அபின்னத்துவ பக்ஷத்திலும் கூறப்பட்ட தோஷத்தின் சமுச்சயத்தின் கண்ணும் அம்சத்தால் பிராப்தியாதலின் இதுவும் உபலக்ஷணம் விரோதமாதலால் இந்தப்பக்ஷம் பொருத்தமற்றதேயாம் என்பது கருத்து.

(40)

(அ) இவ்வாறு கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றிற்கு சருவஜனங்களுக்கும் பிரசித்தமானதும் இலௌகிகமுமான சத்தியா சத்தியத்தின் வேற்றுமை பரபக்ஷத்தில் சித்திக்கின்றதில்லை எனக்கூறி இவ்வாறு ஆண்டு வேறேயும் வேற்றுமை வியவகாரம் சித்திக்காதெனக் கூறுகின்றார்:—

**वेदवाक्यविषयस्य सत्यता बुद्धवाक्यविषयो मृषा भवेत् ।**
**इत्यतः कथयितुं न शक्नुयाद्ब्रह्मवादिसमयाद्बहिर्मुखः ॥ ४१ ॥**

**वेदवाक्यविषयस्य**-வேதவாக்கியத்தின் விஷயமான அக்கினிஹோத்திராதிகட்கு

**सत्यता**-சத்தியத்தன்மையாம்

**बुद्धवाक्यविषयः**-புத்தரது வாக்கியத்தின் விஷயமான சைத்தியவந்தனாதிகட்கு

**मृषा भवेत्**-மித்தியாத்தன்மையாம்

**इति**-என்றிந்தப்பிரகாரம்

**कथयितुं**-கூறுவதற்கு

**ब्रह्मवादिसमयात्**-வேதாந்தியின் சம்மதமான அத்வயப்பிரம்மத்தினின்றும்

**बहिर्मुखः**-வேறான விஷயத்தில் அபிநிவேசமுள்ளவன் அதாவது பிரபஞ்சத்தில் சத்தியத்துவாபிமானமுள்ளவன்

**न शक्नुयात्**-சமர்த்தனாகான்

**अतः**-முன்கூறிய விகற்ப வடிவ தூஷணத்தால் (41)

(அ) வேதாந்தியின் சம்மதமான பிரம்மத்தினின்றும் வெளி விஷயத்தில் அபிநிவேசமுள்ளவன் என்பதனால் வேதாந்தி முற்கூறிய பிரகாரத்தால் சத்தியாசத்தியத்தின் வேற்றுமையைக் கூறுவதற்கு சமர்த்தனாவன் என்பது சூசிப்பிக்கப்பட்டது அதனை விஸ்தரிக்கின்றார். என்பதனால் சூசிப்பிக்கப்பட்டது என அன்வயஞ்செய்க :—

**सत्यमेवमनृतं च भेदतः कल्पितं भवतु वर्णितान्नयात् ।**
**तत्र तद्घटयितुं हि शक्यते नेतरत्र कथितोपपत्तिभिः ॥ ४२ ॥**

**एवम्**-இந்தப்பிரகாரம்

**सत्यमनृतं च**-சத்தியமும் அசத்தியமும்

**भेदतः**-பேதமாக

**कल्पितं भवतु**-கற்பிக்கப்பட்டதாகும்

तत्र–பிரம்மவாதத்தின் கண்

तत्–சத்தியாசத்தியத்தின் வேற்றுமையினை

वर्णिताद् नयात्–கூறப்பட்ட (மித்தியாத்தன்மை சமானமாயினும் அவாந்தர விசேஷத்தைச் சாதிக்கின்ற) நியாயத்தால்

घटयितुं हि–பொருத்துதற்கு

शक्यते–முடியும்

इतरत्र–பிறமதத்தில்

न–இவ்வாறு கூறுதற்கு முடியாது

कथितोपपत्तिभिः–முற்கூறிய விகற்பதூஷணத்தைச்சகித்தலாதி யுத்திகளால் தூஷணத்தால் என்பது பொருள்.

(அ) இவ்வாறு அவ்வவ்வுசித வியவகாரத்திற்கு உபயோகமுள்ளதாயினும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கு விஷயமான பிரபஞ்சம் மித்தையாதலால் அதனைப் போதிக்கின்ற பிரத்தியக்ஷாதிகட்கு வியாவகாரிகப் பிராமாண்யமேயாம். வேதாந்தங்கட்குப் போன்று பாதிக்கப் படாததும் அறியப்படாததுமான விஷயத்தை யறிவிக்கும் தன்மை வடிவ தாத்விகப் பிராமாண்யமன்றும். அத்துவயப் பிரம்மத்தின் கண் தாற்பரியமுள்ளதும் நிரவகாசமுமான வேதாந்தங்களால் அர்த்தத்தால் பாதிக்கப்பட்ட விஷயத்தை யுடைமையானும் அறியப்படாத பொருளை யறிவிக்குந் தன்மை யின்மையானும் என அவாந்தர பிரமேயத்தை முடிக்கின்றார்.

व्यावहारिकमतोऽवगम्यतां मानजातमखिलं न तात्विकम् ।
बाह्यवस्तुविषयं विरोधतोऽबुद्धबोधविधिशक्त्यसंभवात् ॥ ४३ ॥

बाह्यवस्तुविषयं–புறப்பொருளை விஷயமாகவுடைய

अखिलं मानजातम्–பிரமாணக் கூட்டமனைத்தும்

न तात्विकं–தாத்விகப்பிராமாண்யமன்றும்

अतः–ஆதலால்

व्यावहारिकम्–வியவகாரத்திற்கு அங்கமாம்

अवगम्यताम्–என அறியத்தக்கது

தாத்விகப் பிராமாண்யமன்றென்பதன்கண் ஏதுவைக் கூறுகின்றார்

**विरोधतः**-(பகிர்முகமாக இந்திரியங்களை சிருஷ்டித்தார் என்னும் சுருதிக்கு) விரோதம் வருதலின்

**अबुद्धबोधविधि शक्त्यसंभवात्** — அசமுகமாகச் சென்று அறியப்படாத ஆன்மாவையறிவிக்குஞ் சாமர்த்திய மின்மையினால்

(அ) இப்போது சாதிக்கப்பட்ட அர்த்தத்தை ஏதுவாக மனதில் வைத்துக்கொண்டு அதனையநுவாதஞ் செய்தலால் டரமப்பிரகிருதத் (முக்கியமாகத் தொடங்கிய)தை முடிக்கின்றார்.

एवं तत्वनिवेदनशक्तियोगः
संभाव्यतेऽनधिगताधिगतेरयोगात् ।
मानान्तरस्य सकलस्य ततश्च तेन
बाधस्त्रयी शिरसि वर्णयितुं न शक्यः ॥

**एवं**-இந்தப்பிரகாரம்

**सकलस्य मानान्तरस्य**-பிரத்தியக்ஷாதி சருவப் பிரமாணங்கட்கும்

**अनधिगताधिगतेः**-அறியப்படாததை யறிவிக்குந் தன்மை

**अयोगात्**-பொருந்தாமையால்

**तत्वनिवेदन**-தத்துவத்தையறிவிக்கும்

**शक्तियोगः**-சத்தியின் சம்பந்தம்

**न संभाव्यते**-சம்பாவிக்கப்படுகின்றதில்லை

**ततश्च**-ஆதலால்

**तेन**-அந்த பிரத்தியக்ஷாதி பிரமாணங்களால்

**त्रयीशिरसि**-வேதாந்த வாக்கியத்திற்கு

**बाधः**-பாதமானது

**वर्णयितुं**-வருணித்தற்கு

**न शक्यः**-தக்கதன்றும்

அநான்மம் பிரத்தியக்ஷத்திற்கு தாத்துவீகப் பிராமாண்யமின்றேனல்

(அ) அற்றேல் நிருவிகற்பசவிகற்பங்கட்குப் பொதுவாக அநான்ம விஷயகப் பிரமாணமாத்திரத்திற்கு அப்பிரமாண்யத்தைக் கூறுதல் பொருத்தமன்று. எதனாலெனின் சூத்திரத்தைச் செய்த வியாச பகவானாலே तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः அதனோடே பேதமாம் ஆரம்பண சத்தாதிகளால் என்னுஞ் சூத்திரத்தால் காரியத்தை விஷயஞ் செய்கின்ற சவிகல்பஞானத்திற்கே ஆபாசத்துவத்தைக் காண்பித்து மண் முதலிய காரணத்தை விஷயஞ்செய்கின்ற நிருவிகல்ப ஞானத்திற்கு பிராமாண்யம் அங்கீகரிக்கப்பட்டது. அப்படிக்கன்றேல் (நிருவிகற்பஞானத்திற்கு பிராமாண்யத்தையுடன்படாவிடின்) மண் முதலிய காரணமாத்திரக் கூற்றிற்கு விரோதம் வருமாதலினாலும் "மிருத்திகையே சத்தியம்" என்னும் சுருதிக்கு விரோதம் வருவதலானும் என்று சங்கித்து அச்சுருதி சூத்திரங்களினபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

आरम्भणादिवचसा खलुनिर्विकल्प
प्रत्यक्षबुद्धिमनुसृत्यविकल्पबुद्धेः ।
आभासतां मुनिरुवाच तदास्यभावो
विज्ञायते स्फुटतरो गुडजिह्विकायाम् ॥

आरम्भणादिवचसा–ஆரம்பணமென்பது முதலிய வசனத்தால்

निर्विकल्पप्रत्यक्ष बुद्धिमनुसृत्य– காரண மாத்திரத்தின் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு பிராமாண்யத்தை யங்கீகரித்து

विकल्पबुद्धेः–கடாதிகாரிய ஞானத்திற்கு

आभासतां–அப்பிராமாண்யத்தை

मुनिः उवाच–வியாச பகவான் கூறினர்.

तदा–இவ்வாறு கூறும்போது

गुडजिह्विकायां–வெல்லத்தை நாக்கில் தடவுதல் போல

अस्य भाव–இவருடைய அபிப்பிராயம்

स्फुटतरः–வெளிப்படையாக

विज्ञायते–அறியப்படுகின்றது.

ஈண்டு நிருவிகற்பம் காரணவாசகம் விகற்பம் காரியவாசகம். சகத்தின் மூலகாரணத்தை நிரூபித்தற் பொருட்டு பிரவிருத்தித்த இந்த

வியாசமஹரிஷி எப்போது கடாதி ஞானத்திற்கு அப்பிராமாண்யத்தை சூசிப்பிக்கின்றவராய் மண் முதலியவற்றின் ஞானத்திற்கு பிராமாண்யத்தைக் கூறினரோ அப்போது இந்த அபிப்பிராயமறியப்படுகின்றது, எப்படி மாதாவானவள் குழந்தையின் இதத்தை யிச்சிக்கின்றவளாய் அவனை அதிக கசப்புள்ள மருந்தை குடிப்பிக்கின்றவளாய் இந்த மருந்தைக் குடி உன்னுடைய நாக்கில் வெல்லத்தை வைக்கிறேன் என்று அவனுக்கு ஆசையையுண்டு பண்ணுகிருள். இவ்வாறு பிரம்ம சூத்திரம் முதலியவைகளெல்லாம் இப்புருஷன் கடாதிகாரிய ஞானத்தின் கண் அங்கீகரிக்கப்பட்ட பிராமாண்யத்தை விட்டுவிடட்டும். கடாதி ஞானத்திற்கு காரணத்தின் (கண்) அநிர்வசநீய அந்நியப் பிரகாரத்தை மாத்திரமாசிரயித்தலால் பிறிதோராற்றற் சிந்தித்திருக்குந்தன்மையைக் காண்பித்தலின்றி காரிய விஷயக ஞானத்திற்கு அப்பிராமாண்யத்தை பிரதிபாதித்தற்குக் கூடாமையின் என்பது கருத்து. (40)

(அ) அற்றேல் **सत्संप्रयोगे पुरुषस्येन्द्रियाणां बुद्धिजन्म-तत्प्रत्यक्षं विद्यमानोपलम्भनात्** இந்திரியங்களுக்கு சத்திய பதார்த்தங்களோடு சம்யோகமுண்டாகும்போது புருஷனுக்கு யாதொரு ஞானமுண்டாகிறதோ அது பிரத்தியக்ஷமாம் நிகழ்காலத்திலுள்ளதை விஷயஞ்செய்தலால் என்னும் சூத்திரத்தால் ஜைமினி மகரிஷி காரிய காரணங்களை விஷயஞ்செய்வதும் ஆன்மாவை மாத்திரமாக்களை விஷயஞ்செய்வதுமான பிரத்தியக்ஷங்கட்குப் பொதுவாகவே லக்ஷணத்தைக் கூறியுள்ளார். அச்சூத்திரத்தின் கண் சத் என்னும் பதத்தால் பொருளிற்கு சத்தியத்தன்மையைக் கூறுதலால் எல்லாப்பிரத்தியக்ஷமுமே தத்துவத்தையறிவிப்பதாம் என்பது அவரது மதமாம் ஆதலின் வியாசபகவானது அபிப்பிராயமும் அதையநுசரித்தே வர்ணிக்கத்தக்கதாமென்ருசங்கித்து கூறுகின்ருர்:—

**सत्संप्रयोग इति जैमिनिरप्युवाच**
**यल्लक्षणं तदुभयोः सममेवविद्यात् ।**
**आपाततस्तदथ युक्तिनिपीडितं सत्**
**सन्मात्रसंविदि निषीदति निर्विशङ्कम् ॥**

**सत्संप्रयोग इति**-சத்தியவஸ்துவோடு சம்யோகமென்னும் சூத்திரத்தால்

यल्लक्ष्म–பிரத்தியக்ஷத்திற்கு யாதொரு லக்ஷணத்தை

जैमिनिः–ஜைமினிமகரிஷி

उवाच–கூறினரோ

तदपि– அதுவும்

उभयोः–சவிகற்பநிருவிகற்ப ஞானங்களிரண்டற்கும் அல்லது
ஆன்மானான்ம விஷயக ஞானங்களுக்கு

आपाततः–போலியாக (விசாரிக்காமலேயே)

समम् विद्यात्–சமமாக அறியவேண்டும்

அவிசாரதசையிலேயே கடாதிகட்கு வேற்றுமையநுபவிக்கப் படுதலின்-ஏதனுலிங்ஙனமென்னுமிடத்துக்கூறுகின்ருர்.

अथ–பின்பு

युक्तिनिपीडितं–யுத்தியினுல் விசாரிக்கப்பட்டதாய்

सत् तद्–இருந்துகொண்டு அந்த லக்ஷணம்

सन्मात्रसंविदि–சின்மாத்திர ஆன்ம ஞானத்தின்கண்

निर्विशङ्कम्–சமுசயமற்றதாய்

निषीदति–பரியவசானமாகின்றது

சருவப்பிரபஞ்சத்தின் அதிஷ்டானசத்தையினுலேயே கடாதிகளின் சத்தியஞானம் பொருந்துதலின் அதற்கு அதனினும் வேற்றுமை கற்பிக்கத்தக்கதன்ரும் "சத்தேயிநந்தது" என்னும் சுருதியின் வலிமையாலும் ஆன்மவடிவசத்தே ஜைமினியாற்செய்யப்பட்ட பிரத்தியக்ஷலக்ஷண சூத்திரத்தின்கண்ணும் விவக்ஷிக்கப்பட்டது ஆதலின் ஆபாத (போலி) திருஷ்டியினுலேயே பிரபஞ்சத்தின் சத்துவம் பிரதீதியாகின்றது ஆதலின் அச்சூத்திரத்தின் வலிமையால் சுருதியையும் நியாயத்தையும் மூலமாகவுடைய வியாசமுனியின் சூத்திரத்தை வேறு படுத்தலாகாது என்பது கருத்து (46)

ஆபாதம்—அவிசாரம்.

(அ) மேலும் ஜைமினியின் வேறு சூத்திரத்தை விசாரித்தலாலும் இவ்வாறேயாம் எனக்கூறுகின்ருர்:—

तत्रापि दुर्घटमवैति यदा तत्त्व
बोधं विवक्षति विसृज्य विकल्पजालम् ।
किं कारणं वदति येन स तत्त्वगामि
विज्ञानमर्थमवबोधयदप्रबुद्धम् ॥ ४७ ॥

ஜைமினிமுனி ஆபாத திருஷ்டியிலை் பிரத்தியக்ஷமாத்திரத்திற்கு சத்திய வஸ்துவின் சம்யோக ஜன்யத்தன்மையைக்கூறி

**यदा**—எப்போது

**तत्रापि**—பிரத்தியக்ஷமாத்திரத்திலேயே

**दुर्घटं**-இந்த லக்ஷணத்தின் பொருத்தமின்மையை

**अवैति**- அறிகின்ருரோ

**तदा**—அப்போது

**विकल्पजालम्**—அநான்ம பிரத்தியக்ஷத்தை

**विसृज्य**—பரித்தியாகஞ்செய்து

**तत्वबोधं**-தத்துவஞானத்தையே

**विवक्षति**-கூறுதற்கு விருப்புகின்ருர்

அற்றேல் இ:.து எவ்வலிமையாலறியப்பட்டது என வினவுகின்ருன்

**किंकारणम्**—யாது காரணத்தால் அவரது அபிப்ராயமிவ்வாறறியப் பட்டது

விடை

**सः येन**—அந்த ஜைமினி யாதொருகாரணத்திஞல்

**अप्रबुद्धम्**—அறியப்படாத

**अर्थंबोधयत्**—பொருளை அறிவிக்கின்றதாகியே

**विज्ञानम्**—விஞ்ஞானமானது

**तत्वगामि इति**—தத்துவபோதகமாமென்று

**वदति**-கூறுகின்றனரோ அதனுல்

இவ்வாறு அஞ்ஞாதார்த்த விஷயக ஞானத்திற்கே பிரமாத்தன்மை அவரது சம்மதமாம் ஆதலின் பிரத்தியக்ஷசூத்திரத்தில் அவிசார

திருஷ்டியினுலேயே அநான்மப்பிரத்தியக்ஷலக்ஷணத்தின் கூற்றும். ஆன்மாவினும் அன்னியவஸ்துவிற்கு அஞ்ஞாதத்தன்மையின் அசம்பவத்தைக்கூறினமையின் என்பது கருத்து. (47)

(அ) அற்றேல் ஜைமினியினுல் அறியப்படாத அர்த்தத்தை விஷயஞ்செய்யும் ஞானம் பிரமையாம் என்று எங்கே கூறப்பட்டது என்ருகாங்கைஷயுண்டாகக்கூறுகின்றுர்:—

**औत्पत्तिके हि भगवानयमप्रबुद्धमर्थं प्रमाणविषयं कथयांबभूव ।**
**अत्राहतत्रननु धर्मगतं प्रमाणं तत्वार्थगामि कथितं न परमात्मगामि ॥**

**अयं भगवान्**-இந்த ஜைமினியபகவான்

**औत्पत्तिके हि**-ஔத்பத்திக சூத்திரத்தின்கண்

**अप्रबुद्धमर्थं** - (அஞ்ஞாதார்த்தத்தில் அது பிரமாணமாம் என்னும் பாகத்தால்) அஞ்ஞாதார்த்தம்

**प्रमाणविषयं**-பிரமாணத்திற்கு விஷயமாமென

**कथयांबभूव**-கூறியுள்ளார்

அற்றேல் இந்தச்சூத்திரத்தினுல் தருமத்தின்கண் பிரமாணமாயுள்ள விதாயக வாக்கியத்திற்கே அஞ்ஞாதார்த்தத்தைப்போதிக்குந்தன்மையால் தத்துவா வேதகப்பிராமாண்யம் கூறப்பட்டது தருமமே ஜிஞ்ஞாஸ்யத் தன்மையால் ஆரம்பிக்கப்பட்டமையின் பரமான்ம விஷயகப்பிரமாணத் திற்கின்றும் அஃது ஆண்டு ஆரம்பிக்கப்படாமையின் என்று வினவுகின்றுன்.

**अत्र आह**-ஈண்டு வினவுகின்றுன்

**तत्र**-ஔத்பத்திக சூத்திரத்தின்கண்

**धर्मगतं**-தருமத்தை விஷயஞ்செய்கின்ற

**प्रमाणं**-பிரமா ஞானம்

**तत्वगामि**-தத்துவாவேதகமாமென்று

**कथितं**-கூறப்பட்டது

**न परमात्मगामि**-பரமான்ம விஷயகஞானம் கூறப்படவில்லை

**ननु**-இஃது பிரசித்தமாம் (48)

சோதனை = விதிக்கின்ற வாக்கியம்

(அ) ஔத்பத்திக சூத்திரமானது தருமசோதனையை விஷயமாக வுடையது என்பது வாஸ்தவந்தான் ஆனல் அவ்வளவு மாத்திரத்தை விஷயஞ்செய்வதின்றுா். அதுவும் வியவகாரதிருஷ்டியினலேயாம் முக்கிய அஞ்ஞாதத்தன்மை சொப்பிரகாச ஆன்மாவினும வேறிடத்திற் சம்பவியாமையின் இதுவும் ஆண்டு ஜைமினிக்கு சம்மதமேயாம் "அஞ்ஞாத அர்த்தத்தில அஃது பிரமாணமாம் வாதராயணருக்கு" என்று அதற்கு வியாசமுனியின் சம்மதத்தைக்காண்பித்தலால் அவருக்கும் கூறியநியாயத்தால் ஆன்ம (போதக) பிரமாணத்திற்கே அஞ்ஞாதார்த்தத்தன்மையால் தத்துவாவேதகத்தன்மை சம்மதமாதலின் என்னும் அபிப்பிராயத்தால் பரிகரிக்கின்ருா்:—

सत्यं यदाहपितृमान् व्यवहारदृष्टि-
माश्रित्यतत्कथितवान् प्रकृतोपयोगात् ।
दूरप्रसारित निसृष्ट निगूढभाव-
स्तद्बादरायणमतानयनात् प्रतीमः ॥ ४९ ॥

**पितृमान्**-பிதா முதலானோரால் சிக்ஷிக்கப்பட்ட புத்தியினையுடைய ஜைமினி

**यदाह**-தரும விஷயகப் பிரமாணம் ஆண்டு நிரூபிக்கப்பட்டது என்று யாதொன்றைக் கூறினரோ

**सत्यम्**-அஃது உண்மையே

**प्रकृतोपयोगात्**-தொடங்கிய தரும விசாரத்தில் உபயோகமாயிருத்தலால்

**व्यवहारदृष्टिम्**-வியவகார திருஷ்டியை

**आश्रित्य**-ஆசிரயித்து ஜைமினி

**तत्कथितवान्**-அதனைக் கூறினரென்று

**(वयं) प्रतीमः**-நாங்கள் அறிகின்றோம் ஆண்டு அங்ஙனம் கூறினரென்பது எதனலறியப்படுகின்றது என்னுமிடத்துக் கூறுகின்ருா்

**तद्बादरायण**-ஆண்டு சூத்திரத்தின்கண் வியாச முனியின்

**मतानयनात्**-மதத்தை யிழுத்திருத்தலின் காண்பிக்கப் பட்டமையினென்பது பொருள்

அற்றேல் வியாசருக்கும் விதாயகவாக்கியங்கட்கு தத்துவத்தை யறிவிக்கும் பிராமாண்யம் சம்மதமேயாமென்று சூசிப்பிக்கும் பொருட்டு ஆண்டு அதனைக் கூறுதல் ஏனுகாதெனருசங்கித்துக் கூறுகின்ருர்.

**दूरप्रसारित**-உத்தரமீமாம்சையின்கண் விஸ்தரிக்கப்பட்ட அர்த்தத்தின்கண்

**निसृष्ट**-நன்ருக வைக்கப்பட்ட

**निगूढभाव:**-கூடமான அபிப்பிராயமுடையவர் ஜைமினி மகரிஷி

ஆரம்பணுதிகரணுதிகளில் நிரூபிக்கப்பட்ட ஆன்மதத்துவத்திற்கு சுருதிநியாயங்களின் சம்மதத்தன்மையுண்மையினுல் வேறு பிரகாரம் சம்பவியாமையால் வியாசருக்கு சோதனை (விதாயகவாக்கியத்திற்)க்கு தத்துவத்தையறிவிக்குந்தன்மை சம்மதமின்ரும் ஆதலால் ஜைமினி மகரிஷிக்கும் வியாசசூத்திரத்தையநுசரித்தலால் அவ்வாறே அபிப்பிராயமாம். அப்படியிருந்தபோதிலும் கருமங்களில் பிரவிருத்திக்கு அங்கமாக சாமானியமாகவே அதைக்கூறினதாம் என்பது கருத்து. (49)

(அ) அற்றேல் "ஆன்மா தெரிசிக்கத்தக்கது" என வேதாந்தங்களில் விதிகேட்கப்படுதலால் ஜைமினிக்குப்போன்று அதன் பொருளை நிரூபிக்கின்ற வியாசருக்கும் சோதனைக்கு தாத்விகப் பிராமாண்யமே சம்மதமாயிருக்கட்டுமே என்ருசங்கித்துக்கூறுகின்ருர்:-

द्रष्टव्य इत्यपि विधिर्न विधिप्रमेय-
मात्मानमेव विनियच्छति तत्कुतश्चेत् ।
अज्ञातता च परमात्मन एव यस्मात्
यस्माच्च कर्तृवशवर्ति न दर्शनं तत् ॥ ५० ॥

**द्रष्टव्य:**-ஆன்மா தெரிசிக்கத்தக்கது

**इत्यपि**-என்னுமிந்த வாக்கியமும

**विधि: न**-தெரிசனத்தின் விதிபரமன்ரும்

அப்படியானுல் இந்த வாக்கியம் எதன் பரமாமென்ருசங்கித்துக் கூறுகின்ருர்

**विधिप्रमेयम्**-பிரமாணத்திற்கு விஷயயாக

**आत्मानमेव**–ஆன்மாவையே அந்தவாக்கியம்

**विनियच्छति**–விசேஷமாக நியமனஞ்செய்கின்றது

அதனையே சங்கைவாயிலாக பிரதிபாதிக்கின்றார்

**तत्कुतश्चेत्**- அஃது எதனுலெனின்

**यस्मात्**–யாதொரு காரணத்தினுல்

**अज्ञातता च**–அஞ்ஞாதத்தன்மையும்

**परमात्मनः एव**-பரமான்மாவிற்கேயாமோ அதனுல்

எது அஞ்ஞாதமோ அதுவே அறியும் வேட்கை வாயிலாக பிரமாணத்தால் எல்லோராலும் அறியப்படுகின்றது விசேஷமாக முமுக்ஷுகளுக்கு அஞ்ஞாதம் ஆன்மதத்துவமேயாம ஆதலின் அதுவே பிரமாணங்களுக்கு விஷயமாமென்னுமிதனை வாக்கியம் தெரிசிப்பிக்கின்றது எனபது பொருள்.

அற்றேல் தவ்யப்பிரத்தியயத்தினுல் விதியின் அர்த்தமே அந்த வாக்கியத்திற்கு இருக்கட்டுமே என்ருசங்கித்து விதியர்த்தம் முதலத்தியாயத்திலேயே நிராகரிக்கப்பட்டமையின் அந்த வாக்கியத்திற்கு அஃது பொருளன்றெனக்கூறுகின்றார்.

**यस्मात्**-யாதொரு காரணத்தினுல்

**तद्दर्शनम्**–அந்த ஞானமானது

**कर्तृवशवर्ति**–கருத்தாவினதீனமாக

**न**–ஆகின்றதில்லையோ அதனுல் விதி விஷயமன்றும்

பிரத்தியயம்=விகுதி (50)

(அ) அற்றேல் அந்த வாக்கியத்திற்கு ஆன்மவடிவ பிரமேயத்துவத்தின் நியாமகததன்மை எங்ஙனம் கூடும் **कृत्याश्च** 'க்ருத்தியாச்ச' என தவ்யப்பிரத்தியயத்திற்கு விதியர்த்தத்தை விதிக்கும் சூத்திரத்திற்கு விரோதம் வருதலின் என்னுமிடத்துக்கூறுகினறார்:—

**अर्हे कृत्यतृचश्च पाणिनिवचः स्पष्टं विधत्ते यत-**
**स्तस्माद्दर्शनयोग्यतां वदति नस्तव्यो न तत्वान्तरम् ।**

तस्मादात्मपदार्थमात्रनियतं मेयत्वमेकान्ततो
द्रष्टव्यादिवचो वदत्यनुभवादज्ञात आत्मा यतः ॥ ५१ ॥

**अर्हे कृत्यतृचश्च**- யோக்கியார்த்தத்தில் கிருத்தியப்பிரத்தியயமும் திருச்பிரத்தியயமும் வரட்டும்

**पाणिनिवचः**-என்னும் பாணினி சூத்திரம்

**स्पष्टं विधत्ते** – யோக்கியார்த்தத்தில கிருத்தியாதிப் பிரத்தியயமா மென்று வெளிப்படையாக விதிக்கின்றது

**यतः तस्मात्** – யாதொரு காரணத்தால் இங்ஙனமோ அதனுல்

**तव्यः** – கிருத்தியான்மகதவ்யப்பிரத்தியயம்

**नः** – எங்களைக்குறித்து

**दर्शन योग्यताम्** – ஆன்மாவிற்கு அஞ்ஞாதத்தன்மை புருஷார்த்தத்தன்மைகளிருத்தலால் தெரிசன யோக்கியதையை

**वदति** – கூறுகின்றது

**न तत्वान्तरम्** – விதி வடிவ வேறு பொருளைக்கூறுகின்றதில்லை

ஆதலால் வியாசருக்கு விதாயக வாக்கியத்திற்கு தாத்விகப் பிராமாண்யம் சம்மதமின்ரும். மற்ரே ஆன்மமாத்திரகதிற்கு பிரமாண விஷயத்துவம் சம்மதமாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்.

**तस्मात्** – ஆதலால்

**द्रष्टव्य इत्यादिवचः** – ஆன்மா தெரிசித்தற்கு யோக்கியமாம் என்பது முதலிய வசனம்

**मेयत्वम्** – பிரமிதிவிஷயத்துவம்

**एकान्ततः**–வியபிசாரமின்றிநியமமாக

**आत्मपदार्थमात्रनियतम्** – ஆன்மாவில் மாத்திரம் நியதமாக வுளதென

**वदति** – நிச்சயஞ்செய்து கூறுகின்றது.

அற்றேல் அஞ்ஞாதத்தன்மை கடாதியின்கண்ணுமநுபவிக்கப்படு கின்றதேயென்ருசங்கித்து கடாவச்சின்ன ஆன்மாவிலுள்ள அஞ்ஞாதத்

தன்மையே கடாதியின்கண் அநுபவிக்கப்படுகின்றதென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

**यतः** – எதனால்

**अनुभवात्**–நான் என்னையறியேனென்னுமநுபவத்தால்

**आत्मा**– ஆன்மாவே

**अज्ञातः**–அஞ்ஞாதமாம்

அதனால் கூறிய ரீதியினால் அன்னியத்திற்கு அஞ்ஞாதத்தன்மையில் பிரமாணமின்று மென்பது பொருள். (51)

(அ) மற்றும் **सत्संप्रयोग** சத்தியவஸ்துவோடு சம்யோகமென்னும் சூத்திரத்தினை விசாரித்துப்பார்த்தலாலும் அனைமப்பிரத்தியக்ஷத்திற்குத் தாத்விகப்பிராமாண்யம் சிந்திக்கின்றதில்லை அச்சூத்திரத்தின்கண் வித்தியமான (இருக்கின்ற) தின் பிரதீதியினால் பொருளிற்கு வித்தியமானத் தன்மை மாத்திரம் எது அறிபப்படுகின்றது பாரமார்த்திக சத்துமெது வாக அறியப்படவில்லை. கிளிஞ்சில் வெள்ளி முதலியவற்றின் கண்ணும் வித்தியமானத் தன்மையுளதேயாம். அப்படி யாயினும் அர்த்தக்கிரியை விசேஷ யோக்கியத்துவ விசிஷ்ட வித்தியமானத் தன்மை அதன்கண் இன்றும் ஆதலின் அதனையபேக்ஷித்து கிளிஞ்சில் சத்தியமாமாதலின் அதன் பிரத்தியக்ஷம் சத்திய வஸ்துவின் சம்யோக ஜன்னியமாம் என கூறப்பட்டது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

रूप्यादिविभ्रममपेक्ष्य हि शुक्तिकादौ
सत्संप्रयोगजनितेव तु बुद्धिवृत्तिः ।
तामप्यपेक्ष्य सति संहृतसर्वभेदे
सत्संप्रयोगजनिता मतिरभ्युपेता ॥ ५२ ॥

**शुक्तिकादौ हि**– கிளிஞ்சில் முதலியவற்றின்கண்

**बुद्धिवृत्तिः** – அந்தக்கரணத்தின் விருத்தி

**रूप्यादिविभ्रमम्** – இரஜதம் முதலிய பிராந்தியினை

**अपेक्ष्य एव** – அபேக்ஷித்தே

**सत्संप्रयोग** – சத்தியவஸ்துவின் சம்யோகத்தால்

**जनिता** – ஜன்னியமாம் என்று கூறப்படுகின்றது

அற்றேல் சுத்தி முதலியவற்றிற்கு ஆபேக்ஷிக சத்தியத்தன்மையே என் செல்லப்படுகின்றது பரமார்த்த சத்தியத்தன்மை ரனுகாதென்னு மிடத்துக் கூறுகின்றார்.

संहृतसर्वभेदे – சருவபேதமுமின்றிய
सति - சத்ரூப ஆன்மாவின்கண்
मतिः -யாதொரு ஞானமுண்டோ அது
तामप्यपेक्ष्य –சுத்தியாதியையபேக்ஷித்தும்
सत्संप्रयोग–சத் வஸ்துவின் சையோகத்தால்
जनिता -உண்டானதென
अभ्युपेता –அங்கீகரிக்கத்தக்கது.

சுத்தி முதலியவையும் சுருதி முதலியவற்றால் நிஷேதிக்கப்படுதலின் சருவப் பிரபஞ்சத்தின் நிஷேதத்திற்கு அவதி (அதிஷ்டானம்) யாயுள்ள சன்மாத்திர ஆன்மாவின்கண் யாதொரு ஞானமுண்டோ அது சுத்தியை யபேக்ஷித்தும் நிரதிசய ஸத் வஸ்துவோடு ஸம்யோகத்தால் ஜனித்த தென்று அறியவேண்டும். ஈண்டு ஆன்ம ஞானத்திற்கு சத்தின் சம்யோக ஜன்னியத் தன்மையைக் கூறினது நையாயிக மதப்படி கூறப்பட்டது. இவ்வாறாகவே ஜைமினியின் பிரத்தியக்ஷ லக்ஷணத்தின் வலிமையாலும் அநான்மப்ரமாணத்திற்குத் தாத்விகத் தன்மை சித்திக் கின்றதில்லை என்பது கருத்து. (52)

(அ) அற்றேல் சத்வடிவ சுத்தியாதிகட்கும் ஆபேக்ஷிக சத்துவ மிருக்குமாயின் அப்போது ஆன்மாவும் சத்வடிவமாவதால் ஆபேக்ஷிக சத்வடிவமேயாகும் என்றாசங்கித்து அவித்தை அதன் காரியமிரண்டனுள் ஒன்றுந்தன்மை ஆண்டு உபாதியாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

वेदान्तवाक्यजनितां परमात्मबुद्धि-
वृत्तिं व्यपेक्ष्य पुनरत्र न काचिदस्ति ।
सत्संप्रयोगजनिता भुवनत्रयेऽपि
बुद्धिस्तमोविरचितं हि जगत्समस्तम् ॥ ५३ ॥

वेदान्तवाक्य – வேதாந்த வாக்கியத்தால்
जनितां – உண்டான

**परमात्म** – பரமாத்ம விஷயக

**बुद्धिवृत्ति** – அந்தக்கரண விருத்தியை

**व्यपेक्ष्य** – அபேக்ஷித்து

**पुनरत्र** – ஈண்டு

**भुवनत्रयेऽपि** – மூவுலகின் கண்ணும்

**सत्संप्रयोगजनिता** – சத்வஸ்துவின் சம்யோகத்தாலுண்டான

**काचिद्वृत्तिः** – யாதொரு விருத்தியும்

**न अस्ति** – இன்றாம்

அதனின்மையில் ஏதுவைக் கூறுகின்றார்.

**समस्तं जगत्** – சர்வப் பிரபஞ்சமும்

**तमोविरचितं हि** – அஞ்ஞான கற்பிதமாதலின்

அதாவது சருவமும் ஆன்மஞானத்தால் நிராகரிக்கப்பட்டமையின் ஆன்மாவே சத்தெனவும் அதனினும் அன்னியம் சத்தன்றாமென்பது பொருள். (53)

(அ) இவ்வாறு தருமத்தின்கண்ணும் சோதனா (விதாயக வாக்கியத்தின்கண்ணுள்ள) பிராமாண்யம் வியாவகாரிகமேயாம். தாத்விக மன்றாம என்னுங் கருத்தால் கூறுகின்றார் :—

**धर्मेऽपि तत्वमतिरेव तु चोदनायाः**
**सत्वादिवस्तुनि यथाऽक्षनिबन्धना धीः ।**
**अज्ञातताऽपि सदृशी व्यवहारकाले**
**तत्वावबोधसमये न तु तत्वबुद्धिः ॥ ५४ ॥**

**सत्वादिवस्तुनि** – பாவாபாவ வஸ்துக்களில்

**अक्षनिबन्धना धीः** – நேத்திராதியாலுண்டான ஞானம்

**यथा** – எப்படி தனது விஷயத்தின் வாஸ்தவத் தன்மையின் சூன்யமாமோ

**तु** – அப்படி

**चोदनायाः** – விதிவாக்கியத்தினால்

**धर्मेऽपि** – தருமத்தின்கண்ணும்

**तत्त्वमतिरेव** - அதன் சொரூபஞானமேயுண்டாகின்றது அத்துணையால் தருமத்திற்கு தாத்விகத்தன்மை சித்திக்கின்றதில்லை.

அற்றேல் தருமத்திற்கு பிரம்மத்திற்குப்போன்று அஞ்ஞாதத் தன்மையுண்மையால அதன் பிரமாணத்திற்கு கடாதிப்பிரமாணத்தின் சமதத்தன்மை எவ்வாறுமெனின் அதற்குக்கூறுகின்றார்.

**अज्ञाततापि**- அஞ்ஞாதத்தன்மையும்

**व्यवहारकाले**-வியவஹாரகாலத்தில்

**सदृशी**-கடாதிக்கும் தருமத்திற்கும் சமானமேயாம்

பிரம்மத்தினும் அன்னியவஸ்து சடமாதலால் பிரம்மத்திற்கு சமமான அஞ்ஞாதத்தன்மை பொருந்தாமையின் கடாதிக்குச்சமமாகவே தருமத்திற்கும் அஞ்ஞாதத்தன்மையாம் என்பது கருத்து தருமப் பிரமாணததிற்கும் கடாதிப்பிரமாணத்தின் சமத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்.

**तत्त्वबोधसमये**-தத்துவ (பிரம்ம) ஞானசமயத்தில்

**तत्त्वबुद्धिः**--தருமத்தின் பரமார்த்தத்தன்மை ஞானம்

**न** -உணடாவதின்றும்

தத்துவவிசார சமயத்தில் தருமத்திற்கும் கடாதிக்குப்போன்று தத்துவஞானமின்றுமாதலின் அவற்றின் பிரமாணங்கட்கும் யாதொரு விசேஷமுமின்றுமென்பது கருத்து. (54)

## பரிணாமவாதம் சுருதிசம்மதமின்றெனல்

(அ) அற்றேல் "சத்தும் (பிருதிவி அப்புதேயு) தியத்தும் (வாயு ஆகாசம்) ஆயிற்று" என சத்வஸ்துவின் பரிணாமமாக பிரபஞ்சம் கேட்கப்படு கின்றது பரிணாமத்தைக்கொள்ளாக்கால் ஆயிற்று என்பது பொருந் தாமற்போம் ஆதலின். பரிணாமமும் பரிணாமியின் சமான சத்தை யுடையதாமாதலின் பிரபஞ்சமும் பிரம்மம்போன்று சத்வடிவமேயாதலின் அதன் பிரமாணம் தத்துவத்தையறிவிப்பதின்றும் என்பதெங்ஙன மென்றுசங்கித்து வேறு பிரகாரமாதல் மாத்திரம் அச்சுருதியிலுள்ள பவன (ஆதல்) சத்தத்தின் பொருளாம். வேறு பிரகாரமாதல் விவர்த்த

பக்ஷத்திலுமுளது. இங்ஙனம் கொள்ளாக்கால் **सत्यं चानृतं च सत्यमभवत्** சத்தியவஸ்துவே சத்தியமும் அநிருதமும் (பொய்யும்) ஆயிற்று என்னும் அதன் வாக்கிய சேஷத்தின்கண் சத்தியவஸ்துவிற்கு பொய்ப்பொருளாதலைக்கூறுதல் பொருந்தாமற்போமாதலின் மற்றும் **वाचारंभणं विकारो नामधेयम्** வாக்கினாலேயே ஆரம்பிக்கப்படுகின்றது காரியம் நாமமாத்திரமாம் என்பது முதலிய சுருதியும் முற்கூறிய நியாயத்தால் விவர்த்த வாதத்தையாசிரயித்து சத்தியபரிணாமத்தை நிவர்த்தித்தலால் பிரத்தியக்ஷாதிஞானத்தின் விஷயத்தினின்றும் பரமார்த்தத்தன்மையை நன்ருக நீக்குதற்கு பிரவிருத்தித்தது அச்சுருதியின் விரோதத்தாலும் பரிணாமவாதம் சுருதிசம்மதமன்று மென்னுங்கருத்தால் கூறுகின்ருர்:—

आरम्भणादिवचनं सकलं प्रवृत्तं
प्रत्यक्षबुद्धिविषयादपहर्तुमुच्चैः ।
तत्त्वं यथोदितनयेन विवर्तवाद-
माश्रित्य सत्यपरिणामनिवारणेन ॥ ५५ ॥

**आरम्भणादिवचनं सकलम्** – வாக்கினாரம்பிக்கப்படுகின்றது என்பது முதலிய சுருதிவசனம் அனைத்தும்

**यथोदितनयेन**-முன்கூறிய நியாயத்தால்

**विवर्तवादमाश्रित्य**-விவர்த்தவாதத்தை யாசிரயித்து

**सत्यपरिणाम**–சத்தியபரிணாமத்தை

**निवारणेन**–நிவர்த்தித்தலால்

**प्रत्यक्षबुद्धि**–பிரத்தியக்ஷாதிஞானத்தின்

**विषयात्**–விஷயத்தினின்றும்

**तत्त्वम्**–பாரமார்த்திகத்தன்மையை

**उच्चैः अपहर्तुम्**–நன்ருக நீக்குதற்கு

**प्रवृत्तम्**–பிரவிருத்தித்தது

வாசாரம்பணம் என்னும் சுருதியானது காரியமாகிய கடாதிகட்கு சத்தத்தின் விஷயத்தன்மை மாத்திரத்தினைக்கூறுகின்றது.

மிருத்திகையே சத்தியம் என்னும் உத்தரவாக்கியம் தேற்ற ஏகாரத்தால் காரியத்தை விலக்கி காரணமாத்திரமான மண் முதலியவற்றிற்கு சத்தியத்தன்மையைக்கூறுதலால் பிரத்தியக்ஷாதிவிஷயத்தினின்றும் தத்துவத்தை (பாரமார்த்திகத்தன்மையை) விலக்குகின்றது. ஆதலால் கடாதிகட்கு சுருதியினல் விவர்த்தத்தன்மை யாசிரயிக்கப்பட்டது. சத்தியபரிணாமித்தன்மையும் விலக்கப்பட்டது ஆதலின் அச்சுருதியின் வலிமையால் நேத்ராதிக்கும் விவர்த்தமாத்திர விஷயத்தன்மை சித்தித்தலின் நேத்திராதிகட்கு தாத்விகப்பிராமாண்யமின்றாமென்பது கருத்து. (55)

(அ) அற்றேல் **तदनन्यत्वम्** அதனினும் அன்னியமன்றாம் என்னும் சூத்திரத்தால் வியாசபகவான் காரியத்திற்கு காரணத்தோடு அபேதத்தைக்கூறியுள்ளார். காரணமோ சத்தியமாம் ஆதலின அதன பின்னமான காரியமும் சத்தியமேயாம் என தாத்விக வேற்று வடிவத்தை தெரிசிப்பிக்கின்ற அவரால் பரிணாமமே ஆசிரயிக்கப்பட்டது. ஆனதால சத்திய பரிணாமத்தை நீக்குதலல்ல என்னுமிது அசங்கதமேயாமெனின் அதற்குக்கூறுகின்றார்:—

> वाक्यप्रवृत्तिमनुसृत्य च सूत्रकारः
> सिद्धान्ततामनयदत्र विवर्तवादम् ।
> तत्त्वप्रकाशनविधावपहृत्य शक्ति-
> मारम्भणादिवचनादपरप्रमायाः ॥ ५६ ॥

**सूत्रकारः**—வியாசபகவான்

**वाक्यप्रवृत्तिम्**—எதைக்கேட்டலால் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாகின்றதோ எனபதாதியால் ஏகவிஞ்ஞானத்தால் சருவவிஞ்ஞானத்தின் பிரதிஞ்ஞையால் சருவான்ம விஷயக வாக்கியோபக்கிரமத்தை

**अनुसृत्य**—அநுசரித்து

**आरम्भणादि**—வாக்கினுல் ஆரம்பிக்கப்படுகின்றது

**वचनात्**—என்பது முதலிய வசனததால்

**अपरप्रमायाः**—அநான்மப்பிரமாணத்திற்கு

तत्वप्रकाशनविधौ-தாத்விகஞான த்தையுண்டுபண்ணுவதில்

शक्तिम्-சாமர்த்தியத்தினை

अपहृत्य-விலக்கி

अत्र-ஈண்டு

विवर्तवादं-விவர்த்தவாதத்தினை

सिद्धान्तताम्-சித்தாந்தமாக

अनयत्-அடைவித்தார்

வியாசமுனி காரியத்திற்கு காரணத்தோடு அனன்யத்தன்மையில் வாசாரம்பணாதி சுருதியிற் கூறப்பட்ட பொருளையே ஏதுவாக ஆரம்பண சத்தாதிகளால் எனக்கூறினர். அச்சுருதிக்கு காரியம் மித்தையாமெனப் பொருள் கூறப்பட்டது அதனால காரணத்தோடனன்யத்துவ மென்பது அதனபின்னமன்றும் மற்றோ அதனினும் வேறாக இல்லாமையேயாம். அதுவும் பரிணாமவாதத்தின்கண் பொருத்துமன்றும் பரிணாமத்தின்கண் சொற்ப அபேதமிருப்பினும் காரியகாரணங்கட்கு வேற்றுமையுமிருத்தலின். விவர்த்தபக்ஷத்திலோ காரியத்திற்குக் காரணத்தினின்றும் வேற்றுமையின்றுமாதலின் பிரதீதியாகின்ற பேதத்திற்கு மித்தியாத் தன்மையே சூத்திரக்காரருக்கும் சம்மதமாமாதலின் விவர்த்தவாதமே சித்தாந்தமாமென்பது கருத்து. (56)

## பரிணாமவாதத்தினை யங்கீகரித்தலின் தாற்பரியம்

(அ) அற்றேல் भोक्त्रापत्तेः போக்திரு அடைவு வருதலின் என முதற்சூத்திரத்தின்கண் स्याल्लोकवत् உலகம் போன்று ஆகும் என சமுத்திரமானது அலை திவலை நுரை குமிழிகள் வடிவத்தாலிருப்பது போன்று பிரம்மம் பரஸ்பரம் விலக்ஷணமான சேதனாசேதன விசித்திரப் பிரபஞ்சவடிவத்தால அநேகரசமாமென தெரிசிப்பிக்கப்பட்டது ஆதலின் அந்த சமுத்திரத்தோடு பிரம்மம் சமமாம். இவ்வாறுகும்போது விரோதமாமெனின் வாஸ்தவந்தான் இரண்டும் (பரிணாமம் விவர்த்தம்) அவருக்கு சம்மதமாயின் விரோதமுண்டாம். இரண்டும் அவருக்கு சம்மதமின்றும். விரோதமுடையவைகட்கு சேர்க்கை பொருந்தாமையின் இதனாலேயே பிரௌடிவாதத்தாலெனக்கூறவேண்டும். ஆண்டும் அத்வைதவிரோதிகளாகிய பரபக்ஷத்தை நீக்கும் பொருட்டும் தனது

சித்தாந்தத்திற்கு அநுகூலத்தன்மையாலும் முன்னம் பரிணாமவாதம் அங்கீகரிக்கப்பட்டது ஆதலின் அதனோடு இவரது சித்தாந்தத்திற்கு விரோதமின்று மென்னுங்கருத்தால் வாதிகளின காரியவிஷயகமாக அங்கீகாரத்தின் நான்கு பிரகாரங்களைக்கூறுகின்றார்:—

आरम्भसंहतिविकारविवर्तवादा-
नाश्रित्य वादिजनता खलु वावदीति ।
आरम्भसंहतिमते परिहृत्य वादौ
द्वावत्र संग्रहपदं नयते मुनीन्द्रः ॥ ५७ ॥

आरम्भसंहति—ஆரம்பம் சங்காதம்
विकारविवर्त—பரிணாமம் விவர்த்தம் என்னும்
वादान्—வாதங்களை
आश्रित्य—ஆசிரயித்து
वादिजनता—வாதிஜனங்கள்
वावदीति—அதிகமாகப்பேசுகின்றனர்
आरंभसंहति—ஆரம்பம் சங்காதமென்னும்
मते—இருமதங்களையும்
परिहृत्य—அத்வைதத்திற்கு உபயோகமின்மையால் உபேக்ஷித்து
मुनीन्द्रः—முனிகளுக்குள் சிறந்த வியாசர்
द्वौ वादौ—இரண்டு வாதங்களை
अत्र—அத்துவிதமதத்தின் கண்
संग्रहपदम्—கிராஹ்யத்தன்மையை
नयते—அடைவிக்கின்றார் கிரஹிக்கின்றாரென்பது பொருள்

காரணமான தந்து முதலியவற்றினின்றும் அத்தியந்தம் வேறானதும் உற்பத்திக்கு முன்பு அசத்தானதுமான காரியத்திற்கு சமவாயிகாரண அசமவாயிகாரண நிமித்தகாரணங்களால் உற்பத்தியாமென்பது ஆரம்பவாதமாம்

அணுக்களின் கூட்டமே கடாதிவடிவகாரியமாம் அதினின்று முற்பத்தியுடையதாய் வேறாயிருப்பதன்றுமென்பது சங்காதவாதமாம்

மண் முதலியவற்றினின்றும் வஸ்துவாக வேற்றுச்சுபாவம் கடாதி என்பது பரிணாமவாதமாம்.

காரணத்தினின்றும் சற்றே வேற்றுச்சுபாவம் விவர்த்தவாதமாம் இரச்சுவினின்றும் சர்ப்பம்போல

இந்த வாதங்களை யாசிரயித்து மதவாதிகள் கூறுகின்றனர் இங்கு மதபேதங்களைக்காண்பித்தற்கு பிரகிருதத்தில் உபயோகத்தைக் கூறுகின்றார் ஆரம்ப சங்காதமென இந்த இருமதங்களையும் உபேக்ஷித்து அத்வயப்பிரம்மத்திற்கு சகத்காரணத்தைக்கூறும சமன்வய சுகிற்கு அந்தியந்சம் பேதத்தையாசிரயிக்கின்ற ஆரம்பபக்ஷத்திலும் சங்காத பக்ஷத்திலும் எழும்பிய விரோதசங்கையைப் பரிகரித்தற்பொருட்டு சமுத்திரத்திற்கும் அலை முதலியவற்றிற்கும் போன்று அபேதமும் சொற்ப பேதமுமான வடிவத்தால் காரியகாரணபாவம் பொருந்துகின்றது உலகின்கண் அவ்வாறு காணப்படுதலின் ஆதலால் காரியகாரண சாமர்த்தியத்தால் அந்தியந்தபேதம் சித்திக்கிறதில்லை ஆதலின பரர்களால் ஆசிரயிக்கப்பட்ட பரிணாமவாதமும சித்தாந்தத்தன்மையால் விவர்த்தவாதமும் ஆகிய இரண்டையும் சூத்திரக்காரர் கிரகித்தார் என்பது பொருள் விரோதசங்கையைப்பரிகரித்தற்பொருட்டு இரண்டையும் கிரகித்தாரென அன்வயஞ்செய்க. (57)

(அ) அற்றேல் பிறர் மதத்தை நிவர்த்திக்கும் பொருட்டு பரிணாமவாதம் அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது அதுவும் அவசியமாகவே இருக்கட்டுமே அதற்கு பிரௌடி வாதத்துவமெப்படியெனின் அற்றன்று இவ்வாறு விவர்த்த வாதத்தாலும் பிறர்மதத்தின் நீக்கம் சம்பவித்தலின் அப்படியானால் அதனை (பரிணாமவாதத்தை) ஏனங்கீகரிக்கவேண்டுமெனின் மந்தமதியினையுடையோருக்கு தோற்றுகின்ற விரோதத்தைப் பரிகரித்தற்பொருட்டாமென கூறப்பட்டதனையே விஸ்தரிக்கின்றார்:—

तत्राऽपि पूर्वमुपगम्य विकारवादं
भोक्त्रादिसूत्रमवतार्य विरोधनुत्यै ।
प्रावर्तत व्यवहृतेः परिरक्षणाय
कर्मादिगोचरविधावुपयोगहेतोः ॥ ५८ ॥

**तथापि**-பரிணாம விவர்த்தங்களுக்குள்

**पूर्वम्**-விவர்த்தவாதத்திற்கு முன்பு அத்வயப்பிரம்மத்தின்கண் சமன்வயத்திற்கு

**विरोधनुत्त्यै**-போக்தா போக்கியம் முதலியவற்றின் பேதத்தைக் கிரகிக்கின்ற பிரமாண விரோதத்தை நீக்கும் பொருட்டு

**विकारवादम्**-பரிணாமவாதத்தை

**उपगम्य**- அங்கீகரித்து

**भोक्त्रादिसूत्रम्**-அதனை விஷயஞ்செய்கின்ற போக்திரு என்பதாதி சூத்திரத்தினை

**अवतार्य**-உண்டாக்கி

**व्यवहृतेः**-உலகவியவகாரத்தினை

**परिरक्षणाय**-காப்பாற்றும் பொருட்டும்

**कर्मादिगोचर विधौ**-யாகம் முதலிய கருமத்தை விஷயஞ் செய்கின்ற விதியின்கண்

**उपयोगहेतोः**-உபயோகமாதற்பொருட்டும்

**प्रावर्तत**-வியாசர் பிரவிருத்தித்தார்

அற்றேல் விவர்த்த வாதத்தால் அந்த பேதசங்கை நிவர்த்திக்கக் கூடாதா என்றுசங்கித்து பரிபக்குவ புத்தியினையுடைய புருஷனைக் குறித்து விவர்த்த வாதத்தால் பேதசங்கை நிவர்த்திக்கக் கூடுமாயினும் பேதத்தின் கண் ஆக்கிரகமுள்ள புருஷனைக் குறித்து பரிணாம வாதத்தாலேயே அதன் நீக்கம் சுலபமாமென்னும் அபிப்ராயத்தால் உலக விபவகாரமெனப்பட்டது. உலகின் கண் ஜலத்தைக் கொண்டு வருதல் முதலியவற்றை விரும்புகின்ற புருஷனுக்கு நியமமாக கடாதியின் கண் பிரவிருத்தி முதலிய வியவகாரம் காணபபட்டுளது. அதனை ரக்ஷித்தலாலும் கருமகாண்டத்தாலறியப்பட்ட அக்நிஹோத்திராதி யநுஷ்டானத்தினையும் பிரம்மஹத்தியாதியினின்றும் நிவிருத்தியினையும் அடைவிக்கின்ற விதி நிஷேதங்களுக்கு உபயோகமாயிருந்தலாலும் பரிணாமவாதம் அங்கீகரிக்கப்பட்டதென்பது பொருள். பரிணாம வாதத்தின்கண் காரணகாரியங்கட்கு பேதாபேதமிருத்தலால் உலகிற் பிரசித்தமான பேதம் நிஷேதிக்கப்படுகிறதில்லை காரணத்திற்கு

அத்துவயத்துவமும் பிரதிபாதிக்கப்பட்டதாக ஆகின்றது. ஆகலால் வியாச பகவானுல் பரிணாமவாதம் அங்கீகரிக்கப்பட்டதென்பது கருத்து.

(அ) அற்றேல் முதலில் கூறப்பட்டமையானும் அபேக்ஷிக்கப் பட்டமையானும் பரிணாமவாதமே சித்தாந்தமாக இருக்கட்டுமே அப்படிக் கின்றேல் தனது சம்மதமான விவர்த்தவாதத்தினையே முன்பதாக ஏன் கூறக்கூடாது என்னுமிடத்துக்கூறுகின்றார்:—

साक्षादिहाभिमतमेव विवर्तवाद-
माहत्य सूचयति पूर्वमपेक्षमाणः ।
आरम्भणादिवचनेन विवर्तवादं
शक्नोति वक्तुमुदिते परिणामवादे ॥ ५९ ॥

**पूर्वमपेक्षमाणः**-பரிணாமத்தையபேக்ஷிக்கின்றவராய் வியாசர்

**इह**-இந்த சாஸ்திரத்தின்கண்

**साक्षादभिमतमेव**-நேரே தனக்கு சம்மதமான

**विवर्तवादम्**-விவர்த்த வாதத்தினையே

**आहत्य**- முகத்தால்

**सूचयति**-சூசிப்பிக்கின்றார்

விவர்த்தவாதம் தன்னுல் பிரதிஞ்ஞைசெய்யப்பெற்ற சுத்தாத்து வித சமன்வயத்தைப் பிரதிபாதிக்குந்தன்மையால் நேரே தனக்கு சம்மதமாம் பரிணாமவாதம் இங்ஙனமன்றாமாதலின் விவர்த்தத்தினையே சூத்திரக்காரர் முகத்தால் சூசிப்பிக்கின்றார் அதிலும் பரிணாமவாத முகத்தால் காரிய காரணங்கட்கு அத்தியந்த பேதத்தை நிராகரித்து அவரது (பரிணாமவாதியின்) சம்மதமான பேதத்தையும் நிராகரிக்கின்ற வராய் பரிணாமவாதத்தினையும் உபேக்ஷிக்கின்றார் அப்படிக்கன்றேல் (உபேக்ஷை செய்யாவிடின்) தனக்கே இரண்டிடத்தும் (பரிணாம விவர்த்தம்) வியாபாரத்தையுடன்படின் கௌரவமாதலாலும் விவர்த்த வாதம் பரிணாமவாதத்தை முன்பதாகக்கொண்டதனுலும் முன்னுள்ள யுக்தியினுலேயே இஃது (விவர்த்தவாதம்) கூறத்தக்கதாதலின் அது (பரிணாமவாதம்) முன்பு அங்கீகரிக்கப்பட்டது அதனுல் பரிணாமவாதத்

திற்த முன்பு கூறுதல் மாத்திரத்தால் சித்தாந்தத்தன்மையின்று மென்னுங்கருத்தால் பரிணாமத்தையபேக்ஷிக்கின்றவராயெனப்பட்டது இதனையே விஸ்தரிக்கின்றார்.

**परिणामवादे**-முதலில் பரிணாமவாதம்

**उदिते**-சொல்லப்பட்டபோது

**वारम्भणादि वचनेन**-வாக்கினால் ஆரம்பிக்கப்படுகின்றதென்பது முதலிய வசனத்தால்

**विवर्तवादं**-விவர்த்தவாதத்தினை

**वक्तुं शक्नोति**-கூறுதற்கு முடியும்

வேறு பிரகாரத்தாலன்றும் காரிய காரணங்களின் சொரூபம் பிரதீதியாகாதபோது அதனது மித்தியாத்தன்மையின் ஞானம் பொருந்தாமையின் என்பது பொருள். **(59)**

(அ) இலௌகிக திருஷ்டாந்தத்தாலும் இப்பொருளைக் கூறுகின்றார்:—

**आरुह्य भूमिमधरामितराधिरोढुं**
**शक्येति शास्त्रमपि कारणकार्यभावम् ।**
**उक्त्वा पुरा परिणतिप्रतिपादनेन**
**संप्रत्यपोहति विकारमृषात्वसिद्ध्यै ॥ ६० ॥**

**अधरां भूमिम्** – மேல்மாடிக்கு ஏற விருப்பமுள்ளவனால் அதற்கு உபாயமாயுள்ள படிகளில் கீழ்ப்படியை

**आरुह्य**-ஏறி

**इतरा**-மேற்படியில்

**अधिरोढुं**-ஏறுதற்கு

**शक्या इति**-கூடுமென்பது உலகில் பிரசித்தம்

**शास्त्रमपि**-இவ்வாறு சாஸ்திரமும்

**पुरा**-முன்பு

**परिणतिप्रतिपादनेन**-போக்திரு என்ற சூத்திரத்தால் பரிணாமத்தைப்பிரதிபாதித்தலால்

**कारणकार्यभावम्**-பிரம்மத்திற்கும் சகத்திற்கும் காரணகாரியத் தன்மையை

**उक्त्वा**-பிரதிபாதித்து

**संप्रति**-இப்போது (பின்பு) ஆரம்பணநிகரணத்தில்

**विकारमृषात्वसिद्ध्यै**-காரியத்திற்கு மித்தியாத்தன்மை சித்தியின் பொருட்டு

**अपोहति**-பரிணாமவாதத்தைப் பரித்தியாகஞ்செய்கின்றது

விவர்த்தத்தன்மையைப் பிரதிபாதித்தல் காரணத்தினின்றும் காரியத்திற்கு பேதாதியின் சத்தியத்தன்மையை நிஷேதித்தலேயாம் அதுவும் (நிஷேதமும்) பிரம்மத்தின்கண் பிரபஞ்சத்தினபேதம் பிராப்தியாகும் போது தான் உண்டாகின்றது. ஆதலின் பேதப்பிரசஞ்சக (அடைவிக்கின்ற) பரிணாமவாதத்திற்கும் அதனை நிஷேதிக்கின்ற விவர்த்தவாதத்திற்கும் கிரமம் பொருந்துகின்றது. சுருதியின்கண்ணும் சிருஷ்டி வாக்கியத்தால் ஆரோபிககப்பட்ட பிரபஞ்சத்திற்கு பிரம்மத்தின்கண் "இதுவுமல்ல இதுவுமல்ல" என்னும் வாக்கியத்தால் நிஷேதித்தலால் என்பது கருதது. (60)

(அ) பரிணாம விவர்த்தங்கட்கு திருஷ்டாந்த சமத்தன்மையினை தெரிசிப்பிக்கின்றவராய் கூறிய பொருளை விஸ்தரிக்கின்றார் :—

**विवर्तवादस्य हि पूर्वभूमिर्वेदान्तवादे परिणामवादः ।**
**व्यवस्थितेऽस्मिन्परिणामवादे स्वयं समायाति विवर्तवादः ॥**

**वेदान्तवादे**-வேதாந்த சாஸ்திரத்தின்கண்

**परिणामवादः**-பரிணாமவாதமானது

**विवर्तवादस्य**-விவர்த்த வாதத்திற்கு

**पूर्वभूमिः**-முந்தின பூமியாம்

முற்பாதியால் கூறப்பட்ட பொருளையே பிற்பாதியால் பிரதிபாதிக்கின்றார்

**अस्मिन्परिणामवादे**-இந்தப்பரிணாமவாதமானது

**व्यवस्थिते**-பிராப்தமானபோது

विवर्तवादः-விவர்த்தவாதமானது
स्वयं समायाति-தானே அடைவுறுகின்றது

பேதாபேதத்தை ஆசிரயித்தலால் அத்தியந்த (முழு) பேதத்தினின்றும் பராமுகமுள்ள சித்தமுடையவனுக்கு இனி சொல்லப் போகும் நியாயத்தால் அநாயாசமாகவே அதுவும் (சொற்பபேதமும்) நீக்குதற்குக் கூடுமென்பது பொருள். (61)

(அ) அற்றேல் कथं नु भगवः स आदेशः भवति ஏ பகவன் அந்த உபதேசம எவ்வாறு கூடும் என்னும சுருதி ஏக விஞ்ஞானத்தை ஆக்ஷேபிக்கின்றதாய் சுத்தாத்துவிதத்தை ஆக்ஷேபித்து மண் முதலிய திருஷ்டாந்தத்தைக் கிரகித்தலால பரிணுமத்தை விவக்ஷிக்கின்றது. (கூற இச்சிக்கின்றது) ஓர் வாக்கியத்தின் கண் பூருவ வாக்கியத்தை யநுசரித்தே உத்தர வாக்கியம் செலுத்தத்தக்கது. ஆதலால் அதனே மூலமாகவுடைய சூத்திரமும் அப்பரிணுமத்தில் அபிப்ராயமுடையதாக ஏனுகாதென்ருசங்கித்து कथं नु எவ்வாறு கூடுமென்னும வாக்கியம் பூருவபக்ஷமாதலால் சுத்தாத்வயப்பிரம்மத்தை "வாசாரமபணம் விகார: நாமதேயம் மிருத்திகேத்யேவ சத்தியம" என்பது முதலியவற்ருல் காரியத்திற்கு மித்தியாத்தன்மையை வருணித்தலால் பிரதிபாதித்தலாலும் பரிணுமவாதம் முன்பு கேட்கப்படினும் சம்மதமின்ருமு. மற்ருே கூறிய பிரகாரத்தால் விவர்த்தத்தன்மையினை வியுற்பாதனஞ் செய்தலில் ஏதுவாக பூருவபக்ஷத்தன்மையால் சுருதி சூத்திரங்களால முதலில் அஃது ஆதரிக்கப்பட்டது என வேறு திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர் :—

उपायमातिष्ठति पूर्वमुच्चैरुपेयमाप्तुं जनता यथैव ।
श्रुतिर्मुनीन्द्रश्च विवर्तसिद्ध्यै विकारवादं वदतस्तथैव ॥ ६२ ॥

यथैव-உலகின் கண் எப்படி
जनता-ஜனங்கள்
उपेयमाप्तुं-ஓர் பயனேயடைவதற்கு
पूर्वमुच्चैः-முதலில் மிகவும் முயற்சித்து
उपायम्-சாதனத்தை
आतिष्ठति-அநுஷ்டிக்கின்ருர்களோ

तथैव-அப்படியே
श्रुतिः मुनीन्द्रः च-சுருதியும் வியாசபகவானும்
विवर्तसिद्ध्यै உலகிற்கு விவர்த்தத்தன்மை சித்திக்கும் பொருட்டு
विकारवादं-பரிணாமவாதத்தை
वदतः-பகர்ந்தனர் (62)

(அ) அப்படியானல் ஈண்டு அங்கீகரிக்கப்பட்ட இந்த பரிணாம வாதம் யாருக்கு சம்மதமென்று ஆசங்கித்து முற்கூறிய ஆரம்பம் முதலிய மதங்களை யங்கீகரிக்கின்றவர்களைக் கூறுகின்றார். :—

आरम्भवादः कणभक्षपक्षः संघातवादस्तु भदन्तपक्षः ।
सांख्यादिपक्षः परिणामवादो वेदान्तपक्षस्तु विवर्तवादः ॥

आरंभवादः-ஆரம்பவாதமானது
कणभक्षपक्षः-வைசேஷிகருக்கு சம்மதமாம்
संघातवादस्तु-சங்காதவாதமோ
भदन्तपक्षः-பௌத்தரது பக்ஷமாம்
परिणामवादः-பரிணாமவாதம்
सांख्यादिपक्षः-கபிலர் பதஞ்சலி இவர்களது பக்ஷமாம்
विवर्तवादस्तु-விவர்த்தவாதமோ
वेदान्तपक्षः-வேதாந்தபக்ஷமாம் (63)

(அ) பரிணாமவாதம் பிறருடைய மதமாமென்று கூறினதற்குப் பயனைக் கூறுகின்றார். :—

विकारवादं कपिलादिपक्षमुपेत्यवादेन तु सूत्रकारः ।
श्रुतिश्च संजल्पति पूर्वभूमौ स्थित्वा विवर्तप्रतिपादनाय ॥ ६४ ॥

सूत्रकारः-வியாச பகவானும்
श्रुतिश्च-உபநிஷத்தும்
पूर्वभूमौ स्थित्वा-முதற் பூமியிலிருந்துகொண்டு
विवर्तप्रतिपादनाय- பிரபஞ்சத்திற்கு விவர்த்தத்தன்மையைப் பிரதிபாதிக்கும் பொருட்டு
कपिलादिपक्षं-சாங்கியாதி சாஸ்திரத்தின் சித்தாந்தமான

विकारवादम्-பரிணாமவாதத்தை
उपेत्यवादेन-பிரௌடிவாதத்தால்
संजल्पति-கூறுகின்றனர் (64)

(அ) அற்றேல் காரணத்திற்கு வேற்றுவடிவப்பிராப்தி பரிணாமமாம், மணணிற்கு கடாதிவடிவம் போன்று. அஃது விவர்த்தத்தின் கண்ணுமுளது இரச்சுவாதிக்கு சர்ப்பாதி வடிவம் காணப் படுதலின் ஆதலால் அவைகட்குப் பேதம் எப்படி என்று ஆசங்கிதது விவர்த்ததத்தினின்றும் விலக்ஷணமான பரிணாமத்தின் சொரூபத்தைக் கூறுகின்றார் :—

अभेदिनः सावयवस्य सत्यविचित्ररूपान्तरदर्शकत्वम् ।
वदन्ति धीराः परिणाममस्या वसुन्धराया इव सस्यसृष्टिम् ॥

अभेदिनः-ஒன்றாயும்
सावयवस्य-சாவயவமாயுமுளள வஸ்துவிற்கு
सत्यविचित्र-சத்தியமாயும் விசித்திரமாயுமுள்ள
रूपान्तर-வேற்று வடிவத்தை
दर्शकत्वम्-தோற்றுவித்தல்
परिणामम्-பரிணாமமெனை
धीराः-அறிஞர்கள்
वदन्ति-அறைகின்றனர்
அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்
अस्याः वसुन्धरायाः-இந்தப் பிருதிவியினின்றும்
सस्यसृष्टिं इव-பயிர்களினுற்பததியைப் போன்று

ஒன்றாயுமென்னும் விசேஷணம் ஆரம்ப வாதத்தை நீக்குதற் பொருட்டு கூறப்பட்டது ஒன்றற்கு ஆரம்பகத்தன்மையை யங்கீகரியாமையினாலும் ஆரப்பிய (ஆரம்பிக்கப்பட்ட வஸ்திர) ஆரம்பகங் (ஆரம்பிக்கின்ற நூல்) களுக்கும் பேத முண்மையானும். சாவயவமென்னும் விசேஷணம் பிரம்மத்தின் விவர்ததத்தன்மையினை நீக்கும்பொருட்டு கூறப்பட்டது. சத்துவாதி குணங்கள் பிரதானத்தின் அவயவங்களாய் பரஸ்பரம் சம்பந்தித்தனவாய் ஏகமாய் சத்தாயிருப்பது கொண்டு பிரதானமாம் ஆதலின் ஒன்றாயும் சாவயவமாயுமெனப்பட்டது

இவ்வாறு காரணமெப்படியோ அப்படியே மகத்தத்துவம் முதலிய பரிணாமியின் சொரூபமும் காணத்தக்கது. நிரவயவ வஸ்துவிற்கு பரிணாமம் சம்பவிக்கின்றதில்லை உலகின கண அவ்வாறு காணப் படுதலால். இது அசம்பவமுமன்று சத்திய மென்பது காரிய சொரூபத் தாலும் சத்தியமாம் இது களிஞ்சில் வெள்ளி முதலியவற்றை நிவர்த்திக்கும் பொருட்டு கூறப்பட்டது. விசித்திர மென்பது அதன் சொரூபத்தைச் சொல்லுதல். விவர்த்த பரிணாமங்களாகிய இரண்டு இடத்தும விசித்திரம் சமமாதலின, வேற்றுவடிவமென்பது சங்காதத்தை நீக்கும் பொருட்டாம் சங்காதத்திற்கு சங்காதத்தைச் செய்பவை களினின்றும வேற்றுவடிவமின்மையின, அல்லது ஒன்று என்பதனாலேயே சங்காதத்தின் வியாவிருத்தியுமாம் சங்காதத்தைச் செய்பவையநேகமாதலின், தோற்றுவித்தல என்பது அதன் கண் பிரமாணமுளதென்னுமபிப்பிராயமாம். காரணத்திற்கு தாத்விக (சத்திய) காரிய வடிவம் பரிணாமமாம் அல்லது சாவயவத்திற்கு காரிய வடிவம் பரிணாமமாம் என இலக்கணத்தை யறிக. அறிஞரென்பது விரோதமுடைய பதார்த்தங்கட்கு வாஸ்தவபேதாதியின் அசம்பவத்தை அகற்றுதலில் திருடத்தன்மையை சூசிப்பிக்கின்றது. (65)

(அ) விவர்த்தத்திற்கு பரிணாமத்தினும் மாறுன வடிவத்தைக் கூறுகின்றார். :—

**अभेदिनो निर्विकृतेरनेकमृषास्वरूपान्तरदर्शकत्वम् ।**
**विवर्तशब्दार्थ इह प्रसिद्धस्तरङ्गभेदादिव चन्द्रभेदः ॥ ६६ ॥**

**अभेदिनः**—ஒன்றாயும்
**निर्विकृतेः**—நிருவிகாரமாயுமுள்ள வஸ்துவிற்கு
**अनेकमृषा**—அநேகமாயும் பொய்யாயுமுள்ள
**स्वरूपान्तर**—வேற்று வடிவத்தை
**दर्शकत्वम्**—தோற்றுவித்தல்
**इह**—வேதாந்த சாஸ்திரத்தில்
**विवर्तशब्दार्थः**—விவர்த்த சத்தத்தின் பொருள்
**प्रसिद्धः**—பிரசித்தமாம்
திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

**सङ्गभेदात्**—அங்கங்களின் பேதத்தால்
**चन्द्रभेदः इव**—சந்திரன் நானாவாகத் தோற்றுதல் போன்று

நிருவிகாரமென்பதனால் பூருவரூபத்தின் பரித்தியாக வடிவ விகாரம் நிஷேதிக்கப்படுகின்றது அநேக மென்பது பிரம்மத்தின் விவர்த்தாபிப்பிராயமாம். வேறிடத்து அஃது நியமமின்மையின் காரணத்திற்கு பூருவரூபத்தின் தியாகமில்லாமலேயே அபின்னமான வேற்று வடிவம் விவர்த்தமாம் அல்லது கற்பித வேற்று வடிவம் விவர்த்தமாம் என விசேஷிக்கப்பட்டது. பரிணாமத்திலும் ஆரம்பத்திலும் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு பூருவரூபத்தை விடாமலெனப் பட்டது. **(66)**

## விவர்த்தவாதமே சாக்ஷாத்சுருதி சம்மதமாமெனல்

(அ) இவ்வாறு பிரசங்கத்தால் பிராப்தமான விசாரத்தை சமாப்தி செய்து 62-வது சுலோகத்தில் சுருதியும் முனீந்திரரும் விவர்த்த சித்தியின் பொருட்டு பரிணாமவாதத்தைக் கூறினர்களென்பதனால் யாதொரு சுருதி பரிணாமவாதத்தை யங்கீகரித்து கூறுகின்றதென்று சொல்லப்பட்டதோ அந்தச்சுருதி ஆண்டு ஆபாத (போலி) திருஷ்டியினால் சிருஷ்டி விஷயகமாமென்று கருதிக் கூறுகின்றார். :—

**अहं प्रजायेय बहु स्वयं स्यामित्यादिनादौ परिणाममुक्त्वा ।**
**विकारमिथ्यात्वमथ ब्रुवाणा विवर्तवादं श्रुतिराननाय ॥६७॥**

**अहं स्वयं**—நான் சுயமே (தானே)
**प्रजायेय**—பிரபஞ்ச வடிவத்தால் உற்பத்தியாவேனாக
**(अतः) बहु**—அதனால் அநேக வடிவமாக
**स्याम्**—இருப்பேனாக
**इत्यादिना**—என்பது முதலியவற்றால்
**आदौ**-முதலில்
**परिणाममुक्त्वा**—பரிணாமத்தைக் கூறி
**अथ**—பின்பு
**विकारमिथ्यात्वं**—காரியத்திற்கு மித்தியாத்தன்மையை
**ब्रुवाणा**·பிரதிபாதிக்கின்றதாய்

श्रुतिः-சுருதியானது
विवर्तवादं-விவர்த்த வாதத்தை
व्यनिनाय-அடைவித்தது

நான் என்பது சத்வடிவ மூலகாரணத்தின் வாசகமாம் காரியத்திற்கு மித்தியாத்தன்மையைப் பிரதிபாதிக்கின்ற சுருதி பின்பு "அக்கினியின் யாதொரு செந்நிறமுண்டோ அது தேஜஸின் வடிவமாம் யாதொரு வெண்ணிறமுண்டோ அது ஜலத்தின் வடிவமாம். யாதொரு கருநிற முண்டோ அது அன்னத்தின் (பிருதிவியின்) வடிவமாம். அக்கினியின் அக்கினித்தன்மை நீங்கிற்று. காரியம் நாமமாத்திரம் மூன்று வடிவமே சத்தியம்" என்பது முதலியவற்றால் மித்யாத் தன்மையைக் கூறுகின்ற சுருதி விவர்த்த வாதத்தை ஸ்தாபித்தது. ஈண்டு பரிணாமத்தின் தோற்றமின்மையால். இஃது பரிணாம சுருதி யென்பது வாதிக்கு பிராந்தியேயாம். சத்வடிவப் பிரம்மத்திற்கே ஈக்ஷண வாயிலாக காரிய வடிவத்தால் உற்பத்தி கேட்கப்படுதலால் இஃது பரிணாமமேயாம் என்று சொல்லற்க. விவர்த்த பக்ஷத்திலும் அஃது பொருந்துதலின். "சத்தியப்பிரம்மம் சத்தியமும் அநிருதமு மாயிற்று தேர்களையும் குதிரைகளையும் மார்க்கங்களையும் சிருஷ்டித்தார்" என விவர்த்த பக்ஷத்திலும் அஃது கேட்கப்படுதலால். அதினின்றும் உத்தரக்கிரந்தத்தில் காரியத்திற்கு மித்தியாத்தன்மையைப் பிரதிபாதித் தலால் சம்முக்தாகாரத்தால் (சாமான்யவடிவத்தால்) இந்த சிருஷ்டி சுருதி அதனதே (விவர்த்தத்தினதே) யாம். அப்படிக்கன்றேல் அதனோடு ஏகவாக்கியத்தன்மை பொருந்தாமற்போம். இவ்வாறு கிரந்தக்காரர் வாதிகளின் பிராந்தியினை யாசிரயித்து பரிணாமத்தைக்கூறி என்று சொன்னார் இதனாலேயே சித்தாந்தத்தை நிஷேதிக்கின்ற "ஏ பகவன் எவ்வாறு" என்பது முதலிய சுருதி பூருவபக்ஷத்தன்மையால் பரிணாம பரமாமெனக் கூறினோம் ஆதலால் அதுவே (விவர்த்தமே) ஈண்டு அறியத்தக்கது. (67)

(அ) இங்ஙனம் சாந்தோக்கியத்திலுள்ள சிருஷ்டி சுருதியை முன்பின் விசாரித்தலால் விவர்த்தவாதமே பிராமாணிகமாமென கூறப் பட்டது இப்போது இதன்பயன் இவ்வாறுகும்போது அதன் (விவர்த்தத்தின்) பரியாயமான மாயாமயத்தன்மையாதிலைய பிரபஞ்சத்

திற்குக்கூறுகின்ற சுருதியாதி வசனத்திற்கு பிராமாண்யம் பொருத்தமாகின்றதெனக்கூறுகின்றார். இதன் பயன் பிராமாண்யம் எனக் கூட்டுக:—

मायाश्रुतिस्मृतिवचः सकलं तथा च
वस्तुत्वमर्दनपरं घटते विवर्ते ।
सर्वस्य कारणविकारविभागभाजः
प्रागादृतस्य परमार्थतया प्रतीतेः ॥ ६८ ॥

**तथा च**–இவ்வாறு கூறிய வியவஸ்தையினுல்

**विवर्ते**–விவர்த்தவாதம் சித்தித்தபோது

**प्रतीतेः**–கடமிருக்கின்றது என்பதாதி பிரதீதியின் வலிமையினுல்

**प्राक्**–அவிசாரதசையில்

**परमार्थतया**–பரமார்த்த தன்மையால்

**आदृतस्य**–ஆதரிக்கப்பட்டதும்

**कारणविकार**–காரணகாரிய ரூபத்தால்

**विभागभाजः**–வேற்றுமையினை யடைந்துள்ளதுமான

**सर्वस्य**–சருவப்பிரபஞ்சத்திற்கும்

**वस्तुत्वमर्दनपरं**–வாஸ்தவதன்மையைக் கெடுப்பதில் தாற்பரிய முடையதாக

**मायाश्रुतिस्मृति वचः सकलं**–இந்திரன் மாயையினுல் என்பது முதலிய சுருதி ஸ்மிருதி வசனங்களனைத்தும்

**घटते**–பொருந்துகின்றது

"இந்திரன் மாயைகளால் அநேக வடிவமானுர் மாயையைப் பிரகிருதி என அறியவேண்டும் ஞானஸ்வரூபம் அத்யந்தம் நிர்மலம் பரமார்த்தம் அதுவே அர்த்த சொரூபத்தால் பிராந்தி தெரிசனத்தால் நிலைத்துள்ளது" என்பது முதலிய வசனமனைத்து மென்பது பொருள். இந்திரன்= பரமான்மா. (68)

## சங்காதவாத கண்டனம்

(அ) மேலும் சங்காத ஆரம்பவாதங்களிரண்டும் யுக்தியை சகிக்காமையினுல் சூத்திரக்காரரால் நிராகரிக்கப்பட்டமையாலும் பிரம்ம ஜிஞ்ஞாசுவினுல் அவை தூரமாகத்தள்ளத்தக்கனவா மென்று கருதி எல்லா சிஷ்ட புருஷர்களால் தள்ளப்பட்டமையின் சங்காதவாதத்தை முதலில் தூஷிக்கின்ருர்:—

संघातवादमुपगम्य तु तत्र पक्षे
संहन्त्रभाव इति सूत्रकृदाह दोषम् ।
स्थायी भदन्तसमये नहि कश्चिदत्र
संघातसंजननशक्तिसमन्वितोऽस्ति ॥ ६९ ॥

**संघातवादम्**-பரமாணுக்களின் கூட்டந்தான் காரிய மென்று சொல்லுகின்ற சங்காத வாதத்தை

**उपगम्य**-அநுவாதஞ் செய்து

**तत्र पक्षे**-அந்த பக்ஷத்தில்

**संहन्त्रभाव इति**-பரமாணுக்களின் கூட்டத்தைச் செய்கின்றவனிலேலை யென்று

**सूत्रकृत्**-வியாசபகவான்

**दोषमाह**-தோஷத்தைக் கூறினுர்

கூறிய தோஷத்தினையே வெளிப்படுத்துகின்ருர்

**अत्र**-ஈண்டு

**भदन्तसमये**-பௌத்த மதத்தின் கண்

**संघातसंजनन**-கூட்டத்தை யுண்டுபண்ணுவதில்

**शक्तिसमन्वितः**-ஆற்றலுடையவனுய்

**स्थायी**-நிலைப்புடையவனுய்

**नहि कश्चित् अस्ति**-ஒருவனுமின்ரும்

இது கூறப்பட்டதாகின்றது புத்தரின் சிஷ்யர்களான சௌத்திராந்திக வைபாஷிகர்களால் வெளியிலும் உள்ளிலும் பதார்த்தங்கள் க்ஷணிகங்களாக உள்ளன என்றங்கீகரிக்கப்பட்டுளது அவற்றுள் பிருதிவியாதி நான்கும் பூதமாம். உருவாதியும் நேத்திராதியும் பௌதிக

மாம். பூதமும் பௌதிகமும் கடின ஸ்நேஹ உஷ்ண சலன சுபாவ முள்ளனவும் உடனே காரியத்தையுண்டுபண்ணுந்தன்மையால் க்ஷணிகங் களுமான நான்குவித பரமாணுக்களின் சங்காத வடிவங்களாம். வைசேஷிகருக்குப் போன்று அவற்றினும் பின்னமாய் அவற்றால் ஆரம்பிக்கப்பட்டனவன்றாம். அவற்றுள் கடின சுபாவமுடையது பிருதிவி பரமாணு. ஸ்நேகமும உஷ்ணமும பிரசித்தமாம் சலன சுபாவமுடையது வாயு பரமாணு, அப்படியே உருவம் விஞ்ஞானம் வேதனை ஸம்ஞ்ஞை ஸம்ஸ்காரம் எனப்பெயரிய ஐந்து ஸ்கந்தங்களின் மற்றோர் சங்காதம் ஆத்யாத்மிகமெனப் பெயரியதாய் சகல உலக வியவகாரத்தையும் வகிப்பதாம். ரூபிக்கப்படுகின்றன இவைகளால், ரூபிக்கப்படுகின்றன என்னும் இரு வியுற்பத்திகளால் விஷய சகித இந்திரியங்கள் உருவ ஸ்கந்தமாம். நான் என்னும் வடிவினதாகிய ஞானம் அல்லது உருவாதி விஷயக ஞானம் விஞ்ஞான ஸகந்தமாம். சித்தத்திற்கு பிரியம் அப்பிரியமின்றிய விஷய வேதனத்தால் சுகதுக்கமின்றிய யாதொரு விசேஷாவஸ்தை யுண்டாகின்றதோ அது வேதனு ஸ்கந்தமாம். சவிகல்பக ஞானம் சம்ஞ்ஞா ஸ்கந்தமாம். கிலேசங்களான இராகாதி களும் உபக்கிலேசங்களான மதம் மானம் முதலானவைகளும தருமா தருமங்களும் ஸம்ஸ்கார ஸ்கந்தமாம். இந்த பௌத்தமதம் பொருந்த மற்றதாம்.

சமுதாயிகள் அசேதனமாதலால் தன்னால் சமுதாயம் பொருந்தா மையின். உலகின் கண் சேதன வியாபாரமின்றி அசேதனர்களிடத்தில் அது (கூடுதல்) காணப்படாமையின்

அற்றேல அவர்கள் மதத்திலும் சித்தம் சேதனமாக இருக்கின்றது அது அறிந்து கூட்டுவிக்கு மெனின் அற்றன்று சரீராதி சங்காதத்தின் உற்பத்திக்கு முன்பு அதற்கு ஞாதிருத்தன்மை பொருந்தாமையின் அற்றேல் ஆலய விஞ்ஞானம் அஹங்காரத்திற்காசிரயமாம் அதுவே சகல வியவகாரத்திலும் காரணமாம் எனின் அற்றன்று அதற்கும் விஷய விஞ்ஞானமின்றி அது (வியவகாரத்திற்குக் காரணமாதல்) பொருந்தா மையின. விஷய விஞ்ஞானமும் சங்காதமின்றி பொருந்தாதென்று கூறப்பட்டது.

மற்றும் ஆலய விஞ்ஞானம் ஸ்திரமுடையதெனின் அப்போது வேறு நாமத்தால் எங்களுடைய ஆன்மாவேயாகும். க்ஷணிகமெனின்

அதனாலும் சங்காதம் எப்படி உற்பத்தியாகும். ஞான பூர்வக இச்சையின் அதீனமான பிரயத்தின முடைய சேதனனால ஆசிரயிக்கப் பட்ட தேக வியாபாரத்தினாலல்லவா குயவன் முதலியோர் ஒன்றோடு மற்றொன்றை சேர்க்கிறார்கள பிரிக்கிறார்கள் ஓதிகரணத்தை யாசிரயித் துள்ள ஞானாதிகட்கே காரிய காரண பாவம் உலகில் பிரசித்தம் ஆதலின் க்ஷணிக ஆன்மாவின கண் அவற்றின் (ஞானாதிகளின்) உற்பத்தி எப்படிக்கூடும்?

இவ்வாறு கிரியை விபாகம் முதலியவற்றிற்காசிரயமான அநேக க்ஷணத்திலிருக்கின்ற வஸ்துவிற்கே ஒன்றோடு மற்றொன்றன் சம்யோகம் சம்பவிக்கின்றது ஆதலின் க்ஷணிகங்களான அணுக்களுக்கு பரஸ்பரம் சம்பந்தமும் சித்திக்காது.

ஒரே தடவை காரியங்களை யுண்டுபண்ணுந்தன்மையால் அணுக்கள் க்ஷணிகங்களாமென யாதொன்று கூறப்பட்டதோ அது சரி யன்று. அசித்தியாதலின். ஒன்றற்கும் கூட அநேக சஹகாரிகளின் சேர்க்கைக் கிரமத்தால் அநேக காரியங்களை யுண்டுபண்ணுந்தன்மை உலகில் அநுபவிக்கப்படுதலால் ஆதலின் இந்தப்பக்ஷம் அத்திபந்தம் பொருத்தமற்றதேயாம் என "சமுதாய" என்னுஞ் சூத்திரத்தால் வியாசர் அதன்கண் தோஷத்தைக் கூறியுள்ளார் என கூட்டுவிப்பவன பாவத்தையே கூறுகின்றார் நிலையுடையவனென. கூறிய ரீதியினால் ஞானதி அநேக க்ஷணங்களோடு கூடியிருப்பவன் சங்காதத்தையுண்டு பண்ணும் சாமர்த்தியமுடையவன் ஆவன் ஆதலின் பௌத்தமதத்தில் அவன் சித்திக்கின்றதிலலை யென்பதுபொருள் (69)

## வைசேஷிகமத கண்டனம்

(அ) வைசேஷிகர்கள் தனது மனீஷை (இச்சை) யினால் விலளித (சலன முற்ற) அணுக்களை சகத்திற்குக் காரணமாகக் கூறுகின்றனர். அநேகங்கள தந்துக்களோ படத்தின் சமான சுபாவமுடையனவாய் ஒன்று சேர்ந்தே படத்தை ஆரம்பிக்கின்றன. இப்படிப்பட்டவைகளி னின்றே யாண்டும் காரியத்திரவியம் காணப்படுதலின், காரணத்திலுள்ள குணங்கள் சஜாதீயமான குணங்களை காரியத்தில் ஆரம்பிக்கின்றன. தந்து உருவாதியின்கண் அவ்வாறு காணப்படுதலின், காரியத்தின் கண்ணுள்ள மகத்துவமும் காரணத்தின் கண்ணுள்ள பன்மை

மகத்துவ பரிமாண அதிருட சம்யோகம் இவைகளால் ஆரம்பிக்கப் பட்டதாம். * குறைந்ததும் மிகுந்ததுமான எண்ணிக்கையினை யுடைய தந்துக்களால் ஆரம்பிக்கப்பட்ட படங்களிலும் சமான எண்ணிக்கையினையுடைய தூலமும் சூக்ஷ்மமுமான தந்துக் களால் ஆரம்பிக்கப்பட்ட படங்களிலும் சிதிலமும் (தளர்ச்சியும்) அசிதிலமுமான சம்யோகமுடைய தூல (பஞ்சு) பிண்டத்தால் ஆரம்பிக்கப்பட்ட படங்களிலும் உள்ள மகத்துவ விசேஷம் கூறிய ஏதுவினை யுடைமையின், இவ்வாறு காரிய பரிமாணத்தின் அபகர்ஷ (குறைந்த)ததின் முடிவான இடங்கள் பரமாணுக்கள் துவியணுகத்தின் காரணங்களாக சித்திக்கின்றன. துவியணுகத்தின் பரிமாணத்தில் பரமாணுவின் துவித்துவம் அசமவாயிகாரணம் திரியணுகத்தின் பரிமாணத்திலோ துவியணுகத்தின் பன்மை அசமவாயிகாரணம் இவ்வாறு அவாது பிரக்கிரியையாம். இவ்வாருகும் போது அத்துவிதீயமும் பரம மஹத்தும் சேதனமுமான பிரமமத்தினின்றும் பரிச்சின்னமும் சடமுமான ஆகாசாதி காரியத் திரவியத்தினுற்பத்தி எவ்வாறு கூடும் என்னுமிந்தாக்ஷேபத்தினை சூத்திரத்தால் சூசிப்பிக்கப்பட்ட யுத்தியினுல் தூஷிக்கின்ருர் :—

* நூறு நூல்களால் ஆரம்பிக்கப்பட்ட வஸ்திரத்திலுள்ள மகத்துவ விசேஷமும் இருநூறு நூல்களால் ஆரம்பிக்கப்பட்ட வஸ்திரத்திலுள்ள மகத்வ விசேஷமும் நூல்களிலுள்ள பன்மை விசேஷத்தால் ஆரம்பிக்கப்பட்டது.

சமான (100) எண்ணிச்கையுடைய தூலமான தந்துக்களால் ஆரம்பிக்கப்பட்ட வஸ்திரத்திலுள்ள மகத்துவ விசேஷமும் சமான (100) எண்ணிக்கையினையுடைய சூக்ஷ்மமான தந்துக்களால் ஆரம்பிக்கப்பட்ட வஸ்திரத்திலுள்ள மகத்துவ விசேஷமும் தந்துக்களிலுள்ள மகத்வ பரிமாணத்தால் ஆரம்பிக்கப்பட்டது.

சிதில (தளர்ந்த) சம்யோகமுடைய தூல (பஞ்சு) பிண்டத்தால் ஆரம்பிக்கப்பட்ட வஸ்திரத்திலுள்ள மகத்துவ விசேஷமும் அசிதில (நெருக்கமான சம்யோகமுடைய தூல பிண்டத்தால் ஆரம்பிக்கப் பட்ட வஸ்திரத்திலுள்ள மகத்வ விசேஷமும் தூல பிண்டத்திலுள்ள சிதில அசிதில சம்யோக விசேஷத்தால் ஆரம்பிக்கப்பட்டது. இவ்வாருகவே காரியத்திலுள்ள குணம் காரணத்திலுள்ள சஜாதீயமான குணத்தால் ஆரம்பிக்கப்பட்டது என்னும் நியமத்திற்கு பங்கமாம், பங்கம் = நாசம்.

आरम्भवादमुपगम्य तदीययुक्तेस्तत्प्रक्रियामनुसरन् व्यभिचारमाह ।
वैशेषिकं प्रति महद्वदिदं हि योज्यं यद्वाऽपि दीर्घवदिद जडमित्यनेन ॥

आरम्भवादम्–ஆரம்பவாதத்தினை

उपगम्य–அங்கீகரித்து

तदीययुक्तेः–அவரது காரண குணாரம்பத்துவ யுக்தியினாலேயே

तत्प्रक्रियाम्–அவரது பிரக்கிரியையை

अनुसरन्–அநுசரிக்கின்றவராகி வியாசர்

वैशेषिकं प्रति–வைசேஷிகனைக் குறித்து

व्यभिचारमाह–வியபிசாரத்தைக் கூறினர்

அவரது பிரக்கிரியையின் கண் வியபிசாரத்தைத் தெரிசிப்பிக்கின்றவராகிய தனது மதத்தின் கண் அவிரோதபரமான சூத்திரத்தை பொருளால் படிக்கின்றார்.

महद्वदिदं हि–இது மகத்துவம் போலவும்

यद्वाऽपि–அல்லது

दीर्घवदिदं–இது தீர்க்கம் போலவும்

जडम्–பிரமமத்தினின்றும் சடப்பிரபஞ்சம் உண்டாயிற்று

इत्यनेन–என்னும் சூத்திரத்தால்

योज्यम्–பொருத்தத்தக்கது (கூறினரென்பது பொருள்)

காரண குணங்கள் விசேஷமில்லாமலே காரியத்தின் கண் சமான ஜாதியினை யுடைய குணங்களை ஆரம்பிக்கின்றனவா அல்லது அதன் விசேஷ குணங்களை ஆரம்பிக்கின்றனவா? அந்திம பக்ஷம் சரியன்று சித்திர உருவாதியினையுடைய அவயவியை ஆரம்பிக்கின்ற அவயவ உருவாதியின் கண் அஃது (சித்திரவுருவம்) இன்மையினாலும் விசேஷ குணத்தின் அநிரூபணத்தை விருத்தர்களால் தெரிசிப்பித்தமையானும்.

முதற்பக்ஷமும் சரியன்று துவியணுகங்களால் திரியணுகத்தின் மகத்துவம் ஆரம்பிக்கப்படுகின்றதென வைசேஷிகர் அங்கீகரித்தலின். ஆண்டு சமவாயி காரணத்திலுள்ள பரிமாணம் சஜாதீயமான பரிமாணத்தை ஆரம்பிக்கின்றதில்லை. அது போன்று இந்தச்சேதனப்

பிரம்மமும் சடமாகிய சகத்தையுண்டு பண்ணட்டுமே வேறு சைதன்யத்தை யுண்டுபண்ணுவதின்ரும் எனப் பிரதிபாதிக்கத்தக்கது.

மற்றும் அந்தத் துவியணுகங்கள் குறிலாளவென்பது வைசேஷிகரது மதம் திரியணுகம் நெடிலாம். இவ்வாறுகும் போது எப்படிக்காரணத்தின் கணுணுள்ள ஹ்ரஸ்வ (குறில்) பரிமாணம் திரியணுகத்தில் தனது சமான பரிமாணத்தையுண்டுபண்ணுகிற தில்லையோ அப்படி இந்தப் பிரம்மமும் சடமாகிய சகத்தையுண்டு பண்ணும் எனப் பொருத்தத்தக்கது இத்தகைய பொருளையுடைத்தான "மஹத்தீர்க்கவத்வா ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம்" என்னும் சூத்திரத்தினால் வியபிசாரத்தைக் கூறினர். பரமாணுவின் பாரிமாண்டல்யம் (அணுவினும் சூக்ஷ்மம்) துவியணுகத்தில் சஜாதீயத்தை யாரம்பிக்காமை போன்று என்பதற்கும் உபலக்ஷணமாக அறிக.(70)

(அ) மகத்துவம் போன்று என்பதாதியை விஸ்தரிக்கின்றார். :—

ह्रस्वारब्धं त्र्यणुकमणुभिस्तद्वदारब्धमेतत्
ह्रस्वं नो तच्च तदणुत्वसंमतं तद्वदेतत् ।
सर्वं कार्यं गगनधरणीमध्यगं चेतनोत्थं
निश्चित्कं नो जडिमघटितं युक्तमित्याचचक्षे ॥ ७१ ॥

त्र्यणुकम्—நெடிலினையுடைய திரியணுகமானது

ह्रस्वारब्धम्—குறிலினையுடைய துவியணுகங்களால் ஆரம்பிக்கப்பட்டது.

तद्वदेतद्—அப்படியே இந்தத்திரியணுகம்

अणुभिः—அணுபரிமாணமுள்ள துவியணுகங்களால்

आरब्धम्—ஆரம்பிக்கப்பட்டது அங்ஙனமாயினும்

तत्—அந்தத் திரியணுகமானது

न ह्रस्वं—குறிலன்று

नच अणुत्वत्—அணுபரிமாணமுள்ளது மன்று என

एतद् संमतम्—இங்ஙனம் அங்கீகரிக்கப்பட்டுளது

பரமாணு துவியணுகங்களின் பரிமாணம் துவியணுக திரியணுகங்களின் பரிமாணத்தை யாரம்பிக்கின்ற சாமக்கிரியின் கண் சம்மத

மின்றும் அதுபோன்று எங்கள் பக்ஷத்திலும் இதனையே விஸ்தரிக்கின்றார்.

**गगनधरणीमध्यगम्**–ஆகாசம் முதல் பிருத்வீ பரியந்தமான

**सर्वं कार्यम्**–காரியமனைத்தும்

**चेतनोत्थं**-பிரம்மத்தினின்று முண்டானதாயினும்

**नः**-எங்கள் மதத்தில்

**निश्चित्कम्**–சேதனத்தன்மையின்றியதாம்

**जडिमघटितं**–சடத்தன்மையோடு கூடியதாம்

**युक्तमिति**–இது பொருத்தமாமென

**व्याचचक्षे**–வியாசர் கூறினர்

அற்றேல் துவியணுகத் திரியணுகங்களிலுள்ள பரிமாணத்தை ஆரம்பிப்பதாக வேறு சாமக்கிரியிருத்தலால் அதற்கு வலிமையிருத்தலால் பரமாணு துவியணுகங்களின் பாரிமாண்டல்யாதி துவியணுகாதியின் கண் சஜாதீயமான பரிமாணத்தை யாரம்பிக்கின்றதில்லையெனின் அற்றன்று.

மாறுபாடாகவும் சம்பவித்தலால். அணுத்துவாதி சாமக்கிரிக்கு பிரபவத்தன்மையைக் கூறுதலோ அவ்வாறுதலின் அப்யுபகம (மனதின்) அதீனம் என்பது கருத்து. (71)

(அ) சூத்திரத்திலுள்ள (வா) அல்லது என்னும் சத்தத்தால் சூசிப்பிக்கப்பெற்ற வியபிசாரத்தைத் தெரிசிப்பிக்கின்றவராய் துவியணுக திரியணுகங்களின் பரிமாணங்கட்கு அவரது சம்மதமான காரணத்தைக் கூறுகின்றார்:—

**ह्रस्वाणुत्वे कारणद्वित्वहेतोर्जाते नैते पारिमाण्डल्यहेतोः ।**
**दीर्घत्वं यद्यच्च दीर्घे महत्त्वं द्रव्ये ते द्वे कारणत्रित्वहेतोः ॥ ७२ ॥**

**ह्रस्वाणुत्वे**–துவியணுகத்திலுள்ள குறிலும் அணுத்துவமும்

**कारणद्वित्वहेतोः**–காரணமான பரமாணுவிலுள்ள இருமையைக் காரணமாகக்கொண்டு

**जाते**–உண்டாகின்றன

**एते**–இந்த குறிலும் அணுத்துவமும்

**पारिमाण्डल्यहेतोः** – பரமாணுவிலுள்ள பாரிமாண்டல்யத்தைக் காரணமாகக்கொண்டு

**न**–உண்டாகின்றதில்லை

பரமாணுவின பரிமாணமாகிய பாரிமாண்டல்யம் துவியணுகத்தின் பரிமாணததை ஆரம்பிக்கின்றதில்லை என அங்கீகரித்திருத்தலின். ஆரம்பிக்குமாயின் துவியணுகத்திற்கும் பாரிமாண்டல்யத்தின் ஆபத்தியாம் ஆதலின். இவ்வாறு

**दीर्घे द्रव्ये**-நெடிலினையுடைய திரியணுகத்தின் கண்

**यद्दीर्घत्वम्**-யாதொரு நீட்சியுண்டோ

**यच्च महत्त्वम्**–யாதொரு மகத்துவமுண்டோ

**ते द्वे**–அவ்விரண்டும்

**कारणत्रित्वहेतोः** – காரணமாயுள்ள துவியணுகத்திலுள்ள பன்மையினாலேயே

உண்டாகின்றன என்பது அவர்களது மதமாம். இவ்வாறுகும் போது அவர்கள் கூறிய நியமம் எப்படி சித்திக்கும் என்பது கருத்து. **(72)**

(அ) மற்றும் ஓரிடத்தில் அங்கீகரிக்கப்பட்டது வேறிடத்தும் அங்கீகரிக்கத்தக்கதாமென அவர்களுக்கு நியமமின்றும் அவ்வாறுகும் போது இரண்டு பரமாணுவினின்றும் துவியணுகம் உண்டாவதுபோன்று இரண்டு துவியணுகத்தினின்றும் ஓர் காரியம் உண்டாகலாம். அதுவும் அணுவேயாகுமென்பதின்றும். துவியணுகம் காரியத்தை யாரம்பிக்கினும் பொருளால் பரிமாணத்தினாரம்பகமன்று மெனக்கூற வேண்டும். பரமாணுவிலுள்ள துவித்துவ (இருமை) சங்கியை (எண்ணிக்கை) தனது ஆசிரய பரிமாணத்தினும் அதிக பரிமாணத்தை ஆரம்பிக்கின்றதென்பது நிச்சயிக்கப்பட்டுளது. இவ்வாறுகவே துவியணுகத்திலுள்ள துவித்துவமும் அப்படிப்பட்ட (தனதாசிரய பரிமாணததினும் அதிக) பரிமாணத்தையே ஆரம்பிக்கும் அதுவும் மகத்துவமேயாகும். துவியணுக பரிமாணததினும் அதிக பரிமாணம் மகத்துவத்தைப் பார்க்கிலும் வேறு சம்பவிக்கின்றதில்லை, இவ்வாறு யினும் காரணத்திலுள்ள பன்மையே காரியத்தில் மகத்துவத்தை

யாரம்பிக்கின்றதென அவரது நியமமிருக்குமாயின் அப்போது இது (மேற்கூறிய ஆபத்தி) வரமாட்டாது. ஆனல் அந்த நியமமோ இன்றும். துவியணுக திரியணுக பரிமாணத்தினும் வேறான காரிய பரிமாணத்தின் கண் அவர்களாலும் காரணத்திலுள்ள சங்கியா விசேஷ நியமத்தை யங்கீகரியாமையின். இவ்வாருகவே அதுபோன்று இதுவும் (பிரம்மத்தினின்றும் சடசகத்தும்) ஏனுகாதென்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்.:—

**द्व्यणुकस्य जन्म परमाणुयुगात् परिमण्डलादिति कणादमतम् ।**
**द्व्यणुकत्रयात् त्र्यणुकजन्म पुनर्नियमं न कश्यपसुतो वदति ॥**

**परिमण्डलात्**–அணுவினும் சூக்ஷ்மமான

**परमाणुयुगात्**–இரண்டு பரமாணுவினின்றும்

**द्व्यणुकस्य जन्म इति**–துவியணுகத்தினுற்பத்தி யாமென்பது

**कणादमतम्**–கணுதருடைய மதமாம்

**द्व्यणुकत्रयात्**–மூன்று துவியணுகத்தினின்றும்

**त्र्यणुकजन्म** – திரியணுகத்தினுற்பத்தியா மென்பதும் அவரது மதமாம

**पुनः**–பின்பு

**कश्यपसुतः**–கணுதர்

**नियमं**–நியமத்தை

**न वदति**–கூறுகின்றதில்லை

இருமையால் ஆரம்பிக்கப்பட்டது அதனினும் அதிக பரிமாணமாம் இவ்வாறு மும்மையால் ஆரம்பிக்கப்பட்டது அதனினும் அதிக பரிமாணமா மென்பது பிரசித்தமாம். பின்பு இந்த நியமமின்ரும். அதாவது சதுரணுகத்தின் பரிமாணத்திற்கு திரியணுகத்தின் சங்கியை காரணமன்ரும். இவ்வாருகும்போது தந்து உருவத்தின் சமத்தன்மையால் பிரம்ம சைதன்னியத்திற்கு அதன் சஜாதீய காரியாரம்பகத்துவ ஆபத்தியைச் செய்தற்கு கணுதர் எப்படி சமர்த்தராவர் மற்றேருே சமர்த்தராகார். என்பது கருத்து. (73)

(அ) ஆதலால் வைசேஷிகரால் காரண குண ஆரம்பகத்துவ விஷயக நியமத்தால் பிரம்மகாரண வாதத்தை ஆக்ஷேபித்தற்கு முடியாதென்னுங் கருத்தால் கூறுகின்றார்:—

**द्व्यणुकत्र्यणुकव्यपाश्रयं परिमाणं प्रति कारणाश्रयः ।**
**न तु कारणमिष्यते गुणस्तदवष्टभ्य वयं जिगीषवः ॥ ७४ ॥**

**द्व्यणुकत्र्यणुक**-துவியணுக திரியணுகங்களில

**व्यपाश्रयं**-ஆசிரயித்துள்ள

**परिमाणं प्रति**-பரிமாணத்தைக்குறித்து

**कारणाश्रयः**-காரணத்தை யாசிரயித்துள்ள

**गुणः**-பரிமாணம்

**कारणम्**-காரணமாக

**न तु इष्यते**-அங்கீகரிக்கப்படுகின்றதில்லை

(அதனால உனக்கு என்னை யெனின் அதற்குக்கூறுகின்றார்.)

**तदवष्टभ्य**-அதனையாசிரயித்து

**वयं**-நாங்கள்

**जिगीषवः**-ஜெயித்தற்கு இச்சை யுடையவராகின்றோம்

அதுபோன்று அவரது ஆக்ஷேபத்தை நிராகரித்து சேதன காரணத்துவத்தை சமர்த்தனஞ் செய்தற்கு யாங்கள் சமர்த்தராகின்றோம் என்பது பொருள்.

(14)

(அ) வைசேஷிகன் பிரம்ம காரணத்துவ துவேஷத்தால் கூறப் பெற்ற தோஷத்தை நீக்கும் பொருட்டு ஆண்டும் (துவியணுக திரியணுகங்களிலும்) காரண பரிமாணத்தாலேயே காரியத்தின்கண் பரிமாணத்தின் ஆரம்பமாமெனக் கூறுவானாயின் அதற்குக் கூறுகின்றார்:—

**यदि कारणसंश्रयाद्गुणाद्द्व्यणुकादेः परिमाणमिच्छति ।**
**द्व्यणुकादिसमाश्रये तदा परिमाणेऽतिशयो विरुध्यते ॥ ७५ ॥**

**कारणसंश्रयाद्**-பரமாணுவாகிய காரணத்தையாசிரயித்துள்ள

**गुणाद्**-பரிமாணமாகிய குணத்தால்

**द्व्यणुकादेः**–துவியணுகம் முதலியவற்றின்

**परिमाणम्**–பரிமாணத்தினுற்பத்தியை

**यदि इच्छति**–இச்சிப்பானாயின்

**तदा**–அப்போது

**द्व्यणुकादिसमाश्रये**–துவியணுகாதியின் கண்ணுள்ள

**परिमाणे**–பரிமாணத்தில்

**अतिशयः**–அதிகத்தன்மை

**विरुध्यते**–விரோதமாகும்

பரிமாணத்திற்கு சஜாதீய பரிமாணத்தை யாரம்பிக்குந்தன்மை நியமமாதலால் துவியணுகதிரியணுகங்களிலும் பாரிமாண்டல்யமேயாகும் அவற்றின் பரிமாணத்தின்கண் அதனினும் (பரமாணு பரிமாணத்தினும்) அதிகம் உண்டாகாது அதனும் திரியணுகாதிகட்கும அதீகதிரியத் தன்மையினுபத்தியாம். நித்திய பரிமாணத்திறகு அநாரம்பகத் தன்மையாமென்னும் அவரது நியமமும் விரோதமாகும். (75)

## பரிணாமவாத கண்டனம்

(அ) ஆரம்பகவாதம் பொருத்தமில்லையாயின் பரிணாமவாத மிருக்கட்டுமே. அதன் கண் மணகுடம் என்னும் பிரத்தியக்ஷம் பிரமாணமாம். மண்ணிற்கும் குடத்திற்கும் அத்தியந்தம் பேதமாயின் பசு, குதிரைகட்குப் போன்று சாமாநாதிகரணயப்பிரதீதி பொருந்தாமற் போமாதலின். அத்தியந்தம் அபேதமாயினும் குடம் குடம் என ஞானமுண்டாகின்றதில்லை. ஆதலால் காரியகாரணங்கட்கு பேதா பேதம் வாஸ்தவமாம் ஆதலின் பரிணாமவாதம் பிராமாணிகமாமென்னு மிடத்துக் கூறுகின்றார்.:—

**परिणामवादमुपगम्य तथा रचनाद्यसंभवमुवाच मुनिः ।**
**परमेश्वरं नहि विना घटते जडरूपवस्तुपरिणाम इति ॥ ७६ ॥**

**तथा**–அப்படியே சங்காத வாதமும் ஆரம்பவாதமும் போன்று

**परिणामवादम्**–பரிணாமவாதத்தை

**उपगम्य**–அங்கீகரித்து

**परमेश्वरं विना**–பரமேஸ்வரனில்லாமல்

**जडरूपवस्तु परिणामः**–சடப் பிரகிருதியின் பரிணாமம்

**नहि घटते इति**–பொருந்ாதென

**मुनिः**–வியாச பகவான்

**रचनाद्यसंभवं**–ரசனை முதலியவற்றின் அசம்பவத்தை

**उवाच - रचनानुपपत्तेश्चनानुमानम्**–என்பது முதலிய சூத்திரங்களால் கூறினர்,

ரசனை= காரியத்திலுள்ள அவயவவின்யாசம். முதலில் என்னும் பதத்தால் காரியத்தையுண்டாக்குவதில பிரவிருத்தியாதியைக் கவருக.

சாங்கியமதத்தில் ரசனையாதியின் அசம்பவமெதனுலென்னுமிடத்து கூறுகின்ருர் பரமேஸ்வரனின்றி என.

உலகின்கண் சேதனர்களான குயவன் முதலியோர் அசேதனமான மண் முதலியவற்றைப் பரிணமமாக்குகின்றனர். சாங்கிய மதத்தின் கண்ணே சகத்தின் பரிணாம கருத்தாவாக பரமேஸ்வரனின்ரும் ஆதலின் இலௌகிக நியாயத்தாற் சித்தித்த பரமேஸ்வரன் இல்லாமல் சடமாகிய பிரதானத்திற்கு சகத் வடிவ பரிணாமம் எங்ஙனம் கூடும் ?

சீவர்களும அவர் மதத்தில் உதாசீன (நிருவிகார) ராகலின பரிணம கருததாவாக ஆகார். யாதொரு வஸ்துவும் தானே பரிணமிக்கின்றதாய் உபயவாதி சம்மதமாக இல்ரும். ஆதலால் அந்த வாதம் பொருத்தமற்றதேயாம். கடம் முதலிய காரியம் வாஸ்தவமாக மண் முதலிய காரணத்தோடு அபேதமாயின் மண் முதலியவை போன்று குயவன் முதலியோர் வியாபாரத்திற்கு முன்பு அதுவும் (கடாதியும்) ஏன் தோற்றுகின்றதில்லை. குலாலாதியின் வியாபாரந்தானெற்றிற்கு ?

அற்றேல் மண் முதலியவற்றிலுள்ள பிண்டம் முதலிய அவஸ்தையால் மறைவுபட்டிருத்தலின் அப்போது இருப்பதாயினும் கடாதிகள் அநுபவிக்கப்படுகின்றதில்லை. ஆவரண நாசத்தின் பொருட்டு குலாலாதியின் வியாபாரமாமெனின் அற்றன்று. அதன் காரியமனைத்தும் எப்போதும் அக்காரணவடிவத்தாலிருத்தலால் எல்லாமும் எல்லாவற்றிற்கும் மறைப்பைச் செய்வதாகும், ஆதலால் அப்போது

யாதொன்று மனுபவிக்கப்படலாகாது. அல்லது கடாதிகளின் ஸ்திதி யவஸ்தையைப் பார்க்கிலும் முன்னவஸ்தையின்கண விசேஷம் சொல்லவேண்டும். பிண்டம் முதலிய ஆரைமை நாசமாயினும் முன்பிருந்தே உண்டாகின்ற நாசவிசா குலலாதியின வியாபாரம் வீணே யாம். அசத்தெனின் அசத்தற்கு உற்பத்தியை அங்கீகரிக்கின், கடாதியும் அவ்வாறே (அசத்து) ஆதற்கு யோக்கிய மாதலின் முன்பு சத்வ சற்பனையினுல் யாது பயன்.

மட்குடமென்னும் பிரதீதியினல் மண்ணிற்கும் குடத்திற்கும் பேதா பேதமாமென்று யாதொன்று கூறப்பட்டதோ அதுவும் சரியன்று. பரஸ்பரம் அபாவரூபமான அவைகட்கு (பேதாபேதங்கட்கு) ஒரே காலத்தில் ஓரிடத்தில் இருப்பு சம்பவியாமையின் தோற்றுகின்ற அபேதத்தின் அபாவத்தை ஒருவனும் அநுபவிக்கின்றதுமில்லை. அற்றேல் பேதம் அபாவ வடிவமன்றும். மற்றோ வியாவிருத்த கடாதி யின் சொருபமேயாம். அபேதமோ கடபடாதியின் கண் யாண்டும் அநுகதமான பிருதிவியின் வடிவமா மாதலின் பிருதிவி வடிவத்தால் கடபடாதியின் அபின்னமாம். கடாதிவடிவத்தால் பின்னமாம், ஆதலின் பேதாபேத வியவகாரமாம் எனின் இங்ஙனமாகுக. யாண்டும் பிருதிவி ஒன்றே. கடாதிக்கும் பிருதிவிக்கும் பேதமே யாமெனின் பேதவாதியின் மதமே சமர்த்தனஞ்செய்யப்பட்டதாகும். இவ்வாறுகவே உற்பத்திக்கு முன்பு கடாதிக்கு சத்வாசத்வாதிகளை ஆசரியித்த தோஷம் அவ்வாறேயாம். (முன்போலவேயாம்) கடாதிகட்கு பிருதிவியோடு அபேதமேயாமெனின் உற்பத்திக்கு முன்பும் தோற்றவேண்டுமென்பது முதலிய தோஷம் நிவர்த்தியாகாது. எல்லாவற்றிற்கும் பிருதிவி வடிவத்தால் அபேதமிருப்பது போன்று கடாதி வடிவத்தாலும் அபேத முண்டாகும். படாதியின் அபின்ன பிருதிவியின் அபின்னமாதலால். கடாதிகட்கும் அவைகளுக்கும் (பிருதிவி படங்கட்கும்) பேதாபேதமா மெனின் அதுவே இதுவரையில் நிரூபிக்க முடியாமையின் ஆதலால் பின்னபின்ன வஸ்து இன்றேயாம். இவ்வாறுகவே காரணத்தோடு அபின்னமான காரியத்திற்கு காரணத்தினும் வேறாக சத்தையின் சூன்யத்தன்மையே காரணத்தோடு தாதாத்மியமாம். அதுவே மண்குட மென்பதாதி சாமானாதிகரண்ய பிரதீதிக்கு விஷயமாம். ஆதலின்

விவர்த்தவாதமே பிரமாணத்தால் சித்தித்தது. வேறுவாத மன்று மென்பது கருத்து. (76)

(அ) அற்றேல்: ஆரம்பம் முதலிய மூன்று பக்ஷங்களை நிராகரணஞ் செய்கின்ற சூத்திரக்காரருக்கு யாண்டும் சமானமாகவே அபிப்பிராயமா அல்லது ஓரிடத்து விசேஷமுளதா என ஜிஞ்ஞாசை யுண்டாகக்கூறுகின்றார்:—

**क्वचिदभ्युपेत्य कथनं कुरुते परपक्षदूषणकथावसरे ।**
**निजपक्षदोषपरिहारपरः क्वचिदभ्युपेत्य वदतीह मुनिः ॥ ७७ ॥**

**परपक्षदूषणकथावसरे**-வைசேஷிக பக்ஷதூஷணத்தை பிரதான மாகவுள்ள தர்க்கபாதத்தில்

**क्वचित्**-வைசேஷிக அதிகரணத்தில்

**अभ्युपेत्य**-அவரால் கூறப்பட்ட அணுகாரண பிரக்கிரியையை அங்கீகரித்து. அந்த நியாயத்தினலேயே

**निजपक्षदोष**-சேதன பிரஹ்மத்தின் காரியம்

**परिहारपरः**-ஜெகத்து என்னும் தனது பக்ஷத்தில் வைசேஷிக னல் கூறப்பட்ட காரண குணரம்ப தோஷத்தை பரிகரிக்கின்றவராய்

**कथनम् कुरुते**-மஹத்து தீர்க்கம் போலும் என்பதாதியால் கூறுகின்றார்

**क्वचित्**-ரசனை அனுபபத்தி அதிகரணத்தில்

**अभ्युपेत्य**-அவர் மதத்தினை மாத்திரம் கூறி

**इह**-ஈண்டு வேதாந்த சாஸ்திரத்தின் கண்

**मुनिः**-வியாஸ மஹரிஷி

**वदति**-தூஷணமாத்திரத்தை கூறுகின்றார் என்பது விசேஷம்.

காரண குணம் காரியத்தின் குணத்தை ஆரம்பிக்கின்றது என வைசேஷிகரால் கூறப்பட்ட தோஷத்தை அவரது நியாயத்தினலேயே வியபிசாரத்தால் பரிகரித்தற்கு முதலிலேயே அதிகரணத்தைச் செய்து "உபயதாபி நகர்ம அத: ததபாவ:" என்னும் வேறு அதிகரணத்தால்

அரைது மதத்தை தூஷித்தார் அவ்வாறு பிறாதத்தை தூஷித்திலர், கேவலம் அந்த மதத்தின் தூஷணத்தையே ஆணடு செய்தமையின் என்பது கருத்து. (77)

(அ) கூறியதையே பிரித்துக் கூறுகின்றார்.

**परपक्षनिषेधमाचरन्क्वचिदङ्गीकरणं करोति सः ।**
**परदर्शितदोषनुत्तये क्वचिदित्येष विशेष ईरितः ॥ ७८ ॥**

**क्वचिद्**-ஓரிடத்து
**परपक्षनिषेधमाचरन्**-பரிணாமாதி பக்ஷத்தின் நிஷேதத்தை ஆசிரயிக்கின்றவராய் (நிஷேதத்தின் பொருட்டு)
**सः**-வியாசமுனி
**अङ्गीकरणं**-அநுவாதத்தை
**करोति**-செய்கின்றார்
**क्वचित्**-ஓரிடத்து (வைசேஷிகாதிகரணத்தில்)
**परदर्शित**-வாதியினுல் காண்பிக்கப்பட்ட
**दोषनुत्तये**-தோஷத்தை நீக்கும் பொருட்டு (அநுவாதஞ்செய்தனர்)
**इत्येषविशेषः**-இந்த விசேஷந்தான்
**ईरितः**-முன்பு சொல்லப்பட்டது

பரிணாம பக்ஷத்தைத் திருஷ்டாந்தமாகக் கொண்டு தனது பக்ஷத்தில் யாதேனும் தோஷத்தை நீக்குதற்கு இச்சிக்கின்றிலர் என்பது பொருள்.

(அ) யாதொரு காரணத்தினுல் இங்ஙனம் சூத்திரக்காரர் சங்காதாதிவாதத்தினைப் போன்று பரிணாமவாதத்தையும் நிராகரித்தாரோ அக்காரணத்தால் “போக்திராபத்தேரவிபாகஸ்சேத்” என்னும் சூத்திரத்தின் கண் வாதிகளால் அத்வய சமன்வயத்தின் கண் போக்திரு போக்யாதிகளின் யாதொரு சாங்கரியம் (சலப்பு) கூறப்பட்டதோ அதனை நீக்குதற்கிச்சையுடையரொய் பேதாபேதத்தோடு கூடிய பரிணாமவாதத்தை யங்கீகரித்து **स्याल्लोकवत्** உலகம் போன்று ஆகும் என அதன் பரிகாரத்தை வியாசமுனி கூறினுர் தனது சித்தாந்தத்

தன்மையாலன்று. தனது சித்தாந்தத்தன்மையால் கூறுவாராயின் அதன் நிஷேதம் பொருத்தமற்போம். தனது சித்தாந்தத்தின் சித்திபோ பின்னர் "ததனன்யத்வம் ஆரம்பண சப்தாதிகளால்" என்னுமிடத்து காணத்தக்கது எனக் கூறுகின்றார்:—

**भोक्त्रादिसूत्रे परिणामवादमाश्रित्य तद्वादिभिरुक्तदोषम् ।**
**समादधानो मुनिराह तस्मात् सिद्धान्तसिद्धिः पुनरुत्तरत्र ॥ ७९ ॥**

**भोक्त्रादिसूत्रे**-போக்திரு என்பதாதி சூத்திரத்தின் கண்
**परिणामवादम्**-பரிணமவாதத்தினை
**आश्रित्य**-ஆசிரயித்து
**तद्वादिभिः**-அவ்வாரம்ப வாதிகளால்
**उक्तदोषम्**-கூறப்பட்ட சாங்கர்ய தோஷத்தினை
**समादधानः**-சமாதானஞ் செய்கின்றவராய்
**मुनिः**-வியாச முனி
**आह**-கூறினார்
**तस्मात्**-அதனால் ( அது சித்தாந்தமன்று )
**सिद्धान्तसिद्धिः**-தனது சித்தாந்தத்தின் சித்தி
**पुनः उत्तरत्र**-பின்னர் அதனனன்யமாமென்னுமதிகரணத்தின் கண்ணேயாம்

(அ) அற்றேல்: நிராகரிக்கப்படுவதாகிய பரிணமவாதத்தினையே விவர்த்தவாதத்தின் சமீபத் தன்மையால் அங்கீகரிக்கப்படுமாயின் ஆரம்பவாதமும் சுபாவவாதம் முதலிய மதத்தினை நிராகரித்தலால் காரிய காரணததன்மை முதலியவற்றை சமர்த்தனஞ்செய்தற் பொருட்டு ஏன் அங்கீகரிக்கப்படவில்லை. என்று சங்கித்து அஃது சரியன்றெனக் கூறுகின்றார். ஈண்டு காரிய காரணாதிகள் பிரதிபாதித்தற்கு இஷ்டமின்றும அஃது (காரியகாரணாதி) மாயாமாத்திரமாதலால் மற்றோ அத்துவைத பிரஹ்மமே பிரதிபாதித்தற்கு இஷ்டமாம். அதன் கண்ணும் பேதாபேதத்தை ஆசிரயித்த பரிணமவாதம் அபேத அம்ஸத்தால் அத்துவைத சமர்த்தனத்தின் கண் உபகாரத்தைச் செய்கின்றது. பேதாம்ஸத்தால் பிரத்தியக்ஷாதியை அநுசரிக்கின்றது.

ஆதலின் முதலில் பிரத்யக்ஷாதி பிராமாணியத்தை ஆசரியித்தபோதிலும் அத்வைத சமன்வயத்தின் கண் யாதொரு பாதமுமின்றும் என தெரிசிப்பித்தற்கு பரிணாமவாதமே சம்மதமின்றாயினும் ஆசரியிக்கப் பட்டது என்னும் கருத்தால் கூறுகின்றார்:—

प्रत्यासन्ना परिणतिरियं विप्रकृष्टस्तु पूर्वः
संघातादिः सकल उदितो वेदसिद्धान्तसिद्धेः ।
एतावच्चादियमभिमता सूत्रकारस्य भाति
भ्रान्ति भ्रष्टस्फुटनिजमनः कौशलानां नराणाम् ॥

**वेदसिद्धान्तसिद्धेः**–வேதாந்த சித்தாந்த சித்தியின் பொருட்டு

**इयं परिणतिः** இந்த பரிணாமவாதம்

**प्रत्यासन्ना**–சமீபமாகவுள்ளது விவர்த்தத்தைக்குறித்து உபாய மாதலால்

**पूर्वः उदितः**–பூர்வ பக்ஷமாகக் கூறப்பட்ட

**संघातादिः**–சங்காத வாதம் முதலிய

**सकलः**–சகல வாதமும்

**विप्रकृष्टः**–தூரத்திலுள்ளது

வியவகாரமாத்திரத்திரத்திலுபயோகமாதலால் வேதார்த்த நிர்ணயத்திலுபயோகியன்றும் இதுவே சுலோகத்திலுள்ளது. சப்தத்தால் சூசிப்பிக்கப்பட்ட விசேஷமாம். இந்த என்னும் விசேஷணத்தால் பரிணாமம் பிரத்தியக்ஷ சித்தமாயிருத்தலால் வியவகாரத்திற்கு முபயோக மாகவுள தென்பது தெரிசிப்பிக்கப்பட்டது.

அற்றேல்: சூத்திரத்தின் வியாக்யான கர்த்தாக்களான சில பண்டிதர்களால் பரிணாமவாதம் சூத்திரக்காரருக்கு சம்மதமாமென தமது கிரந்தத்தில் எழுதப்பட்டுளது–ஆதலின் ஆண்டு பரிணாமவாதம் வியாஸருக்கு சம்மதமின்றுமெனல் எங்ஙமாமெனின் எழுதியிருக்கட்டும். அவர்களுக்கு சூத்திரககாரருடைய கூறிய அபிப்பிராயத்தை அறியும் தன்மையின்மையால் பிராந்தியினாலேயே அஃது எழுதியுள்ளார் களென்னும் கருத்தால் கூறுகின்றார்.

**एतावत्त्वात्**–சித்தாந்தத்திற்கு சமீபமாயிருக்குமித்துணை மாத்திரத்தால்

**भ्रान्ति भ्रष्ट**–பிராந்தியினலே தவறுதலையடைந்துள்ள

**स्फुटनिजमनः कौशलानाम्** – வெளிப்படையான விசாரத்தில் சாமர்த்தியமுடைய

**नराणाम्**–மனிதர்களுக்கு, பிராந்தியினலேயே விசாரசாமர்த்தியம் கெட்டுப்போன மனிதர்களுக்கென்று பொருள்

**सूत्रकारस्य**–வியாஸ பகவானுக்கு

**इयमभिमता**–இந்த பரிணாம வாதமே அதாவது சவிசேஷ அத்வைதமே சம்மதமாமென

**भाति**-தோன்றுகிறது (80)

## ஆரோபாதி திருஷ்டித்ரய நிரூபணம்

(அ) கேவலம் சுருதியால் சித்தித்த அத்வைதத்திற்கு சமீபமாயிருத்தலால் பரிணாமவாதத்தினங்கீகார மன்ரும். மற்ரு அஃதின்றி (பரிணாமவாதமின்றி) சிஷ்யனைக் குறித்து சுத்த அத்வைத பிரஹ்மத்தை உபபாதனஞ் செய்தற்குக் கூடாமையாலும் அஃது அங்கீகரிக்கப பட்டது என்னும் கருத்தால் கூறுகின்ருர்.:—

**आरोपदृष्टिरपवादकदृष्टिरेवं व्यामिश्रदृष्टिरिति दृष्टिविभागमेनम् ।**
**संगृह्य सूत्रकृदयं पुरुषं मुमुक्षुं सम्यक्प्रबोधयितुमुत्सहते क्रमेण ॥**

**आरोपदृष्टिः**–ஆரோபதிருஷ்டியும்

**अपवादकदृष्टिः**–அபவாத திருஷ்டியும்

**एवं**-இவ்வாறு

**व्यामिश्रदृष्टिः**-வியாமிஸ்ர திருஷ்டியும்

**इति**–என மூன்ரும்

**एनम् दृष्टिविभागम्**–இந்த திருஷ்டிபேதத்தினை

**क्रमेण संगृह्य**–கிரமமாக சங்கிரகித்து

**अयम् सूत्रकृत्**–இந்த வியாச பகவான்

**पुरुषं**–பரமான்மாவை

**मुमुक्षुम्**–முமுக்ஷுவைக்குறித்து

**सम्यक्**–அநாயாசமாக

**प्रबोधयितुम्**—அறிவித்தற்கு
**उत्सहते**—உத்சாகமுடையவராகின்ருர்

சம்யக் என்பதற்கு கிலேசமின்றி யென்னும் பொருளும் கொள்ளலாம். (81)

(அ) கூறப்பெற்ற மூன்று திருஷ்டியினையும் பரஸ்பரம் வேறு பிரித்து தெரிசிப்பிக்கின்ருர் :—

**आरोपदृष्टिरुदिता परिणामदृष्टिर्द्वैतोपशान्तिरपवादकदृष्टिरन्त्या ।
मध्ये विवर्तविषया द्वयमिश्रदृष्टिर्व्यामिश्रदृष्टिरधरोत्तरभूमिभावात् ॥**

**उदिता**—முன் சுலோகத்தில் கூறப்பட்ட
**आरोपदृष्टिः**—ஆரோப திருஷ்டியென்பது
**परिणामदृष्टिः**—பிரம்மத்தின் கண் பிரபஞ்சத்தின அத்தியாரோப திருஷ்டியாம அதனுலன்ரு பிரம்மத்திறகு பிரபஞ்சான்மகத்தன்மை விஷயஞ்செய்யப்படுகிறது
**अपवादकदृष्टिः**—ஆண்டு கூறப்பட்ட அபவாத திருஷ்டி என்பது
**अन्त्या**—அந்தியகாரியமான
**द्वैतोपशान्तिः**—காரிய சகித அஞ்ஞானத்தின் நாசக அத்துவிதப் பிரம்ம சாக்ஷாத்காரமாம்
**व्यामिश्रदृष्टिः**—ஆண்டு கூறப்பட்ட வியாமிசிர திருஷ்டி என்பது
**मध्ये**—பரிணும திருஷ்டி துவைத உபசம திருஷ்டி இவைகளின் மத்தியில்
**विवर्तविषया**—கற்பித வேற்றுமை வடிவ விவர்த்தத்தை விஷயஞ் செய்கின்ற
**द्वयमिश्रदृष्टिः**—இரண்டும கலந்த திருஷ்டியாம்

பிரம்மத்தின் கண் பிரபஞ்சத்தையும் அதனபாவத்தையும் விஷயஞ் செய்தலால் அஃது இரணடும் கலநத திருஷ்டியாம் என்பது பொருள் அந்தியமத்திய என்பதாதி பதத்தால் சூசிப்பிக்கப்பட்ட இந்தத் திருஷ்டி களின் கிரமத்தின் கண ஏதுவை அபிப்பிராயஞ் செய்து கூறுகின்ருர்.

**अधरोत्तरभूमिभावात्**—நிகிருஷ்ட மத்திம உத்தம பூமி வடிவ மாதலால் (82)

(அ) அந்தத் திருஷ்டிகளின் நிக்ருஷ்டாதி வடிவத்தையே விஸ்தரிக்கின்றார்.:—

तत्त्वावेदकमानदृष्टिरधमा तत्त्वक्षतिर्मध्यमा
तत्त्वप्रच्युतिविभ्रमक्षतिकरी तत्रान्त्यदृष्टिर्मता ।
जीवैकत्वमुमुक्षुभेदगतितो व्यामिश्रदृष्टिर्द्विधा-
भिन्ना तत्र च पूर्वपूर्वविलयादूर्ध्वोर्ध्वलब्धिर्भवेत् ॥ ८३ ॥

**तत्त्वावेदकमानदृष्टि:**–பிரத்தியக்ஷாதிகட்கு தத்துவத்தை யறிவிக்குந்தன்மை வடிவ பிரமாணத்துவ திருஷ்டி ஆரோபதிருஷ்டி என்பது பொருள்

**अधमा**-அதம (தாழ்ந்தது) மாம்

**तत्त्वक्षति:**–பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையை நாசஞ்செய்கின்ற விவர்த்த திருஷ்டி

**मध्यमा**–மத்தியமாம்

**अन्त्यदृष्टि:**–கடைசியிலுள்ள அபவாத திருஷ்டி

**तत्त्वप्रच्युति**–பிரபஞ்சத்தின் தத்துவத்திற்கு விரோதியும்

**विभ्रमक्षतिकरी**–பிரபஞ்சத்தின் மித்தியாத்துவத்தை விஷயஞ் செய்வதுமான விவர்த்த திருஷ்டியை நாசஞ் செய்கின்றதாய்

**मता**-சருவோத்தமமாக கருதப்பட்டுளது

ஆரோப திருஷ்டி அவிவேகி புருஷரிடத்திருத்தலானும் புருஷார்த்தத்திற்கு உபயோகமின்மையாலும் அநர்த்தத்திற்கேதுவாகலானும் அனான்மாவில் சத்தியத்தன்மையை விஷயஞ் செய்தலானும் அதமமாமென்பது பொருள்.

விவர்த்த திருஷ்டி பிரம்ம விசாரத்தினதீனமாதலாலும் விவேகி புருஷனை யாசிரயித்திருத்தலாலும் பரம்பரையாக மோக்ஷத்திற்குபயோகியாயிருத்தலாலும் ஆன்மதத்துவத்தை விஷயஞ் செய்தலாலும் அது முன் திருஷ்டியையபேக்ஷித்து உத்தமமாம். அத்துணைமாத்திரத்தால் துவைதத்தின் உபசாந்தி சம்பவியாமையின் துவைத உபசாந்தியையபேக்ஷித்து ஜகன்ய (அதம) மாம் ஆதலின் மத்தியமாமென்பது பொருள்.

அந்தியத்திலுள்ள அபவாத திருஷ்டி உத்தம புருஷனை யாசியித் திருத்தலாலும் சருவத்துவைதப் பிராந்தியை நிவர்த்திக்குந்தன்மையால் நேரே மோக்ஷ சாதனமாதலானும் சுரதிசயானந்தான்ம மாத்திரத்தை விஷயஞ் செய்தலானும் சருவோத்தமமாமென்பது பொருள்.

விவர்த்த திருஷ்டிக்கும் சீவனது ஏகத்தன்மை நாநாத்தன்மைகளை விஷயஞ்செய்யுந் தன்மையால் இருவிதத் தன்மையைக் கூறுகின்றார்.

**व्यामिश्रदृष्टिः**-விவர்த்த திருஷ்டியானது
**जीवैकत्वमुमुक्षु**-சீவனது ஏகத்தன்மை முமுக்ஷு
**भेदगतितः द्विधाभिन्ना**-பேதத்தால் இரண்டு விதமாம்

சீவர்கள் அநேகர் கிரமமாக முமுக்ஷுக்களாவர் சமுசார மோக்ஷ மார்க்கம் அநாதி அனந்தம் என்பது விவர்த்தத்தில் முதலாவது திருஷ்டி. யானொருவனே சருவ காரிய கரணங்களில உள்ளே சாக்ஷியாயிருப்பவன் முக்தன அமுக்தன் வித்துவான் அவித்துவான் அநேக சீவர் ஈசன் என்பதாதி பேதத்தால் பின்னமான சகத்து எனதவித்தையாற் கற்பிக்கப் பட்டதாகி விளங்குகிறது எனது ஞானத்தால் நிவர்த்தியாகும் என்பது இரண்டாவது திருஷ்டியாம. கூறப்பட்ட திருஷ்டிகட்கு காலத்தாலும் முன் பின் தன்மையைத் தெரிசிப்பிக்கின்றார்.

**तत्र च**-அந்த திருஷ்டிகளுக்குள்
**पूर्वं पूर्वं**-முன் முன் திருஷ்டிகளின்
**विलयात्**-ஒடுக்கத்தால்
**ऊर्ध्वोर्ध्वं**-பின்பின் திருஷ்டிகளின
**लब्धिः भवेत्**-பிராப்தியுண்டாம்

வேறு பிரகாரத்தாலன்றும். பின் பின்னுள்ள திருஷ்டியினாலேயே முன் முன்னுள்ள திருஷ்டியின விலயமாம் அங்ஙனமாயினும் ஆரோபாதி திருஷ்டிக்கு யுக்தியினால் அசம்பவ ஞான காலத்திலேயே விவர்த்தத்துவாதி திருஷ்டியுண்டாகின்றதாதலின் முன்முன் திருஷ்டியின் ஒடுக்கத்தால் எனப்பட்டது (83)

(அ) முன்முன் திருஷ்டியின் ஒடுக்கத்தால் என்று கூறப்பட்டதனையே உபபாதனஞ்செய்கின்றார் :—

परिणामबुद्धिमुपमृद्य पुमान् विनिवर्तयत्यथ विवर्तमतिम् ।
उपमृद्य तामपि पदार्थधिया परिपूर्णदृष्टिमुपसर्पति सः ॥ ८४ ॥

**पुमान्**-சிரவணாதிகாரி புருஷன்
**परिणामबुद्धिम्**-கூடஸ்தனுக்கு வாஸ்தவமாக வேற்றுவடிவம் சம்பவியாமையால் பரிணாம (ஆரோப) திருஷ்டியை
**उपमृद्य** ஒடுக்கி
**अथ**-அனந்தரம்
**विवर्तमतिम्**-விவர்த்த புத்தியினை
**विनिवर्तयति**-விசேஷமாக நிச்சயஞ் செய்து உற்பத்தி செய்கின்றான்
**तामपि**-அந்த விவர்த்த புத்தியினையும்
**पदार्थधिया**-சுத்த த்துவம்பதார்த்த நிச்சயத்தால்
**उपमृद्य**-கெடுத்து
**परिपूर्णदृष्टिम्**-நிஷ்பிரபஞ்ச பிரத்தியக் பிரம்மாபேத திருஷ்டியை
**सः उपसर्पति**-அவன் அடைகின்றான் (84)

(அ) அற்றேல் சிரவணத்தினதிகாரியாகிய முமுக்ஷுவிற்கு மோக்ஷத்தின் சாதனமான சாக்ஷாத்காரமே சாதிக்கத்தக்கதாம் பரிணாமாதி திருஷ்டியினால் யாது பயன் எனின் வாஸ்தவந்தான் அந்த சாக்ஷாத்காரமே அவையின்றி சம்பவிக்கின்றதில்லை என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.:—

अथशब्दसूचितमुमुक्षुरिमं खलु दृष्टिभेदमुदितक्रमतः ।
उपढौकते विगलिताखिलधीरवतिष्ठते निजमहिम्नि ततः ॥ ८५ ॥

**अथशब्दसूचित**-அதாதோ பிரம்ம ஜிஞ்ஞாஸா என்னும் சூத்திரத்திலுள்ள அதசப்தத்தால் சூசிப்பிக்கப்பட்ட
**मुमुक्षुः**-விவேக வைராக்கியாதிபினையுடைய முமுக்ஷுவானவன்
**इमं दृष्टिभेदम्**-இந்த திருஷ்டி பேதத்தை
**उदितक्रमतः**-கூறிய கிரமத்தால்
**उपढौकते**-அடைகின்றான்
**ततः**-அதனால் அப்போது

**विगलिताखिलधीः**–சகுவபேதஞானமும் விடுபட்டவனாய்
**निजमहिम्नि**-சுவ சொரூபத்தின் கண்
**अवतिष्ठते**–நிலைபெறுகின்றான்

சூத்திரகாரருக்கும் கிரமமாக உண்டாகாநின்ற இந்தத் திருஷ்டி பேதம் சம்மதமாமென தியோதனம் (விளக்குப) செய்யும் பொருட்டு அத என்று கூறப்பட்டது (85)

(அ) அற்றேல் முமுக்ஷுவிற்கு பரிணாமாதியின் ஞானமின்றி சுத்தப் பிரம்மத்தின் சாக்ஷாத்காரம் ஏனுண்டாகாது விருத்த பதார்த்தங்களுக்கு ஏது ஏதுமத்பாவம் இல்லையாதலின் என்றாசங்கித்துக் கூறுகின்றார். ஏதுமத்=ஏதுவினையுடையது:—

**परिणाम इत्यथ विवर्त इति बहवोऽहमेव च मुमुक्षुरिति ।**
**परिपुष्कलं च परमं पदमित्यवगत्य तिष्ठति महिम्नि निजे ॥ ८६ ॥**

**परिणाम इति**-அதிகாரி முதலில் பரிணாமமென்றறிகின்றான்
**अथ विवर्त इति**–பின்பு விவர்த்தமென்றறிகின்றான்
**बहवः इति**–பின்பு சீவர்கள் அனேகரென அறிகின்றான்
**मुमुक्षुः अहमेव च**–பின்பு முமுக்ஷுவாகிய நானே
**परिपुष्कलं च**–பரிபூர்ணமான
**परमं पदम्**–பிரம்ம சொரூபம்
**इत्यवगत्य**–என்றறிந்து
**निजे महिम्नि**-சுவ சொரூபத்தில்
**तिष्ठति**–நிலைக்கின்றான்

அத சப்தத்தால் கூறப்பட்ட அதிகாரி முதலில் சிருஷ்டி வாக்கியம் முதலியவற்றின் சமன்வயத்தை விசாரித்தலால் மண் கடத்திற்குப்போன்று பிரம்மமே பிரபஞ்சத்தினுபாதானமாம் என்றறிகின்றான். உபாதானத்தன்மையே ஈண்டு பரிணாம சப்தத்தால் விவக்ஷிக்கப்பட்டதாம் அதன் பிறகு ஆரம்பணாதி அதிகரண நியாயத்தால் நிஷேதவாக்கியத்தின் தாற்பரியத்தை விசாரித்தலால் சிருஷ்டி வாக்கியத்தின் பொருள் விவர்த்தமாமென அறிகின்றான் பூருவ (பரிணாம) ஞானமின்றி பிரம்மத்தின்கண் பிரபஞ்சத்திற்கு விவர்த்தத்

தன்மை நிச்சயம் சம்பவியாமையின். எவ்விடத்து எது அறியப் பட்டதோ அவ்விடத்திலேயே அதனை நிஷேதஞ்செய்யின் அதற்கு மித்தியாத்தன்மை நிச்சயத்தால் அதற்கு விவர்த்தத்தன்மையை நிச்சயிக்கலாம் ஆதலின் பிரம்மத்தின்கண் பிரபஞ்சத்தை சேர்ப்பிக் கின்ற பரிணாம ஞானம் அபேக்ஷிக்கப்பட்டதேயாம். அன்றியும் பிரபஞ்சத்தின் விவர்த்தத்தன்மை ஞானமின்றி சுத்தான்ம சாக்ஷாற்கார முண்டாகாது. இவ்வாறு அவிசார தசையின் கண் சீவர்கள் அநேக ரென்னும் ஞானமும் திருஷ்டாதிருஷ்ட வாயிலாக மோக்ஷ இச்சை வாயிலாக சாக்ஷாற்காரத்தில உபயோகமாகின்றது என்னும் கருத்தால் சீவர்கள் அநேகரெனப்பட்டது.

ஆதலால் பரிணாமாதியின் ஞானத்திற்கு சாக்ஷாற்காரத்திலுபயோக முளதென்பது பொருள். (86)

(அ) 82-வது சுலோகத்தில் மத்தியில் வியாமிசிர திருஷ்டி விவர்த்த விஷயகமாமென்று கூறப்பட்டது விவர்த்த ஞானத்திற்கு மத்தியஸ்தத்தன்மையை யுபபாதனஞ் செய்கின்றார்.:—

परिणामधियो विवर्तधीरपवादात्मतया व्यवस्थिता ।
सकलद्वयमर्दिनीं धियं प्रति साऽरोपगिराऽभिधीयते ॥ ८७ ॥

**परिणामधियः**-பிரம்மத்தின் கண் பிரபஞ்சான்மகத்தன்மையின் ஞானத்திற்கு

**विवर्तधीः**-விவர்த்த ஞானம்

**अपवादात्मतया**-(அதன் கண் அதன் அத்தியந்தாபாவத்தையும் விஷயஞ்செய்கின்றதாய்) அபவாதத் தன்மையால்

**व्यवस्थिता**-நிலைபெற்றுள்ளது (ஆதலின் அது உத்தமமாம்)

**सकलद्वयमर्दिनीम्**-சருவத்துவைதப் பிரபஞ்சத்தையும் நாசஞ் செய்கின்ற

**धियं प्रति**-சுத்தாத்வயான்ம ஞானத்தைக் குறித்து

**सा**-அந்த விவர்த்தஞானம்

**आरोपगिरा**-ஆரோப சத்தத்தால்

**अभिधीयते**-சொல்லப் படுகின்றது ஆதலின் ஆரோபத்திற்கு நிஷேதத்தின் முன்னிருக்குந்தன்மை யுண்மையால் அது அதன் பூர்வமுமாம். ஆதலின் மத்தியமாம் என்பது பொருள்.

பரிணாமஞானத்தைக் கெடுத்து என்பதனுலேயே பொருளால் இப்பொருள் சித்தித்தது. அங்ஙனமாயினும் அதுவே இதனுல் விஸ்தரிக்கப்பட்டதெனக் காண்க அல்லது முன் சுலோகத்தின்கண் விவர்த்த ஞானத்திற்கு நிஷ்பிரபஞ்ச ஆன்மசாக்ஷாத்காரத்தில் உபயோகம் கூறுமையின் இதர (பரிணாமத்தின்) அநுவாதத்தால் அதுவே இதனுல் தெரிசிப்பிக்கப்பட்ட தெனக் காண்க. (87)

(அ) இதனுலேயே விவர்த்த திருஷ்டிக்கு முன் கூறப்பட்ட வியாமிசிரத்தன்மை (முன்பின்கலந்திருக்குந்தன்மை) பொருத்தமா மெனக் கூறுகின்றார்.:—

**उभयव्यतिमिश्ररूपतां भजते तेन विवर्तधीरियम् ।**
**प्रथमोत्तमयोर्द्वयोः पुनर्व्यतिमिश्रीभवनं न विद्यते ॥ ८८ ॥**

**तेन**-முன் சுலோகத்திற்கூறிய அவ்வேதுவினுல்

**इयम् विवर्तधीः**—இந்த விவர்த்த ஞானமானது

**उभयव्यतिमिश्ररूपताम्**—பரிணாம திருஷ்டி உபசாந்த திருஷ்டி என்னுமிரண்டின் கலப்புத்தன்மையை

**भजते**—அடைகின்றது

பிரபஞ்சத்தின் சம்சர்க்க விஷயகத்தன்மையாலும் அதன் அபாவ தத்வவிஷயகத்தன்மையாலும் அதற்கு இரண்டின் கலப்புத்தன்மையா மென்பது பொருள்.

**प्रथमोत्तमयोः**—ஆதியிலுமந்தத்திலுமுள்ள

**द्वयोः पुनः**-பரிணாம திருஷ்டி உபசாந்த திருஷ்டி என்னு மிரண்டிற்கோ

**व्यतिमिश्रीभवनम्**-கலப்புத்தன்மை

**न विद्यते**—இன்றாய ஒவ்வொரு சொரூபத்தை மாத்திரம் விஷயம் செய்யும் தன்மையால் என்பது பொருள். (88)

(அ) இங்ஙனம் ஓர் அதிகாரியின் கண் கிரமமாக இருக்கின்ற பரிணாமம் முதலிய திருஷ்டிகட்கு மோக்ஷத்தில் உபயோகம் கூறப் பட்டது. இப்போது விரோதமுள்ள திருஷ்டிகட்கு ஓர் புருஷனை ஆச்ரயித்திருக்குந்தன்மை சம்பவியாமையால் அதம மத்யம உத்தம அதிகாரிகளை ஆசரியித்திருக்குந்தன்மை எவர்கள் கூறுகின்றனரோ அவர் மதத்தை அநுவாதஞ் செய்கின்றார்:—

**कृपणधीः परिणाममुदीक्षते क्षपितकल्मषधीस्तु विवर्तताम् ।**
**स्थिरमतिः पुरुषः पुनरीक्षते व्यपगतद्वितयं परमं पदम् ॥ ८९ ॥**

**कृपणधीः**–பிரபஞ்சத்தில் பற்றுள்ளவன்
**परिणामम्**–பரிணாமத்தை
**उदीक्षते**–காண்கின்றான்
**क्षपितकल्मषधीस्तु**–பாபமற்ற புத்தியுடையவனோ
**विवर्तताम्**–விவர்த்தத்தன்மையை
**ईक्षते**–காண்கின்றான்
**स्थिरमतिः**-சலனமற்ற புத்தியுடைய
**पुरुषः पुनः**–புருஷனோ
**व्यपगतद्वितयम्**–துவைதமற்ற
**परमं पदम्**–சுத்தப் பிரஹ்மத்தை
**ईक्षते**–காண்கின்றான்.

பிரபஞ்சத்தினின்றும் விரக்தியை அடையாத புருஷன் சர்வப் பிரபஞ்சமும் பிரஹ்மத்தின் வாஸ்தவபரிணாமமாம். யானும் வாஸ்தவமாக கர்த்தா போக்தாவாம் அப்பரமான்மாவையே ஆராதித்து அவரது அனுக்கிரகத்தால் சிரேயசை அடைவேன் எனக் காண்கின்றான் என்பது பொருள். சம்சாரத்தில் நின்றும் விரக்தி யடைந்த புருடனோ வேதாந்த சாஸ்திரத்தை சிரவணம் செய்கின்றவனும் சம்சாரத்திற்கு விவர்த்ததன்மையை காண்கின்றான். பரிபக்குவமுற்ற சிரவணமனன தியானாதிகளால் சலனமற்ற புத்தியுடைய புருஷன் அத்வைதப பிரஹ்மத்தை காண்கின்றான் என்பது பொருள்.

சங். ii-14. (89)

(அ) ஜீவனது ஏகத்தன்மை அநேகத்தன்மை ஞானமும் புருஷ பேதத்தாலேயே உண்டாம் என்னும் அவர் மதத்தைக் கூறுகின்றார்.

**पुरुषभेदवशाद्द्विविधा भवेत्क्षपितकल्मषधीरपि मध्यमा ।**
**जगदनेकमुमुक्षुकमीक्षते पुरुष एकतरो न तथेतरः ॥ ९० ॥**

**पुरुषभेदवशात्**—மத்யம உத்தம அதிகாரமுடைய புருஷபேத வசததால்

**मध्यमा**-நடுவிலுள்ள (விர்த்த திருஷ்டியாகிய)

**क्षपितकल्मषधीरपि**—பாபமற்ற புருஷனது ஞானமும்

**द्विविधा भवेत्**—இரண்டு விதமாம்

அவ் விருவிதத்தினையே கூறுகின்றார்.

**एकतरः पुरुषः**—ஓர் புருஷன்

**जगदनेकमुमुक्षुकम्**—உலகம் அநேக முமுக்ஷுக்களை உடையதென

**ईक्षते**—காணகின்றான்.

**इतरः**-மற்றோர் புருஷன்

**तथा**—அவ்வாறு அநேக முமுக்ஷுக்களை உடையதென

**न ईक्षते**—காணகிறதில்லை. (90)

(அ) இங்ஙனம் பரபக்ஷத்தை உபசம்மாரம் செய்கின்றவராய் தூஷிக்கின்றார்:—

**इति तु केचिदुशन्ति महाधियस्तदपि संभवतीति न दुष्यति ।**
**इह तु सूत्रकृताऽथ गिरोदितः पुरुष एकविधस्त्रिविधो न तु ॥ ९१ ॥**

**महाधियः**-மிக்க அறிவாளிகளான

**केचित्**-சிலர்

**इति तु उशन्ति**-இவ்வாறு விரும்புகின்றனர்.

**तदपि**—அதுவும்

**न संभवतीति**-சம்பவிக்கின்றதே இல்லையாதலின்

**दुष्यति**—தோஷமுடையதாம்.

வெவ்வேறு புருஷரை ஆச்ரயித்துள்ள அந்த திருஷ்டிகட்கு உபகாரிய உபகாரகததன்மை பொருந்தாமையால் அதை அங்கீகரித்தல்

வியர்த்தமாமென்பது பொருள். வாஸ்தவமாக சூத்திரக்காரரான வியாச பகவானுக்கு அந்த மதம் சம்மதமே இன்றும் எனக் கூறுகின்றார்.

इह तु-ஈண்டு சித்தாந்தத்தின் கண்ணே

सूत्रकृता-பிரஹ்ம சூத்திரத்தின் கர்த்தாவான வியாஸ பகவானுல்

अथ गिरा-முதற் சூத்திரத்திலுள்ள அத சப்தத்தால்

उदितः पुरुषः-கூறப்பட்ட அதிகாரி புருஷன்

एकविधः तु-ஒருவனேயாம்.

न त्रिविधः-மூன்று வகையினரன்றும்.

மிக்க அறிவாளிகள் என்றது பரிகாசத்தின் பொருட்டாம். (91)

(அ) எதனுல் இஃது (ஓர் புருஷனை ஆச்ரயித்திருத்தல்) என்னு மிடத்து கூறுகின்றார் :-

तिसृषु भूमिषु तस्य च तिष्ठतः क्रमवशात्स्वयमुत्तमभूमिका ।
समुपसर्पति तत्र च तिष्ठतः समुपशाम्यति कारणकार्यधीः ॥ ९२ ॥

तिसृषु भूमिषु-பரிணாமம் முதலிய மூன்று திருஷ்டிகளிலும்

क्रमवशात्-கிரமமாக

तिष्ठतः तस्य-பிரவிர்த்திக்கின்ற அவ்வதிகாரிக்கு

उत्तमभूमिका-உத்தம திருஷ்டியின் அவஸ்தை (சாக்ஷாத்காரம்)

स्वयम्-முன் திருஷ்டித்துவயங்கள் பரிபாகயாகும்போது பின்பு தானே அநாயாஸமாக

समुपसर्पति-அந்த புருஷனை அடைகின்றது

तत्र-சாக்ஷாத்கார பூமியின்கண்

तिष्ठतः च-நிலைத்திருக்கும் புருடனுக்கு

कारणकार्यधीः-இது காரணம் இது காரியம் என்பது முதலிய பேத ஞான மனைத்தும்

समुपशाम्यति-சாந்தியாகின்றது

வியாச பகவான் ஓரே அதிகாரியை ஆசிரயித்து சாஸ்திரத்தை ஆரம்பிக்கின்றவராய் அவனுக்கே மூன்று திருஷ்டியினை கூறுவதற்கு இச்சிக்கின்றார்.

சிருஷ்டி முதலியவற்றைக் கூறும் வாக்யத்தின் சமன்வயத்தை விசாரித்தலாலும் ஆனந்தமய நியாயத்தால் "பிரக்ருதைதாவத்வம் ஹி பிரதிஷேததி" என்பதாதியால் நிஷேத வாக்கியத்தின் தாற்பரியத்தை நிரூபித்தலாலும் "ஆனந்தாதயஃ பிரதானஸ்ய" என பிரஹ்ம வாக்யத்தின் பரிமிதி (அளவு) யை நிச்சயித்தலாலும் "ஸம்பத்ய ஆவிர்ப்பாவஃ ஸ்வேன சப்தாத்" என மோக்ஷ ஸ்வரூபத்தை நிரூபித்தலாலும் மூன்று திருஷ்டியும் ஒரு அதிகாரியினிடத்திலேயே சம்பாதிக்கப்பட்டமையின் அங்ஙனம் கொள்ளாக்கால் சிருஷ்டியாதி வாக்கியத்தால் பிரஹ்மத்தின் கண் பிரபஞ்சம் பிராப்தி ஆகாதபோது எதற்கு விவர்த்தத்தன்மையை நியாயத்தால் உபபாதனஞ் செய்வர். நிஷேத வாக்கியத்தால் தான் எதனை நிஷேதம் செய்வர். விவர்த்தத்தன்மையின் ஞானமின்றி சுத்த ஆன்மாவை பிரதிபாதிக்கின்ற பதங்களின அளவையை எப்படி நிரூபிப்பர். அந்தியத்தில் சின்மாத்திர சொரூப அவஸ்தானத்தை நிரூபித்தற்குத்தான் எங்ஙனம் சமர்த்தராவர் என்பது கருத்து. அளவை = இவ்வளவு என்னும் தன்மை (92)

(அ) இவ்வாறு திருஷ்டி மூன்றும் ஒரே புருஷனை ஆச்ரயித்திருத்தலின் சார்த்தகத்தை முடிக்கின்றார் :-

**श्रुतिवचांसि मुनिस्मरणानि च द्वयविशारदगीरपि सर्वशः ।**
**त्रयमपेक्ष्य दशात्रितयं विना न हि घटामुपयान्ति कदाचन ॥ ९३ ॥**

**श्रुतिवचांसि**-சிருஷ்டியினையும் அதன் நிஷேதம் முதலியவற்றினையும் விஷயஞ்செய்கின்ற சுருதி வாக்கியங்களும்

**मुनिस्मरणानि च**-மேற்சுலோகத்திற்கூறிய வியாஸமுனியின் சூத்திரங்களும் முற்கூறிய நியாயங்களும்

**द्वयविशारदगीरपि**-சுருதி சூத்திரங்களை விசாரஞ்செய்வதில் சாமர்த்தியமுள்ள பாஷியக்காரர் முதலானோரது வாக்கியமும் ஆகிய அனைத்தும்

**सर्वशः**-சர்வப் பிரகாரத்தாலும்

**त्रयम् अपेक्ष्य**-ஓர் புருடனிடத்தில் மூன்று திருஷ்டியினையும் அபேக்ஷித்தே

घटामुपयान्ति-பொருத்தத்தை அடைகின்றன. இதனையே வியதிரேக முகத்தால் திடப்படுத்துகின்றார்

दृशात्रितयं विना-ஓர் புருஷனிடத்தில் மூன்று திருஷ்டியின் ஸ்திதியின்றி

कदाचन-ஓர் போதும்

घटाम्-பொருத்தத்தை

नहि उपयान्ति-அடைகின்றதில்லை (93)

## பிரத்யக்ஷாதிகட்கு தத்துவத்தை அறிவிக்குந்தன்மை இன்றுமெனல்

(அ) ஆதலால் வேதாந்தங்கட்கு அத்வய பிரம்மத்தின்கண் சமன்வயம் இருந்தபோதிலும் பிரத்தியக்ஷாதி பிரமாணங்கட்கும் அவிவேகி மகா ஜனங்களால் சித்தித்துள்ள தாத்வீகப் பிரமாண்யம் சித்திக்கின்றது. ஆதலின் சமன்வயத்திற்கு பிரத்தியக்ஷாதியால் பாதம் இன்றும் என்னுங் கருத்தால் வியாசமுனி போத்ராதி சூத்திரத்தின்கண் சியாது லோகவது என உலகத்தில் சித்தித்த தேகான்ம பாவத்தின் சமத் தன்மையை உலக சப்தத்தின் சிரவணத்தால் பரிணமத்தை தெரிசிப்பிக் கின்றவராய் அதனை அங்கீகரித்தார். சித்தாந்தத் தன்மையாலோ அன்றும் என அதன் உபபாதனத்தை முடிக்கின்றார்.:—

**अतोऽनपोद्यैव तु तत्त्वसंविदुत्पादनेऽध्यक्षमितेः पुरस्तात् ।**
**सामर्थ्यमक्षादिविरोधमस्य निवारयामास समन्वयस्य ॥ ९४ ॥**

अतः—ஆதலால் இங்ஙனம் பரிணம வாதத்திற்கு ஈண்டு உபகாரித் தன்மையாமோ அதனால்

पुरस्तात्—தனது சித்தாந்தத்திற்கு முன்பு

अध्यक्षमितेः—பிரத்யக்ஷாதி பிரமாணத்தின்

तत्त्वसंविदुत्पादने—தத்வ ஞானத்தை உண்டுபண்ணுவதில்

सामर्थ्यम्—ஆற்றலை

अनपोद्य एव—நீக்காமலேயே

अस्य समन्वयस्य—இந்த வேதாந்த வாக்கியத்திற்கு

अक्षादिविरोधम्-பிரத்யக்ஷாதி விரோதத்தினை

निवारयामास-வியாசமுனி நிவர்த்தி செய்தனர். (94)

(அ) மேலும் உத்தர அதிகரணத்தில் காரியத்திற்கு காரணத்தில் நின்றும் வாஸ்தவமாக பேத அபாவத்தின் கண் வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் என்பது முதலிய சுருதியினை ஏதுவாகக் கூறுகின்றவராய், காரியத்தின் மித்தியாத்துவத்திற்கு பிராமாணிகத் தன்மையை தெரிசிப்பிக்கின்றார். ஆதலின் விவர்த்த வாதத்தினையே சூத்திரக்காரர் சித்தாந்தத் தன்மையாக அங்கீகரித்தனர். பிரத்யக்ஷாதி பிரமாணத்திற்கு தத்துவத்தை யறிவிக்குந் தன்மையை அங்கீகரித்திலர் என அங்கீகரித்ததை அந்த வியாசமுனி தியாகஞ் செய்கின்றார் என்னுங் கருத்தால் கூறுகின்றார்:—

इहाधुनारम्भणशब्दशक्तिं संश्रित्य तत्त्वावगतिक्षमत्वम् ।
अक्षादिमानस्य निराकरोति समन्वयस्यापनयन् विरोधम् ॥ ९५ ॥

इह-ததனன்யத்துவம் ஆரம்பண சப்தாதிகளால் என்னும் உத்தராதி கரணத்தின் கண்

अधुना-சிஷ்யனுக்கு முற்கூறிய விசேஷாதிகளால் பரிணாமத்திற்கு அசாதுத் தன்மையின் அனுசந்தானம் உண்டாகும்போது

आरम्भण शब्दशक्ति-வாசாரம்பணம் விகாரம் என்பதாதி வாக்கியத்திலுள்ள ஆரம்பணாதி சக்தியினை

संश्रित्य-ஆசிரயித்து

अक्षादिमानस्य-பிரத்தியக்ஷாதி பிரமாணத்திற்கு

समन्वयस्य-வேதாந்த வாக்கியத்தின்

विरोधम्-விரோதத்தினை

अपनयन्-நீக்குகின்றவராய்

तत्त्वावगति क्षमत्वम्-தத்துவத்தை அறிவிக்கும் சாமர்த்தியத்தினை

निराकरोति-வியாசமுனி நீக்குகின்றார்

வாசாரம்பணம் என்பதாதி வாக்கியம் காரியம் நாமமாத்திரமாம் எனகடபடாதி காரியத்திற்கு சப்தமாத்திரத்தன்மையை தெரிசிப்பிக்கின்றதாய் கடபடாதி காரியத்தின் சத்தையை நிவர்த்தி செய்கின்றது.

இதனாலேயே மிருத்திகையே ஸத்யம் என்னும் ஏ-காரத்தால் காரியத்தின் அசத்தியத்தன்மையை அனுவாதம் செய்து காரண மாத்திரத்திற்கு சத்தியத்தன்மையின் கருத்தால், மிருத்யு சத்தியமென்று கூறப்பட்டது.

இதன் வலிமையால் பிரத்யக்ஷாதி பிரமாணத்திற்கு வேதாந்த வாக்கியத்தின் விரோதத்தை நீக்குகின்றவராய் தத்துவத்தை அறிவிக்கும் சாமார்த்தியத்தினை, நிராகரிக்கின்றார். ஆதலின் விவர்த்தவாதமே பிராமணிகமாம் என்பது கருத்து. (95)

(அ) அற்றேல் பரிணாமவாதத்தை அங்கீகரிப்பினும் வேதாந்த வாக்கியத்தின் விரோத பரிகாரம் சித்திக்கும் ஆதலால், விரோத நீக்கத்தின் பொருட்டு, விவர்த்தவாதத்தை ஆசிரயித்தல் எற்றிற்கு எனின் வாஸ்தவந்தான். அந்நியனாலங்கீகரிக்கப்பட்ட பிரபஞ்சத்தோடு கூடிய அத்வய சமன்வயத்திற்கு பரிணாமவாதத்தை ஆசிரயித்தலால் பிரத்தியக்ஷாதியின் விரோதம் பரிகரிக்கத்தகும். தனது சம்மதமான அகண்ட அத்வய சமன்வயத்திற்கு விரோதம் பரிகரிக்கத்தகாது என சுருதியாதிகளுக்குச் சம்பதமான சமன்வய விசேஷத்தை தெரிசிப்பிக்கின்றவராய்க் கூறுகின்றார்:—

**अखण्डवाक्यार्थमनुव्रजन्ती समन्वयोत्थापितबुद्धिवृत्तिः ।**
**अक्षादिभिस्तत्वनिवेदने हि सद्यः परिम्लायति निर्विशंकम् ॥ ९६ ॥**

**अखण्डवाक्यार्थम्**-அகண்ட வாக்கியார்த்தத்தினை
**निर्विशंकम्**-சகல சந்தேகங்களுமின்றி
**अनुव्रजन्ती**-விஷயஞ் செய்கின்றதாய்
**समन्वयोत्थापित**-வேதாந்த வாக்கியத்தாலுண்டானதாயுள்ள
**बुद्धिवृत्तिः**-அந்தக்கரணத்தின் விருத்தியானது
**अक्षादिभिः**-பிரத்தியக்ஷாதி பிரமாணங்களால்
**तत्वनिवेदने हि**-தத்துவத்தை யறிவிக்குங் காலத்து
**सद्यः परिम्लायति**-உடனே பாதமாகும்

ஆதலால் அதன் பாதத்தை பரிகரித்தற் பொருட்டு பிரத்தியக்ஷாதி பிரமாணங்களின் விஷயத்திற்கு மித்தியாத்துவத்தை உத்தர அதிகரணத்தின் கண் தெரிசிப்பிக்கின்றார் என்பது பொருள். (96)

(அ) அற்றேல் வேதாந்த வாக்கியத்திற்கும் பிரத்தியக்ஷாதிகட்கும், பிராமாணியத்தை அனுசரித்து சவிசேஷமாகவே அத்வயம் ஏன் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை. எனின் அற்றன்று. மித்தியாத்தன்மையால் சுருதியால் கூறப்பட்ட விகாரம் முதலிய விசேஷத்திற்கு சுருதியின் தாத்பரிய விஷயத்தன்மை பொருந்தாமையின், மேலும் ஏகம். ஏவ அத்விதீயம், அக்கினியின் அக்கினித்தன்மை நீங்கிற்று. ஈண்டு நானு வானவை சிறிதுமில்லை. என்பது முதலிய சுருதி வசனங்களாலும். பிரகிருத ஏதாவத்வம் ஹி பிரதிஷேததி—என்பது முதலிய சூத்திரங்களாலும். அவற்றினை வியாக்கியானம் செய்கின்ற பாஷ்யக்காரர் முதலானோரது வாக்கியங்களாலும். நிர்விசேஷ அகண்ட வஸ்துவில் சுருதிக்கு தாத்பரியத்தினை அங்கீகரிக்கத் தக்கதாதலின் என்னுங் கருத்தால் முதலத்தியாயத்தில் கூறப்பட்டதனை நினைப்பூட்டுகின்றவராய்க் கூறுகின்றார்:—

**अखण्डमेवाद्वयमात्मतत्वं त्रयीशिरोवाक्यमनुप्रविष्टाः ।**
**वदन्ति शब्दा इति शब्दशक्ति निरूपणे पूर्वमुदीरितं हि ॥ ९७ ॥**

**त्रयीशिरोवाक्यम्**—தத்துவமசி முதலிய வேதாந்த வாக்கியத்தோடு

**अनुप्रविष्टाः** அபேதத்தன்மையினை அடைந்துள்ள

**शब्दाः**—சத்தியம் ஞானம் ஆனந்தம் முதலிய சப்தங்கள்

**अखण्डमेव अद्वयम्**—நிர்விசேஷ அகண்ட அத்வைதமாகவே

**आत्मतत्त्वम्**—ஆத்ம தத்துவத்தை

**वदन्ति इति**—பிரதி பாதிக்கின்றன என்று

**पूर्वम्**—முதலாவது அததியாயததில்

**शब्दशक्ति निरूपणे** – சப்தங்களின் சக்தியை நிரூபிக்குங் காலத்தில

**उदीरितं हि**-கூறப்பட்டுளளது ஆதலின். நிரூபிக்கப்பட்டது என்பது பொருள். (97)

(அ) முதல் அத்தியாயத்தில் அங்ஙனம் நிரூபித்தலால் யாது சித்தித்தது என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்.:—

**अतो विरोधस्य निरासमिद्धयै निरस्यतेऽक्षादिषु तत्त्वभागः ।**
**संरक्ष्यते संव्यवहारशक्ति भागः पुनः सर्वमतोऽनवद्यम् ॥ ९८ ॥**

தாயினும் இராகாதிகட்கு அதன் (சமுசாரத்தின் அல்லது மித்தியா ஞானத்தின்) வியாப்பியத் தன்மையிருத்தலினல். அப்படியே பிரம்மஹத்தி முதலிய அநேக பாதகாதியாற் சன்னிய நாநாப்பிரகாரமான யாதனைகளோடு கூடியதும் அதி சீக்கிரமாக நாசமாகின்ற சுகத்தோடு கூடியதுமாம். இத்தகைய இச்சமுசாரம் அவிவேகிகளால் ஆதரிக்கப்படினும் திருடதரமான மோக்ஷ இச்சையோடு கூடிய புருடனுக்கு அதன் நாசத்தின் பொருட்டு ஞானத்தைத் தேடுதலே யுசிதமாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

रागद्वेषप्रशाखं विषयगुणसमुद्भासि धीवृत्तिशाखं
धर्माधर्मप्रवृत्ति प्रचुरसुखसमुद्वेगभोगप्रवालम् ।
छिन्द्याः संसारवृक्षं निशितमतिमहाशस्त्रनिक्षेपदक्षः
प्रत्यक्तत्त्वस्थलीगं निबिडतमतमोमूललब्धप्ररोहम् ॥

रागद्वेषप्रशाखम् – இராகத்துவேஷங்களாகிற பெரிய கிளைகள் உள்ளதும்

विषयगुणसमुद्भासि-धीवृत्तिशाखम् – சத்தாதி விஷயங்களில் இஷ்டாநிஷ்ட சாதன வடிவ குணங்களை விஷயஞ் செய்கின்ற புத்தி விருத்திகளை சிறிய கிளைகளாகவுடையதும்

धर्माधर्मप्रवृत्तिप्रचुर सुखसमुद्वेग भोग प्रवालम् – தருமாதரும வடிவப் பிரவிருத்திகளால் உண்டான மிகுந்த சுகதுக்க போகங்களாகிற தளிர்களையுடையதும்

प्रत्यक्तत्त्वस्थलीगम् – பிரத்யகான்மாவாகிற அதிஷ்டானத்தின் கண் அத்தியஸ்தமானதும்

निबिडतमतमोमूल लब्धप्ररोहम् – நிபிடதம அஞ்ஞானமாகிய மூலத்தினின்றும் அங்குரபாவத்தையடைந்துள்ளதுமான

संसारवृक्षम् – இந்தச் சமுசாரமாகிற விருக்ஷத்தை

निशितमतिमहाशस्त्र निक्षेपदक्षः – நிஸ்சலமான பிரம்மான்ம சாக்ஷாற்கார மாகிய மகத்தான சஸ்திரத்தையெறிவதன்கண் குசல புருடன்

छिन्द्याः – வெட்டியழிக்குக.

அநுகூல பதார்த்தங்களில் விருப்பு இராகமாம். பிரதிகூல பதார்த்தங்களில் வெறுப்பு துவேஷமாம். இச்சம்சார விருக்ஷத்திற்கு இராகத்துவேஷங்கள் அடிக்கிளைகளாம் சத்தாதி விஷயங்களில் இஷ்டா நிஷ்ட சாதனத் தன்மையை விஷயஞ் செய்கின்ற புத்தி விருத்திகள் மேற்கிளைகளாம். கூறிய அடிக்கிளை மேற்கிளைகளின் பயனைக் கூறுகின்றார் தருமாதருமமென. தருமாதரும வடிவ எப்பிரவிருத்திகளுள்ளனவோ (இது அதரும அநிவிருத்திக்கும் உபலக்ஷணமாம்) அவற்றாலுண்டாயவை பிரசுர சுக துக்க போகங்கள் (இதுவும் நிவிருத்தி சாத்திய துக்காபாவத்திற்கு உபலக்ஷணமாம். அவைகள்) பல்லவங்களாம், பல்லவக் கிரகணத்தால் சமுசார போகத்திற்கு அத்தியந்தம் அதிருடத் தன்மையைத் தெரிசிப்பிக்கிறார். அல்லது தருமா தருமங்களால் பிரவிருத்தி=விருத்தி. எச்சமுசாரத்திற்கோ அது பிரசுரா= எண்ணிக்கையற்ற, அதாவது அளவில்லாத, சுகதுக்காநுபவங்கள் பல்லவங்கள்=இலைகள். எதற்கோ அது தருமா தருமத்தால் பிரவிருத்தியினையுடையதும் பிரசுர சுகதுக்காநுபவங்களாகிற பத்திரங்களையுடையதும் எனப்பொருள் விரியும். வெட்டுக என்பதனால் சூசிப்பிக்கப் பட்ட வெட்டுதற்கருத்தாவை விசேஷிக்கின்றார் நிஸ்சலமான என. சமுசய விபர்யயமற்ற பிரம்மான்ம சாக்ஷாற்காரமே மகத்தான பாசுபதாஸ்திரத்துக்குச் சமானமான சஸ்திரமாம்=சேதிப்பதில் சாதனமாம் அதனது நிக்ஷேபத்தின்கண்=எறிதலின்கண் சமர்த்தனாகிய நீ வெட்டுக. சமுசாரத்திற்கு பிரம்மான்ம சாக்ஷாத்காரத்தால் நிவர்த்தி சித்தித்தற் பொருட்டு அதனை விசேஷிக்கின்றார் பிரத்தியகான்மா என. [ஞான நிவர்த்தியத்தன்மை மாத்திரத்தில் ஏதுவினைக் கூறுகின்றார்.] நிபிடதம அஞ்ஞானமென, அநாதிகால அநேக வாசனைகளாற் கட்டப்பட்டிருத்தலின் நிபிடதமமாம்=மிக கெட்டியானது. மகத்தாகிய வேர் தமம்—ஆவரண விக்ஷேப சக்திகளையுடைய அஞ்ஞானமாகிய அவ்வேரே மூலம்—ஆதாரமாம். அதினின்று அங்குரம் எதற்கோ அது. இவ்விசேஷணத்தால் ஞானமில்லாத வழி அதற்கு அநுச்சேத்தியத்தன்மை தெரிசிப்பிக்கப் பட்டது. ஈண்டு விருக்ஷ வுருவகாலங்காரத்தால் சமுசாரத்தை வருணித்தலால் வேரை வெட்டியொழித்த வழி விருக்ஷம் போன்று தனது மூலமான அவித்தையுச்சேதமாகும்போது சமுசாரம் அழிந்துபோம் என தெரிசிப்பிக்கப்பட்டது. அநுச்சேத்தியம்—வெட்டத்தகாதது. (126)

(அ) அற்றேல் "मायां तु प्रकृतिं विद्यात्" மாயையைப் பிரகிருதியென அறியவேண்டும் என்பது முதலிய சுருதியால் மாயையே சமுசாரத்தின் காரணமாக சித்தித்தது அஞ்ஞானமன்றும் ஆதலின் அதற்கு ஞான நிவர்த்தியத் தன்மை எங்ஙனமாமென்னுஞ் சங்கைக்கு மாயை அஞ்ஞானங்களுக்கு அபேதம் மூன்றாவது அத்தியாயத்தின்கண் கூறப்படுவதால் அவைகட்குப் பேதமின்றும். இவ்வாறுகவே எப்படி அஞ்ஞானமே தமம் காரணம் என்பது முதலிய சத்தங்களால் சொல்லப் படுகின்றதோ அப்படி மாயை சத்தத்தாலும் சொல்லப்படுகின்றது ஆதலின் அதற்கு ஞான நிவர்த்தியத்தன்மையின் அநுபபத்தியின்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றார் :—

प्रत्यग्वस्तुन एव तत्र विषये माया तमः कारणं
ध्वान्तं बीजमबोध इत्यपि गिराऽविद्यैव संकीर्त्यते ।
तस्या एव विलास एष भवता गुर्वादिभेदान्वितः
संक्लृप्तो न तु विद्यते पृथगसौ संध्ये यथा धामनि ॥

प्रत्यग्वस्तुनः एव – ஆன்ம தத்துவத்தின் சம்பந்தியும், அதாவது பிரத்தியக் சைதன்னியத்தை யாசிரயித்ததும்

तत्र विषये – பிரத்தியக் வஸ்துவாகிற விஷயத்தின்கண் அதாவது பிரத்தியகான்மாவையே விஷயஞ் செய்வதுமான

अविद्या एव – யாதொரு அவித்தையுண்டோ அதுவே

माया तमः कारणम् – மாயை, தமம், காரணம்

ध्वान्तं बीजम् अबोधः- துவாந்தம், பீஜம், அஞ்ஞானம்

इत्यपि गिरा – என்னும் சத்தங்களால்

संकीर्त्यते – சொல்லப்படுகின்றது

பேதப் பிரபஞ்சத்திற்கு அஞ்ஞான வடிவ மாயையின் காரியத் தன்மை சித்தித்த வழி ஆன்மாவிற்கும் நாநாத் தன்மை பொருந்தாமை யின் அதன் அத்துவிதீயத் தன்மையும் சித்திக்கும் என்னுங் கருத்தால் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்.

तस्या एव – அவ் அவித்தையினதே

**एषः विलासः** – காரியமாகிய இப்பிரபஞ்சம்

**गुर्वादिभेदान्वितः** – குரு சிஷ்யன் என்பது முதலிய பேதத்தோடு கூடியதாக

**भवता** – அவித்தையினையுடைய உன்னால்

**संकल्पितः** – அத்தியாசஞ்செய்யப்பட்டது

**असौ** – ஆதலால் இப்பிரபஞ்சம்

**पृथक्** – ஆன்மாவினின்றும் அன்னியமாக

**नतु विद्यते** – இன்றும்

**यथा** – எப்படி

**संध्ये धामनि** – சொப்பனுவஸ்தையின்கண் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சம் ஆன்மாவினுமன்னியமின்றே அதுபோன்று

சந்தியமென்பது சொப்பனத்திற்காம். "சந்தியம் சொப்பன ஸ்தானம்" என்னுஞ் சுருதியினுல், எப்படி சொப்பனுவஸ்தையின்கண் தூங்குகின்ற புருடனுல் காணப்பட்ட சேதனு சேதனுன்மகப் பிரபஞ்சம் அவனினின்று மன்னியமின்றே எழுந்தபின்பு காணப்படாமையின் சத்வஸ்துவிற்கு மற்றோர் சமயத்தில் அதரிசனமுண்டாகின்றதில்லை யாதலின் இவ்வாறு குரு முதலிய பிரபஞ்சமும் ஆன்மாவினும பின்ன மன்றும் என்பது பொருள். ஈண்டு இவ்வநுமானம் சித்தித்தது—

விவாத விஷயமான சமுசாரம், அவித்தையாற் கற்பிதமாம், அவித்தையோடு கூடிய காலத்திலேயே பாவிக்கப்படுகின்றபடியால், சொப்பனம் போன்று என. (127)

## பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையை நிருபித்தல்

(அ) அற்றைல் நித்திரை முதலிய தோஷத்தாற் றேன்றிய சொப்பனத்திற்கு அவித்தையினுல் அத்தியஸ்தத் தன்மையினுல அதனைக் காண்பவனைப் பார்க்கிலும் வேறுக அசத்துவம் பொருத்தமாம். அதனேடு சாக்கிரப் பிரபஞ்சத்திற்கு சமத்தன்மை எவ்வாறு கூடும். இதனுலேயே "**वैधर्म्याच्च न स्वप्नादिवत्**" (விருத்த தருமமுடைமை யின் சாக்கிரப் பிரபஞ்சம் சொப்பனுதி போன்று அன்றும்) என

சொப்பனத்தினும் விஷமத்தன்மையினை சூத்திரக்காரர் கூறுகின்றார் என்னுஞ் சங்கைக்கு பிரமாதாவிருக்கும்போது பாதாபாதங்களால் சொப்பன சாக்கிரங்களுக்கு விலக்ஷணத் தன்மையிருப்பினும் அத்தியஸ்தத் தன்மையால் மூன்று காலத்திலும் அசத்துத்தன்மையின்கண் யாதொரு விசேஷமுமின்றும் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

मुक्तामुक्तौ विद्वदज्ञौ त्वदन्या-
वाकाशादिक्ष्माऽवसानं च विश्वम् ।
स्वाविद्योत्थस्वान्तनिष्पन्दनं तत्
विज्ञातव्यं माग्रहीरन्यथैतत् ॥ १२८ ॥

**मुक्तामुक्तौ** – சுகர் முதலான முக்த புருஷர், சைத்திரன் முதலான பத்த புருஷர்

**विद्वदज्ञौ** – குரு முதலான ஞானி புருஷர், தேவதத்தன் முதலிய அஞ்ஞ புருஷர் ஆகிய

**त्वदन्यौ** – உன்னினுமன்னிய இச்சேதனப் பிரபஞ்சமும்

**आकाशादि** – ஆகாசம் முதலாக

**क्ष्माऽवसानं च** – பிருதிவீ பரியந்தமான

**विश्वम् तत्** – அசேதனப் பிரபஞ்சமுமாகிய ஈதனைத்தும்

**स्वाविद्योत्थस्वान्त निष्पन्दनम्** – தனது அஞ்ஞானத்தாலுண்டான யாதொரு அந்தக்கரணமுண்டோ அதன் கண்ணுள்ள வாசனையை நிமித்தமாகவுடைமையின் அதன் சேஷ்டை மாத்திரமாம்.

அல்லது அவித்தையின் காரிய அந்தக்கரணத்தின் பரிணாமமாமென.

**विज्ञातव्यम्** – அறியத்தக்கது

**अन्यथा** – சொப்பன விலக்ஷணத் தன்மையினால் சத்தியமாக

**एतत्** – இவற்றை

**मा ग्रहीः** – அறியாதே.

இந்தப்பிரகாரம் தள்ளத்தக்க சமுசாரமாகியப் பிரபஞ்சத்தினை அவித்தையினாற் கற்பிதமாமென்று நிருபித்து முன்னர் விபர்த்த திருஷ்டிக்கு ஏகசீவ விஷயமாகவும், அநேக சீவ விஷயமாகவும் யாதொரு இருவிதத் தன்மை கூறப்பட்டதோ அதன்கண் சுகர் முத்தர், நாம் முதலானோர் முத்தரனறு என வைதிக லௌகிக வியவகாரத்தை யநுசரித்து சீவர்களின் நாநாத்துவமே யுசிதமாமென்னுஞ் சங்கைக்கு சீவர்களின் நாநாததுவம திருஷ்டி மாத்திரமாம், சொப்பனம் போன்று. வாஸ்தவமாகவாவது வியாவகாரிகமாகவாவது சீவபேதமின்றும். அஃதெப் படியெனின் அவித்தையின்கண் பிரதிபிம்பித்த சைதன்யம் சீவனும், அவித்தையும் இலாகவத்தால் அநுக்ரஹிக்கப்பட்ட அஜாம் ஏகாம் என்பது முதலிய சுருதியினாலும் அதனநுபவத்தாலும் அதன் பேதத்தினகண் பிரமாணமின்மையாலும் ஒன்றாகவே சித்திக்கிறது. ஆதலின் சீவன் ஒருவனேயாவன. அவனும அவித்தையின் காரிய அநேக அந்தக் கரணவச்சேதத்தால் அநேக வடிவ பிரமாதிருத்தன்மை, கருத்திருத் தன்மை, போக்திருத்தன்மைகளை யடைகின்றான். ஆதலால் இலௌகிக வைதிக வியவகாரமனைத்தும் யோக்கியமாக ஓர் சீவனிடத்தும் பொருத்தயேயாம். ஆதலின் அநந்தசீவர்களின் கற்பனை பொருத்த மன்றும். அன்னியதாசித்தி சூனிய பிரமாணமின்மையினாலும் கௌரவ மாதலாலும் என்க.

ஏகஜீவ வாதத்தின்கண்ணும் பிரஸித்த வியவஸ்தித வியவகாரததையனுசரித்து கற்பிக்கப்படுகின்ற அந்தக்கரணத்தின் நாநாத் தன்மையும லோஹசுந்தித் தன்மையினை (தோஷத்தை) வகிக் கின்றதில்லையென்னுங் கருத்தாற் கூறுகின்றார் முத்த புருஷர் என. (128)

(அ) இவ்வாறாயினும் முக்தன், அமுக்தன் என்பதாதி விய வஸ்தை யெப்படி சித்திக்கும். அவனது ஏக அஞ்ஞானம் நிவிருத்தி யாகும்போது பந்தம் சம்பவிக்கின்றதில்லை யாதலின் சென்ற முற்காலங் களில் ஒருவனும் முக்தனன்றும் என்று கூறுவதற்கும் முடியாது. இங்ஙனம் எதிர் காலத்திலும் முக்தன் அமுக்தன் என்னும் பேதமிருக்கும் ஆதலின் சீவன் ஏகன் அன்றும் என்னும் சங்கையை அநுவாதஞ் செய்து திருஷ்டாந்தத்தால் நிராகரிக்கின்றார் :—

कालोऽतीतोऽनादिरेष्यन्ननन्तो
मुक्तामुक्तौ तत्र पूर्वं तथोर्ध्वम् ।
तस्मादेतद्दुर्घटं शङ्कसे चेत्
माशङ्किष्ठाः स्वप्नदृष्टान्तदृष्टेः ॥ १२९ ॥

**अतीतः कालः**- சென்ற காலம்

**अनादिः**- அநாதியாம்

**एष्यन्** - எதிர்காலமும்

**अनन्तः**- அநந்தமாம்

**तत्र**-அக்காலங்களில்

**पूर्वम्** - பூருவ காலத்திலும்

**तथा ऊर्ध्वम्** - அப்படியே உத்தரகாலத்திலும் யாண்டும்

**मुक्तामुक्तौ** - முக்தரும் அமுக்தரும் பிரசித்தராம்

**तस्मात्** - யாதொரு காரணத்தால் இப்பொருள் பிராமாணிகமோ அக்காரணத்தால்

**एतद्** - என்னல் கூறப்பட்ட ஏகசீவவாதம்

**दुर्घटम्** - பொருத்தமற்றதென

**शङ्कसे चेत्** - சங்கிப்பாயாயின் இது அநுவாதம். இனி உத்தரம்.

**माशङ्किष्ठाः** - இவ்வாறு சங்கை செய்யாதே

உலகப்பிரசித்தி பிராந்திமாத்திரமாதலினலும் அவ்வுலகப் பிரசித்தியை யநுவாதஞ் செய்தலாலும் சுருதி முதலானவற்றிற்கு விரோதமின்ருமெனக் கூறுகின்ருர்.

**स्वप्नदृष्टान्तदृष्टेः**-சொப்பன திருஷ்டாந்தத்தின்கண் காண்டலின்

அதாவது அவித்தை மாத்திரத்தின் விவர்த்தமான சொப்பனத்திற் போன்று பொய்ப் பொருளிற்றும் வியவகார விஷயத்தன்மை பொருந்து தலின் பொருந்தாமையின்ருமென்பது கருத்து. (129)

(அ) திருஷ்டாந்தத்தை விஸ்தரிக்கின்றவராய் தார்ஷ்டாந்தத்தின் கண்ணும் அதனைக் காண்பிக்கின்ருர் ;—

सुप्तो जन्तुः स्वल्पमात्रेऽपि काले कोटीः पश्येद्वृत्तसंवत्सराणाम् ।
पश्येत्कोटीरेवमागामिनां च जाग्रत्काले योजयेत्सर्वमेतत् ॥ १३० ॥

सुप्तो जन्तुः-நித்திரையினையடைந்துள்ள பிராணி
स्वल्पमात्रेऽपि काले-சொற்பகாலத்தின் கண்ணும்
वृत्तसंवत्सराणां कोटीः-சென்ற அநேக வருடங்களை
पश्येत्-பார்க்கின்றது.
एवम्-அப்படியே
आगामिनां च कोटीः-எதிர்கால அநேக வருடங்களையும்
पश्येत्-பார்க்கின்றது. ( அதுபோல )
जाग्रत्काले-சாக்கிரகாலத்தின் கண்
एतत्सर्वम्-இவ்வெல்லாவற்றையும்
योजयेत्-பொருத்தவேண்டும். (130)

(அ) தார்ஷ்டாந்தத்தினையும் விஸ்தரிக்கின்றார் ;—

कालोऽनादिस्तत्र मुक्तः शुकादिः
कालोऽनन्तो मोक्ष्यते तत्र चान्यः ।
इत्येवं ते बन्धमोक्षव्यवस्था
संसिद्धिः स्यादापरात्मप्रबोधात् ॥ १३१ ॥

कालः अनादिः-சென்ற காலம் ஆதியின்றியதாம்
तत्र शुकादिः அதன்கண் சுகர் முதலானோர்
मुक्तः- மோக்ஷத்தினையடைந்துளார்
कालः अनन्तः-எதிர்காலம் அளவின்றியதாம்
तत्र च अन्यः-அதன்கண் ஏனையோர்
मोक्ष्यते - மோக்ஷத்தினையடைவார்கள்
इत्येवम् ते-என்றிந்தப்பிரகாரம் உனக்கு
आपरात्मप्रबोधात्-பிரம்மான்ம ஐக்கிய சாக்ஷாற்கார பரியந்தம்

**बंधमोक्षव्यवस्था संसिद्धिः स्यात्**-பந்தமோக்ஷ வியவஸ்தையின் சித்தியுண்டாம்,

ஆன்மாவினேகத்துவத்தை அறியாமையினல் சொப்பனத்திற் போன்று முக்தன் அமுக்தன் என்பது முதலிய பேதவியவஹாரம் அஞ்ஞர்களுக்கு சித்திக்கின்றது. விவேகிகட்கோ கூறிய நியாயத்தால் சீவனது ஏகத்தன்மையே பொருத்தமாமென்பது கருத்து. (131)

(அ) இந்தப்பிரகாரம் தனது சம்மதமான சீவனது ஏகத்தன்மையினைக்கூறி அதன்கண் மதாந்தரங்களைத் தெரிசிப்பிக்கின்றவராய் முதலில பிரம்மத்தின் பிரதிபிம்பரான அனந்தசீவர்களுக்கு ஆசிரயமும் பிம்பவடிவ பிரம்மத்தை விஷயஞ்செய்வதும் சருவப்பிரபஞ்ச பிராந்தியின் உற்பத்தியில் காரணமுமான அஞ்ஞானமொன்றேயாம். அநேக பிண்டங்களில் அதாவது கோ முதலிய வியத்திகளில் ஆசிரயித்துள்ள கோத்தன்மை முதலிய ஜாதி போன்று. அவ்வஞ்ஞானமும் பிரம்ம சாக்ஷாற்காரமுள்ள புருடனை விட்டுவிடுகின்றது. "**जहात्येनां भुक्त-भोगाम्**" (எந்த மாயையினல் சருவபோகமும் அநுபவிக்கப்பட்டதோ அதனையறிஞன் விட்டுவிடுகின்றான்) என்னுஞ் சுருதியினல். ஞானமின்றிய அஞ்ஞபுருடனை சேவிக்கின்றது. "**जुषमाणोऽनुशेते**" (அஞ்ஞபுருடன் மாயையை சேவிக்கின்றவனுய்ப் பின்தொடருகிறான்) என்னுஞ் சுருதியினல். எப்படி கோத்துவம் முதலிய சாதி இப்போது நாசத்தினையடைந்த தனது வியத்தியினை விட்டு நாசமின்றியிருக்கின்ற வியத்தியினையாசிரயிக்கின்றதோ அதுபோன்று என பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையை எவர் கூறுகின்றனரோ அவர் மதத்தைக் கூறுகின்றார்:—

**अज्ञानं सकलभ्रमोद्भवनकृत् पिण्डेषु सामान्यवत्**
**जीवानां प्रतिबिम्बकल्पवपुषां बिम्बोपमे ब्रह्मणि ।**
**विद्वांसं पुरुषं जहाति भजते विद्याविहीनं नरं**
**नष्टानष्टमिवात्मपिण्डमधुना जातिस्तथैके जगुः ॥ १३२ ॥**

**प्रतिबिम्बकल्पवपुषाम्** - ஜலம் முதலியவற்றில் சூரியாதிகளின் பிரதிபிம்பம் போன்ற வடிவமுள்ள

**जीवानाम्**-சீவர்களை சம்பந்தித்திருப்பதும்

**बिम्बोपमे**-சூரியாதி பிம்பம் போன்ற

**ब्रह्मणि**- பிரம்மத்தினை விஷயஞ்செய்வதும்

**सकलभ्रमोद्भवनकृत्**- சருவத்தையும் பிரபஞ்சத்தினையுண்டாக்குவதுமாகிய

**अज्ञानम्**-அஞ்ஞானமானது

**पिण्डेषु**-பசு முதலிய வியத்திகளில்

**सामान्यवत्**-பசுத்தன்மை முதலிய ஜாதி ஏகமாவது போன்று ஏகமாம்

**अधुना**-வியவகார காலத்தில்

**जातिः**-பசுத்தன்மை முதலிய ஜாதி

**नष्टानष्टम् आत्मपिण्डमिव**-நாசமடைந்த தனது வியத்தியினை விட்டு நாசமடையாத வியத்தியின் கண் இருப்பது போன்று

**विद्वांसं पुरुषम्**-ஆன்ம சாக்ஷாத்காரமுள்ள புருடனை

**जहाति**-அஞ்ஞானம் பரித்யாகஞ் செய்கின்றது

**विद्याविहीनं नरम्**-சாக்ஷாத்காரமின்றிய மனிதனை

**भजते**-ஸேவிக்கின்றது. அதாவது பற்றி நிற்கின்றது.

**तथा**-என்றிவ்வண்ணம்

**एके जगुः**-சிலர் கூறுகின்றனர். (132)

(அ) மேற்கூறிய மதம் பொருத்தமின்றியதாம். ஓர் அஞ்ஞானத்தின்கண் ஒரு பிரம்மத்திற்கு அநேகப் பிரதிபிம்பங்கள் சம்பவிக்கின்றதில்லையன்றோ. உலகின்கண் அவ்வாறு காணப்படாமையின், அஞ்ஞானமிருக்கும்போது அதன் பிரதிபிம்பங்களுக்கு பிரதிபிம்பத் தன்மையின் நீக்கம் சம்பவிக்கிறதில்லையாதலின் மோக்ஷம் பொருந்துவதின்றாம். அஞ்ஞானத்தின் சமான விஷயஞானம் அதனை நிவர்த்திசெய்கின்றதில்லை என்பது பொருத்தமன்றாம். ஏதனால் இப்போது அஞ்ஞபுருடர்களுக்குச் சமுசாரம் சம்பவிக்கும். அன்றேல் அதாவது சமான விஷயக ஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவர்த்தியை அங்கீகரியாவிடின் அஞ்ஞானத்திற்கு நிவர்த்தி ஒருபோதும் சம்பவியாது.

திருஷ்டாந்தமாத்திரத்தால் அற்பமும் சித்திக்கின்றதில்லையன்றோ என்னுமருசியால் அநேக அஞ்ஞானத்தையாசிரயித்து பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையைச் செய்கின்ற வேறு மதத்தினைக் கூறுகின்றார்.

अज्ञानानि बहून्यसंख्यवपुषो जीवान् मुमुक्षूनपि
ज्ञानाज्ञानसमाश्रयाननुयुगं तेषां च निश्रेयसम् ।
मायामीश्वरसंश्रयामनुगमात् संसारसंवर्त्तिनीं
केचिद्दैवविघातनिघ्नमनसः स्वीचक्रुरल्पश्रुताः ॥ १३३ ॥

दैवविघातनिघ्नमनसः--துரதிருஷ்டத்தாற் செய்யப்பெற்ற பிரதிபந்தத்தால வசம் பண்ணப்பட்ட மனதுடையவரும்

अल्पश्रुताः–சொற்ப சிரவணமுடையவருமான

केचित्–சிலர்

वहूनि अज्ञानानि–ஆத்யான்மிகப் பிரமாதிருத்துவ கர்த்திருத்வ சுகதுக்காதி ஜனக அநேக அஞ்ஞானங்களை

स्वीचक्रुः–அங்கீகரித்தனர்.

இந்தப் பக்ஷத்தில் ஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவிருத்திப் பிரசித்தி பாதிக்கப்படுகின்றதில்லை. அஞ்ஞானத்தின் சமானாசிரய விஷயக ஞானத்தால் உலகின் கண்ணும் அஞ்ஞானத்தின நிவர்த்தி காணப்பட்டமையின் என்பது பொருள்.

मुमुक्षून्–மோக்ஷ இச்சையுடையவரும்

ज्ञानाज्ञानसमाश्रयान् - ஞான முடையவரும் அஞ்ஞானமுடையவருமான

जीवान् अपि–சீவர்களையும்

असंख्यवपुषः–அளவின்றிய வடிவினராமென

स्वीचक्रुः - அங்கீகரித்தனர்.

अनुयुगम्–யுகந்தோறும்

तेषाम्– அச்சீவர்கட்கு

निश्रेयसम् च– மோக்ஷத்தினையும்

स्वीचक्रुः–அங்கீகரித்தனர்.

அற்றேல் ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கும் அஞ்ஞான காரியத் தன்மையினையங்கீகரிக்கின் கருத்திருத்துவாதி போன்று சருவசீவ சாதாரணத் தன்மை சித்தியாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றூர்.

**ईश्वरसंश्रयाम्** - ஈசுவரனையாசிரயித்ததும்

**अनुगमात्** - அநுகதத் தன்மையினுல்

**संसारसंवर्तिनीम्** - சமுசாரப் பிரவிருத்தியினைச் செய்வதுமான

**मायाम्** - மாயையினை

**स्वीचक्रुः** - அஞ்ஞானத்தினும் விலக்ஷணமாக அங்கீகரித்தனர்.

சருவப் பிரபஞ்சத்திற்கும் காரணம் அஞ்ஞானத்தினுமன்னியமான மாயையாம். அது ஈசுவரனையாசிரயித்ததாகி சருவ பாஹ்ய காரியத்திற்கு சாதாரண காரணமாமெனவும் அங்கீகரித்தனர். அப்படியே சுருதியும் கூறுகின்றது "**मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम्**" (மாயையைப் பிரகிருதி என அறியவேண்டும். மாயையினுசிரயத்தை மஹேஸ்வரனென அறியவேண்டும்) என.

இந்த மதம் அத்தியந்தம் பொருத்தமின்றியதாம். அஞ்ஞானத்தின் நாநாத் தன்மை முதலியது சம்பவியாமையின் என்று அநுவாத சமயத்தின்கண்ணேயே அந்த மதத்தின் அற்பத் தன்மையை சூசிப்பிக்கின்றவராய்க் கூறுகின்றூர் சிலர் என்பதாதியால்.

அற்பசிரவணமுடையவராதலாலும் அவருடைய அந்த மதம் தோஷமுடையதாம் எனக் கூறுகின்றூர், சொற்ப சிரவணமுடையவரென. (133)

(அ) இந்தப் பிரகாரம் நாநா சீவரையங்கீகரித்த இரண்டு மதத்தாலும் தனக்கு சம்மதமின்றிய பந்தமோக்ஷ வியவஸ்தை தெரிசிப்பிக்கப் பட்டது. இப்போது அதன்கண் அருசியினுல் வேறு மதத்தைக் கூறுகின்றூர் :—

**आकाशे विहगोऽस्ति नास्ति च यथा तद्वत् परब्रह्मणि**
**स्वच्छे चिद्वपुषि स्वभावविमलेऽसङ्गे शिवे शाश्वते।**
**निर्भेदेऽनुदयव्ययेऽनवयवेऽविद्या भवेन्नो भवे-**
**दित्येवं निरवद्यमाहुरपरे पक्षव्यवस्थार्थिनः ॥ १३४ ॥**

**आकाशे**-ஆகாசத்தின்கண்

**विहगोऽस्ति**-பக்ஷி பறக்கின்றது.

**नास्ति च**-பக்ஷி இன்ரும் என

**यथा**-எப்படியறியப்படுகின்றதோ

**तद्वत्**-அப்படி

**स्वच्छे**-நிர்மலமும்

**चिद्वपुषि**-சித்ரூபமும்

**स्वभावविमले**-இயற்கையாகவே நிர்மலமும்

**असङ्गे शिवे**-அசங்கமும் சிவமும்

**शाश्वते निर्भेदे**-சாஸ்வதமும் நிர்ப்பேதமும்

**अनुदयव्यये**-தோற்ற ஒடுக்கமின்றியதும்

**अनवयये**-நிரவயவமுமான

**परब्रह्मणि**-பரப்பிரம்மத்தின் கண்

**अविद्या भवेत्**-அஞ்ஞானமிருக்கும்

**नो भवेत्**-இல்லாமலுமிருக்கும்

**इत्येवम्**-என்றிந்தப்பிரகாரம்

**पक्षव्यवस्थार्थिनः**-முக்தாமுக்த பக்ஷத்தின் வியவஸ்தையை விரும்புகின்ற

**अपरे**-வேறே சிலர்

**निरवद्यम् आहुः**-நிர்தோஷமாகக் கூறுகின்றனர்.

ஆகாசத்தின்கண் பக்ஷி பறக்கின்றது என்று எப்போது ஒருவனுல் அறியப்படுகின்றதோ அப்போதே வேறிடத்தில் மற்ருெருவனுல் ஆகாசத்தன்கண் பக்ஷியின்ரும் என்று அறியப்படுகின்றது. ஆகாசத்திற்கு அவயவ விசேஷமோ இன்ரும் ஆதலின் ஒரே காலத்தில் ஒரே பக்ஷிக்கு ஒரே ஆகாசத்தின்கண் பாவமும் அபாவமும் அங்கீகரிக்கத்தக்கனவாம். இவ்வாறு நிர்மல சைதன்யாதி சுபாவப் பரப்பிரம்மத்தின் கண் ஓர் அவித்தைக்கு பாவமும் அபாவமும் விருத்தமின்ரும் ஆதலின் ஒரே பிரம்மம் அவித்தையினுசிரயமாகி சமுசாரத்திற் சுழலுகின்றது. அப்போதே அதே பிரம்மம் அவித்தையற்றதாகி முக்தமாம் என

முக்தா முக்த வியவஸ்தையினை சுவபக்ஷமாகச் சிலர் கூறினர் என்பது பொருள். பிரம்மத்தின் விசேஷணங்களுக்குப் பொருள் வருமாறு. அன்னியத்தால் செய்யப்பட்ட நிர்மலத் தன்மையினை நிவர்த்தி செய்கின்றார் இயற்கையாக என்பதனுல், அதன்கண் சித்ரூபமென்பது ஏதுவாம். இயற்கையாக நிர்மலத் தன்மையிருப்பினும் ஆகந்துக மலசம்பந்தமிருக்கலாமே என்பதனை நிவர்த்தி செய்கின்றார் அசங்கமென. அதனை சாதிக்கின்றார் சிவமென. நிர்குணமென்பது பொருள் "शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते" (சிவமும் அத்வைதமும் துரியமுமாகக் கருதுகின்றனர்) என்னுஞ் சுருதியினுல் விநாசத்தை நிவர்த்தி செய்கின்றார் சாஸ்வதமென. சாஸ்வதத் தன்மையினை சாதிக்கின்றார் தோற்ற ஒடுக்கமின்றியதென. சருவபதார்த்தத்தின் தோற்ற ஒடுக்கங்கட்குச் சாக்ஷியாதலினுலும அதிஷ்டானமாதலானும் தான் உற்பத்திநாசமின்றியது என்பது பொருள். அங்ஙனமாயினும் அவித்தையின் பாவா பாவங்கட்கு ஓரிடத்தில் விரோதமாதலால் அவற்றின் ஆசிரயங்கட்கும் எப்படியாவது பேதம் அங்கீகரிக்கத் தக்கது எனின் அற்றன்று எனக் கூறுகின்றார் நிர்ப்பேதமென. சுவாபாவிக நிர்ப்பேதத் தன்மையினை சாதிக்கின்றார் நிரவயவமென. பேதமில்லாவிடினும் ஆகாசத்திற்போன்று பாவாபாவாசிரயத் தன்மை விருத்தமின்ரு மென்பது கருத்து. நிர்த்தோஷம்–அவித்தைக்கு துர்க்கடத் தன்மை அலங்காரமாதலின் ஓரிடத்தில் பாவாபாவ விரோத தோஷஹீனமா மென்பது பொருள். துர்க்கடத்தன்மை-பொருந்தாமை. (134)

(அ) இந்தப்பக்ஷத்தின்கண்ணும் இனி சொல்லப்போகின்ற ரீதியினுல் அருசியிருத்தலின் வேறு பக்ஷத்தினைக் கூறுகின்றார் :—

शुद्धे वस्तुनि यद्यपि प्रविशति ध्वान्तं मनः कारणं
स्वीकृत्यैव तथाप्युपाधिमपरं ब्रह्मस्वरूपे विशेत् ।
तच्चान्तःकरणं सुसूक्ष्मवपुषा तिष्ठद्बहिः सर्वदा
चैतन्ये तमसो नियामकमिति स्वीचक्रुरन्ये पुनः ॥ १३५ ॥

**शुद्धे वस्तुनि** - முற்கூறிய சுருதி முதலியவற்ருல் சுத்தப் பிரம்மத்தின் கண்ணேயே

कारणं ध्वान्तम्-சகத்காரண அஞ்ஞானமானது

प्रविशति இருக்கின்றது.

यद्यपि तथापि-அங்ஙனமாயினும்

நிரவயவப் பிரம்மத்தின்கண் அஞ்ஞானத்திற்கு ஒரே காலத்தில் பாவமும் அபாவமும் சம்பவியாமையின் அவச்சேதக பேதத்தால் அஃது கூறத்தக்கதாம். ஆதலின்,

अपरम्-ஆசிரயத்தினும் வேறான

मनः उपाधिम्-மனமாகிய துவாரத்தை அதாவது அவச்சேதகத்தை

स्वीकृत्य एव-சிருஷ்டித்தே

ब्रह्मस्वरूपे-பிரம்மசொரூபத்தின்கண்

विशेत्-இருக்கும். துவாரமின்றியிராது என்பது பொருள்.

तच्च अन्तःकरणम्-அவ்வந்தக்கரணமும்

सुसूक्ष्मवपुषा-சூக்ஷ்மவடிவத்தால்

सर्वदा-எப்போதும்

बहिः- சைதன்ய சொரூபத்தில் பிரவேசியாமல் தடஸ்தமாய்

तिष्ठत्-இருந்துகொண்டு

चैतन्ये-பிரம்மத்தின்கண்

तमसः-அஞ்ஞானத்தின் இருப்பில்

नियामकमिति-நியாமகமாமென

अन्ये पुनः-மற்றுஞ்சில வாதிகள்

स्वीचक्रुः-அங்கீகரிக்கின்றனர்.

அந்தக்கரணம் சுழுத்தி முதலியவற்றில் லயத்தையடைகின்றது. அங்ஙனமாயினும் சூக்ஷ்ம வடிவத்தால் அப்போதும் இருக்கின்றதேயாம். அதுவும் அதனாசிரய பிரம்மத்திற்கு விசேஷணமன்றாம். விசேஷண மாயின் அஞ்ஞானத்திற்கு மனதின்கண்ணும் இருப்புப் பிராப்தியாதலின், காரியத்திற்குத் தனது காரணத்தின் ஆசிரயத் தன்மை சம்பவிக் கிறதில்லை, ஆதலால் மனது சைதன்னியத்தின் உபாதியாக இருந்து

கொண்டே திருதிஹரீதக்தார்த்தத்தின்கண் பசுத்தன்மை போன்று எப்போதும் சைதன்னியத்தின்கண் அஞ்ஞானத்தின் இருப்பில் நியாமக மாமென அந்நியர்கள் அங்கீகரித்தனர் என்பது பொருள். இங்ஙனம் அந்தக்கரணாவச்சின்ன சைதன்னியத்தில் அப்போதே அதன் அபாவம் பொருந்துகின்றது. ஆதலின் கூறிய ரீதியால் முக்தன் அமுக்தன் என்னும் வியவஸ்தை பொருந்துகின்றது என்பது கருத்து. (135)

(அ) இவ்வாறுயினும் ஞானத்தாலும் அஞ்ஞானத்தாலும் சாதிக்கத்தக்க முக்த அமுக்த வியவஸ்தையுபபாதனஞ் செய்யப்பட வில்லையென்னும் அசந்தோஷத்தால் வேறு பக்ஷத்தைக் கூறுகின்றார்.

**अज्ञानि ब्रह्म बुद्धीरनुसरति ततः स्थावरं जङ्गमं च**
**स्वाज्ञानादेव भूत्वा क्वचिदवगतितो मुक्तमन्यत्र बद्धम् ।**
**तच्चाज्ञानं विनष्टं स्थितमथ च तदेवांशभेदोपपत्तेः**
**एवं सर्वव्यवस्था परमपुरुषगा जाघटीतीति केचित् ॥ १३६ ॥**

அஞ்ஞானம் ஒன்றெனச் சுருதியாற் சித்தித்ததாயினும் வியவஸ்தித அநேக காரிய வசத்தால் அதன் காரியங்களான அந்தக்கரணங்களை அநேகங்களாக அங்கீகரிக்கத்தக்கனவாம். அதனுல்,

**अज्ञानि ब्रह्म**–அஞ்ஞான சம்பந்தமுடைய பிரம்மமே (யாதொரு காரணத்தால்)

**बुद्धीः**–அந்தக்கரணங்களை

**अनुसरति**–அநுசரிக்கின்றதோ அதாவது அவற்றின்கண் பிரதி பிம்பிக்கின்றதோ

**ततः**-அதனுல்

**स्वाज्ञानादेव**-தனது அஞ்ஞானத்தாலேயே

**स्थावरं जङ्गमं च**–தாவரஜங்கமங்களாக

**भूत्वा**-தானே ஆகி

**क्वचिद्**-மநுஷ்யாதி சரீரோபாதியின்கண்

**अवगतितः** – விவேக வைராக்யாதி சாதனத்தால் பிரம்ம சாக்ஷாத்காரத்தால்

**मुक्तम्** – அதனுபாதான அஞ்ஞானும்ஸம் அதன் காரியதேஹத் துவயம் அதன் தருமம் ஆகிய இவற்றின் நிவர்த்தியால் முக்தமாகின்றது.

**अन्यत्र**-மற்ஹோர் உபாதியின்கண்

**बद्धम्**-வித்தையின்மையால் அவித்தையால் பந்தமுடையதா கின்றது. இவ்வாறு அதன் வியவஸ்தை பொருந்துகின்றது.

அற்றேல் அஞ்ஞானம் நிரம்ஸமாகும்போது அதன் அம்ஸப் பிரயுக்த (அதீன) வியவஸ்தை யுதயமாகாமையின் அஃது சரியன்று என்னுஞ் சங்கைக்கு கூறுகின்றார்.

**तच्च अज्ञानम्**–அவ்வஞ்ஞானமும்

**विनष्टम्**–முக்தப் பிரம்மத்தினிடத்தில் தனது காரியத்தோடுகூட பாதமாகின்றது.

**तदेव**–அவ்வஞ்ஞானமே

**अथ च स्थितम्**–அமுக்தப் பிரம்மத்தின்கண் காரியத்தோடுகூட நிலைபெற்றுளது.

**अंशभेदोपपत्तेः**–அம்ஸபேதம் பொருந்துதலின்

**एवम्**–இந்தப் பிரகாரம்

**सर्वव्यवस्था**–சருவவியவஸ்தையும்

**परमपुरुषगा**–பரப்பிரம்மத்தையாசிரயித்ததாகி

**जाघटीति इति**–அததியந்தம் பொருந்துகின்றது என

**केचित्**–சிலர் கூறுகின்றனர்.

கருத்திதுவாம் எந்தப் புத்தியின்கண் வித்தையுதயமாகின்றதோ அதனுபாதானும்ஸமே அஞ்ஞானத்தினோர் அம்சமாம் அதன் வாயிலாக புத்தி நசித்தலால் நசிக்கின்றது. வேறு உபாதியின் உபாதானும்ஸ வாயிலாகவோ இருக்கின்றது என்றிவ்வாறு அம்ஸ பேதம் வீவக்ஷிதமாம். அநிர்வசனீயாஞ்ஞானத்தின்கண் நிரம்ஸத் தன்மை தூஷணம் சம்பவி யாமையால் அம்ஸத் தன்மையோடு கூடிய காரியம் சம்பவித்தலால் அஞ்ஞானம் ஒன்றென்னும் மதத்தின்கண்ணும் பரம புருஷனே

யாசிரயித்த முக்தாமுக்த வியவஸ்தை நன்ருகப் பொருந்துகின்றது என்க. (136)

(அ) அஞ்ஞானத்திற்கு அவயவங்களும் அவ்வவயவங்களில் அவயவங்கடோறும் பிரதிபிம்பபூதரான சீவர்களும் அவர்களுக்குப் பிரம்மத்தின்கண் அனந்த அஞ்ஞானுவரணங்களும் அங்கீகரிக்கப் படுமாயின் அப்போது நாநா அஞ்ஞான நாநா சீவவாதமே அங்கீகரிக்கப் பட்டதாகும். ஆகவே ஏக அஞ்ஞான ஏக சீவனையாசிரயித்து பந்தாதி வியவஸ்தையுபபாதனஞ் செய்யப்படவில்லையாதலின் அதனையும் பரித்தியாகஞ்செய்து மற்றுஞ் சிலரது மதத்தினைக் கூறுகின்ருர் :—

बाह्याध्यात्मिकवस्तुजातजननी माया हरेर्बन्धनी
शक्तिर्दाशकजालवत् प्रसरणं प्राप्नोत्यविद्यावतः ।
जीवान्संकुचतीच्छया भगवतः सत्याऽस्तु मिथ्याऽथवा
संकोचश्च विलक्षणश्च भवतः स्वाभाविकावित्यपि ॥ १३७ ॥

இந்த மதத்தின்கண் அஞ்ஞானம் அனுன்மாவின்கண் ஆன்மப் பிராந்தியும் அதன் வாசனையுமாம். இவ்விரண்டும் சமுசாரத்தில் நிமித்த மாத்திரமாம். உபாதானமன்ரும். குணத்திற்கு உபாதானத் தன்மை பொருந்தாமையின் அதன் உபாதானமோ,

बाह्याध्यात्मिकवस्तुजातजननी – பாஹ்யமான ஆகாசாதியினையும் ஆத்தியான்மிகமான அகங்காரம் அதன் தருமம் முதலான வஸ்து சமுதாயத்தினையும் உண்டுபண்ணுவதும்

माया–மாயாசத்தவாச்சியமும்

बन्धनी–சீவரது சமுசார காரணமுமான

हरेः शक्तिः–ஈசுவரனது சத்தியேயாம்

மாயையைப் பிரகிருதி என அறியவேண்டும். மாயாவியை மஹேஸ்வரனென அறியவேண்டும் என்னுஞ் சுருதியால்.

दाशकजालवत्–அந்த மாயையும் மீனைக் கொல்பவனுன செம்படவனது மீனைப் பந்தனஞ்செய்யும் வலைபோன்று

अविद्यावतः–அஞ்ஞானமுடைய சீவரைக்குறித்து

**प्रसरं प्राप्नोति**-விகாசத்தையடைகின்றது,

ஈசுவரனையாசிரயித்த மாயையே சருவ சீவர்களையும் பந்திக்கின்றது என்பது பொருள்.

**भगवतः इच्छया**-பக்தியினுல் வசம் பண்ணப்பட்ட பகவானது பிரசாதவசத்தால்

**जीवान्**-முக்த சீவரைக் குறித்து

**संकुचति**-சங்கோசத்தையடைகின்றது.

செம்படவனிச்சையினுல் வலைபோன்று அவரை பந்தனஞ் செய்கிற தில்லையென்பது பொருள்-

அற்றேல் அந்த மாயை சத்தியமாயின் ஞானத்தால் நிவர்த்தி ஆகாது. அசத்தியமாயின் அதுவே அநாதியஞ்ஞானமாம். ஆதலின் அதனினும் பேதமாகாது என்னுஞ்சங்கைக்கு அற்றன்று. சத்தியமாயி னும் பிரபஞ்சத்திற்கு ஈஸ்வர ஞானத்தால் நிவர்த்தியுண்டாவது போன்று அதன் விஷயக (பிரம விஷயக) ஞானத்தாலும் நிவர்த்தி பொருந்துதலின் அசத்திய பக்ஷத்திலும் ஈஸ்வரனது சத்தியாகிய மாயைக்கு அஞ்ஞானத் தன்மை பொருந்தாமையின் எதுவானுற்றுன் என்னை என்னும அபிப்பிராயததாற் கூறுகின்ருர்.

**सत्याऽस्तु**-அந்த மாயை சத்தியமாகுக

**अथवा मिथ्या**-அல்லது மித்தையாகுக.

அற்றேல் சீவனிடத்தில் மாயையின் சங்கோச விகாசங்கட்கு விகாரத்தன்மையுண்மையால் இரச்சுசர்ப்பம் போன்று மித்தையாயின் அதன் அதீனமான சமுசாரத்திற்கு சத்தியத்தன்மையெப்படியாம் என்னும் சங்கைக்கு அவைகட்கு (சங்கோச விகாசங்கட்கு) அது (விகாரம்) சுவாபாவிகமாதலால் இரச்சுசர்ப்பத்திற்குப் போன்று தோஷ ஜன்னியத் தன்மையின்மையால் சத்தியத் தன்மை கூடுமாதலின் கூறப்பட்ட தோஷமின்ரும் என்னுங் கருத்தால் கூறுகின்ருர்.

**संकोचश्च**-மாயையின் சங்கோசமும்

**विलक्षणः**-விகாசமும்

**स्वाभाविकौ च**-சுவாபாவிகங்களாகவே

**भवतः**-உள்ளன

**इत्यपि केचित्**-எனவும் சிலர் கூறுகின்றனர்.

ஒரு சகாரம் நிச்சயார்த்தத்தில் வந்தது. மற்றொன்று சமுச்சயத்தில் வந்தது. சிலர் என்பது வரவழைக்கப்பட்டது. சுவாபாவிகங்களாமென்பதற்கு கேவலம் ஈசுவரனது இச்சையினதீனங்களாம். வித்தையினதீனமாக சங்கோசமும் அவித்தையினதீனமாக விகாசமுமின்றும் என்பது பொருள். ( 137 )

( அ ) திருசியத்திற்கு மித்தியாத் தன்மை நியாயமாதலாலும் ஈசுவரனுக்குக் கூறப்பட்டதும் கூறப்படுவதுமான நியாயத்தால் அஞ்ஞானுசிரயத் தன்மை சம்பவித்தலாலும் இந்த ( மேற்கூறிய ) மதமும் பொருத்தமன்றுதலின் சமுச்சயவாதியின் மதத்தைக் கூறுகின்றார் :—

**संस्कारभ्रमसन्ततिं प्रतिनरं भिन्नां परब्रह्मणि**
**स्वीचक्रुर्विषये प्रवाहवपुषाऽनादिं तमः केचन ।**
**तामुच्छिद्य समुच्चयेन घटते मोक्षाय कश्चिन्नरः**
**कश्चित्तद्विरहेण संसरति ना जीवाश्रया सेति च ॥ १३८ ॥**

**परब्रह्मणि विषये**-பரப்பிரம்மமாகிய விஷயத்தின் கண்

**तमः**-யாதொரு அஞ்ஞானமுண்டோ அதனை

**संस्कारभ्रमसन्ततिम्**-சமஸ்காரப் பிராந்தி ஞானங்களின் பிரவாஹ ரூபமாகவும

**प्रतिनरम्**-ஒவ்வொரு மனிதனிடத்தும்

**भिन्नाम्**-வெவ்வேறுமெனவும்

**प्रवाहवपुषा**-பிரவாஹ ரூபத்தால்

**अनादिम्**-அநாதியாமெனவும்

**केचन स्वीचक्रुः**-சிலர் அங்கீகரித்தனர்.

கருத்திதுவாம். ஆன்மாவிற்கு பாஹ்யமும் ஆத்யான்மிகமுமான சமுசாரம் அஞ்ஞானஜன்னியமன்றும். மற்றோ தேகாதியினும்

வேருன வியாபக ஆன்மாவாகிய விஷயத்தின்கண் நான் மனுஷியன் என பூருவ பூருவப் பிராந்தியும அதன் சம்ஸ்காரமுமாகிய நிமித்தத்தால் அநாதியும சத்தியமுமாகிய ஆன்மாவாகிய உபாதானத்தினின்றே யுண்டாகின்றது. பிராந்தி ஞானம் முதலானவையும மனிதர் தோறும் வெவ்வேரும். பிராந்தி ஞானம் முதலியவையே அஞ்ஞானமாம்.

ताम्-அத்தகைய சம்ஸ்காரப் பிராந்தி ஞானங்களின் சந்ததி வடிவ அஞ்ஞானத்தை

समुच्चयेन-கரும ஸமுச்சித ஞானத்தால்

उच्छिद्य-கெடுத்து

कश्चित् नरः-சாதன சதுஷ்டயமுடைய ஓர் புருஷன்

मोक्षाय-மோக்ஷத்தின் பொருட்டு அதாவது லிங்கசரீர விலயத்தின் பொருட்டு அல்லது அத்தியந்த துக்க நிவர்த்தியின் பொருட்டு

घटते-யத்தினஞ் செய்கின்ருன்

कश्चित् ना-சாதனமின்றிய மற்ரெரு மனிதன்

तद्विरहेण-ஞான கரும சமுச்சயமின்மையினுல்

संसरति-சமுசாரத்திற் சுழலுகின்ருன்

सा-சம்ஸ்காராதியின் சந்ததி வடிவ அவ்வஞ்ஞானமும்

जीवाश्रया इति-சீவனை யாசிரயித்ததாமாதலின்

பிரம்மம் அஞ்ஞானியன்ரும். அறியேன் என்னுமனுபவத்திற்கும் குறைவின்ரும் என சிலர் அங்கீகரிக்கின்றனர் என்பது பொருள் (138)

(அ) இந்த மேற்கூறிய மதமும் பொருத்தமின்றியதாம். அசங்கமும் அவிகாரியுமான பிரத்தியகான்மாவிற்கு பிராந்தியும் அதன சம்ஸ்காராதியும் சம்பவியாமையின் சமுச்சயத்தினையும் நானகாவது அத்தியாயத்தின்கண் நிராகரிப்பார், மேலும் இதனுலும் இந்த ஏழு பக்ஷங்களும் பொருத்த முடையனவன்ரும். அப்பக்ஷங்களுக்கு சீவர்களது பாஸ்பர பேதமும் பிரம்மத்தினது பேதமும் விஷயமாதலின மூன்ருவது நான்காவது பக்ஷங்களை விசேஷமாகக் கண்டிப்பார். பேதமும் கற்பிதமா அல்லது

வாஸ்தவமா. முதற்பக்ஷம் சரியன்று சொப்பனத்திற்போன்று ஏகசீவனுக்கும் கற்பிதபேதத்தால் சருவ வியவகாரமும் பொருந்துதலின் சீவனது அநேகத்தன்மை அப்பிராமாணிகமாதலானும் என்க. இரண்டாவது பக்ஷத்தின் கண்ணே பிரம்மம் அஞ்ஞாதமாமென்று சொல்லவேண்டும். ஆன்மாபோன்று அநுபவிக்கப்படாமையால் அதன் அஞ்ஞாதத்தன்மையும் உங்கட்கு எப்படி சித்திக்கும் என்று விசாரிக்கின்றார்:—

अज्ञस्तावत् प्रत्यगात्माहमज्ञ
इत्येवं नः सिध्यति स्वप्रकाशात् ।
अज्ञातं तु ब्रह्म सिध्येत् कुतो वः
सम्यग्ज्ञानाद् भ्रान्तितः स्वप्रकाशात् ॥ १३९ ॥

तावत्—முதலில்

प्रत्यगात्मा—பிரத்தியகான்மா

अज्ञः—அஞ்ஞானமுடையதென்பது

अहम् अज्ञः इत्येवम्—நான் அஞ்ஞன் என்னுமநுபவத்தால்

नः—எமது மதத்தில்

स्वप्रकाशात्—சொப்பிரகாச சாக்ஷியினால்

सिध्येत्—சித்திக்குமென்று உபபாதனஞ் செய்யப்பட்டது

वः—உமது மதத்தின்கண்

ब्रह्म अज्ञातम्—பிரம்மம் அஞ்ஞானமுடையதென்பது

कुतः सिध्येत्—எதனாற்சித்திக்கும்

எதனால் என்பதனாற் சூசிப்பிக்கப்பட்ட விகற்பங்களைக்கூறுகின்றார்

सम्यग्ज्ञानात्—அஞ்ஞாதப் பிரம்மம் கடாதிபோன்று யதார்த்த ஞானத்தால் சித்திக்கின்றதா அல்லது

भ्रान्तितः—சொப்பனம் போன்று பிராந்திஞானத்தால் சித்திக்கின்றதா அல்லது

स्वप्रकाशात्—ஆன்மாபோன்று சொப்பிரகாசத்தால் சித்திக்கின்றதா

ஒன்றினலும் சித்திப்பதில்லையென்பது பொருள். இவ்விசேஷத்தினையே து என்னும் சத்தத்தால் தெரிசிப்பிக்கின்றார். முதலில் என்பது பின் சொல்வதனையபேக்ஷித்தாம் (139)

(அ) அவ்விகற்பங்களுள் முதலாவதாகிய யதார்த்த ஞானத்தினைக் குறித்துக் கூறுகின்றார்:—

सम्यग्ज्ञानाद् ब्रह्मणः सिद्धिपक्षे
जाड्यं तस्य स्याद् घटादेर्यथैव ।
सम्यग्ज्ञानाद् ब्रह्मणोऽज्ञानसिद्धौ
तस्याऽपि स्यात् सत्यता तद्वदेव ॥ १४० ॥

सम्यग्ज्ञानात्-யதார்த்த ஞானத்தால்

ब्रह्मणः-அஞ்ஞாதப் பிரம்மத்தின்

सिद्धिपक्षे-சித்திபக்ஷத்தில்

घटादेः यथा एव-கடாதிக்குப்போன்று

तस्य जाड्यं स्यात्-பிரம்மத்திற்கு சடத்தன்மைப் பிராப்தியாம்

ஞான விஷயத்திற்கு சடத்தன்மை நியமமாதலால் என்பது பொருள். [பிற்பாதி சுலோகத்தால் அஞ்ஞானத்தை யாசிரயித்த வேறு தோஷத்தைக் கூறுகின்றார்]

सम्यग्ज्ञानाद्-யதார்த்த ஞானத்தால்

ब्रह्मणः-பிரம்மத்தின்

अज्ञानसिद्धौ-அஞ்ஞானத்தன்மை சித்திக்கின்

तस्यापि-அஞ்ஞானத்திற்கும்

तद्वदेव-பிரம்மத்திற்குப் போன்றே

सत्यता स्यात्-பிரமாண சித்தத்தன்மை யுண்மையின் சத்தியத்தன்மைப் பிராப்தியாம்.

திருசியமாகிய அஞ்ஞானத்திற்கு சத்தியத்தன்மையோ பொருத்தமின்றுமென்பது கருத்து. (140)

(அ) பிராந்தி ஞானத்தால் என்னும் இரண்டாவது விகற்பத்தினைக் குறித்துக் கூறுகின்றார்:—

भ्रान्तिज्ञानाद् ब्रह्मणः सिद्धिपक्षे
तस्यापि स्यात् कल्पितत्वं तमोवत् ।
अज्ञातं चेद् ब्रह्म नः स्वप्रकाशं
मा भाषिष्ठा नानुभूतिस्तथा नः ॥ १४१ ॥

**भ्रान्तिज्ञानाद्**-பிராந்தி ஞானத்தால்

**ब्रह्मणः**- அஞ்ஞாதப் பிரம்மத்தின்

**सिद्धिपक्षे**-சித்தியாமென்னும் பக்ஷத்தில்

**तस्यापि**-பிரம்மத்திற்கும்

**तमोवत्**-பிராந்திஞானவிஷய அஞ்ஞானதிக்குப் போன்று

**कल्पितत्वं स्यात्**-கற்பிதத்தன்மைப் பிராப்தியாம்

சொப்பிரகாசத்தால் என்னும் மூன்றாவது பக்ஷத்தினைக் குறித்துக் கூறுகின்றார்

**अज्ञातं ब्रह्म चेत्**-பிரம்மம் அஞ்ஞானமுடையதாயின்

**नः**-எம்மைக் குறித்து

**स्वप्रकाशम्**-பிரம்மம் சொப்பிரகாசமாமென

**मा भाषिष्ठाः**-கூறுதே

அதன்கண் ஏதுவினைக் கூறுகின்றார்.

**तथा**- பிரம்மம் சொப்பிரகாசமாமென

**नः**-நமக்கு

**अनुभूतिः न**-அனுபவமின்றாம்.

வேதாந்தவாக்கியத்தாலன்றி சீவனினும் வேறான சருவஞ்ஞாதி வடிவ பிரம்மத்தின் சொரூபம் அவ்வாறு (சொப்பிரகாசமாமென) நம்மால் அநுபவிக்கப்படாமையின் என்பது கருத்து. (141)

(அ) பரமதத்தில் பிரம்மம் அஞ்ஞாதமாமென்னும் பக்ஷத்தில் கூறப்பட்ட தோஷத்தினை பிரம்மம் மாயையினை யுடையதாமென்னும் பக்ஷத்தின் கண்ணும் சாமான்யமாக அதிதேசஞ் செய்கின்றார் :—

अज्ञातत्वे यानवोचाम दोषान्
मायावित्वे ब्रह्मणस्तानवेहि ।
मिथ्याज्ञानात् स्वप्रकाशात् प्रमाणात्
संसिद्धिः स्यात्तस्य तत् कथ्यतां नः ॥ १४२ ॥

ब्रह्मणः–பிரம்மத்திற்கு

अज्ञातत्वे அஞ்ஞானசிரயத் தன்மையுளதென்னும் பக்ஷத்தில்

यान् दोषान्–எத்தோஷங்களை

अवोचाम–கூறினோமோ

तान्–அத்தோஷங்களை

मायावित्वे–பிரம்மத்திற்கு மாயையினசிரயத் தன்மையுளதென்னும் பக்ஷத்திலும

अवेहि–அறிவாய்

விசேஷமாக அத்தோஷத்தினைத் தெரிசிப்பித்தற்கு முன் செய்த விகற்பங்களையே கூறுகின்றார்.

तस्य–பிரம்மத்திற்கு

तत्–மாயையினசிரயத்தன்மை

मिथ्याज्ञानात्–பிராந்திஞானத்தால்

संसिद्धिः स्यात् சித்திக்கின்றதா

स्वप्रकाशात्–சொப்பிரகாசத்தால சித்திக்கின்றதா

प्रमाणात्–யதார்த்த ஞானத்தால் சித்திக்கின்றதா

नः कथ्यताम्–எமக்குக் கூறுக. (142)

(அ) அதே தூஷணத்தைக் கூறுகின்றார் :—

मिथ्याज्ञानात् ब्रह्मणः सिद्धिपक्षे
मायेव स्यात् कल्पितं तच्च तद्वत् ।
मानादिष्टं ब्रह्म मायावि चेद् वा
मायायाः स्यात् सत्यता जाड्यमस्य ॥ १४३ ॥

मिथ्याज्ञानाद्–பிராந்திஞானத்தால்

ब्रह्मणः–மாயாவிசிஷ்டப் பிரம்மத்தின்

सिद्धिपक्षे–சித்தியாமென்னும் பக்ஷத்தில்

तद्वत् माया इव–அம்மாயைபோன்றே

तच्च–பிரம்மமும்

कल्पितम् स्यात्–கற்பிதமாகும்.

மாயைக்கு திருசியத்தன்மை ஏதுவால் மித்தியாத்தன்மை சித்தமா மெனக் கருதி அஃது திருஷ்டாந்தமாகச் செய்யப்பட்டது.

[ அந்தியபக்ஷத்தில் தோஷத்தினைக் கூறுகின்றார் ]

मायावि ब्रह्म–மாயையினையுடைய பிரம்மம்

मानादिष्टं चेत्–யதார்த்த ஞானத்திற்கு விஷயமாமெனின்

मायायाः सत्यता स्यात्–மாயைக்கும் சத்தியத்தன்மைப் பிராப்தி யாம்

மாயாவிசிஷ்டத்திற்கு மானவிஷயத் தன்மையை யுடன்படின் விசேஷணத்திற்கும் சத்தியத்தன்மைப் பிராப்தியாம் என்பது கருத்து.

अस्य–விசேஷ்யமாகிய பிரம்மத்திற்கும்

जाड्यम्–மானவிஷயத்தன்மை ஏதுவால் சடத்தன்மைப் பிராப்தி யாம் என்பது பொருள். (143)

(அ) இப்போது இரண்டாவது விகற்பத்தினைத் தூஷிக்கின்றார் :

तन्मायावि ब्रह्म चेत् स्वप्रकाशं
मायापि स्याद्ब्रह्मवत् स्वप्रकाशा ।
मायां पश्येद्ब्रह्म चेत् स्वप्रकाशं
तत्रापि स्यात् स्वानुभूत्या विरोधः ॥ १४४ ॥

तत् मायावि ब्रह्म–அந்த மாயாவிசிஷ்டப் பிரம்மம்

स्वप्रकाशं चेत्–சொப்பிரகாசமாமெனின்

मायाऽपि–மாயையும்

ब्रह्मवत्–பிரம்மம் போன்று

स्वप्रकाशा स्यात्–சொப்பிரகாசமாம்

அதாவது சொப்பிரகாசத் தன்மையை யுடன்படின் சித்ருபத் தன்மையாலும் சத்தியத்தன்மையாலும் மாயைத்தன்மைக்கு விரோதமாம் என்பது பொருள்.

[ பிரம்மம் சொப்பிரகாசமாம். மாயையோ அதன் வேத்தியமாம் என்றங்கீகரித்தலால் கூறிய தோஷமின்றுமெனின் அதற்குக் கூறுகின்றார். ]

स्वप्रकाशं ब्रह्म–சொப்பிரகாசப் பிரம்மம்

मायां पश्येत् चेत्–மாயையைப் பார்க்குமெனின்

तत्रापि–அதன்கண்ணும்

स्वानुभूत्या–முன்போன்று தனது அனுபவத்தோடு

विरोधः स्यात्–விரோதமுண்டாம். (144)

(அ) அற்றேல் எப்படி அஞ்ஞானமுடைய ஆன்மா சொப்பிர காசத்தன்மை வடிவத்தால் அஞ்ஞானத்தைப் பார்க்கின்றதோ அப்படி மாயாவிசிஷ்டப் பிரம்மமும் மாயையைப் பார்க்குமென்னுஞ் சங்கைக்கு பிரத்தியகான்மாவிற்கு அஞ்ஞானம் அனன்யமாயிருத்தலால் அஃது பொருந்துகின்றது. பிரத்தியகான்மாவினும் வேறுன மாயாவிசிஷ்டப் பிரம்மத்தின் சொரூபம் அன்னியனுக்கு அவ்வாறு சித்திக்கின்றதில்லை யென சங்கையின் வாயிலாக அநுபவவிரோதத்தை வெளிப்படுத்து கின்றார் :—

आत्मा मूढः स्वप्रकाशो यथाऽयं
नैवं मायि ब्रह्म नः स्वप्रकाशम् ।
अज्ञादन्यद्ब्रह्म चेत् स्वप्रकाशम्
द्वे विस्पष्टे स्वप्रकाशे स्फुरेताम् ॥ १४५ ॥

यथा–எப்படி

अयम् आत्मा–பிரத்தியக் சேதனம்

मूढः–அஞ்ஞானமுடையதும்

स्वप्रकाशः–சொப்பிரகாசமுமாமோ

**एवम्**—அப்படி

**मायि ब्रह्म**—மாயாவிசிஷ்டப் பிரம்மம்

**स्वप्रकाशम्**—சொப்பிரகாசமாம் என

**नः**—எம்மைக் குறித்து

**न**—அநுபவசித்தமன்றும்

**अज्ञाद्**—அஞ்ஞானமுடைய ஆன்மாவினும்

**स्वप्रकाशं ब्रह्म**—சொப்பிரகாசப் பிரம்மமானது

**अन्यत् चेत्**—விலக்ஷணமாகவுளதெனின்

**द्वे**—சீவனும் பிரம்மமும்

**विस्पष्टे**—வெளிப்படையாக

**स्वप्रकाशे**—சொப்பிரகாசமுடையவராக

**स्फुरेताम्**—விளங்கவேண்டும்.

சீவனினும் வேறான பிரம்மத்தின் ஸ்புரணம் அவ்வாறின்றும் ஆதலின் இது அத்தியந்தம் துச்சமாமென்பது கருத்து. (145)

(அ) இவ்வாறு சீவனினும வேறானதற்கு அஞ்ஞானமுடையதாந் தன்மையினைப் பிரமாணமின்மையினல் தூஷணஞ் செய்து சீவபேதத்தையும் விகற்பித்துத் தூஷிக்கினருர் :—

**ज्ञायन्ते चेद्ब्रह्मणा जीवभेदा जाड्यं तेषां कुड्यवन्निर्विवादम् ।**
**न ज्ञायन्ते ब्रह्मणा चेत्तदानीं सर्वज्ञत्वव्याहतिर्दुर्निवारा ॥**

**ब्रह्मणा**—பிரம்மத்தால்

**जीवभेदाः**—தன்னினின்று சீவர்களது பேதங்களும் அவர்களது பரஸ்பரபேதங்களும்

**ज्ञायन्ते चेत्**—அறியப்படுகின்றனவெனின்

**तेषां**—சீவர்கட்கும்

**कुड्यवत्**—சுவற்றிற்குப் போன்று

**जाड्यं निर्विवादम्**—சடத்தன்மை விவாதமின்றிப் பிராப்தியாம்.

பேதத்தின் பிரதியோகித்தன்மை முதலியவற்றல் சீவர்கட்கும் திருசியத்தன்மைப் பிராப்தியாதலால் அநான்மத்தன்மைப் பிராப்தியாம், திருசியத்திற்கு அஃது நியமமாதலால் என்று கூறப்பட்டது.

[ இனி இத்தோஷத்தைப் பரிகரித்தற்பொருட்டு பேதங்கள் அறியப் படுகின்றதில்லை யெனின் அப்போது பிரம்மத்திற்கு சருவஞ்ஞத் தன்மையின் குறைவு வச்சிரம்போன்று திடமாம் எனக் கூறுகின்றார்.

ब्रह्मणा–பிரம்மத்தால்

न ज्ञायन्ते चेत्–பேதங்களறியப்படுகின்றனவன்றெனின்

तदानीम्–அப்போது

सर्वज्ञत्वव्याहतिः–ஸர்வஞ்ஞத்தன்மையின் விரோதம்

दुर्निवारा–நீக்கத்தகாதாம். (146)

(அ) இப்போது சீவர்கட்கும் பேதசித்தியைத் தூஷித்தற்கு அவர்கட்கு சொப்பிரகாசத் தன்மையினை முதலில் அங்கீகரிக்கின்றார் :–

जीवा एते स्वप्रकाशस्वभावा निर्भासन्ते ब्रह्मणश्चेद्विभक्ताः ।
तेषां भेदः स्वप्रकाशो नवा स्याद्दोषं ब्रूमो दुर्निवारं द्विधाऽपि ॥

एते जीवाः–இந்தச் சீவர்கள்

स्वप्रकाशस्वभावाः–சொப்பிரகாச சொரூபராய்

ब्रह्मणः विभक्ताः–பிரம்மத்தினின்றும் பிரிவுபட்டவராய்

निर्भासन्ते चेत्–விளங்குகின்றனவெனின் விளங்குக.

அதாவது அவர்கட்கு சொப்பிரகாசத் தன்மையுளதாகுக. அவரது பேதம் எவ்வாறு விளங்குகின்றதெனக் கேட்கவேண்டும். அந்தப் பேதமும் சொப்பிரகாசமா அல்லது அன்று என்று விகற்பித்து இரண்டு பக்ஷத்தின் கண்ணும் தூஷணத்தைச் சம்பாவனை செய்கின்றார்.

तेषां भेदः–சீவர்களது பேதம்

स्वप्रकाशः स्यात्–சொப்பிரகாசமா

न वा–அல்லது அன்று

द्विधाऽपि–இரண்டு பிரகாரத்திலும்

दुर्निवारं दोषम्–நிவர்த்திக்கத்தகாததாக தோஷத்தினை

ब्रूमः–கூறுகின்றோம். (147)

(அ) அவற்றுள் முதலாவது பக்ஷத்தினைத் தூஷிக்கின்றார்.

**तेषां भेदः स्वप्रकाशो यदीष्टः सत्यत्वं स्यात्तस्य तेषां तथैव ।**
**वेद्योऽभीष्टस्तद्विभागो यदि स्यात् तानज्ञात्वा तद्विभागो न वेद्यः ॥**

**तेषां भेदः**-சீவர்களது பேதம்

**स्वप्रकाशः** -ஸ்வப்பிரகாசமாக

**यदि इष्टः** -அங்கீகரிக்கப்படுமாயின்

**तस्य**-பேதத்திற்கு

**सत्यत्वं स्यात्**-சத்தியத்தன்மை பிராப்தியாம்.

பிரதியோகி முதலியவற்றின் சத்தியத்தன்மையின்றி பேதத்திற்குச் சத்தியத்தன்மை எங்ஙனமாம் என்னும் சங்கைக்கு ஜீவர்களுக்கும் சொப் பிரகாசத்தன்மை பக்ஷத்தில் சத்தியத்தன்மை நியமமாதலால் பேதத்திற்கு சத்தியத்தன்மையின் ஆபத்தி நீக்கமுடியாதாம் எனக் கூறுகின்றார்.

**तेषां तथा एव**-ஜீவர்க்கும் அவ்வாறே சத்தியத்தன்மையாம்

[ இரண்டாவது பக்ஷத்தினைத் தூஷிக்கின்றார். ]

**तद्विभागः** -ஜீவர்களின் பேதம்

**यदि वेद्यः अभीष्टः स्यात्**-ஞானத்தின் விஷயமாக அங்கீகரிக்கப் படுமாயின்

**तान् अज्ञात्वा**-பிரதியோகிவடிவான ஜீவர்களை அறியாமல்

**तद्विभागः** -ஜீவர்களின் பேதம்

**न वेद्यः** -அறியத்தகாதாம்.

அனுயோகிப்பிரதி யோகிகளின் ஞானமின்றி பேதத்தை அறியக் கூடாதாகலின் ஜீவர்களும் அறியத்தக்கவரேயாம் என்பது பொருள்.

(அ) அதனுற் சித்தித்தது என்னை என்னுமிடத்துக் கூறு கின்றார்:—

**जीवाः सर्वे त्वां प्रति प्रस्फुरन्तः सम्यग्ज्ञानात्प्रस्फुरन्ति स्वतो वा ।**
**यद्वा मिथ्याज्ञानसामर्थ्यतोऽमी पक्षः कस्ते रोचते ब्रूहि तन्मे ॥**

**त्वां प्रति प्रस्फुरन्तः** -உன்னைக் குறித்து விளங்குகின்றவரான

**अमी सर्वे जीवाः** -இச்சீவரனைவரும்

सम्यग्ज्ञानात् - யதார்த்த ஞானத்தால்

प्रस्फुरन्ति - விளங்குகின்றனரா ?

स्वतः वा - அல்லது சுவப்பிரகாசத்தால்

यद्वा - அல்லது

मिथ्याज्ञानसामर्थ्यतः - பிராந்திஞானத்தின் வலியால் விளங்குகின்றனரா ?

कः पक्षः - இவற்றுள் எந்த பக்ஷம்

ते रोचते - உனக்கு ருசிக்கின்றதோ

मे - எனக்கு

तत् ब्रूहि - அப்பக்ஷத்தினைக் கூறுவாம். (149)

( அ ) முதற்பக்ஷத்தினைத் தூஷிக்கின்றார்:—

सम्यग्ज्ञानाज्जीवभेदप्रसिद्धावद्वैतत्वं ब्रह्मणो न प्रसिध्येत् ।
जीवाः सर्वे मां प्रति स्वप्रकाशा इत्युक्तिस्ते स्वानुभूत्या विरुद्धा ॥

सम्यक् ज्ञानात् - யதார்த்தஞானத்தால்

जीवभेदप्रसिद्धौ - ஜீவர்களின் பேதம் பிரசித்தியாம் என்னும் பக்ஷத்தில்

ब्रह्मणः अद्वैतत्वम् - பிரம்மத்திற்கு அத்வைதத் தன்மை

न प्रसिध्येत् - சித்திக்காது.

பிராமாணிக ஜீவபேதத்திற்குப் பிரம்மம் போன்று சத்தியத்தன்மை நியமமாதலால் பிரமாணசித்த அத்வைதம் பொருந்தாமற் போமென்பது பொருள்.

[ இரண்டாவது பக்ஷத்தினைத் தூஷிக்கின்றார்.]

सर्वे जीवाः - எல்லாச் சீவரும்

मां प्रति - என்னைக் குறித்து

स्वप्रकाशाः इति उक्तिः - ஸ்வப்பிரகாசமாம் என்னும் வார்த்தை

ते स्वानुभूत्या - உனது சுவானுபவத்தோடு

विरुद्धा - விரோதமாம்,

உனக்குச் சீவர்கள் சொப்பிரகாசமாக விளங்துவாராயின் அந்நிய ருக்கும் அப்படியே சொப்பிரகாசமாகச் சர்வஜீவர்களின் அனுபவம் உண்டாகவேண்டும். பின்னராகவின் அவர்கட்கு அவ்வனுபவம் உண்டாகின்றதில்லையெனின் உனக்கும் அஃதுண்டாகலாகாது என்பது கருத்து. (150)

(அ) மூன்றுவது பக்ஷத்தின்கண்ணே ஒரே ஜீவன் தான் சித்திப்பன் ஜீவனது பேதம் சித்தியாது என்னுங் கருத்தால் அதனைத் தூஷிக்கின்றுர்:—

मिथ्याज्ञानाज्जीवभेदप्रसिद्धौ सम्यग्ज्ञानाद्बाध एवाभ्युपेयः ।
मिथ्याज्ञानाद्रज्जुसर्पः प्रसिद्धः सम्यग्ज्ञानात्तस्य बाधोऽपि सिद्धः ॥

मिथ्याज्ञानात्–பிராந்திஞானத்தால்

जीवभेदप्रसिद्धौ-ஜீவர்களின் பேதம் பிரசித்தியாமென்னும் பக்ஷத்தில்

सम्यग्ज्ञानात्–யதார்த்தஞானத்தால்

बाधः अभ्युपेयः एव–அதன் பாதம் அங்கீகரிக்கத்தக்கதேயாம்.

யதார்த்தஞானத்தால் பாதிக்கப்படும்போது அவர்கட்கு மித்தியாத் தன்மையுண்மையால் பந்தமோக்ஷங்களின் ஆசிரயத்தன்மையும் சித்தி யாது. இவ்வாறுகவே பந்தமோக்ஷவியவஸ்தையின் பொருட்டுப் பக்ஷங் களைக் கிளப்புதல் உனக்கு வீணேயாமென்பது கருத்து. எதனுல் வீண் என்னும் சங்கைக்கு மித்தியாத்தன்மை பாத்தியத்தன்மைகட்கு சமநியதத்தன்மை யுண்மையின் என்னுங் கருத்தால் கூறுகின்றுர்.

मिथ्याज्ञानात्–பிராந்திஞானத்தால்

रज्जुसर्पः प्रसिद्धः–கயிற்றரவம் பிரசித்தமாம்

सम्यग् ज्ञानात्–யதார்த்தஞானத்தால்

तस्य बाधोऽपि–அதனது பாதமும்

सिद्धः–பிரசித்தமாம்.

அதாவது எல்லாவற்றுலும் சீவபேதத்தின் சித்தியின்றுமென்பது கருத்து. (151)

(அ) இந்தப் பிரகாரம் "சருவப் பிராந்தியினையுமுண்டாக்குகின்ற அஞ்ஞானம்" (132-சு) என்பதாதியாகக் கூறப்பட்ட பேத பக்ஷங்களில் சாதாரண தூஷணத்தைக் கூறி ஆகாசத்தில் (134-சு.) என்னுஞ் சுலோகத்தில் கூறப்பெற்ற மூன்றாவது பக்ஷத்தின் கண் ஒரு வஸ்துவிற்கு ஓரிடத்தில் ஒரே காலத்தில் பாவமும் அபாவமும் சம்பவிக்கின்றதில்லையாதலின் அந்தப் பக்ஷத்தின் அத்தியந்தாசம்பவத்தினையே கூறுகின்றார் :—

**एकोपाधावेकवस्तुप्रसिद्धौ भावाभावौ नेक्षितौ क्वापि लोके ।**
**पक्ष्यादीनामस्तिता नास्तिता च व्योम्न्येकस्मिन्नप्यवच्छिन्न एव ॥**

**एकोपाधौ**-ஓரதிகரணத்தின்கண்

**एकवस्तु प्रसिद्धौ**-ஓர் வஸ்து பிரசித்தியாகும்போது அவ்விடத்து அதனபாவம் சித்திக்காது.

ஏதனுல் என்னும் சங்கைக்கு பாவாபாவங்களுக்கு விரோதமுண்மையினாலும் உலகின்கண் ஓரிடத்தும் அவ்வாறு காணப்படாமையாலும் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

**लोके**-உலகின்கண்

**क्वापि**-யாண்டும் ஓரதிகரணத்தின்கண்

**भावाभावौ**-ஒரு வஸ்துவின் பாவமும் அபாவமும்

**नेक्षितौ**-பார்க்கப்படவில்லை.

அல்லது பிரதியோகிவடிவமான ஓர் வஸ்துவின் சம்பந்தித்தன்மையால் பிரசித்தமான பாவாபாவங்கள் உலகின்கண் ஓரிடத்தும் பார்க்கப்படவில்லையெனக் கூட்டுக. ஆகாசத்தின்கண் பக்ஷிக்கும் அதனபாவத்திற்கும் ஒரே காலத்தில் இருப்பு கூறப்பட்டதாம் என்று சங்கை செய்யற்க. அத்திருஷ்டாந்தம் சம்மதமின்மையின், அனுபவ விரோதமும் இன்றாம். எவ்விடத்து பக்ஷி பார்க்கப்படுகின்றதோ அவ்விடத்திலேயே அதனபாவமும் பார்க்கப்படுகின்றதில்லை. மற்றோ வேறிடத்திலேயாம். ஆதலின், ஆகாசம் ஏகமாதலானும் நிரவயவமாதலானும் அதன் அதிகரணபேதமின்றாமென்று சொல்லற்க சூரியபிரபையின் அவயவ அவச்சேதத்தால் கற்பிக்கப்பட்ட ஆகாசபிரதேசத்திற்கு பேதமுண்மையின் அஃது பொருந்துதலின் என்னும் கருத்தாற் கூறுகின்றார்.

**एकस्मिन् अपि व्योम्नि**-ஒரே ஆகாசத்தின் கண்ணும்

**पक्ष्यादीनाम्**-பறவை முதலியவற்றின்

**अस्तिता नास्तिता च**-பாவமும் அபாவமும்

**अवच्छिन्न एव**-ஒரு பாதியினுல் அவச்சின்னமேயாம். (152)

(அ) அதனவச்சேதக சம்பந்தமும் அதேவிடத்தில் அப்போது இன்றென்று கூறவேண்டும் அன்றேல் கேவல ஆகாசத்திற்குப் போன்று அவச்சின்ன ஆகாசத்திற்கும் ஏகத்தன்மையுண்மையின் பறவை முதலியவற்றிற்கு ஒரே காலத்தில் ஆண்டு பாவாபாவங்கள் பொருந்தாவாம். ஆகவே எமக்கு அதுவே திருஷ்டாந்தமாகுக என்னும் சங்கைக்கும் அவகாசமின்ரும் ஏனெனின் அதன் அதிகரணத்தின்கண்ணும் ஒரு பாதியினுல் அவச்சின்னத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றதேயாம் எனக் கூறுகின்ருர் :—

**सोऽवच्छेदोऽप्यस्ति नास्त्यम्बरे चेत्तत्रान्वेष्यः सोऽप्यवच्छिन्नभावः ।**
**सोऽवच्छेदोऽप्यस्ति नास्त्यम्बरे चेद्बाढं तस्मिन्सोऽप्यवच्छिन्न एव ॥**

**अम्बरे**-ஒரே ஆகாசத்தின்கண்

**सः अवच्छेदोऽपि**-பறவை முதலியவற்றின் அவ்வவச்சேதகமும்

**अस्ति नास्ति चेत्**-உளதும் இலதும் ஆம் எனின்

ஆண்டும் வேறு உபாதியால் அவச்சின்னமான வாகாசத்தின்கண்ணேயே உபாதியின் பாவாபாவங்கள் உள்ளன. கேவலாகாசத்தின்கண் இன்ரும் எனப் பரிகரிக்கின்ருர்.

**तत्र**-உபாதியினதிகரணத்தில்

**कोऽपि अवच्छिन्नभावः** -வேறு அவச்சேதகத்தால் அவச்சின்னத் தன்மை

**अन्वेष्यः**-தேடத்தக்கது.

ஆகாசத்தின்கண் பிரபையின் அவயவங்கள் அதிகமாக வுண்மையினுல் ஓரவயவத்தால் அவச்சின்னமானதின்கண் வேறு அவச்சேதகமிருத்தலின் கூறியதோஷமின்ரு மென்பது கருத்து. இந்தப் பிரகாரம் அவ்வவ்வவச்சேதகத்தின் அதிகரணமான ஆகாசம் அன்னியத்தால் அவச்சின்னமேயாம் என சங்கை வாயிலாகக் கூறுகின்ருர்.

**स अवच्छेदोऽपि**–அவ்வேறு அவச்சேதகமும்

**अम्बरे**–ஒரே ஆகாசத்தின் கண்

**अस्ति नास्ति चेत्**–உள்ளதும் இல்லாததுமாம் எனின்

**बाढम्**–நீ கூறியது சரிதான்

**तस्मिन्**–ஆகாசத்தின் கண்

**सोऽपि**–அவ்விரண்டாவது அவச்சேதகமும்

**अवच्छिन्न एव**–மற்றொரு பாதியால் அவச்சின்னமேயாம். (153)

(அ) இவ்வாறுடன்படின் நிவர்த்திக்கத்தகாத அனவஸ்தை பிராப்தியாம் எனனும சங்கைக்கு ஆண்டு மாயாவாதிகட்கு அனவஸதை அனிஷ்டமனரும பிரகாராந்தரததால பொருந்தாததற்கும் பிரத்தி மாத்திரத்தால் அநிர்வசனீய சுத்தி ரஜதாதிபோன்று அதனை யங்கீகரித்த லின என்னுங் கருத்தால கூறுகின்றார்:—

**नन्वेवं स्याद्दुर्निवारानवस्था बाढं का नो हानिरिष्टैव साऽपि ।**
**कर्मोद्भूतं नः शरीरं शरीरात्कर्मोद्भूतिस्तत्र किं नेष्यते सा ॥ १५४ ॥**

**ननु एवम्**–அவச்சேதகத்திற்கு வேறு அவச்சேதகம் அதற்கு வேறு அவச்சேதகமென றிவ்வாறங்கீகரிக்கின்

**अनवस्था**–அநவஸ்தா தோஷம்

**दुर्निवारा स्यात्**–நீக்கமுடியாததாகும் எனின்

**बाढम्**–வாஸ்தவம்தான்

**नः का हानिः**–அதனுல் எமக்கென்ன குறைவு யாதொன்று மின்றும

**साऽपि इष्टा एव**–அனவஸ்தையும் எமக்கு சம்மதமேயாம்.

மேலும் வர்த்தமான தேவதத்தசரீரம் அவனது கருமத்தாலுண் டானதாம் அஃதின்றி பிராணிகளுக்கு விசித்திரசரீரம் பொருந்தாமையின். கருமமும் முற்காலத்திலுள்ள தேவதத்த சரீரத்தாலுற்பன்னமாம். சரீரமின்றி கருமம் சம்பவியாமையின், அச்சரீரமும் அதனினும் முன்னுள்ள கருமத்தாலாம். அதுவும் அதனினும் பூருவசரீரத்தாலாம் என்றிவ்வாறு கருமத்திற்கும் சரீரத்திற்கும் அநந்தப் பிரவாகம் எப்படி அங்கீகரிக்கப் படுகின்றதோ அப்படி ஈண்டுமாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

**नः शरीरम्**–நமது தேகம்

**कर्मोद्भूतम्**–முன் வினையாலுண்டானதாம்

**कर्मोद्भूतिः**–முன்வினையினுற்பத்தியும்

**शरीरात्**–அதனினும் முன் தேகத்தாலுண்டானதாம்

**तत्र**–ஆண்டு

**सा किं न दृश्यते**–அனவஸ்தை ஏனங்கீகரிக்கப்படுகின்றதில்லை.

அவச்சேதகபரம்பரையின் அங்கீகாரமும் தோஷத்தின்பொருட்டன்ரும் என்னுமித்துணை மாத்திரத்தில் திருஷ்டாந்தமாம். ஆதலால் சமுசாரம் அநாதியாதலால் திருஷ்டாந்தத்தில் பிரவாகம் பொருந்து கின்றது. ஈண்டு அவச்சேதப் பிரவாகம் அநாதியன்ரும் ஆகலின் தூஷணம் மிகத் துச்சமாம். அநிர்வசநீபவாதத்தின்கண் அ∴தின்மையின் என்க. வாஸ்தவமாகவோ பரமதத்தின்கணணும் சம்யோகத்தின் அதிகரணத்தன்மையை யவச்சேதகஞ் செய்கின்ற அனைத்தும் அவ் வியாப்பிய விருத்தியாதலின் இத்தோஷம் சமானமாதலின் எம்மைக் குறித்துத் தோஷம உண்டாக்கத் தக்கதன்று என உணர்க. (154)

(அ) இந்தப் பிரகாரம் மூன்ருவது பக்ஷத்தினைத் தூஷித்துப் பிரமாணமின்மையினுலும் அதனைத் தூஷிககின்ருர் :—

**किं चाज्ञानं ब्रह्मणोऽस्यास्ति नास्तीत्येतत्कस्माच्चं विजानासि हेतोः ।**
**मूढोऽस्मीति प्रत्ययादस्तिबुद्धिर्मुक्ते दाहान्मोहनास्तित्वबुद्धिः ॥ १५५ ॥**

**किं च**–மேலும்

**अस्य ब्रह्मणः**–முற்கூறப்பட்ட நிரவயவசைதன்யான்மக பிரம மத்திற்கு

**अज्ञानम्**–அஞ்ஞானமானது

**अस्ति नास्ति इत्येतत्**–உளதும் இலதுமாமென்னுமிதனை

**कस्मात् हेतोः**–எவ்வேதுவால்

**त्वं विजानासि**–நீ அறிகின்ருய்

முற்கூறப்பட்ட யுக்தியால் எவ்வுபாயத்தாலும் அறியமுடியாது என்பது பொருள்.

[ பூர்வபக்ஷீ சங்கிக்கிறான். ]

**मूढोऽस्मि इति प्रत्ययात्** - நான் மூடனாயிருக்கின்றேனென்னு மநுபவத்தால்

**अस्तिबुद्धिः**-நம் முதலானோருக்கு அஞ்ஞானத்தின் உண்மை ஞானமாம்.

**मुक्ते**- நித்தியமுக்தவித்துவானிடத்தில்

**दाहात्**-அஞ்ஞானமில்லாமையால்

**मोहनास्तित्वबुद्धिः**-அஞ்ஞானத்தின் இன்மை ஞானமாம். (155)

(அ) ஞானத்தினுபாயத்தினை சங்கைவாயிலாக முன்போன்று விகற்பிக்கின்றார் :—

मुक्तेऽज्ञानं दग्धमित्येतदेवं कस्माद्धेतोर्वेत्सि तत्कथ्यतां नः ।
मिथ्याज्ञानात् स्वप्रकाशात्प्रमाणान्मुक्तेऽज्ञानं दग्धमित्यस्य सिद्धिः ॥

**एवं मुक्तेऽज्ञानम्**-இங்ஙனம் முக்தபுருஷனிடத்தில் அஞ்ஞானம்

**दग्धम् इत्येतद्**- இன்றுமென்னுமிதனை

**कस्माद्धेतोः**-எவ்வேதுவால்

**वेत्सि**-அறிகின்றனையோ

**तत् नः कथ्यताम्**-அதனை எமக்குக் கூறுக

**मुक्तेऽज्ञानं दग्धम्**-முக்தனிடத்தில் அஞ்ஞானமின்றும்

**इत्यस्य सिद्धिः**-என்பதன் சித்தி

**मिथ्याज्ञानात्**-பிராந்திஞானத்தாலா அல்லது

**स्वप्रकाशात्**-சொப்பிரகாசத்தாலா அல்லது

**प्रमाणात्**-யதார்த்தஞானத்தாலா (156)

(அ) இரண்டு சுலோகத்தால் மூன்று பக்ஷத்தினையும் முன்போல தூஷிக்கின்றார் :—

सम्यग्ज्ञानान्मुक्तिसिद्धिर्यदीष्टा नूनं मुक्तः कुड्यवत्ते जडः स्यात् ।
मिथ्याज्ञानान्मुक्तसिद्धिर्यदीष्टा स्रक्सर्पादिप्रख्य एवैष मुक्तः ॥१५७॥

**मुक्तो मह्यं स्वप्रकाशश्चकास्तीत्येषा वाणी स्वानुभूत्या विरुद्धा ।**
**न ह्यश्रुत्वा शास्त्रमेतन्मनुष्यः कश्चिज्ज्ञानात्येष मुक्तः शुकादिः ॥**

**सम्यग्ज्ञानाद्**-யதார்த்தஞானத்தால்

**मुक्तिसिद्धिः**-மோக்ஷத்தின (அஞ்ஞானபாவத்தின) சித்தி

**ते यदि इष्टा**-உனக்கிஷ்டமாயின்

**नूनं मुक्तः**-நிச்சயமாக முக்தபுருஷன்

**कुड्यवत्**-சுவர்போன்று

**जडः स्यात्**-சடனுவன், ஞானவிஷயத்திற்கு சடத்தன்மை நியமமாதலால்,

**मिथ्याज्ञानात्**-பிராந்திஞானத்தால்

**मुक्तसिद्धिः**-அஞ்ஞானபாவமுடைய முக்தனது சித்தி

**यदि इष्टा**-சம்மதமாயின்

**रज्जुसर्पादिप्रख्य एव**-இரச்சு சர்ப்பாதி போன்றே

**एष मुक्तः**-இந்த முக்தன் பொய்யனுவன்

**मुक्तः मह्यम्**-முக்தனுனவன் எனக்கு

**स्वप्रकाशः चकास्ति**-சுவப்பிரகாசமாக விளங்குகின்ருன்

**इत्येषा वाणी**-என்னும் இந்த வார்த்தையும தனது அநுபவத்தோடு விரோதமாம்,

**स्वानुभूत्या विरुद्धा** - தன்னினும் பின்னவஸ்துவிற்கு சொப்பிரகாசத்தன்மை பொருந்தாமையினெனபது பொருள்.

தனது அநுபவவிரோதத்தினையே வியதிரேகவாயிலாக விஸ்தரிக்கின்ருர்.

**एतत् शास्त्रम्**-சுகர் முதலானேர்க்கு மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கின்ற சாஸ்திரத்தினை

**अश्रुत्वा**-சிரவணஞ் செய்யாமல்

**एषः शुकादिः**-சுகர் வாமதேவர் முதலானேர்

**मुक्तः इति**-முத்தராமென

**कश्चित् मनुष्यः**-யாதொரு மனிதனும்

**नहि जानाति**–அறிகின்றதில்லை. (157-158)

(அ) அற்றேல் அந்தக்கரணாவச்சின்ன சேதனத்தின் கண் அஞ்ஞானமென்னும் நான்காவது பக்ஷத்தை யநுவாதஞ் செய்து அதன் கண் முற்கூறிய தோஷத்தை அதிதேசஞ் செய்கின்றார் :—

> **ताटस्थ्येनोपाधिमादाय मोह-**
> **श्चैतन्येऽस्मिन् स्वप्रकाशे प्रविष्टः ।**
> **तेनेह स्याद्बन्धमोक्षव्यवस्थे-**
> **त्युक्तं यत्प्राग्दूषणं तस्य विद्धि ॥ १५९ ॥**

**ताटस्थ्येन**–தடஸ்தத்தன்மையால்

**उपाधिम्**–அந்தக்கரணமாகிய உபாதியை

**आदाय मोहः**–யாசிரயித்து அஞ்ஞானம்

**अस्मिन् स्वप्रकाशे चैतन्ये**–இந்த சுவப்பிரகாச சேதனத்தின்கண்

**प्रविष्टः**–பிரவேசித்துளது

**तेन इह**–உபாதியால் இந்த மதத்தில்

**बन्धमोक्षव्यवस्था स्यात्**–பந்தமோக்ஷங்களின் வியவஸ்தை சித்திக்கும் இது பரியந்தம் பூருவபக்ஷமாம்

**इति प्राग्यद् दूषणम्**–அப்பக்ஷத்தில் முன்பு யாதொரு தூஷணம்

**उक्तम्**–கூறப்பட்டதோ

**तस्य विद्धि**–அதனையறிவாய்

முன்பு என்பதாதியால் அப்பக்ஷத்தின் கண்ணும் முன் கூறப்பட்ட விகற்பத்தினையும் தூஷணத்தினையும் பொருத்துதலாம். (159)

(அ) மேலும் அந்தக்கரணாவச்சின்ன மாத்திரத்தில் அஞ்ஞான மிருக்குமாயின் அது அத்தியந்தம் பரிச்சின்னமாகும் அத்தகைய அதற்கு ஆகாசாதி பூதபௌதிகப் பிரபஞ்சத்தின் உபாதானத்தன்மை சம்பவியாது ஆதலால் அந்தக்கரணத்தை யுபலக்ஷணமாகக்கொண்டு வேறிடத்திலும் அஞ்ஞானமிருப்பதாகவுடன்படின் உபாதிக்கு அதன் அதிகரணத்தன்மையை வரைந்து கொள்ளுந்தன்மையின்மையால் வியர்த்தத் தன்மையுமாம்.

அற்றேல் அந்தக்கரணம் சேதனத்தில் அஞ்ஞானத்தின் பிரவேசத்தில் துவாரமாக அர்சிக்கப்படுகின்றது. அதிகரணத்தன்மையை வரைந்துகொள்ளுந்தன்மையால் அன்றும். அக்கினிக்குக் கிரகப்பிரவேசத்தின்கண் கொள்ளிக்கட்டை எப்படித்துவாரமோ அது போன்று என்னுஞ் சங்கைக்கு அப்படியானுல் அந்தக்கரண வாயிலாகப் பிரவேசித்த அஞ்ஞானம் அக்கினி சம்பூர்ணைக் கிரகத்திலும் வியாபிப்பதுபோல சம்பூர்ணப்பிரம்த்தையும் வியாபிக்கும் ஆதலின் அதன் அபாவம் அதனகண் சிததியாது என்னுங் கருத்தால் சங்கையை யநுவதித்தல் வாயிலாக வியதிரேக முகத்தாற் கூறுகின்றுர்.

**ताटस्थ्येनोपाधिरङ्गं यदि स्यात् मोहाविष्टे ब्रह्मणि स्वप्रकाशे ।**
**अग्निक्षेप्तस्योल्मुकं यद्वदेवं मोहस्य स्यान्न प्रदेशस्थितत्वम् ॥ १६० ॥**

**अग्निक्षेप्तस्य**–கிரகத்தில் அக்கினியின் பிரவேசத்திற்கு

**यद्वत् उल्मुकम्**–எப்படி கொள்ளிக்கட்டை நிமித்தமாமோ

**एवम्**– அப்படி

**स्वप्रकाशे ब्रह्मणि**-சொப்பிரகாசப் பிரம்மத்தின் கண்

**मोहाविष्टे**–அஞ்ஞானத்தின் பிரவேசத்தில்

**उपाधिः**–அந்தக்கரணமாகிய உபாதி

**ताटस्थ्येन**–ஆசிரய கோடியில் பிரவேசியாமலே தடஸ்தத்தன்மையால்

**यदि अङ्गं स्यात्**–ஏதுவாயின் அப்போது

**मोहस्य**–அஞ்ஞானத்திற்கு

**प्रदेशस्थितत्वम्**–ஏகதேசத்திலிருக்குந்தன்மை

**न स्यात्**–பொருந்தாது

ஏதுவாயின் என்பது பரியந்தம் சங்கையின் அநுவாதமாம். அப்போது என்பது முதலாகத் தூஷணமாம். அதாவது பிரம்மத்தின் கண் உன்றுற் கூறப்பட்ட அஞ்ஞானத்தின் அபாவம் சித்தியாது என்பது பொருள். (160)

(அ) திருஷ்டாந்த சகிதம் தார்ஷ்டாந்தம் கூறப்பட்டது அதனையே விஸ்தரிக்கின்றுர்:—

अग्निः क्षिप्तो ह्युल्मुकेन प्रदेशमात्रव्याप्तिं वर्जयित्वा समस्तम् ।
वेश्म व्याप्नोत्येवमेवेह कृत्स्नं ब्रह्म व्याप्नोत्याधिनास्तं तमोऽपि ॥

उल्मुकेन-கொள்ளிக் கட்டையால்

क्षिप्तः अग्निः-கிரகத்தில் எறியப்பட்ட அதாவது பிரவேசித்த நெருப்பு

प्रदेशमात्रव्याप्तिम्-ஏகதேசமாத்திரத்தில் வியாபித்தலை

वर्जयित्वा-ஒழித்து

समस्त वेश्म-சருவக்கிரகத்தினையும்

व्याप्नोति-எப்படி வியாபிக்கின்றதோ

एवमेव-அப்படியே

इह-(இந்தப்பக்ஷத்தில்) தார்ஷடாந்தத்தின் கண்ணும்

आधिना-அந்தக்கரணமாகிய உபாதிவாயிலாக

अस्तं तमोऽपि-பிரம்மத்தின் கண் பிரவேசித்த அஞ்ஞானமும்

कृत्स्नं ब्रह्म-சம்பூர்ணப்பிரம்மத்தையும்

व्याप्नोति-வியாபிக்கும் (161)

(அ) ஆதலால் கூறப்பட்ட பக்ஷங்கள் தோஷத்தோடு கூடியிருத்தலின் 128-வது சுலோகத்தில் "मुक्तामुक्तौ" முக்தன் அமுக்தன் என்பதாதியால் கூறப்பட்ட பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையே பொருத்தமாம் சொப்பனம் போன்று எனனுங்கருத்தால் முடிக்கின்றார்:—

तस्माद्ब्रह्माविद्यया जीवभावं प्राप्यासित्वा तावके तु स्वरूपे ।
त्वच्चित्तेन स्पन्दितं जीवजातमाकाशादिक्ष्मावसानं च पश्येत् ॥

तस्मात्-ஆதலால்

ब्रह्म अविद्यया-பிரம்மமே அவித்தையினால்

जीवभावं प्राप्य-சீவத்தன்மையையடைந்து

तावके स्वरूपे आसित्वा तु-உனது சொருபமாக விருந்தே

त्वच्चित्तेन-உனது அவித்தையினால்

स्पन्दितम्-விலஸிதமான

जीवजातम्-சீவ சமூகத்தையும்

आकाशादिक्ष्मावसानं च-ஆகாசம் முதல் பிருதிவிபரியந்தமான அனைத்தையும்

पश्येत्-பார்க்கும் (162)

(அ) அற்றேல் நானே எனது அவித்யையினால் சீவனாக இருக்கின்றேன். அப்படியாயின் எனக்கு சீவத்தன்மையினின்றும் நிவர்த்தி யெப்படிக்கூடும். அஃது (நிவர்த்தி) பிரம்மஞானத்தாலன்றியுண்டாகின்றதில்லை. "அதனையேயறிந்து மிருத்தியுவைக்கடக்கின்றான்" என்னும் சுருதியால், ஞானமும் குரு முதலிய உபாயமின்றி சம்பவிக்கிறதில்லை. "ஆசாரியனையுடைய புருடனேயறிகின்றான்" என்னும் சுருதியினால், இங்ஙனம் என்னினும் அன்னியமாக சீவனில்லாதபோது பிரமவித்தையெப்படி சித்திக்கும் எனது மோக்ஷந்தான் எப்படி சித்திக்கும் என முற்கூறப்பட்டதை மறந்துள்ள புருடனைக் குறித்து அதனையே நினைப்பூட்டுகின்றார் :—

**स्वीयाविद्याकल्पिताचार्यवेदन्यायादिभ्यो जायते तस्य विद्या ।**
**विद्याजन्मध्वस्तमोहस्य तस्य स्वीये रूपेऽवस्थितिः स्वप्रकाशे ॥१६३॥**

स्वीयाविद्याकल्पिताचार्यवेदन्यायादिभ्यः- பிரத்தியகான்மாவையே யாசிரயமாகவும் விஷயமாகவுமுடைய அஞ்ஞானத்தால் கற்பிக்கப்பட்ட குரு வேதம் நியாயம் ஆகிய இவைகளால்

तस्य-சமுசாரிப் பிரம்மத்திற்கு

विद्या जायते-ஞானமுண்டாகின்றது

ஏக சீவவாதத்தின் கண் வித்தையைச் சமர்த்தனஞ் செய்தலின் பயனைக் கூறுகின்றார்.

विद्याजन्मध्वस्तमोहस्य तस्य-ஞானத்தினுற்பத்தியால் அஞ்ஞானமொழிந்த அச்சீவனுக்கு

स्वप्रकाशे-சுவப்பிரகாசமான

**स्वीये रूपे**-தனது சொரூபத்தின் கண்

**अवस्थितिः**-நிலைத்திருத்தலுண்டாகின்றது

நியாயம்=பிரம்மமீமாம்ஸை, ஏக அஞ்ஞானத்தின் கண் பிரதிபிம்பித்த சீவன் ஏகனுயினும் அதன் காரியமான அநந்த அந்தக்கரணத்தால அவச்சின்னமான அச்சீவனுக்கு அநந்த பிரமாதிருத்தன்மை முதலிய வடிவமாமென்று முன்பு கூறப்பட்டது. ஆண்டு எவ்வந்தக்கரணவச்சின்னத்தின் கண் சிரவணமனனுதியின் அடைவால் நிச்சய வடிவப் பிரம்மத்தை அபரோக்ஷமாசயுண்டாகின்றதோ அது குருவாம். இதனுலேயே அநந்தாந்தக்காணவச்சின்ன பிரயாதாக்களுக்கு ஒரு காலத்தில் தன் தன் குருவினிடத்தினின்றும் வித்தையின் பிராப்தியின் பொருட்டு தனித்தனிப் பிரயத்தினம் பொருந்துகின்றது இத்துணையால் சீவபேதம் பிராப்தியாமென்னற்க. அவித்தையிற் பிரதிபிம்பித்த ஏக சீவனுக்கே அவ்வவ்வுபாதியால் ஏக காலத்திலாவது சிரமமாகவாவது வித்தையினையுத்தேசித்துப் பிரவிருத்தி சம்பவித்தலின். குருவும் தனது உபாதியின் கண பிரம்மத்தின் அபரோக்ஷமின்மையினுல் அதன் (அபரோக்ஷத்தின்) பொருட்டு சிறந்த அதிகாரியினையடைந்து நீயே உனது அவித்தையினுற்கற்பிக்கப்பட்ட ஆசாரியனுலே வித்தையை யடைவாய் என்று உபதேசிக்கின்ருர். ஆதலின் யாதொரு தோஷமுமின்ரும். இவ்வாறு வேதாந்தம முதலியதும் உனது அவித்தையினுல் கற்பிக்கப்பட்டதாகியிருக்கினறது. ஆதலின் அதனுல் வித்தையினுற்பத்தி பொருந்துகின்றது என்பது கருத்து. அந்தக்கரணம் ஒன்றேயாம் அதன் கண் ஞானஞ்ஞானங்களின் வியவஸ்தை சொப்பனத்திற் போன்று கூடுமென்று அங்கீகரிக்கப்படுமாயின் அது சரியென்று. கூறப்பட்ட பிரகாரத்தால் அதன் விலக்ஷண ஞானஞ்ஞான வியவஸ்தை பொருந்துதலின். தன்னிடத்து அஞ்ஞானனுபவத்தின் விரோதத்தால் தன்னெருவனுக்கே சீவத்துவத்தை யறிகின்றவனுக்கு பிறனிடத்தில் ஆன்மசாக்ஷாற்காராதியினைக் கற்பித்தல் சம்பவியாமையானும் கற்பிக்கப்பட்ட வித்துவானுக்கும் கட்டையிற் கள்வன் போன்று உபதேசம் சம்பவியாமையானும் என்பது கருத்து. (163)

(அ) அற்றேல் மேற்சுலோகத்தில் "தனது அவித்தை சொப்பிரகாச தனது சொருபத்தின் கண் இருக்கும்" என சுவப் பிரகாச

சருவஞ்ஞ நித்திய முக்த பிரம்மத்தினிடத்தில் அஞ்ஞானத்தின் ஆசிரயத் தன்மையும் விஷயத்தன்மையும் கூறப்பட்டது அது பொருந்தாது. சொப்பிரகாசாதி வடிவ அதன் கண் அது பொருந்தாமையின், மேலும் நான் அஞ்ஞன் என சீவனுக்கே அஞ்ஞானத் தன்மையின் அநுபவத்தால் அஞ்ஞானத்தின் ஆசிரயத்தன்மை பொருத்தமாம். பாஷியக்காரர் முதலானோரால் அவவவ்வதிகரணதிகளில் சீவனுக்கு அஞ்ஞானத்தைக் கூறியிருத்தலாலும அஃது (பிரமமத்தின் கண் அஞ்ஞானசிரயத்தன்மை) பொருத்தமன்று என்னுஞ் சங்கைககுக் கூறுகின்றார் :—

**अज्ञानि ब्रह्म जीवो भवति भवति च स्पष्टमज्ञानमस्य**
**प्रागस्पष्टं सदन्तःकरणनिपतितज्योतिराभासभोगात् ।**
**चैतन्यैकप्रतिष्ठं स्फुरति नहि तमस्तादृशं यादृशं तद्**
**बुद्धिस्थाभासनिष्ठं स्फुरति तदुचितं जीवमौढ्याभिधानम् ॥**

**ब्रह्म** = சுவப்பிரகாசாதி சுபாவமானப் பிரமமம்

**अज्ञानि** – சுவவிஷயக அஞ்ஞானத்தினுசிரயமாகி பின்னர்

**जीवो भवति** = அஞ்ஞானத்தின கண பிரதிபிமபித்ததாகி சீவனுகின்றது

சீவனுகி அஞ்ஞானத்தினுசிரயமன்றும். அகங்காரம் அஞ்ஞானத்தின் காரியமாதலால அதனுல் அவச்சின்னமான சீவனிடத்தில் அஞ்ஞானத்தினுசிரயத்தன்மையும விஷயத்தன்மையும சம்பவியாமை " **आश्रयत्वविषयत्वभागिनी** " என முதலத்தியாயத்தில் 319-வது சுலோகத்தில் கூறப்பட்டமையால், நான் அஞ்ஞன் என்பது அவ்வஞ்ஞானத்தின் ஸ்பஷ்டப் பிரதீதியாம் ஆதலின் அதனுல் அஞ்ஞான விஷயத்தன்மை சீவனுக்கன்றும. அஞ்ஞானுவச்சின்னத்தின் கணணே அஞ்ஞான விஷயத்தன்மையைப் பின்னர் கணடிப்பாம். ஆதலால பரிசேஷத்தால் பிரம்மமே அதனுசிரயமும் விஷயமுமாம். மேலும் பிரகாசத்தன்மையால் பிரம்மத்திற்கு அவ்விரண்டின் அசம்பவமின்றும். சீவனுக்கும் நிருவிகாரப் பிரமம சொரூபத்தன்மையிருத்தலால் அது (அசம்பவதோஷம்) நீங்காமையின், பிரகாசிக்கின்ற வஸ்துவிற்கு தனது விஷயக அப்பிரகாசத்தினுசிரயத் தன்மை விருத்தமுமன்றும். வாதியின்

மதத்தில் பிரமேயத்தன்மை முதலிய வடிவத்தால் கடம் விளங்குவ தாயினும் கடத்தன்மை முதலிய வடிவத்தால் அதன் அஞ்ஞானம் இருப்பதுபோன்று பிரகிருதத்தின் கண்ணும் விரோதமின்மையின், பல (காரிய) பலத்தாற் கற்பிக்கத்தக்க அதன் அவிரோதம் சைதன்யத்தின் கண் சம்பவித்தலால். இதனுலேயே சீவன் அஞ்ஞானத்தினுசிரயனும் சீவனினுமன்னியமான பிரம்மமே அதன் விஷயமாம் என்பது நிராகரிக்கப்பட்டது, சுவப்பிரகாச பிரம்மத்திற்கு அஞ்ஞானத்தின் ஆசிரயத்தன்மை பொருந்தாவிடின் சீவனுக்கும் அஃது பொருந்தாமற் போம் சீவனும் சுவப்பிரகாசனுதலின் என்பது கருத்து.

பிரம்மம் சருவஞ்ஞமாதலின் அதற்கு அஞ்ஞானத்தினுசிரயத் தன்மை பொருந்தாதாமென்னற்க. மறைக்கப்பட்ட சொருபத்தன்மை வடிவ அஞ்ஞத்தன்மை சருவஞ்ஞனுக்கு எம்மால் அங்கீகரிக்கப்படுகின்ற தில்லை. சீவனைக்குறித்தோ பிரம்மத்தை மறைக்கும் அஞ்ஞானம் அதன் கண் விரோதமின்றும். இதனைப்பின்னர் உபபாதனஞ்செய்வார். நித்திய முத்தனிடத்தில் அஞ்ஞானம் பொருந்தாதாமென்னற்க. கற்பித மாகிய அஞ்ஞானம் இரச்சு சர்ப்பாதி போன்று வஸ்துவமாகத்தனது ஆசிரயத்தைப் பரிசியாமையின் அதற்கு நித்தியமுத்தத்தன்மையோடு விரோதமின்றும். ஆதலால் பிரம்மமே அஞ்ஞானத்தினுசிரயமும் விஷயமுமாமென்க. அப்படியானுல் நான் அஞ்ஞன் என்னும் பிரதீதிக்குக்கதி யாது எனின் அதற்குக் கூறுகின்றுர்: —

अस्य च – இந்த சீவனுக்கே

प्राग् – அந்தக் கரணுத்தியாசத்திற்கு முன்பு சுழுத்தி முதலியவற்றில்

अस्पष्टम् सद् – அஸ்பஷ்டப் ஸ்பிரகாசமாயிருந்தே

अन्तःकरणनिपतित ज्योतिराभासयोगात् – சாக்கிரம் முதலியவற்றில் அந்தக்கரணத்தின் கண் பிரதிபிம்பித்த சைதன்யத்தின் சிதாபாச வடிவ சம்பந்தத்தால்

अज्ञानं स्पष्टम् भवति – அஞ்ஞானம் ஸ்பஷ்டமாகின்றது

சாக்கிரம் முதலியவற்றில் நான் அஞ்ஞன் என அதன் (அஞ்ஞான த்தின்) அநுபவமுளதாதலாலும் சுழுத்தியில் அஃதிருப்பினும் அவ்வாறு

அநுபவமின்மையாலும் அன்வயவியதிரேகங்களால் அகங்காரம் சீன் மாத்திரத்தினையாசிரயித்த அஞ்ஞானத்தின் வியஞ்சகமாம். ஆதலால் அஞ்ஞானத்திற்கு ஆசிரயமாகாவிடினும் நானென்னும் ஞானத்தின் கண் அவ்வாறு அநுபவம் பொருந்துமாதலின் அதன் வலிவால் அதற்கு (அகங்காரத்திற்கு) அதன் (அஞ்ஞானத்தின்) ஆசிரயத்தன்மை சித்தியா மென்பது கருத்து.

அப்படியானல் அஞ்ஞானத்தின் கண் வேறு பிரகாரத்தால் அநுபவம் சம்பவியாமையால் அதற்கு பிரம்மத்தினுசிரயத்தன்மை சித்தி யெவ்வாறு கூடும் என்னுஞ்சங்கைக்கு ஏது அசித்தமாம். சுழுத்தியின் கண்ணும் பிரதீதியாதலால் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

**तद्**-அவ்வஞ்ஞானம்

**बुद्धिस्थाभासनिष्ठम्**-அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்த சைதன்னியத்தின் கண்ணிருந்துகொண்டு

**यादृशं स्फुरति**-எவ்வாறு விளங்குகின்றதோ

**तादृशम्**-அவ்வாறு

**चैतन्यैकप्रतिष्ठम्**-சைதன்னியமாத்திரத்தில் இருந்துகொண்டு

**तमः नहि स्फुरति**-அஞ்ஞானம் விளங்குகின்றதில்லை.

மற்றே வேறு பிரகாரத்தாலேயே விளங்குகின்றது ஆதலின் அதன்கண் பிரமாணத்தின் அபாவமின்றும் என்பது கருத்து.

ஸ்பஷ்ட ஞானத்தை யநுசரித்தே பாஷியக்காரர் முதலியோரது சீவனது அஞ்ஞானமென்னுங் கூற்றும் பொருத்தமாமென்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

**तत्**-ஆதலால்

**जीवमौढ्याभिधानम्** - பாஷியக்காரரால் சீவனுக்கு அஞ்ஞானத்தைக்கூறுதல்

**उचितम्**-உசிதமாம்

நான் அறியேனென்னும் விசேஷ ஸ்புரணபிப்பிராயமாம் பாஷிய வசனம். என்பதுபொருள், (164)

(அ) எவ்வாறு அவ்வாறு என்று சொல்லப்பட்டதனையே விஸ்தரிக்கின்றவராய் சீவனது அஞ்ஞானமாமென்பதன் அபிப்ராயத்தை வெளிப்படுத்துகின்றார்.

**अज्ञानं जडशक्तिमात्रवपुषा जीवाद्बहिः सिध्यति**
**जीवारूढमहं न जान इति तु ज्ञानापनोद्यात्मना ।**
**संसिद्धिं प्रतिपद्यते तदुचितं जीवाज्ञताभाषितं**
**द्वैरूप्ये सति रूपमेकमनिशं भात्येवमन्यत्र हि ॥ १६५ ॥**

**अज्ञानम्** – அஞ்ஞானமானது

**जडशक्तिमात्र वपुषा** – சடமாய் பிரம்மத்தின் பரதந்திரமாய் யாதொரு மாயாசக்தியுண்டோ அத்துணை மாத்திரவடிவத்தால்

**जीवाद्बहिः** – சீவனினும் வெளியில் அதாவது அகங்காரா நவச்சின்ன சைதன்யான்மகப் பிரம்மத்தின் கண்

**सिध्यति** – சித்திக்கின்றது

**जीवारूढं तु** – சீவனையாசிரயித்த அஞ்ஞானமோ

**अहं न जाने इति** – நானறியேனென (விளங்குகிறது எதனாலெனின்)

**ज्ञानापनोद्यात्मना** – ஞான நிவர்த்தியத்துவயோக்கிய வடிவத்தால்

**संसिद्धिं प्रतिपद्यते** – சித்தியை யடைகின்றது

அஞ்ஞானத்தின் கண்ணேயே ஞான விரோதித்தன்மை பரியவசானமாதலின் அந்த ஞானமும் அநுபவிக்கும் புருடனிடத்திலேயே சொல்லத்தக்கதாம். அன்னியனது ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க அதன் கண் மற்றொருவனுக்கு அவ்வாறு அநுபவமின்மையின் இக்காரணத்தாலேயே பிரம்மத்தின் கண் அஞ்ஞானத்தின் அநுபவம் அவ்வாறு சம்பவிக்கின்றதில்லை. மற்றோ சடசத்திமாத்திர வடிவத்தாலாமாதலின் அதன்கண் அவ்வாறே அது சித்திக்கின்றது. சீவனிடத்தோ சீவனிடத்துள்ள ஞான நிவர்த்தியத் தன்மையால் சித்திக்கின்றது.

**तत्** – ஆதலால்

**जीवाज्ञताभाषितम्** – பாஷியக்காரர் முதலியோரது சீவனிடத்து அஞ்ஞத்தன்மையின் கூற்று

**उचितम्**–பொருத்தமாம்

இவ்வாறுயின் ஜடசக்தித்தன்மையாலும் சீவனிடத்து அஃது ஏன் விளங்குவதில்லை யென்னுமிடத்துக்கூறுகினறுர்

**द्विरूपये सति**-அஞ்ஞானத்திற்குக் கூறிய பிரகாரத்தால் இரு வடிவம் சித்தித்தபோது

**एकं रूपम्**–ஞான நிவர்த்தியத்தன்மையாகிய ஓர் வடிவம்

**अनिशं भाति**–எப்போதும் நித்திய சித்தசாக்ஷியினுலேயே சீவனிடத்து விளங்குகின்றது.

**एवम्**-இந்தப்பிரகாரம்

**अन्यत्**–சடசத்தித்துவம்

**न हि**–விளங்குவதின்ரும் (165)

(அ) சடசத்தி விளங்குவதின்ரும் என்பதன் கண் பிரம்மத்தின் கண்ணேயே அவ்வாறு அதனநுபவம் பொருத்தமாமென்பதனை ஏதுவாகக்கருதிக் கூறுகின்ருர்:—

**जडशक्तिमात्रवपुषा गगनश्वसनादिकार्यजननी भवति ।**
**पुरुषोत्तमस्य वशवर्तितया प्रकृतिः परस्य जगदेकगुरोः ॥ १६६ ॥**

**प्रकृतिः**–அஞ்ஞானம்

**जडशक्तिमात्रवपुषा**–சடசத்தியாகிய மாயாவடிவத்தால்

**गगनश्वसनादिकार्यजननी भवति**–ஆகாசம் வாயு முதலிய பிரபஞ்சத்தின் காரணமாகின்றது

இவ்வாறுயின் அதற்கு சாங்கிய சம்மதமான பிரதானத்தின் சமத்தன்மையாமெனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

**जगदेकगुरोः**–உலகனைத்திற்கும் சுவாமியும்

**पुरुषोत्तमस्य**–புருஷோத்தமனுமான

**परस्य**–பரமான்மாவின்

**वशवर्तितया**–அதீனமாயிருந்துகொண்டு காரணமாம்

"देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्" எனப் பரமான்மாவின் சத்தி வடிவமாகக்கூறப்பட்டதற்த "मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम्" என்னுஞ் சுருதியால் மாயாவடிவமும் ஈசுவரனையாசிரயித்து இருக்குந்தன்மையும் தெரிசிப்பிக்கப்பட்டமையின் அது சாங்கியருக்கு சம்மதமான பிரகிருதியின் சமான மன்றும் மற்றோ அந்தப் பிரகிருதி ஈசுவரனை (பிரமமத்தை) யாசிரயித்ததாக இருக்கின்றது. ஆதலின் சகத்காரணப் பிரர்மத்தின் கண்ணேயே அது அவ்வாறு விளங்குவது பொருத்தமாம் என்பது கருத்து. (166)

(அ) அப்படியானல் சீவனது ஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானம் மேற்கூறியதினின்றும் விலக்ஷணமாதலால் அதினின்றும் அன்னியமேயாகுக என்னுஞ் சங்கைக்கு நாநா லக்ஷணம் ஒன்றன் கண்ணும் சம்பவித்தலாலும் அதன் விரோதித்தன்மை யுடன்பாடின் மையாலும் எனக்கருதி இனி சொல்லப்படுவதான அதனபேதாநு மானத்தை இருதயத்தில் வைத்துக்கொண்டு கூறுகின்ருர்:—

इयमेव सर्वजननी प्रकृतिर्वशिनी शरीरिणमिमं पुरुषम् ।
अधिरुह्य जीवमहमज्ञ इति स्फुरणैकगोचरवपुः स्फुरति ॥ १६७ ॥

सर्वजननी - சர்வத்திற்றுங்காரணமான

इयमेव प्रकृतिः—இந்தப் பிரகிருதியே

शरीरिणम्—சரீரத்தோடுகூடிய

पुरुषम्—புருஷனுகிய

इमं जीवम्—இந்த ஜீவனை

अधिरुह्य—ஆசிரயித்து

वशिनी—அவனைத் தனது வசம் செய்கின்றதாய்

अहं अज्ञः इति—நான் அஞ்ஞன் என்று

स्फुरणैकगोचरवपुः—சாக்ஷிமாத்திரத்தின் விஷயமாய்

स्फुरति—விளங்குகின்றது

ஜீவனுக்கு ஜகத்காரணத்தன்மையின்மையால் அஞ்ஞானம் அவனிடத்து ஜடசக்தி ரூபத்தால் விளங்குதற்கு யோக்கியமன்றும் என்னும் கருத்தால் நான் அஞ்ஞன் எனப்பட்டது. (167)

(அ) ஜீவனது ஞானத்தால் அஞ்ஞானம் நிவிருத்திக்கத்தக்க தாதலின் நான் அஞ்ஞன் என ஜீவனிடத்தில் அஃது விளங்குகின்றது. ஈசுவரனிடத்தில் அஃது விளங்குவதின்றும் என்று கூறப்பட்டது. அதன் கண் வேறு யுக்தியினைக் கூறுகின்றார்:—

**चितिशक्तिबाधितवपुः परमं पुरुषं प्रतिस्फुरति सा प्रकृतिः ।**
**चितिशक्तिबाधकवपुः पुरुषं पुरवर्तिनं प्रति पुनः स्फुरति ॥ १६८ ॥**

அஞ்ஞானம் எவனுக்கு வஸ்துவின் சொரூபத்தை மறைக்கிறதோ அவனாலேயே அஃது அறியேனென அனுபவிக்கப்படுகின்றது. பரமேஸ்வரனுக்கு சொரூபத்தை மறைக்கிறதில்லை. ஏனெனின்

**परमं पुरुषं प्रति**–நித்திய சருவஞ்ஞ பரமான்மாவைக் குறித்து

**सा प्रकृतिः**-அவ்வஞ்ஞானமானது

**चितिशक्तिबाधितवपुः** - அவனது சொரூப சைதன்னியத்தால் பாதிக்கப்பட்ட வடிவமுடையதாய்

**स्फुरति**–விளங்குகின்றது

அவனால் துச்சமாக அறியப்படுகின்றது ஆதலால் அவனைக் குறித்து அவனது சொரூபத்தை மறைக்கிறதில்லை என்பது பொருள். [சீவனைக் குறித்தோ அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்]

**पुरवर्तिनम्**–தூல சூக்ஷும சரீராவச்சின்ன

**पुरुषं प्रति**–சீவனைக் குறித்து

**चितिशक्तिबाधकवपुः**–அஞ்ஞானம் சொரூப சைதன்யத்தை மறைக்குந் தன்மையால்

**पुनः स्फुरति**–விளங்குகின்றது

"மாயையால் அபகரிக்கப்பட்ட ஞானமுடையவர்" என்னும் ஸ்மிருதியினாலும். அறிகின்றிலேன் என்னும் அநுபவத்தாலும் இவ்வஞ்ஞானம் அவனைக்குறித்து சொரூபாவரகமாக விளங்குகின்றது என்பது பொருள். (168)

(அ) 167வது சுலோகத்தால் **इयमेव सर्वजननी** என்பதால் மாயையவித்தைகளின் அபேதாநுமானம் சூசிப்பிக்கப்பட்டது அதனை இப்போது கூறுகின்றார்:—

दृश्यत्वजाड्यपरतन्त्रचिदाश्रयत्वैर्मायेश्वरस्य तम आत्मतमानुमेया ।
स्वप्नप्रपञ्चरजतभ्रमलिङ्गदेह दिक्चन्द्रविभ्रममरीचिजलोपमानैः ॥

ईश्वरस्य माया–ஈசுவரசம்பந்தி சட சக்தி வடிவமாயை

दृश्यत्व जाड्यपर- तन्त्रचिदाश्रयत्वैः– திருசியத்தன்மை சடத்தன்மை பரதந்திரத் தன்மை சிதாசிரயத்தன்மை வடிவ ஏதுக்களால்

तम आत्मतमा–அஞ்ஞான வடிவமாக

अनुमेया–அநுமிக்கத்தக்கது

स्वप्नप्रपञ्चरजतभ्रमलिङ्ग देहदिक्चन्द्रविभ्रम मरीचिजलोपमानैः – சொப்பன பிரபஞ்சம் இப்பிவெள்ளி சூக்ஷ்மதேகம் திக்குப்பிரமை சந்திரப் பிரமை கானற்சலம் ஆகிய திருஷ்டாந் தங்களால் அநுமிக்கத்தக்கது என ஒட்டுக

திருசியத்தன்மை=சைதன்ய பாஸ்யத்தன்மை சடத்தன்மை= அஸ்வப்பிரகாசத்தன்மை பரதந்திரத்தன்மை=தன்னினும் வேருன சேதனுதீன வியாபாரமுடையதாந்தன்மை, ஈசுவர என்றது சொரூப கீர்த்தனமாம். அல்லது இலௌகிக மாயாவியினிடத்துள்ள மாயைத் தன்மையால் பிரசித்தமான மந்திராதிகளை நீக்குதற் பொருட்டாம்.

மாயை அக்ஞானத்தினும் வேறன்று. திருசியத்தன்மை முதலிய வற்ருல், சொப்பன பிரபஞ்சாதிபோன்று, சொப்பன பிரபஞ்சம் முதலியது வாஸ்தவமாக அக்ஞானத்தினும் வேறன்ரும் ஆதலின் சாத்தியவைகல்ய மின்ரும். மாயைக்குக் காரியத்தன்மையின்மையால் வாஸ்தவமாக அஞ்ஞானத்தினும் பேதமில்லாதபோது அதன் வடிவத்துவமே சித்திக் கின்றது என்பது கருத்து. சூக்ஷ்ம தேகத்திற்கு பிராந்தித்துவப் பிரசித்தியின்மையின் திருஷ்டாந்தத்தன்மை பொருந்தாது ஆதலின் அதனை திருஷ்டாந்த வரிசையில் சேர்த்துப்படித்தல் அநாதரத்தாலாம். அல்லது மாயை யவித்தைகளின் பேதவாதியினுல் ஆத்தியான்மிக சூக்ஷ்ம தேகத்திற்கு அவித்தையா மயத்தன்மையை அங்கீகரித் தலினுலாம். வியாப்தி ஞானத்திற்குச் சாதனமான அதிக சாஹசர்ய

(உடன் நிகழ்ச்சி) தெரிசனத்தைக் காண்பித்தற்பொருட்டு அநேக திருஷ்டாந்தத்தின் உபாதானமாம். இவ்வாறாகவே ஆகாசாதி பிரபஞ்சம் அஞ்ஞானத்தின் காரியமாமென சித்திக்கின்றது என்பது கருத்து. (169)

(அ) இப்போது மாயையின் காரியத்தன்மையால் பிரசித்தமான ஆகாசாதியினைப் பக்ஷமாகக்கொண்டும் வேறு ஏதுவால் அதன் அபேதாநுமானத்தைக் கூறுகின்றார் :—

एकाज्ञानविकल्पितं सकलमेवाकाशपूर्वं जग-
द्बाध्यत्वादिह यद्यदीदृशमदस्तादृङ्मतं स्वप्नवत् ।
बाध्यं चेदमभीप्सितं भवति वस्तस्मादिदं तादृशं
शुद्धं धूमवदेव साधनमिदं तत्पाञ्चरूप्यान्वयात् ॥ १७० ॥

आकाशपूर्वम्–ஆகாசம் முதலான

सकलं जगत्–சர்வப் பிரபஞ்சமும்

एकाज्ञानविकल्पितमेव–ஓரஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்டதேயாம்

बाध्यत्वात्–அதிஷ்டான தத்வக்ஞானத்தால் நிவிருத்தியாதலின்

स्वप्नवत्–சொப்பனப் பிரபஞ்சம்போன்று

வியாப்தியினைக் கூறுகின்றார்

इह–இவ்வுலகின்கண்

यद्यदीदृशं–எது எது பாத்தியமோ

अदः तादृक्–அது அது அஞ்ஞான கற்பிதமாமென

मतम्–கருதப்பட்டுள்ளது

इदं बाध्यं –இந்த ஆகாசாதிபிரபஞ்சம் பாத்தியமாம் என

वः च–வேதாந்திகளான உங்கட்கும்

अभीप्सितं भवति–சம்மதமாம்

நிகமனம் செய்கின்றார்

तस्मात्–அதிஷ்டானஞானபாத்தியமாதலால்

इदं–ஆகாசாதிப் பிரபஞ்சம்

**तादृशं**-அஞ்ஞான கற்பிதமாம்

ஈண்டு அசித்தி முதலிய தோஷத்தின் சங்கை செய்யத்தக்க தன்றென்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

**इदं साधनं**-பாத்தியத்தன்மை வடிவ இந்த ஏதுவானது

**धूमवत्**-தூமம்போன்று

**शुद्ध एव**-பரிசுத்தமேயாம்

நிர்த்தோஷத்தன்மையின்கண் தூமம்போன்று என்பது திருஷ்டாந்தமாம். [சுத்தத்தன்மையின்கண் ஏதுவினைக் கூறுகின்றார்]

**तस्य पाञ्चरूप्यान्वयात्**-பாத்தியத்தன்மை வடிவ ஏதுவிற்கு பக்ஷ தருமத்தன்மை முதலிய ஐந்து வடிவத்தோடு அன்வயமிருத்தலின்.

சாக்கிரப்பிரபஞ்சத்திற்கும் சொப்பனாதிகட்கும் "ஈண்டு நானா வானவை சிறிதுமில்லை" என்பது முதலிய சுருதியினால் பாத்தியத் தன்மையுண்மையினாலும் விபக்ஷ ஆன்மாவின்கண் பாத்தியத்தன்மை யில்லாமையாலும் இவ்வநுமானத்திற்கு ஐந்து வடிவம் உள்ளதேயாம். ஆதலால் அசித்தி முதலிய ஏதுப்போலி இல்லாமையின் இவ்வநுமானம் சுத்தமாமென்பது பொருள். ஆகாசாதி ஏகாஞ்ஞானத்தின் காரியமாம். பாத்தியமாதலால், சம்மதம்போன்று, இதனால் அதன் காரணத்தன்மை யால் பிரசித்தமான மாயை அஞ்ஞானமாகவே சித்திக்கின்றது என்பது கருத்து. ஏகமென்னும் பதம் சொரூபத்தைச் சொல்லுதலாம். நானா அஞ்ஞானத்தால் அர்த்தாந்தரத்தை நிவர்த்தித்தற் பொருட்டுமாம். (170)

(அ) அற்றேல் "அநேக வடிவங்களாவேனென அப் பரமான்மா ஈக்ஷணஞ்செய்தது" என்பது முதலிய சுருதி பிரம்மத்திற்கு சகத் காரணத் தன்மையைப் பிரதிபாதிக்கின்றது. ஏகாஞ்ஞானத்திற்கு விலக்ஷண அநேக வஸ்துக்களின் உபாதானத் தன்மை சம்பவிக்கிற தில்லை. ஆதலின் அஞ்ஞானத்திற்கு ஆகாசாதியின் காரணத்தன்மை அநுமானம் சுருதிவிருத்தமாம் என்னும் சங்கையை யநுவாதஞ்செய்து நிராகரிக்கின்றார் :—

**अनुमानमागमविरुद्धमिदं प्रतिवादिनो यदि मतं तदसत् ।**
**न तमोऽतिरिच्य जगतो जनकं प्रतिपादकं वचनमस्ति यतः ॥ १७१ ॥**

इदम् अनुमानम्-மேற் சுலோகத்திற் கூறப்பட்ட அநுமானம்

आगमविरुद्धम्-பிரம்மத்திற்கு சகத்காரணத் தன்மையைப் பிரதி பாதிக்கும் சுருதியால் பாதிதமாமெனை

प्रतिवादिनः-பிரபஞ்சம் பிரம்மத்தின் பரிணாமமாமென்னும் வாதி கட்கும் மாயை சத்தியமென்னும் வாதிகட்கும்

यदि मतम्-சம்மதமாயின்

तदसत्-அது சரியன்று

அல்லது மாயை அஞ்ஞான சத்தங்கட்கு பரியாயத்தன்மை யின்மையினா அவற்றின் அருத்தங்கட்கும் பேதமேயாமாதலின் "மாயையைப் பிரகிருதியென அறியவேண்டும" என்பது முதலிய சுருதியால் இந்த அநுமானம பாதிதமாம் என்பது சங்கையின் கருத்து.

அது எதனல் சரியன்று என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

तमोऽतिरिच्य-அஞ்ஞானத்தினும் வேருக

जगतः जनक- } சகத்தின் காரணத்தைப்
प्रतिपादकम्- } பிரதிபாதிக்கும்

वचनम्-வாக்கியம்

न अस्ति यतः-இன்ருமாதலின்

அசங்கமும் கூடஸ்தமுமான பிரம்மத்திற்கு நேரே சகத்தின் பரிணாமம் பொருந்தாமையாலும் "இந்திரன் மாயைகளால்" என்பது முதலிய சுருதிகளாலும் பரிணமிக்கின்ற அவித்தையின் அதிஷ்டானத் தன்மையே பிரமமத்தின்கண் காரணத்தன்மையாமாதலின அவித்தைக்கு உபாதானத்தன்மை சுருதிவிருத்தமன்ரும். இவ்வாறு "भूयश्चान्ते विश्वमाया निवृत्तिः" (மறுபடியும் அந்தத்தில் சகத்காரண மாயை நிவர்த்தியாம்) என மாயைக்கும் ஞானநிவர்த்தியத்தன்மை கேட்கப் படுதலால் அஞ்ஞானத்தோடு அபேதமேயாம். பரியாயசத்தபேதங்களோ ஒரு வஸ்துவின கண்ணும் பிரவிருத்தி நிமித்த பேதத்தால் பொருந்து கின்றன. ஆதலின் அநுமானம் ஆகமவிருத்தமன்ருமென்பதுகருத்து.

## பிரம்மத்திற்கே அஞ்ஞானத்திறுசிரயத்தன்மை

(அ) பிரபஞ்சத்திற்கு அஞ்ஞான காரியத்தன்மையை யங்கீகரிக்கின் சுத்திரஜதாதிக்குச் சமானமாதலின் அதன் (சுத்திரஜதாதியின்) சமானமான சாமக்கிரி ஜன்னியத்தன்மை கூறுதல் வேண்டும். அஃது சம்பவிக்கிறதில்லை என்னுங் சங்கைக்கு ஈண்டும் அஃது உளதேயாம் என்னுங் கருத்தால் முன்பு கூறப்பட்ட பிரர்ந்தியின் காரணத்தைத் திருஷ்டாந்த சகிதம் நினைப்பூட்டுகின்றுர் :—

> विषयकरणदोषान्न भ्रमः संविदि स्या-
> दपि तु भवति मोहात्केवलादेवमेव ।
> भगवति परमात्मन्यद्वितीये समस्त-
> द्वयमतिरियमस्तु भ्रान्तिरज्ञानहेतुः ॥ १७२ ॥

संविदि—பிரமாணத்தின் பயனுன கடாதி ஞானத்தின்கண்

भ्रमः—நையாயிகர் முதலியோருக்குண்டாகும வேத்தியத்தன்மை யனித்தியத்தன்மை முதலான யாதொரு பிராந்தியுண்டோ அஃது

विषयकरणदोषात्—சாதிருசியம் முதலிய விஷய தோஷத்தாலும் காச முதலிய கரண தோஷத்தாலும்

न स्यात्—சம்பவிக்கிறதில்லை

अपि तु—மற்றோ

केवलान्मोहादेव—கேவல அஞ்ஞானத்தாலேயே

भवति—உண்டாகின்றது

एवम्—எவ்வாறு சம்வித்தின்கண்ணே வேத்தியத்துவாதி ஞானம் பிராந்தியாமோ அவ்வாறு

अद्वितीये—அத்துவிதீயமும்

भगवति—பகவானுமாகிய

परमात्मनि—பரமான்மாவின்கண்

इयं समस्तद्वयमतिः—இந்த ஸர்வ துவைத ஞானமும்

**भ्रान्तिः**-எதனுல் பிராந்தியாமோ அதனுல்

**अज्ञानहेतुः**-அஞ்ஞானமாத்திரத்தினை ஏதுவாகவுடையதாக

**अस्तु**-இருக்குக. (172)

இந்தச் சுலோகத்திற்கு விசேஷவுரை முதலத்தியாயத்தின்கண் 80வது சுலோகத்தின்கண் எழுதப்பட்டுள்ளது ஆண்டு காண்க.

(அ) பிரம்மத்திற்கே அஞ்ஞானுசிரயத்தன்மையையங்கீகரிக்கின் அவித்தையின் காரியமாய துக்கமுதலிய சம்சாரத்திற்கும் சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றிற்கும் உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும் வியவஸ்தை எப்படி சித்திக்கும். அவித்தையின் காரியங்கட்கும் அதனுசிரயத்தன்மைக்கும் ஓரிடத்திலிருத்தலே உசிதமாதலின் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றூர்:—

अज्ञानिनो भवति दुःखमनेन क्लप्तं,
सर्वेश्वरस्य न खलु प्रतिभासतोऽपि ।
सर्वज्ञतादिगुणजातममुष्य नास्य
संसारिणः स्फुरति मोहसमन्वितस्य ॥ १७३ ॥

**अज्ञानिनः**-நித்திய முக்த நிரதிசயானந்த தனது சொரூபஞானமின்றிய சீவனுக்கு

**अनेन क्लप्तम्**-அஞ்ஞானத்தால் பரிணமிக்கப்பட்ட

**दुःखं भवति**-துக்கமுண்டாகின்றது

**सर्वेश्वरस्य**-சொருபாவரணமின்றிய பரமேஸ்வரனுக்கோ

**प्रतिभासतोऽपि**-ஆபாசமாத்திரத்தாலும்

**न खलु**-துக்கமுண்டாகின்றதில்லை

**अमुष्य**-இவ் ஈஸ்வரனது

**सर्वज्ञतादिगुणजातम्**-சர்வச்ஞத்தன்மை முதலிய குண சமுதாயம்

**मोह समन्वितस्य**-அறியாமையோடு கூடிய

**अस्य संसारिणः**-சமுசாரியாகிய சீவனுக்கு

**न स्फुरति**-விளங்குகின்றதில்லை-இன்றென்பது கருத்து.

சீவனுக்கு சருவஞ்ஞத் தன்மை முதலியவற்றின் அபாவத்தின்கண் ஏதுவாக அவனை விசேஷிக்கின்ருர் அறியாமையோடு கூடிய என.

ஓரஞ்ஞானத்தின் காரியம் ஒன்றன் கண்ணேயே பொருத்தமாம் என்பது சத்தியந்தான். சமுசாரியும் நித்திய முத்த ஈசுவரனும் ஓர் சைதன்னிய மாத்திர வடிவினராதலின் பிரகிருதத்திலும் அஃது இருத்தலின் ஆனால் பிராந்தியாற் சித்தித்த துக்கத்துவம் முதலியது அதிஷ்டான விசேஷ ஸ்புரணமின்றியதும் பிரதிபிம்ப வடிவத்தால் சீவ பாவத்தை அடைந்துள்ளதுமான சேதனத்தின் கண் பொருந்துகின்றது. சருவஞ்ஞத் தன்மை முதலியதோ சுருதி முதலியவற்றின் பலத்தால் மறைப்பின்றிய பிம்ப வடிவ பிரம்மத்தின் கண்ணேயே பொருத்தமாம். இவ்வாறு யுத்தியாலும் அநுபவம் முதலியவற்றாலும் அதன (சருவஞ்ஞத் தன்மை கிஞ்சிஞ்ஞத்தன்மையின்) வியவஸ்தை இந்த பதத்தின் கண்ணும் விரோதமின்றுமென்பது கருத்து. (173)

(அ) இந்தப் பிரகாரம் சீவனது அஞ்ஞத் தன்மையைப் பிரதிபாதிக்கின்ற பாஷியக்காரர் முதலியோரது வசனத்திற்குத் தனது மதப்படி அபிப்ராயம் வருணிக்கப்பட்டது அதனை யுபசம்மாரஞ் செய்கின்ருர் :—

जीवन्मुक्तिगतो यदाह भगवान् सत्सम्प्रदायप्रभु-
जीवाज्ञानवचस्तदीदृगुचितं पूर्वापराऽऽलोचनात् ।
अन्यत्रापि तथा बहुश्रुतवचः पूर्वापरालोचनात्
नेतव्यं परिहृत्य मण्डनवचस्तद्‌ध्यन्यथा प्रस्थितम् ॥

जीवन्मुक्तिगतः–சீவன் முத்தியை யடைந்தவரும்

सत्संप्रदायप्रभुः–சன்மார்க்கப் பிரவர்த்தகருமான

भगवान् –ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள்

अन्यत्रापि–பாஷ்யத்தின் கண்

जीवाज्ञानवचः–ஜீவனது அஞ்ஞானமென்னும்

यदाह யாதொரு வசனத்தைக் கூறினரோ

तद्–அந்த வசனம்

पूर्वापरालोचनात्–முன் பின் விசாரித்துப் பார்த்தலால்

**ईदृगुचितम्**-இப்படியேயுசிதமாம் அதாவது விஸ்பஷ்டப் பிரதிதீயை யநுசரிதது சீவாசிரய மெனப்பட்டது

**अन्यत्रापि**-இதரக் கிரந்தங்களிலும்

**पद्मश्रुतवचः**-பத்மபாதர் முதலியோர் வசனம்

**पूर्वापरालोचनात्**-முன் பின் விசாரித்தலால்

**तथानेयम्**-அவ்வாறே செலுத்தத்தக்கதாம்

அப்படியானல் மண்டனமிசிரர் முதலியோர் சீவனுக்கு அஞ்ஞானு சிரயத்தன்மையை ஏன் கூறினர்கள் என்னுஞ்சங்கைக்கு அதுவோ மதாந்தரமாம் பாஷியக்காரரது மதமன்றும் எனக்கூறுகின்ருர்.

**मण्डनवचः परिहृत्य**-மண்டனமிசிரரது வாக்கியத்தைப்பரித்தியாகஞ் செய்து அவ்வாறு செலுத்தத்தக்கதாம் எனக்கூட்டுக

மண்டனமிசிரரது வாக்கியம் மேற்கூறிய அபிப்ராயப்படி வருணிக்கத்தக்கதன்றென்பது பொருள். அதன்கண் ஏதுவினைக் கூறுகின்ருர்.

**तद्धि**-மண்டனமிசிரரது மதமோ

**अन्यथा**-கூறப்பட்டதனினும் விலக்ஷணமாகவே

**प्रस्थितम्**-ஆரம்பிக்கப்பட்டது (174)

## சீவேஸ்வரர்கட்கு விலக்ஷணத்தன்மை

(அ) பாஷியக்காரரது வசனத்தையே அர்த்தத்தால் தெரிசிப்பிக்கின்ருர் :—

जीवस्य कार्यकरणाधिपतेरविद्या
दोषान्वितस्य तमसावृतमन्ददृष्टेः ।
ज्ञानं निरावरणमैश्वरमित्यपीदं
भाष्याक्षरं कथितनीतिवशेन योज्यम् ॥ १७५ ॥

**कार्यकरणाधिपतेः**-தூல சூட்சும தேகங்களால் அவச்சின்னமும்

दोषान्वितस्य—முன் பின் பிராந்தியின் காரியமான சம்சார வாசனை யாகிய தோஷத்தோடு கூடினவனும்

तमसावृतमन्दद्दष्टेः—அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட அத்துவைத சொருப சைதன்யத்தை யுடையவனுமான

जीवस्य अविद्या—ஜீவனுக்கு அஞ்ஞானமாம்

ऐश्वरम् ज्ञानम्—ஈஸ்வரனுக்கு நித்திய முக்த சொருபஸ்புரணம்

निरावरणम्—மறைப்பின்றியதாம்

इत्यपि भाष्याक्षरम्—என்னும் பாஷ்ய வசனமும்

कथितनीतिवशेन—கூறப்பட்ட நீதி வசத்தால் அதாவது நான் அஞ்ஞன் என்னும் அனுபவ வசத்தால்

योज्यम्—பொருத்தத்தக்கது

தேகத்தால் அவச்சின்னத் தன்மையில் ஏதுவாக ஜீவனை விசேஷிக்கின்றார் தோஷததோடு என.

அத்தோஷத்தின் கண் ஏது அஞ்ஞானத்தால் என்பது. ஈஸ்வரனது ஸ்புரணம் என்பது கற்பித பேதத்தினலாம். ஞானத்தினும் வேருக ஈஸ்வரனின்மையின் அக்ஷரப் பிராமமணத்தின் கண் பாஷ்யக்காரரால் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

**अविद्याविशिष्टः कार्यकरणोपाधिः आत्मा जीव उच्यते । नित्य-निरतिशय ज्ञानशक्त्युपाधिरात्मान्तर्यामीश्वर उच्यते ॥**

(அவித்தியா விசிட்டனும் கார்ய கரணத்தை யுபாதியாகவுடையவனுமான ஆன்மா ஜீவனெனப்படுகின்றது. நித்திய நிரதிசய ஞான சக்தியாகிய உபாதியினையுடைய ஆன்மா அந்தர்யாமி ஈஸ்வரனெனப் படுகன்றது) என. அவ்வாறே கீதாபாஷ்யத்தின கண்ணும்

**त्वं न जानीषे धर्माधर्मप्रतिबद्धज्ञानशक्तित्वात् । अहं तु नित्य-शुद्धबुद्धमुक्तस्वभावत्वात् , अनावरणज्ञानशक्तित्वात् वेद ॥**

நீ தர்மாதர்மத்தால் தடுக்கப்பட்ட ஞான சக்தியுடைமையின் அறியாய். நானே நிததிய சுத்த புத்த முத்த சுபாவததால் மறைக்கப்படாத ஞான சக்தியையுடைமையின் அறிகின்றேன் என்பது முதலாக கூறப் பட்டுளது. (170)

(அ) நீதியினையே விஸ்தரிக்கின்றார் :—

स्पष्टं तमःस्फुरणमत्र न तत्र तद्व-
त्सर्वेश्वरे तदिति तत्र निषिध्यते तत् ।
बिम्बे तमो निपतिते प्रतिबिम्बके वा
देहद्वयावरणवर्जितचित्स्वरूपे ॥ १७६ ॥

**अत्र**–இந்த ஜீவனிடத்தில்

**तमः स्फुरणम्**–அஞ்ஞானத்தின் பிரதீதி

**स्पष्टम्**–வெளிப்படையாம்

**तद्वत्**–ஜீவனிடத்திற்போன்று

**तत्र सर्वेश्वरे**–அந்த பரமேசுவரனிடத்து

**तत्**–அஞ்ஞானத்தன் ஸ்புரணம்

**न इति**–இன்ருதலின்

**तत्र**–பரமேசுவரனிடத்து

**तत् निषिध्यते**–அது நிஷேதிக்கப்படுகின்றது

ஏகான்மவாதத்தின்கண் ஜீவேஸ்வரர்களின் விபாகம் சம்பவியாமையின் இந்த அந்த என்னும் கூற்று எவ்வாறும் என்னும் சங்கைக்கு அதன் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

**बिम्बे वा**–பிம்ப ஈசுவரனிடத்திலாவது அல்லது

**तमो निपतिते**–அஞ்ஞானத்திற்றொடர்ந்துள்ள

**प्रतिबिम्बके**–பிரதிபிம்ப ஈசுவரனிடத்திலாவது

**देहद्वयावरण – वर्जितचित्स्वरूपे** – தூலர் சூக்ஷுமம் என்னுமிரண்டு தேகங்களாகிய அவச்சேதகமின்றிய (அபிமானமின்றிய) யாதொரு சிற்சொரூபமுண்டோ அதனிடத்திலாவது அஞ்ஞானத்தினநுபவம் பஷ்டமின்மையின் அது நிஷேதிக்கப்படுகின்றது.

பிரதிபிம்ப ஈசுவரன் என்றது மதாந்தரமாம். இந்த மதத்தில் அஞ்ஞானமாத்திரத்தில் பிரதிபிம்பத்தன்மை ஈசுவரத்தன்மையாமென

விவக்ஷிக்கப்பட்டது. அகங்கார தாதான்மியமுற்ற அஞ்ஞானப் பிரதி பிம்பத்தன்மை சீவத்தன்மையாமென உணர்க. ஈசுவரனிடத்தில் அஞ்ஞானம் பஷ்டமின்று மென்பதன்கண் ஏதுவாக பிம்பம் பிரதிபிம்ப மென்னுமிரண்டு பக்ஷத்திலும் சாதாரணமான ஈசுவரனது சொருபத்தைக் கூறுகின்றார் தூலம் சூக்ஷுமமென. ஈசுவரனுக்கு அகங்காரமின்மை யினால் நான் அஞ்ஞன் என்பதாதியால் பஷ்டமாக அநனனுபவமின்று மாதலின் ஆசாரியர்களுக்கு அதன்கண் அதன் நிஷேதமாமென்பது கருத்து. அதாவது சுத்தசேதனத்தின்கண் அஞ்ஞானத்தின் நிஷேதமா மென்பது கருத்து. (176)

(அ) இக்காரணத்தாலேயே சீவேசுவரர்கட்கு கிஞ்சிஞ்ஞத்தன்மை சருவஞ்ஞத்தன்மையைப் பிரதிபாதிக்கும் பாஷியக்காரர் முதலியோரது வசனத்திற்கும் அஞ்ஞானத்தால் மறைபட்ட சுவசொருபத்துவத்திலும் அதனபாவத்திலும் தாற்பரியமாம். கிஞ்சிஞ்ஞத்தன்மை, சருவஞ்ஞத் தன்மைகட்குக் காரணமாந்தன்மையால் முறையே சீவேசுவரரிடத்து அஞ்ஞானமும் அதனபாவமுமிருப்பதன்கண் தாற்பரியமன்றும் என்னுங் கருத்தாற்கூறுகின்றார் :—

किंचिज्ज्ञताऽस्य तमसावृतनित्यदृष्टेः
सर्वज्ञता पुनरमुष्य परस्य पुंसः ।
अज्ञानतज्जकरणादिविवर्जितत्वा-
दित्येतदेवमुपपन्नतरं हि भाष्यम् ॥ १७७ ॥

अस्य – ஜீவனுக்கு

तमसावृतनित्यदृष्टेः– அஞ்ஞானத்தால் சொருபதிருஷ்டி மறைக்கப் பட்டிருத்தலின்

किंचिज्ज्ञता– அற்பஞ்ஞத்தன்மையாம் அஞ்ஞானத்தின் ஆசிரயத் தன்மையாலன்று

पुनः अमुष्य परस्य पुंसः– அப்பரமான்மாவிற்கு

अज्ञानतज्जकरणादिविवर्जितत्वात् – அஞ்ஞானமும் அதனாலுண்டாய அகங்காராதியுமில்லாமையால் அதாவது ஆவரண மில்லாமையால்

सर्वज्ञता—சருவஞ்ஞத் தன்மையாம் அஞ்ஞானத்தின் அநாசிரயத் தன்மையாலன்று

इत्येतदेवं भाष्यम् – என்னுமிவ்வர்த்தத்தைப் பிரதிபாதிக்கும் பாஷியம்

उपपन्नतरम्—அத்தியந்தம் பொருத்தமுடையதாம்

அஞ்ஞானத்தால் என்பது அகங்காராதிக்கும் உபலக்ஷணமாம்.

(அ) ஈசுவரனுக்கு சருவஞ்ஞத் தன்மையும் சீவனுக்கு கிஞ்சிஞ்ஞத் தன்மையும் கூறப்பட்டது. அவர்களுக்கு அவற்றின் விபரீதாநுபவாபாவத்தால் அதனைத் திடஞ்செய்கின்றார் :—

अज्ञोऽहमित्यवगतिर्न परस्य पुंसः सर्वज्ञताऽवगतिरात्मनि नास्य पुंसः।
अत्रापि कारणमहंकृतिवर्जितत्वं तद्भृता च परमेऽल्पतरे च पुंसि ॥

परस्य पुंस :—பரமேஸ்வரனுக்கு

अहमज्ञः इत्यवगतिः न—நான் அஞ்ஞன் என்னும் ஞானமின்றும்

अस्य पुंस : – இச்சீவனுக்கு

आत्मनि – தன்னிடத்து

सर्वज्ञतावगतिः – சருவஞ்ஞத்தன்மையின் ஞானம்

न – இன்றும்

अत्रापि – கூறப்பட்ட அனுபவத்தின் அபாவத்தின் கண்ணும்

कारणम् – காரணமானது

परमे – பரமேஸ்வரனிடத்து

अहंकृतिवर्जितत्वम् – அகங்காரமில்லாமையும்

अल्पतरे च पुंसि – பரிச்சின்ன சீவனிடத்து

तद्भृता च – அகங்காரத்தின் தாதாத்மியமும் ஆம் (178)

(அ) அற்றேல் ஸ்ரீ கிருஷ்ணன் ரகுநாதன் முதலியோருக்கு சுருதி இதிகாச புராணங்களின் பிரமாணத் தன்மையால் ஈஸ்வரத்தன்மை கூறுதல் வேண்டும். அவருக்கு அகங்கார சம்பந்தமிருத்தலால் ஈஸ்வரனுக்கு அகங்கார சம்பந்தமில்லாமை எங்ஙனமாம் என்னுஞ் சங்கைக்கு ஏது அசித்தமாமென்னுங்கருத்தால் கூறுகின்றார் :—

**बिम्बस्य नापि तमसि प्रतिबिम्बकस्य संघट्टनं क्वचिदहंकरणेन शक्यम् ।**
**वक्तुं प्रभोः सकललोकहितावतारस्वेच्छाविनिर्मितवपुर्वरमन्तरेण ॥**

**बिम्बस्य** – பிம்ப ஈசுவரனுக்காவது

**तमसि प्रतिबिंबकस्य प्रभोः** – அஞ்ஞானத்திற் பிரதிபிம்பித்த ஈசுவரனுக்காவது

**क्वचित् अपि** – எவ்விஷயத்திலும்

**अहंकरणेन** – அகங்காரத்தால்

**संघट्टनम्** – மோகமுளதாமென்று

**वक्तुं न शक्यम्** – கூறுதற்குத்தகாது

பிம்பபிரதிபிம்ப என்றதனுல் ஈசுவர விஷயமாக முன்பு கூறப்பட்ட இரண்டுபக்ஷம் தெரிசிப்பிக்கப்பட்டது. அகங்காரமானது நான் இவ்விடத்திலேயேயிருக்கின்றேன் என்னுமநுபவத்தால் பரிச்சின்ன சீவனிடத்திலேயே கூறத்தக்கதாம். ஆதலால் சருவான்மக ஈசுவர னிடத்தில் அஃது சம்பவியாது. ஈசுவரனுக்கு அகங்காரம் வியாபகமாக இருக்கட்டுமே என்று சொல்லற்க. அதன்கண் பிரமாணமின்மையின் சரீரசம்பந்தம் சுத்த சத்துவமாயையினுல் (அகங்காரத்திற்குப்போன்று) அகங்காரமின்றியும் பொருந்துதலின் சரீரசம்பந்தம் அகங்காரசாதக மன்ரும். தனது சொருபாவரணமின்றிய ஈசுவரனுக்கு பரிச்சின்னுகங் காரத்தின் அபிமானம் சம்பவிக்கிறதில்லை. துக்காதியின் தருமியாகிய அகங்காரத்திற்கு ஈசுவரனிடத்தில் சப்பவமுமின்ரும். பிரசித்த அகங்காரத்தினும் விலக்ஷண அகங்காரமும் சம்பவியாமையின் **अहमात्मा गुडाकेश** (ஏ அர்ச்சுன நான் ஆன்மா) என்பது முதலிய இடங்களில் நான் என்னும் சத்தத்திற்கு சுத்தான்மாவின்கண் லக்ஷணை யாம். இவ்வாருகும்போது முக்கிய விருத்தியால் ஈசுவரனுக்கு அகங்கார சம்பந்தம் சம்பவியாதென்பது கருத்து.

[இவ்வாருயின் அவனுக்கு சரீர சம்பந்தந்தான் எப்படிக்கூடும். அஃது அகங்காரத்தின் தருமமான கருமத்தினதீனமாதலால் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.]

सकललोकहितावतारस्वेच्छा-
विनिर्मितवपुर्वपुरन्तरेण

கம்சன் முதலிய அசுரரையும் இராவணன் முதலிய அரக்கரையும் வதைத்தலால் சருவ ஜனங்களுக்கும் இதத்தின்பொருட்டு யாதொரு அவதாரமுண்டோ அதாவது தனது இச்சையினுல் செய்யப்பட்ட சிறந்த தேக முண்டோ அதனை விடுத்து மற்றவிடத்தில் ஈசுவரனுக்கு அகங்காரத்தால் சம்பந்தமின்றும் எனக்கூட்டுக.

ஈசுவரனுக்கு சரீரம் போகத்தின் பொருட்டன்றும் எதனுல் அது கருமத்தால் சம்பாதிக்கப்பட்டதாகும் எதனுல் அது இல்லாவிடின் இல்லாமற்போம். மற்றுே பிரமாதிகளுடைய பிரார்த்தனையால் இன்ன குலத்தில் நான் ஆவிர்ப்பவிப்பேன் என அவருக்கு இச்சையுண்டாம். அவ்விச்சையினுலேயே அவரது தேகம் உண்டுபண்ணப்பட்டதாம். நம்மனோரது தேகம் போன்று கருமத்தின் அதீனமன்றும். ஆதலின் கூறிய தோஷமின்றும். ஈண்டு தனது இச்சையினுல் என்பதனுல் சரீரக்கிரகணத்தின்கண் சுதந்திரத்தன்மையினை சூசிப்பிக்கின்றுர். இதனுலேயே பிரபு எனப்பட்டது. தனது பக்தர்களின் இச்சையால் எனினும் அமையும். அவ்வியக்தப் பிரம்மத்தின் அநுசந்தானம் அத்தியந்தம் கடினமாதலால் தனது பக்தர்களின் வாஞ்சையைப் பூரணம் பண்ணும் பொருட்டு அசரீரனுகிய பகவானுக்கும் தனது மாயையால் அதன் அடைவு கூடும் என்பது கருத்து (அவதார தேகத்தின்கண் வியவகாரசித்தியின் பொருட்டு அகங்காரம் பிரபுவால் சுதந்தரத்தன்மையால் அங்கீகரிக்கப்பட்டது என்பது கருத்து.) (179)

(அ) இந்தப்பிரகாரம் பிரமாணமின்மையினுலும் அநுபபத்தியினுலும் ஈசுவரனுக்கு அகங்கார சம்பந்தம் இன்றென்று கூறப்பட்டது. இப்போது அதனபாவமாகுங்கால் அநுபவிக்கப்படாததாயினும் அவனது சொரூபாவரக அஞ்ஞானம் எதன் வலியால் சித்திக்கும். அன்றியும் அதனினும் வேருக அப்படிப்பட்ட அஞ்ஞானத்தின் காரியமும் அவனிடத்தில் இன்றுமென்னுங்கருத்தாற் கூறுகின்றுர் :—

नाहंकृतिं च परिहृत्य तमस्विताधीः
सम्भाव्यतेऽपहतपाप्मनि नित्यमुक्ते ।

तामन्तरेण घटते न च मूढभाव-
सम्भावनाऽपि परमेशितरि प्रसन्ने ॥ १८० ॥

**अपहतपाप्मनि** – இயற்கையாகவே பாபமற்ற

**नित्यमुक्ते** – நித்யமுத்த பரமேசுவரனிடத்தில்

**अहंकृतिं च परिहृत्य** – அகங்காரத்தை விட்டும்

**तमस्विताधीः** – அஞ்ஞானத்தின் புத்தி

**न सम्भाव्यते** – சம்பாவிக்கப்படுகின்றதில்லை விட்டும் என்ற உம்மையால் காரியாந்தரத்தின் அபாவத்தை சூசிப்பிக்கின்றார் அதன்கண் ஏது பாபமற்ற என்பது. [அஞ்ஞானத்தின் புத்தி யில்லாதபோது திரண்டபொருளைக் கூறுகின்றார்.]

**प्रसन्ने परमेशितरि** – பிரசன்னனான பரமேசுவரனிடத்தில்

**ताम् अन्तरेण** – நான் அஞ்ஞன் என அஞ்ஞான விஷயக புத்தியைவிட்டு

**मूढभावसम्भावना अपि** – மூடத்தன்மையின் சம்பாவனையும்

**न च घटते** – பொருந்துகிறதில்லை.

பிரமாணமின்றிப் பிரமேயம் சித்தியாதென்பது கருத்து. மூடத் தன்மை—ஆவிருத சொரூபத்தன்மை. பாபமற்ற என்பதனால் சூசிப் பிக்கப்பட்ட பொருளை வெளிப்படுத்துகின்றார் பிரசன்னன் என. அநவச்சின்னத் தன்மையால் பிரகாசிக்கின்ற என்பது பொருள். (180)

(அ) அற்றேல் ஈசுவரனுக்கும் சரீரத்தையங்கீகரிக்கின் அஞ்ஞத் தன்மையவசியம் கூறவேண்டும் சரீரித்தன்மை அஞ்ஞத்தன்மையின் வியாப்பியமாதலால் அப்படிக்கன்றேல் முக்தனிடத்திலும் அஃது உண்டாதல் வேண்டும் ஆதலின் எனின். உண்மைதான். ஈசுவர னிடத்தும் சகத்காரண அஞ்ஞானம் உளதேயாம் அங்ஙனமாயினும் அவனுக்கு அஞ்ஞத்தன்மையின்றென்று கூறப்பட்டது. முத்தனிடத்தோ அதுவும் இன்றாமென்பது விசேஷமாம். அதன்கண் நிமித்தம் சருவஞ்ஞத்தன்மையால் அதன் வசித் தன்மையாம். சீவனோ அதன் வஸ்யனும் ஆதலின் ஒரே ஆன்மதத்வம் அதன் அபிபாவகமும் அதன் அபிபூதமுமாம் என்னுங்கருத்தால் சொல்லுகின்றார்:—

स्वेच्छाविनिर्मितवपुः भजतोऽपि तस्य
नाज्ञानितावगतिरस्ति वशित्वहेतोः ।
वश्यत्वहेतुकमिदं स्फुरणं नराणां
नाहं विजान इति नास्ति तदीश्वरस्य ॥ १८१ ॥

स्वेच्छाविनिर्मितवपु: – தனது இச்சையினுல் செய்யப்பெற்ற தேகத்தை

भजतोऽपि – ஆசிரயிக்கின்றவனுயினும்

तस्य – அவ்வீஸ்வரனுக்கு

अज्ञानितावगतिः – அஞ்ஞத்தன்மையின் ஸ்புரணம்

न अस्ति – இன்ரும்

वशित्वहेतो : – அஞ்ஞானத்தைக்குறித்து நியந்தாவாதலால்

नराणाम् – சீவர்கட்கு

अहं न विजाने इति – நான் அறியேன் என்னும்

इदं स्फुरणम् – இந்த ஞானம்

वश्यत्वहेतुकम् – அதனுல் சொருபம் மறைபட்டிருத்தலின் அதன் பரதந்திரத்தன்மை வடிவ ஏதுவினை யுடையது

ஈஸ்வரனுக்கு அஞ்ஞாஞசிரயத் தன்மையுடன்படின் அதன் வஸ்யத்தன்மையேயாம் என்னுஞ்சங்கைக்கு மாயா விசிஷ்ட சேதனத்திற்கு மஹேஸ்வரத்தன்மையைச் சுருதி போதித்தலின் ஈசுவரனுக்கு அஃதின்ருமெனக்கூறுகின்ருர்

ईश्वरस्य – பரமேஸ்வரனுக்கு

तत् नास्ति – பரதந்திரத்தன்மையின்ரும். (181)

(அ) இவ்வாருயின் இரகுநாதர் முதலியோருக்குப் புராணங்களில் பிரசித்தமான அஞ்ஞத்தன்மை முதலியது எப்படிப்பொருந்தும் என்னுஞ் சங்கைக்கு அப்புராணத்தின் கண்ணேயே அவனுக்குத் தடையற்ற ஐஸ்வர்யம் கேட்கப்படுதலால் அவனுக்கு சருவஞ்ஞத்தன்மையுமுளது அங்ஙனமாயினும் தன்னுல் அங்கீகரிக்கப்பட்ட மனுஷிய தேகத்திற்குரிய

நடனத்தைத் தெரிவித்தற்பொருட்டும் விஷயி புருஷர்களுக்கு சன்மார்க்கத்தைத் தெரிவித்தற்பொருட்டும் தனதிச்சையினலேயே கொஞ்சகாலம் அறியாமையையுடையவனக இருப்பேனக என்னுஞ் சங்கல்ப பூருவகம் அஞ்ஞத்தன்மையின் அபிநயமும் சீதையின அபஹாரணுதி நிமித்தக சோகாதியின் பிரகடனமும் கூடும் என்னுங் கருத்தாற்கூறுகின்றார்:—

सङ्कल्पपूर्वकमभूद्रघुनन्दनस्य नाहं विजान इति कञ्चन कालमेतत् ।
ब्रह्मोपदेशमुपलभ्य निमित्तमात्रं तच्चोत्ससर्ज स कृते सति देवकार्ये ॥

**रघुनन्दनस्य** – ஸ்ரீராமனுக்கு

**कञ्चन कालम्** – துஷ்டராக்ஷஸ நாசபரியந்தம்

**नाहं विजान इति** – நான் அறியேன் என்னும்

**एतत्** – அஞ்ஞத்தன்மை

**सङ्कल्पपूर्वकम्** – தனது இச்சையினலேயே

**अभूत्** – உண்டாயிருந்தது

இவ்வாருயின் அவனுக்கு பிரம்மோபதேசம் முதலியது வியர்த்தமாம் சருவஞ்ஞனிடத்தில் உபதேசம் பயனுடையதாவதின்ருதலின் என்னும் சங்கைக்கு அவ்வுபதேசமும் அவனுக்கு தனது இச்சையினல் சுவீகரிக்கப்பட்ட மநுஷிய வியாபாரமேயாம் என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்.

**ब्रह्मोपदेशम्** – பிரம்மோபதேசத்தினை

**निमित्तमात्रम्** – நிமித்தமாத்திரமாக

**उपलभ्य** – வசிஷ்டர் முதலிய மகரிஷிகளினின்றும் பெற்று

**देवकार्ये कृते सति** – தேவர் முதலியோருக்கு இதத்தின் பொருட்டு பிரதிஞ்ஞை செய்யப்பட்ட இராவணுதியரின் வதமாகிய காரியம் முடிந்தபோது

**सः**– ஸ்ரீராமன்

**तच्च उत्ससर्ज** – சங்கல்ப மாத்திரத்தாற் கிரகித்த அஞ்ஞத்தன்மை யினையும் விட்டொழித்தான்

விட்டானென்றதால் அஞ்ஞானத்தை விடுவதன்கண் சுவதந்திரத் தன்மையைத் தெரிசிப்பிக்கின்றவராய் பிராகிருதனைப் போன்று அஞ்ஞத்தன்மையின் நடனமாத்திரமாம் என்பது தெரிசிப்பிக்கப் பட்டது. (182)

(அ) அஞ்ஞானம் முதலியது ஈஸ்வரனது நடனமாம் என்பதன்கண் ஏதுவாக ரகுநாதர் முதலியோருக்கு பரமேஸ்வர ஸ்வபாவத்தை தெரிசிப்பிக்கின்றவராய் அஃதின்மையினுல் சீவனுக்கு அதன் விபரீதத் தன்மையைக கூறுகின்ருர் :—

अज्ञानवर्जिततया परमेश्वरोऽसौ सर्वज्ञ एव यदहंकृतिबन्धहीनः ।
ज्ञानं निरावरणमिष्टममुष्य यस्माज्जीवस्य सावरणमेव यतोऽनभिज्ञः ॥

यत् अहङ्कृतिबन्धहीनः - ஈஸ்வரன் யாதொரு காரணத்தால் அகங்காரவடிவ பந்தமற்றவனுவனே அக்காரணத்தால்

अज्ञानवर्जिततया – ஆவரணுன்மக அஞ்ஞானமற்றவனும் அத் தன்மையால்

असौ परमेश्वरः – அப்பரமேஸ்வரன்

सर्वज्ञ एव – ஸர்வஞ்ஞனேயாவன்

अमुष्य – பரமேஸ்வரனுடைய

ज्ञानं निरावरणम् – ஞானமானது மறைப்பின்றியதாக

इष्टम् – அங்கீகரிக்கப்பட்டுள்ளது

यस्मात् – யாதொரு காரணத்தினுல்

जीवस्य - சீவனுடைய ஞானம்

सावरणमेव-மறைப்போடு கூடியதே யாமோ

यतः – அக்காரணத்தால்

अनभिज्ञः – அற்பஞ்ஞனேயாவன் (183)

(அ) ஈஸ்வரன் ஸர்வஞ்ஞன் என்பதன்கண் சம்பாவனையை தெரிசிப்பிக்கின்றவராய் அஃதின்மையினுல் சீவனற்பஞ்ஞனுமெனக் கூறுகின்ருர் :—

सर्वप्रमाणफलभूतसमस्तसंविज्जातं बिभर्ति परमः पुरुषो न जीवः ।
ज्ञानं निरावरणमैश्वरमस्तु तस्माज्जैवं च सावरणमस्य विशेषहेतोः ॥

सर्वप्रमाणफलभूत समस्तसंविज्जातम् – சர்வப்பிரமாணங்களின் பயன் வடிவமாயுள்ள சர்வஞான சமுதாயத்தையும்

परमः पुरुषः – பரமேஸ்வரன்

बिभर्ति – தரிக்கின்ருன்

जीवः न – சீவன் தரிக்கின்றதில்லை

तस्मात् – அக்காரணத்தால்

ऐश्वरं ज्ञानं – ஈஸ்வரனது ஞானமானது

निरावरणमस्तु – மறைப்பின்றியதாம்

जैवं च – சீவனது ஞானம்

सावरणम् – மறைப்போடு கூடியதாம்

अस्य – இவ்வஞ்ஞானத்திற்கு

विशेषहेतोः – விசேஷமிருத்தலின்

தேவர் மனுஷ்யர் திரியக்கு முதலிய சர்வப்பிரமாதாக்களின் நேத்திரம் முதலிய சர்வப்பிரமாணங்களால் அபிவ்யக்தமாகுந் தன்மையால் அவற்றின பயன் வடிவமாயுள்ள சர்வ பிரமேயங்களின் ஞானத்தினை பரமேஸ்வரன் தரிக்கின்ருன் பரமேஸ்வரனே அனந்த சித்ரூபனுதலின் எல்லாருடைய சர்வப்பிரமாண அபிவியக்த சர்வ பிரமேயாவச்சின்ன சித்சொரூபனுதலின் அவனது சொரூபம் நிராவரணமாம் சீவனே பரிச்சின்னனுதலின் அங்ஙனமன்ரும. ஆதலால் அவனது சொரூப ஞானம் மறைபட்டதேயாம். இக்காரணத்தால் சின்யாததிரத்தை யாசிரயித்த அஞ்ஞானத்திற்கு சீவேஸ்வரர்களிடத்து இருப்புள்ளதாயினும இவ்வேதுவால் ஈஸ்வரன் சர்வஞ்ஞனும் சீவனன்ரும என்னும பொருள் சம்பவிககின்றது.

சம்பாவனை = பொருத்தம். (184)

(அ) மற்றும் तस्य भासा सर्वमिदं विभाति = அவனது பிரகாசத்தால் இவ்வெல்லாமும் விளங்குகின்றது என்னும் சுருதியால் ஈஸ்வரனுக்கு தனது சொருபத்தாலேயே சர்வத்தையும விளக்குந்தன்மை கேட்கப்

படுகின்றது. மறைக்கப்பட்டதும் அசத் போன்றதுதுமான ஞானம் அர்த்தத்தைச் சாதித்தற்கு யோக்கியமன்றும். ஆதலின் மறைக்கப் படாத சொரூபமுடைய ஈஸ்வரன் சர்வஞ்ஞனென அவஸ்யம் அங்கீகரிக்கத்தக்கது சீவனே அங்ஙனமன்றும் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

**अज्ञानतज्जमखिलं जगदात्मभासा नित्यं प्रकाशयति संनिहितः सदात्मा।**
**जीवस्तु नैवमिति सावरणं तदीयं ज्ञानं निरावरणमैश्वरमुच्यते हि ॥**

**सद् आत्मा**—சத்ரூபபரமான்மா

**अज्ञानतज्जम्**—அஞ்ஞானமும் அதனுலுண்டாயதுமான

**अखिलं जगत्**—சருவஜகத்தையும்

**आत्मभासा**—தனது பிரகாசத்தால்

**नित्यं प्रकाशयति**—எப்போதும் விளக்குகின்றது.

அற்றேல் தனது சொரூபப் பிரகாசம் ஆவரணத்தால் மறைக்கப் படாததாயினும் பிரகாசிய வஸ்துவின் அஸந்நிஹிதமாயின் வியவகிததீபம் போன்று அஞ்ஞான காரியத்தை விளக்காது ஆதலின் அததுணையால் அதற்கு சருவஞ்ஞத்தன்மையின் சித்தி யெவ்வாறு கூடும் என்னு மிடத்துக் கூறுகின்றார்.

**सन्निहितः**—சருவப் பிரபஞ்சத்தின் அதிஷ்டானத்தன்மையால் அதன்கண் சந்நிகிதமாயிருந்துகொண்டு விளக்குகிறது என்பது பொருள். கூறப்பட்ட வடிவத்தால் அதன் சந்நிதானத்தின்கண் ஏதுவாக சத்ரூப என்னும் விசேஷணம் கொடுக்கப்பட்டது.

**जीवस्तु न एवम् इति**·சீவனே இவ்வாறு விளங்குவதின்றும் ஆதலால்.

**तदीयं ज्ञानं सावरणम्**—சீவனுடைய ஞானம் மறைக்கப்பட்டுள்ளது அநுபவத்தாற் சித்தித்த அவனது ஆவரணம் ஒருவராலும் நிவர்த்திக்க தகாதென்பது பொருள்.

**ऐश्वरं हि ज्ञानम्**—ஈசுவரனுடைய ஞானமோ

**निरावरणमुच्यते**—மறைப்பின்றியதாக சொல்லப்படுகின்றது

ஆதலால் என்பது கூறப்பட்ட விபாகத்தின் பயனைக் கூறுகின்றது. (185)

(அ) ஈஸ்வரன் மறைக்கப்படாத தனது சொரூபத்தால் சருவத்திலும் சந்நிதித்தன்மையால் நித்திய சருவஞ்ஞனென்பதன் கண் விஷ்ணுபுராணத்திலுள்ள சுலோகத்தைப் படிக்கின்றார் ;—

ज्ञानात्मकस्यामलसत्वराशेरपेतदोषस्य सदा स्फुटस्य ।
किं वा जगत्यत्र समस्तपुंसामज्ञानमस्यास्ति हृदि स्थितस्य ॥

ज्ञानात्मकस्य-ஞானவடிவினரும்

अमलसत्वराशेः-நிர்மலமான சத்துவ சமுதாயத்தினையுடையவரும் அதாவது ரஜோகுணம் முதலியவற்றால் ஸ்பரிசிக்கப்படாத அகண்ட சத்துவான்மகமான அஞ்ஞானத்தின்கண் பிரதிபிம்பித்தவரும். இதனாலேயே

अपेतदोषस्य-ஆவரணம் முதலிய தோஷமற்றவரும் இதனாலேயே

सदा स्फुटस्य-நித்தியாபரோக்ஷரும்

समस्तपुंसाम्-சருவபுருஷர்களது

हृदि स्थितस्य-இருதயத்திலிருப்பவரும் அதாவது அந்தர்யாமியுமான

अस्य-ஸ்ரீ கிருஷ்ணபரமான்மாவிற்கு

अत्र जगति-இவ்வுலகின் கண்

अज्ञातं किं वा अस्ति-அறியப்படாதது என்ன இருக்கின்றது.

அர்த்தத்தால் ஜீவன் அவனினின்றும் விபரீத வடிவனனென தெரிசிப்பிக்கப் பட்டதாகின்றது. (186)

(அ) ஈஸ்வரனுக்கு மாயையின்கண் சுதந்திரத்தன்மையும் ஜீவனுக்கு அதன் பரதந்திரத்தன்மையுமாமென்பதன்கண்ணும் புராண வசனத்தைக் கூறுகின்றார் :—

मायामसौ वितनुते विभुरेवमेनां
सर्वेश्वरः सततमेव वशीकरोति ।

इत्यादिवाक्यमुपपन्नतरं पुराणे
स्वाज्ञानमस्य हि वशे चिदधीनभावात् ॥ १८७ ॥

**असौ विभुः**—பரமேஸ்வரன் சமர்த்தன் ஆதலின்

**मायां वितनुते** பிரமாதிகளில் மாயையை விஸ்தரிக்கின்றான்

**सर्वेश्वरः**—சருவேசுரனுதலின்

**एवम् एनाम्**—இவ்வாறு இந்த மாயையை

**सततमेव**—எப்போதுமே

**वशीकरोति**—தனது வசஞ் செய்கின்றான்

**इत्यादिवाक्यम्**—என்பது முதலிய வாக்கியமானது

**पुराणे**—புராணத்தின்கண் படிக்கப்படுகின்றது. அஃது

**उपपन्नतरम्**—நம்மால் கூறப்பட்ட ரீதியால் அத்தியந்தம் பொருத்தமுடையதாம

அற்றேல் இங்ஙனம் ஈஸ்வரனுக்கு மாயையின் வசித்தன்மையே யுண்டாம் அஞ்ஞானத்தின் வசித்தன்மையின்றாம் ஆதலின் அவனுக்கு இத்துணையால் அஞ்ஞானத்தால் அபிபவம் எப்படிச் சித்திக்கும் எனனுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**अस्य**—ஈசுவரனுக்கு

**स्वाज्ञानम्**—தனதஞ்ஞானமானது

**वशे हि**—தனது வசமாயிருக்கின்றது

**चिदधीनभावात्**—சேதனமாகிய தன்னை யாசிரயித்திருத்தலின்

அஞ்ஞான மாயைகட்கு அபேதமுண்மையின் அஞ்ஞானத்திற்கும் அவனது சக்தித்தன்மையால் அவனதீனத் தன்மையுண்மையின் அவனது பரதந்திரத்தன்மையே அஞ்ஞானத்திற்குளது என்பது இதனுல் தெரிசிப்பிக்கப்பட்டது ஆதலின் கூறப்பட்ட தோஷமின்றுமென்பது கருத்து. (187)

(அ) அற்றேல் பாஷ்யக்காரர் முதலியோரால் அவ்வவ்விடங்களில் சீவனிடத்தில் அஞ்ஞத்தன்மையினையும் ஈசுவரனிடத்தில் அதன் நிஷேதத்தையும் அநேகந்தடவை கூறப்பட்டிருத்தலினுல் ஈசுவரனிடத்

தில் அஞ்ஞானம் எவ்வாறு பொருந்தும் என்னும் சங்கைக்கு கூறிய நியாயத்தால் யாண்டும அவரது செனங்கட்கு கூறப்பட்ட அர்த்தமே அறியத்தக்கனவாய என அதிதேசஞ்செய்கின்றார் :—

जीवाज्ञतावचनमेवमिदं समस्तं सर्वत्र योज्यमितरत्र च तन्निषेधः ।
तस्मात्समञ्जसमिदं मतमस्मदीयमाचार्यवाक्यमुपपन्नतरं हि तत्र ॥

**जीवाज्ञतावचनम्**–சீவனது அஞ்ஞத்தன்மையைப் பிரதிபாதிக்கின்ற

**इदं समस्तम्**–இந்த சர்வ வாக்கியமும்

**एवम्**–இந்தப் பிரகாரம்

**सर्वत्र योज्यम्**–எல்லாவிடங்களிலும் பொருத்தத்தக்கதாம்

**इतरत्र च**–ஈஸ்வரனிடத்தில்

**तन्निषेधः च**–அஞ்ஞானத்தின் நிஷேதமும் இவ்வாறு பொருத்தத் தக்கதாம்

அதாவது சிதான்மாவின்கண் சீவத்துவ உபாதியிருக்குங் காலத்திலேயே ஆவரணான்மகவஞ்ஞானத்தின் ஸ்புரணயாம். ஆதலால் சீவன் அஞ்ஞன் என விருத்தரது வசனமாம் ஈஸ்வரனிடத்தில் ஆவரணான்மகவஞ்ஞானத்தின் ஸ்புரணமின்மையால் அஞ்ஞானத்தின் நிஷேதமாம். திரண்ட பொருளையுபசம்மாரஞ்செய்கின்றார்.

**तस्मात्**–யாதொரு காரணத்தினுல் அஞ்ஞானத்திற்கு சின்மாத்ரா சிரயத்தின்கண் அவ்வவ்விடங்களில் சீவனது அஞ்ஞத் தன்மையைக் கூறும் பாஷ்யவசனம் விருத்தமன்றோ அக்காரணத்தால்

**अस्मदीयं इदं मतं**–எமது இந்த மதமானது

**समञ्जसम्**–நன்கு பொருந்தமுடையதேயாம்

**तत्र** – அஞ்ஞானத்திற்கு சின்மாத்திராசிரயத்தன்மையில்

**आचार्यवाक्यम्**–பாஷ்யகாரரது வசனம்

**उपपन्नतरं हि** – அத்யந்தம் பொருத்தமுடையதாதலின் (188)

(அ) எமது மதமென்று கூறப்பட்ட அந்த தனது மதத்தினையே தெரிசிப்பிக்கின்றார் :—

**चैतन्यमेव तु तमस्वि तदप्रबुद्धं सर्वज्ञमेतदिह विश्वमिमं विभागम् ।
जीवेश्वरौ च जगदित्यपि निर्मिमीत इत्येव वेदशिरसः प्रथितः प्रचारः ॥**

**चैतन्यमेव च** – அகண்ட சைதன்யமே

**तमस्वि** – அஞ்ஞானத்தின் ஆசிரயமாம்

**तत् अप्रबुद्धम्** – அச்சைதன்யமே மூடமாம்

**सर्वज्ञम्**–சர்வஞ்ஞமும் அதுவேயாம்

**एतत्**–இந்த மாயா விசிட்ட சைதன்னியமே

**इह** – இந்த மாயாவிசிட்ட சேதனத்தின் கண்ணேயே

**इमं विश्वं विभागं** – இந்த சர்வ விபாகத்தினையும் அதாவது

**जीवेश्वरौ च**–சீவேஸ்வரர்களையும்

**जगत् इत्यपि**–சடப்பிரபஞ்சத்தினையும்

**निर्मिमीते** – உண்டுபண்ணுகின்றது

இந்த மதம் கேவலம் எமதிச்சையாற்கற்பிதமன்று மற்றோ சர்வ வேதாந்தத்தின் சம்மதமாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

**इत्येव** – இவ்வாறே

**वेदशिरसः** – வேதாந்த வாக்கியத்தின்

**प्रचारः** – சஞ்சாரமானது

**प्रथितः** – சர்வ சாகைகளிலும் பிரசித்தமாம் (189

(அ) அற்றேல் "மாயையையுடையவன் மஹேஸ்வரன்" "என்னுடைய மாயை கடக்கத்தகாதது" என்பது முதலிய சுருதி ஸ்மிருதிகளால் ஈசுவரனிடத்து மாயையையுடையதாந்தன்மை தோற்றுகின்றது ஆதலின் அவனுக்கு அஞ்ஞானமுடையதாந்தன்மை எப்படிக் கூடும். மாயை யஞ்ஞானங்கட்கு ஏகத்தன்மைதான் எப்படிக்கூடும். விலக்ஷணத்தன்மையே பொருத்தமாம். ஈசுவரனே சீவர்களை சமுசாரத்தோடு சேர்ப்பிக்கின்றவனும் மோகிப்பிக்கின்றனன். மோகத்தை செய்யுந்தன்மையும் மாயாவிக்கே உலகின்கண் காணப்பட்டுள்ளது. அஞ்ஞனுக்கன்றும். அஞ்ஞனே மோகத்தையடைகின்றவனேயாவான். இக்காரணத்தாலேயே ஈசுவரனுக்கு சருவஞ்ஞத்தன்மையும் விரோத

மின்ரும். சீவனுக்கு அஞ்ஞத்தன்மையும் விரோதமின்ரும் என்னுஞ் சங்கைக்கு சீவேசுவராதி சருவபேதத்திற்கும் காரணமும் வைஷ்ணவியும் (விஷ்ணு சம்பந்தியுப) ஆகிய சடசத்தி ஏகமாயினும் ஈசுவரனை யாசிரயித்ததாகி மாயாசத்தவாச்சியமாகின்றது. அதுவே சீவனையாசிரயித்ததாகி அஞ்ஞானசத்தவாச்சியமாகின்றது. அவ்வாறே விருத்த புருடர்கள் வியவகரித்தலின் அவற்றின்பேதத்தை மூன்ருவதத்தியாயத்தின்கண் சாதிப்பர். இதனுலேயே ஈசுவரனுக்கு வியாமோஹகத்துவாதியும் சீவனுக்கு வியாமோஹாதியும் பொருந்துகின்றது என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்:—

जीवेशानजगद्विभागजननी शक्तिर्जडा वैष्णवी
मायेशानगता सती भवति सा जीवावधिर्मोहगीः ।
जीवानीश्वर एष मोहयति ते जीवा विमुह्यन्त्यतः
शश्वद्विश्वदगीश्वरो भवति ते जीवा विमूढा मुहुः ॥१९०॥

**जीवेशानजगद्विभागजननी**- சீவன், ஈசுவரன், சகத்து என்னும் வேற்றுமையினைச் செய்கின்றதாய்

**वैष्णवी** – விஷ்ணு சம்பந்தியாய்

**जडा शक्तिः**-யாதொரு சடசத்தியுண்டோ அது

**ईशानगता सती**- ஈசுவரனையாசிரயித்ததாகி

**माया भवति**–மாயையென்னும் சொற்பொருளாகின்றது

**सा**-அதுவே

**जीवावधिः**–சீவனையாசிரயித்ததாகி

**मोहगीः**–அஞ்ஞானம் முதலிய சத்தத்தின்வாச்சியமாகின்றது

**एषः ईश्वरः** - மாயாவியாகிய இவ் ஈசுவரன்

**जीवान् मोहयति** – மாயையிற் சுதந்திரனுதலின் சீவர்களை மோகிப்பிக்கின்றனன்.

**ते जीवाः**–அச்சீவர்கள் அஞ்ஞானத்தின் பரதந்திரராதலின்

**विमुह्यन्ति**–மோகத்தை யடைகின்றனர்

**अतः**-இக்காரணத்தால்

**ईश्वरः शश्वत्**-ஈசுவரன் எப்போதும்

**विश्वदृक् भवति**-சர்வஞ்ஞனாகின்றான்

**ते जीवाः** - அச்சீவர்கள்

**मुहुः विमूढाः** - அடிக்கடி மோகத்தையடைகின்றனர் (190)

(அ) இவ்வாறு ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கு மாயிகத்தன்மையும் சீவனிடத்துள்ள துககித்தன்மை முதலிய சமுசாரத்திற்கு ஆவித்தியகத் தன்மையுமாமென வேதாந்தத்தின்கண் குசலபுருடரது பிரசித்தியும் கூறிய பிரகாரத்தால் மாயையவித்தைகளின் ஏகத்தன்மையின்கண்ணும் பொருத்தமாமெனக்கூறுகின்றார்: —

अज्ञानिनो भवति मोहविजृम्भितं तु
दुःखं जगज्जनकता परमेश्वरस्य ।
मायामयी भवति तेन विलक्षणत्व-
मेकात्वतः श्रुतिशिरःसु तयोः प्रसिद्धम् ॥ १९१ ॥

**अज्ञानिनः** - அஞ்ஞானமுடைய சீவனுக்கு

**मोहविजृम्भितम्**-அஞ்ஞானத்தின் பரிணாமமான

**दुःखं भवति**-துக்கம் உண்டாகிறது

**परमेश्वरस्य तु**-பரமேஸ்வரனுக்கோ

**मायामयी**-மாயாமயமான

**जगज्जनकता भवति**-சகத்காரணத்தன்மை இருக்கின்றது

அற்றேல் அகண்ட பிரம்மத்திற்கே அஞ்ஞானமுடையதாந்தன்மை யுடன்படின் எவனுக்கு அஞ்ஞானமோ அவனுககே சம்சாரமாம் ஆதலின் மேற்கூறப்பட்ட விபாகமெப்படி சித்திக்கும் எனின் உண்மைதான் அஞ்ஞானாசிரய பிரம்மமே முற்கூறப்பட்ட பிரதிபிம்ப ரூபத்தால் துக்கத்தின் ஆசிரய சீவனும். பிம்பரூபத்தாலோ சகத்காரண பரமேஸ்வரனும். என சுருதிகளில் அவர்களுக்கு விலக்ஷணத்தன்மை யின் வியவகாரமாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

तयोः-சீவேஸ்வரர்களுக்கு
श्रुतिशिरःसु-வேதாந்தங்களில்
प्रसिद्धम्-பிரசித்தமான
एकान्ततः विलक्षणत्वं-நியமமான விலக்ஷணத்தன்மை
तेन-சின்மாத்திராசிரயவஞ்ஞானத்தால் பொருத்தமாம்.
என்பது எஞ்சிநின்றது.

இங்ஙனம் அஞ்ஞானத்திற்கு சின்மாத்திராசிரயத் தன்மை பொருத்தமாமென்பது கருத்து. (191)

(அ) சின்மாத்திரத்தை யாசிரயித்த வஞ்ஞானத்திற்கும் அறியேன் என்னும் அனுபவத்தையனுசரித்து சீவனைக் குறித்தே நித்திய முக்தபிரம்ம சொரூபத்தை மறைக்குந் தன்மையுண்மையின் அவனுங்கே அவ்வஞ்ஞானமாம். ஈஸ்வரனுக்கு அன்றும் என பாஷ்யக்காரர் முதலியவரது சீவனது அஞ்ஞத்தன்மை வசனமாம். ஈஸ்வரனிடத்தில் அதன் நிஷேதவசனம் அதன் பரமாம் எனக் கூறப்பட்டது. இப்போது சீவத்தன்மைக்கு அஞ்ஞானத்தின் வியஞ்சகத் தன்மை யுண்மையாலும் சின்மாத்திரத்திலிருப்பதாயினும் அவ்வஞ்ஞானம் சீவசம்பந்தியாகத் தோற்றுகின்றது அனுபவானுசாரத்தால் சீவத்வமே அஞ்ஞானத்தின் வியஞ்சகமாம். எப்படி வாதிகட்கு ஆசிரயதிரவிய மகத்துவம் உத்பூத உருவத்தின் வியஞ்சகமாமோ அது போல் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்:—

வியஞ்சகம் = பிரகாசகம்.

चैतन्यस्याज्ञानशक्तेरनादेर्जीवत्वं तु व्यञ्जकं कल्पयन्तः ।
जीवारूढं व्यक्तमज्ञानमाहुर्जीवो मूढः कथ्यतेऽतो बहुज्ञैः ॥ १९२ ॥

चैतन्यस्य-சைதன்னிய சம்பந்தியும்
अनादेः-அனாதியுமான
अज्ञानशक्तेः-அஞ்ஞான வடிவ சக்திக்கு

जीवत्वं तु–சீவத்தன்மையினையே

व्यञ्जकं कल्पयन्तः – அபிவியஞ்சகமாக கற்பிக்கின்ற ஆசிரியர்கள்

जीवारूढम्–சீவனிடத்தில் ஆரூடமாகிய

अज्ञानं व्यक्तं आहुः – அஞ்ஞானத்தினை வியக்தமாமெனக் கூறுகின்றனர்.

திரண்டபொருளைக் கூறுகின்றார்.

अतः–ஆதலால்

बहुभिः–வித்வான்களால்

जीवः मूढः कथ्यते –சீவன் மூடனும் என சொல்லப் படுகின்றான்.

ஆதலால் நித்தியமுக்த ஆன்மாவிற்கு மாயை முதலிய சப்தங்களின் வாச்சியமான அனிர்வசனீயமாகிய சக்தியின் வசத்தால் சீவேஸ்வராதி விபாகமும் அகங்காராதியின் சம்பந்தத்தால் சீவனிடத்தில் ஈஸ்வர வைலக்ஷண்ய சம்சாரமும் பொருத்தமாம். ஆதலால் தனது வடிவமான பிரம்மத்தின் சமன்வயத்திற்கு பேதத்தைக் கவருகின்ற எந்தப் பிரமாணத்தாலும் பாதமின்றாம் என்பது கருத்து.

(அ) அற்றேல் ஆன்மாவிற்கு அவித்தையாகிற நிமித்தத்தால் சம்சாரமன்றாம். ஆதலால் சம்சாரியாகிய ஆன்மாவிற்கு அசம்சாரியாகிய பிரம்மத்தோடு ஐக்கியம் எப்படிக் கூடும். மற்றோ பிரம்மத்தின் பரிணாமத்தன்மையால் சம்சாரம் வாஸ்த்தவமேயாம். அதன் பரிணாமத்தன்மை யசித்தமாம் என்னற்க வேதாந்தத்தின் இரகசியத்தை உணர்ந்த ஸ்ரீ வாதராயணமஹரிஷியால் போக்துராதி சூத்திரத்தின்கண் அவ்வாறே தெரிசிப்பிக்கப்பட்டமை யின் என்னுஞ் சங்கைக்கு அனிர்வசனீயப் பிரபஞ்சத்திற்கு வியாவகாரிகத் தன்மையால் சொப்னுதியின் விஷமத் தன்மை உளது அத்துணையால் அவர் கூற்றாம். வாஸ்தவ மென்னுங் கருத்தாலன்று. அப்படிக்கன்றேல் மேலுள்ள

ஆரம்பணாதி அதிகரணத்திற்கு விரோதம் வரும் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

अत्रैव वस्तुनि दृढं व्यवतिष्ठमानः प्रौढिप्रदर्शनपरः पुनरन्यदन्यत् ।
भाषापदं किमपि निक्षिपति स्फुटं तदस्माभिरेवमुपपादितमञ्जसैव ॥

अत्र एव वस्तुनि-இப்பொருளின் கண்ணேயே

दृढं व्यवतिष्ठमानः-திடமாக நிற்கின்றவராய்

அதாவது ஆத்மா எப்போதும் அத்துவயமும் முக்தமுமாம். பிரபஞ்சமோ அநிர்வசநீயமாம் என்னும் இப்பொருளையே யறிகின்றவராய்

प्रौढिप्रदर्शन परः-பிரௌடியைத் தெரிசிப்பிக்கின்றவராய் (அப்யுபகமவாதி) இருந்துகொண்டு வியாச பகவான்

अन्यत् अन्यत् किमपि-வேறு வேறு யாதேனும்

भाषापदं पुनः-சூத்திர பதத்தினை

निक्षिपति-பிரயோகிக்கின்றார்.

வேறு வேறு என்னுமிரட்டிப்பால் பிரம்மத்திற்குப் பரிணாமித் தன்மையும் சீவேசுவரர்கட்கு பின்னத் தன்மையும் முதலிய சூத்திரக்காரரது வசனத்தைப் பராமரிசஞ் செய்கின்றார். அதாவது சிலவிடத்து स्याल्लोकवत् என பரிணாம விஷயத்தையும், சிலவிடத்து नेतरोऽनुपपत्तेः என சீவேசுரபேத விஷயத்தையும் கூறியிருக்கின்றனர்.

அற்றேல் அச்சூத்திரங்கட்கு பிரௌடிவாதத் தன்மையை அங்கீகரித்தல் எற்றிற்கு. அவரது சம்மதத் தன்மையே ஏனாகாது என்னுமிடத்துக் கூறுகின்றார்.

एवम्-இந்தப்பிரகாரம்

अस्माभिः-எம்மால்

तत्-அச்சூத்திரம் பிரௌடிவாதமென்பது

अञ्जसा एव-பொருத்தமாகவே

उपपादितम्-பிரதிபாதனம் செய்யப்பட்டது.

இந்தப்பிரகாரம் என்பதற்கு இப்பொருளின் கண்ணே திடமாக நிற்கின்றவர் எனக் கூறப்பட்ட பொருளாம். பிரௌடிவாதத்தை உபபாதனஞ்செய்தல் கிலேசத்தாலன்று எனக் கூறுகின்றார் பொருத்தமாம் என. மாறாய் பர மதத்தின் கண்ணேயே கிலேசமாம். ஆரம்பணாதி அதி கரணத்தின் விரோதம் ஆண்டு (பரமதத்தின்கண்) நீக்க முடியாமையின் लोकवत् = உலகம் போன்று என்னுங் கூற்று வேறுவிதமாகவும் பொருந்துதலின் என்பது கருத்து. (193)

(அ) மேலும் सर्वधर्मोपपत्तेः = சர்வதர்மங்களும் பொருந்துதலின் என்னுஞ் சூத்திரத்தால் சகத்காரணத் தன்மை அதன் மூலமான சர்வஞ்ஞத் தன்மை முதலிய காரண தர்மங்களின் உபபத்தியினை பிரம்மத்தின்கண் தெரிசிப்பிக்கின்றவராய் சூத்திரகாரர் பிரம்மத்திற்கு விவர்த்தாதிஷ்டானத் தன்மையினையே கருதுகின்றனர். அப்படிக்கன்றேல் நிரவயவமும் கூடஸ்தமும் நிர்விகாரமுமான அதன்கண் காரணத்தன்மை முதலியவை சம்பவியாமற் போம் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்:—

विस्पष्टमात्ममतमेव हि सर्वधर्मसूत्रेण सूत्रकृदिदं दृढमाचचक्षे ।
सर्वज्ञतादिपरिपालनतत्परः संस्तत्रैव भाष्यकृदपीदमुवाच यत्नात् ॥

सूत्रकृत्-பிரம்ம சூத்திரத்தினைச் செய்த வியாசபகவான்

सर्वधर्मसूत्रेण -சர்வதர்மம் பொருந்துதலின் என்னுஞ் சூத்திரத்தால்

इदम्-முன்பு நம்மால் உபபாதனஞ் செய்யப்பட்ட

आत्ममतं एव-தனது மதத்தினையே

विस्पष्टम्-வெளிப்படையாகவும்

दृढं आचचक्षे-உறுதியாகவும் கூறியுள்ளார்

அவரதபிப்பிராயத்தினைக் கூறுகின்றார்.

**सर्वज्ञतादिपरिपालनतत्परस्सन्**-சர்வஞ்ஞத்தன்மை முதலிய வற்றை ரக்ஷிப்பதில் தற்பரராயிருந்துகொண்டு கூறினார் என ஒட்டுக.

சர்வஞ்ஞத் தன்மையும் சர்வசக்தித் தன்மையும் காரணத்தின்கண் இருப்பதாக உலகின்கண் பிரசித்தமின்றும். அங்ஙனமாயினும் குலாலாதியர்க்குப் போன்று அதன் அபிஞ்ஞத் தன்மை முதலியது மாத்திரம் அவனிடத்தில் சித்திக்கின்றதாய் சகத்காரணனாகிய அவனது சருவஞ்ஞத் தன்மை முதலியவற்றின்கண் பரியவசானமாகின்றது. ஆதலின் அவற்றை ரக்ஷித்தற் பொருட்டு இங்ஙனம் கூறினார். அதுவும் (சருவஞ்ஞத் தன்மையும்) மாயையின்றிப் பொருந்தா தாதலின் விவர்த்தவாதமே அவரது சம்மதமாமென்பது கருத்து. [இக்காரணத்காலேயே அச்சூத்திர வியாக்கியானத் தின்கண் பாஷியக்காரரும் பிரம்மம் சருவஞ்ஞமும் மஹாசக்தி மகாமாயமுமாமெனக் கூறியுள்ளார் எனக் கூறுகின்றார்.

**तत्रैव**-அச்சூத்திரத்தின் கண்ணேயே

**भाष्यकृत् अपि**-பாஷியக்காரரான சங்கராசாரிய சுவாமி களும்

**यत्नात्**-யத்தினத்தால்

**इदं उवाच** இங்ஙனம் சருவஞ்ஞத்துவாதி விசிஷ்டமாக ப்பிரம்மத்தைக்கூறினார்.

அபிக்ஞை = அறிதல். (194)

(அ) இந்தப்பிரகாரம் சின்மாத்திரத்தினையே ஆசிரயமாகவும் விஷயமாகவுமுடைய அஞ்ஞானம் சருவ சமுசாரத்திற்கும் காரணமாமென தனது மதம் கூறப்பட்டது இப்போது அதனை திடஞ்செய்கின்றவராய் சீவனுக்கு அஞ்ஞானமாமென்னும் மதத்தைத் தூஷிக்கின்றார் :—

अज्ञानित्वं ब्रह्मणो जीवता चेन्नाज्ञानित्वं तत्र जीवस्य युक्तम् ।
अज्ञानित्वे चान्यदप्यभ्युपेतमज्ञानित्वं यद्वदो कष्टपिष्टिः ॥ १९५ ॥

ब्रह्मणः-பிரம்மத்திற்கு

अज्ञानित्वम्- அஞ்ஞானாசிரயத்தன்மையே

जीवता चेत्- சீவத்தன்மையா மெனின்

அதாவது பிரம்மத்திற்கு சீவத்தன்மை சுவாபாவிக மன்றும். அதற்கு பிரம்மத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கு விரோதம் வருதலின் வேறு உபாதியினதீன மாகவும் சீவத்தன்மையின்றும். அத்வைத மதத்தின்கண் வாஸ்தவமாக வேறு உபாதி சம்பவியாமையின் ஆதலால் அஞ்ஞானாவச்சின்னத்துவமே பிரம்மத்திற்கு சீவத்துவமாமென்று சொல்லவேண்டும். அதனால் சித்தித்த தென்னையென்னுமிடத்துக் கூறுகின்றார்.

तत्र-அம்மதத்தின் கண்

जीवस्य-சீவனுக்கு

अज्ञानित्वम्-அஞ்ஞானாவச்சின்னத்தன்மை

न युक्तम् - பொருத்தமன்றும்

எதனாற் பொருத்தமின்றுமெனின் சீவத்தன்மைக்குப் பிரயோஜகமான அஞ்ஞானம் அதன்கண்ணுள்ள (பிரம்மத்தின் கண்ணுள்ள) அஞ்ஞானத்தினின்றும் வேறு அல்லது அதுதானு. முதற்பக்ஷத்தைக் குறித்துக் கூறுகின்றார்.

अज्ञानित्वे च-சீவனுக்கு அஞ்ஞானாவச்சின்னத் தன்மை யையுடன்படின் அதற்கும் சீவவிருத்தித்தன்மை யுண்மையால்

अन्यदपि अज्ञानित्वम् - வேறு அஞ்ஞானத்தாலவச்சின்ன த்தன்மை

अभ्युपेतं यदि- அங்கீகரிக்கப்பட்டதாயின்

வேறு அஞ்ஞானத்தின் ஆசிரயதாவச்சேதகமாக மற்றோர் அஞ்ஞானம் சொல்லுதல் வேண்டும். இவ்வாறு அததற்கும் சொல்லவே அநவஸ்தைப் பிராப்தியாம் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்,

अहो कष्टपिष्टिः- ஆச்சரியம் அவனுக்கு மிகவும் கிலேச மான பீடை பிராப்தியாம்.

சுத்தப்பிரம்மத்திற்கு அஞ்ஞானாசிரயத் தன்மை அநுபபன்னமாதலின் அதற்கு உன்னால் சீவவிருத்தித் தன்மையங்கீகரிக்கப்படுகிறது. இப்பக்ஷத்தின் கண்ணும் அவ்வநுபபத்தி ஏனின்றாகும். அவச்சின்னனாயினும் சீவனுக்கு சுத்தப் பிரம்மபாவம் நீங்காமையின். அப்படிக் கன்றேல் மோக்ஷ சாஸ்திரம் பொருந்தாமற்போம். ஆதலால் அநந்தமும் அப்பிராமாணிகமும் அப்பிரயோஜனமு மான அஞ்ஞான பரம்பரையையங்கீகரித்தல் மிகவும் கிலேசமாமென்பது கருத்து. (195)

(அ) ஆதலால் (சீவனிடத்து அஞ்ஞானாசிரயத் தன்மை பொருந்தாமையால்) அவ்வஞ்ஞானம் சுத்தப் பிரம்மாசிரயமாம் என உனக்கு சம்மதமில்லாவிடினும் அங்கீகரிக்கத்தக்கதாம். ஆதலின் அதுவே போதும். அதன் (அஞ்ஞான) அவச்சின்னவிருத்தி (இருத்தல்) அஞ்ஞானாந்தரம் எற்றிற்கு. இவ்வாறாகவே உனது அபிமதமும் சித்தியாது எனக் கூறுகின்றார் :—

अज्ञानित्वं ब्रह्मणश्चानभीष्टमस्मिन्पक्षे दुर्निवारं प्रसक्तम् ।
अज्ञानित्वं ब्रह्मणश्चेदभीष्टमस्मत्पक्षस्त्यज्यते कस्य हेतोः ॥१९६॥

अस्मिन् पक्षे- அஞ்ஞானாவச்சின்னத்தின் கண் அஞ்ஞான மாமென்னும் மதத்தில்

ब्रह्मणश्च- பிரம்மத்திற்கே

अज्ञानित्वं- அஞ்ஞானவச்சின்னத்தன்மையாமென்பது

अनभीष्टम्- சிவாஞ்ஞானவாதியாகிய உனக்கு சம்மத மின்றேனும்

दुर्निवारम्-நீக்க முடியாததாக

प्रसक्तम्-பிராப்தமாம்.

अज्ञानित्वम्-அஞ்ஞானவச்சின்னத்தன்மை

ब्रह्मणः-பிரம்மத்திற்கு

अभीष्टं चेत्-சம்மதமாயின்

मत्पक्षः-எமது பக்ஷம்

कस्य हेतोः-எவ்வேதுவால்

त्यज्यते-தள்ளப்படுகின்றது.

எவ்வேதுவால் என்பதனுல் சுத்தப்ரம்மத்தை ஆசிரயித்த அஞ்ஞானத்தினும் இதராஞ்ஞானத்தால் யாது பிரயோஜனம் சாதிக்கத்தக்கது என்பது சூசிப்பிக்கப்பட்டது.

(அ) எவ்வேதுவால் என்பதற்கு விஞப்பொருளைக் கருதி சங்கிக்கின்றுன் :—

शुद्धत्वार्थं ब्रह्मणस्त्यज्यते चेदस्मत्पक्षेऽप्यस्ति शुद्धत्वमस्य ।
अस्मत्पक्षे शुद्धता वास्तवी चेद् युष्मत्पक्षे कल्पिता शुद्धता किम् ॥

ब्रह्मणः-பிரம்மத்திற்கு

शुद्धत्वार्थम्-அபஹத பாபத்தன்மை முதலிய பரிசுத்தம் சித்தித்தற் பொருட்டு

त्यज्यते चेत्-அஞ்ஞானசப்பந்தம் தள்ளப்படுகிறதெனின்

பிரம்மத்தின்கண் அதன் அத்தியாசமுள்ளதாயினும் அதனதிஷ்டான பிரம்மத்தின் பரிசுத்தி நீங்குகின்றதில்லை. உலகின்கண் இரஜதாதியத்தியாஸத்தின் அதிஷ்டான சுத்தியாதிக்கு அக்காலத்திலும் தனது சொரூபத்தின்

அவிநாசம் காணப்படுதலின் என்னுங் கருத்தால் சித்தாந்தி கூறுகின்றார்.

अस्मत्पक्षेऽपि-ஏமது பக்ஷத்திலும்

अस्य शुद्धत्वम् अस्ति-பிரம்மத்திற்கு பரிசுத்தியுளது

அற்றேல் பிரம்மத்திற்கு அஞ்ஞானத்தைக் கூறும் வாதத்தின்கண் அதற்குக் கற்பித அசுத்தியிருத்தலின அதன்கண் வாஸ்தவமாகவே அதன் அபாவ வடிவ சுத்தி சொல்லத்தக்கதாம். ஆதலின் அதற்கு சருவப்பிரகாரத் தாலும் சுத்தி சித்திக்கிறதில்லையென சங்கிக்கின்றான்.

अस्मत्पक्षे-சிந்தாந்தபக்ஷத்தில்

शुद्धता वास्तवी चेत्-சுத்தி வாஸ்தவமெனின்

சருவப் பிரபஞ்சாதிஷ்டானத்திற்குக் கற்பித அசுத்தியை நிராகரிக்கக்கூடாமையின் உனது பக்ஷத்திலும் அதற்கு அத்தகைய சுத்தியே சொல்லததக்கதாம் என காகுபதத்தாற் கூறுகின்றார்.

युष्मत्पक्षे-உமது பக்ஷத்தின் கண்

कल्पिता शुद्धता किम्-கற்பிக்கப்பட்ட சுத்தியா?

காகு என்பது வினவை சூசிப்பிக்கின்ற தொனி விசேஷம். (197)

(அ) சீவனிடத்திலிருந்தே அஞ்ஞானம் தனது ஆசிரய சீவனது அவச்சேதகமாமென்னும் பக்ஷத்தை நிராகரிக்குங் கருத்தால் பிரகிருத நிராகரணத்தை முடிக்கின்றார்:—

कष्टः कष्टः कल्पितो ब्रह्मवादः श्रेयोमार्गाद् भ्रश्यतो भ्रान्तबुद्धेः ।
त्यक्तव्यस्ते सज्जनैरस्मदीयः श्रेयोमार्गः श्रेयसे चाभ्युपेयः ॥ १९८ ॥

कल्पितः-உனது புத்தியினுல் கற்பிக்கப்பட்ட

ब्रह्मवादः-பிரம்மவாதம்

कष्टः कष्टः - கஷ்டம் கஷ்டம். அதாவது அத்தியந்தம் அனுபபன்னமாம்.

பிரம்மத்தையாசிரயித்த அஞ்ஞானத்தையங்கீகரியாவிடின் சமுசாரத்திற்கு ஆவித்தியகத் தன்மை (அவித்தையின் காரியத் தன்மை) சித்தியாது. ஆதலின் மோக்ஷமும் சித்தியாது என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

श्रेयोमार्गात्-சிரேயஸ் ஸாதனத்தினின்றும்

भ्रश्यतः-நழுவினவனும்

भ्रान्तबुद्धेः -மதிமயங்கியவனுமான

ते सज्जनैः-உனது பக்ஷம் சாதுக்களால்

त्यक्तव्यः-விடத்தக்கது

अस्मदीयः-எமது பிரம்மவாதம்

श्रेयोमार्गः-சிரேயஸ் ஸாதனமாம் ஆதலால்

श्रेयसे च-சிரேயஸின் பொருட்டு

अभ्युपेयः-அங்கீகரிக்கத்தக்கது

நழுவினவன் மதிமயங்கினவன் என்றதால் சீவாஞ்ஞான புத்தி பிராந்தியெனப்பட்டது.

அற்றேல் ஆண்டும் வேதாந்த வியாக்யானத்தின் கருத்தாக்களான அநேகம்பேருக்கு அங்கீகாரம் காணப்படுகின்றது என்னுஞ் சங்கைக்கு அவரது அங்கீகாரம் அபினிவேச மூலகமாம் விவேக மூலமன்றும் என்னுங் கருத்தால் சாதுக்கள் எனப்பட்டது அபிநிவேசமில்லாத விவேகிகளால் என்பது பொருள். பிரம்மத்தின் வியாவிருத்த ரூபத்தால் சீவனுக்கு உன்னுல் அஞ்ஞானுசிரயத் தன்மை யங்கீகரிக்கப்படுகின்றது ஆதலின் பிரம்மத்தின வியாவிருத்திக்கு அஞ்ஞானத்திற்கு முன்பு சத்துவம் (இருப்பு) சொல்லவேண்டும். அறறேல் அதற்கு அஞ்ஞானு சிரயத்தன்மையின் பிரயோஜகத் தன்மை பொருந்தாமற்

போம். அவ்வியாவிருத்தியும் அவித்தையின் அதீனமாக சத்தையினையுடையதாம் ஆதலின் பரஸ்பராதீனமான சத்தையினையுடைய அவற்றிற்கு (பிரம்ம வியாவிருத்திக்கும் அஞ்ஞானுசிரயத்தன்மைக்கும்) அன்னியோன்னியாசிரயத் தன்மை தோஷம் பிராப்தியாகும் உற்பத்தியின்கண் அன்னியோன்னியாசிரயத்தன்மைக்குத் தோஷத்தன்மையும் உற்பன்னமாகின்றதின் சத்தையின் வாயிலாகவே யாமாதலின் அதினின்றும் இதற்கு விசேஷமின்ரும். இவ்வாருகவே சுத்தாசிரயத் தன்மையும் சீவாசிரயத் தன்மையுமா மென்னுமிரண்டன் அநுபபத்தியும் பரபக்ஷத்திற்கு பிராப்தியாம். சீவனுக்கும் சுத்தப் பிரம்ம சொரூபத்தன்மை யுண்மையின் ஆதலால் இரண்டாவதைப் பரிகரித்தற்பொருட்டு அதுவே வாஸ்தவமாக விசாரத்தைச் சகியாதாயினும் விவேகிகளால் கொள்ளத்தக்கதென்பது கருத்து. (198)

(அ) அற்றேல் பிரம்மத்தின்கண் அஞ்ஞானம் அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது அனவச்சின்ன அப்பிரம்மமே சமுசாரத்தையடையட்டும். அவச்சின்ன சீவனைக் கற்பித்தல் எற்றிற்கு, பத்தத்தன்மை முதலியவற்றிற்கும் முக்தத்தன்மை முதலியவற்றிற்கும் பிரயோஜகமாக சீவப் பிரம்ம விபாகம் சொல்லத்தக்கதாம் என்று சொல்லற்க. அவித்தையினுசிரயத்திற்கும் அதன் அபாவத்தையுடையதாந்தன்மையுண்மையால் சீவப்பிரம்ம விபாகம் பொருந்துதலின். ஓர் வஸ்துவிற்கு ஒரே இடத்தில் ஒரே காலத்தில் பாவமும் அபாவமும் அநுபபன்னமா மென்று சொல்லற்க. பறவை முதலியவற்றிற்கு ஒரே ஆகாசத்தின்கண் ஒரே காலத்தில் பாவமும் அபாவமும் காணப்படுதலின் என்று சங்கிக்கின்ருன் :—

एकोपाधावस्तिता नास्तिता च मूढत्वस्य स्वीकृता चेत्परस्मिन् ।
व्योम्न्येकस्मिन्नस्तिता नास्तिता च पक्ष्यादीनां यद्वदिष्टा तथैव ॥

एकस्मिन् व्योम्नि-ஒரே ஆகாசத்தின் கண்
पक्ष्यादीनाम्-பறவை முதலியவற்றின்
अस्तिता नास्तिता च-உண்மையும் இன்மையும்
यद्वद् दृष्टा-எப்படி அங்கீகரிக்கப்பட்டுளதோ
तथैव-அப்படியே
परस्मिन्-பரப்பிரம்ம வடிவ
एकोपाधौ-ஓதிஷ்டானத்தின் கண்
मूढत्वस्य-அஞ்ஞானத்தின்
अस्तिता नास्तिता च-உண்மையும் இன்மையும்
स्वीकृता चेत्-அங்கீகரிக்கத்தக்கதேயாமெனின் (199)

(அ) அவித்தை முதலியவற்றின் மித்தியார்த் தன்மைக்குப் பிரயோஜகமாக வாஸ்தவ அபாவம் அதன் கண் (பிரம்மத்தில்) இருக்கின்றதெனக்கூறின் அப்போது அவ்வாறிருக்கட்டும். அவித்தையினுலவச்சின்ன சேதனத்திற்கு நித்திய முக்தத்தன்மை முதலிய வியவகார விஷயத் தன்மையை யங்கீகரிக்கின் பத்தனுக்கும் முக்தனுக்கும் பரஸ்பரம் பின்னமான உபாதித் துவயாவச்சின்னத் தன்மையால் பரஸ்பரம் பேதம் சொல்லத்தக்கதாம். இவ்வாருகுங்கால் பிம்பப் பிரதிபிம்ப பக்ஷமே சிறந்ததாம் அப்போது அநவச்சின்னப் பிரம்மமே சமுசாரத்தையடையட்டும் என்னும் உனது கூற்றிற்கு விரோதமு முண்டாம். அல்லது அவித்தை முதலியவற்றின் சமான சத்தையினையுடைய அதன் அபாவம் அதன்கண் இருக்கின்றதெனக் கூறின் ஆண்டு அவ்விரண்டற்கும் விரோதமாதலால் அன்னியதரத்தின் அபாவம் பிராப்தியாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர் :— அன்னியதரப்=இரண்டிலொன்று.

नैतत्सारं सत्वमिष्टं यदि स्यादस्तित्वादेरिष्टहानिः प्रसक्ता ।
एकोपाधावस्तिता नास्तिता च स्यादित्येवं स्वीकृतेऽस्मिन् हि पक्षे ॥

एतत् न सारम्-நீ கூறியது சரியன்று

अस्तित्वादेः-உண்மை இன்மைகட்கு
सत्वं यदि इष्टं स्यात्-(ஒன்றன் கண்) வாஸ்தவத்தன்மை சம்மதமாயின்
इष्टहानिः प्रसक्ता-அனவச்சின்னப்பிரம்மமே சமுசாரத்தை யடையட்டுமென்னும் உனதிஷ்டத் திற்குக்கேடுண்டாம்

வேறு தூஷணத்தைக் கூறுதற்கு அப்பக்ஷத்தை அநுவாதஞ்செய்கின்றார்

एकोपाधौ-ஓரதிஷ்டானத்தின் கண்
अस्तिता नास्तिता च-ஒரு வஸ்துவின் பாவமும் அபாவமும்
एवं स्याद् इति-ஆகாசத்திற்போன்று இருக்கலாமென்னும்
अस्मिन् पक्षे-இந்தப் பக்ஷம்
स्वीकृते அங்கீகரிக்கப்படுமாயின் (200)

(அ) தூஷணத்தைக் கூறுகின்றார் :—

धूमे सत्ता स्यादसत्ता च तस्मिन् धूमस्यैवं कारणं कल्प्यते किम् ।
कादाचित्कं कारणं नान्तरेण स्यादित्येवं तस्य क्लृप्तिः कुतो वः ॥

धूमे सत्ता स्यात्-புகையின் கண் மலை முதலியவற்றி லிருக்குந்தன்மையாம்
तस्मिन् असत्ता च-அப்புகையின் கண் மலை முதலிய வற்றினில்லாத்தன்மையுமாம்

இந்தப் பக்ஷத்தில் புகை முதலியவற்றிற்கும் ஒரே காலத்தில் மலை முதலியவற்றில் பாவமும் அபாவமும் இருத்தல் வேண்டுமென்பது பொருள்.

ஆகாசத்தின்கண் பறவைக்குப்போன்று அதுவும் (பாவாபாவமும்) இருக்கட்டுமே யென்னுஞ் சங்கைக்கு திருஷ்டாந்தம் சம்மதமின்றெனக் கருதிக்கொண்டு பிரகிருதத்தில் தூஷணத்தைக் கூறுகின்றார்,

एवम्-இவ்வாருயின்

धूमस्य कारणम्-புகைக்குக்காரணம்

किं कल्प्यते-எவ்வாறு கற்பிக்கத்தக்கதாம்

காரணத்தின் கற்பனையினையே பிரகார சகிதமாகத் தெரிசிப்பிக்கின்றவராய் அதன் (காரணத்தின்) ஆக்ஷேபத்தினை யுபபாதனஞ் செய்கின்ருர்.

कादाचित्कम्-ஓர் போதைய காரியம்

कारणमन्तरेण-காரணமின்றி

न स्यात्-சித்தியாது

इति एवम्-இவ்வாருகும்போது

तस्य क्लृप्तिः-காரணமாகிய நெருப்பின் சித்தி

वः कुतः - உங்கட்கு எதனுலாம். எதனுலும் ஆகாதென்பதுபொருள்.

புகையிருக்குங்காலத்திலும் ஆண்டு அதனபாவமிருக்குமாயின் புகையின் அபாவ நிச்சய காலத்திற் போன்று அக்காலத்திலும் புகை முதலியவற்றின் சத்தைக்குப் பிரயோஜகமான நெருப்பு முதலியவற்றின் சத்தையைக் கற்பிக்கக்கூடாது. கற்பகாபாவம் நிச்சயிக்கப்பட்டமையின் ஆதலால் புகை முதலியவற்ருல் நெருப்பு முதலியவற்றின் அநுமானம் பரனுக்கு சித்தியாது என்பது கருத்து. (201)

(அ) அற்றேல் அபாவமிருப்பினும் புகை முதலியவற்றின் நிச்சயத்தால் அதன் காரணமான நெருப்பு முதலியவற்றை ஏன் கற்பிக்கக்கூடாது என்னுஞ் சங்கைக்கு ஆகாசத்தின்கண் பறவை முதலியவற்றிற்குப் போன்று. புகை முதலியவற்றிற்கும் அதனுசிரயத்தின்கண் அபாவம் உனது மதத்தின்கண் அப்போது நிச்சயிக்கப்பட்டமையின் அதன் பிரதிபந்தமிருத்தலால் அப்போது அதனைக் கற்பித்தல் பொருத்தமன்றென் னுங்கருத்தாற் கூறுகின்ருர் :—

काादाचित्कात्कल्पनां कारणस्य प्रत्याचक्षीताविरोधं ब्रुवाणः ।
एकोपाधावस्तिनास्तित्वयोर्हि तस्मादेषा कष्टक्लृप्तिर्न कार्या ॥ २०२ ॥

एकोपाधौ-ஓரதிகரணத்தின் கண்

अस्ति नास्तित्वयोः-ஒரே காலத்தில் ஓர்வஸ்துவின் பாவா பாவங்கட்கு

अविरोधं ब्रुवाणः - விரோதமின்மையைக் கூறுகின்றவன்

कादाचित्कात्-புகை முதலிய ஓர் போந்தைய காரியத்தால்

कारणस्य कल्पनां-நெருப்பு முதலிய காரணத்தின் அனுமானத்தை

प्रत्याचक्षीत-கெடுத்தவனுவன்

ஆதலால் இந்தப்பக்ஷம் அப்பிராமாணிகமாமென முடிக்கின்றார் :—

तस्मात्-காரிய காரண கற்பனைக்கு பங்கம் வருதலால்

एषा कष्टक्लृप्तिः-இந்தக் கொடுங்கற்பனை

नहि कार्या-செய்யத்தக்கதன்ரும் (202)

(அ) அற்றேல் உனது மதத்தில் சைதன்னியம் விளங்குவதாயினும் தன்மாத்திரமான அத்வயானந்த சொரூபத்தால் விளங்குகின்றதில்லை என அங்கீகரிக்கப் பட்டுளது. அதுபோன்று அவித்தை முதலியவற்றிற்கு ஒரே காலத்தில் ஓரிடத்தில் பாவாபாவங்கள் விருத்த மன்ரும் என திருஷ்டாந்த மாத்திரத்தினை ஆசிரயித்துச் சங்கிக்கின்றுன் :—

ननु चैकरूपचितिवस्तुगतं स्फुरणं तदस्फुरणमेव च वः ।
अविरुद्धमभ्युपगतं द्वितयं तदिवास्तिनास्तियुगलं भवतु ॥

ननु च- அற்றேல்

एकरूपचिति वस्तुगतम्-ஓர் வடிவமான சேதன வஸ்துவின்

स्फुरणं तदस्फुरणं च-விளக்கம் அதன் விளக்கமின்மையுமாகிய

द्वितयम्-இரண்டும்

वः-உங்களால்

अविरुद्धं अभ्युपगतं एव-அவிரோதமாகவே யங்கீகரிக்கப்பட்டுளது

தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

तद्दिव-அது போன்று

अस्तिनास्तियुगलं-அவித்தை முதலியவற்றின் பாவா பாவமிரண்டும்

भवतु-ஓர் சேதனத்தின் கண் உளதாகுக.

விளக்கம் விளக்கமின்மையாகிய இரண்டற்கும் உருவ பேதத்தால் ஓர் வஸ்துவின் கண்ணும் ஒரே காலத்தில் விரோதமின்றாம் என்னுஞ் சங்கை ஓர் வடிவமான என்பதனுல் நீக்கப்பட்டது. (208)

(அ) நீ கூறியது சரியன்று சைதன்னியத்தின்கண் விளக்கம் சுவாபாவிகமாம். விளக்கமின்மையோ அவித்தையினுற் பண்ணப்பட்ட ஆரோபிதமாம். வாஸ்தவமன்றாம். சுவாபாவிக ஆரோபிதங்கட்கு விரோதமுமின்றாம். விரோத மாயின் ஆரோபமாத்திரத்திற்கே லோபம் பிராப்தியாம். சமானசத்தையுடைய பாவாபாவங்கட்கோ இங்ஙனம் இன்றாம். உலகின்கண் நியமமாக அவைகட்கு விரோதமே காணப்படுதலின். என்னுங்கருத்தால் சித்தாந்தி தூஷிக்கின்றார் :—

न तदात्मनः स्फुरणमेव निजं परतोऽप्रकाशनमबोधवशात् ।
न च किंचिदन्यदनयोरुभयोरविरोधसिद्धिकृदुदाहरणम् ॥ २०४ ॥

तत् न-உன்னுல் கூறப்பட்ட ஆன்மதிருஷ்டாந்தம் சரியன்று

आत्मनः स्फुरणं-ஆன்மாவிற்கு விளக்கவடிவம்

निजं एव-சுவாபாவிகமேயாம்

अप्रकाशनम्-விளங்காமை

परतः- அன்னியத்தாலாம். அதனையே கூறுகின்றார்.

अबोधवशात्-அஞ்ஞான வசத்தாலாம்

ஆதலால் திருஷ்டாந்தம் விஷமமாம் என்பது கருத்து இவ்வாறாயினும் எப்படி சம்யோக முதலியவற்றிற்கு ஒரே அதிகரணத்தின்கண் சத்துவமும் அசத்துவமும் விரோதமின்றோ அதுபோன்று அவித்தை முதலியவற்றிற்கும் ஆகுக. என்னுஞ் சங்கைக்கு பிரதீதியின் அனுசாரத்தால அவைகட்கும் பின்னதேச விருத்தித்துவமேயாம். ஆகாசத்திலாவது அனவச்சின்ன ஆன்மாவிலாவது இயற்கையாக பிரதேசபேதமின்றாம் ஆகலின் அத்திருஷ்டாந்தத்தின் வலியாலும் உனது மதம் சித்தியாது என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

अनयोः उभयोः- பாவம் அபாவமென்னுமிவ்விரண்டற்கும்

अविरोधसिद्धिकृत् - அவிரோதத்தின் சித்தியைச் செய்கின்றதாக

अन्यदुदाहरणम्-வேறு திருஷ்டாந்தம்

न च किंचिदस्ति-யாதொன்று மின்றாம் (204)

(அ) அற்றேல் விளங்குகிறதில்லையென அபாவவாசக நகாரத்தால் விளக்கத்தின் அபாவமே தோற்றுகின்றது. அது அவித்தையை நிமித்தமாகவுடையதாமெனின். ஆகுக. இத்துணையால் ஒரு வஸ்துவிற்கு ஓர் காலத்தில் பாவாபாவங்களைப் பரிகரித்தற்குக் கூடாதாமாதலின் திருஷ்டாந்தம் பொருத்தமுடையதாமென்னும் பூருவவாதியின் சங்கைக்குக் கூறுகின்றார் :—

स्फुरणास्फुरणे च नात्मनः सदसद्भाववतया मनीषिते ।
स्फुरणं चितिरात्मवस्तुनस्तदविद्याऽस्फुरणं च कथ्यते ॥ २०५ ॥

आत्मनः- ஆன்மாவின்

स्फुरणास्फुरणे च-விளக்கமும் விளக்க மின்மையும்

सदसद्भावतया-பாவாபாவ வடிவங்களாக

न मनीषिते-அங்கீகரிக்கப்படவில்லை

அப்படியானால் அவையெவ்வாறு அங்கீகரிக்கப் பட்டுள்ளன என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றார்.

स्फुरणम्-விளக்கம்

आत्मवस्तुनः चितिः-ஆன்மாவின் சேதனரூபமாம்

अस्फुरणं च-விளக்கமின்மை

तदविद्या-ஆன்மவிஷயக அவித்தையாமென

कथ्यते-சொல்லப்படுகின்றது.

அதாவது வித்தையின் விரோதியாதலால் விளக்க மின்மை பாவ வடிவமாகவும் நகாரத்தால் சொல்லப்படு கின்றது, உதயமாகுங் சூரியனைப் பார்க்கலாகாது என்பது முதலிய விடங்களில் பார்த்தலுக்கு விரோதியான சங்கல்பம் நகாரத்தால் எப்படி கூறப்படுகின்றதோ அது போன்று. ஆதலின் அது அபாவவடிவமன்றாம். சொரூபத்திற்கு அபாவமும் சமபவிக்கிறதில்லை ஆதலின் திருஷ்டாந்தம அசித்தமேயாமென்பது கருத்து, (२०५)

(அ) ஆதலால் அஞ்ஞானித்தன்மையே சீவத்தன்மை யன்றாம் எதனால் அஞ்ஞானசிரயா (ந) வச்சின்ன பிரமமமே சீவனும். மற்றோ அவித்தையின் கண் முற்கூறிய சேதனத்தின் பிரதிபிம்பமே சீவனும். ஆண்டு சீவத் தன்மையின்கண் அன்னிய அஞ்ஞானமும் உபாதித் தன்மையால் பிரயோஜகமாம் என்னுங்கருத்தால் முடிக் கின்றார்:—

अज्ञानित्वं जीवभावो न तस्माज्जीवत्वादेः कारणं युक्तमेतत् ।
प्राणोपाधेर्वाचको जीवशब्दश्चैतन्यस्य स्यात् प्रसिद्धो हि तत्र ॥२०६॥

तस्मात्-ஆதலால்

अज्ञानित्वम्-அஞ்ஞாசிரயத்தன்மை

जीवभावः न-சீவத்தன்மையன்றும்

जीवत्वादेः-சீவத்தன்மை ஈசுவரத்தன்மை
முதலியவைகட்கு

एतत् कारणम्-இவ்வஞ்ஞானம் ஏதுவாதல்

युक्तम्-பொருத்தமாம்

அற்றேல் சுழுத்தி முதலீயவற்றின் கண்ணும் சைதன்யப் பிரதிபிம்பம் இருத்தலால் அப்போது சீவ வியவகாரம் ஏனின்று என்னுஞ் சங்கைக்கு லிங்கசரீர உபாதி சீவவியவகாரத்திற்கு விஷயமாம். அஃது சுழுத்தி முதலியவற்றிலின்மையின் அப்போது தனக்காவது பிறனுக்காவது சீவவியவகாரமின்றும். என்னுங்கருத்தால் கூறுகின்றார் :—

जीवशब्द-சீவன் என்னும் பெயர்

प्राणोपाधेः-சூச்சும சரீரத்தையுபாதியாகவுடைய

चैतन्यस्य-ஆன்மாவின்

वाचकः स्यात्-வாசகமாம்

அதன்கண் சகல மகாசன பிரசித்தியினையும் "சீவ- என்னும் தாது பிராணனை தரித்தலில்" என்னும் வியா கரண பிரசித்தியினையும் கருதிக் கூறுகின்றார்—

तत्र हि - சூக்குமதேகத்தை யுபாதியாகவுடைய
சைதன்னியத்தின் கண்ணேயே

प्रसिद्धः-சீவனென்னும் பெயர் பிரசித்தமாம். (2(6)

(அ) பிரசித்தமாம் என்னும் இதனையே விஸ்தரிக் கின்றார் :—

अज्ञानजन्यकरणप्रतिविम्बत्वाचि जीवाभिधानमिह वृद्धजनप्रसिद्धम् ।
तत्रैव निर्वचनमस्ति च तस्य तस्माज्जीवो भवेत्करणपूगवशीकृता चित् ॥

जीवाभिधानम्-சிவனென்னும் பெயர்

अज्ञानजन्यकरणप्रतिबिम्बवाचि- அஞ்ஞானத்தாலுண்டாகிய அந்தக்கரண முதலியவற்றிலுள்ள பிரதிபிம்ப சேதனத்தின் வாசகமாம் என்பது

इह-இவ்வுலகின் கண்

वृद्धजनप्रसिद्धम्-பெரியோர்களுக்கு பிரசித்தமாம்

तत्रैव- அஞ்ஞானாதியின் பிரதிபிம்பத்தின் கண்ணேயே

तस्य-சீவனென்னும் நாமத்திற்கு

निर्वचनं चास्ति-வியுத்பத்தியும் இருக்கின்றது.

அதாவது தாதுவினைச்செய்த பாணினி முதலியோரது சீவசப்தார்த்தத்தின் பிரதிபாதன மூளது.

तस्मात्- ஆதலால்

करणपूगवशीकृता चित्- கரணங்களின் சமுதாய வடிவ லிங்கசரீரவுபகிதமான சேதனமே

जीवः भवेत्-சீவனும். (207)

(அ) ஆகலால் அஞ்ஞானத்தினும் வேருன சடப் பிரபஞ்சம் முழுவதும் அஞ்ஞானத்தின் காரியமாதலால் அஞ்ஞானவடிவமாம். ஆதலால் சீவனுக்கும் கூறிய பிரகாரத்தால் அஞ்ஞானன் மகத்தன்மை யுண்மையின். பரிசேஷத்தால் பிரம்மமே அஞ்ஞானத்தின் ஆசிரயமாம் எனக் கூறுகின்ருர் :—

ब्रह्मैवाज्ञानि तस्मादिह भवितुमलं नापरं वस्तु किंचि-
त्तस्याज्ञानात्मकत्वान्नचतमसि तमस्तन्निवृत्तेरयोगात् ।
नाज्ञानोत्थस्य विद्याजनिरिह घटते तां विना तन्न नश्ये-
न्न ह्यज्ञानं विनश्येदवगतिजनकज्ञानजन्मान्तरेण ॥ २०८ ॥

तस्मात्-ஆதலால்

इह-வேதாந்த சித்தாந்தத்தின் கண்

ब्रह्म एव अज्ञानि भवितुं अलम्-பிரம்மமே அஞ்ஞானத்தின் ஆசிரயமாதற்கு யோக்கியமாம்

**अपरं वस्तु किंचित् न** பிரம்மத்தின் வேறான சடபதார்த்தம் எதுவும் அஞ்ஞானத்தினாசிரயமன்றும்

**तस्याज्ञानत्मकत्वात्** - சடப்பிரபஞ்சத்திற்கு அஞ்ஞான காரியத்தன்மையால் அஞ்ஞானான்மகத் தன்மை யுண்மையின் அதனாசிரயத் தன்மையின்றும் ஆன்மாசிரய முதலிய தோஷப் பிராப்தியாதலின்

மேலும் அஞ்ஞானத்திற்கு சடாசிரயத் தன்மையினை யங்கீகரிக்கின் அவ்வவற்றின் ஆவரண வடிவமாகவே சொல்லத்தக்கதாம் உலகின் கண் அந்தகாரத்திற்கு தனதாசிரய மாத்திரத்தை மறைக்குந் தன்மை காணப் படுதலின், அதுவும் = (சடத்தினாவரணமும்) பொருத்த மன்றும். இயற்கையாகவே அப்பிரகாசவடிவ சட வஸ்துவின்கண் அஞ்ஞானத்தின் ஆவரணம் வியர்த்த மாதலின் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

**तमसि**—அப்பிரகாச சடபதார்த்தத்தின் கண்

**न च तमः**—அஞ்ஞானாவரணம் பொருத்தமன்றும்

மேலும் சடவஸ்துவில் ஆவரணத்தை யங்கீகரிக் கின் அதன் நிவர்த்தியும் பொருந்தாது. அதாவது தனது சமானாசிரய வித்தையினால் அஞ்ஞானத்தின் நிவர்த்தி சொல்லவேண்டும். அன்றேல் அதிப்பிரசங்கம் வருதலின் சடவஸ்துவிற்குப் பிரகாசவடிவ வித்தை சம்பவிக்கிறதில்லை யாதலின், என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

**तन्निवृत्तेः**- அஞ்ஞானத்தின் நிவிருத்தி

**अयोगात्**—பொருந்தாமையின்

பொருந்தாமையில் ஏதுவினைக் கூறுகின்றார்.

**अज्ञानोत्थस्य**—அஞ்ஞானத்தாலுண்டாகிய சடவஸ்துவிற்கு

**विद्याजनिः** ஞானத்தின் உற்பத்தி

**इह न घटते**—ஈண்டு பொருந்துவதின்றும்

அப்படியானால் கிரியை வடிவ உபாஸனையினாலேயே அதன் நிவர்த்தியாகுக என்னுஞ்சங்கைக்குக் கூறுகின்றார்

तां विना-ஞானத்தினுற்பத்தியின்றி

तत् न नश्येत्-அஞ்ஞானம் நாசமாகாது

சுத்தி முதலியவற்றின் அஞ்ஞானம் சுத்தி முதலியவற்றின் ஞானத்தாலேயே நாசமாகின்றது என்பது அன்வய வியதிரேகத்தாற் சித்தித்துளது. இவ்வாறாகவே ஆன்மாவின் அஞ்ஞானத்திற்கும் அதுபோன்று தனது விஷயஞானத்தாலேயே நாசமாகுந்தன்மையுசிதமாம் ஆதலின் அஃதின்றி அஃது நாசமாகாது எனக் கூறுகின்றார்

अवगतिजनक वाक्यजन्मान्तरेण — விஷயத்தின் அபிவியத்தியினைச் செய்கின்ற அந்தக்கரண விருத்தி வடிவ ஞானத்தினுற்பத்தியின்றி

अज्ञानं न हि विनश्येत्-அஞ்ஞானம் நாசமாகாது (208)

## சீவத்தன்மைக்கு வாஸ்தவத்தன்மையின்மை

(அ) அப்படியானால் சீவத்தன்மை வாஸ்தவமாகவே இருக்கட்டுமே பாதகமின்மையின். அவ்வாறாகும்போது அதன் (சீவத்தன்மை) விசிஷ்ட சீவனுக்கு அஞ்ஞானாசிரயத்தன்மை முதலியது சம்பவிக்கிறது என்னுஞ் சங்கைக்குக் கூறப்பட்டதன் அநுவாதத்தால் கூறப்பட்ட ஏதுவின் அசித்தியினை அபிப்பிராயப்பட்டுக் கூறுகின்றார் :—

अज्ञानात्मकवस्तु नाश्रयतयाऽज्ञानस्य सम्भाव्यते
नाज्ञानात्मकताबहिष्कृतमिदं जीवत्वमङ्गीकृतम् ।
नाज्ञानाश्रयमध्यपाति घटते जीवत्वमेतेन व-
श्चैतन्याश्रयमेतदस्तु घटते तत्रैव हीदं तमः ॥ २०९ ॥

अज्ञानात्मकवस्तु -அஞ்ஞானான்மகமான சீவனும்

अज्ञानस्य आश्रयतया-அஞ்ஞானத்தின் ஆசிரயமாக

न संभाव्यते-சம்பாவனை செய்யப்படுகிறதில்லை

इदं जीवत्वम्-இந்த சீவத்தன்மையும்

अज्ञानात्मकताबहिष्कृतम्- அஞ்ஞானுன்மகத்தன்மையினும் புறம்புபட்டதாக

न अङ्गीकृतम्-உன்னுலும் அங்கீகரிக்கப்படவில்லை

தத்துவமசி முதலிய சுருதியினுல் பாதிக்கப்படுதலின் சீவத்தன்மை வாஸ்தவமாமென்றங்கீகரித்தல் பொருத்த மன்று என்பது பொருள். திரண்ட பொருளைக்கூறுகின்றுர்:

जीवत्वम्-சீவத்தன்மை

अज्ञानाश्रमध्यपाति - அக்ஞானத்தின் ஆதாரகோடியிற் சேர்தல்

न घटते-பொருந்தாது

சீவத்துவ விசிஷ்டத்திற்கு ஆசியத்தன்மையினை யங்கீகரிக்கின் சீவத்துவமும் ஆசிரயகோடியில் பிரவேசிக் கின்றது ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது. ஆதலால் பரிசேஷத்தால் சைதன்யமே அதன் ஆசிரயமாமென முடிக் கின்றுர்.

एतेन-கூறப்பட்ட உபபாதனத்தால்

वः एतत्-உங்கட்கும் இந்த அக்ஞானம்

चैतन्याश्रयम् अस्तु-சேதனத்தை யாசிரயித்ததாக இருக்குக கூறப்பட்ட உபபாதனத்தையே நினைப்பூட்டு கின்றுர்.

तत्र एव-சேதனத்தின் கண்ணேயே

इदं तमः-இந்த அஞ்ஞானம்

घटते हि-பொருந்துகின்றது ஆதலின் (209)

(அ) அற்றேல் அகண்ட சைதன்யமும் அத்துவயமு மான பிரம்மத்திற்கு அஞ்ஞானத்தின் ஆசிரயத்தன்மையும் விஷயத்தன்மையும் சம்பவியாது. அங்ஙனமாயின் அஞ்ஞானத்தின் ஞானமே பொருந்தாமற்போம் ஆதலின்.

அத்துவயப் பிரம்மத்தினை யாசிரயித்ததாகவும் விஷயஞ் செய்வதாகவும் அஞ்ஞானம் விளங்குவதின்றும். சீவாசிரய மாக அது விளங்குதலின். என சங்கிக்கின்றுன்:—

**ननु चाद्वयाश्रयतमःस्फुरणं न कथंचिदत्र नहि तत्स्फुरति ।**
**स्फुरदाश्रयस्य तमसः स्फुरणं घटते न चाद्वयमिह स्फुरति ॥ २१० ॥**

ननु च - அற்றேல்

अद्वयाश्रयतमः स्फुरणम् } அத்துவய பிரம்மத்தினை யாசிரயஞ் செய்வதாகவும விஷயஞ் செய்வதாகவும அக்ஞானத்தின் பிரதீதி

कथं चित् न संभवति-எவ்வாற்றனும் சம்பவிக்கிறதில்லை

அஞ்ஞானத்திற்கு அத்துவயத்தினை யாசிரயித்திருக்குந் தன்மையால் ஸ்புரணம் பொருந்துவதின்றும் என்பது பொருள்.

கேவலம் ஸ்புரணத்தினசம்பவமின்றும் மற்றேர் சொருப மாகவும் அஃதின்றெனக் கூறுகின்றார்:—

अत्र-அத்துவயான்மாவின் கண்

नहि तत् स्फुरति-அஞ்ஞானம் விளங்குகின்றதில்லை.

அத்வய பிரம்ம ஆசிரய விஷயக அஞ்ஞானத்தின் ஸ்புரணம் பொருந்துகின்றதில்லை எனபதன் கண் யுக்தி யினைக்கூறுகின்றார்:—

स्फुरदाश्रयस्य-விளங்குகின்ற ஆசிரயத்தினை யுடையதான

तमसः स्फुरणम्-அஞ்ஞானத்தின் பிரதீதி

घटते-பொருந்துகின்றது

इह-வியவகார பூமியின் கண்

अद्वयं नच स्फुरति-அத்வயவஸ்து விளங்குகின்றதில்லை.

ஆசிரயமும் விஷயமும் விளங்குமாயின் அதனது இச்சாதிபோன்று அஞ்ஞானத்கின் ஸ்புரணம் சொல்லத்தக்க தாகும். அத்வயவஸ்து அஞ்ஞானகாலத்தில் விளங்குகின்ற தில்லை. ஆதலின் அஃது (அஞ்ஞானம்) அத்வய பிரம்ம ஆசிரித மன்றும் என்பது பொருள். (210)

(அ) வாஸ்தவமாக அத்வைத சைதன்னியமே அஞ்ஞானத்திஞசிரயமும் விஷயமும் ஆம். அஞ்ஞானகார்ய விசேஷத்தின் விரோதியாகிய சொரூபத்திற்கே அதஞசிரய விஷயத்தன்மை கூறத்தக்கதாதலின் அங்ஙனமாயினும் அத்வயவடிவத்தால் அஃது அதஞசிரயமும் விஷயமுமன்ரும் அவ்வாறு அது பிரதீதியாகாமையினுலும். துவைதத்தின் அபாவான்மகத்தன்மையால் அதற்கு அவ்வுபயர்ன்மகத் தன்மை பொருந்தாமையானும். மற்ருே வாஸ்தவமாக அத்வயப் பிரம்மமே பிரத்யக் சைதன்னியரூபத்தால் அஞ்ஞானத்தின் ஆசிரயமும் விஷயமுமாம் ஆதலின் யாதொரு விரோதமும் இன்ரும். விளங்குகின்ற வஸ்துவிற்கே விளங்காத ஆனந்தாதி வடிவத்தால் பிரகாச விஷயத் தன்மையுண்மையால் ஆசிரய விஷய சகிதமாக அஞ்ஞானத்தின் ஸ்புரணம் பொருந்துதலின் என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்:—

नाज्ञानमद्वयसमाश्रयमिष्टमेवं
नाद्वैतवस्तुविषयं निशितेक्षणानाम् ।
नानन्दनित्यविषयाश्रयमिष्टमेत-
त्प्रत्यक्त्वमात्रविषयाश्रयतानुभूतेः ॥ २११ ॥

अज्ञानम्– அஞ்ஞானமானது

अद्वयसमाश्रयम्– அத்துவயப் பிரம்மத்தினை யாசிரயித்திருப்பது என்பது

निशितेक्षणानाम्– கூர்மையான மதியினையுடையவருக்கு

न इष्टम्– சம்மதமின்ரும்

एवम्– அப்படியே

अद्वैतवस्तुविषयम्– அத்துவித வஸ்துவினை விஷயஞ்செய்கின்றதென்பதும்

न इष्टम्– சம்மதமின்ரும்.

அப்படியானுல் அஞ்ஞானத்திற்கு பாவவடிவ ஆனந்தம் முதலியவை ஆசிரயமும் விஷயமுமாமோ என்னுஞ் சங்கைக்கு அதுவும் சரியன்ரும் கூறிய தூஷணம் நீங்காமையின் என்னுங் கருத்தால் சைதன்னியமாத்திரத்தின் கண் அதன் ஆசிரய விஷயத்தன்மையின் அநுபவமுளதாதலின் எனக்கூறுகின்ருர்.

एतत्- அஞ்ஞானம்

आनन्दनित्यविषयाश्रयम्- நித்தியானந்தத்தினை விஷயஞ் செய்வதாகவும் ஆசிரயிப்பதாகவும்

न इष्टम्-சம்மதமின்ரும்

प्रत्यक्त्वमात्रविषया श्रयतानुभूतेः } பிரத்தியக் சேதனமாத்திர விஷயகமாகவும் ஆசிரயகமாகவும் (சம்மதமாகவும்) நான் என்னை யறியேனெனஅநுபவமுண்டாதலின். (211)

(அ) பிரத்தியக்சேதனமாத்திர விஷயகமென்பதாதியால் கூறப்பட்டதனை யநுவாதஞ் செய்து உபபாதனஞ் செய்கின்ருர்:—

प्रत्यक्त्वमात्रविषयाश्रयमोहहेतोः
प्रत्यक् तिरोहितमिति प्रतिपादयामः ।
प्रत्यञ्चमेव खलु वेद्मि न वेद्मि चेति
प्रत्यक्षमस्ति ननु वेदनमस्य पुंसः ॥ २१२ ॥

प्रत्यक्त्वमात्रविषया श्रयमोहहेतोः } பிரத்தியகான்மாவினை மாத்திரம் விஷயமாகவும் ஆசிரயமாகவும் உடைய அஞ்ஞானமாகிய ஏதுவினுல்

प्रत्यक् तिरोहितम्-பிரத்தியகான்மா மறைக்கப்பட்டுளது

इति प्रतिपादयामः-என்று பிரதிபாதிக்கின்ரேம்

அற்றேல் இவ்வநுவாதமே பொருத்தமற்றதாம் சவிஷயகஞானதியின்கண் ஆசிரய விஷயங்கட்குப் பேதம் காணப்பட்டுள்ளது. ஆதலின் அஞ்ஞானத்திஞசிரயமாகிய பிரத்தியகான்மாவிற்கே அதன் விஷயத்தன்மை யெங்ஙனமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் பிரத்தியகான்மா மறைபட்டது என ஞாதாவிற்குத் தன்னிடத்துப் பிரவிருத்தி விரோதமாதலின் ஞாதிருஞேயங்கட்குப் பேதமுளதாகுக. ஈண்டு அதுபோன்று பாதமின்றும் ஆதலின் இலாகவத்தால் அவ்விரண்டன் ஐக்கியம் பொருத்தமாமென்பது கருத்து.

அதன்கண் கூறப்பெற்ற அநுபவத்தையும் பிரமாண மாக்குகின்றார்.

अस्य पुंस:–இவ் அஞ்ஞபுருடனுக்கு

प्रत्यञ्चमेव खलु–பிரத்தியகான்மாவையே

वेद्मि–அறிகின்றேனெனவும்

न वेद्मि च इति–அறிகின்றிலேனெனவும்

प्रत्यक्षं वेदनम्–பிரத்தியக்ஷஞானம்

अस्ति ननु–இருக்கின்றதேயாம் (212)

(அ) அற்றேல் அஞ்ஞானத்தின் சாதகத்தன்மையால் அதன் ஆசிரயமும் நிரம்சமுமாகிய ஓர் சைதன்னியத்தினதே ஸ்புரணம் அதேகாலத்தில் அதன் (அஞ்ஞானத்தின்) விஷயத்தன்மையோடு விருத்தமாம் என்னுஞ் சங்கைக்கு சம்வித்து சொப்பிரகாசமென்னும் வாதியினலும் அதன் சொப்பிரகாசத்தன்மை முதலியவற்றின் விவாதத்தை யனுசரித்து விளங்குகின்றதாயினும் அச்சம்வித்தின்கண் அஞ்ஞாதத்தன்மை யவசியம் அங்கீகரிக்கத்தக்கதாம். அதுபோன்று ஈண்டுமாம் எனக்கூறுகின்றார்:—

संवित्परिस्फुरति न स्फुरतीति तस्यां
वैयात्यदूषितधियस्तु विसंवदन्ते ।

अज्ञानतस्तदपि तद्वदिहाद्वयत्वं
भादप्यभादिव विमूढधियो वदन्ति ॥ २१३ ॥

वैयात्यदूषितधियः-தைரியத்தினுல் தூஷிக்கப்பட்ட புத்தியினையுடையவர்

संवित् परिस्फुरति-ஞானம் சுயம் பிரகாசமாய் விளங்குகின்றதா

न स्फुरतीति-விளங்குகின்றதில்லையா என

तस्याम्-பிரபாகரரது ஞானம் சொப்பிரகாசமாம் என்னும் பக்ஷத்தில்

विसंवदन्ते-விவாதத்தைச் செய்கின்றனர்

तदपि-சம்வித் விஷயக அந்த விவாதமும்

अज्ञानतः तु- அஞ்ஞானத்தினுலேயேயாம்

तद्वदिह-அதுபோன்று ஈண்டும்

अद्वयत्वं भादपि - அத்வய சைதன்யம் விளங்குகின்றதாயினும்

अभादिव-விளங்காதது போன்று

विमूढधियः-மூடபுத்தியினை யுடையவர்

वदन्ति-கூறுகின்றனர். (213)

(அ) அற்றேல் விளங்குகின்ற வஸ்துவின் கண்ணும் அஞ்ஞானம் விரோதமின்றியிருக்குமாயின் ஓர் போதும் ஞானத்தால் அஃது நாசமாகாது என்னுஞ் சங்கைக்கு சொரூப சைதன்னியத்திற்கு அதனுசிரயத்தன்மையால் விரோதமின்றேனும் வேதாந்த ஜன்னிய விருத்தியின்கண் அபிவியக்தமான சைதன்னியத்திற்கு அதனை நிவர்த்திக்குந் தன்மை பொருந்தும் என்னுங் கருத்தால் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றூர் :—

अव्युत्पत्ति बिभ्रती भाति संवित्तद्वद्ब्रह्माप्यद्वितीयस्वरूपम् ।
अव्युत्पत्ति नाशयद्भाति वेद्यं तस्मादेतच्चोद्यमस्मासु नास्ति ॥

संवित्-பிரபாகரர்துமதத்தில் சொப்பிரகாசஞானமானது

अव्युत्पत्ति बिभ्रती-சொப்பிரகாசத்துவாதியின் அவ்வியுற்பாதனத்தைத் தரிக்கின்றதாய்

भाति-அஞ்ஞானத்தன்மையால் விளங்குகிறது

तद्वत्-அதுபோன்று

अद्वितीयस्वरूपं ब्रह्मापि-அத்துவிதீய சுயம்பிரகாச வடிவப் பிரம்மமும்

अव्युत्पत्तिं बिभ्रत्-அவ்வியுற்பாதனத்தைத் தரிக்கின்றதாய் அதாவது தனது வடிவத்தால் விசாரிக்கப்படாததாய்

भाति-அஞ்ஞானத் தன்மையால் விளங்குகின்றது

वेद्यं नाशयत् भाति-எப்படி சம்வித்தானது சுவப்பிரகாசத் தன்மையால் அறியப்பட்டதாகி அதன் அஞ்ஞாதத் த்ன்மையை நாசம் பண்ணுகிறதோ அதுபோன்று பிரம்மமும்

वेद्यं-வேதாந்தஜன்னிய விருத்தியில் அபிவியக்தமாகி

नाशयद्भाति - அவ்வியுற்பத்தியை (அஞ்ஞானத்தை) நாசம் செய்கின்றது.

இந்தப்பிரகாரம் தனது பக்ஷத்தின் நிர்த்தோஷ சமர்த்தனத்தை முடிக்கின்றார்.

तस्मात्-ஆதலால்

एतत् चोद्यम्-இந்த சங்கை

अस्मासु नास्ति-எம்மிடத்திற் செல்வதின்றும்

சொப்பிரகாசப் பிரம்மத்தில் அஞ்ஞான மெப்படி யிருக்கும் என்னும் சங்கை எம்மிடத்திற் செய்யத்தக்க தன்று சொப்பிரகாச சம்வேதனத்தில் அஞ்ஞாதத்தன்மை சங்கையும் அதன் நிவர்த்தியும் போன்று கூடுமென்பது பொருள். இங்ஙனம் நித்திய முக்த அத்துவயசைதன் யான்மகப் பிரம்மம் சுவாசிரய அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த தாகி சீவரூபத்தால் சமுசாரத்திற் சுழலுகின்றது தனது ஞானத்தால் விடுபடுகின்றது என சித்தித்தது. (௨14)

## பந்தமோக்ஷ வியவஸ்தையைக் கூறும் சாஸ்திரத்திற்கு பிரமாணத்தன்மை

(அ) இவ்வாருயின் சுகர் வாமதேவர் முதலிய பிரம்ம வேத்தாவிற்கு மோக்ஷமும் அன்னியருக்கு அதனஞ் ஞானத்தால் சமுசாரமுமாம் என்னும் காண்டத்துவயான் மகமான பந்தமோக்ஷ வியவஸ்தையைக் கூறும் சாஸ்திரம் அப்பிரமாணமாம் என சங்கிக்கின்ருன் :—

**नन्वेवं चेद् बन्धमोक्षव्यवस्थाशास्त्रं कुप्येन्नात्मप्रबोधात् प्रवृत्तेः ।**
**बद्धो मुक्तो ज्ञानवानज्ञ इत्यप्येतत्सर्वं यावदज्ञानमिष्टम् ॥ २१५ ॥**

ननु-சங்கை

एवं चेत्-அத்துவய சேதனமே அஞ்ஞானப் பிரதிபிம்ப சீவனுகி பத்தனும் அதுவே ஞானத்தால் முத்தனுமென்னுமேக சீவவாதத்தை யங்கீ கரிக்கின்

बन्धमोक्षव्यवस्थाशास्त्रम्-சீவன் பத்தன் ஈசுவரன் முக்தன் சுகர் முக்தர் மற்றையர் பத்தர் என பந்தமோக்ஷ வியவஸ்தையைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரம்

कुप्येत्-விரோதமாம்.

சொப்பனத்திற் போன்று அஞ்ஞான முள்ளவரை பந்தம் மோக்ஷம் முதலியவியவஸ்தை ஏக சீவவாதத்தின்

கண்ணும் விரோதமின்றும் என்னுங்கருத்தால் சமாதானஞ் செய்கின்றார்.

न-விரோதமின்றும்

आप्रबोधात् - ஆன்மசாக்ஷாற்காரமுண்டாகும் பரியத்தம்

प्रवृत्तेः- அதன் வியவஸ்தையைப் பிரதி பாதிக்கும் சாஸ்திரம் பிரவிருத்தித்தலின் இதனையே விஸ்தரிக்கின்றார்.

बद्धः-சைத்திரன் பந்தமுடையவன்

मुक्तः-சுகாதியர் முத்தியினையுடையவர்

ज्ञानवान्-இதனாலேயே யிவர் ஞானமுடையவர்

अज्ञ इति-மற்றையர் அஞ்ஞானமுடையவர் என்னும்

एतत् सर्वम् अपि-ஈதனைத்தும். ஏகசீவவாதத்தில்

यावदविद्यम्-அஞ்ஞானமுள்ள பரியந்தம்

इष्टम्-இஷ்டமாம், பொருத்தமாமென்பது பொருள்.

எப்படி சொப்பனத்தில் சொப்பன திருஷ்டா ஒருவனேயுளனாயினும் அப்போது அவனாற் காணப்பட்ட புருடர்களுக்கு கட்டையிற்கள்வன்போன்று அவித்தையினாற் கற்பிக்கப்பட்ட தன்மை யுண்மையால் அவித்தையும் அதனதீன சமுசாரமுமின்றும் அங்ஙனமாயினும் சிலர் அப்போது ஞானிகளாகவும் முத்தர்களாகவும் அவனால் வியவகரிக்கப்படுகின்றனர் மற்றையர் அவரினும் விபரீதமாக அஞ்ஞர்களாகவும் பத்தர்களாகவும் வியவகரிக்கப்படுகின்றனர். சொப்பன திருஷ்டாவிற்கு சொப்பன காலத்தில் வாஸ்தவமாகவோ அவ்வியவகாரம் சம்பவிக்கிறதில்லை. இவ்வாறு சாக்கிரத்திலும் சுகர் முதலியோர் முத்தராம் ஏனையோர் பத்தராம் என்பது முதலிய வியவகாரம் அஞ்ஞான முள்ளவரை பொருந்துகின்றது. சொப்பன சாக்கிரங்களில் அஞ்ஞானத்தாற் செய்யப்பட்ட வியவகாரத்தின்கண்

யாதொரு விஷமத்தன்மையுமின்ருமென்று முன்னமே கூறப்பட்டுளது என்பது கருத்து (215)

(அ) மேலும் அத்தியயன விதியால் கிரகிக்கப்பட்டதும் வாமதேவர் முதலியோரின் முத்தியைப் பிரதிபாதிப்பதும் அத்தியயனஞ் செய்கின்றவரது புருஷார்த்தத்தின்கண் பரியவசான முற்றதுமான சாஸ்திரத்திற்கு பிரம்ம சொரூப மாத்திரத்தில் பரியவசானத்தன்மையுண்மையின் கேட்கப்படுகின்ற நிஷ்பிரயோஜனமான கதையின்கண் தாற்பரியமின்ரும் ஆதலின் அச் சாஸ்திரத்தால் இப்போதுள்ள சமுசாரத்தோற்றத்தினும் விருத்தமாக சுகாதியரின் முத்தி சித்திக்கின்றதில்லை. பிரமாணந்தரத்தோடு விரோதமாயவழி அர்த்தவாதம் அன்னியபரமாம். அத்தகைய அர்த்தவாதத்தால் அதன் பொருள் சித்தியாமையின். என்று கூறுதற்கு விசாரஞ் செய்கின்ருர் :—

किं चैतत्किं बन्धमोक्ष व्यवस्था शास्त्रं यत्नात्तत्परं सत्प्रवृत्तम् ।
किं वान्यस्मात्प्राप्तमेवानुभाष्य तस्या रूपं ब्रह्मतत्त्वं विदध्यात् ॥

किं च-மேலும்

एतत् बन्धमोक्ष व्यवस्थाशास्त्रम् — பந்தமோக்ஷத்தின் விவஸ்த்தையைப் பிரதிபாதிக்கும் இந்த சாஸ்திரம்

यत्नात् तत्परं सत् - எத்தனத்தினுல் அவ்வர்த்தத்தில் தாத்பர்யமுடையதாயிருந்துகொண்டு

प्रवृत्तम् किम्-பிரவிருத்தித்ததா

किं वा-அல்லது

अन्यस्मात् प्राप्तमेव-அனுதிவிருத்த வியவகாரத்தால் பிராப்தியான

तस्या रूपम्-முத்தியின் சொருபத்தினையே

अनुभाष्य-அனுவாதஞ்செய்து

ब्रह्मतत्त्वं विदध्यात्-அதற்கு பிரம்மசொரூபத்தினை போதிக்கின்றதா.

யத்தனத்தால் என்பது பிரமாணுந்தரத்தால் பாதமாயினும் அதன் வியாபார பிராப்தியினை சூசிப்பிக்கின்றது. (216)

(அ) முதலாவது பக்ஷத்தினை தூஷிக்கின்றார் :—

शास्त्रं तावत्तत्परं नेष्यते तदानर्थक्यात्तत्स्वरूपप्रतीतेः ।
ब्रह्मात्मैक्य प्रत्ययेनार्थवत्त्वं वक्तुं युक्तं तच्च नोऽभीष्टमेव ॥

शास्त्रम् तावत् -பந்தமோக்ஷ விவஸ்தையினைக்கூறும் சாஸ்த்திரம்

तत्परं न इष्यते-பந்தமோக்ஷாதியின்கண் தாத்பரிய முடையதாக அங்கீகரிக்கப்படுகின்றதில்லை

तत्स्वरूपप्रतीतेः பந்தமோக்ஷங்களின் சொரூப ஞானத்தால்

तदानर्थक्यात् -பிரயோசனமின்மையின்

அவ்வாக்கியத்தை யத்திபயனஞ் செய்கின்ற நம் மனோருக்கு சுகர் முதலியோரின் முத்தி ஞானத்தால் பிரத்தியக்ஷமாக யாதொருபயனும் காணப்படாமையின் இதரார்த்த வாதம் போன்று இந்தச் சாஸ்திரமும் தத்பரமன்றும் என்பது கருத்து.

ஆதலால் இரண்டாவது பக்ஷமே கூறத்தகுதியதாம் வாமதேவர் முதலானோருக்கு பிரம்ம சாக்ஷாத்காரத்தால் பிரம்மப் பிராப்தி வடிவமோக்ஷம் பிரதிபாதிக்கப்பட்டபோது இப்போதுள்ள முமுக்ஷுவிற்கும அதனையுத்தேசித்து பிரவிருத்தியுண்டாகின்றது. ஆதலின் அச்சாஸ்த்திரத்திற்கு பிரம்ம பரத்தன்மையே பொருத்தமாம். அஃது எங்கட்கும சம்மதமேயாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார் :—

ब्रह्मात्मैक्यप्रत्ययेन-பிரம்மான்மாவின் ஐக்கிய சாக்ஷாத்காரத்தால்

अर्थवत्त्वं वक्तुम् -பிரயோசனத்தைப் பிரதிபாதித்தலே

युक्तम् -பொருத்தமாம்

**तच्च नः अभीष्टमेव** அஃது எங்கட்கும் சம்மதமேயாம்

ஆகலால் அஞ்ஞபுருஷனது திருஷ்டியினலேயே பந்த மோக்ஷம் முதலியவற்றின் வியவஸ்தையின் வியவகாரமாம். என்பது கருத்து. (217)

(அ) அற்றேல் என்னினும் அன்னியமாக சீவனில்லாமையால் பந்தமோக்ஷ முதலியவற்றின் வியவஸ்த்தை இல்லையாயின் அநுபவவிரோதமாம் என சங்கிக்கின்ருன் :—

**नन्वन्यो मद्बन्धमोक्षादिभागी भूतो भावी वर्तते वा न कश्चित् ।**
**इत्युक्तार्थं स्वानुभूत्या विरोधान्नाहं जातु प्रोत्सहे संग्रहीतुम् ॥२१८॥**

**ननु**– அற்றேல்

**मत् अन्यः कश्चित्**– என்னினுமன்னியமாக யாதொரு சீவனும்

**बन्धमोक्षादि भागी**–பந்தம் மோக்ஷம் முதலியவற்றை யுடையவனாக

**भूतो भावी वा**–சென்றகாலத்திலாவது எதிர்காலத்திலாவது

**न वर्तते**–இன்ரும்

**इति उक्तार्थम्**–என்று கூறப்பட்ட பொருளை

**संग्रहीतुम्**–கிரகித்தற்கு

**अहं जातु**–நான் ஓர்போதும்

**न प्रोत्सहे**–எத்தனஞ்செய்யேன்

**स्वानुभूत्या विरोधात्**–தனது அனுபவத்தோடு விரோதமாதலின். (218)

(அ) எவ்வனுபவத்தோடு பந்தம் மோக்ஷம் முதலிய வியவஸ்தையின் அபாவக்கூற்று விருத்தமாம் எனப் படுகின்றதோ அவ்வனுபவத்தை தூஷித்தற்கு விகற்பஞ் செய்கின்ருர் :—

किं द्वैतानुभवो विरोधपदभाक्किं वा परोऽस्मीत्ययं
यद्वा कश्चिदिहापरोऽस्त्यनुभवो यस्ते विरोधावहः।
नाद्वैतानुभवः क्षतिं वितनुते तस्येति युक्तं वचो
नापि द्वैतमुपोल्लिखन्ननुभवस्तेनास्य बाधो यतः ॥ २१९ ॥

ते-பந்த மோக்ஷம் முதலிய வியவஸ்தையின் அபாவத்தின்கண் அநுபவ விரோதத்தைக் கூறுகின்ற உனக்கு (எவ்வநுபவம் சம்மதம்)

द्वैतानुभवः-கருத்திருத்துவாதி துவைதத்தை விஷயஞ் செய்கின்ற அநுபவம்

विरोधपदभाक्किम्-அதன் விரோதியா

किं वा परोऽस्मि इति अयं अनुभवः — அல்லது அத்துவயப் பிரம்மம்நான் என்னுமிவ்வநுபவம் விரோதியா

यद्वा अपरः कश्चित् अयं अनुभवः — அல்லது துவைதாத்துவைதவிஷயக அநுபவம் விரோதியா

இவ்வநுபவம் சவிசேஷ அத்துவய வாதியரால் அங்கீகரிக்கப்படுகின்றது இவற்றினின்றும் அன்னியமாகயாதோர் அநுபவமுமின்றும் ஆதலின் இம்மூன்றனுள்

इह यः विरोधावहः-ஈண்டு (பந்தமோக்ஷ வியவஸ்தையின் அபாவத்தின்கண்) விரோதத்தைச் செய்வது யாது.

தூஷணஞ் செய்வதன் கண் விகற்பக்கிரமத்தை யாதரிக்காவிடினும் யாதொரு கெடுதலுமின்றுமெனக் கருதி முதலில் இரண்டாவது பக்ஷத்தைத் தூஷிக்கின்றூர்.

तस्य-சீவர்களிடத்தில் பந்தமோக்ஷாதி வியவஸ்தையினபாவத்திற்கு

अद्वैतानुभवः-அத்வய பிரம்மம் நான் என்னும் அனுபவம்

क्षतिं वितनुते-கெடுதலைச் செய்கின்றது

इति वचः न युक्तम्-என்னும் உனது வாக்கியம் பொருத்தமன்றும்

அத்வடானுபவத்தில் மோக்ஷமாத்திரமே பிரதீதி யாதலால் இப்போதுள்ள பந்தம் பிரதீதியாகாமையால் அவ்வனுபவம் அதன் பாதகமாமென்னும் வசனம் அயுக்த மாமென்பது பொருள்.

இவ்வாறே துவைத அனுபவமும் அதற்குப் பாதக மன்றெனக் கூறுகின்றார்.

द्वैतं उपोल्लिखन् } துவைதத்தை விஷயஞ்செய்கின்ற
अनुभवोऽपि न } அனுபவமும் அதற்குப்பாதகமன்றாம்.

முன்னர் யாருக்கேனும் மோக்ஷமானது நம்மால் கூறப் படுமாயின் இப்போதுள்ள பந்தானுபவம் நமது மதத்தில் பாதகமாகும் அங்ஙனம் கூறுவதின்றாம். அவித்தியாமய மான சம்சாரத்திற்கு நிவிருத்தியினை முன்பு நம்மால் அங்கீ கரிக்கப்படாமையின் என்பது பொருள். கற்பித விஷயகத் தன்மையால் துவைதானுபவத்திற்கே பாத்தியத்தன்மை யுண்மையாலும் பாதகத்தன்மையின்றாமெனக் கூறுகின்றார்.

तेन अस्य – அத்வைதானுபவத்தால் துவைதானுபவத் திற்கு

बाध्य यतः–பாதமாம் ஆதலின். (219)

(அ) துவைதாத்வைதானுபவத்தால் பாதமாமெனின் அற்றன்று. சாஸ்த்திரத்தினுல் விருத்தமான பேதாபேத விஷயக அனுபவமின்மையின் என்னுங் கருத்தால் கூறு கின்றார்:—

द्वैताद्वैतनिवेशिनोऽनुभवनाद्बाधोद्भवोऽस्येति चे-
त्तादृङ्नानुभवोऽस्ति कस्यचिदपि स्थानत्रये जीवतः ।
भास्वच्छार्वरगोचरं ह्यनुभवं बिभ्रज्जनो दृश्यते
नास्मिन्संसृतिमण्डले स न भवेत्कस्मादयं चेद्भवेत् ॥

द्वैताद्वैतनिवेशिनः–பேதா பேதத்தை விஷயஞ்செய்கின்ற

अनुभवनात्–ஞானத்தால்

अस्य बाधोद्भवः इति चेत् — பந்தமோக்ஷ வியவஸ்தையினபாவத்திற்கு பாதமுண்டாமெனின்

तादृगनुभवः- அத்தகைய பேதாபேத விஷயக அனுபவம்

स्थानत्रये-பூமி முதலிய மூவுலகின் கண்ணும் அல்லது சாக்கிர முதலிய மூவவஸ்தையின் கண்ணும்

जीवतः कस्यचिदपि- இருக்கின்ற யாதோர் புருடனுக்கும்

न अस्ति- இன்றும்

விரோதத்தாற் சம்பவியாமையின் கண் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.

भास्वच्छार्वरगोचरम् - சூரியனுக்கும் அந்தகாரத்திற்கும் அபேதத்தை விஷயஞ் செய்கின்ற

अनुभवं बिभ्रत् जनः- அனுபவமுள்ள புருடன்

अस्मिन् संसृति मण्डले न हि दृश्यते — இந்த சம்சார மண்டலத்தில் காணப் படுகின்றதில்லை அது போன்று பேதாபேதத்தையும் ஒருவனும் அனுபவிக்கின்றதில்லை என்பது பொருள்.

அற்றேல் சூரியனுக்கும் அந்தகாரத்திற்கும் அபேதானுபவம் இல்லாதொழிக பேதாபேதங்களினனுபவம் தத்வமசி முதலிய சுருதியினல் ஏனுண்டாகாது என்னுஞ் சங்கைக்கு விரோதம் சமமாதலினுனும் சுருதியகண்டார்த்த விஷயக பாதலினுனும் ஈண்டும் அனுபவமுண்டாகாதென்னுங் கருத்தாற் கூறுகின்றார்:—

सः न भवेत् चेत्-சூரியனுக்கும் அந்தகாரத்திற்கும் அபேதானுபவமுண்டாகாதாயின்

अयं कस्मात् भवेत्-துவைதாத்வைத விஷயக அனுபவம் எப்படியுண்டாம் மற்றே உண்டாகாது (220)

(அ) ஆதலால் பிரம்மமேஒரே பிரதிபிம்ப வடிவத்தால் தனதுஅவித்தையினுல் சமுசாரத்தை யடைகின்றது தனது வித்தையினுலேயே விடுபடுகின்றது என்னும் பக்ஷம்

பாதிக்கப்படாமையின் பிரம்ம வித்துக்களின் சம்பிரதாயத்தினுல் வந்துள்ள அப்பக்ஷமே முமுக்ஷுக்களால் ஆசிரயிக்கத் தக்கது என முடிக்கின்ருர் :—

यत एवमत्र न विरोधलवो-
ऽप्युपढौकते कथितनीतिवशात् ।
उपगृह्यतां मतमिदं सुदृढं
गुरुसंप्रदायवचनानुगतम् ॥ २२१ ॥

यतः-யாதொரு காரணத்தினுல்

एवं कथितनीति वशात्-இங்ஙனம் கூறப்பட்ட நீதி வசத்தினுல்

अत्र-இந்த ஏகசீவவாதபக்ஷத்தில்

विरोधलवोऽपि-விரோதத்தின் லேசமும்

न उपढौकते-பிராப்தியாகின்றதில்லையோ அக்காரணத்தால்

सुदृढम्-அபாதிதமும்

गुरुसंप्रदायवचनानुगतम्-குரு சம்பிரதாயத்தாலும் வேதாந்த வசனத்தாலும் வந்துள்ளதுமான

इदं मतम्-இந்த மதம்

उपगृह्यताम्-கிரகிக்கத்தக்கதாம்

இங்ஙனம் என்பதின் விவரணம் கூறப்பட்ட என்பதாதி அவிரோத சமர்த்தனத்தின் பயனைக்கூறுகின்ருர் கிரகிக்கத் தக்கதாமென. (221)

(அ) இங்ஙனம் நித்தியமுத்தப் பிரம்ம சொருபமாயினும் ஆன்மா அவித்தையினுல் சமுசாரத்தை யடைகின்றது என்று கூறப்பட்டது இப்போது ஞானமாத்திரத்தினுல் சகல அநர்த்த நிவிருத்தியாகிய பயன் அதிகாரியாகிய உனக்கு சித்திக்கின்றதென சிஷ்யனைக்குறித்துக் கூறுகின்ருர்.

तव गाढमूढतमसा रचितं जगदीशजीववपुषा सकलम् ।
प्रतिभाति तावददृढ दृढवत् समुदेति यावदवबोधरविः ॥

तव உன்னுடைய

गाढम्–திடமானதாய்

मूढतमसा–அபாதிதம் போன்று ப்ராப்தமானதாய் யாதொரு அஞ்ஞானமுண்டோ அதனல்

सकलम्–சம்பூர்ணப் பிரபஞ்சமும்

जगदीश जीववपुषा–சீவேசுரசகத் வடிவத்தால்

रचितम्–செய்யப் பட்டுளது. அஃது

अदृढम्–அதிருடமாயினும்

दृढवत्–திடமானது போன்று

अवबोधरविः–தத்துவ ஞானமாகிய சூரியன்

यावदूसमुदेति–எது பரியந்தம் உதயமாகிறதில்லையோ

तावत् प्रतिभाति–அது பரியந்தம் விளங்குகின்றது

பிரம்ம ஞானத்தினும் வேருன உபாயத்தால் நிவர்த்திக்கத் தகாமையின் திடமாய் எனப்பட்டது. அதன் (பிரபஞ்சத்தின்) தோற்றத்திற்கு உத்தரகால எல்லையைக் கூறும வியாஜத்தால் அதன் நிவர்த்தி சாதனத்தைக் கூறுகின்ருர் தத்துவஞானமென. அதிருடம் என்பது அதற்கு அநிர்வசநீயத்தன்மை யுன்மையால் ஞான் நிவர்த்தியத்துவ யோக்கியதையைக் கூறுகின்றது. திட மானது போன்று விளங்குகின்றது என ஒட்டுக. (222)

(அ) அற்றேல் எல்லோருடைய யதார்த்த (விபரீத மற்ற) அநுபவத்தாற் சித்தித்த ஈசுவரன் முதலிய பிரபஞ்சத்திற்கு சுத்திரஜதாதிக்குப் போன்று அநிர்வசநீயத் தன்மை யெங்ஙனமா மென்னுஞ் சங்கைக்கு அவித்தையினுல் அபகரிக்கப்பட்ட புத்தியினை யுடையவருக்கே தேகான் மாநுபவம் போன்று அதன் அனுபவமாதலின் அதன்

அத்தியஸ்தத் தன்மையின்கண் சுத்திரஜகாதியினும் யாதொரு விசேஷமுமின்றாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார் :—

प्रभुरेष सर्वविदहं कृपणो जगदेतदद्भुत वितानमिति ।
प्रतिपत्तयस्तिमिरलुप्तदृशो यदिहोद्भवन्ति न तदद्भुतकम् ॥

प्रभुः सर्ववित्-பரமேஸ்வரன் சருவஞ்ஞன்

एषः अहं कृपणः-இந்த நான் கிருபணன் கிஞ்சிஞ்ஞன்

एतद् जगत्-இந்தச் சகத்தானது

अद्भुतचितानमिति - ஆச்சரியமான சொரூபமுள்ளதென

तिमिरलुप्तदृशः-அஞ்ஞானத்தால் மூடப்பட்ட புத்தியினையுடையவருக்கு

यत् प्रतिपत्तयः-யாதொரு ஞானங்கள்

इह उद्भवन्ति-ஈண்டு உற்பத்தியாகின்றனவோ

न तत् अद्भुतकम्-அஃது ஆச்சரியமன்றாம் (223)

(அ) அற்றேல் இந்தப் பிரபஞ்சத்திற்கு மஹாஜனங்களின் அநுபவத்திற்கு விருத்தமாக அநிர்வசநீயத் தன்மை எவ்வலிமையால் கற்பிக்கப் படுகின்றது என்னுஞ் சங்கைக்கு அது சுருதியாலும் நியாயத்தாலும் சித்தித்ததாயினும் வித்துவானுடைய அநுபவ பலத்தாலெனக் கூறுகின்றார் :—

अभयं सनातनमनातुरधीरवलोकयन्निजमनन्तसुखम् ।
न मुनिः प्रपश्यति किमप्यसुखं सकलं जिघत्सति जगत्स्वचिता ॥

अनातुरधीः मुनिः-விக்ஷிப்த சித்தமின்றிய தைரியசாலியான முனியானவன்

अभयं सनातनम्-பயமற்றதும் சனாதனமும்

अनन्तसुखम् - அபரிச்சின்ன ஆநந்தரூபமுமான பிரம்மத்தை

निजम् अवलोकयन् - பிரத்தியக் வடிவமாய் சாக்ஷாத்கரிக்கின்றவனாகி

अद्युखं किमपि-துக்க வடிவ யாதொரு சமுசாரத்தையும்

न प्रपश्यति-காண்கிறதில்லை

सकलं जगत्-சருவ சகத்தையும்

स्वचिता-தனது ஞானத்தால்

जिघत्सति-புசித்தற்கு இச்சிக்கின்றான் நாசஞ்செய்கின்றா
னென்பது பொருள் (224)

## கற்பித பதார்த்தத்திற்கும் தத்துவத்தைப்போதிக்குந் தன்மையின் சம்பவம்

(அ) அற்றேல் ஆன்மாவினும் வேறாக துவைத மில்லையாயின் தத்துவ ஞானத்திற்குச் சாதனமான குரு முதலியது இல்லாமையின் வித்வான்களுக்கு அநுபவம் எப்படிச் சித்திக்கும் என்னுஞ் சங்கைக்கு அவித்தை மய மான வியாவகாரிகப் பிரபஞ்ச மிருத்தலினால் கூறிய தோஷ மின்றாமென்னுங் கருத்தால் கூறுகின்றார்.:—

तव चित्तमात्मतमसा जनितं परिकल्पयत्यखिलमेव जगत् ।
तव कल्पनाविरचितः स गुरुस्तव रूपमद्वयमुदाहरति ॥ २२५ ॥

आत्मतमसा जनितम्-தனது அஞ்ஞானத்தாலுண்டான

तव चित्तम्-உனது சித்தம்

अखिलमेव जगत्-சம்பூர்ண சகத்தையும்

परिकल्पयति-கற்பிக்கின்றது

அதனாற் சித்தித்ததென்னை யென்னுமிடத்துக் கூறு கின்றார்.

तव कल्पनाविरचितः-உனது மனோகற்பனையாற் செய்யப்
பட்ட

स गुरुः-அக்குருவானவர்

तव अद्वयं रूपम्-உனது அத்துவயவடிவத்தினை

उदाहरति-உபதேசிக்கின்றனர். (225)

(அ) அற்றேல் அசத்தியமாகிய சுத்திரஜதாதிகட்குத் தனது உசிதமான அர்த்தக்கிரியையை யுண்டுபண்ணுந் தன்மையின்மையால குருவாதிகட்கும் கற்பிதத்தன்மையை யங்கீகரிக்கின் அது (அர்த்தக்கிரியையை யுண்டுபண்ணுந் தன்மை) கூடாது அஃது கூடுமாயின் சத்தியமேயாகும் என்னுஞ் சங்கைக்கு அர்த்தக்கிரியையின் சனகத்திற்கு சத்தியத்தன்மை யறியப்படாமையினுலும் திருசியமாகிய சுத்திரஜதாதிகட்கு மித்யாத்தன்மை காணப்பட்டமையாலும் குருவாதிகட்கும் அங்ஙனமேயாமெனக் கூறுகின்ருர்.:—

**नहि चित्तदृश्यमपि सत्यमिति प्रतिपन्नमस्ति भुवि किंचिदपि ।**
**रशनाभुजङ्गसदृशं सकलं जगदिन्द्रजालमिति सिद्धमतः ॥ २२६ ॥**

**चित्तदृश्यमपि**-சித்தத்தாற்காணப்படுகின்ற பதார்த்தமும்

**सत्यम् इति**-சத்தியமாமென

**भुवि किंचिदपि**-உலகில் கொஞ்சமாவது

**प्रतिपन्नं नहि अस्ति**-அறியப்பட்டதாக இன்ரும்

திருசியத்திற்கு சத்தியத்தன்மை யபாவமாய எழிதிரண்ட பொருளைக் கூறுகினருர்.

**अतः सकलं जगत्**-ஆதலால் சம்பூர்ண சகத்தும்

**रशनाभुजङ्गसदृशम्**-இரச்சு சர்ப்பத்திற்கு சமானமேயாம்

அதன் சாம்மியத்தினையே கூறுகின்ருர்.

**इन्द्रजालमिति**-இந்திர சாலமாமென

**सिद्धम्**-சித்தித்தது மாயிகமென்பது பொருள். (226)

(அ) அற்றேல் குரு முதலானவருக்குக் கற்பித்த தன்மையை அங்கீகரிக்கின் தாணுவில் கற்பிக்கப்பட்ட புருடனிடத்தில் உபதேசிக்குந் தன்மையில்லாதது போன்று தத்துவத்தை யுபதேசிக்குந் தன்மை சித்தியாது என்னும் சங்கைக்கு வியாவகாரிக குரு முதலிய சரீராவச்சின்ன சீவனுக்கு கடாதியின் பிரமாத்திருத்தன்மையால் அதன்

நிச்சயம் சம்பவிப்பதுபோல பிரம்மத்தின் கண்ணும் பிரமாத்திருத்தன்மையால் அதன் நிச்சயம் சம்பவித்தலால் அதன் உபதேசம் பொருந்துகின்றது. இவ்வாறு தாணு புருடனுக்கின்றும் என்னுங்கருத்தால் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார். :—

परिकल्पितोऽपि सकलज्ञतया गुरुरेव पूर्णमवबोधयति ।
परिकल्पितोऽपि मरणाय भवेदुरगो यथा नतु नभो मलिनम् ॥

परिकल्पितोऽपि-கற்பிக்கப்பட்டவராயினும்

गुरुः एव-குருவே

सकलज्ञतया-சருவஞ்ஞத்தன்மையால் கற்பிக்கப்பட்டவராக இருந்துகொண்டு

पूर्णम् अवबोधयति – பூரணப்பிரம்மத்தைப் போதிப்பிக்கின்றார்

यथा परिकल्पितोऽपि-எப்படி கற்பிக்கப்பட்டதாயினும்

उरगः मरणाय भवेत्-சர்ப்பமே மரணத்தின் பொருட்டு ஆமோ

नतु नभो मलिनम्-ஆகாசத்தின் நீலநிறமன்றுமோ அப்படி

குருவே என்னும் ஏகாரத்தால் தாணு புருடன் முதலியவற்றை நீக்குகின்றார்.  227

(அ) அற்றேல் முதற் கணத்திலுள்ள சத்வஸ்துவிற்கே காரணத்தன்மையுண்மையால் சத்தினும் விலக்ஷணமானதற்கு காரணத்தன்மை எங்ஙனம் கூடும் என்னுஞ் சங்கைக்கு காரணத்தின் சந்தை மாத்திரம் அவ்வக்கார்ய விசேஷத்தின் உத்பத்தியில் பிரயோசகமா, அல்லது அதன் சாமர்த்திய முதலியவையும் பிரயோசகமா, அவற்றுள் முதற் பக்ஷத்தினை தூஷிக்கின்றார் :—

यदि सत्यमित्यवगतिं कुरुते, घटते पदादपि हुताशनधीः ।
यदि चानृतं न जनयेत्प्रमितिं ननु चोदनापि जनयेन्न धियम् ॥

सत्यं इति–குரு முதலிய பிரபஞ்சம் சத்தியமாயிருந்து கொண்டு

अवगतिं कुरुते यदि–ஞானத்தைச் செய்யும் அவ்வவற்றில் அசாதாரணவடிவ சாமர்த்திய முடையவராயிருந்துகொண்டு செய் யாதுஎனின், அப்போது

पदादपि–படம் முதலியவற்ருலும்

हुताशनधीः–புகை முதலியவற்ருற்போன்று நெருப்பு முதலியவற்றின் ஞானம்

घटते–உண்டாதல் வேண்டும்.

இரண்டாவது பக்ஷத்தில் அசத்விலக்ஷணப் பிரபஞ்சத் திற்கு அத்துணை மாத்திரையானேயே காரிய விசேஷத்தின் சனகத்தன்மை பொருந்தும் போது சுருதி நியாயங்களோடு விருத்தமான சத்தியத்தன்மை கற்பிக்கத் தக்கதன்றென காண்க. மேலும் பிராந்தி விஷயத்திற்கு பிரமேய முதலிய காரியத்தின் அஜனகத்தன்மை நியமமாக வாதியினுலுங் கூறமுடியாதென்னுங் கருத்தால் கூறுகின்ருர்:—

अनृतम्–கற்பித குரு முதலிய சாதனம்

प्रमितिं यदि न जनयेत्–பிரமையை யுண்டுபண்ணுதாயின்

चोदना अपि–விதாயக வாக்கியமும்

धियं न जनयेत्–கருமஞானத்தை யுண்டுபண்ணுது

விதிவாக்கியம் என்பதனுல் வாக்கியமனைத்தையும், தர்மஞான மென்பதனுல் பிரமை அனைத்தையுங் கொள்க. ஓர் வாக்கியத்தாலும் ஓர் ஞானமும் உண்டாகாதென்பது பொருள். நனு–என்பது விதர்க்கத்தில் வந்தது. (228)

(அ) இஷ்டாபத்தியாம் என்னுஞ் சங்கைக்குக் கூறு கின்ருர்:—

जनयत्यसाविह मृषा वपुषा करणीयवस्तुनि मतिं सुदृढाम् ।
ध्वनिधर्मभेदघटितोऽपि मृषा स्वरसेन सन्नपि तु वर्णगणः ॥ २२९ ॥

इह असौ–இவ்வுலகின்கண் விதாயக வாக்கியம்

मृषावपुषा–கற்பித ஆனுபூர்வீ சுவரார்த் விசிஷ்ட வடிவத்தால்

करणीयवस्तुनि - அனுஷ்டேய சுபாவ தனது பிரமேயத்தின் கண்

सुदृढां मतिम्–திட ஞானத்தை

जनयति-உண்டுபண்ணுகின்றது

அற்றேல் சுவரம் முதலிய விசிஷ்டத்தன்மை யதற்கு சுவாபாவிகமேயாம் ஆதலின் மித்தையன்ரும் என்னுமிடத்து கூறுகின்ருர்:—

वर्णगणः–வர்ண சமுதாய வடிவ வாக்கியம்

स्वरसेन सन् अपि–சொரூபத்தால் சத்தியமாயினும்

ध्वनिधर्मभेदघटितः–தொனியின் தர்ம விசேஷங்களோடு கூடினதாய்

मृषा तु-மித்தையேயாம்.

அவர்ணன்மக சப்தம் அல்லது வர்யு, தொனியாம். அதனது தர்மங்கள் உதாத்தம் முதலிடவையாம், அவை வர்ண தர்மங்களன்ரும். வர்ணங்கள் ஏகமாதலானும் நித்திய விபுவாதலானும் உதாத்த முதலியவையும் பௌர்வா பர்யமும் அவைகட்குச் சம்பவியாமையினுனும் வீணை முதலியவற்றின் தொனி தர்மமாக, நிச்சயிக்கப்பட்ட அவ்வுதாத்தாதிகட்கு வர்ண தர்மத்தன்மையின் கண் பிரமாண மின்மையினுனும், என்க. ஆதலால் உதாத்த உகாரம் என்பது முதலிய அநுபவம் கற்காலத்தில் நியத மான தொனி தருமத்தை விஷயஞ் செய்வதால் வருணுர்சத்தில் பிராந்தியினுலும் பொருந்துதலின். சத்தத்

திற்கு ஆசிரயமான ஆகாசத்தின் அநுபவமின்றி யநுபவ முண்டாவதுபோன்று வாயுவின் தருமமான உதாத்தாதி கட்கும் ஆசிரய வாயுவின் அநுபவமின்றி அநுபவம் சம்பவித்தலின். ஆதலால் சொரூபமாக சத்தியமாயினும் வருண சமுதாய வடிவவாக்கியம் கூறிய விசிஷ்ட ரூபத்தால் பொய்யேயாம் என்பது பொருள். (229)

(அ) அப்படியானுல் வருணம் சொரூபமாகவே அர்த்த ஞானத்தின் கண் காரணமாகட்டுமே கற்பித சுவர விசிஷ்டமாகவும் பூருவாபரத்துவ விசிஷ்டமாகவும் வேண்டாமே என்னுஞ் சங்கைக்கு சுவரம் முதலியவை பேதமாகுங்கால் அர்த்த ஞானத்தின் பேதம் காணப் படுவதால் அதுவும் காரணமேயாமென்னும் கருத்தால் நிருத்த வசனத்தைக் கூறுகின்ருர்:—

मन्त्रो हीनः स्वरतो वर्णतो वा मिथ्याप्रयुक्तो न तमर्थमाह ।
स वाग्वज्रो यजमानं हिनस्ति यथेन्द्रशत्रुः स्वरतोऽपराधात् ॥

स्वरतो वर्णतो वा हीनः } சுவாபாவிகஸ்வரத்தினும் வருணத்தினும் விலக்ஷணஸ்வராதியினையுடையதாய்

मिथ्याप्रयुक्तः–பிரமாதம் முதலியவற்ருல் பிரயோகிக்கப் பட்டதாயுள்ள

मन्त्रः–மந்திரம்

तम् अर्थम्–தாற்பரியத்திற்கு விஷயமான பொருளை

न आह–போதிக்கின்றதில்லை.

மாருய் விபரீதார்த்தத்தைப் போதிக்குந்தன்மையால் யஜமானனை நாசமே செய்கின்றதெனக் கூறுகின்ருர்.

सः वाग्वज्रः– அம்மந்திரம் வாக்குவச்சிர வடிவமாகி

यजमानं हिनस्ति- யஜமானனை இம்ஸிக்கின்றது.

உதாரணம் கூறுகின்ருர்.

स्वरतोऽपराधात्–ஸ்வரத்தின் அபராதத்தால்

यथेन्द्रशत्रु - இந்திர சத்துரு என்னும் மந்திரம் யஜமான னுக்கு அநர்த்த ஏதுவானது போன்று.

துவஷ்டா என்னும் தேவன் விஸ்வருபனெனப் பெயரிய தனது புத்திரன் இந்திரனுல் கொல்லப்பட்டபோது குரோத முடையவனுகி இந்திரனை நிக்கிரகிப்பதில் ஆற்றலுடைய புத்திர (விருத்திர)னை யுண்டாக்கும் பொருட்டு ஆபிசாரிக கருமத்தைச் செய்கின்றவனுகி स्वाहा इन्द्रशत्रुर्वर्धस्व (சுவாஹா இந்திர சத்துநர் வர்த்தஸ்வ) என்னும் மந்திரத்தால் அதிசிஷ்ட (மிஞ்சிய) ஸோமத்தை அக்கினியில் ஹவனஞ் செய்தான் என ஆக்கியாயிகை வேதத்தில் படிக்கப் படுகிறது. ஆண்டு விருத்திரனை யுற்பத்தி செய்கின்ற துவஷ்டாவினுல் இந்திரனது சத்துரு என்னும் தற்புருஷ ஸ்வரமுடைய மந்திரார்த்தத்தினைக் கருதி பிரமாதத்தால் பஹு³வ்ரீஹிஸ்வரம் பிரயோகிக்கப்பட்டது. ஆதலின் இந்திரனே அவனுக்கு சத்துருவாக ஆனுன்-

தற்புருஷ சமாசம்=வேற்றுமைத்தொகை. பஹு³ வ்ரீஹி சமாசம்= அன்மொழித்தொகை. தர்புருஷ சமாசத் தைப் போதிக்கும் ஸ்வரம் அந்தோதாத்தமாம். பஹு³ வ்ரீஹி சமாசத்தைப் போதிக்கும் ஸ்வரம் ஆதியுதாத்தமாம். இவ்வாருகவே உசிதஸ்வரமும் வாக்கியார்த்த ஞானத்திற்கு ஏதுவாமென்பது பொருள். அப்படியே பூருவாபரத்துவ விசேஷத்திற்கும் அர்த்த விசேஷ ஞானத்தின் ஜனகத் தன்மை சொல்லவேண்டும். அன்றேல் ராஜா ஜாரா என்னும் பதங்களால் சமானமாகவே அர்த்த ஞானமுண்டா தல் வேண்டும். என்பது கருத்து. (230)

(அ) அப்படியானுல் சத்திய ஸ்போடமே சோதனை (வாக்கியம்) ஆகட்டுமே எனின் அற்றன்று அதற்கும் சுவபாவமாக ஸ்வராதிவைசிஷ்டியம் சம்பவியாமையால் அதன்கண் அதற்கு மித்தியாத்தன்மை நீங்காமையின், வருண சமுதாயத்தினும் வேருனவற்றில் அநுபவம் முதலிய

வையின்மையால் அப்பிராமாணிகமாகிய பிறவற்றில் சோதனை (வாக்கிய)த்தன்மையின்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

**न च वर्णपूगमपहाय भवेदिह चोदनेत्यभिमतं विदुषाम् ।**
**यदि सत्यमेव गमकं भवति स्फुटमप्रमाणमियमप्युदिता ॥ २३१ ॥**

**इह**-இவ்வுலகில்

**वर्णपूगं अपहाय**- வர்ண சமுதாயத்தை விட்டு

**चोदना भवेदिति**-சோதனையிருக்குமென்பது

**विदुषाम्**-அறிஞர்களான மீமாம்சகருக்கு

**न चाभिमतम्**-சம்மதமின்றும். மற்றோ வர்ண சமுதாயமே சோதனை (வாக்கியம்) யாம். என்பது சம்மதம்.

பரமதத்தின் நிராகரணத்தை முடிக்கின்றார்.

**सत्यमेव**-வாஸ்தவமாகிய சாதனமே

**यदि गमकं भवति**-சாத்தியத்தின் சாதகமாயின்

**उदिता इयमपि**-கூறப்பட்ட சோதனையும்

**स्फुटं अप्रमाणं (स्यात्)**-அத்தியந்தம் அப்பிரமாணமாம்.

சோதனையும் என்ற வும்மையால் சோதனை மாத்திரத்திற்கு பிரமாணத்தினைக் கூறும் பிராபாகரரைக் குறித்து அதுவும் (சோதனை பிரமாணமும்) சித்தியாது என சூசிப்பிக்கின்றார்.

சோதனை—விதாயக வாக்கியம் (231)

(அ) வைசேஷிகர் முதலியோரது மதத்தின்கண் வர்ண வியக்திகட்கு அனந்தத்தன்மையுண்மையாலும், உற்பத்தியிருத்தலினாலும், சுவாபர்விகமாகவே ஆனுபூர்வியும், சுவரமும் பொருந்துகின்றது. ஆதலின் வர்ணங்களுக்கு அதன் விசிட்டத்தன்மை மித்தையன்றும். ஆதலின்

அலீகம் சத்தியபோதகமாம் என்பதன்கண் இஃது திருஷ்டாந்தமன்றாம் எனக் கருதி அவர் மதத்தின்கண் சுரோத்திரேந்திரியம் அதன்கண் திருஷ்டாந்தமாம் எனக் கூறுகின்றார்:—

श्रवणेन्द्रियं च किल कर्णगतं परिकल्पनोपचरितं नभसः ।
वलयं प्रकाशयति शब्दगणं परमार्थमित्यपि कणादमतम् ॥ २३२ ॥

कर्णगतम्-கர்ண சஷ்குலியின் மத்தியிலிருப்பதும்
परिकल्पनोपचरितम्-கற்பனையினால் வளைவாசவுபசரிக்கப் பட்டதும்
नभसः वलयम्-ஆகாசத்தின் வலயம்போன்ற வடிவம்
श्रवणेन्द्रियं च किल-சுரோத்திரேந்திரியமாம் அஃது
परमार्थ शब्दगणम्-சத்தியமான சப்த சமுதாயத்தினை
प्रकाशयति-பிரகாசிப்பிக்கின்றது
इत्यपि कणादमतम्-என்பது கணாதருடைய மதமாம்.

சுரோத்ரேந்திரியத்தின் சொரூபத்தினைக் கூறுகின்றார் கர்ண சஷ்குலி என அற்றேல் சர்வகதமான ஆகாசத்திற்கு காதிற்குள் இருக்குந் தன்மையும் வலயத் தன்மையும் எங்ஙனம் பொருந்தும் என்னுஞ் சங்கைக்கு கூறுகின்றார். கற்பனையினால் என கர்ணாவச்சின்னமாகிய ஏதுவால் ஆகாசத்திற்கு கர்ணத்திலிருக்குந்தன்மையும் வலயம் போன்ற வடிவமும் உபசரிககப்பட்டது எனபது பொருள்.

வைசேஷிகர் முதலியோரது மதத்தின் கண்ணே சுரோத்திரத்திற்கு நித்தியமும் விபுவுமாயுள்ள ஆகாச வடிவத்தால் சத்தத்தைப் பிரகாசிப்பிக்குந்தன்மையை யங்கீகரிக்கின் அதிவியாப்தியுண்டாம். அதனைப் பரிகரித் தற்பொருட்டு கர்ண சஷ்குலியவச்சின்ன ஆகாசத்தின வலயம் சுரோத்திரமென அங்கீகரிக்கத்தக்கதாம் ஆகாசத் திற்கு வலயத்தன்மை முக்கியமாக சம்பவிக்கிறதில்லை

யாதலின் அது அலீகமேயாமென்று சொல்லவேண்டும். அங்ஙனமாயினும் சத்தத்தைப் பிரகாசஞ்செய்கின்றது. ஆதலின் அவர் மதத்தின் கண்ணும் அலீகத்திற்கு சக்தியார்த்தத்தைப் போதிக்குந்தன்மை காணப்பட்டுளது என்பது பொருள். கில என்பதனுல் தனது மதத்தில் சுரோத்திரம் காரியமாதலால் அதன் (சுரோத்திர திருஷ்டாந்தத்தின்) சம்மதமின்மையை சூசிப்பிக்கின்றனர்.

அலீகம்-கற்பிதம் (232)

(அ) ஆதலால் கற்பித குருவாதிகட்கும் தத்துவத்தைப் போதிக்குந் தன்மை சம்பவித்தலால் மஹாவாக்கியத்தாலுண்டான தத்துவ சாக்ஷாற்காரத்தால் கற்பித பந்த நிவிருத்தி சித்திக்கின்றதுஎன தனது மதத்தை முடிக்கின்றார்:—

त्वमतः स्वमोहरचितं गहनं भवसागरं तरपरावगतेः ।
परिकल्पितद्वयनिबन्धनतः परमार्थसंविदुदये सति भोः ॥ २३३ ॥

अतः-கற்பித வஸ்து வாஸ்தவ காரியத்தைச் செய்வதில் விரோதமின்மையால்

भोः त्वम्-நன்மதியனே நீ

परिकल्पितद्वयनिबन्धनतः-கற்பிதகுரு முதலிய காரணத்தாலுண்டான

परावगतेः-பிரம்மத்தின் அகண்டாகாரவிருத்தி வடிவ சாக்ஷாற்காரத்தினுல்

परमार्थसंविदुदये सति- பரமார்த்த சொரூப ஞானம் அபிவியத்தமாகும்போது

स्वमोहरचितम्-தனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்டதும்

गहनम्-நெருங்கத்தகாததுமான

भवसागरम्-சமுசாரசமுத்திரத்தை

तर-தாண்டுவாயாக. (233)

(அ) அற்றேல் பிறமதத்தின்கண் சோதனை முதலிய வற்றின் பூருவாபரத்தன்மை முதலியவற்றிற்கு அலீகத் தன்மை (கற்பிதத்தன்மை) அசித்தமாம். அவர் மதத்தின் கண் அநிர்வசநீயமின்மையின். இவ்வாறே சுரோத்தி ரேந்திரியமும் கற்பிதமன்றும். மற்றோ பிரசித்த வலய சதிருச ஆகாசமாம். ஆதலால் சத்திய வஸ்துவே பிற மதத்தின்கண் போதகமாம். என அத்திருஷ்டாந்தத்தின் அசித்தியினை யாசங்கித்து கைமுதிக நியாயத்தால் அநிர்வச நீய பதார்த்தத்திற்கு போதகத்தன்மையினைக் கூறுகின்றார்.

भ्रान्तं तथोपचरितं च यथाविभाग-
मङ्गीकृतं कणभुगादिमुनीन्द्रमुख्यैः ।
यन्नास्ति तत्फलनिबन्धनमस्मदीये
तन्त्रे तमोविरचितं न फलाय कस्मात् ॥ २३४ ॥

यथाविभागम्-அந்தந்த மதப்படி

भ्रान्तम्-வாக்கியம் ஸ்வராதி விசிஷ்டத்தன்மையால் பிராந்தியாமெனவும்

तथा उपचरितं च - சுரோத்திரேந்திரியம் வட்டவடிவத் தால் உபசரிக்கப்பட்டதாமெனவும்

कणभुगादिमुनीन्द्रमुख्यैः-கணாதர் முதலிய முனிசிரேஷ்டர் களால்

अङ्गीकृतम्-அங்கீகரிக்கப்பட்டுளது:

அதனாற் சித்தித்ததென்னை என்னுமிடத்துக் கூறுகின்றார்.

यत् नास्ति-யாதொன்று இல்லையோ

तत् फलनिबन्धनम्- அது பயனுக்கு ஏதுவாம்.

அதாவது மீமாம்ஸக மதத்தில் பிராந்தியும் நையாயிக மதத்தில் உபசரிக்கப்பட்டதுமின்றேயாம் அபரிச்சின்ன ஆகாசத்தில் வாஸ்தவமாக வலய சாதிருசியமில்லையாகலின்,

அங்ஙனமாயினும் அஃது சத்திய வஸ்துவின் போத ஏதுவாம் இவ்வாறுகும்போது

अस्मदीये तन्त्रे-எமது மதத்தில்

तमोविरचितम्-அவித்தையினுற் கற்பிக்கப்பட்ட அநிர்வசநீய குரு முதலிய பதார்த்தம்

फलाय-தத்துவ ஞானவடிவ பயனின் பொருட்டு

कस्मात् न भवेत्-ஏனுகாது. (234)

(அ) அற்றேல் பிராந்தி ஞானத்தின் விஷயாதிகளும் அவர் மதத்தில் வேறிடத்தில் இருத்தலினுல் யாதொன்று இல்லையோ என்று முன்னர் கூறினது அசித்தமாம் என்னுஞ் சங்கைக்கு பிற்பாதியின் பொருளை விஸ்தரிக்கின்றார்:—

असदपि फलवत्तामश्नुते युष्मदिच्छा-
मनुसरदथ कस्मान्मायया निर्मितं सत् ।
न भवति फलवत्ताभाजनं चित्रमेत-
द्वयमिह न समर्था यूयमत्यन्तशक्ताः ॥ २३५ ॥

असदपि-அசத்தாகிய சுவரம் முதலியவையும்

युष्मदिच्छां अनुसरत्-உமதிச்சையினை யனுசரிக்கின்றதாய்

फलवत्तां अश्नुते-பயனுக்கேதுவாந் தன்மையினையடைகின்றது

अथ-அங்ஙனமாகுங்கால்

मायया निर्मितं सत्-அஞ்ஞானத்தாலுண்டுபண்ணப்பட்ட அசத்விலக்ஷண வஸ்து

फलवत्ताभाजनं-பயனுக்குக் காரணமாக

कस्मात् न भवति-ஏனுகிறதில்லை

एतत् चित्रम्-அசத்து காரணமென்பதும், அசத்விலக்ஷ ணம் காரணமன்று என்பதும், ஆச்சர்யமாம்.

இரண்டு லௌகிகரீதியை தெரிசிப்பிக்கின்றார்.

इह-கூறிய பொருளில்

वयं न समर्थाः- நாங்கள் ஆற்றலுடையவரன்று

यूयं अत्यन्तशक्ताः-நீங்கள் அத்தியந்த ஆற்றலுடையவர்.

இங்ஙனம் அர்த்தத்தைக் கற்பிப்பதில் உமக்கு தைர்யமும் எமக்கு அஃதின்மையும் நிமித்தமாம். வேறொன்றுமின்றாம் என்பது பொருள். சுவரம் முதலியவை தொனி முதலியவற்றிலிருக்கின்றன. அங்ஙனமாயினும் அஃது சொருபமாக சாப்த ஞானத்திற்குக் காரணமன்றாம். மற்றோ சப்தத்தின்கண் இருப்பதாக அறியப்படுகின்றதாகி காரணமாம். சுவரம் முதலியவற்றிற்கு சப்த விசிட்டத்தன்மை அசத்தேயாம். அதனை சத்தெனவங்கீகரிக்கின் அதன் ஞானத்திற்கு பிராந்தித்தன்மை பொருந்தாமற்போம்.

இங்ஙனம் ஆகாசத்திற்கு வலய சாதிருசியமும் அசத்தேயாம் ஆதலின் அவைகட்கு திருஷ்டாந்தத்தன்மையின் அசித்தியின்றாம். இப்பொருள் அசத்ாகிய என்பதனால் கூறப்பட்டது. அங்ஙனமாயினும் என்பது பக்ஷாந்தரத்தைக் கூறுகின்றது. (235)

(அ) இங்ஙனம் பரமதத்தாலும் கற்பித சாதனத்திற்கு சத்தியார்த்த போதகத்தன்மை உபபாதனஞ் செய்யப்பட்டது, தனது மதத்தின் கண்ணோ அசத்தியமாகவேயுள்ள ஆகாசம் முதலிய சர்வபிரபஞ்சத்திற்கும் मायाभिः पुरुरूप ईयते பரமான்மா மாயைகளால் அனேக வடிவங்களாகின்றார், என்னுஞ் சுருதியையனுசரித்து காரணத்தன்மையையங்கீகரித்தலினால் அத்தகைய பொய்யாகிய குரு முதலியவற்றிற்கும் காரணத்தன்மை பொருத்தமேயாம். சொரூபமாக அலீக பதார்த்தத்திற்கும் அதிஷ்டான சத்

வடிவத்தன்மையால் அஃது பொருந்துமென்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

परमेव तत्त्वमगृहीतमभूदखिलस्य कारणमनर्थकरम् ।
परमेव तत्त्वमवबुद्धमतः परितृप्तये भवति पुष्कलतः ॥

परमेव तत्त्वम्-பரமான்மாவே

अगृहीतम्-அறியப்படாததாகி

अखिलस्य कारणम्-சர்வ பிரபஞ்சத்திற்கும் காரணமாய்

अनर्थकरम् अभूत्-அனர்த்த ஏதுவாயிற்று

சர்வசம்சாரத்திற்கும் அஞ்ஞாத சத்வஸ்துவின் விவர்த்தத்தன்மை சித்தித்தபோது திரண்ட பொருளைக் கூறுகின்றார் :—

अतः-ஆதலால்

परमेव तत्त्वम्-பரமான்மாவே

अवबुद्धम्-சாக்ஷாத் கரிக்கப்பட்டதாகி

पुष्कलतः परितृप्तये-பரிபூர்ண ஆனந்தத்தின் பொருட்டு

भवति-ஏதுவாகின்றது

பரமான்மாவின் அஞ்ஞானமே பந்தஹேதுவாம். அதன் சாக்ஷாத்காரமே மோக்ஷ ஹேதுவாம் என்பது கருத்து. (236)

அற்றேல் எனது வடிவமேயறியப்பட்டதாகி எனக்கு திருப்தியின் பொருட்டாகுமாயின் அப்போது முன்னமும் தத்துவமஸி முதலிய வாக்கியத்தின் சிரவணம் சம்பவித்த லால் இதற்கு முன்னம் எனக்கு திருப்தி ஏனுண்டாக வில்லையென்னுஞ் சங்கைக்கு அசுத்தாந்தக்கரணத்தை யுடையதாந்தன்மையால் கற்பித ஐஸ்வரியம் முதலிய வற்றில் உனக்கு சித்தத்தின் அபிநிவேசம் முதலியவற்றால் அதிகாரமில்லாமையால் முன்பு தத்துவ சாக்ஷாத்கார முதயமாகாமையின் என்னுங்கருத்தாற் கூறுகின்றார் :—

तव रूपमेव तव दुःखकरं यदि तन्न पश्यसि बहिर्मुखधीः ।
तव रूपमेव तव तृप्तिकरं यदि तत्प्रपश्यसि निवर्त्यतमः ॥

बहिर्मुखधीः-வெளிமுக புத்தியுடையவனுகி நீ

तत्-உனது வடிவ பரமான்மாவை

यदि न पश्यसि-அபரோக்ஷமாக அறியாயாயின்

तव रूपमेव-பிரம்மரூப உனது வடிவமே

तव दुःखकरम्-உனக்கு துக்கத்தைச் செய்வதாம்

வெளிமுகன் என்பதனுல் வைராக்கியம் சமம் தமம் முதலியவற்றின் அபாவத்தை சூசிப்பிக்கின்ருர்.

இப்போதோ உனக்கு விவேகம் முதலிய அதிகாரம் அடைவுற்றிருத்தலின தத்துவ சாக்ஷாற்காரம் சம்பவிக்கு மாதலின் பரிபூரண சுகம் சித்திக்கின்றது என்னுங் கருத் தாற் கூறுகின்ருர்.

तमः निवर्त्य-அஞ்ஞான காரியமாகிய அவிவேகம் முதலியவற்றை நிவர்த்திசெய்து

तत्-உனது வடிவ பரமான்மாவை

यदि प्रपश्यसि-அபரோக்ஷமாகப் பார்ப்பாயாயின்

तव रूपमेव-பிரம்மரூப உனது வடிவமே

तव तृप्तिकरम्-உனக்கு திருப்தியைச் செய்வதாம் (287)

(அ) இங்ஙனமாயினும் ஞானமாத்திரத்தால் எனக்கு கிருத கிருத்தியத்தன்மை சித்தியாது 'சனக ராஜா முதலியோர் கருமத்தினுலேயே ஸம்சித்தியினை அடைந்துள்ளார்கள்' என்பது முதலிய வசனத்தால் கருமத்திற்கு மோக்ஷ ஏதுத் தன்மையறியப்படுதலின். என்னுஞ் சங்கைக்கு அந்தக் கரண சுத்தி வடிவ சித்தியினைக் குறித்து கருமத்திற்கு ஏதுத்தன்மையே அவ்வாக்கியத்திற்குப் பொருளாம். அங்ஙனங்கொள்ளாக்கால் "மோக்ஷத்தின் பொருட்டு வேறு வழியில்லை" "ஞானத்தாலேயே மோக்ஷமாம்"

என்பது முதலிய சாஸ்திரத்திற்கு விரோதம் வரும். ஆதலால் ஞானமாத்திரத்தினுல் கிருதகிருத்தியத்தன்மை சித்திக்கும் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.—

तव बोधमात्रमुपनेयमतस्तव मोहमात्रमपनेयमपि ।
तव बोधमोहजनिहानिकरं वचनं त्रयीशिरसि तत्त्वमिति ॥

अतः-ஞானமே மோக்ஷஏதுவாதலால்

तव बोधमात्रम्-உனக்கு ஞானமாத்திரமே

उपनेयम्-சம்பாதிக்கத்தக்கதாம்

மேலும் அவித்தையின் நிவிருத்தியே ஈண்டு சாத்திய மாதலால் வித்தையே யபேக்ஷிக்கப்பட்டதாம் கருமம் அன்ரும் என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்

तव अपनेयमपि-உனக்கு தள்ளத் தக்கதும்

मोहमात्रम्- அஞ்ஞான மாத்திரமேயாம்

அற்றேல் சருவப்பிரமாணத்திற்கும் அகோசரமான பிரமத்தின்கண் எனக்கு ஞானமாவது அஞ்ஞான நிவர்த்தியாவது எப்படியுண்டாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்:—

तवबोधमोहजनिहानिकम् { உனக்கு ஞானத்தினுற்பத்திவாயிலாக அஞ்ஞானத்தை நாசஞ்செயவது

त्रयी शिरसि-உபநிஷத்தின் கண்ணுள்ள

तत्त्वमिति वचनम्-தத்துவமசி முதலிய வாக்கியமேயாம்

## மோக்ஷத்தின் கண் விசேஷத்தினைக் கூறுதல்

(அ) அற்றேல் மோக்ஷ சமுசாரங்களுக்கு சமத் தன்மைபொருந்தாமையின் விசேஷம் சொல்லுதல்வேண்டும் அவ்விசேஷம் மோக்ஷத்தின் கண்ணும் யாதேனும் ஓர் ஆகந்துக தருமமாக ஆகுமாயின் அப்போது உனக்கு ஞானமாத்திரமே சம்பாதிக்கத் தக்கது என்பது அசங்கத

மாகும் என்னுஞ்சங்கைக்கு அஞ்ஞானகற்பித சமுசார நிவிருத்தியே அதன் கண் விசேஷமாம். அதுவும் 'உனக்கு தள்ளத்தக்கது' என்பதாதியால் மேற்சுலோகத்தில் கூறப் பட்டதேயாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

तव बोधजन्मनि पुरा न पुनस्तव कश्चिदप्यतिशयो भवति ।
तम एव पूर्वमभवन्न भवत्यवबोधजन्मनि ततो न परम् ॥ २३९ ॥

तव बोधजन्मनि-உனக்கு பிரத்தியகான்ம விஷயகஞானம் உதயமாகுங் காலத்தில்

पुरा पुनः- அதற்கு முற்காலத்திலும் பிற்காலத்திலும்

कश्चिदप्यतिशयः-கொள்ளுதல் தள்ளுதல் வடிவ யாதோர் விசேஷமும்

तव न भवति-உனக்கு இன்றும்

அப்படியானல் நிவர்த்திக்கத்தக்கதொன்று மின்மை யின் நிவர்த்தியினைச் செய்கின்ற ஞானத்தாற்பயன் என்னை என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

तम एव पूर्वं अभवत्- அஞ்ஞானமே ஞானத்திற்குப் பூர்வம் இருந்தது

ततः न परम्-அதனினும் அன்னியம் யாதொன்றுமின்றும்

अवबोधजन्मनि-ஞானம் உதயமாகும்போது

न भवति- அஞ்ஞானமிருக்கின்றதில்லை. இதுவே பயனும் என்பது பொருள். (239)

(அ) இங்ஙனம் சிருஷ்டிக்கு முன்பு அஞ்ஞானத்தை யங்கீகரிக்கின் அவ்வஞ்ஞானத்தினலேயே ஆன்மா சத்து விதீயமாம் என்னும் சங்கைக்கு அஃது அதன்கண் அத்தி யஸ்தமாதலின் அதனினும் அன்னியமாக வஞ்ஞானமின்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றார் :—

न तमोऽपि पूर्वमभवन्न भवत्यवबोधजन्मनि तमोऽभिभवः ।
तम एव केवलमिदं सकलं न तमो विनात्मनि किमप्यभवत् ॥

**तमोऽपि**- அஞ்ஞானமும்

**पूर्वं न अभवत्**-சிருஷ்டிக்கு முன்பு வாஸ்தவமாக இன்றும்

அங்ஙனமாயினும் அதன் நிவர்த்தியினாலேயே ஆன்மா சத்துவிதீயமாம், என்னுஞ் சங்கைக்கு அதன் நிவர்த்தியும் அஞ்ஞானமாத்திரமேயாதலின் அங்ஙனமென்றெனக் கூறுகின்றார்.

**अवबोधजन्मनि**-சாக்ஷாத்கார முதயமாகுங் காலத்தில்

**तमोऽभिभवः**-அஞ்ஞானத்தின் நிவர்த்தி

**न भवति**- அதனினும் பின்னமாக இன்றும்.

அப்படியானால் ஆகாசாதி பிரபஞ்சத்தாலும் அதன் நிவர்த்தியாலும் ஆன்மாவிற்கு சத்துவிதீயத்தன்மையாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

**इदं सकलम्**-ஆகாசாதி பிரபஞ்சம் உளது, அஃது நிவர்த்தியாயிற்று என்பது முதலிய அனைத்தும்

**केवलं तम एव**-அஞ்ஞானமாத்திரமேயாம்

'அஞ்ஞானம் இருந்தது அஞ்ஞானத்தால் முன்பு மறைக்கப்பட்டுளது' என்னுஞ் சுருதியினை கூறிய அர்த்தத்தில் பிரமாணமாகச் கருதிக்கூறுகின்றார் :—

**तमो विना**-அஞ்ஞானத்தையன்றியில்

**आत्मनि**-ஆன்மாவின்கண்

**किमपि न अभवत्**-யாதொன்றுமின்றும்.

அற்றேல் அஞ்ஞானமும் அதன் காரியமும் ஆன்மாவின்கண் அத்தியஸ்தமாதலால் ஆன்மமாத்திரமேயாகுக. அவற்றினிவர்த்திக்கோ அத்தன்மை பொருந்தாது. முத்தியிலும் அத்தியாசத்தினதும் அதன் காரணத்தினதும் அவஸ்திதி பொருந்தாமையானும், அத்தியஸ்தமாகாத அதற்கு (நிவர்த்திக்கு) ஞான சாத்தியத்தன்மையால்

ஆன்மத்தன்மை பொருந்தாமையானும் எனின் அற்றன்று. சாத்தியத்தன்மையினையங்கீகரிக்கினும் அதற்கு (நிவர்த்திக்கு) ஆன்ம மாத்திரத்தன்மையினை நான்காவது அத்தியாயத்தின்கண் கூறுவார் ஆண்டு அறிக. அல்லது நிவர்த்தி பஞ்சமப் பிரகாரவடிவமாம் அது ஆன்மாவினும் வேறும். அதனது உபபாதனத்தையும் நான்காவதத்தியாயத்தின் கண்ணேயே அறிக. ஆன்மமாத்திரப்= அஞ்ஞானமாத்திரம். (240)

(அ) இங்ஙனமாயினும் நிவர்த்திக்கு அஞ்ஞான மாத்திரத்தன்மை சரியன்றாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

**न तमः परिहृत्य लभ्यते तमसो हानिगता निरूपणा ।**
**इति सा तम इत्युदीरिता न निवृत्तिस्तमसस्तमोमयी ॥ २४१ ॥**

**तमसः**– அஞ்ஞானத்தின்

**हानिगता**– நிவிருத்தி விஷயக

**निरूपणा**– நிரூபணம் (விசாரம்)

**तमः परिहृत्य**– அஞ்ஞானத்தைவிட்டு

**न लभ्यते**– அடையப்படுகின்றதில்லை

அஞ்ஞான காலத்திலேயே அதன் நிரூபணஞ்செயயப் படுகின்றது. பிரதியோகித்தன்மையால் அதன் நிவர்த்தி அஞ்ஞானத்தினையபேக்ஷிக்கின்றது.

**इति**– ஆதலின், உபசாரத்தால்

**सा तम इत्युदीरिता** – நிவர்த்தி பந்தம்போன்று அஞ்ஞானம் என்ப்பட்டது

**तमसः निवृत्तिः**– அஞ்ஞானத்தின் நிவர்த்தி

**न तमोमयी** – அஞ்ஞான வடிவமாகின்றதில்லை

கடாதியின் நிவர்த்தி கடவடிவமாகின்றதில்லையாகலின் என்பது பொருள். (241)

## ஜீவன காலம்வரை என்பது முதலிய சுருதியின் அவிரோதம்

(அ) இங்ஙனமாயினும் உனக்கு ஞானமாத்திரமே சம்பாதிக்கத்தக்கது என்று சொன்னது பொருந்தாது. வித்துவானுக்கும் நித்திய கருமம் முதலியவற்றின் அநுஷ்டானமிருத்தலால் நித்திய கருமாநுஷ்டானத்தை யங்கீகரியாவிடின் 'சீவன காலபரியந்தம் அக்கினி ஹோத்திரத்தைச் செய்க,' என்பது முதலிய சுருதிக்கு விரோதம் வரும். என்னுஞ் சங்கைக்கு அச்சுருதி அஞ்ஞானி விஷயகமாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்:—

विधयश्च कर्मविषयाः स्वतमःपटलावृते त्वयि बहिर्मनसि ।
कुत एव सम्यगवबोधहते तमसि प्रवृत्तिरिह सम्भवति ॥ २४२ ॥

कर्मविषयाः - அக்கினிஹோத்திரம் முதலிய கருமத்தை விஷயமாகவுடைய

विधयः च - விதிகளனைத்தும்

स्वतमःपटलावृते - தனது அஞ்ஞானபடலத்தால் மறைக்கப் பட்டவனும்

बहिर्मनसि - பாஹியத்தில் மனதுடையவனுமாக

त्वयि - (நீ இருக்கும்போது) உன்னிடத்தில் பிரவிர்த்திக்கின்றன

அற்றேல் அஞ்ஞானபடலத்தால் மறைபட்ட புருடனை விஷயஞ்செய்யுந் தன்மை கருமவிதிகட்கு எதனால் என்னுஞ் சங்கையை நீக்குதற்கு அதிகாரிக்கு விசேஷணங் கூறுகின்றார் பாஹியத்தில் என. ஆன்மாவினும் புறம்பாயுள்ள பாபக்ஷயம் முதலியவற்றில் மனதையுடையவன் என்பது பொருள். பிரத்தியவாயம் முதலியவற்றின் பரிகாரத்தை விரும்பும் புருடனைக்குறித்தே நித்தியம் முதலிய விதிபிரவிருத்தித்தலாலும் பிரத்தியவாயமும் அதன் பரிகார இச்சையும் அஞ்ஞானிக்கே சம்பவித்தலாலும் நித்தியம் முதலிய விதிகளும் சீவிதகாலம் வரை கருமஞ்

செய்க என்னுஞ்சுருதியும் அஞ்ஞானியையேயதிகாரமாக வுடையனவாம என்க.

தத்துவஞானத்தால் அஞ்ஞானமும் அதன் காரிய பிராமணத்தன்மை முதலியவற்றின அபிமானமும் முதலிய வையும் நீங்கினவனுக நீயிருக்கும்போது உன்னிடத்தில் அவற்றின் பிரவிருத்தியின்ரு மென்னுங்கருத்தால் கூறுகின்ருர்.

तमसि-அஞ்ஞானம்

सम्यगवबोधहते-திடமான தத்துவ ஞானத்தால் கெடுக்கப்பட்டபோது

इह-ஈண்டு (உன்னிடத்தில்)

प्रवृत्तिः-விதிவாக்கியங்களின் பிரவிருத்தி

कुत एव सम्भवति-எதனுல் சம்பவிக்கும் அல்லது

इह प्रवृत्तिः-கர்மங்களில் பிரவிருத்தியானது

कुत एव सम्भवति-உனக்கு எதனுற் சம்பவிக்கும் சம்பவியாதென்பது பொருள் (242)

(அ) கூறிய அர்த்தத்திணயே விஸ்தரிக்கின்ருர்:—

विदिते पदे भगवतः परमे परिपुष्कले परमतृप्तिमतः ।
तव तृष्णया विरहितस्य कथं विधिषु प्रवृत्तिरपवर्गवतः ॥ २४३ ॥

भगवतः-பகவானுடைய

परिपुष्कले-பரிபூர்ண

परमे पदे-சர்வோத்தம பதம்

विदिते-சாக்ஷாத்கரிக்கப்பட்டபோது

परमतृप्तिमतः-நிரதிசயானந்த முடையவனும்

तृष्णया विरहितस्य-ஆசையற்றவனும்

अपवर्गवतः तव-முக்தியையுடையவனுமான உனக்கு

विधिषु-யாகாதிகர்மங்களில்

कथं प्रवृत्तिः-பிரவிருத்தி எங்ஙனம் பொருந்தும்? மற்ருே பொருந்தாதாம்

பரிபூர்ண—சஜாதீய முதலிய பேதமற்றது இவ் விசேஷணத்தால் கூறிப வடிவமுள்ள பிரம்மம தனது வடிவமாக சாக்ஷாத்கரிக்கப்பட்டபோது அனுஷ்டானத்தின் நிமித்தமான பிராமணத் தன்மை முதலியவற்றினதும் அதனபிமானம் முதலியவற்றினதும் அபாவங் தெரிசிப்பிக் கப்பட்டது, முக்தி என்பது நிரதிசயானந்த மென்பதன் விவரணமாம் இவ் விசேஷணத்தால் காமமின்றியவனுக்கு பிரவிருத்தியின்மை தெரிசிப்பிக்கப்பட்டது (243)

(அ) அற்றேல் கர்மத்தை விதிக்கும் ஓர் வாக்கியத் திற்கே ஒருவனிடத்திலேயே அவஸ்தா விசேஷத்தால் பிரவிருத்தியும் அப்பிரவிருத்தியும் பொருந்தாமையின் மேற் கூறினது அயுக்தமாம் என்னும் சங்கைக்கு அதன் பரிகாரத் தினை திருஷ்டாந்த சகிதமாகக் கூறுகின்றூர்;—

अभिचारकर्मविधयो हि यथा फलभागबाधमनुबाधयुजः ।
करणादिभागनिरुपाख्यतया विधयस्तथैव परमात्ममतेः ॥ २४४ ॥

अभिचारकर्मविधयः हि—சத்துருவின் இச்சையைப்பயனுக வுடைய ச்யேனம் முதலிய கர்மத்தினை விதிக்கும் வாக்கியங்கள்

फलभागबाधम् अनु—யாதோர் பிராணியையும் இம்சை செய்யற்க என்பதனுல் அதன் பயன் வடிவ ஹிம்சையின் பாதத்தினனந்தரம்

यथा बाधयुजः—இது பலமுடைய அனிஷ்டத்திற்குச் சாதனமாம் என எப்படி பாதமுடையன வாகின்றனவோ

तथैव—அப்படியே

परमात्ममतेः—பிரம்ம சாக்ஷாத்காரத்தால்

करणादिभागनिरुपाख्यतया — கரணம் கர்த்தா முதலிய அம்சம் பாதிக்கபட்டமையால்

विधयः — விதிவாக்கியங்கள் பிரவிருத்தியா என்பது பொருள்

ஹிம்சையின் சாதனமான ச்யேனம் முதலிய யாகம் விதிக்கப்பட்டமையானும் ஆஹத்திய (சேர்ந்தாற்போல) நிஷேதங்காணப்படாமையானும் அதன் பயன் வடிவ ஹிம்சையின் பாதம் எனக் கூறப்பட்டது. இவ்வேது வினலேயே அக்கினிஷோமீய யாகத்தில் நின்றும் இதற்கு விசேஷமாம், அதற்கு பல வாயிலாகவாவது சாக்ஷாத்தாக வாவது எவ்வாற்ருனும் நிஷேத மின்மையின் சத்ருவின் நாசத்தை விரும்பும் புருடன் ச்யேனத்தால் யஜிக்குக என்பது முதலிய விதிவாக்யங்கள் தீவிர ரோஷத்தினல் பிராம்மணர் முதலியோரின் வதம் வலுவுடைய இஷ்டசாதன மாம் எனக்கருதி பிரவிருத்திக்கும் புருடனிடத்தில் பிரவிருத் திக்கின்றன. அவனே ஒரு பிராணியையும் ஹிம்சை செய் யற்கஎன ச்யேன முதலியவற்றின் பல பாகமாகிய ஹிம்சை யை பாதிக்கும் சாஸ்திரத்தினை அர்த்தத்தால் விசாரிப்ப னுயின் அப்போது தோஷமற்றவனுகின்ருன். ச்யேனம் முதலிய விதிவாக்கியங்களும் அப்போது தனது பாவ்யம் (தனது விஷயமாகிய சத்ருவிம்சையின் அபிலாஷை) இன்மை யால் அவனிடத்தில் பிரவிருத்திக்கின்றதில்லை. ஹிம்சை முதலிய வற்றின்கண் வலுவுள்ள அனிஷ்ட சாதனத்தன்மை யை அறியும் புருடனை ஹிம்சையினுபாயத்தில் விதிவாக்கியங் கள் பிரவிருத்திப்பித்தற்கு ஆற்றலுடையனவன்ரும். ஆதலின் அவைகட்கு எப்படி அவஸ்தாவிசேஷமுடைய அப் புருடனிடத்திலேயே பிரவிருத்தியாமோ அப்படி பிரம்ம சாக்ஷாத்காரத்தால் சரீரம் முதலிப சமஸ்த பிரபஞ்சமும் நிவர்த்தியாகும்போது பாவனையின் கரண முதலிய அம்சத் திரயமும் இல்லாமையால் விதிகள் எப்படிப் பிரவிருத்திக்கும்? பிரவிருத்தியா ஆதலால் ஈண்டு யாதோர் அநுபபத்தியுமின்ருமென்பது பொருள். (244)

(அ) பூருவ சுலோகத்தால் தியோதனஞ் செய்யப் பட்ட கைமுதிக் நியாயத்தினை வெளிப்படுத்துகின்ருர்:—

यदि भाव्यभागविलये न भवेत् फलभावना कथमिहोत्सहते ।
करणादिभागविलये भवितुं विधिरन्तरेण घटते न च ताम् ॥ २४५ ॥

भाव्यभागविलये-கரணம் கருமம் இதிகருத்தவயம் என்னும் மூன்றனுள் சாத்திய வடிவ ஓரம்ஸம்மாத்திரம விலயமாகும்போது

फलभावना-இம்ஸை வடிவ பயனையுத்தேசித்தயாதொரு பாவனையுண்டோ அது

यदि न भवेत्-உண்டாகாதாயின்

करणादिभागविलये-கரணம் முதலிய சருவாம்ஸங்களும் விலயமாகும் போது

इह-வித்துவானிடத்தில்

भवितुम्-நித்தியாதிகரும பாவனையானது பொருந்துதற்கு

कथम् उत्सहते-எப்படிப் பிரவிர்த்திக்கும்

முதலிய என்னும் பதத்தால் பாவனையின் அம்ஸத்திரயமும் அதனன்னியமும் அதனேதுவுமாகிய எல்லாவற்றின் அபாவத்தைத் தெரிசிப்பிக்கின்றார். அற்றேல் அர்த்தபாவனையில்லாவிடினும் லிங் முதலியவற்றின் வியாபார வடிவ விதி (சாத்திபாவனை) ஏனுண்டாகாது என்னுஞ்சங்கைக்கு அ∴து (சாத்திபாவனை) அர்த்த பாவனையை பாவ்யமாகவுடையதாதலின் அஃதின்றி அதுவும் பொருந்தாதெனக் கூறுகின்றார்:—

ताम् अन्तरेण-அர்த்தபாவனையின்றி

विधिः न च घटते-விதியும் பொருந்தாது (245)

(அ) இங்ஙனம் பாவனை வாக்கியார்த்தமாமென்னும் வாதத்தின்கண் இம்ஸை முதலியவற்றை நிஷேதிக்கும் சாஸ்திரார்த்தம் அறியப்பட்டபோது சியேனம் முதலிய விதிகளின் அப்பிரவிருத்தியினைக்கூறி நியோகம் வாக்கியார்த்தமாமென்னும் மதத்தின்கண்ணும் அதனை (அப்பிரவிருத்தியினை) கூறுகின்றார்:—

अधिकारिणं च विषयं च विना न नियोगबुद्धिरुपपत्तिमती ।
न विना तमस्तदुभयं घटते विदितात्मनश्च न तमो घटते ॥ २४६ ॥

अधिकारिणं च-அதிகாரியையும்

विषयं च विना-விஷயத்தையும்விட்டு

नियोगबुद्धिः-நியோகத்தின் ஞானம்

उपपत्तिमती न-பொருந்துவதின்றும்

तमः विना-அநிஷ்டத்தன்மையின் அஞ்ஞானமன்றி

तदुभयं न घटते-அவ்விரண்டும் பொருந்தாது

அதிகாரி – நியோஜ்ஜியன், விஷயம் – கிருதியை நிரூபிக்கும் வாயிலாக நியோகத்தை நிரூபணஞ்செய்கின்ற பகுதிப்பொருள். பிரபாகருடைய மதத்தில் விகுதியின் பொருள் நியோகமாம். பலேச்சை முதலியவற்றினை யுடைய நியோஜ்ஜியனாலும் சாக்ஷாத்கிருதியின் விஷயமான பகுதிப்பொருளாலும் இதற்கு இதன்கண் நியோகம் என நிரூபிக்கப்படுகின்றது. இம்ஸை முதலிய வற்றின் நிஷேத சாஸ்திரத்தையறிபவனுக்கு சியேனுதி விதியின் நியோஜ்ஜியத்தன்மையின்றும். அதன் அநிஷ்டத் தன்மையின் அஞ்ஞானம் நிவிருத்தியானமையின் அதன் இச்சை முதலியவை சம்பவியாமையின் சியேனுதியின்கண் அவனது கிருதி சாத்தியத்தன்மையின்றும் ஆதலின் விஷயமும் நியோஜ்ஜியனுமின்றி சியேனுதியின் நியோக ஞானம் அவனுக்கு அப்போது பொருந்துகிறதில்லை. இவ்வாறு ஆன்மதத்துவத்தையறிந்தவனுக்கு அஞ்ஞானம் நீங்கினமையின் நியோகத்தால் அபேக்ஷிக்கப்பட்ட விஷயமும் நியோஜ்ஜியனுமாகிய இரண்டும் பொருந்துகின்ற தில்லை என்பது பொருள்; அப்படியானுல் அவனுக்கு அஞ்ஞானமிருக்கட்டுமே யென்னுமிடத்துக்கூறுகின்ருர்.

विदितात्मनः-ஆன்மாவையறிந்தவனுக்கு

तमः न च घटते-அஞ்ஞானம் பொருந்துவதின்றும் (246)

## பிரமாணாந்தரத்தோடு அவிரோதத்தினுப சம்மாரம்

(அ) அற்றேல் விதிகட்கு அஞ்ஞ புருஷ விஷயகத் தன்மையையங்கீகரிக்கின் பாதிக்கப்பட்ட பொருளை விஷய மாகவுடைமையின் அப்பிரமாணத்தன்மைப் பிராப்தியாம் என்னுஞ்சங்கைக்கு வாஸ்தவமாக அப்பொருளிற்கு வேதாந்தத்தாலும் அதனை மூலமாகவுடைய நியாயத்தாலும் பாதமிருப்பினும் வியாவகாரிகப் பிராமாண்யம் உளதேயாம் வேதாந்தங்கட்குப்போன்று தாத்துவிகப் பிரமாணத்தன்மை யின்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

**व्यवहारगोचरमतः सकलं विधिवाक्यमित्यवगतिं मनसि ।**
**उपनीय वेदशिरसां विधिभिर्न विरोध इत्यपि समाकलय ॥ २४७ ॥**

अतः-ஆதலால்

**विधिवाक्यं सकलम्**-விதிவாக்கியமனைத்தும்

**व्यवहारगोचरमिति**-வியாவஹாரிக விஷயகமாமென

**मनसि**-மனதின்கண்

**अवगतिमुपनीय**-அறிந்து

**वेदशिरसाम्**-வேதாந்த வாக்கியங்கட்கும்

**विधिभिः**-விதிவாக்கியங்களோடு

**न विरोध इत्यपि**-விரோதமின்றுமென்பதனையும்

**समाकलय**-அறிவாய் (247)

(அ) இங்ஙனம் அத்துவயப் பிரம்மத்தின் கண் தாற்பரியமுள்ள வேதாந்தங்கட்கு பேதத்தை விஷயஞ் செய்கின்ற பிரமாணாந்தரத்தோடு விரோத நிராகரணத்தின் சமர்த்தன வடிவ இரண்டாவதத்தியாயத்தின் அர்த்தத்தினை யுபஸம்மாரஞ் செய்கின்றார்:—

एवं वेदान्तवाक्यैरवगतिपदवीमद्वये नीयमाने
प्रत्यक्तत्त्वे समस्तद्वयकृति तमसि क्षीयमाणे च सद्यः ।
स्वाराज्ये त्वय्यवाप्ते परमसुखभुजि स्वच्छचैतन्यमात्रे
लेशो मानान्तराणामपि दुरधिगमस्तत्र दूरे विरोधः ॥ २४८ ॥

एवं वेदान्तवाक्यैः-இங்ஙனம் அவிரோதமாக வேதாந்த வாக்கியங்களால்

अद्वये प्रत्यक्तत्त्वे-அத்துவயமும் பிரத்தியகான்ம வடிவமுமான பிரம்மம்

अवगतपदवीम्-சாக்ஷாற்கார மார்க்கத்தினை அதாவது சாக்ஷாத்கார யோக்கியமாக

नीयमाने-அடைவிக்கப்பட்டபோதும்

समस्तद्वयकृति-சருவத்துவைதப் பிரபஞ்சத்திற்குங்காரணமான

तमसि-அஞ்ஞானம்

सद्यः क्षीयमाने च-உடனே நாசமாகும்போதும்

त्वयि स्वच्छचैतन्यमात्रे-நீ ஸொச்சசைதன்னியமாத்திரமாய்

परमसुखभुजि-பரமானந்தத்தை யநுபவிக்குங்காலத்திலும்

स्वाराज्ये अवाप्ते-ஸுவாராஜ்ஜியம் அடையப்பட்டபோதும்

मानान्तराणाम्-இதரப் பிரமாணங்களின்

लेशोऽपि दुरधिगमः-லேசமுமின்றும்

तत्र दूरे विरोधः-இவ்வாறுகும்போது அதனுற் செய்யப்பட்ட விரோதம் வெகு தூரமாம். அத்தியந்த மின்றுமென்பது பொருள்.

பந்தமோக்ஷ வியவஸ்தா சாஸ்த்ர ப்ராமாண்யம் 259 பொருள்.

அத்துவயப் பிரத்தியக்தத்துவம் வேதாந்தங்களால் பிரதிபாதிக்கப்பட்டபோது (சாக்ஷாற்கார மார்க்கத்தினை யடைவிக்கப்பட்டபோது) என்பதனுல் விரோத விஷய சமன்வயத்தின் அர்த்தம் தெரிசிப்பிக்கப்பட்டது. இதரப் பிரமாணம் அஞ்ஞானன்மக பேதத்தை விஷயஞ் செய்வ தால் அதனேடு சமன்வயார்த்தம் விரோதிக்கப்படுகின்ற தில்லை என முன்பு உபபாதனஞ் செய்யப்பட்டது அதனை மனதில் வைத்துக்கொண்டு சருவத்துவைதப் பிரபஞ்சத் திற்குங் காரணமான எனப்பட்டது. நாசமாகும் போது என்பது முதலியவற்ருல் ஞான மாத்திரத்தால் பரமானந்தமா மென்று உபபாதனஞ் செய்யப்பட்டதனையநுவாதஞ் செய் கின்ருர். விசாரதசையிலும் வேதாந்தங்கட்கு பிரமாணந் தரத்தோடு விரோதம் சம்பாவனை செய்யப்படவில்லை. அங்ஙனமாகுங்கால் தத்துவம் அறியப்பட்டபோது விரோதம் இல்லையென்று சொல்லவேண்டுவது என்னையென்னுங் கருத்தால் லேசமுமின்ருமெனப்பட்டது. (248)

ஸ்ரீசருவஞ்ஞாத்ம முனியாற் செய்யப்பட்ட சங்க்ஷேபசாரீரக மென்னுங் கிரந்தத்தில் அவிரோத லக்ஷணமெனப் பெயரிய இரண்டாவது அத்தியாயம் முற்றுப்பெற்றது.



# சங்க்ஷேப சாரீரகம்

## 3-வது அத்தியாயம்

### பிரும்மவித்தையின் சாதனத்தை நிரூபித்தல்

#### அவதாரிகை

"அதாதோ பிரம்மஜிஞ்ஞாஸா" என்னுஞ்சூத்திரத்தால் பிரம்மத்தின் சொரூபம் யாது? அதன் பிரமாணம் யாது? அதற்கு அநுக்கிரகஞ்செய்கின்ற யுத்தி யாது? யுத்திஸகித பிரமாண ஜன்ய பயனுடைய ஞானத்திற்கு சமீபத்திலிருந்து உபகாரஞ் செய்வதும் தூரத்திலிருந்து உபகாரஞ் செய்வதுமான இதிகர்த்தவ்யதன்மை வடிவ சாதனம் யாது? இதிகர்த்தவ்யத் தன்மையோடு கூடிய பிரமாணஜன்ய பயனுடைய ஞானத்திற்குப் பயன் யாது? எவ்வாறு என ஐந்து பிரதிஞ்ஞையின் ஸம்பிண்டனம் (திரட்சி) செய்யப்பட்டது. அவற்றுள் பிரம்மத்தின் சொரூபத்தை தடஸ்தலக்ஷணத்தாலும் சொரூபலக்ஷணத்தாலும் லக்ஷிப்பித்து அதன்கண் வேதாந்தங்கள் சமன்வயம் செய்யப்பட்டன. அவைகள் அதன் கண்ணேயே பிரமாணமேயாமென சமன்வய லக்ஷணமெனப் பெயரிய முதலாவது அத்தியாயத்தில் வியுற்பாதனஞ் செய்யப்பட்டது.

அத்துவயப்பிரம்மத்தின்கண் வேதாந்தங்கள் சமன்வயமானபோது துவைதத்தை விஷயஞ்செய்கின்ற பிரமாண விரோதத்தை நீக்குகின்ற யுத்திகள் அவிரோதலக்ஷணமெனப் பெயரிய இரண்டாவது அத்தியாயத்தில் பிரதிபாதிக்கப்பட்டன.

அதன்பின்பு விரோதமற்ற வேதாந்த சமன்வயத்தால் ஜன்னியமும் மோக்ஷமாகிய பயனையவதியாகவுடையதுமான ஞானத்தின் உற்பத்தியில் வேதாந்த வாக்கியப் பிரமாணத்தின் இதிகர்த்தவ்யத் தன்மை வடிவமும் அந்த

ரங்க பகிரங்க பாவத்தால் இருப்பதுமான சாதனம் சாதன லக்ஷணமென்னும் மூன்ருவது அத்தியாயத்தில் நிரூபிக்கப் பட்டது.

அதன்பின்பு அந்தரங்க பஹிரங்க சாதன சமுதாயத் தோடு கூடிய வேதாந்தப் பிரமாணஜன்ய ஞானத்திற்கு அவித்தையின் நிவிருத்தியினுலுபலக்ஷிக்கப்பட்ட அகண்டா னந்த வடிவ பயன் எது, எத்தகையது என பல லக்ஷண மெனப் பெயரிய நான்காவது அத்தியாயத்தில் நிர்ணயஞ் செய்யப்பட்டது. இங்ஙனம் ஐந்து அவயவங்களின் விசார வடிவமாக நான்கு அத்தியாய வடிவ மீமாம்ஸை உளது. அதன் பிரகரண வடிவ இந்தக் கிரந்தமும் அவ் வாறேயாமாதலின் சாதனப் பிரதிஞ்ஞையை நிரூபித்தற்கு மூன்ருவது அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகின்றது.

அற்றேல் சாதனம் பிரமையின் கரண்மெனவும் இதி கருத்தவ்யமெனவும் இரண்டு விதமாம். அவற்றுள் கரணம் வேதாந்தவாக்கியமாம். "ஔபநிடத புருடனை வினவுகின் றேன்" என்னுஞ் சுருதியால் ஆன்மாவிற்கு உபநிஷத்தின் வேத்தியத்தன்மையைப் பிரதிபாதித்தலால், இதிகர்த்தவ்யத் தன்மையும் அப்பிராமாண்ய சங்கையினை நீக்குகின்ற தருக் கத்தினைத் தொடர்ந்திருத்தல். அவ்விரண்டும் முதலாவது இரண்டாவது அத்தியாயங்களாலேயே சம்பாதிக்கப்பட்ட தாதலின் மூன்ருவது அத்தியாயம் எற்றிற்கு? அஞ்ஞா னத்தை நிவர்த்திக்கின்ற ஞானத்தின்கண் பிரமாணம் இதிகர்த்தவ்யத்தன்மை யென்னுமிரண்டினும் வேருன சாதனம் அபேக்ஷிதமின்ரும் என சொல்லப்படும். சுத்தி முதலியவற்றின் அஞ்ஞான நிவர்த்தியின்கண் அத்துணை மாத்திரமே காணப்படுதலானும் எனின் உத்தரம் கூறப்படுகின்றது. நீ கூறியது வாஸ்தவந்தான், பிரமாணம் இதிகர்த்தவ்யத்தன்மையென சாதனம் இரண்டு விதம். இதிகருத்தவ்யத்தன்மையின் கண்ணே விசேஷ முளது பிரதிபந்தகங்களின் விசித்திரத் தன்மையால், அஃதெப்படியெனின் பாதாயோக்கிய சாக்ஷாற்கார வடிவ பிரம்மஞானமுண்டாயினும் புருஷாபராதங்கள் பயனைப் பிரதிபந்தித்து ஜிஞ்ஞாஸையை யுற்பத்திசெய்கின்றன. அபராதங்களாவன— 1. விஷயபோகவாசனை. 2. வேதாந்

தங்கட்கு பிரம்மத்தின்கண் அபோதகத்துவ கற்பனை, 3. போதிக்கப்பட்டதாயினும் பிரம்மத்தின்கண் பாதிதத் தன்மையின் கற்பனை, 4. பிரம்மம் அபாதிதமாயினும் அதன் சாக்ஷாற்காரவடிவ பிரமையின்கண் அசாக்ஷாற்காரத்துவ கற்பனை, 5. பிரமையின் பயனாகிய புருஷார்த்த வடிவ அஞ்ஞான நிவர்த்தியினு லுபலக்ஷிக்கப்பட்ட மோக்ஷமுள தாயினும் புருஷார்த்தத்துவாபாவ கற்பனை என்பனவை களாம்.

அவற்றுள் முதலாவதாகிய விஷயபோக வாசனை சிரவணத்தின் அங்கமாயுள்ள சமம் தமம் முதலிய சாதன சம்பத்தியால் நிவர்த்திக்கப்படுகின்றது. இரண்டாவதாகிய பிரமாணகதா சம்பாவனை சிரவணவடிவ விசாரத்தைப் போதிக்கின்ற சமன்வயாத்தியாயத்தால் நிவர்த்திக்கப்படு கின்றது. மூன்றுவதாகிய பிரமேயகதாசம்பாவனை விரோ தாபாவ வடிவ மனனமெனப் பெயரிய விசாராங்கத்தைப் போதிக்கின்ற இரண்டாவது அத்தியாயத்தால் நிவர்த்திக் கப்படுகின்றது. பிராமாண்ய நிச்சயத்திற்கு விரோதியாத லால் இவ்விரண்டும் அசம்பாவனை யெனப்படுகின்றது பிராமாண்யம் நிச்சயிக்கப்பட்டதாயினும் பலவிரோதியாகிய யாதொரு கற்பனைத்துவயமுண்டோ அந்த நாலாவதும் ஐந்தாவதும் விபரீதபாவனை யெனப்படுகின்றது. அதுவும் நிதித்தியாசனமெனப் பெயரிய விசாராங்கத்தைப் போதிக் கின்ற மூன்றுவது நான்காவது அத்தியாயங்களால் நிவர்த் திக்கப்படுகின்றது என முன்பு கூறப்பட்டதேயாம். அவற்றுள் சாக்ஷாற்காரத்தின்கண் அசாக்ஷாற்காரத்துவ கற்பனையை நிவர்த்தி செய்வதும் பிராமாண்ய நிச்சயத் திற்கு அநுபயோகியுமான சாதனசமுதாயம் மூன்றுவது அத்தியாயத்தின் பொருளாம். புருஷார்த்தத்தின் கண்ணும் அபுருஷார்த்தத்துவ கற்பனையை நிவர்த்தி செய்வது நான் காவது அத்தியாயத்தின் பொருளாம் என பகுத்துணர்க,

அதனுல் வேதாந்தங்கள் பிரம்மத்தைப் போதிக்கின் றனவேயாம். பிரம்மமும் யாதோர் பிரமாணத்தாலும் பாதித மன்றும் அங்ஙனமாயினும் நான் அதனை சாக்ஷாற்கரிக் கின்றிலேன். ஆனுல் அது எனக்கு பரோக்ஷமாகவே விளங்குகின்றது என பிராந்தியினதும் அதன் சம்ஸ்காரத்

தினதும் பரம்பரை வடிவ விபரீத பாவனை எதுபரியந்தம் தொடர்ந்திருக்குமோ அதுபரியந்தம் பிரம்மவித்தை பயனைப் பயவாதாதலின் அதனை நிவர்த்தித்தற்பொருட்டு வேதாந் தங்களால் போதிக்கப்பட்டதும் இதர சருவப் பிரமாணங் களால் பாதிக்கப்படாததுமான சச்சிதானந்தாத்துவய வடிவப்பிரம்மமே நானாகின்றேன். அதனை எப்போதும் சர்க்ஷாற்கரிக்கின்றேன் என்னும் இத்துணைப் பலபரியந்த மான உபகரணசகிதத் தியானத்தை நிரூபித்தற்பொருட்டு சிஷ்யனுடைய சங்கையை யாரம்பிக்கின்றார்.

சுலோகம்

श्रुत्वाऽविरोध मुपपन्न समन्वयोत्थ
ब्रह्मात्मतामतिरयं पुनरप्युवाच ।
ब्रह्मात्मताफलशिरस्कमतिं प्रसूते
यत्साधनं तदखिलं प्रतिपित्समानः ॥ ॥ १ ॥

பதவுரை

अयं – இந்தச் சீடனானவன்

अविरोधं श्रुत्वा – அவிரோதாத்தியாயார்த்தத்தினைக் கேட்டு

उपपन्नसमन्वयोत्थब्रह्मात्मतामतिः – அவிரோத நியாயங்களால் அபாதிதத்தன்மையால் நிச்சயிக்கப்பட்ட முதலாவது அத்தியாயத்தாற் கூறப்பட்ட ஸமன்வயத்தாலுண் டான பிரம்மான்மத்துவ ஞானமுடையவனாகி

ब्रह्मात्मताफलशिरस्कमतिं – பிரம்மான்மத்தன்மையாகிய பய னையே சிரஸாகவுடைய ஞானத்தினை

यत्साधनं – யாதொரு சாதனமானது

प्रसूते – உண்டுபண்ணுகிறதோ

तत् अखिलं – அவ்வெல்லாவற்றையும்

प्रतिपित्समानः – அறியும் வேட்கையுடையவனாகி

पुनरपि उवाच – மறுபடியும் குருவைக் குறித்துக் கூறினான்.

விசேஷவுரை

அவிரோதாத்தியாயார்த்தத்தினைக்கேட்டு என்பது சென்ற இரண்டாவதத்தியாயார்த்தத்தினை ஏதுவாகக் கூறுகின்றது. நிச்சயிக்கப்பட்ட ஞானமுடையவனாகி என ஒட்டுக. அவிரோத நியாயங்களால் என்பதாதி மனனசகித சிரவணத்தின் பயன் சித்தித்தது எனத் தெரிசிப்பிக்கின்றது. பிரம்மான்மத்தன்மையாகிய என்பதாதிக்குப் பொருள் வருமாறு- நான் பிரம்மமாயிருக்கின்றேன். பிரம்மரூபமாக எப்போதும் விளங்குகின்றேன் என இவ்வாறு அபானுவரண நிவிருத்திவடிவ பிரம்மான்மத்தன்மைப்பயன் சிரஸ்போன்று அந்தக்கரண விருத்திவடிவ எந்த ஞானத்திற்கோ அபானுவரண நிவிருத்திவடிவ எஃதின்றேல் சிரஸில்லாதவன் போன்று ஞானம் நிஷ்பலமாமோ அத்தகைய பலபரியந்தமான ஞானத்திற்கு யாதொரு சாதனமுண்டோ தியானம் மௌனம் நிதித்தியாசனம் முதலிய சத்தங்களால் பிரதிபாதிக்கப்பட்ட அவ்வெல்லாவற்றையும் உபகரணசகிதமாக அறியும் வேட்கையுடையவன் என்பது. இவ்விசேஷணம் இனி சொல்லப்படுவது ஏதுமத் என்கின்றது. குருவைக் குறித்துக் கூறினன் என்பதனுல் சிரவண மனனங்களால் நான் பிரம்மமன்று என்னும் அசத்துவாபாதகாவரணம் நீங்கினபோதிலும் நான் பிரம்மரூபமாக விளங்குகின்றிலேன் என்னும் இத்தகைய அபானுவரணம் இருத்தலின் அதன் நாசத்தின் பொருட்டு பயனுடைய ஞானத்தின் சாதனகாங்க்ஷையுளது என்பது தெரிசிப்பிக்கப்பட்டது. அஃது (ஆவரண நிவிருத்தி) இன்றி வேதாந்தங்கட்கு பிரயோஜனமுடைய ஞானத்திற் பரியவசாயித்தன்மை வடிவ பிராமாண்யம் சித்தியாமையின்.

ஏதுமத் = ஏதுவினையுடையது.

இரண்டாவது மூன்ருவது அத்தியாயங்கட்கு ஏது ஏதுமத் பாவ சம்பந்தம்ாம்.

அவதாரிகை

இப்போது சிஷ்யனது இரண்டாவது அத்தியாயத்தாற் செய்யப்பட்ட சங்கையின் நிவிருத்தியினை யநுவாதம் செய்கின்றவராய் அவனது அறிய விரும்பிய பொருளை விஷயஞ்செய்கின்ற வினவைக் கூறுகின்ருர்.

சுலோகம்

ऐदंपर्यमखण्डवस्तुविषयं वेदान्तवाक्यस्य यत्
पूर्वं वर्णितमस्य भूदपहति र्मानामभमानान्तरैः ।
किंत्वस्याः परिनिष्ठितस्वविषय ध्वान्तच्छिदो जन्मने
विद्याया वचनादृते किमपरं कृत्यं भवेत्साधनम् ॥

பதவுரை

वेदान्तवाक्यस्य – வேதாந்த வாக்கியத்திற்கு
अखण्डवस्तुविषयं – அகண்ட வஸ்து விஷயகமான
यत् ऐदंपर्यं – யாதொரு தாத்பரியம்
पूर्वं वर्णितं சமன்வயாத்தியாயத்தில் வர்ணிக்கப்பட்டதோ
अस्य – அந்த இதற்கு
मानान्तरैः – பிரத்தியக்ஷாதி பிரமாணங்களோடு
अपहतिः – விரோதம்
मानामभूत् – இல்லாதொழிக
किंतु – ஆனுல்
परिनिष्ठित स्वविषय ध्वान्तच्छिदः – சுவத சித்த தனது விஷய மாகிய பிரம்மத்தின் அஞ்ஞானத்தை நாசஞ்செய்கின்ற
अस्याः विद्यायाः – அகண்டவிஷயக இந்த ஞானத்தின்
जन्मने – உற்பத்தியின் பொருட்டு
वचनादृते – வேதாந்த வாக்கியத்தினை விட்டு
अपरं साधनम् – வேறு சாதனம்
कृत्यम् – அனுஷ்டிக்கத்தக்கதாக
किं भवेत् – யாது உளது(அதனைக் கூறுக)

விசேஷவுரை

அகண்டத் தன்மையாவது திரிவித பரிச்சேத சூனியத் தன்மையும் பிரத்தியகபின்னத் தன்மையுமாம். சுவத சித்த

என பிரம்மத்திற்கு விசேஷணம் கூறினது பாதாவதித் தன்மையைத் தெரிவித்தற்பொருட்டாம். அல்லது சுவத சித்த என்பது அஞ்ஞானத்திற்கு விசேஷணமாம். வித்தையின் சமான விஷயக அபாஞவரண வடிவ அஞ்ஞானத்தின்கண் சுவதசித்தத் தன்மை (பரிநிஷ்டிதத்‌தன்மை) யாவது நாநாவித நிபிட வாசனைகளோடு கூடி அநாதி காலமாக திடமாயிருக்குந்தன்மையாம். சருவ கருமங்களையும் பரித்தியாகஞ் செய்த அன்னிய கதியற்ற சன்னியாசிக்கு அநுஷ்டிக்கத் தக்கது யாது என்பது எஞ்சி நின்றது.

அற்றேல் வேதாந்த வாக்கியத்தினை விட்டு என்னுங்கூற்றுலேயே அநுஷ்டிக்கத்தக்க சாதனத்தின்கண் வேற்றுமை யறியப்பட்டுளது ஆதலின் வேறு என்னும் விசேஷணம் எற்றிற்கு எனின் வாஸ்தவந்தான் ஆனல் இந்த வேறு என்னுங் கூற்று வேற்றுமையை யுணர்த்தும் பொருட்டன்ரும் மற்ரே பிரதானமாயுள்ள வேதாந்த வாக்கியத்திற்கு உபகாரியாக சாதஞந்தரத்தின்கண் அதன் குணத்தன்மையைப் போதித்தற் பொருட்டாம். ஆதலின் தோஷமன்ரும். 2

அவதாரிகை

உன்ஞல் எச் சாதனங்கள் வினவப்பட்டனவோ அவை மூன்ருவது அத்தியாயத்தின் கண்ணுள்ள நான்கு பாதங்களால் கிரமமாக நிரூபிக்கப்பட்டனவேயாம் எனக் கருதி கூறுகின்ருர் ஆசிரியர்.

சுலோகம்

वैराग्यस्य दृढत्वमेकमपरं तत्वंपदार्थज्ञता
वाक्ये निर्गुण निष्ठिते च सकले न्यायादियत्तामतिः ।
सम्यग्ज्ञान समीपदूर भवयोर्हे त्वो विवेकज्ञता
वाक्यार्थप्रतिपत्तिसाधनमिदं यत्नेन कृत्यं यतेः ॥

பதவுரை

एकं वैराग्यस्य दृढत्वम् – முதலாவது சாதனம் வைராக்கியத்தின் திடத்தன்மையாம்

अपरं तत्वंपदार्थज्ञता – இரண்டாவது சாதனம் தத்துவம் பதார்த்த சோதனையாம்

**निर्गुण निष्ठिते** – மூன்ருவது நிற்குணப் பிரம்மத்தின்கண் தாற்பரியமுள்ள

**सकले वाक्ये च** – சருவ வாக்கியங்களிலும்

**न्यायादियत्तामति:** – குஹோப ஸம்ஹார நியாயத்தால் வாக்கியத்தின் பரிமாண நிச்சயமாம்

**सम्यग्ज्ञान समीप दूरभवयो: हेत्वो:** – நான்காவது தத்துவ ஞானத்தின் அந்தரங்க சாதனமான சமாதியினதும் பகிரங்க சாதனமான யஞ்ஞாதியினதும்

**विवेकज्ञता** – விவேக ஞானமாம்

**वाक्यार्थप्रतिपत्तिसाधनमिदम्** – மகா வாக்கியத்தின் அகண்டார்த்த ஞானத்தின் சாதனமாயுள்ள இந்த நான்கு ஸாதனங்களும்

**यते:** – சன்னியாசிக்கு

**यत्नेन कृत्यम्** – பிரயத்தனத்தால் அனுஷ்டிக்கத் தக்கதாம்.

விசேஷவுரை

அற்றேல் ஆதியிலேயே ஜிஞ்ஞாஸை சூத்திரத்தின்கண் உள்ள அத சத்தத்தால் கிரகிக்கப்பட்ட நியாயங்களால் வைராக்கியத்திற்கு திருஷ்டவாயிலாகவும் அதிருஷ்ட வாயிலாகவும் தத்துவ ஞானத்தின் உபகாரித்தன்மை கூறப்பட்டமையின் ஈண்டு மறுபடியும் அதனைக் கூறுதல் வீணேயாம். என்னுஞ் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு திடத்தன்மையெனப்பட்டது. ஆண்டு இகலோக பரலோக விஷய போகங்களில் அநிச்சை வடிவ வைராக்கிய மாத்திரத்திற்கு சாதனத் தன்மை கூறப்பட்டது. ஈண்டோ சீவனுக்கு புண்ணிய பாவ கரும வசத்தால் நானுவித சரீரங்களைக் கவர்தல் விடுதல் வடிவ துரந்த (அளவின்றிய) துக்கமய சமுசாரத்தை நிரூபித்தலால் அதன் ஜிஹாஸை (விடுதலிலிச்சை) வடிவ அதன் திடத்தன்மை விவக்ஷிக்கப்பட்டமையின் கூறியது கூறலென்னுங் குற்றமின்ரும். இக்காரணத்தாலேயே (3–1) ரம்ஹதி பாதத்தின் விஷயமாயுள்ள வாக்கிய சேஷத்தின்கண் "तस्माद् जुगुप्सेत" ஆதலால் வெறுப்பையடைக) என அன்னிய கரும பலன்களில் சருவப்

பிரகாரத்தாலும் ஜிஹாஸை செய்யத்தக்கது எனக் கூறப் பட்டது. ஆண்டு (மூன்ருவது அத்தியாயத்தில்) இரண்டா வது பாதத்தில் "संध्ये सृष्टिराहहि" (சொப்பனத்தில் சிருஷ்டி யுளது சுருதி கூறுதலின்) என்பது தொடங்கி "नस्थानतोऽपि" (பிரம்மத்திற்கு விசேஷத் தன்மை பிருதிவி முதலிய உபாதி சம்பந்தத்தாலுமின்ரும்) என்பதற்கு முன்னுள்ள கிரந்தத்தால் வாஸ்தவமாக அவஸ்தாத்திரய சம்பந்தமற்ற தும் அதன் சாக்ஷியும் சிதேக ரசமுமானத்வம் பதார்த்தம் நிருபிக்கப்பட்டது. அதிலிருந்து பாதசமாப்தி பரியந்தம் வாஸ்தவமாக ஸர்வ உபாதியற்றதும் சத்தியஞானுதி வடிவமுமான தத்பதார்த்தம் நிருபிக்கப்பட்டது. அவற்றின் ஞானமும் வாக்கியார்த்தமாகிய பிரத்தியக் பிரம்மங்களின் ஐக்கிய ஞானத்தின் காரணமாம் எனக் கூறு கின்ருர் இரண்டாவது என குணேபசம்ஹாரபாதத்தின்கண் நாநாசாகையின் கண்ணுள்ள உபநிஷத்துக்களால் பிரதி பாத்தியமான பிரம்மவித்தையின் ஏகத்வத்தை நிருபணஞ் செய்து "आनन्दादयः प्रधानस्य" (பிரம்மத்திற்கு ஆநந்தாதி களாம்)என்பது முதலியவற்ருல் ஆனந்தம் சத்தியம், ஞானம் அநந்தம் என்பது முதலிய பதங்களின் வாச்சியார்த்தங்களை கேட்கப்படாத ஸ்தலங்களிலும் உபஸம்ஹாரஞ் செய்து (சேர்த்து) அவற்றின் லக்ஷியமாயும் துக்கம் அநிருதம் ஜடம் பரிச்சேதம் என்பது முதலியவற்றின் விருத்த சொருபமாயு முள்ள ஒரே லக்ஷிய வஸ்துவின் ஞானம் துக்கித்தன்மை அநிருதத் தன்மை ஜடத் தன்மை பரிச்சின்னத் தன்மை முதலிய பிராந்தியின் விரோதியாய் எல்லா இடங்களிலும் ஓர் வடிவமாகவே உண்டாகின்றது என நியாயத்தாலும் ஆகமத்தாலும் நிருபிக்கபபட்டுள்ளது, அதனநுசந்தான மும் ஈண்டு சாதனமெனக் கூறுகின்ருர் மூன்ருவது என. ஸர்வ வாக்கியங்களிலும்— ஸர்வ உபநிஷத்துக்களின் கண் ணுள்ள வாக்கியங்களிலும், வாக்கியங்களிலுமென்ற உம்மையால் மந்தாதிகாரிகட்கு சகுணேபாசனையும் அதனு லபேக்ஷிக்கப்பட்ட உபாஸ்ய குணேப ஸம்ஹார நியாயத்தின் பரிசீலனமும் தத்துவ சாக்ஷாற்காரத்திற்கு சாதனமா மென விவக்ஷிக்கப்பட்டது. அஃது கற்பதருவின்கண் கூறப்பட்டுள்ளது.

निर्विशेषं परं ब्रह्म साक्षात्कर्तुं अनीश्वराः
येमन्दास्तेऽनुकम्प्यन्ते सविशेष निरूपणैः ।
वशीकृते मनस्येषां सगुण ब्रह्मशीलनात्
तदेवाविर्भवेत् साक्षादपेतोपाधिकल्पनम् ॥

நிர்விசேஷ பரப்பிரம்மத்தை சாக்ஷாத்கரிப்பதற்கு எவர் அச மார்த்தரோ அந்தமந்த மதியினையுடையவர் சவிசேஷப் பிரம மத்தின் உபாஸனையால் மனது வசம் பண்ணப்பட்டபோது அந்தப் பிரம்மமே உபர்தி கற்பனையற்றதாகி அபரோக்ஷ மாகும் என "यमेवैषवृणुते तेन लभ्य;" (எந்த ஆன்மாவை இந்த அதிகாரி பஜிக்கின்ருனே அதனுலேயே அடையத் தக்கது) என்னும் சுருதியும் கூறிய அர்த்தத்தில் தாற்பரிய முடையதாம்.

புருஷார்த்த பாதத்தின்கண் கூறப்பட்ட அந்தரங்க பகிரங்க சாதனங்களின் அபேக்ஷையினைக் கூறுகின்ருர், நான்காவது என "சாந்தः தாந்தः" என்பது முதலிய வாக்கியத்தில் சமம் முதலியவை தத்துவ சாக்ஷாற்காரத்தை யுத்தேசித்து விதிக்கப்பட்டிருத்தலின் இந்த ஜன்மத்தின் கண்ணேயே சாக்ஷாற்காரம் உண்டாகும் பரியந்தம் அநுஷ்டிக்கத் தக்கவையாயிருத்தலின் சமீபத்திலிருக்குந் தன்மையால் அந்தரங்க சாதனமாம்.

வேதாத்தியயனம் முதலியவை விவிதிஷையையுத்தேசித்து விதிக்கப்பட்டிருத்தலின் விவிதிஷை பரியந்தம் அவற்றின் அநுஷ்டானமாமாதலின் தூரத்திலிருத்தலால் அவைகள் பகிரங்கமாம் என்னும் விவேக ஞானத்தால் பகிரங்க சாதனத்தை நீக்கி அந்தரங்க சாதனத்தை அனுஷ்டித்தல் நான்காவது சாதனமாம். இந்தச் சாதன சமுதாயம் பரம ஹம்ஸ சன்னியாசியினுல் அவசியம் அநுஷ்டிக்கத்தக்கது.

त्वं पदार्थ विवेकाय सं न्यासः सर्वकर्मणाम्
श्रुत्या विधीयते यस्मात्तत्यागी पतितो भवेत् ।

இதன் பொருள் பிரத்தியகான்மாவை சாக்ஷாற்கரித்தற் பொருட்டு ஸர்வ கருமங்களின் சன்னியாசம் சுருதியால்

விதிக்கப்படுகின்றது. ஆதலின் சாக்ஷாற்கார ஏதுவான சிரவணாதியைப் பரித்தியாகஞ் செய்பவன் பதிதனுவான். என்பது முதலிய வசனத்தால் சன்னியாசிக்கு அதனை அனுஷ்டியாமையின்கண் பிரத்தியவாயம் கேட்கப்படுதலின் அவனாலேயே இந்தச் சாதனங்கள் அநுஷ்டித்ததற்கு யோக்கியமாகும். அவனுக்குக் கர்மாநுஷ்டானம் முதலிய வற்றாற் செய்யப்பட்ட விக்ஷேபமின்மையின் என்பது பிரயத் தினத்தால் சன்னியாசிக்கு என்னுமிரண்டு பதங்களின் கருத்தாம். 3

அவதாரிகை

அற்றேல் எல்லாருக்கும் காணப்பட்டதும் கேட்கப்பட்ட துமான விஷய போகங்களை விஷயமாகவுடையதும் அஞ் ஞானத்தால் சித்தித்ததுமான இராகத்தின் நிவர்த்தியானது இச்சிக்கப்படுகின்ற விஷயப் பிராப்தியினாலேயாம் என்பது அனுபவசித்தமாம். இவ்வாருகவே இகலோகத்திலுள்ளதும் இரண்ய கர்ப்ப பரியந்தமான பரலோகத்திலுள்ளதுமான விஷயபோகம் அடையப்படாதபோது அதில் நின்றும் வைராக்கியம் எங்ஙனம் உளதாம். வைராக்கியமில்லாத போது அதன் திருடத்தன்மை எங்ஙனமாம், இச்சிக்கப்படு கின்ற விஷயப் பிராப்தியின் பொருட்டு லௌகிக வைதிக கர்மானுஷ்டானங்களில் தற்பரமான சித்தமுள்ளவனுக்கு தத்வம் பதார்த்தங்களின் பரிசோதனைக்கு அவகாசந்தான் எங்ஙனம் பொருந்தும் என்னுமிடத்து கூறுகின்ருர்.

சுலோகம்

संसारदोषमवधारयतो यथाव
द्वैराग्य मुद्भवति चेतसि निष्प्रकम्प्यम् ।
वैराग्य जन्मनि दृढेच सतिप्रवृत्ति-
स्तत्त्वं पदार्थ परिशोधन कर्मणिस्यात् ॥

பதவுரை

संसारदोषम् – சம்சாரத்தின் கண்ணுள்ள அநித்திய துக்க அசுத்தவடிவ தோஷங்களை

यथावत् अवधारयतः – உள்ளபடி அறியும் புருஷனுக்கு

निष्प्रकम्प्यं वैराग्यम् – நிச்சலமான வைராக்கியம்
चेतसि उद्भवति – சித்தத்தின் கண் ணுண்டாகின்றது
वैराग्य जन्मनि – வைராக்கியமுண்டாகி
दृढेच सति – அஃது திடமானபோது
तत्त्वं पदार्थ परिशोधनकर्मणि – தத்துவம் பதார்த்தங்களின் பரிசோதனை வடிவ விசாரத்தில்
प्रवृत्तिः स्यात् – பிரவிருத்தியுண்டாம்

விசேஷவுரை

விஷயபோகங்களில் திருப்தியடைந்த புருஷனுக்கு போக சாமர்த்தியத்தின் பிரதிபந்த மின்மையினுல் இராகத்தின் அலைவு உபசமமாகின்றது. அங்ஙனமாயினும் திருப்தி அனித்தியமாதலால் போகசாமர்த்திய பிரதிபந்தமின்றிய புருடனுக்கு மீண்டும் அனுபவிக்கப்பட்டதின் சஜாதீய போக விஷயக அதிகவாசையுண்டாகின்றது. இதுவும் சர்வானுபவசித்தமாம். அப்படியே பௌராணிகரும்

"हविषा कृष्णवर्त्मेव भूयएवाभि वर्धते"

நெய் முதலிய ஹவிஸினுல் அக்னிபோன்று விஷயபோகானுபவத்தால் ஆசை மீண்டு மதிகரிக்கின்றது எனக் கூறியிருக்கின்றனர். ஆதலால் விஷம் முதலியவற்றோடு கூடிய அன்னம் முதலியவற்றிற் போன்று இனி கூறப்படும் தோஷ தரிசனமே ராகநிவிருத்திக்குக் காரணமாம். மீண்டும் மீண்டும் அதன் அநுசந்தானம் அதன் திடத்தன்மைக்குக் காரணமாம் என்க. இங்ஙனம் உற்பன்னமான வைராக்கியத்தின் திடத்தன்மையுடையவனும் சகல கர்மங்களையும் விட்டவனுமாகிய புருடனுக்கு அதனுற் செய்யப்பட்ட விக்ஷேபமின்மையின் தத்துவம் பதார்த்தவிசாரம் நிரந்தரம் செய்தல் சுலபமாகும் என்பது பொருள். இக்காரணத்தாலேயே மூன்ருவது அத்தியாயத்தில் முதற்பாத இரண்டாவது பாதங்களுக்குக் கிரமமும் பொருத்தமாம் என்பது கருத்து.

## சீவனுக்கு தேகாந்தர சஞ்சாரத்தின் விசாரம்

### அவதாரிகை

அற்றேல் கருமத்தின் பயன்களான தாரபுத்திரதனாதிகளிடத்தும் சுபாவமாகவே சுந்தரமான சொர்க்காதிகளிடத்தும் தோஷத்தையே கூறிய திருஷ்டாந்தத்திற்போன்று கண்டிலேம் ஆதலின் அவற்றின்கண் வைராக்கியம் எப்படி உண்டாம் என்னும் சங்கைக்கு மித்யையாதலால் எப்போதும் சகிக்கக்கூடாத துக்க மிகுதியினையும் பயம் சோகம் ஸ்பர்த்தை (பொறாமை) அசூயை முதலிய அநர்த்த சமுதாயத்தினையும் கர்மத்தின் பயனாகிய சம்சாரத்தின்கண் நான் கிரமமாகப் பிரித்துச் சொல்கின்றேன்; அதனை அறிவாயாக. அதனால் உனக்கு வைராக்கியம் முதலியவை உண்டாம் எனக் கூறுகின்றார்.

சுலோகம்

सम्सारूरपमवगच्छ विविच्यमानं
यस्मिन्श्रुते भवति तद्विषया जुगुप्सा ।
वेदः प्रकाशयति सम्सरणं यथाऽस्य
जीवस्य जन्ममरणे व्रजतः क्रमेण ॥

பதவுரை

यस्मिन् श्रुते – எந்த சமுசாரத்தின் சொரூபத்தைக் கேட்டலால்
तद्विषया जुगुप्सा – அதன் விஷயக வெறுப்பு
भवति – உண்டாகின்றதோ
विविच्यमानम् – என்னால் விவேசனஞ் செய்யம்படுகின்ற
सम्साररूपम् – அந்த சமுசாரத்தின் சொரூபத்தை
अवगच्छ – அறிவாயாக

பௌருஷேயமாதலால் மூலப்பிரமாணத்தின் அபேக்ஷயினையுடைய உனது வசனத்திற்கு தன்னாற் பிராமாண்யம் பொருந்தாமையின் அதனர்த்தத்தின்கண் விச்வாஸம் எங்ஙனமுண்டாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**यथा जन्ममरणे** – உள்ளபடியே ஜனன மரணங்களை
**क्रमेण व्रजतः** – நிரந்தரம் அடைந்துகொண்டிருக்கின்ற
**अस्य जीवस्य** – இந்தச் சீவனது
**सम्सरणम्** – சமுசார கதியினை
**वेदः प्रकाशयति** – வேதம் பிரகாசிப்பிக்கின்றது

விசேஷவுரை

இவ்வுலகிலுள்ள வினைப்பயன்களில் துன்பத்தின் மேம்பாடு பிரத்தியக்ஷ அநுமானங்களாலேயே விசாரவான்களுக்கு அறியப்பட்டுளது. பரலோகத்திலுள்ள வினைப் பயன்களிலும் தோஷத்தின் மேம்பாடு சுருதியால் அறியப் பட்டுளது. அதாவது

"तस्मिन् यावत्सम्पात मुषित्वाऽथैतमेवाध्वानं पुनर्निवर्तन्ते"
கர்மசமூகம் உள்ளவரை சந்திரமண்டலத்தில் வாசஞ் செய்து பின்பு இதேவழியின்கண் திரும்புகின்றனர் என்பது தொடங்கி

तद्य इह रमणीयचरणा अभ्याशोह यत्ते रमणीयां योनि-मापद्येरन् ब्राह्मणयोनिंवा क्षत्रिययोनिंवा वैश्ययोनिंवाऽथय इह कपूय चरणा अभ्याशो ह यत्ते कपूयां योनिमापद्येरन् श्वयोनिंवा सूकर योनिंवा चाण्डालयोनिंवा ॥

இவ்வுலகின்கண் எவர்கள் சுபானுஷ்டானமுடையவரோ அவர்கள் விரைவில் புண்ணியவான்களுடைய யோனியை யடைகின்றனர். (அதாவது) பிராம்மண ஜன்மத்தை யாவது க்ஷத்திரிய ஜன்மத்தையையாவது வைச்ய ஜன்மத்தையாவது அடைகின்றனர் எவர்கள் அசுபானுஷ்டானமுடையவரோ அவர்கள் விரைவில் அசுபயோனியை அடைகின்றனர். (அதாவது) நாயின் ஜன்மத்தையாவது பன்றியின் ஜன்மத்தையாவது சண்டாள ஜன்மத்தையாவது அடைகின்றனர் என்பது முதலிய சுருதியினுல் இஷ்டம் முதலிய கர்மத்தைச் செய்யும் புருஷருக்கும் புண்ணியம் க்ஷயமாகும்போது மறுபடியும் முன் செய்யப்பட்ட நல்வினை தீவினை வசத்தால் நாநாவிதமான கர்ப்பவாச முதலியவனர்த்

தம் அடைவுறுதலால் தோஷத்தின் மேன்பாடு அறியப் பட்டுள்ளது. பகவானாலும் एत्र त्रयी धर्ममनुप्रपन्ना गतागतं काम कामा लभन्ते । இங்ஙனம் வேத விகித கர்மத்தையனுஷ்டிக்கின்றவரும் போகாபிலாஷையுடையவருமான புருடர் போக்குவரத்தையடைகின்றனர் என கூறப்பட்டுள்ளது. கர்மங்கள் விநாசமுடைமையின் பிரம்மலோக பரியந்தம் அசுபமாம்" எனவும் கூறப்பட்டுள்ளது. ஆதலால் எல்லா விஷயங்களிலும் ஜிஹாசை (விடுதலிச்சை) பொருத்தமேயாம் என்பது பொருள்- 5

அவதாரிகை

அற்றேல் ஆனமாவின்கண் அனாதிகாலமாக பிரவிருத்தித்ததும், வினையும் வினைப்பயனுமாகவுள்ளதுமான சம்சாரம் தனது மனது போன்று தோஷத்தோடு கூடியதாயினும் அதனைப் பரித்தியாகம் செய்தல் அசக்கியமாம என்னுஞ் சங்கையை நிராகரிக்கின்றவராய் அதற்கு மித்யாத்தன்மையுண்மையால் அசாரத்தன்மை தோஷத்தை வெளிப்படுத்தற் பொருட்டு ஆன்மாவிற்கு வாஸ்த்தவமாக அதனோடு சம்பந்தமின்மையை முதலில் கூறுகின்றார்.

சுலோகம்

शुद्धः परो न खलु वाङ्मनसव्यतीतः
संसार दुःखमतिदुः सहमश्नुवीत ।
स्वाविद्यया हि परएव स जीवभाव
मागत्य संसरति लिङ्ग समागमेन ॥

பதவுரை

शुद्धः – சுத்தனும், அதாவது பிரத்தியகான்மா சுபாவமாகவே காமம் கருமம் முதலிய தோஷமற்றவனும்

परः खलु – நிர்விசேஷ நிரதிசயானந்த பரமான்மாவும்

वाङ् मनस व्यतीतः – வாக்கிற்கும் மனத்திற்கும் அவிஷயனுமாவன் ஆதலின் அவன்

अतिदुःसहम् – அத்தியந்தம்சகிக்கக் கூடாத

**संसार दुःखम्** – சம்சார துக்கத்தினை
**न अश्नुवीत** – அடையான்

சீவன் பரமான்மாவேயாதலின் அவனிடத்து சம்சாரத்தின் பரிச சம்பந்தமேயின்றுமென்பது பொருள்.

அற்றேல் சமுசாரித்தன்மையால் அநுபவிக்கப்படுகின்ற சீவனுக்கு பரமான்ம பாவம் அசம்பாவிதமாமென்னுஞ் சங்கைக்கு "பரமான்மா மாயைகளால் அநேக வடிவங்களாக ஆனார்" என்பது முதலிய வசனத்தால் படிகத்தில் செந்நிறம் முதலியவை போன்று அநிர்வசநீய அவித்தையாகிய உபாதியை நிமித்தமாகவுடைமையால் சீவத் தன்மை முதலியவற்றிற்கு மித்தியாத் தன்மையுண்மையின் விரோதமின்றுமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

**सः पर एव** – அப்பரமான்மாவே
**स्वाविद्यया** – ஸ்வாசிரய ஸ்வவிஷயக அஞ்ஞானத்தால்
**जीव भावमागत्य** – சீவத்தன்மையை அடைந்து
**लिङ्ग समागमेन** – லிங்க சரீரத்தின் சம்பந்தத்தால்
**संसरति** – சுழல்கின்றது

சமுசாரத்திற்கு அஞ்ஞானம் நிமித்தமாயின் சுஷுப்தி முதலியவற்றின் கண்ணும் சம்சாரம் உண்டாதல் வேண்டும் என்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு இனி கூறப்படும் அஞ்ஞான கற்பிதலிங்க தேகமும் அதன்கண் நிமித்தமாமெனக் கூறுகின்றார், லிங்க சரீரம் என. சுஷுப்தி முதலியவற்றின்கண் இலிங்கதேகம் விலீனமானமையின் சம்சாரப் பிராப்தியின்றும் என்பது கருத்து. 6

அவதாரிகை

அற்றேல் நிருபாதிகான்மாவிற்கே முக்தியினடைவு உண்மையால் அதற்கே பந்த வடிவ சம்சாரத்தினடைவு கூறுதல் வேண்டும். பந்த மோக்ஷங்கட்கு ஏகாசிரயத் தன்மை நியமமாதலின் ஆதலால் பந்தத்தின் வாஸ்தவத் தன்மை பரிகரிக்க தகாதாம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

சுலோகம்

ब्रह्मैव संसरति मुच्यत एतदेव
दौवारिकं भवति संसरणं तुतस्य ।
मुक्तिः पुनर्भवति चिद्रुपुषैव तस्य
स्वाज्ञानतः स्वमहिम प्रतिबोधतश्च ॥

பதவுரை

ब्रह्म एव संसरति – பிரம்மமே சம்சாரத்தையடைகின்றது
एतदेव मुच्यते – பிரம்மமே முக்தியினையடைகின்றது

அஞ்ஞான காலத்தில் எவன் அஞ்ஞானத்தினதீனமான பிராந்தியினாலேயே சம்சாரத்தினை அனுபவிக்கின்றானோ அவனே சுவாபாவிக பிரம்மபாவத்தின் சாக்ஷாத்காரத்தால் மூலத்தோடுகூட பிராந்தியினைக் கெடுத்தலால் முக்தன் ஆகின்றான் என "ब्रह्मैव सन् ब्रह्माप्येति विमुक्तश्च विमुच्यते" பிரம்மமாகவேயிருந்து பிரம்மத்தையடைகின்றான். முக்தனாயிருந்து முக்தியையடைகின்றான்" என்பது முதலிய சுருதிகளினால் பிரதிபாதிக்கப்படுதலின் பந்தம், மோக்ஷம் என்னும் இரண்டு அவஸ்தையிலும் சீவனுக்கு பிரம்மபாவம் ஒரே வடிவமாம். தாணுவினது தாணுத்தன்மை சோரப் பிராந்தி காலத்திலும் அதன் நிவர்த்தி காலத்திலும் விசேஷமுடையதாகவாகின்றதில்லையன்றோ? இத்துணையால் அதன்கண் அஞ்ஞானகற்பித சோரத்தன்மையானது வாஸ்தவமாகிறதில்லை. அதுபோன்று ஆன்மாவின்கண் அநிர்வசனீய அவித்தையினாற் கற்பிக்கப்பட்ட லிங்க தேகவுபாதியினை நிமித்தமாகவுடைய சம்சாரத்திற்கு மித்தியாத்தன்மை அங்கீகரிக்கத் தக்கதாமென்பது பொருள். அப்படியானால் ஞானத்திற்கும் அஞ்ஞான காரியத்தன்மையால் அநிர்வசனீயத் தன்மையுண்மையின் அதனதீனமான மோக்ஷமும் பந்தம் போன்று மித்தையேயாகும் என்னும் சங்கைக்கு அவ்விரண்டின் வைலக்ஷண்யத்தைக் கூறுகின்றார்.

**तस्य संसरणं तु** – பரமான்மாவிற்கு சம்சாரமோ

**स्वाज्ञानतः** – தனதஞ்ஞானத்தால்

**दौवारिकं भवति** – லிங்க தேகத்தை துவாரமாகவுடையதாம்

**तस्य पुनः मुक्तिः** – பரமான்மாவிற்கு மோக்ஷமோ

**स्वमहिमप्रतिबोधतश्च** – தனது அகண்டான்மக தத்துவ ஞானத்தால்

**चिद्वपुषाएव भवति** – சிதான்மகமாகவே யுண்டாகின்றது

## விசேஷவுரை

மித்தையாகவே சீவ பாவத்தையடைந்துள்ள பிரம்மத்திற்கு அநிர்வசனீய லிங்கதேக சம்பந்தத்தினை துவாரமாக உடைய யாதொரு சம்சாரமுண்டோ அஃது சொரூபாஞானத்தால் விஜ்ரும்பிதமான பிராந்திமாத்திரத்தாற் சித்தித்திருத்தலின் மித்தையேயாம் என்பது பொருத்தமாம். தனது சொரூப ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கப்பெற்ற அவ்வான்மாவிற்கே நித்திய சுத்தாதி வடிவ பிரம்மரூபத்தால் ஸ்திதிவடிவ யாதொரு மோக்ஷமுண்டோ அஃது தத்துவத்தைப் போதிக்கும் பிரமாண சித்த பிரம்மமாத்திரமாதலால் பாதாயோக்கியமாம்; ஆதலால் வாஸ்தவமாம். இங்ஙனம் இரண்டற்கும் விஷமத் தன்மையுளது என்பது பொருள். 7

விஜ்ரும்பிதம் = மலர்ந்த அல்லது வெளிப்பட்ட

## அவதாரிகை

அற்றேல் பிராந்தி ஞான தத்துவஞானங்களின் விஷயங்கட்கு விஷமத்தன்மையிருப்பினும் "எவனுக்கு அஞ்ஞானமோ அவனுக்கு பிராந்தியாம். பிராந்தியினையுடையவன் தத்துவத்தினையறிகின்றதில்லை" என்னும் நியாயத்தால் அஞ்ஞானம் பிராந்தி ஞான தத்துவ ஞானமாகிய இவைகட்கு ஏகாசிரயத் தன்மை நியமமாதலின் அஞ்ஞானத்திஞசிரயமான சின்மாத்திரத்தை யாசிரயித்திருக்குந் தன்மையே பிராந்தி முதலிவைகட்கு சித்திக்கும் இவ்வாருகவே இலிங்க தேகத்தை யுபாதியாகவுடைய சீவனிடத்தில் பிரமாதிருத்தன்மை முதலிய பந்தத்தை யங்கீகரித்தல் விரோதமாம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

சுலோகம்

स्वाज्ञानान्वयि नीचिदेव भवति स्वज्ञानमस्याः पुनः
नत्यिन्तः करणोपराग शवलीभावं विनायुक्तितः ।
कूटस्थे नतमस्विता न घठने नोविक्रिया तत्र न
स्तस्मादेष विशेषईषदुचितः स्वीकर्तुमेतेप्रति ॥

பதவுரை

चिदेव – அசங்க சித்ரூப ஆன்மாவே

स्वाज्ञानान्वयि नी भवति – தனது அஞ்ஞானத்தினுசிரிய மாகின்றது.

அநாதிசித்த அஞ்ஞானத்திற்கு அதன் காரிய லிங்க தேக விசிஷ்டசேதனத்தை யாசிரயித்திருக்குந் தன்மை பொருந்தாமையின் சுத்த சேதனமே அதன் ஆசிரயமும் விஷயமுமாமென்பது பொருத்தமாம்.

स्वज्ञानं पुनः – பிராந்தியும் பிரமையுமாகிய ஞானமோ

अस्याः – சுத்தசேதனத்திற்கு

अन्तः करणोप राग शवलीभावंविना – அந்தக்கரணத்தின் சம்பந்த வடிவ சபலத்தன்மையின்றி

युक्तितः नास्ति – யுக்தியால் சித்திக்கிறதில்லை

சுத்தசேதனத்திற்கு அகங்கார ஸம்பிண்டித (சேர்ந்த) பிரமாத் திருவடிவம் அங்கீகரிக்கப்படுகின்றது. பரீக்ஷகருக்கு ஞானம் இச்சை முதலிவற்றின்கண் பிரமாத்திரு தருமத் தன்மை அநுபவ சித்தமாம் விவாதமற்றதுமாம். பிரமாத் திருத்தன்மையாவது பிரமையின் கருத்திருத்துவமாம். கருத் திருத்துவமும் சுதந்திரத் தன்மையால் இதர காரகங்களைப் பிரேரிக்குந்தன்மையாம். பிரேரிக்குந் தன்மையும் விகார முடைய சேதனத்திற்கே சம்பவிக்கின்றதாதலின் கேவல சடத்திற்கும் கூடஸ்தசேதனத்திற்கும் பிரமாத்திருத்தன்மை பொருந்தாமையின் பிரமாதாவின் தருமமான ஞானுதிகட்கு சேதன விசிஷ்ட அந்தக்கரணத்தின் தருமத் தன்மை பொருத்தமாம் என்பது பொருள்.

அப்படியாஞல் சுத்தசைதன்னியம் கூடஸ்த அசங்க அத்துவிதீயாதி வடிவமாதலின் அதன்கண் அஞ்ஞான சம்பந்தம் யுத்தியால் பொருந்தாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

नः – எமது மதத்தில்

कूटस्थे – கூடஸ்த சேதனத்தின்கண்

तमस्विता – அஞ்ஞாஞசிரயத் தன்மை

न घटते न – பொருந்துகின்றதில்லையென்பதில்லை

இரண்டு நகாரங்களால் அதன் பொருத்தம் நிச்சயிக்கப்படுகின்றது. அஞ்ஞானத்திற்கு அஞதித் தன்மையுண்மையால் அவிகாரத் தன்மையுளது, ஆதலின் அதஞசிரயத்திற்கு கூடஸ்தத் தன்மையின் விரோதமின்ருும். இங்ஙனம் அதற்கு ஞானபாத்தியத் தன்மையுண்மையால் மித்தியாத் தன்மையுளது. ஆதலின் அதனதீனசத்தையினையுடைய அதன் சம்பந்தத்திற்கும் அத்தன்மையுண்மையின் வாஸ்தவாசங்கத் வாதிக்கு விரோதமின்ருும் என்பது கருத்து. இவ்வாருயின் பிரமாதிருத்தன்மை முதலியதும் சுத்தசேதனத்தின் கண்ணேயே பொருத்தமுடையதாம். அதற்கு மித்யாத் தன்மையுண்மையால் அதன் கூடஸ்தத் தன்மைக்கு விரோதமின்மையின் விசிட்டத்தின் தருமமாகவங்கீகரித்தல் வீணேயாம் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

तत्र नोत्क्रिया = சுத்த சேதனத்தின்கண் பிரமாதிருத்தன்மை முதலிய விகாரம் பொருத்தமுடையதன்ருும்.

அதற்கு ஆகமாபாயித் தன்மையால் விகாரத்தன்மையுண்மையின் அதன் தருமியும் பரிணமியாகவிருத்தல் வேண்டும். ஆன்மாவோ பரிணமியன்ருும் கூடஸ்தத்தன்மைக்கு குறைவு வருதலின், அஞ்ஞானத்தின் பரிணமமான அதற்கு (பிரமாதிருத்தன்மை முதலியவற்றிற்கு) ஆன்மாவின் கஞரோபமாம் என்று சொல்லற்க கேவலவஞ்ஞானத்தின் பரிணமமாக வொப்பிடின் சுழுத்தி முதலியவற்றிலும் அஃதுண்டாதல் வேண்டும். லிங்க வடிவத்தால் பரிணமமுற்ற அஞ்ஞானத்தின் பரிணமமாகவொப்பிடின் எமதிஷ்டத்தின் சித்தியாம் என்பது கருத்து.

இவ்வாறுயின் அஞ்ஞான பிராந்தி ஞான முதலியவை கட்கு பின்னுசிரயத் தன்மை அன்னியாயமாம் என்னுஞ்சங்கை யினை உபசம்மார வியாஜத்தால் பரிகரிக்கின்றுர்.

तस्मात् – ஆதலால்

एते प्रति – ஞானுஞ்ஞானங்களைக் குறித்து

एषः विशेषः – தருமியின் கண்ணுள்ள விசேஷமே. அதாவது உபகிதத்வானுபகிதத்வங்களின் அதீனமான பேதமே

ईषत् – சொற்பம். அதாவது அதனபேதா விரோதியாக

स्वीकर्तुमुचितः – முற்கூறிய நியாயத்தால் அங்கீகரித்தற்கு தகுதியதாம்

விசேஷவுரை

காரிய காரணங்கட்கு அத்தியந்த பேதத்தையங்கீகரியாமையின், அவற்றினு சிரயமான சைதன்னியங்கட்கு ஏகோபாதிகத்தன்மையினையும் கூறுதற்குக் கூடுமாகலின் அவற்றின் ஆசிரிதங்கட்கு வியதிகரணத் தன்மையின்றும். சுதந்தரவுபாதி பேதத்தினதீனமான பின்ன தருமங்கட்கே அஃது (வியதிகரணத்தன்மை) பிரசித்தியாமாதலின் என்பது கருத்து. 8

அவதாரிகை

வாஸ்தவமாக வசம்சாரியாயினும் சீவனுக்கு அஞ்ஞான காரிய லிங்க தேகத்தையுபாதியாகவுடைய சம்சாரமானது அலீகமாமென்று கூறப்பட்டது. அஃது பொருத்தமன்றும். அனுதிபாவத் தன்மையால் ஆன்மாவிற்குப் போன்று அஞ்ஞானத்திற்குச் சத்தியத் தன்மையுண்மையின் அதன் காரிய லிங்கதேகத்திற்கும் அதனபின்னத்தன்மையால் சத்தியத்தன்மையுண்மையின் அதனதீன சம்சாரத்திற்கு மித்யாத் தன்மை பொருத்தமின்றும் எனின் அற்றன்று எனக் கூறுகின்றுர்,

சுலோகம்

पुर्यष्टकं भवति तस्य परस्य मोहा
त्तेनान्वितस्य तु न भोमलवद्व्यलीकम् ।

दुःखं त्रिधा भवति सम्सरणाभिधानं
नान्यःपरा दधिकरूप भृदस्ति जीवः ॥

பதவுரை

परस्य – வாஸ்தவமாக பரமான்ம வடிவமாயுள்ள
तस्य मोहात् – சீவனுக்கு அஞ்ஞானத்தினுலேயே
पुर्यष्टकम् – 16-வது சுலோகத்தில் சொல்லப்படுவதான அஞ்ஞான அதன் காரியான்மக புரியஷ்டகதேகம்
भवति – உண்டாகிறது. பிராந்திமாத்திர கற்பிதமாமென் பது பொருள்

அஞ்ஞானத்தின் சொரூபம் பிரமாணத்திற்கு அயோக்ய மாதலானும் தத்துவ ஞானத்தாற் பாதிக்கப்படுவதாலும் ரஜ்ஜு சர்ப்பம் போன்று அலீகமாமாதலின் அதன் காரியத் திற்கும் அதன் வடிவத்தால் அலீகத் தன்மையுண்மையின் அதனதீனமான ஆத்தியான்மிக முதலிய பேதத்தால் பின்ன மான துக்கான்மக சம்சாரமும் அவனுக்கு ஆகாசத்தில் நீல நிறம் போன்று அலீகமேயாமெனக் கூறுகின்ருர்.

तेनान्वितस्य तु – புரியஷ்டகத்தோடு தாதாத்மியவத்தியாசத் தினை யடைந்துள்ள சிதான்மாவிற்கே
नभोमलवत् व्यलीकम् – ஆகாசத்தில் நீலநிறம்போன்று பொய்யானதும்
सम्सरणाभिधानम् – சம்சாரமெனப் பெயரியதுமான
त्रिधा दुःखं भवति – ஆத்தியான்மிகம் முதலிய மூவித துக்க முண்டாகின்றது

அற்றேல் பரமான்மாவோடு அபின்னனுயினும்சீவனுக்கு “य आत्मनि तिष्ठन्” “द्वासुपर्णा” எவன் ஆன்மாவிலிருந்து கொண்டு, இரண்டு பக்ஷிகள், என்பது முதல்ய சுருதியினுல் பேதமும் பிரதிபாதிக்கப்படுதலின் அதன் பிரயோஜக மான சமுசாரம் வாஸ்தவமாமென்னுஞ் சங்கைக்குக் கூறு கின்ருர்.

जीवः – சீவனானவன்

परादधिक रूपभृत् – பரமான்மாவினும் விலக்ஷணவடிவத்தைத் தரித்தவனாகி

अन्यः न अस्ति – வேறாய் இன்றாம்

விசேஷவுரை

அபேதத்தின் சமானசத்தையுடைய பேதத்திற்கு ஓரிடத்தில் விரோதமாதலால் அசம்பவமாதலானும்

"नान्योऽतोऽस्ति द्रष्टा" "उदरमन्तरं कुरुते"

"பரமான்மாவினும் திருஷ்டா வேறின்றாம்", "அற்பமாவது பேதத்தை யெவன் செய்கின்றானோ" என்பது முதலிய சுருதிகளால் பேதம் நிஷேதிக்கப்படுதலானும் சீவனிடத்தில் வாஸ்தவபேதம் முதலியவை அங்கீகரிக்கப்படுகின்றதில்லை என்பது பொருள். 9

அவதாரிகை

அற்றேல்

"पादोऽस्य विश्वा भूतानि" "ममैवंशो जीवलोके"

சர்வபூதங்களும் பரமான்மாவினுடைய ஓர் பாதமாம். ஜீவவுலகின்கண் சீவர்கள் என்னுடைய அம்ஸங்களாம் என்பது முதலிய சுருதி ஸ்மிருதிகளால் சீவனுக்குப் பரமான்மாவின் அம்ஸத்தன்மை பிரதீதியாதலாலும் அக்கினி விஸ்புலிங்க திருஷ்டாந்த சுருதியால் அவனுக்குப் பரமான்மாவின் விகாரத்தன்மை பிரதீதியாதலாலும் அவ்விருவருக்கும் பேதாபேதம் அங்கீகரிக்கத்தக்கதாம். அங்கீகரியாவிடின் அம்ஸாம்ஸிபாவம் முதலியவை பொருந்தாமற்போம் எனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

சுலோகம்

नांशःपरस्य नचतस्य विकारएष
नात्यन्तमेव च विभिन्नवपुः परस्मात् ।
जीवोऽयमभ्युपगतः कुतएत देवं
ब्रह्मात्मता वचनजात विरोधहेतोः ॥

பதவுரை

एषः – இந்தச் சீவனானவன்

परस्य अंशः न – பரமான்மாவின் அம்சமன்றும்

तस्य विकारः नच – அவனது விகாரமுமன்றும்

परस्मात् – பரமான்மாவினின்றும்

अत्यन्तम् एव – அத்தியந்தம்

विभिन्नवपुः नच – வேறுபட்ட சொரூபனுமன்றும்

மூன்றுவது பக்ஷத்தின் நிஷேதம் திருஷ்டாந்தத்தின் பொருட்டாம், அல்லது மதாந்தரத்தின் நிஷேதத்தின் பொருட்டாம். எல்லாவற்றின் கண்ணும் ஆகாங்க்ஷை வாயிலாக ஏதுவினைக் கூறுகின்றார்.

एवम् एतत् कुतः – அவயவமின்மையும் விகாரமின்மையும் எதனால் எனின்

ब्रह्मात्मता वचन जात विरोधहेतोः – சீவனுக்கு பிரம்மத்தன்மையைப் போதிக்கின்ற வாக்கியங்கட்கு விரோதம் வருதலின்

விசேஷவுரை

"நிஷ்கலம் நிஷ்கிரியம் சாந்தம்" "அஜன் நித்தியன் சாஸ்வதன் இவன் புராணன்" என்பது முதலிய சுருதி அவயவிக்கும் விகாரத்திற்கும் அநித்தியத்தன்மை முதலியவற்றைச் சம்பாதிக்கின்ற யுக்தியினால் அனுக்கிரகிக்கப்பட்டுளது. அத்தகைய சுருதிக்கு விரோதம் வருதலினாலும் அவயவி முதலியவற்றிற்குச் சத்தியத்தன்மை பொருந்தாமையானும், வசனாந்தரத்திற்கு (அம்சத்தன்மை முதலியவற்றை போதிக்கும் வாக்கியத்திற்கு) கடாகாசாதி போன்று ஔபாதிகால்பத்தன்மை முதலியவற்றை யனுவதித்தல் வாயிலாக பிரம்மத்தின் அனந்தத்தன்மையின்கண் தாற்பரியமுண்மையினாலும், அகண்டபரமான தத்துவமசி முதலிய வாக்கியங்களின் சமன்வயத்திற்கு விரோதம் வருதலானும், இந்தப் பக்ஷங்கள் கிரகிக்கத்தக்கனவன்றும் என்பது பொருள்.

அவதாரிகை

இதனாலும் சீவனுக்கு வாஸ்தவமாக அம்சத்தன்மை முதலியவற்றின் கற்பனை பொருந்தாதெனக் கூறுகின்றார் :

சுலோகம்

अपिच विश्वमनुप्रविवेश तत् परममेव पदं परमात्मनः।
इतिवदत सुहृत्स्विवतत्पर श्रुतिवचस्सुकथं सततोऽधिकः ॥

பதவுரை

अपि च – மேலும்

परमात्मनः – பரமான்மாவின்

परममेवततपदम् – சர்வோத்க்ருஷ்ட சொரூபமே

विश्वम् अनुप्रविवेश इति – ப்ரபஞ்சத்தை சிருஷ்டித்து அதன் கண் பிரவேசித்தது என

सुहृत्सुइव – மித்திரர்போன்று அத்தியந்தம் இதத்தை இச்சிக்கின்ற

तत्पर श्रुतिवचस्सु – ஸ்வார்த்தத்தின்கண் தற்பரமான வேதாந்த வாக்கியங்கள்

वदत्सु – பிரதிபாதிக்குங் காலத்தில்

सः – சீவன்

ततोऽधिकः – பரமான்மாவினும் பின்னனாக

कथम् – எங்ஙனமாவன்

விசேஷவுரை

பரமான்மாவே ஈண்டு நக நுனி பரியந்தம் பிரவேசித்துளர்'' ''அது சிருஷ்டித்து அதுவே பிரவேசித்தது'' ''இந்தச் சீவ வடிவத்தால் பிரவேசித்து'' என்பது முதலிய ச்ருதி வசனங்கள் தன்னாற் சிருஷ்டிக்கப்பட்ட ஜல விசேஷங்களில் சூரியனது நிர்விகார சொரூபத்திற்கே பிரவேசமிருத்தல் போல நிர்விகார பரம புருஷார்த்த வடிவ பரமான்ம சொரூபத்திற்கே தன்னாற் சிருஷ்டிக்கப்பட்ட சமஷ்டி வியஷ்டி வடிவ ஸர்வோபாதிகளிலும் பிரவேசமாம். அத்தகைய நிர்

விகார சொரூபத்திற்கே சீவத்துவமாமென அத்தியந்தம் இதத்தைச் செய்கின்ற மாதாவைப் போன்று தாற்பரியத்தால் உபதேசிக்குங் காலத்தில் அவனுக்கு பரமான்மாவினும் விருத்த விகாராதி பாவம் எங்ஙனம் கூடும். ஈண்டு அந்தர்யாமி பாவத்தாலேயே பரமான்மாவிற்குப் பிரவேசங் கூறப்பட்டுள்ளது. சீவ பாவத்தாலன்ரும் என்று சொல்லற்க. பிரவேசித்த வஸ்துவிற்கு "प्राणन्नेव प्राणोनाम भवति" பிராண வியாபாரத்தைச் செய்கின்றதாய் பிராணனென்னும் பெயருடையதாகின்றது என்பது முதலிய சுருதியால் பிராண வியாபாரத்தைச் செப்கின்றதாய் பிராணனென்னும் பெயருடையதாகின்றது என்பது முதலிய சுருதியால் பிராண வியாபாரத்தையுடையதாந்தன்மையைப் பிரதிபாதித்தலோடு விரோதம் வருதலின் "अत एव चोपमा सूर्यकादिवत्" (ஆன்மா நிர்விசேஷமாதலாலேயே ஔபாதிக சவிசேஷத் தன்மையைக் கருதி ஜல சூரியகாதி போன்று என உவமை கிரகிக்கப்படுகிறது) என்பது முதலிய அதிகரணத்திற் கூறிய நியாயத்திற்கு விரோதம் வருதலினுலும் ச்ருதியினுல் சீவனுக்கு பரமான்மாவோடு அத்தியந்தம் அபேதமேவாஸ் தவமாம் விபரீத வடிவம் அஞ்ஞான கற்பிதமாம் என 11
சித்தித்தது.

அவதாரிகை

இப்போது யுக்தியினுலும் சீவனுக்கு பரமான்மத் தன்மையே வாஸ்தவமாமெனக் கூறுகின்ருர்.

சுலோகம்

प्रच्यावितवस्तु यदिहास्तिनिजस्वरूपा
दप्रच्युतैकरस संविदघीनमस्य ।
प्रच्यावितास्फुरणमित्यवगत्यतत्र
तत्कल्पितं सकलमाकलयानुमानात् ।।

பதவுரை

निजस्वरूपात् – கூடஸ்த சைதன்னியத்தில் நின்றும்
प्रच्यावि – வேருன ஜடமும் விகாரியுமாகிய

यद्वस्तु – புத்தி முதலிய யாதொரு வஸ்து

इहास्ति – விவகார தசைக்கண் இருக்கின்றதோ

अस्य – அந்த இப்புத்தியாதியின்

प्रच्यावितास्फुरणम् – யாதொரு ஜடத்தன்மை விகாரத்தன்மை யுண்டோ அதன் விளக்கம்

अप्रच्युतएकरस संविदधीनम् – கூடஸ்த ஏக ரச சம்வித் வடிவ சாக்ஷியின் அதீனமாம்

इत्यवगत्य – என்றறிந்து

तत्र– சாக்ஷியின்கண்

तत् सकलम् – அவ்வெல்லாவற்றையும்

अनुमानात् – அனுமானப்பிரமாணத்தினுல்

कल्पितमाकलय – அத்தியஸ்தமாமென்றறிவாய்

விசேஷவுரை

எது எது ஜடத்தின் ஸ்புரணமோ அது அது சாக்ஷியினதீனமாம் என்னும் நியமமறியப்படுதலால் சீவனுக்கும் அப்படிப்பட்ட தன்மை (அதாவது சாக்ஷியினதீனமான ஸ்புரணம்) அறியப்படுதலின் திருசியத்தன்மை பரிகரிக்கத் தகாதாம். இவ்வாருகவே புத்தியாதியோடு கூடிய அவனுக்கு சாக்ஷியோடு வாஸ்தவ சம்பந்தத்தை நிரூபிக்க முடியாமையின் இரச்சு சர்ப்பாதி போன்று அச்சாக்ஷியின்கண் அஞ்ஞான கற்பிதத் தன்மை அனுமானத்தாலடையப்படும் அதுவோ சம்மதமின்ரும். தத்துவ ஞானத்தினதீனமான மோக்ஷத்தினையடைகின்ற சீவனுடைய சொரூபம் கற்பிதமாமென்று எவராலும் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை யாதலின் இரண்டாவது பக்ஷத்தின்கண் பிரமாணமின்மையினுலும் தேவன் ஏகன் என்பது முதலிய சுருதிக்கு விரோதம் வருதலினுலும் சத்தியபேதத்திற்கு அவகாசமின்ரு மென்பது கருத்து. 12

அவதாரிகை

அற்றேல் சீவப் பிரம்மங்கட்கு அத்தியந்த அபேதத்தை அங்கீகரிக்கின் பிரம்மத்திற்கும் சுவவிஷயக அஞ்ஞானுசிரயத் தன்மையால் சம்சாரித் தன்மைப் பிராப்தியாமென்னுஞ்

சங்கைக்கு பிரம்மசப்தத்தால் சின் மாத்திரம் விவக்ஷிக்கப் பட்டதா அல்லது ஜகத்தின் உபாதானத்துவாதி விசிஷ்ட சைதன்னியம் விவக்ஷிக்கப்பட்டதா என்னும் விகற்பத்தினைக் கருத்தில் வைத்துக்கொண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக் கின்ருர்.

ஸுலோகம்

चैतन्यवस्तु विषयाश्रय एवमोहो
नाद्वैतवस्तु विषयाश्रयकोऽप्रतीतेः ।
बुद्ध्यादि वेष्टित चितो नतमस्त्वितेति
ब्रह्माश्रयत्व मुदितं तमसः पुरस्तात् ॥

பதவுரை

मोहः – அஞ்ஞானம்

चैतन्यवस्तुविषयाश्रयएव – சைதன்னிய மாத்திரத்தையே விஷயமாகவும் ஆச்ரயமாகவுமுடையதாம் அதன் கண்ணேயே சப்சாரமாமென்பது பொருள்

இரண்டாவது பக்ஷத்தில் அதற்கு சின்மாத்திரத் தன்மை யுண்மையால் அஞ்ஞானத்தின் ஆசிரயத்தன்மை முதலியவை சம்பவிப்பினும் சீவ பின்ன அஞ்ஞாஞதீனமான ஈச்வரத் தன்மை வடிவத்தால் அஞ்ஞானத் தன்மை முதலியவற்றின் சம்பவமின்ருமெனக் கூறுகின்ருர்.

अद्वैतवस्तुविषयाश्रयकः न – அத்துவிதப் பிரம்ம விஷயக மாகவும் ஆசிரயமாகவும் அஞ்ஞான சப்சாரங்களின்ரும்

अप्रतीतेः – அத்துவிதப் பிரம்மத்தின் ஆச்ரிதமாகப் பிரதீதி யாகாமையின்

அப்படியாஞல் பிரம்மமே சம்சாரத்தையடைகின்றது என்ப தாதி எதஞற் கூறப்பட்டது என்னுஞ் சங்கைக்கு புத்தியால் உபகித சைதன்யத்திற்கு அஞ்ஞாஞதியின் ஆச்ரியத் தன்மை யின்ருமென்னுங் கருத்தால் இது கூறப்பட்டது எனக் கூறு கின்ருர்.

बुद्ध्यादिवेष्टित चितः – அந்தக்கரணுதியால்வளைபட்ட சேதனத்திற்கு

नतमस्त्रिताइति – அஞ்ஞானத்திளுச்சிரியத் தன்மையின்ரும் என்று கருதி

पुरस्तात् – முன்பு

तमसः – அஞ்ஞானத்திற்கு

ब्रह्माश्रयत्वम् उदितम् – பிரம்மாசிரயத்தன்மை கூறப்பட்டது. அத்துவித வஸ்துவிளுசிரயத் தன்மைய பிராயத்தாலன்றென்பது பொருள் 13

## அவதாரிகை

சீவபின்ன ஈசுர சொரூபத்தின்கண் அஞ்ஞானம் முதலியவற்றின் அபாவத்தை பிரமாணமின்மையைக் கூறுதலால் விஸ்தரிக்கின்ருர்.

சுலோகம்

ब्रह्माश्रयं न हितमोऽनुभवेन लभ्यं
नाप्यागमान्न च किमप्य परं प्रमाणम् ।
ब्रह्माश्रयत्व विषयं तमसस्ततश्च
प्रत्यक्प्रकाशविषयाश्रयमेतदस्तु ॥

பதவுரை

तमः ब्रह्माश्रयम् – அஞ்ஞானம் பிரம்மத்தை யாச்ரயித்ததாக

अनुभवेन – பிரத்தியக்ஷத்தால்

नहिलभ्यम् – அறியப்படவில்லை

नापि आगमात् – சப்தப் பிரமாணத்தாலும் அறியப்பட்ட தாகவின்ரும்

तमसः – அஞ்ஞானத்தின்கண்

ब्रह्माश्रयत्व विषयम् – பிரம்மாச்ரயத்தன்மையை விஷயஞ் செய்கின்றதாய்

किमपि अपरं प्रमाणम् – அநுமான முதலிய இதரப் பிரமாணமும்

न च – இன்ரும்

பரிசேஷத்தால் சொப்பிரகாச சின்மாத்திரத்தினை யாச்ரயித்திருக்குந்தன்மை அஞ்ஞானத்திற்கு அங்கீகரிக்கத் தக்கதாம் எனக் கூறுகின்றார்.

ततश्च – ஆதலால்

प्रत्यक् प्रकाशविषयाश्रयम् – சொப்பிரகாச ப்ரத்தியகான்மாவை யாச்ரயித்ததாக

एतदस्तु – அஞ்ஞானமிருக்குக 14

அவதாரிகை

அற்றேல் சீவத்தன்மையே அஞ்ஞானத்தின் ஆச்ரியத் தன்மையினை வரைந்து கொள்வதாக அங்கீகரிக்கத்தக்கதாம். சின்மாத்திரத்தன்மை வரைந்து கொள்வதன்றும் சின் மாத்திரத் தன்மையினையே வரைந்து கொள்வதாக அங்கீ கரிக்கின் சீவனுக்குப் போன்று ஈசுரனுக்கும் அஞ்ஞத்தன்மை முதலிய தோஷம் பிராப்தியாம். ஆதலால் அவித்தை சீவா ச்ரதமாகியே பிரம்மத்தை விஷயஞ் செய்கின்றது எனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

சுலோகம்

जीवत्वमेवतु तदाश्रयमध्यपाति
नेच्छन्ति युक्ति कुशला नहियुज्यतेतत् ।
अज्ञानमेव खलुतन्न तमस्तमस्वि
चैतन्यवस्तु पुनरस्तु नतद्विरोधः ॥

பதவுரை

युक्ति कुशलाः तु – விசாரத்தில் நிபுணபுருடரோ

जीवत्वम् – சீவத்துவத்தினை

तदाश्रयमध्यपाति – அஞ்ஞானசிரயத்தின் விசேஷணமாக

न इच्छन्ति एव – அங்கீகரிப்பதேயின்றும்

ஏனெனில் அஞ்ஞானத்தினுச்ரியத் தன்மை மாத்திரம் அஞ்ஞத்தன்மையன்றும். இரச்சுவின் தத்துவ ஞான காலத்தில் காலாந்தரத்தில் உண்டாவதான சர்ப்பாதிப் பிராந்திக்கு ஏதுவான அஞ்ஞானமுடையவனுயினும் அத்

தகைய சைத்திரனுக்கு ஆண்டு அஞ்ஞத்தன்மையின்மை யின், அப்போது அவ்வஞ்ஞானத்திற்கு இரச்சுதத்துவத்தை மறைக்குந் தன்மையின்மையால் அதனுச்ரயத்திற்கும் அஞ்ஞத்தன்மையின்ருமெனின் அப்போது பிரம்மத்திற்கு சித்ரூபத் தன்மையால் அவித்தையினுச்ரயத் தன்மை இருப் பினும் சர்வஞ்ஞத் தன்மை சர்வ நியந்திருத்தன்மை முதலிய வடிவத்தால் சுருதியாதியால் சித்தத்தன்மையுண்மையின் அதனைக் குறித்து அஞ்ஞானத்திற்கு வஸ்துவை மறைக்குந் தன்மை பொருந்தாமையின் அதன்கண் அஞ்ஞானத்தன்மை பிராந்தத் தன்மை முதலிய சங்கை வெகு தூரமாக நீக்கப் பட்டதாம். சீவனுக்கோ தனது ஆன்மாவைக் குறித்து வஸ்துவை மறைக்கின்ற அவித்தையின் அபிமானித் தன்மை யுண்மையின் அஞ்ஞத் தன்மை முதலிய வியவஸ்தையானது அஞ்ஞானத்திற்கு சின்மாத்திராச்ரயத் தன்மை பக்ஷத்திலும் பொருந்துகின்றது. இதனைக் கருத்தில் வைத்துக்கொண்டு விசாரத்தில் நிபுண புருடர் எனப்பட்டது.

பரமதத்தின்கண் சீவத்தன்மைக்கு ஆச்ரய விசேஷணத் தன்மையையங்கீகரிப்பதில் அநுபபத்தியினை பிரதிஞ்ஞை வாயிலாகக் கூறுகின்ருர்.

**तत्** – சீவத்தன்மை

**नहियुज्यते** – அஞ்ஞானுச்ரயத்தின் விசேஷணமாவதின்ரும்

**तत् अज्ञानमेव खलु** – சீவத்தன்மை அஞ்ஞானத்தினதீன சத்தையையுடையதாதலின் அஞ்ஞானமேயாம்

**नतमः तमस्वि**–அஞ்ஞானம் அஞ்ஞானத்தினுச்ரயமாவதின்ரும்

**चैतन्य वस्तु पुनः** – மற்ருே சைதன்ய வஸ்துவே

**अस्तु** – ஆச்ரயமாம்

**नतद्विरोधः** – அதன்கண் யாதொரு விரோதமுமின்ரும்

விசேஷவுரை

சீவத்தன்மை அஞ்ஞான வடிவமாதலின் அஞ்ஞானத் திற்கு சீவத்துவ விசிஷ்டா சிரயத் தன்மையையங்கீகரிக்கின் சுவாசிரதத் தன்மையும் பிராப்தியாம். அதுவோ விருத்த மாம். சீவத்தன்மை அஞ்ஞானுசிரயத்தின் உபாதியாதலால்

கூறிய தோஷமின்றாமென்னற்க. அஃது சின்மாத்திரத்தின் தருமமாயினோ மதபேதம் பொருந்தாமையின் விவாதமேயின்றாம் அதிரிக்த (சித்தினும் வேறானதன்) தருமமாயினோ அதிரிக்தமான அதற்கு முக்தியில் அன்வயமும் பிராப்தியாம்' அன்வயமிருக்கட்டுமேயெனின் அவ்வாறு அங்கீகரிக்கப்படு படுகின்றதில்லை. சுத்த சைதன்னியத்திற்கு அதனாச்ரியத் தன்மையையங்கீகரிக்கின் யாதொரு விரோதமுமின்றாமென்பது பொருள். 15

## அவதாரிகை

இவ்வாறு அவித்தையின் ஆச்ரய சின்மாத்திரத்திற்கு அவித்தையிற் பிரதிபிம்ப வடிவத்தால் அதனால் நிருபாதிக சொரூபத்தன்மை மறைக்கப்பட்டமையின் அஞ்ஞாத் தன்மையும் சீவத்தன்மையுமாமென்று கூறப்பட்டது. அதற்கே நானாவித துக்காதியினையுடைய தாந்தன்மை வடிவ சம்சாரமும் அஞ்ஞான கற்பித புர்யஷ்டக சம்பந்தத்தாலாமென்று முன்பு கூறப்பட்டது. ஆண்டு அப்புர்யஷ்டகமாவது யாது என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றார்.

## சுலோகம்

कर्मेन्द्रियाणि खलुपञ्च तथाऽपराणि
बुद्धीन्द्रियाणि मन आदिचतुष्टयं च ।
प्राणादि पञ्चकमथो वियदादिकं च
कामश्च कर्मच तमः पुनरष्टमीपूः ॥

## பதவுரை

कर्मेन्द्रियाणि खलु पञ्च – கர்மேந்திரியங்கள் ஐந்தும்
तथा अपराणि அப்படியே இதர
बुद्धीन्द्रियाणि – ஞானேந்திரியங்கள் ஐந்தும்
मनादिचतुष्टयं च – மன முதலிய அந்தக்கரணம் நான்கும்
प्राणादिपञ्चकं – பிராணன் முதலிய வாயுக்கள் ஐந்தும்
अथोवियदादिकं च – வேறான ஆகாசாதி ஐந்தும்

कामश्च कर्म च – காமமும் கர்மமும்
पुनः अष्टमी पूः – மற்றும் எட்டாவது புரியாகிய
तमः – அஞ்ஞானமும் என்னுமிவைகளே புர்யஷ்டகங்களாம்

விசேஷவுரை

வசனம் ஆதானம் கமனம் விசர்க்கம் ஆனந்தம் என்னும் கிரியைகட்கு அசாதாரண காரணங்களான வாக்கு பாணி பாதம் பாயுரு உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்களைந்தும் பிரசித்தங்களேயாம். கூறிய கிரியை வடிவ காரியலிங்க அநுமானங்களால் அவைகட்கு பிரசித்தியிருத்தலின் அவ் விந்திரியத்திறுதாரமான அவயங்களிருந்தும் அவைகளின் மையானேயே மூகர்முதலானோரிடத்து வசன முதலிய கிரியையினபாவம் காணப்படுதலின், வியஷ்டி சமஷ்டியான் மகமான அவை ஓர்கணமாம். புரம்போன்று சுவாமிக்கு போக ஏதுவாதலின் புரியெனப்படுகின்றது, சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களின் ஞானங்களில் அசாதாரண காரணங் களான சுரோத்திரம் தொக்கு சக்ஷு ரசனை கிராணமென்னும் ஐந்து ஞானேந்திரியங்களும் அவ்வாறே பிரசித்தங்களாம். இதுவும் ஓர் கணமாம். இஃது இரண்டாவது புரியாம். இவ்வாறே பின்னருமறிக. அந்தக்கரணம் ஒன்றாயினும் சங்கல்பம் அத்தியவசாயம் அபிமானம் ஸ்பூர்த்தி என்னும் விருத்தி பேதத்தால் மனம் புத்தி அகங்காரம் சித்தம் என அநேகப் பிரகாரமாக சொல்லப்படுகின்றதாகி ஓர் கணமாம். இங்ஙனம் ஆத்தியான்மிக வாயு ஒன்றாயினும் சுவாசப் பிரசுவாசம் முதலிய விருத்திபேதத்தால் பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என்னும் சப்தங்களால் ஐந்து விதமாகச் சொல்லப்படுகின்றதாகி ஓர் கணமாம். இங்ஙனம் அபஞ்சீகிருத பூதங்களின் காரியமும் போகத் திற்கு சாதனமுமான லிங்க தேகத்தை நான்கு கணமாக நிர்த்தேசஞ்செய்து (தூல பூதங்களோடு அவற்றின் காரியங் களான போகாயதனங்கள் போக்கிய விஷயங்களாகிய எல்லாவற்றையும் அபேதப்படுத்தி) சூக்ஷ்ம பூதங்களை ஓர் கணமாகக் கூறுகின்றார் வேறான என ஆகாசாதியின்கண் கூறிய விலக்ஷணத்தன்மை சித்தித்தற்பொருட்டு வேறான எனப்பட்டது. காமம் என்பது ஒரு கணமாம்; கருமம்

என்பது ஒரு கணமாம். இவையிரண்டும் சம்சாரத்தில் முக்கியப் பிரயோஜகமாய் காரிய காரண வடிவமாயுள்ளன. எட்டாவது புரி எது என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக் கூறிய ஏழு புரிகட்கும் காரணமான அஞ்ஞானமே எட்டாவது புரியாகக் கிரகிக்கத்தக்கது என்கின்றார் மற்றும் எட்டாவது என. இவ்வாறாகவே தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவிருத்தியாம். அதனால் சர்வசம்சாரத்தின் உபசமமாம் என்பது கருத்து. 16

அவதாரிகை

அற்றேல்

तं विद्या कर्मणी समन्वारभेते पूर्वप्रज्ञाच

அவனை (இறந்து செல்கின்ற புருடனை) வித்தையும், கர்மமும், பூர்வ பிரஞ்ஞையும் பின்றொடர்த்து செல்கின்றன என்னும் சுருதியின்கண் வித்தை பூர்வ பிரஞ்ஞைகட்கும் சம்சார ஹேதுத்தன்மை அறியப்படுதலின் கூறிய புரியஷ்டகத்திற்கே அதனேதுத்தன்மை எங்ஙனமாம்? அன்றியும் வித்தையினை யேதுவாகவுடைய வச்சம்சாரத்தின்கண் அவித்தைக்கு ஏதுத்தன்மை எங்ஙனமாம் என்னுமிடத்துக் கூறுகின்றார் :

சுலோகம்

विद्याच विश्वविषयानुभवोत्थ पूर्व -
प्रज्ञाच कर्मवचसैव तु संगृहीते ।
बन्धप्रयोजकतया सदृशत्वहेतो -
रेकत्रच श्रुतिवचस्युपसंग्रहेण ॥

பதவுரை

विश्वविषया विद्याच - பிரபஞ்ச விஷயக வித்தையும்
अनुभवोत्थ पूर्वप्रज्ञाच - விஷயானுபவத்தா லுண்டாகிய பூர்வ சம்ஸ்காரமும்
कर्मवचसा एवतु - கருமமென்னும் பதத்தாலேயே
संगृहीते - கிரகிக்கப்பட்டன

பிரபஞ்ச விஷயக என்னும் விசேஷணத்தால் இரண்டாவது சங்கை நீக்கப்பட்டது. அதாவது ஈண்டு பரப்பிரம வித்தை வித்தியாபதத்தால் கிரகிக்கப்பட்டதின்றும்: इति नु कामयमानः என்று விரும்புகின்றவனுய் என்று சம்சாரப் பிரகரணத்தை சமாப்தி செய்து अथाकामयमानः இனி விரும்பாதவனுய் என்பதாதி பிரகரணுந்தரத்தால் பரப்பிரம்மவித்தையின் பயனுன பரப்பிரம்மபாவம் கூறப்படுதலின். ஆனுல் இனிக் கூறப்படுவதான அஞ்ஞானமய பிரபஞ்ச கோசர நான்கு வித ஞானம் ஈண்டு வித்தியா பதத்தால் கிரகிக்கப்பட்டதாம். ஆதலின் அதன் பயனுன சம்சாரத்திற்கு அவித்தை யேதுவாதல் பொருந்தாதது இன்றும் மற்றுே பொருத்தமேயாம் என்பது பொருள்; பூருவானேக சென்மங்களில் சம்பாதிக்கப்பட்ட போக வாசனை பூர்வப்பிரஜ்ஞை எனப்படும். பூர்வ சுலோகததிலுள்ள கர்மபதத்தால் மேற்கூறிய வித்தையும் பூர்வப் பிரஜ்ஞையும் அஜஹல்லக்ஷணையால் கிரகிக்கப்பட்டமையின் மூன்றுமோர்கணமாக விவக்ஷிக்கப்பட்டமையின் முதலாவது சங்கைக்கு அவகாசமின்றுமென்பது பொருள்.

கர்மபதத்திற்கு அவைகளின்கண் லக்ஷணை செய்வதின்கண் சக்கியார்த்த சம்பந்தத்தினையும் ஸ்வகதபிரமாண துவாரகத்தினையும் கூறுகின்றுர்.

बन्धप्रयोजकतया – சம்சாரத்திற்கு ஏதுவாந்தன்மையால்

सदृशत्वहेतोः – மூன்றிற்கும் சாதிருசியமிருத்தலாலும்

एकत्र श्रुति वचसि – ஒரே சுருதி வாக்கியத்தின்கண்

उपसंग्रहेण च–சேர்த்துப் படிக்கப்பட்டிருத்தலாலும் என்க. 17

அவதாரிகை

எச்ச்ருதியால் வித்தை, பூர்வபிரஞ்ஞை. கருமம் மூன்றும் பந்தஹேதுவாகக் கூறப்பட்டதோ அவ்வேக ச்ருதி வசனம் யாது என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றுர்.

சுலோகம்

तं विद्येति हि वाक्यमेकमिहच स्पष्टं त्रयं कीर्तितं
तस्मात्कर्मवचस्तयोरपि भवेत्संग्राहकं कारणात् ।
विद्याचात्र चतुर्विधाऽप्यभिमतै वाऽऽरम्भिका कर्मवत्
संस्कारोऽपि तथा चतुर्विधइति ज्ञेयस्तथा सम्भवात् ॥

பதவுரை

तं विद्याइति हि – தம் வித்தியாகர்மணி சமன்வார பேதே பூர்வப் பிரஞ்ஞாச என்னும்

वाक्यम् एकम् – சுருதிவசனம் ஒன்றேயாம்

इह – இச்சுருதி வாக்கியத்தின்கண்

त्रयं च – வித்தை கருமம் பூர்வப்பிரஞ்ஞை என்னும் மூன்றும்

स्पष्टं कीर्तितम् – வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது

तस्मात्कारणात् – அக்காரணத்தால்

कर्मवचः – சுருதியின்கண்ணுள்ள கர்மபதமானது

तयोरपि – வித்தை பூர்வப்பிரஞ்ஞைகளையும்

संग्राहकं भवेत् – போதிப்பதாகவாகும்

அற்றேல் புண்ய கர்மத்தால் புண்ணியவானாகின்றான்; பாபகர்மத்தால் பாவியாகின்றான் என்னுஞ் சுருதியால் சுபாசுப கருமங்கட்கே சம்சார ஏதுத்தன்மையறியப்படுதலால் வித்தை பூர்வப்பிரஞ்ஞைகட்கு அதனேதுத்தன்மை எங்ஙனமாம் என்னுஞ் சங்கைக்கு அச்சுருதியின்கண் கருமமே சம்சாரஹேதுவாமென்று கேட்கப்படாமையின் இச்சுருதி வசனத்தின் பலத்தால் மூன்றற்கும் சம்சார ஹேதுத்தன்மை சமானமேயாம் எனக் கூறுகின்றவராய் அவைகட்கு நான்கு விதத் தன்மையினைக் கூறுகின்றார்.

अत्र–உத்கிராந்திப் பிரகரணத்திலுள்ள

चतुर्विधाऽपि – நான்குவிதமான

विद्या च – வித்தையும்
कर्मवत् – கருமம்போன்று
आरम्भिका अभिमताएव – சமுசார ஏதுவாகக் கருதப்பட்டுள்ளதேயாம்
संस्कारोऽपि – சம்ஸ்காரமும்
तथा संभवात् –மூலாநுபவத்தையநுசரித்துண்டாதலால்
चतुर्विधः इति – நான்கு விதமாம் அதுவும்
तथाज्ञेयः – கருமம் போன்று சமுசார ஏதுவாக அறியத் தக்கது

## விசேஷவுரை

சில ஞானம் சாஸ்திரத்தின்கண் விதிக்கப்பட்டதாகி தேவதை முதலியவற்றின் உபாஸனை வடிவமாம். சில ஞானம் சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டதாகி அசத் சாஸ்திர விஷயகமாம். சில ஞானம் விதிக்கப்பட்டதின் சமமாய் விதியின்றியும் யதிருச்சையால் பிராப்தமானதாய் கங்கை முதலியவற்றின் தெரிசன வடிவமாய் சிரேயஸ் ஸாதனமாம் சில ஞானம் நிஷேதிக்கப்பட்டதின் சமமாய் பீபத்ஸித (அறுவறுக்கப்பட்ட) பிணம் முதலியவற்றின் தெரிசனவடிவமாய் உடனே துக்கசாதனமாம். இங்ஙனம் வித்தை நான்கு விதமாம். அப்படியே வேள்வி கொலையுண்ணல் விளையாடுதல் முதலிய வடிவமான கர்மங்கட்கும் விகிதம் பிரதிஷித்தம், அவிகிதம் அப்பிரதிஷித்தம் என்னும் பேதத்தால் நான்கு விதத்தினையறிக. இங்ஙனம் பூர்வப்பிரஞ்ஞைவடிவ சம்ஸ்காரமும் மூலாநுபவம் நான்காதலால் நான்கு விதமாம், 18

## அவதாரிகை

அற்றேல் வித்தை முதலிய மூன்றற்கும் சம்சார ஏதுத்தன்மையிருப்பினும் அம் மூன்றன் வாயிலாக லிங்கதேகத்திற்கே அதன் ஏதுத்தன்மை யங்கீகரிக்கத்தக்கது புரியஷ்டகத்திற்கு அங்கீகரிக்கத்தக்கதன்று

"तदेव सक्तः सहकर्मणैति लिङ्गं मनोयत्र निषिक्तमस्य"

(விஷயத்திற் பற்றுள்ள இவனுடைய லிங்கவடிவ மனமே கர்மத்தோடு கூடச் செல்கின்றது) என்பது முதலிய விடங்களில் லிங்கதேகத்திற்கே அதன் ஏதுத்தன்மை கேட்கப் படுதலால் என்னுஞ் சங்கைக்கு "அவ்விவ்வான்மா பிரம்மம் விஞ்ஞானமயன்" என்பது முதலிய சுருதியில் பூத பௌதிகாதி சர்வமயத்தன்மை (சர்வவடிவத்தன்மை) யறியப் படுதலின் அதன் ஏகதேச வாசக லிங்க சுருதியானது லக்ஷணையால் புரியஷ்டவிஷயகமாகக் கொண்டு செலுத்தத் தக்கது எனக் கூறுகின்றார்.

சுலோகம்

पुर्यष्टकं तदिदमप्यभवद्धि लिङ्गं
तेनोच्यतेतदपि लिङ्गगिरा क्वचिच्च ।
पुर्यष्टकं न खलु लिङ्गगिरोऽभिधेयं
मुख्यं तु सप्तदशकं प्रथितं हि लिङ्गम् ॥

பதவுரை

तदिदं पुर्यष्टकमपि – கூறப்பட்ட புர்யஷ்டகமும்
लिङ्गम् हि अभवत् – பிரத்தியகான்மாவின் சத்பாவத்தில் யாதொரு காரணத்தினால் லிங்கமாகவுளதோ
तेन तदपि – அக்காரணத்தால் புர்யஷ்டகமும்
क्वचित् – சிலவிடத்தில்
लिङ्ग गिरा उच्यते – லிங்க சப்தத்தால் சொல்லப்படுகின்றது

து. சப்தம் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டாம். புர்யஷ்டகமே அதன் வாச்சியமாக ஏனாகாது லக்ஷணை எற்றிற்கு என்னும் சங்கைக்கு லிங்கயதி — நியமமாகத் தனது தர்மத்தையறிவிக்கின்றது தனது விலக்ஷணான்மாவின்கண் என்னும் விற்பத்தியினால் அதற்கு லிங்க சப்த வாச்சியத்தன்மை பொருந்தாமையின் இனிக் கூறப்படும் பதினேழு சங்கியையினையுடைய கணமே லிங்க சப்த வாச்சியமாமெனக் கூறுகின்றார்.

पुर्यष्टकम् – புரியஷ்டகமானது
लिङ्गगिरः – லிங்க சப்தத்தின்
न खलु अभिधेयम् – வாச்சியார்த்தமன்றும் மற்றே
सप्तदशकं लिङ्गं तु – பதினேழு தத்துவ வடிவலிங்க தேகமே
मुख्यं हि प्रथितम् – லிங்க சப்தத்தின் முக்கியார்த்தத் தன்மை யால் பிரசித்தமாம் 19

அவதாரிகை

பதினேழு தத்துவ வடிவ அம் முக்கிய லிங்க தேகம் யாது என்னும் ஆகாங்கைஷயுண்டாகக் கூறுகின்றார்.

சுலோகம்

इहतावदक्षदशकं मनसा सहबुद्धि तत्वमथवायुगणः।
इतिलिङ्गमेतदमुनापुरुषः खलु संगतोभवति जीव इति ॥

பதவுரை

इह–புரியஷ்டகத்தின்கண்
तावदक्षदशकम्–முதலில்கூறப்பட்ட ஞானேந்திரிய கர்மேந் திரியங்கள் பத்து
मनसा सह बुद्धि तत्वम् – மனதும் புத்தியுமாகியவந்தக்கரணம் இரண்டு
अथ वायुगणः – பிராணுதிவாயுக்க ளைந்து
इति एतत् लिङ्गम् – இந்தப் பதினேழு தத்துவமும் முக்கிய லிங்கமாம்
अमुना संगतः – பிராணனை பிரதானமாகவுடைய இந்த லிங்க தேகத்தோடு கூடின
पुरुषः खलु – சிதான்மாவே
जीवः इति भवति – சீவபத வாச்சியமாம் என்பது பொருள்
சித்தமும் அகங்காரமும் புத்தியின்கண் அடக்கமாம் 20

அவதாரிகை

அற்றேல் இரண்ய கர்ப்பர் முதலியவதிகாரி புருடருக்கு புர்யஷ்டகமுளதாயினும் துக்கவடிவ சம்சாரமின்மையால் புர்யஷ்டகத்திற்கு சம்சார ஹேதுத்தன்மை எங்ஙனமாம் என்னும் சங்கைக்கு அவர்கட்கும்

**सोऽबिभिभेत् सर्वैनैवरेमे इन्द्रोऽप्राप्यैव देवान् एतत् भयं ददर्श** - அவர் பயத்தை யடைந்தார். அவர் தனிமையாக ரமிக்க வில்லை. இந்திரன் தேவர்களை யடையாமலேயே இந்தப் பயத்தைப் பார்த்தான் என்பது முதலிய சுருதிகளினுல் பயம் ரதியின்மை முதலியவை பிரதிபாதிக்கப்படுதலால் புர்யஷ்டகத்திற்கு சம்சார ஹேதுத் தன்மை விவாதமின்றியதாமெனக் கருதி எல்லோருக்கும் சரீரத்திரயான்மக புரியஷ்டகமில்லாவிடின் சம்சாரமின்றும் என

**अशरीरं वावसन्तं नप्रियाप्रिये स्पृशतः**

சரீரமின்றிய வான்மாவை சுகதுக்கங்கள் ஸ்பரிசிக்கின்றதில்லை என சுருதியிற் கூறப்பட்ட வியதிரேகத்தினைக் கூறுகின்ருர். இன்றுமென வியதிரேகத்தினைக் கூறுகின்ருர் எனக் கூட்டுக.

சுலோகம்

**नपुराष्टकेनरहितस्य तव क्वचिदस्ति संसरणदुःखयुजा ।**
**नपुराष्टकेन सहितस्य तथा क्वचिदस्ति दुःखविगमश्चतव ॥**

பதவுரை

**पुराष्टकेन** – முன் கூறப்பட்ட புர்யஷ்டகத்தோடு
**रहितस्य तव** – கூடாத வுனக்கு
**सम्सरणदुःखयुजा** – சம்சாரவடிவ யாதொரு துக்கமுண்டோ அதன் சம்பந்தம்
**क्वचित् न अस्ति** - ஓரிடத்து மின்றும்

**" न वै सशरीरस्य सतः प्रिया प्रियोरपहतिरस्ति "**

சரீரத்தோடு கூடியிருக்கும் புருடனுக்கு சுக துக்கங்களின் அழிவுயின்றும் என்னும் சுருதியால் புர்யஷ்டக வடிவ சரீரத் திரயமிருக்கும்போது சம்சாரமின்றென்பதின்றும் மற்றூ

உளதேயாம் என அன்வயமும் கூறப்பட்டுள்ளது. அதனாலும் புர்யஷ்டகத்திற்கு சம்சார ஹேதுத் தன்மை அங்கீகரிக்கத் தக்கதாமெனக் கூறுகின்றார்.

पुराष्टकेन सहितस्य – அஷ்டபுரியோடு கூடியுள்ள

तव – உனக்கு

दुःखविगमश्च – சம்சாரவடிவ துக்கத்தினழிவும்

तथा क्वचित् नास्ति - அப்படியே ஓரிடத்துமின்றாம். 21

அவதாரிகை

அப்படியானால் ஆன்மாவின்கண் புர்யஷ்டகத்தின் சம்பந்தம் அன்யத்தினதீனமின்மையால் சுவாபாவிகமாம் அதனால் அதனதீனமான சம்சாரமும் அதன்கண் வாஸ்தவ மேயாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

சுலோகம்

तव नित्यमुक्तसुखचिद्वपुषो न कदाचिदस्तिपुरसंगमनम् ।
तव मायया विरचितं सकलं पुरसंगति प्रभृतिकं वितथम् ॥

பதவுரை

नित्यमुक्त सुखचिद्वपुषः तव – நித்திய முக்த சச்சிதானந்த வடிவ உனக்கு

पुरसंगमनम् – புர்யஷ்டகத்தோடு சப்பந்தம்

कदाचित् नास्ति – ஓர்போதுமின்றாம்

सपर्यगाच्छुक्रमकायमव्रणमस्नाविरं शुद्धमपापविद्धम्

ஆன்மா சருவத்தையும் வியாபித்துளது. பிரகாசவடிவினது. லிங்கதேகமற்றது. விருணம் நரம்பு இவைகளோடு கூடிய தூல தேகமற்றது. அவித்தை வடிவமலமற்றது. தருமா தருமாதி பாபமற்றது. स यत्तत्र पश्यत्यनन्वागतस्तेन भवति அவ்வான்மா ஆண்டு யாதொன்றைப் பார்க்கின்றதோ அதனோடு சம்பந்தமின்றியதாகின்றது.

असङ्गो ह्ययं पुरुषः இப் புருஷன் அசங்கன் अप्राणो ह्यमनाः शुभ्रः பிராணனும் மனதுமின்றியவர் சுத்தர் सएषनेतिनेति அவ்விவ்வான்மா மூர்த்தா மூர்த்தமற்றது என்பது முதலிய ச்ருதிகளால் நித்திய முக்தாதி வடிவ ஆன்மாவிற்கு வாஸ்தவமாக சர்வ உபாதி சூனியத் தன்மை கேட்கப் படுதலால் அதற்கு புர்யஷ்டகத்தின் சம்பந்தம் வாஸ்தவமாமென சங்கிக்கத் தக்கதன்று. கூறிய வாக்கிய சமுதாயப் பரமான்ம விஷயகமாமென்று சொல்லற்க. அங்ஙனமாயினும் ब्रह्मदाशा ब्रह्मदासा ब्रह्मेमे कितवाइते त्वं स्त्री त्वंपुमानसित्वं कुमार उतवाकुमारी । தாசர் பிரம்மம் செம்படவர் பிரம்மம் இவர்கள் பிரம்ம வஞ்சகர். பிரம்மம் நீ, ஸ்திரீ நீ. புருஷன் நீ, குமாரன் நீ, குமாரீ नान्योऽतोस्तिद्रष्टा இவனினும் வேறு த்ரஷ்டா இன்று என்பது முதலிய சுருதிகளால் சீவனுக்கு நித்திய முத்தாதி வடிவ பிரம்மமாத்திரத்தன்மையறியப்படுதலால் அவனுக்கு புர்யஷ்டகத்தின் அசம்பந்தம் அங்கீகரிக்கத் தக்கதென்பது பொருள். அப்படியானல் சீவனிடத்தில் அதன் சம்பத்தத்தின் அநுபவம் எங்ஙனமாம். அன்றியும் அஷ்டபுரியோடு கூடியுள்ள என்று மேற் சுலோகத்திற் கூறப்பட்டதுதான் எங்ஙனம் பொருந்தும் என்னுஞ் சங்கைக் குக் கூறுகின்ருர்.

तव मायया – உனது மாயையினுல்

पुरसङ्ग प्रभृतिकं सकलम् – அஷ்டபுரியின் சம்பந்தம் முதலிய அனைத்தும்

वितथं विरचितम्–மித்தையாகவே உண்டுபண்ணப்பட்டுளது

விசேஷவுரை

கூறிய வடிவமுள்ள ஆன்மாவின்கண் பூத பௌதிக வடிவ தூலச் சூக்ஷுமம் என்னுமிரண்டு சரீரமும் அநிர்வசனீய மாயையினுற் கற்பிக்கப்பட்டமையின் அதற்கு அதன் சம்பந்தம் மித்தையாகவே தோற்றுகின்றது. அசங்க அத்துவீதிய சுவப் பிரகாச சிதான்மாவின்கண் மாயையின் சம்பந்தமும் வாஸ்தவமாகப் பொருந்தாமையின் அதுவும் (மாயையின் சம்பந்தமும்) அதன் அதீனசத்தையையுடைய

தாந்தன்மையால் தற்பிரயுக்தமாம் (அதன் அதீனமாம்) சுவாபாவிகம் அன்றென்பது பொருள். 22

அவதாரிகை

அற்றேல் ஆன்மாவிற்கு நித்திய முத்தத் தன்மையை யங்கீகரிக்கின்

यस्त्वविज्ञानवान्भवति अमनस्कः सदा शुचिः ।
नस तत्पदमाप्नोति सम्सारं चाधिगच्छति ॥
यस्तु विज्ञानवान्भवति समनस्कः सदा शुचिः ।
सतु तत्पदमाप्नोति यस्माद्भूयो न जायते ॥

யாதொரு ஆன்மாவென்னும் *ரதியானவன் விஞ்ஞானமற்ற சாரதியையுடைத்தானவனுய் நிரோதிக்கப்படாத மனத்தை யுடைத்தானவனுய் இஃனலேயே இந்திரியங்களின் எதேஷ்டா சரண ஜன்னிய பாவத்தால் எப்போதும் தூஷிக்கப்பட்ட வனுவனே கூறிய விசேஷமுள்ள அந்த ரதியானவன் அக்ஷர பிரம்ம வடிவ பதத்தையடைகின்றதில்லை. மற்றே சம்சாரத்தையேயடைகின்ருன். யாதொரு ஆன்மாவெனும் ரதியானவன் சிக்ஷிக்கப்பட்ட புத்திவடிவ சாரதியையுடைத் தானவனுய் நிக்கிரகிக்கப்பட்ட மனதுடையவனுய் எப்போதும் சுத்தசித்தமுள்ளவனுவனே அந்த ரதியானவன் பிரம்ம பதத்தை யடைகின்ருன். அதில் நின்றும் மீண்டும் திருப்புகிறதில்லை என்னும் சுருதியால் பிரதிபாதிக்கப்பட்ட பந்த மோக்ஷங்களுக்கு ஓர் காலத்திலிருக்குந் தன்மை பிரதிபாதிக்கப்பட்டுள்ளது. அஃது எங்ஙனம் பொருந்தும் எனுஞ் சங்கைக்கு அச்சுருதியானது வியவகாரிக திருஷ்டியாற் சித்தித்த பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையை விஷயம் செய்வதாம். வாஸ்தவமாகவோ ननिरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः । न मुमुक्षुर्नवैमुक्तः इत्येषा परमार्थता ॥ நாசமுமின்று உத்பத்தியுமின்று பத்தனுமின்று சாதகனுமின்று முமுக்ஷுவுமின்று முக்தனுமின்று இதுவே பரமார்த்தமாம். என்பது முதலிய சுருதியின் பரியாலோசனையால் பந்தமாவது மோக்ஷமாவது ஆன்மாவிற்கு இன்ரும என்னு மிதனை திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்.

* ரதி = ரதத்தையுடையவன்.

சுலோகம்

मलिनं नभो नहि कदाचिदभूद्विमलं कदाचिदभवन्न नभः ।
उभयं नभस्य भवदेवमिह त्वयि नित्यमुक्तचिति संसरणम् ॥

பதவுரை

नभः मलिनम् — ஆகாசமானது மலமுடையதாக
कदाचित् नहि अभूत — ஓர்போதுமின்ரும்
नभः विमलम् — ஆகாசம் மலநிவர்த்தியினையுடையதாகவும்
कदाचित न अभवत् — ஓர்போதுமின்ரும். அங்ஙனமாயினும்
नभसि — ஆகாசத்தின் கண்
उभयं अभवत् — வியவகார திருஷ்டியினுல் துர்த்தின முதலிய காலத்தில் மலினத்தன்மையும் அதன் நிவர்த்தியுமாகிய விரண்டுமுளது
एवम् इह — அதுபோன்று ஈண்டு
नित्यमुक्तचिति — நித்திய முக்த பிரம்ம வடிவ
त्वयि — உன்னிடத்தில்
संसरणम् — சம்சாரமும் அதன் நிவர்த்தியும் வியவகார திருஷ்டியினுலுளது. வாஸ்தவமாகவின்ரும் என்பது பொருள். 23

அவதாரிகை

அற்றேல் அஞ்ஞான கற்பிதமாயினும் பந்தம் எக்காலத்திலுளதோ அக்காலத்தில் ஆன்மாவிற்கும் பந்தத்திற்கும் பரஸ்பர சம்பந்தம் அவசியமிருக்குமாதலின் அதன் கண் பந்தத்தின் அபாவம் பொருந்தாமையின் அதற்கு நித்தியமுக்தத்தன்மை எங்ஙனமாம் என்னும் சங்கைக்குக் கூறுகின்ருர்.

சுலோகம்

नहि कल्पना विरचितं वितथं परमार्थवस्त्ववितथं स्पृशति ।
परमात्मवस्तुच तथा तमसा परिकल्पितं न किमपि स्पृशति ॥

பதவுரை

कल्पना विरचितं वितथम् – கற்பனையாற் பண்ணப்பட்ட பொய்ப்பொருள்
अवितथं परमार्थवस्तु – உண்மையான பரமான்ம வஸ்துவை
नहि स्पृशति – தொடுகின்றதில்லை
तथा परमार्थवस्तु च – அப்படியே பரமான்ம வஸ்துவும்
तमसा परिकल्पितम् – அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட
किमपि न स्पृशति – யாதொன்றையும் தொடுகின்றதில்லை

விசேஷவுரை

கற்பிக்கப்படுகின்றது இதனுல் என்னும் விற்பத்தியினுல் கற்பனை என்பதற்கு அனிர்வசனீய அவித்தை பொருளாம். எச்சம்பந்தத்தால் எதன்கண் எது பிரதீதியாகின்றதோ அச்சம்பந்தத்தால் அதன்கண் அதற்கு மூன்று காலத்திலு மில்லாமையே மித்தியாத்தன்மையின் லக்ஷணமாதலாலும் பந்தத்திற்கு மித்தியாத்தன்மை யுபபாதனஞ் செய்யப்பட்ட மையானும் ஆன்மாவின்கண் பந்தமிருக்குங்காலத்திலும் பந்தத்திற்கும் ஆன்மாவிற்கும் பரஸ்பரம் சம்பந்தமின்மை யின் அதற்கு நித்தியமுக்தத்தன்மை பொருந்துகின்றது என்பது பொருள். 24

அவதாரிகை

அற்றேல் எக்காலத்தில் ஆன்மாவின்கண் பந்த முளதோ அக்காலத்திலேயே அதன்கண் அதனபாவம் எங்ஙனம் பொருந்தும்? பாவாபாவங்கட்கு ஏககாலத்தில் ஏகாதிகரணத்தின்கண் விரோதமிருத்தலின் என்னுஞ் சங்கையைப் பரிகரிக்கின்றவராய் பூர்வசுலோகத்திற் கூறப் பட்ட பொருளை திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்து கின்றுர்.

சுலோகம்

नहिभूमिरूषरवतीमृगतृड् जलवाहिनीं सरितमुद्वहति ।
मृगवारिपूर परिवारवती ननदीतथोषरभुवं स्पृशति ॥

பதவுரை

ऊषरवतीभूमिः — களருடைய நிலமானது
मृगतृड्जलवाहिनीम् — கானற்சலப் பிரவாஹமுடைய
सरितम् न उद्वहति — நதியை வகிக்கின்றதில்லை
तथा मृगवारि पूर परिवारवती नदी — அப்படியே கானற்சலப் பிரவாஹ சமுதாயத்தினையுடைய நதியானது
ऊषरभुवं न स्पृशति — களர்நிலத்தைத் தொடுகின்றதில்லை.

விசேஷவுரை

இச்சுலோகத்தில் முற்பாதியால் ஆன்மாவானது உபாதியால் தன்னிடத்தில் ஆரோபிக்கப்பட்ட பந்தனத்தைத் தொடுகின்றதில்லையென்பதன்கண் திருஷ்டாந்தம் தெரிசிப்பிக்கப்பட்டது. பிற்பாதியாலோ ஆரோபிக்கப்பட்ட பந்தமானது ஆன்மாவைத் தொடுகின்றதில்லையென்பதன் கண் திருஷ்டாந்தம் தெரிசிப்பிக்கப்பட்டது எனவுணர்க.

ஈண்டு இஃது அபிப்பிராயமாம். மருபூமி முதலியவற்றில் ஜலம் முதலியவற்றின் ஆரோபகாலத்திலும் தோஷமற்ற நேத்திரமுடையவரும் விசேஷ தரிசனமுடையவருமான புருடருக்கு அப்போது அதன்கண் ஜலம் முதலியவற்றின் அபாவம் நிச்சயிக்கப்பட்டமையின் சமசத்தையினையுடைய பாவாபாவங்கட்கே ஓரிடத்தில் ஓர் காலத்தில் விரோதமாம். விஷமசத்தையினையுடையவைகட்கு விரோதமின்றுமென அங்கீகரிக்கத்தக்கது. இவ்வாறுகவே ஆன்மாவின்கண் பந்தத்திற்கு மித்தியாத் தன்மையுண்மையானும் மூன்று காலத்திலுமுள்ள அதன பாவத்திற்கு வாஸ்தவத் தன்மையுண்மையானும் அவைகட்கு ஓரிடத்தில் ஓர் காலத்தில் விரோதமின்றுமென்க. 25

அவதாரிகை

அற்றேல் एष आत्मा उत्क्रामति இவ்வான்மா மேற்செல்லுகின்றது என்பது முதலிய சுருதியால் சீவனுக்கு கிளம்புதல் போதல் வருதல்களால் சமுசாரத்தைப் பிரதிபாதித்தலால் அச் சமுசாரத்திற்கு மித்தியாத் தன்மை எங்ஙனமாமென்னுஞ் சங்கைக்கு யுத்திகளால் முதலில் அதன் அசம்பவத்தைக் கூறுகின்ருர்.

சுலோகம்

नतवक्वचिद्गमनमस्तिविभोर्नपुराष्टकस्य जडरूपभृतः ।
नचमध्यवर्ति जडचिद्वपुषोर्गमनक्षमं किमपि सम्भवति ॥

பதவுரை

विभोः तव – வியாபக வடிவ உனக்கு

क्वचित् – ஓரிடத்தும் (பரலோகம் முதலியவற்றிற்கு)

गमनं नास्ति – செல்லுதல் சம்பவிப்பதின்றும்

जडरूपभृतः – சடத்தன்மையினைத் தரித்துள்ள

पुराष्टकस्य – புர்யஷ்டகத்திற்கும்

न – கமனம் சம்பவியாது

जडचिद्वपुषोः – சடசேதனங்களின்

मध्यवर्ति किमपि–மத்தியிலிருப்பதான யாதேனும் ஓர் வஸ்து அதாவது சித் சடங்களின் வேருய் சிற்சடான்மகமான வஸ்துவும்

गमनक्षमम् – கமனயோக்கியமாய்

न च सम्भवति – சம்பவிப்பதின்றும்

விசேஷவுரை

சிதான்மாவிற்குக் கமனுதி வடிவ சம்சாரம் வாஸ்தவமா அல்லது சடதேகத்திற்குக் கமனுதிவடிவ சம்சாரம் வாஸ்தவமா அல்லது மூன்ருவதான சிற்சடான்மகத்திற்குக் கமனுதி வடிவ சம்சாரம் வாஸ்தவமா. முதற்பக்ஷம் சரியன்று. சிதான்மாவிற்கு அணுபரிமாணமும் மத்திய பரிமாணமும் பொருந்தாமையால் சருவகதமான அதற்கு வாஸ்தவ கமனுதி சம்பவியாமையின், இரண்டாவது பக்ஷமும் சரியன்று புர்யஷ்டகத்தி னுள்ளடங்கியதும் கடகுட்டியாதி போன்று சடமுமான தேகத்திற்குக் கமனுதி சம்சாரம் பொருந்தாமையின் மூன்ருவது பக்ஷமும் சரியன்று. சிற்சடான்மகத்தன்மை ஓர் வஸ்துவிற்கு விருத்தமாதலாற் சம்பவியாமையின் எதற்குக் கமனம் முதலியவையாம். ஒன்றற்கும் ஆகாதென்பது பொருள். 26

அவதாரிகை

சீவனுக்கு பிரம்ம வடிவத்தால் வியாபகத்தன்மையிருப்பினும் லிங்கதேகாவச்சின்னத்தன்மையால் பரிச்சின்னத் தன்மையுண்மையின் கமனுதி பொருத்தமாமென்னுஞ் சங்கைக்கு அங்ஙனமாயினும் உபாதிக்கே கமனமாம். ஆன்மாவிற்கு அன்ரும் என திருஷ்டாந்தத்தாற் கூறுகின்ருர்.

சுலோகம்

पुरवेष्टितं न खलु चिद्वलयं परलोकमार्गमनुसर्तुमलम् ।
घटवेष्टितं नहि नभोवलयं व्रजति व्रजत्यपि घटेऽवितते ॥

பதவுரை

पुरवेष्टितम् – லிங்கதேகத்தால் வளைபட்ட
चिद्वलयम् – சித்தின் பரிச்சின்ன வடிவம்
परलोक मार्गम् – பரலோக மார்க்கத்தில்
अनुसर्तुम् – செல்வதற்கு
न खलु अलम् – ஆற்றலுடையதன்ரும்
घटवेष्टितम् – கடத்தால் வளைபட்ட
नभो वलयम् – ஆகாசத்தின் பரிச்சின்ன வடிவம்
अवितते घटे – * அவியாபக கடமானது
व्रजति अपि – செல்கின்றதாயினும்
नहि व्रजति – செல்கின்றதில்லையன்ருே? 27

அவதாரிகை

திருஷ்டாந்தம் சம்மதமின்ருமென்னும் சங்கைக்குக் கூறுகின்ருர்.

சுலோகம்

घटएव गच्छति नभस्त्वचलं व्रजता घटेनतु ततश्च ततः ।
परिवेष्टनेन घटत्वं क्रियते घटखानि तत्र सुबहूनि ततः ॥

---

* அவியாபகம் — பரிச்சின்னம்

பதவுரை

घटएव गच्छति - கடமே செல்கின்றது

नभस्तु अचलम् - அதனால் வளைபட்ட ஆகாசமோ சலனமின்றியதாம்

அற்றேல் சுத்த ஆகாசத்திற்கு சலனத்தன்மையின்றேனும் கடாவச்சின்னாகாசம் யாண்டு யாண்டு கடம் செல்கின்றதோ ஆண்டு ஆண்டு காணப்படுதலால் அதற்கும் கமனம் அங்கீகரிக்கத்தக்கதாம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

व्रजता घटेनतु - செல்கின்ற கடத்தினாலோ

ततस्ततश्च - அவ்வவ்விடங்களில்

परिवेष्टनेन - ஆகாசம் வளைபடுதலினால்

घटखं क्रियते - கடாகாசம் செய்யப்படுகின்றது

तत्र - ஆகாசத்தின்கண் அப்போது

ततः - கடத்தின் பரிவேஷ்டனத்தால்

सुबहूनि घटखानि - அனேக கடாகாசங்கள் உண்டாகின்றன

விசேஷவுரை

ஓகாரம் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டாம். கடம் அதன் கிரியையாகிய இவற்றின் * சந்ததியால் கடத்திற்கும் ஆகாசத்திற்கும் பரஸ்பரம் சம்யோகமுண்டாகின்றமையின் அவச்சேதக பேதத்தால் அவச்சின்னாகாசமும் நானாவடிவமாகவுத்பத்தியாகின்றது. ஆதலின் யாண்டும் ஆகாசமொன்றாகவே காணப்படுதலால் அதன் கமனம் பிரமாணமற்றதாம் என்பது பொருள். 28

அவதாரிகை

அப்படியானால் லிங்கதேக கமனத்தினதீனமாக அதனவச்சின்ன சைதன்னியத்திற்கு ஆண்டு யாதொரு சென்மமுண்டோ அதுவே ஆன்மாவிற்கு பரலோக கமனமாம் என சங்கிக்கின்றான்.

---

* சந்ததி — பிரவாகம் அல்லது தொடர்ச்சி

சுலோகம்

पुरमेव गच्छति चितिस्त्वचला व्रजता पुरेण यदिस्सापि चितिः।
परिवेष्टयतेतु सुबहूनि तदा वलयानि पूर्ववदुपाश्रय से ॥

பதவுரை

पुरमेव गच्छति - லிங்கதேகமே செல்கின்றது
चितिस्तु अचला - சேதனமோ சலனமற்றதாம். அங்ஙன மாயினும்
व्रजता पुरेण - செல்கின்ற லிங்கதேகத்தால்
सापि चितिः - அந்தச் சேதனமும்
परिवेष्टयते तु - வளைபடுகின்றதேயாம்
तदा - அப்போது
सुबहूनि वलयानि - வளைவுபட்ட வனேகாகாரங்களை
पूर्ववत - பூர்வாகாரத்திற்குச் சமானமாக
यदि उपाश्रयसे - அங்கீகரிப்பாயாயின்

விசேஷவுரை

ஓகாரம் முக்கிய கமனத்தினபாவத்தையங்கீகரித்தற் பொருட்டாம். 29

அவதாரிகை

மேற்கூறியதை தூஷிக்கின்ருர்.

சுலோகம்

अकृतागमश्च कृतनिष्फलता फलतः समापतति कर्त्रगतेः ।
अपरस्य भोक्तुरुदयाच्च दिवि व्यसनस्य सन्ततिरहो विषमा ॥

பதவுரை

कर्त्रगतेः - கர்த்தாவிற்கு பரலோக கமனமின்மையினலும்
दिवि - சொர்க்கத்தின்கண்
अपरस्य भोक्तुः - கர்த்தாவினும் வேருன போக்தாவிற்கு
उदयाच्च - உற்பத்தியாதலினலும்

अकृताभ्यागमश्च – செய்யப்படாததின் அடைவும்

कृतनिष्फलता – செய்யப்பட்டதின் அழிவும்

फलतः समापतति – அர்த்தத்தால் அடைவுறுகின்றது.

விசேஷவுரை

பூமி பாகத்தில் உபாதியால் பரிச்சின்னமான சைதன்யத்திற்குப் புண்ணியம் முதலியவற்றின் கர்த்திருத்தன்மையாம் அச்சேதனத்திற்கு உனது பக்ஷத்தில் பரலோக கமனமின்மையினுல் அதன் பலபோக்திருத்தன்மையின்ரும். பரலோக கமனமுள்ள உபாதியால் அவச்சின்னமானயாதொரு சைதன்யம் பலபோக்தாவாகக் கருதப்பட்டுளதோ அதற்கு அதன் கர்த்திருத்தன்மையின்ரும் ஆதலின் செய்யப்படாததின் அடைவு முதலியவை தேகான்மவாதத்திற் போன்று பிராப்தியாகின்றது.

அற்றேல் இகலோகத்திலும் பரலோகத்திலும் சைதன்யம் சொரூபமாக ஏகமாதலின் தேகான்மவாதத்திற்போன்று தோஷத்தினடைவு எங்ஙனமாம் என்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு அர்த்தத்தால் எனப்பட்டது சுத்த சிதான்மாவிற்கு கர்த்திருத்தன்மை பொருந்தாமையின் உபாதியால் அவச்சின்னமான சேதனத்திற்கு அஃது அங்கீகரிக்கத் தக்கதாம். ஈண்டு கர்மத்தின் கர்த்தாவான அதற்கு பரலோக கமனம் முதலியவை கூறிய ரீதியால் சம்பவியாமையின் செய்யப்படாததின் அடைவு முதலிய தோஷத்தை நீக்கமுடியாமையின் அர்த்தத்தால் தேகான்மவாதத்தின் சமத்தன்மையாமென்பது பொருள்.

அற்றேல் அவச்சின்ன சைதன்யங்கட்கு பேதமிருப்பினும் சந்தானத்திற்கு அபேதமிருத்தலின் கூறிய தோஷத்திற்கு அவகாசமின்ரும் என்னுஞ் சங்கைக்கு அப்படியாளுல் பௌத்தமதத்தின் அடைவு உண்டாம் என்று கருதிக் கூறுகின்ருர்.

व्यसनस्य सन्ततिः – கவலையின் பிரவாஹம்

विषमा अहो – துரந்தமாம் கடக்கத்தகாதென்பது பொருள் கஷ்டம் என் செய்வது

## அவதாரிகை

அற்றேல் கடம் போகிறபோது அதனுல் வளைபட்ட ஆகாசம் கடத்திலுள்ள திரவியம் போன்று யாண்டும் பிரத்தியபிஞ்ஞையால் அறியப்படுதலின் அபாதிதப் பிரத்தியபிஞ்ஞையால் அதற்கு ஏகத்தன்மை சித்தித்தபோது அவசியம் வேறிடத்தில் கமனமும் அங்கீகரிக்கத்தக்கதாம். இங்ஙனம் லிங்கதேகத்தால் வளைபட்ட சைதன்னியத்திற்கும் பரலோக கமனமாம் என்னுஞ் சங்கைக்கு உபாதி சம்யோகத்திற்கு நாநாத்தன்மையுண்மையால் அதனேடு கூடிய உபஹிதங்களின் நாநாத்தன்மையினையும் திருஷ்டாந்தத்திலும் தார்ஷ்டாந்தத்திலும் பரிகரிக்கத்தகாதாம் ஆதலின் உத்தரத்தின் உற்பத்தி சமயத்தில் பூர்வத்தின் நாசம் ஆவசியகமாதலால் அதன் பிரத்தியபிஞ்ஞைக்கும் பிராமாண்யம் பொருந்தாமையால் வாஸ்தவ கமனம் பொருந்தாதெனக் கூறுகின்ருர்.

### சுலோகம்

चलनेह्युपाध्यभिमतस्य भवेज्जनितस्यतेन विगमः सुदृढम् ।
ननु कुण्डलापसरणे पुरुषादथ नप्रणस्यति न कुण्डलिता ॥

### பதவுரை

उपाध्यभिमतस्य – உபாதியாகக் கருதப்பட்ட கடத்திற்கும் லிங்கதேகத்திற்கும்

चलने हि – கமனமுண்டாகும்போது

तेन जनितस्य – அதனுல் ஜனித்ததற்கு அதாவது உபாதி விசிஷ்ட ஆகாசத்திற்கும் சேதனத்திற்கும்

विगमः – நாசம்

सुदृढं भवेत् – திடமாயுண்டாம்.

ஆண்டு விசேஷண சம்பந்தத்தின் நீக்ககாலத்தில் விசிஷ்டத்தின் நாசத்தினை திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்.

पुरुषात् – புருஷனிடத்தினின்றும்

कुण्डलापसरणे – குண்டலம் நீங்குங்காலத்தில்

अथ ननु – பின்பு

कुण्डलिता – குண்டலத்தையுடையதாந் தன்மை

नप्रणस्यति इति न – நாசமாகின்றதில்லையென்பது இல்லை, மற்றோ நாசமாகின்றதேயாம். 31

அவதாரிகை

சிதான்மாவிற்கு புரசம்பந்தத்தை யங்கீகரித்து அதன் கமனத்தால் வாஸ்தவகமனமின்றென்று கூறப்பட்டது இப்போது வியாபக ஆன்மாவிற்கு அதன் சம்பந்தமே நிருபிக்கத் தகாதபோது அதன் அதீன கமன மெங்ஙனமா மெனக் கூறுகின்றார்.

சுலோகம்

नपुरान्वयश्च तवचिद्वपुषः परमार्थतो भवतितर्कसहः ।
नभसो यथा घटसमागमनं न ततोऽपि लिङ्गघटितो व्रजसि ॥

பதவுரை

चिद्वपुषः तव - சிதான்மாவாகிய உனக்கு

पुरान्वयश्च – லிங்க வடிவபுரத்தோடு சம்பந்தமே

परमार्थतः – வாஸ்தவமாக

तर्कसहः – தர்க்கத்தை சகிப்பதாக

न भवति – இன்றாம்

ஆகாசத்திற்கு நிரவயவத் தன்மையை யங்கீகரிக்கும் மதத்தினால் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

नभसः – ஆகாசத்திற்கு

घटसमागमनम् – கடத்தோடு சம்யோகம்

यथा न तर्कसहः – எப்படி தர்க்கத்தை சகிப்பதின்றோ அது போன்று

ततोऽपि – புரத்தோடு சம்பந்தம் சம்பவியாமையாலும்

लिङ्गघटितः - புரவிசிஷ்டனாக

न व्रजसि – நீ செல்லாய். 32

அவதாரிகை

விபுத்திரவியத்திற்கு சகல மூர்த்தத் திரவிய சம்யோகித் தன்மையுண்மையின் கடசம்யுக்த ஆகாசத்திற்கு அதன் அவச்சின்னத்தன்மை பொருந்துதலின் திருஷ்டாந்தம் சம்மதமின்றுமென்னுஞ் சங்கைக்குச் கூறுகின்றார்.

சுலோகம்

नभसः प्रदेशविरहान्नभसो न घटः प्रदेश परिवेष्टनकृत् ।
ननभः समस्तमपिवेष्टयते नभसोऽवशेषविरहापतनात् ॥

பதவுரை

नभसः – ஆகாசத்திற்கு

प्रदेशविरहात् – அவயவமில்லாமையால்

नभसः घटः – ஆகாசத்திற்குக் கடமானது

नप्रदेश परिवेष्टनकृत् – ஏகதேசத்தின் அவச்சேதகமாக ஆவதின்றும்

नभः समस्तमपि. – ஆகாசம் முழுமையினையும்

न वेष्टयते – அவச்சேதஞ் செய்கின்றதில்லை

नभसः – ஆகாசத்திற்கு

अवशेष विरहापतनात् – கடத்தினும் பாஹ்யவடிவமில்லாமற் போமாதலின்

விசேஷவுரை

கடத்தின் சம்யோகம் ஆகாசத்தின் ஏகதேச சமவாயியாயிருந்துகொண்டு அதனை அவச்சேதஞ் செய்கின்றதா அல்லது ஆகாசத்தின் வியாபகமாயிருந்துகொண்டு சம்பூரண ஆகாசத்தையும் அவச்சேதஞ் செய்கின்றதா முதற்பக்ஷம் சரியன்று. அதற்குப் பிறர் மதத்தின்கண் அவயவ சத்தவாச்சிய பிரதேசமில்லாமையின், கடத்தால் வளைபட்ட பாகமே அதற்குப் பிரதேசமாமெனின் அற்றன்று, அன்னியோன்னிய ஆசிரயம் வருதலின், அதாவது கடத்தின் சம்யோகம் சித்தித்தபோது ஆகாசத்திற்கு அதனால் வளைபட்ட பாகம் சித்திக்கும். அதனால் வளைபட்ட பாகம் சித்தித்தபோது அதனை யாசிரயித்த சம்யோகசு

சித்திக்கும். இவ்வாறு அன்னியோன்னியத்தை யபேக்ஷித்தலின். இரண்டாவது பக்ஷமும் சரியன்ரும். பரிச்சின்னத் திரவியத்தின் சம்யோகத்திற்கு விபுத்திரவியத்தின் வியாபகத்தன்மை சம்பவியாமையால் ஆகாசமாத்திரத்திற்கு கடாவச்சின்னத்தன்மை பொருந்தாமையின். அன்றேல் அதாவது ஆகாசமாத்திரத்திற்குக் கடாவச்சின்னத்தன்மையை யங்கீகரிக்கின் கடாதியால் அநவச்சின்னுகாசம் இல்லாமற்போம், இவ்வாருகவே ஆலோகானவச்சின்னுகாசமில்லாமையால் ஆகாசத்தின்கண் இருள் ஓர்போதும் இராது. தேகசம்யோகத்திற்கு ஆன்ம வியாபகத்தன்மை உண்மையால் அதனதீன துக்காதிகட்கும் அதன் வியாபகத்தன்மையுண்டாதல் வேண்டும். ஆன்மவியாபகமாகவோ துக்காதியை யங்கீகரிக்கின்றதில்லை ஆதலின் ஆகாசத்திற்கு கடாவச்சின்னத்தன்மை வாஸ்தவமாகப் பொருந்துகின்றதில்லை என்பது பொருள். 33

அவதாரிகை

அப்படியாயினும்

“स समानः सन्नुभौ लोकावनुसंचरति सधीः स्वप्नो भूत्वा”

“அவன் புத்தியோடு சமானனுய் இரண்டு லோகத்திலும் சஞ்சரிக்கின்ருன். புத்தி விசிஷ்டனுகி சொப்பனத்தை யடைந்தவனுகி” என்பது முதலிய சுருதியாற் சித்தித்தமையின் ஆன்மாவிற்கு புராவச்சின்னத்தன்மை வாஸ்தவமேயாம் என்னுஞ் சங்கைக்கு முற்கூறிய விகற்பமும் தோஷமும் ஈண்டும் சமானமேயாமாதலின் ஆவித்யக (காற்பனிக) அவச்சின்னத்தன்மை முதலியவற்றை இச்சுருதி அநுவதிக்கின்றது எனக் கூறப்படும் ஆதலால் இஃது வாஸ்தவமன்ரும் எனக் கருதிக் கூறுகின்ருர்.

சுலோகம்

परमात्मभागपरिवेष्टनकृन्नपुरं तथाऽनवयवोहि परः ।
नचकृत्स्नमेव परमं पुरुषं पुरवस्तु वेष्टयितुमुत्सहते ॥

பதவுரை

तथापुरम् – அப்படியே தேகவடிவபுரமும்
परमात्मभाग परिवेष्टनकृत् न – பரமான்மாவின் பாகத்தை யவச்சேதஞ் செய்வதின்ரும்
परः अनवयवोहि – பரமான்மா நிரவயவனுதலின்
पुरंत्वस्तु – தேகமாகிய புரம்
कृत्स्नमेव परमं पुरुषम् – பரமான்மாவின் சம்பூர்ண வடிவத்தை யுமே
वेष्टयितुम् – பரிச்சேதஞ் செய்தற்கு
न च उत्सहते – சாமர்த்தியமுடையதன்ரும்

விசேஷவுரை

அப்படியே என்பது பூர்வ சுலோகத்திற் கூறிய விகற்பத் தினையும், தூஷணத்தினையும் அதிதேசஞ் செய்தற் பொருட் டாம். ஆதலின் என்பதற்கு ஆன்மாவின் நிரவயவத் தன்மை சுருதி யுக்திகளால் பிரசித்தியாமென்பது பொருள். 34

அவதாரிகை

அற்றேல் அவ்வியாகிருத ஆகாசம் முதலிய உபாதி கட்கு வியாபகத் தன்மையுண்மையின் அதனவச்சின்னத் தன்மை விபுவாகிய சிதான்மாவிற்கும் சருவ வடிவத்தாலும் பொருத்தமேயாமென்னுஞ் சங்கைக்கு அங்ஙனமாயினும் அதனவச்சின்னன் சீவனு அல்லது ஈசுரனு முதற்பக்ஷத்தில் சர்வஞ்ஞாதி வடிவ ஈசுரன் சித்திக்கமாட்டான். ஆகவே "எவன் சர்வஞ்ஞன் எவன் சர்வவித்து" "எவன் ஆன்மா விலிருந்து" என்பது முதலிய சுருதிக்கு விரோதமாமென்று கருதி முதற்பக்ஷத்தையநுவதிக்கின்றவராய்க் கூறுகின்ருர்.

சுலோகம்

यदिकृत्स्न एवपरमः पुरुषः पुरवेष्टितो भवति जीवतया ।
न तदेश्वरो भवितुमुत्सहते नच जीवजातमपरं सकलम् ॥

பதவுரை

कृत्स्न एव परमः पुरुषः–பரமான்மாவின் சம்பூர்ண வடிவமுமே

पुरवेष्टितः – புரவடிவதேகத்தாலவச்சின்னமாய்

यदि जीवतया भवति – சீவவடிவமாகுமாயின்

तदा ईश्वरः – அப்போது ஈஸ்வரன்

भवितुं न उत्सहते – இருத்தற்கு யோக்கியனுகான்.

இரண்டாவது பக்ஷத்தில் ஈஸ்வரனினின்றுமபகிருஷ்ட சீவனுடைய அபாவமும் சீவதாரதம்மியத்தின் அபாவமும் பிராப்தியாமெனக் கூறுகின்ருர்.

जीवजातम् – சீவசமுதாயமும்

अपरं सकलं न च – சீவபேதம் முதலிய அனைத்தும் இல்லாமற் போம். 35

அவதாரிகை

ஈசுரனுடைய அசத்துவ பக்ஷத்தில் வேறு தோஷத்தைக் கூறுகின்ருர்.

சுலோகம்

गुरुशिष्यसङ्गतिरतो नभवेन्नचबन्धमोक्षनियमो घटते ।
विषयं विना सकलमापतति स्फुटमत्रवेदवचनं च वृथा ॥

பதவுரை

अतः – ஈசுரனில்லாமையால்

गुरु शिष्य सङ्गतिः – குரு சிஷ்ய பரம்பரை

न भवेत् – இல்லாமற் போம்.

ஈசுரனுக்குப் போன்று இரண்யகர்ப்பர் முதலானேர்க்கு சர்வஞ்ஞத் தன்மையுண்மையின் குருத்தன்மையாமென்று சொல்லற்க.

यो ब्रह्माणं विदधाति पूर्वं योवै वेदांश्च प्रहिणोति तस्मै

எவர் முதலில் பிரம்மாவையுண்டுபண்ணினரோ, எவர் அவருக்கு வேதங்களை விளங்கும்படி செய்தனரோ என்பது முதலிய சுருதிகளால் அவரது வித்தைக்கும் ஈசுரனது அதீனத் தன்மை தோற்றுதலின் இரண்யகர்ப்பருக்கும் சுயமே குருத்தன்மை சம்பவியாமையின் என்பது கருத்து.

சீவபேதத்தின் அபாவத்தில் தோஷத்தைக் கூறுகின்றார்.

**बन्धमोक्ष नियमः च** – பந்தமோக்ஷ வியவஸ்தையும்

**न घटते** – பொருந்தாது

மேலும் ஞான கருமங்களில் ஈசுரனுக்கு அதிகாரமின்மையால் கருமஞான காண்டான்மகமான சர்வ வேதமும் வியர்த்தமாமெனக் கூறுகின்றார்.

**अत्र** – வியவஸ்தையினபாவபக்ஷத்தில்

**विषयं विना** – குரு சிஷ்யன் முதலிய விஷயமின்றி

**सकलं वेदवचनं च** – சம்பூர்ண வேதவாக்கியமும்

**स्फुटम्** – வெளிப்படையாக

**वृथा आपतति** – வீணேயாகும். 36

## அவதாரிகை

திருஷ்டாந்தத்திலும் தார்ஷ்டாந்தத்திலும் உபாதியால் அவச்சின்னத்தன்மை வாஸ்தவமாக நிரூபிக்கமுடியாதாம் எனக் கூறப்பட்டதனை முடிக்கின்றார்.

### சுலோகம்

**नपुरान्वयोऽत उपपत्तिसहः परमार्थतोऽस्ति परमार्थदृशेः ।**
**वियतो घटान्वयवदेवततः परिकल्पितं पुरसमागमनम् ॥**

### பதவுரை

**अतः** – ஆதலால் அதாவது விசாரத்தைச் சகியாமையால்

**वियतः घटान्वयवत् एव** – ஆகாசத்திற்குக் கடத்தின் சம்பத்தம் போன்றே

**परमार्थदृशेः** – சச்சிதானந்த வடிவ பரமான்மாவிற்கு

पुरान्वयः – புரத்தின் சம்பந்தம்
परमार्थतः – உண்மையாய்
उपपत्ति सहः – விசாரத்தைச் சஹிப்பதாய்
नास्ति – இன்றும்.

அப்படியானல் இரண்டிடத்தும் உபாதியால் பரிச்சின்னத் தன்மையின் ஞானம் எங்ஙனமுண்டாமென்னுஞ் சங்கைக்கு அசம்பாவிதமாயும் அநுபவிக்கப்படுகின்றதாயுமுள்ள வஸ்துவும் ஆகாசத்தில் நீலாதிபோன்று கற்பிதமாக அங்கீகரிக்கத்தக்கதாம் எனக் கூறுகின்றார்.

ततः – புர சம்பந்தம் வாஸ்தவமாயின்மையின்
पुरसमागमनम् – ஆன்மாவிற்கு புரத்தின் சம்பந்தம்
परिकल्पितम् – கற்பிதமாம். 37

அவதாரிகை

அற்றேல்

“ तदन्तरप्रतिपत्तौरंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्याम् ”
தேகாந்தரப் பிராப்தியில் பூத சூக்ஷ்மங்களோடு சம்பந்தப் பட்டவனுகியே சீவன் செல்கின்றான். இப்பொருள் எதனுல் அறியப்படுகின்றதெனின் சங்கை சமாதானங்களால் என்பது முதலியவற்றுல் சூத்திரக்காரராலேயே சீவனுக்கு சுருதியால் போதிக்கப்பட்டுள்ள பூதங்களின் பரிஷ்வங்கமும் அதனதீன கமனுதியும் நியாயங்களால் உபபாதனஞ் செய்யப்பட்டமையின் சீவனுக்கு அதன் நிவர்த்தியெங்ஙனமாம் என்னுஞ் சங்கைக்கு கடாகாசத்திற்குப் போன்று அவனுக்குக் கூறிய பிரகாரத்தால் வாஸ்தவமாகக் கமனம் முதலியவை சம்பவியாமையின் அவைகட்கு ஔபாதிகத் தன்மையை நிரூபித்தலால் மித்தியாத் தன்மையே அவரது கருத்தாம் சத்தியத் தன்மையன்றும் என்று கருதி கூறுகின்றார்.

சுலோகம்

यतएवमेतदुपपत्तिपथ नतवप्रयाति विरहय्य तमः ।
परलोकमार्गगमनं स्वतमः परिकल्पितं चलनवन्नभसः ॥

பதவுரை

यतः एवम् – யாதொரு காரணத்திஞல் இங்ஙனம்
एतद् – புரத்தின் சம்பந்தம்
तमः विरहय्य – அஞ்ஞானமன்றியில்
तव उपपत्ति पथम् – உனது விசார மார்க்கத்தினை
न प्रयाति – அடைகின்றதில்லையோ
(ततः – அக்காரணத்தால்)
नभसः चलनवत् – ஆகாசத்தின் கமனம்போன்று
परलोकमार्गगमनं – ஆன்மாவிற்கு பரலோக மார்க்க கமனமும்
स्वतमः परिकल्पितम् – தனது அஞ்ஞானத்தாற் கற்பிதமாம். 38

அவதாரிகை

அற்றேல் கடாகாச திருஷ்டாந்தத்தால் ஆன்மாவிற்குப் புரத்தினையுபாதியாகவுடைய அலீக சமுசாரத்தையங்கீகரிக்கின் அகங்காராதி வடிவ புரத்தின்கண் சைதன்யாநந்தாதி வடிவ ஆன்ம சொரூபத்தின் பிரதீதியெங்ஙனமாம். ஆகாசத்தினுபாதியான கடத்தின்கண் ஆகாசத்தின் சுபாவமான நிரூபத்தன்மை அமூர்த்தத் தன்மை முதலியது தோன்றுகிறதில்லையேயென்னுஞ் சங்கைக்கு அகங்காராதிகட்கும் ஆன்மாவிற்கும் பரஸ்பரா பேதாத்தியாசத்தின் அதீனமாக பரஸ்பர சுபாவத்தின் வியத்தியாசமாம் (மாறுபாடு) கடத்திற்கும் ஆகாசத்திற்கும் பரஸ்பராபேதாத்தியாசமின்மையின் அதன் (வியத்தியாசத்தின்) அபாவமாம் என்று கருதிக் கூறுகின்ருர்.

சுலோகம்

पुरधर्ममात्मनि विकल्प्यतथा स्वचिदात्मतां च पुरधर्मतया ।
स्वपुरं स्वयं च दृढमेकतया परिकल्पयन् व्रजसि मूढमतिः ॥

பதவுரை

आत्मनि – ஆன்மாவின் கண்
पुरधर्मम् – புரத்தின் தர்மமான சடத்தன்மை கமனுகமனம் துக்கம் முதலிய சம்சாரத்தை

विकल्प्य – கற்பித்து

स्वचिदात्मतां च – தனது சித்ரூபத்தன்மை ஆனந்தம் முதலிய வற்றையும்

पुरधर्मतया – அகங்காராதியின் தருமமாக

विकल्प्य – கற்பித்து செல்கின்றான்.

தருமாத்தியாச கற்பனையின்கண் தருமியின் அபேதாத்தியாசத்தினை ஏதுவாகக் கூறுகின்றார்.

स्वपुरं स्वयंच – அகங்காராதியினையும் ஆன்மாவினையும்

दृढम् एकतया – திடமாய் தாதான்மியமாக

परिकल्पयन् – கற்பிக்கின்றவனாய்

मूढमतिः – மூடமதியினையுடையவன் செல்கின்றானெனக் கூட்டுக.

விசேஷவுரை

தாதான்மியாத்தியாசத்தின்கண் ஏதுவினைக் கூறுகின்றார் மூடமதியினையுடையவனென. அஞ்ஞானத்தால் யதார்த்தாநுபவம் மறைக்கப்பட்டவன் என்பது பொருள்.39

அவதாரிகை

கற்பிதமாயினும் சமுசாரம் அநாதியாதலின் ஆன்மாவிற்கு நித்தியமுக்தத் தன்மையெங்ஙனமாம் என்னுஞ் சங்கைக்கு கற்பித பதார்த்தத்தின் வாஸ்தவமாகிய அபாவம் அதிஷ்டானத்தின்கண் கற்பிதமிருக்குங் காலத்திலும் உபபாதனஞ் செய்யப்பட்டமையின் ஆன்மா எப்போதும் நித்திய சுத்தாதி வடிவமாம் என திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

சுலோகம்

परिपूर्णचिद्रसघनः सततं स्वमहिम्नि तिष्ठसि निरस्तमले ।
नतथापि तत्वमिति वाक्यकृतां मतिमन्तरेण तव केवलता ॥

பதவுரை

परिपूर्णचिद्रसघनः – பரிபூர்ண ஞானானந்த கனஆன்மாவாகிய நீ

सततं निरस्तमले – எப்போதும் சம்சாரவடிவ மலமற்ற
स्वमहिम्नि तिष्ठसि – தனது மகிமையில் நிற்கின்றாய்

அப்படியானால் முமுக்ஷுக்களுக்கு சமம் தமம் முதலிய வாயிலாக சிரவணாதியின் அப்பியாசம் வீணேயாகும் என்னுஞ் சங்கைக்கு அஞ்ஞான தசையில் அனர்த்தமே அதன்கண் பிரதீதியாதலாலும் அனர்த்தப் பிரதீதி சூன்ய நிரதிசயானந்த மாத்திரானுபவ வடிவ கைவல்யம் பிரதீதியாகாமையாலும் அஞ்ஞாதமாகிய அவ்வானந்தத்திற்கு மறந்துள்ள கண்டாபரணத்திற்போன்று பிரேப்ஸை (அடையுமிச்சை) யின் விரோதித்தன்மையின்மையினாலும் அனர்த்தத்திற்குக் காரணமான அஞ்ஞானத்தினை நிவர்த்திக்கும் ஞானத்தின் பொருட்டு முமுக்ஷுக்களின் வியாபாரம் பயனுடையதேயாமெனக் கருதிக் கூறுகின்றார்.

तथापि – அங்ஙனமாயினும்
तत्त्वमिति वाक्यकृताम् – தத்துவமசி மகாவாக்கியத்தாற் செய்யப்பட்ட
मतिम् अन्तरेण – சீவப்பிரம்மங்களின் ஐக்கிய சாக்ஷாற்காரத்தாலன்றி
न तव केवलता – உனக்கு சொரூபத்தில் நிலைத்தல் வடிவ கைவல்யம் சித்திக்கிறதில்லை. 40

அவதாரிகை

அற்றேல் சாக்ஷாற்காரத்திற்கு வாக்கியத்தாற் செய்யப்பட்ட என்னும் விசேஷணம் பொருத்தமற்றதாம். அவித்தை முதலியவற்றை நிவர்த்திக்கும் சாக்ஷாற்காரம் ஆன்மாவின்கண் வேறு பிரகாரத்தாலேயே சம்பவித்தலின் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்.

சுலோகம்

न तव प्रतीचिकरणानिबहिर्विषयाणि येन करणानि सदा ।
सहजं च गाढमति मूढतमं तमइत्यतः पुरमनुव्रजसि ॥

பதவுரை

புறக்கரண உட்கரணங்களுள் யாதேனும் ஒன்றினுலுண்டான பிரம்மசாக்ஷாற்காரம் அதன் அஞ்ஞான நிவர்த்தகமாகச் சொல்லப்படுகின்றதா அல்லது சொரூப சாக்ஷாற்காரமா முதற்பக்ஷம் சரியன்று. "பரமேஸ்வரன் இந்திரியங்களை பகிர்முகமாக சிருஷ்டித்தான்" என்னும் சுருதியினுலும் அநுபவத்தினுலும் என்க. அதாவது.

येन तत्र – யாதொரு காரணத்தினுல் அஞ்ஞனுகிய நினது

करणानि – சர்வ கரணங்களும்

सदा बहिर्विषयाणि – எப்போதும் சுபாவமாகவே புறவிஷயங்களிலேயே பிரவிர்த்திப்பனவாமோ அக்காரணத்தால்

प्रतीचि करणानि न – அவிஷய ஸ்வப்ரகாச சித்ரூபப் பிரத்தியகான்மாவின்கண் அக்கரணங்கள் பிரவிர்த்தித்தற்கு ஆற்றலுடையனவன்ரும் என்பது பொருள்.

இரண்டாவது பக்ஷத்தில் சொரூபசைதன்னியத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் சஹபாவம் அநாதிகாலமாக இடையருமல் தொடர்ந்திருத்தலின் சொரூபசைதன்னியத்திற்கு அதனை நிவர்த்திக்குந்தன்மை பொருந்தாது. ஆதலின் ஆண்டு வாக்கியத்தால் செய்யப்பட்டதாகவே சாக்ஷாற்காரம் அங்கீகரிக்கத்தக்கதாம் எனக் கருதிக் கூறுகின்ருர்.

अतिमूढतमम् – அத்தியந்த நிபிட தமமாயும்

गाढम् सहजम् – திடமாயும் அநாதிசித்தமாயுமுள்ள

तमः – அஞ்ஞானம் தொடர்ந்துளது.

இங்ஙனம் இடையில் வந்த சங்கையை நிவர்த்திசெய்து கற்பித புரவடிவ வுபாதியால் ஆன்மாவின்கண் சம்சாரம் கற்பிதமாம் என பிரகிருதத்தை முடிக்கின்ருர்.

इत्यतः – கூறிப் போந்த சஹஜ அஞ்ஞானத்தால்

पुरम् अनुव्रजसि – தேகமாகிய புரத்தைப் பின்பற்றிச் செல்கின்ருய். 41

## அவதாரிகை

அற்றேல் அஞ்ஞான கற்பித வுபாதியால் ஆன்மாவின் கண் சம்சாரம் கற்பிதமாமென உனது கபோல கற்பித யுத்திகளால் என்னை வஞ்சிக்கின்ருய். இதன்கண் யாதோர் பிரமாணமுமின்ருமென்னுமிடத்துக் கூறுகின்ருர்.

### சுலோகம்

सममान इत्युपनिषद्वचनं प्रतिपादयत्युदितमर्थमतः ।
स्वमनीषिकेति न कदाचिदपि प्रतिपत्तिरत्र भवतो भवतु ॥

### பதவுரை

स समान इत्युपनिषद्वचनम् – அவன் சமானன் அதாவது புத்தியோடு தாதான்மியத்தை யடைந்தவனுய் என்னும் உபநிஷத் வாக்கியம்

उदितम् अर्थम् – மேற்கூறிய பொருளை

प्रतिपादयति – பிரதிபாதிக்கின்றது.

அவன் = யாதொரு இந்த விஞ்ஞானமயனுண்டோ என்பது முதலியவற்ருல் புத்தியாதியினின்றும் வேறு பிரிக்கப்பட்ட சிதான்மா. சமானன் = மாத்தியந்தின சாகையில் வாக்கிய சேஷத்தின்கண் सधीः (சதீ) என்று கேட்கப் படுதலால் புத்தியோடு ஐக்கியத்தை யடைந்தவனுய் उभौ लोकौ இகலோக பரலோகங்களில் புத்தியைப் பின் பற்றி சஞ்சரிக்கின்றது. இந்த சஞ்சாரமும் புத்தியினது சர்வ வியாபாராநுகரணத்திற்கும் உபலக்ஷணமாம். அதன் மித்தியாத் தன்மையினைக்கூறுகின்றது. ध्यायतीव लेलायतीव தியானஞ் செய்கின்றதுபோன்று என்பதாதி வசனம். அதாவது வாஸ்தவமாகத் தியானம் முதலியவற்றைச் செய் கின்றதில்லை. மற்றே அதனைச் செய்கின்றதுபோன்று பிராந்தியால் தோற்றுகின்றது என போன்று என்னுஞ் சத்தத்தால் பிரதீதியாதலின் ஆன்மாவின்கண் சம்சாரம் கற்பிதமாமென இந்த வசனம் பிரதிபாதிக்கின்றது என்பது பொருள்.

அதன் கற்பிதத்தன்மை பிரமாணத்தாற் சித்தித்தபோது திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

अतः – ஆதலால்
अत्र – இச் சமுசாரத்தின் மித்தியாத்தன்மையின்கண்
स्वमनीषिका इति – உமது கபோல கற்பிதமாமென்னும்
प्रतिपत्तिः – புத்தி
भवतः कदाचिदपि – உமக்கு ஓர்போதும்
न भवतु – வேண்டாம். 42

அவதாரிகை

இங்ஙனம் கடாகாசாதி திருஷ்டாந்தத்தால் ஆன்மாவிற்கு கமனம் முதலியவை கற்பிதமாமென்று கூறப்பட்டது. இப்போது रूपं रूपं प्रतिरूपो बभूव உருவந்தோறும் சமான வடிவமாயிற்று என்பது முதலிய வசனத்தால் ஜலசூரியப் பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தாலும் அதனை யுபபாதனஞ் செய்கின்றார்.

சுலோகம்

पुरहेतुकं यदभवच्च विभोः परिकल्पितं किमपि चित्सदृशम् ।
जलपात्रहेतुकमिव द्युमणेस्तदसंततं भवति तद्व्रजति ॥

பதவுரை

विभोः – அபரிச்சின்ன சுத்த சிதான்மாவிற்கு
पुरहेतुकम् – புரத்தை ஏதுவாகவுடையதாய் அதாவது அதனதீனசத்தையினையுடையதாய்
किमपि – கேவல சடரூபத்தாலும் கேவல சித்ரூபத்தாலும் நிரூபிக்கமுடியாததாய் இதனாலேயே
चित्सदृशम् – உபாதி *யுபராக அதன் தர்மவிசேஷ விசிஷ்ட சிதாபாசனென்னும் சீவபதவாச்சியமாய்

* உபராகம் = சம்பந்தம்.

यद्कल्पितं – யாதொரு வடிவம் கற்பிதமாக
अभवत् – உள்ளதோ
तद् असततं भवति –அது பரிச்சின்னமாகின்றது இதனாலேயே
तद् व्रजति – அதுவே பொய்யான கமனம் முதலியவற்றை யுடையதாகின்றது

அதன் தாதான்மியத்தால் சிதான்மாவின் கண்ணும் அது பிராந்தியாகத் தோற்றுகின்றதென்பது பொருள். பிரதிபிம்பத்திற்கு பிம்பத்தினும் விபரீதவடிவம் கற்பிதமாமென்பதன் கண்ணும் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

द्युमणेः – சூரியனுக்கு
जलपात्रहेतुकमिव – ஜலபாத்திரத்தை நிமித்தமாகவுடைய பிரதிபிம்பம் போன்று.

## விசேஷவுரை

இங்ஙனம் சித்பிரதிபிம்பத்திற்கு சித்சடான்மகத்தன்மை யிருப்பினும் சித்பிரதானத்தன்மையால் பிரதிபிம்ப வியவகாரமும் கற்பித சடப்பிரதானத் தன்மையால் ஆபாசவியவகாரமுமாம். ஆதலின் பிரதிபிம்பத்திற்கு பிம்பத்தினபேதக் கூற்றும் ஆபாசத்திற்கு மித்தியாத்தன்மைக் கூற்றும் யாண்டும் பொருத்தமாகின்றது. 43

## அவதாரிகை

அற்றேல் கூறிய வுபாதிக்கே பரலோககமனம் பொருத்தமற்றதாம். ஆகவே யதனை யுபாதியாகவுடைய ஆன்மாவின்கண் அஃது எங்ஙனமாம் சேதனத்தை யாசிரயிக்காத புத்தி முதலிய சடபதார்த்தத்திற்கு தன்னால் கமன முதலிய பிரவிருத்தி பொருந்தாமையானும் சீவனுக்கு உத்கிராந்தி காலத்தில் ஒன்றுசேர்க்கப்பட்ட கரணத்தை யுடையதாந்தன்மையால் விசேஷஞானமின்மையின் அவனுக்கு அதனைப் பிரேரிக்குந்தன்மை பொருந்தாமையானும் பரமான்மாவிற்கும் கூடத்த சின்மாத்திரத்தன்மை யுண்மையால் அதன் பிரேரணை பொருந்தாமையானும் என்னும் சங்கைக்கு மாயாசக்தியினையுடைய பரமேஸ்வரனுக்கு அத

னதீன வியாபாரத்தால் புரத்திற்கு மதனவச்சின்ன சீவனுக்கும் அதிஷ்டாத்திருத்தன்மை சம்பவித்தலால் புரமுதலியவற்றின் கமனம் பொருத்தமேயாமெனக் கூறுதற்பொருட்டு அவருக்கு அச்சக்தியினை யுடையதாந் தன்மையினைக் கூறுகின்றார்.

சுலோகம்

जडशक्तिरस्तिच परस्य विभोः परमात्मनस्तम इति प्रथिता ।
पुरमष्टकं तव यथा भवति श्रुतितः प्रसिद्धमिदमप्यखिलम् ॥

பதவுரை

यथा तव – எப்படி சீவனாகிய உனக்கு

पुरमष्टकम् भवति – புரியஷ்டகமுபாதியாகின்றதோ அதுபோன்று

परस्य विभोः – சிறந்தவனும் வியாபகனுமான

परमात्मनः – பரமான்மாவிற்கு

जडशक्तिः च अस्ति – மாயையாகிற சடசக்தியுமுளது.

சத்தியுமென்றவும்மை அதனதீன பிரேரணை வடிவ வியாபாரத்தைச் சமுச்சயம் செய்தற்பொருட்டாம். அச்சக்தியும் சீவனைக் குறித்து தமம்போன்று வஸ்து தத்துவத்தை மறைக்குந் தன்மையால்

अविद्याया मन्तरे वर्तमानाः

"அவித்தையினதீனமாயிருக்கின்றவர்கள்" என்னுஞ் சுருதியாலும் நானஞ்ஞனென்னும் அனுபவத்தாலும் சித்தித்துளது எனக் கூறுகின்றார்.

तम इति प्रथिता – அச்சத்தியானது தமமென்னும் பெயரால் பிரசித்தமாம்

சக்தியுளது என்னுங் கூற்றால் பரமான்மாவிற்கு சக்தி சம்பந்தம் வாஸ்தவமாமென்னுஞ் சங்கை சீவதிருஷ்டாந்தத்தால் நிவர்த்திக்கப்பட்டது. பரமான்மாவிற்கு சத்தியுளதென்பதன்கண் பிரமாணம் யாது? சக்தி சம்பந்தமிருக்குமாயின் அது அவனையும் சீவனைப்போன்று ஏன்

மோகிப்பிக்கின்றதில்லை. அவனுக்கு அதன் நியந்திருத் தன்மையுண்மையால் அதன் கூடத்தை (கபடக்தை) யறியுந் தன்மை யுண்மையின் வியாமோகமின்றுமெனின் அதன் நியந்திருத்தன்மையின்கண்ணேதான் யாது பிரமாணம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

इदम् अखिलमपि – பரமான்மாவிற்கு சக்தியின் சற்பாவம் அதன் நியாமகத்தன்மை முதலிய அனைத்தும்

श्रुतितः प्रसिद्धम् - சுருதியால் பிரஸித்தமாம்.

விசேஷவுரை

मायिनंतु महेश्वरम् மாயையையுடையவன் மஹேஸ்வரன். परास्य शक्तिर्विविधैव श्रूयते பரமான்மாவிற்கு நாநாவித சக்தி கேட்கப்படுகின்றது. स्वाभाविकी ज्ञानबलक्रियाच சுவாபாவிக மான ஞானம் பலம் கிரியையுமாம். यो योनिं योनिमधितिष्ठत्येकः எவ்வேக பரமான்மா மாயாசத்தியாகிய யோனிகடோறும் நியாமகனுகின்றனனே என்பது முதலிய சுருதிகளால் கூறிய பொருளின் சித்தியாமென்பது பொருள். 44

அவதாரிகை

அற்றேல்

न तस्य कार्यं करणंच विद्यते ।

பரமான்மாவிற்குக் காரியமும் கரணமுமின்றும் என்பது முதலிய சுருதியினுல் பரமான்மாவிற்கு கிருதிகர்த்தவ்யத் தன்மையின் அபாவம் பிரதீதியாதலின் அவருக்கு மாயையினுலும் புராதியின் அதிஷ்டாதிருத்தன்மை எங்ஙனம் சம்பவிக்கும் என்னுஞ் சங்கைக்கு அவருக்கு சொரூபத்தால் வாஸ்தவமாக அஃதின்றேனும் கற்பிதவடிவத்தால் அஃது பொருத்தமாமெனக் கருதி 43-வது சுலோகத்தில் புரத்தை ஏதுவாகவுடைய யாதொரு கற்பிதவடிவமுள்ளதோ என்று கூறப்பட்ட சமுசாரயோக்கிய சீவரூப திருஷ்டாந்தத்தால் சர்வாதிஷ்டாத்திருத்துவாதிக்கு யோக்கியமும் ஈஸ்வரபத வாச்சியமும் சர்வஞ்ஞத்துவ சர்வசக்தித்துவாதி விசிஷ்டான்

மகமுமான பரமான்மாவின் மாயிக ஈஸ்வரத்துவமெனப் பெயரிய வடிவத்தைக் கூறுகின்ருர்.

சுலோகம்

पुरहेतुकं तवयथाचवपु र्भवतीह जीववचसो विषयः ।
जडशक्त्युपाधिकममुष्य तथा परमेश्वरत्ववपुरुद्भवति ॥

பதவுரை

यथा – எப்படி
तव इह – அஞ்ஞனுகிய உனக்கு இச் சம்சார தசையில்
पुरहेतुकं च – சொரூபத்தை மறைக்கின்ற வஞ்ஞானத்தி னதீனமாகவே
जीववचसः विषयः – சீவசப்தத்தின் வாச்சிய
वपुर्भवति – ஆகார விசேஷமுண்டாகின்றதோ
तथा अमुष्य – அப்படி கற்பித பரோக்ஷத்தன்மையோடு கூடிய பரமான்மாவிற்கு
जडशक्त्युपाधिकम् – சொரூபத்தை மறைக்காததும் ஈஸ்வர பரதந்திரமுமான மாயையினதீனமாக
परमेश्वरत्ववपुः – சர்வாதிஷ்டாத்திருத்தன்மை முதலிய வடிவம்
उद्भवति – செகத்தின் சிருஷ்டி முதலியவற்ருல் பிரகட மாகின்றது. 45

அவதாரிகை

ஈஸ்வரனுக்கு மாயையினதீனமாகக் கூறப்பட்ட வுருவ மிருப்பினும் சீவனுக்கு அவனேடபின்னத்தன்மை யுண்மை யால் அவனததிஷ்டேயத்தன்மை எங்ஙனமாமென்னும் சங்கைக்கு அவ்வபேதத்தினஞ்ஞானத்தினுலும் விபரீதவடிவ வபிமானத்தினுலும் அவனததிஷ்டேயத்தன்மையால் சீவ னுக்கு கர்மாதீனமாக சம்சாரவடிவ வனர்த்தத்தின் சித்தி யாம் என திரண்ட பொருளைக் கூறுகின்ருர்.

சுலோகம்

पुरहेतुरूपघटितस्य दृशेः जडशक्त्युपाधिपरमेश्वरतः ।
भयमुद्भवत्यनवबोधवशादितिच त्रयीशिरसि राजपथः ॥

பதவுரை

पुरहेतुरूप घटितस्य – அஞ்ஞானத்தினதீனமான வடிவமுடைய
दृशेः – சிதான்மாவாகிய சீவனுக்கு
अनवबोधवशात् – அஞ்ஞானவசத்தால்
जडशक्त्युपाधि परमेश्वरतः – மாயையை யுபாதியாகவுடைய பரமேஸ்வரனுல்
भयम् उद्भवति – பயமுண்டாகின்றது

ஈஸ்வரனுல் பிரேரிக்கப்பட்டவனுகி சீவன் சம்சாரத்திற் சுழல்கின்ருன் என்பதன்கண்

य आत्मनि तिष्ठन्नात्मान मन्तरोयमयति

"எவன் புத்தியிலிருந்துகொண்டு ஆன்மாவை யுள்ளே பிரேரிக்கின்றனனே"

एष उ एव साधुकर्मकारयति तम् यमेभ्यो लोकेभ्य उन्निनीषते ।

" எவனை இவ்வுலகில் நின்றும் மேலுலகத்திற்குக் கொண்டு போதற்கிச்சிக்கின்றனனே அவனை இவனே புண்ணிய கர்மங்களைச் செய்விக்கின்றனன் " என்பது முதலிய சுருதி பிரமாணமாமெனக் கூறுகின்ருர்.

इतिच त्रयी शिरसि – இஃது வேதாந்தத்தின்கண்
राजपथः – ராஜமார்க்கமாம்.

விசேஷவுரை

அநேக வேதாந்த வாக்கியங்களால் சித்தித்தமையின் ராஜமார்க்கம்போன்று இப்பொருள் சம்சயமற்றதாம் என் பது கருத்து. 4

அவதாரிகை

சீவனுக்கு இகலோக பரலோகங்களிலுள்ள கர்ம பல போகம் பரமேஸ்வரனை தாதாவாகவுடையதாம் என்னுமித்

துணையே உண்மையாம். சீவன் ஈஸ்வராதிஷ்டிதனுகி செல்கின்றதில்லை என்று சிலர் கூறுகின்றனர். அவர்களை நிரோதஞ் செய்கின்றவராய்

तद्यथा अनः सुसमाहितं उत्सर्जत् यायादेवमेव अयं शारीर आत्मा प्राज्ञेनात्मनान्वारूढः उत्सर्जन्याति ।

"எப்படி உலகின்கண் வண்டிச்சக்கரம் மிக்க பாரத்தால் ஆக்கிரமிக்கப்பட்டதாகி நானுவிதமான சப்தத்தைச் செய்து கொண்டு செல்லுமோ அப்படியே இந்த லிங்க சரீர விசிஷ்டான்மாவானது சுயஞ்சோதி சுபாவ பரமான்மாவினுல் தனது சிதாபாச வாயிலால் ஆசிரயிக்கப்பட்டதாகி மரண காலத்தில் அநேகவித வேதனையால் துக்கியாகி இக்கா சத்தத்தைச் செய்துகொண்டு செல்கின்றது என்னும் சுருதியின் பொருளைத்தெரிசிப்பிக்கின்றுர்.(4-அ. 3-பி. 35-சு. பிரகதாரண்யகம்)

சுலோகம்

परमेश्वरेण विभुनारणयन् परिबृंहितः शकटवद् व्रजसि ।
शकटंहि शाकटिक योगवशाद्व्रजति स्वयं न परतन्त्रतया ॥

பதவுரை

**विभुना परमेश्वरेण** – பிரபுவாகிய பரமேஸ்வரனுல்

**परिबृंहितः** – அதிஷ்டிதனுகி (ஆசிரயிக்கப்பட்டவனுகி)

**रणयन्** – மேற்சுவாசதசையில் சகிக்கத்தகாக வேதனை வசத்தால் சத்தத்தைச் செய்கின்றவனுகி

**शकटवत्** – வண்டிச்சக்கரம் போன்று

**व्रजसि** – செல்கின்றுய்

சத்தத்தைச் செய்கின்றவனுகி யென்னுமிது உத்ஸர்ஜன் என்னும் சுருதிபதத்தால் கூறப்பட்டுளது. அங்ஙனம் கூறுதல் வைராக்கியத்தின் பொருட்டாம். சகடத்திற்கு பரமேஸ்வராதிஷ்டிதத்தன்மை அப்பிரசித்தமாம் என்னுஞ் சங்கைக்கு திருஷ்டாந்தத்தை விஸ்தரிக்கின்றுர்.

शकटम् हि – வண்டியானது
शाकटिक योगवशाद् – வண்டியிழுக்கிற மாட்டின் சம்பந்த வசத்தால்
परतन्त्रतया – பராதீனமாக
व्रजति – செல்கின்றது
स्वयं न (व्रजति) – தானே செல்கின்றதில்லை
परतन्त्रतया – பராதீனமாதலின் 47

## அவதாரிகை

அற்றேல் சகடத்திற்கு அசேதனத்தன்மை யுண்மையால் பரதந்திரத்தன்மை பொருத்தமாம்; சேதனனாகிய சீவனுக்கோ அது பொருத்தமின்றியதாம் என்னுஞ்சங்கைக்கு சேதனனாயினும் அற்பஞானமுள்ளவனாய் துர்ப்பலனாயுள்ள புருடனுக்கு அதிக ஞானமுள்ளவனாய் பிரபலனாயுள்ள புருடனது பரதந்திரத்தன்மை காணப்படுதலின் சீவனுக்கும் அஞ்ஞத்துவாதி யபிமான மிருத்தலினால் சர்வஞ்ஞாதி வடிவ ஈஸ்வரனது பரதந்திரத்தன்மை பொருத்தமேயா மென்று கருதிக் கூறுகின்றார்.

சுலோகம்

पुरवेष्टितः पुरवशानुगतः पुरतन्त्रचिन्निभ विभिन्नवपुः ।
दिवियातनां भुविचकर्मफलान्यनुभूयभूय इह सम्भवति ॥

பதவுரை

पुरवेष्टितः – அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட சொரூப முடையவனும்
पुरवशानुगतः – புத்தியாதியின் கண்ணுள்ள சிலசக்தியோடு கூடினவனும்
पुरतन्त्रचिन्निभविभिन्नवपुः – புரத்தின் பரதந்திர அதாவது அம்ஸத்துவாதி விசிஷ்ட சிதாபாசனோடு அபின்ன வடிவனுமாக சீவன் உளன். இதனால் பரதந்திரனென்பது பொருள்.

ஈஸ்வரனது பிரேரணையால் சீவனுக்கு சொர்க்க நரகங்களைக் குறித்து கமனம் சம்பவித்தபோதிலும் ஆண்டு சுக துக்க போகங்களால் புண்ணிய பாபங்கள் க்ஷீணமானதால் அத்துணையானேயே அஞ்ஞனுக்கும் சம்சார நிவர்த்தியுண்டாம் என்னுஞ் சங்கைக்கு அநாதிஜன்ம பரம்பரையில் சம்பாதிக்கப்பட்ட கர்மங்கள் அளவின்றியிருத்தலின் புசிக்கப்படாத புண்ணிய பாவங்களினுல் மீண்டும் மநுட தேகமடைவுறுதலின் அதனதீனமாகக் கர்மங்களும் அவசியமுண்டாகுமாதலின் அங்ஙனமன்றென்று கருதிக் கூறுகின்றார்.

दिवि – சுவர்க்கத்தின்கண் சுகமும்

यातनाम् – யமபுரியின் கண் யாதனையும்

भुवि च – பாரதவர்ஷத்தினும் வேறுன இலாவிருதம் முதலிய வருஷங்களில் பசுவாதி ஜன்மங்களுமாகிய

कर्मफलानि – கர்மபலன்களை

अनुभूय – அநுபவித்து

इह – பாரத வருஷத்தில் மனுஷ்யஜாதியில்

सम्भवति – பிறக்கின்றான். 48

அவதாரிகை

சுவர்க்க நரகாதி சத்தங்கள் சுகதுக்க மாத்திர வாசகங்களாதலினுலும் அவற்றின் அநுபவம் ஈண்டே சம்பவித்தலானும் கர்மவிசேஷத்தால் அடையத்தக்க தேசவிசேஷமேயின்றும். அதன்கண் பிரமாணமின்மையினுல், தூமாதி மார்க்கத்தைப் பிரதிபாதிக்கும் சுருதி அர்த்தவாதமாதலானும் அர்த்தவாதங்கட்கு விதிநிஷேத வாக்கியங்களால் அபேக்ஷிக்கப்பட்ட துதி நிந்தை மாத்திரத்தின்கண் தாற்பரியமாதலானும் சுவார்த்தத்தில் பிராமாண்யமின்மையின் என்று சிலர் கூறுகின்றனர். அவரைக் குறித்துக் கூறுகின்றார்.

சுலோகம்

सुकृतदुष्कृत कर्मवशादयं दिवमथो यमसाधनमेव वा ।
अनुभवेन समाप्य पुनर्महीतल मबोधवशादवरोहति ॥

பதவுரை

सुकृतदुष्कृत कर्मवशात् — புண்ணிய பாப கருமவசத்தால்
अयम् — இப்புருடனானவன்
दिवम् अथो — சொர்க்கத்தையாவது அல்லது
यमसादनमेव वा — நரகத்தையாவது
अनुभवेन समाप्य — அனுபவத்தால் சமாப்தி செய்து (அனுபவித்து என்பது பொருள்)
पुनः अबोधवशात — மீண்டுமஞ்ஞானவசத்தால்
महीतलम् अवरोहति — பூமியின் கண்ணிறங்கி வருகின்றான்.

விசேஷவுரை

கருத்திதுவாா் மந்திர அர்த்தவாத இதிகாச புராணங்கட்கு சுவார்த்தத்தின் கண்ணுள்ள ஔத்சர்க்கிக பிராமாண்யத்திற்கு தேவாதிகரணத்திற் கூறப்பட்ட நியாயங்களால் பாதமின்மையினுல் அவஸ்யம் அங்கீகரிக்கத் தக்கதாதலினுலும் அவைகளின்கண் கருமபல போகத்தால் அபேக்ஷிக்கப் பட்ட தேசம் உபகரண முதலிய விசேஷம் பிரதிபாதிக்கப் படுதலாலும் என்க. அன்றேல் அதாவது தேசம் உப கரணம் முதலியவற்றை அங்கீகரியாத பக்ஷத்தில் புண்ணிய பாபங்களின் தாரதம்மியாதீனமான சுகதுக்கங்களின் தாரதம்மியம் பொருந்தாமற்போம். ஆதலால் கமனம் முதலியவற்றைக் காரணமாகவுடைய சுவர்க்காதிகளின் பிராப்தியுளது. ஆதலின் கமனுதி வடிவ சமுசாரத்திற்கு ஈசுராதீனத் தன்மை பொருத்தமேயாம். ஔத்சர்க்கிகம் = சாமான்யம். 49

அவதாரிகை

அற்றேல் கேவலம் இஷ்டம் முதலிய கருமத்தைச் செய்கின்றவரும் அநிஷ்டம் முதலிய கருமத்தைச்செய்கின்றவருமா

கிய அஞ்ஞபுருஷர்கள் சந்திரலோகத்தையாவது யமபுரியை யாவது அடைந்து கருமபயனை அனுபவிக்கின்றனர். அனுப வித்தபின்பு அவர்கட்கு अथैतमेवा ध्वानं पुन निवर्तन्ते பின்பு இதே வழியிலேயே திரும்பி வருகின்றனர் என்பது முதலிய வசனத்தால் ஈண்டு இறங்கி வருதல் உண்மையின் கூறிய பிரகாரத்தால் சமுசாரத்தின் சாந்தியில்லாவிடினும் இஷ்டம் முதலிய கருமத்தோடு கூடிய சூத்திரான்மா முதலியோரின் உபாஸனையால் அர்ச்சிராதிமார்க்கத்தால் அபரப்பிரம்மத்தை யடைந்தவர்கட்கு ஆன்மதத்துவாநுபவமில்லையாயினும் அவர்கட்கு ஈண்டு திரும்பி வருதலின்ருகும்.

एतेनप्रतिपद्यमानाइमं मानवमावर्तं नावर्तन्ते

தேவயான மார்க்கத்தால் பிரம்மலோகத்திற்குச் செல்கின்ற வர்கள் இந்த மனு சம்பந்தமான சமுசாரத்தில் திரும்பி வரு கின்றதில்லை என்னுஞ் சுருதியால் ஈண்டு இறங்கி வருதலின் மையின் சமுசாரோபரமத்தின் சித்தியாம் எனின் அற்றன் றெனக் கூறுகின்ருர்.

சுலோகம்

यदिवासमुच्चयवशात् पुरुषः कमलासनं व्रजति कामुकधीः ।
पुनरेव मानवमिमंतु विना परिवर्तमा व्रजति मूढमतिः ॥

பதவுரை

यदिवा – அல்லது

कामुकधीः पुरुषः – கேவல பிரம்ம லோகத்தில் விருப்பமுள்ள புருடனுனவன்

समुच्चयवशात – கரும உபாசனைகளின் சமுச்சய வசத்தால்

कमलासनम् – பிரம்ம லோகத்தை

व्रजति तु – அடைகின்ருன் ஆனல்

इमं मानवं विना – இந்த வர்த்தமான மநு கற்பத்திலன்றி

पुनरेव परिवर्तम् – அடுத்த கர்ப்பத்தில் மீண்டும் சமுசாரத்தினை

आव्रजति – நிரந்தரமடைகின்ருன்

मूढमतिः – அஞ்ஞானியாதலின்

## விசேஷவுரை

கிரம முத்தியினையடைவிக்கின்ற தகராதியுபாசனையின்றி புண்ணிய விசேஷத்தால் பிரம்மலோகத்தை யடைந்தவர்கட்கு இந்தக் கற்பத்தில் திரும்புதலின்ரும் इमम् नावर्तन्ते இதனை மீண்டும் அடைகிறதில்லை என்னுஞ் சுருதியால் இந்தக் கற்பத்தால் விசேஷிக்கப்பட்ட ஆவிருத்தியினை நிஷேதித்தலால் கற்பந்தராவிருத்தி சூசிப்பிக்கப்படுகின்றது. அப்படிக்கன்றேல் அவர்கட்கு சமுசாரத்தை மீண்டும் அடைகிறதில்லை என்று மித்துனையானேயே ஆத்தியந்திக அநாவிருத்தி சித்தித்தலின் இந்த என்னும் விசேஷணத்திற்கு வியர்த்தத்தன்மைப் பிராப்தியாம். தத்துவஞானமின்றி சஞ்சிதமான சருவ கருமங்களின் க்ஷயம் பொருந்தாமையால் கருமாந்தரத்தின் அதீனமாக ஆவிருத்தி அவசியம் வருமாதலானும் என்க. பிரம்மலோகத்தை யடைந்தவர்கட்கு நியதமாக அநாவிருத்தியின்றென்பது பொருள். 50

## அவதாரிகை

பிரம்மலோகத்தையடைந்தவர்கட்கு புனராவிருத்தியையங்கீகரிக்கின் "अनावृत्तिः शब्दात्" திரும்புதலின்ரும் சத்தத்தால் என்னும் அதிகரணத்திற்கு விரோதமாமென்னுஞ் சங்கைக்கு கிரம முத்தியைப் பயனுகவுடையவுபாசனைகளால் பிரம்மலோகத்தையடைந்தவரும்

**कार्यात्ययेतदध्यक्षेण सहातः परमभिधानात्**

காரிய வடிவ பிரம்ம லோகத்திற்கு பிரளயமுண்டாகுங் காலத்தில் ஆண்டு உற்பன்ன சாக்ஷாற்காரமுடையவராய் அவ்வுலகின் அத்தியக்ஷரான இரண்யகருப்பரோடு கூட இவரினும் மேலான பரிசுத்த விஷ்ணுவின் பரமபதத்தையடைகின்றனர். இவ்வாறு கிரமமுத்தி அநாவிருத்தி முதலிய சுருதியால் கூறப்படுதலின் அங்கீகரிக்கத்தக்கது என்னுஞ் சூத்திரத்தின்கண் கூறப்பட்ட நியாயத்தால் அவ்வுலகின் கண்ணேயே உற்பன்னமான விவேக வைராக்கியாதியினையுடையவரும் அதன் அத்தியக்ஷரான இரண்யகருப்பரின் உபதேசத்தால் தத்துவ சாக்ஷாத்காரத்தையடைந்தவருமான புருடர்க்கு சாக்ஷாற்காரத்தின் வலிமையால் மோக்ஷமாமாதலின் அந்தியாதிகரணம் ஞானத்தாலேயே கைவல்யமா

மென்னுமிதனை விஷயஞ் செய்கின்றது எனக் கருதிக் கூறுகின்றார்.

சுலோகம்

अथवा स तत्र परमात्ममतिः परिमुच्यंते सकलबन्धनतः ।
क्रमयोग मुक्तिरुदिताश्रुतिषु प्रतिशाखमेवमुपपन्नतरा ॥

பதவுரை

अथवा सः – அல்லது பிரம்மலோகத்தையடைந்தவன்
तत्र परमात्ममतिः – ஆண்டு பிரம்மமே நானென்னுஞ் சாக்ஷாத்காரமுடைத்தானவனுய்
सकल बन्धनतः – சர்வ பந்தத்தில் நின்றும்
परिमुच्यते – விடுபடுகின்ருன்

அதன்கண் பிரமாணத்தைக் கூறுகின்ருர் :—

श्रुतिषु – பிரம்ம லோகத்தை அடைகின்ருன். அவன் மீண்டும் திரும்புகிறதில்லை என்பது முதலிய சுருதிகளில்
प्रतिशाखम् – ஒவ்வொரு சாகைகளிலும்
क्रमयोगमुक्तिः – காரிய பிரம்ம பிராப்திபூர்வகப் பரப்ரம்ம பிராப்திவடிவ யாதொரு மோக்ஷமானது
उदिता – கூறப்பட்டதோ அது
एवम् उपपन्नतरा – கூறிய வண்ணம் நன்கு பொருத்தமுடையதாம் என்பதுபொருள். 51

அவதாரிகை

இங்ஙனம் இஷ்டம் முதலிய கருமத்தைச் செய்கின்றவருக்கும் கருமத்தோடு கூடியவுபாசனையைச் செய்கின்றவருக்கும் மேலானவுலகங்களினடைவிருப்பினும் சென்ம மரணதி வடிவ சம்சாரத்தினுபரமமின்ருமென்று கூறப்பட்டது. இப்போது மனிதர்களில் பிராகிருத சனங்கள் பெரும்பான்மையராதலின் இஷ்டம் முதலிய கருமத்தின் அனுஷ்டானமே துர்லபமாம். அஃதில்லாதபோது அதனதீனமான தேவயான பிதிருயாண மார்க்கத்வயத்தின் பிராப்தி

யின்றியவராய் ராகாதியின் பரவசமுடையவராயுள்ள அவர்கட்கு பாவத்தினதிகத்தன்மை சம்பவித்தலால் அதன் வலிமையால் மீண்டும் மீண்டும் கீட பதங்காதி க்ஷுத்திர செந்து வடிவ மூன்ருவது மார்க்கத்தினையடைந்த அவர்க்கு அத்தியந்தம் கஷ்டப்பிராப்தி பரிகரிக்கத் தகாது என்று வைராக்கியத்தின் பொருட்டு கூறுகின்றவராய்

अथैतयोः पथोर्नकतरेण च न तानीमानि क्षुद्राण्यसकृतावर्तीनि भूतानि भवन्ति जायस्व म्रियस्वेत्येतत्तृतीयं स्थानम् ॥

'இனிமேற் கூறிய இரண்டு மார்க்கங்களுக்குள் ஒரு மார்க்கத்திஞல் எவர்கள் செல்லுகிறதில்லேயோ அல்லது கூறிய மார்க்கத்தின் சாதனமாக ஞானத்தையாவது கருமத்தையாவது அனுஷ்டிக்கின்றதில்லேயோ அந்த இந்த ஈ, கொசுது முதலிய ஜந்துக்கள் அடிக்கடி திரும்புதலேயுடையனவாகின்றன. மீண்டு மீண்டே பிறக்கின்றன இறக்கின்றன இச் செந்துவினடைவு முற்கூறிய இரண்டு வழியையபேக்ஷித்து மூன்ருவது ஸ்தானமாம் என்னுஞ் சுருதியின் பொருளை தெரிசிப்பிக்கின்ருர்.

சுலோகம்

देवयान पितृयाणयोः पथोर्ज्ञान कर्मरहितत्व कारणात् ।
नैकमप्यनुसरन्ति ये पुनः क्षुद्रजन्तव इहोद्भवन्ति ते ॥

பதவுரை

ये – எவர்கள்

देवयान पितृयाणयोःपथोः – அர்ச்சிராதி தூமாதியென்னும் மார்க்கங்களில்

एकमपि - ஓர் மார்க்கத்தையாவது

न अनुसरन्ति – அநுஷ்டிக்கின்றிலரோ

ते – அவர்கள்

ज्ञान कर्म रहितत्व कारणात् – உபாசனேயும் கருமாநுஷ்டானமுமில்லாமை வடிவ காரணத்தால்

इह - இப் பூலோகத்தின்கண்

क्षुद्रजन्तवः - கீட பதங்காதி வடிவமாய்

पुनः उद्भवन्ति – அடிக்கடி பிறக்கிருர்கள் 52

அவதாரிகை

இங்ஙனம் புண்ணிய பாவங்களின் பயனுன சம்சாரத்தின்கண் வைராக்கியத்தின் பொருட்டு மித்தியாத் தன்மை யனித்தியத் தன்மை சென்ம மரணங்களின் அனுபரம வடிவ துக்கத்தின் மிகுதி முதலிய தோஷத்தைக் காண்பித்து புண்ணிய முதலானவற்றிற்கும் कामान्यः कामयते मन्यमानः "எப் புருடனிஷ்ட விஷயங்களை விரும்புகின்ருனே கூறிய விஷயங்களின் குணங்களைச் சிந்திக்கின்றவனுய்" என்பது முதலிய சுருதியாற் கூறப்பட்ட காம வடிவ பிரயோஜகத்தினை தெரிசிப்பிக்கின்றவராய் முடிக்கின்ருர்.

சுலோகம்

इति कामुकस्य तव संसरणं शतशोबभूववतमूढमतेः ।
इह विप्र जन्मनि विरक्तमतिः कुरुसाधनं यदपवर्गकरम् ॥

பதவுரை

इति मूढमतेः - இவ்வாறு அஞ்ஞானமுடையவனும்

कामुकस्य – விஷயங்களில் இச்சையுடையவனுமான

तव संसरणम् – உனக்கு ஜனன மரண வடிவ சமுசாரம்

शतशः बभूव – நூற்றுக்கணக்காக உண்டாயிற்று

वत – அந்தோ பரிதாபம்

எப்படி சமுசார ஏதுவான புண்ணிய பாவங்கட்குப் பிரயோஜகம் இராகமோ அப்படி முத்தியேதுவான ஞானத்திற்குப் பிரயோஜகம் வைராக்கியமாம் என்று

परीक्ष्य लोकान् कर्म चितान् ब्राह्मणो निर्वेदमायात् ।

கருமத்தால் சம்பாதிக்கப்பட்ட உலகங்களை விசாரித்து பிராம்மணன் வைராக்கியத்தை அடைக என்பதாதி சுருதியாற் கூறப்பட்டுள்ளது. அதனைக் கூறுகின்றவராய் விரத்தனுக்கும் கருமத் தியாகமாத்திரத்தால் அபீஷ்ட சித்தியின்ரும்என்று கருதிக் கூறுகின்ருர்.

इह विप्रजन्मनि – ஈண்டு பிராம்மண ஜன்மத்தின்கண்
विरक्तमतिः – வைராக்கிய முடையவனாய்
अपवर्गकरम् – மோக்ஷத்திற்கு ஏதுவான
यत् साधनम् – யாதொரு சிரவணாதிசாதனமுண்டோ அதனை
कुरु – அநுஷ்டிப்பாய் 53

அவதாரிகை

பிரம்மபாவ வடிவ மோக்ஷத்திற்கு சாத்தியத் தன்மையின்மையின் அதன் சாதனமேயின்ளும் என்னுஞ் சங்கைக்கு அதன் அபிவியஞ்சக ஞானத்திற்கு அந்தரங்க சாதனங்கள் முமுக்ஷுவால் அநுஷ்டிக்கத்தக்கனவாமென்று கூறுகின்ளூர்.

சுலோகம்

श्रवणादिकं शमदमादिपरः परमात्मनः परमभागवतः ।
कुरु तावतापरममेवपदं परमात्मनस्त्वमवलोकयसि ॥

பதவுரை

शमदमादिपरः – சமம் தமம் முதலானவற்றை முக்கியமாக வுடையவனாய்
परम भागवतः – சகுண பரமான்மாவில் மிகவும் பக்தி யுடையவனாய்
परमात्मनः – பிரம்மத்தின்
श्रवणादिकं कुरु – சிரவணம் முதலியவற்றைச் செய்வாய்

எவனுக்கு தேவனிடத்தில் மேலான பக்தியிருக்கின்றதோ என்பதார்தி வசனத்தால் சகுண பரமான்மாவின் பக்தியும் ஞானத்திற்கு அந்தரங்க சாதனமாமென்னுங் கருத்தால் பக்தியுடையவனாயென்று கூறப்பட்டது.

சிரவணாதிகட்கு பிரமாணத் தன்மையின்மையின் அதனால் தத்துவ சாக்ஷாற்காரத்தின் உற்பத்தி எங்ஙனமாமென்னுஞ் சங்கைக்கு சிரவண பதார்த்தம் வேதாந்த கடிதமாயிருத்தலின் அந்தப் பிரமாணத்தால் அஃது பொருந்துமென்னுங் கருத்தாற் கூறுகின்ளூர்;

तावता – அத்துணையால் அதாவது சிரவணாதியால்
आत्मनः परम् – உனது அவித்தையதன் காரியத்தினும் விலக்ஷணமான
परमं पदम् एव – நிரதிசயானந்த பிரம்மத்தினையே
त्वम् अवलोकयसि – நீ சாக்ஷாற்கரிக்கின்றனை.

சாக்ஷாத்கரிப்பாய் என்பது பொருள். கூறிய விசிஷ்டாதிகாரிக்கு பிரம்மசாக்ஷாற்காரத்தில் தாமதமின்மையையுணர்த்துதற்பொருட்டு சாக்ஷாற்கரிக்கின்றனை என நிகழ் காலத்தாற் கூறினர். 54

## அவதாரிகை

பிரம்மத்தை சாக்ஷாற்கரிக்கினும் என்ன பயனுண்டாமென்னுஞ் சங்கைக்கு "எவர்கள் இதனையறிகின்றனரோ அவர்கள் அமிர்தர் ஆகின்றார்கள்." ஓ! மைத்திரேயி, இத்துணையே அமிருதத்துவமாம்" என்னுஞ் சுருதியால் சருவ துக்கரகித சுகான்மக ப்ரம்ம பாவ வடிவ அமிருதத்தன்மை அதனால் உண்டாகின்றதெனக் கருதி அஃதில்லையாயின் "மற்றையர் துக்கத்தினையே அடைகின்றனர்" என்பதாதி சுருதியால் கூறப்பட்ட சகிக்கக்கூடாத துக்கத்தின் அநுபரமத்தினை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்.

சுலோகம்

**यदितन्नपश्यसि हरेः परमं पदमम्बु शीतलमिवेद्ध शिराः ।**
**न खलुप्रदीप्त शिरसोऽस्ति सुखं तवदुःख पावक शिखाभिरहो ॥**

பதவுரை

हरेः तत् परमं पदम् – விஷ்ணுவினுடைய நிரதிசயானந்த வடிவ பரம பதத்தினை
इद्ध शिराः – வெயிலால் தபிக்கப்பட்ட சிரஸையுடையவன்
शीतलम् अम्बु इव – குளிர்ந்த ஜலத்தினைப் போன்று
यदि न पश्यसि – தெரிசிக்கின்றிலையாயின்
दुःख पावक शिखाभिः – துக்க சாமான்ய வடிவ அக்கினியின் ஆத்தியான்மிகம் முதலிய தாப விசேஷங்களாகிற ஜுவாலைகளால்

प्रदीप्तशिरसः तव – வியாபிக்கப்பட்ட சருவாங்கங்களையு
முடைய உனக்கு

सुखं न खलु अस्ति – சுகமேயின்றும்.

अहो – அந்தோ என் செய்வது.

விசேஷவுரை

துக்கத்தோடு கூடிய சுகமும் துக்க வடிவமாதலின் சுகமே யின்றென்று கூறப்பட்டது. சிரஸ் சருவாவயவங்களுக்கும் உபலக்ஷணமாம். தத்துவத்தையறிந்தவருக்குங்கூட கூறிய சமுசாரி புருடனது தெரிசனுதீனமாகத் துன்பத்தைத் தெரிவிக்கின்றூர் அந்தோ என. அநுபரமம்—உபரதி யின்மை. 55

அவதாரிகை

அற்றேல் தபிக்கப்பட்ட சிரஸையுடையவனுக்கும் குளிர்ந்த ஜலத்தின் தெரிசனமாத்திரத்தால் தாபம் நீங்காதது போல அநாதி காலமாகப் பிரவிருத்தித்த சமுசார தாபத்திற்கும் ஆன்ம தெரிசன மாத்திரத்தால் நிவிருத்தி பொருந்தாமையாலும் அதன்கண் வேறு உபாயமுமில்லாமையாலும் முடிந்த அளவில் துக்கத்தைப் பரிகரித்து துக்கான்மகமாயினும் சமுசாரத்தின்கண் விஷய சுகமே விவேகி புருடனுல் விரும்பத்தக்கதாம். ஆதலின் அதன்கண் வைராக்கியம் எங்ஙனமுண்டாமென்னுஞ் சங்கைக்கு சிரசின்கண் அக்கினி தாகத்திற்கு ஜலத்தின் அஞ்ஞான ஜன்னியத்தன்மையின்மையால் அதன் தர்சனத்தால் நிவர்த்தியின்றேனும் சம்சார தாபத்திற்கு நித்திய சுத்தாதி வடிவ ஆன்மாவின் அஞ்ஞான ஜன்னியத் தன்மையினை அநேக பிரகாரத்தாலுபபாதனஞ் செய்தமையின் அதன் தெரிசனத்தால் அதற்கு ஆத்தியந்திக நிவர்த்தி பொருந்தும்போது நித்திய நிரதிசய சுக பிரம்ம பாவத்தினனுபவ வடிவ மோக்ஷத்திற்கு ஞானமாத்திரத்தின் அதீனத் தன்மையுண்மையால் அதனை விரும்பும் புருடனுக்கு விஷய வைராக்கியத்தின் திடத்தன்மை ஆவஸ்யகமாம் என்னுங் கருத்தால் முடிக்கின்றூர்.

சுலோகம்

एवं विज्ञाय तापत्रयमतिगहनं मोहमूलं परस्मि
न्नात्मन्यात्म प्रकाशे त्वयि परम सुखे निष्कले निष्कलङ्के ।
सत्ये नित्यस्वभावे परिहृत सकलद्वैत कूटानुषङ्गे
सम्यग्ज्ञानानुरागं कुरु विषय गतं भिन्धि निर्बन्धमेनम् ॥

பதவுரை

एवम् अतिगहनम् - இந்தப்பிரகாரம் அதிநிபிடமான
तापत्रयम् — ஆத்தியான்மிக முதலிய முத்தாபத்திரையும்
मोहमूलम् विज्ञाय - அஞ்ஞான விலசிதமாமென்றறிந்து
परस्मिन् आत्मनि - பரமான்ம வடிவமும்
आत्म प्रकाशे — சுவப்பிரகாசமும்
परम सुखे — நிரதிசயானந்தமும்
निष्कले निष्कलङ्के —நிரவயமும் நிர்மலமும்
सत्ये — பாதாயோக்கிய சொரூபமும்
नित्यस्वभावे — கூடஸ்த சுபாவமும்
परिहृतसकलद्वैतकूटानुषङ्गे - சர்வதுவைத சமுதாய சம்பந்த மற்றதுமான
त्वयि — இத்தகைய வுனது சொரூபத்தில்
सम्यग्ज्ञानानुरागम् — தத்வஞானத்தின் விருப்பத்தினை
कुरु - செய்வாயாக.
निर्बन्धम् — அத்தியந்தம் பந்தத்தினைச் செய்கின்ற
विषयगतम् एनम् - விஷயத்தின்கண்ணுள்ள விருப்பத்தினை
भिन्धि - கெடுப்பாயாக.

விசேஷவுரை

ஆன்மாவின்கண் தாபத்திரயம் அஞ்ஞான விலசிதமா மென்பதன்கண் ஏது சர்வ துவைத சமுதாய சம்பந்தமற்றது என்பது. அதன்கண் வாஸ்தவமாக துவைத சம்பந்தத்தின்

அபாவத்தில் ஏதுவாக ஆன்மாவினை விசேஷிக்கின்றார் சொப் பிரகாச என்பதாதியால். சுபாவபதம் விபரீதப் பிரதீதி விரோதத்தை பரிகரித்தற்பொருட்டு சர்வ விசேஷணங் களிலும் பொருந்தத்தக்கது. 56

துவம்பத லக்ஷியத்தை வினவுதல்

அவதாரிகை

இவ்வாறு வைராக்கியத்தின் திடத்தன்மை முதலாவது என இவ்வத்தியாயத்தின் மூன்ருவது சுலோகத்தால் ரம்ஹ திபாதத்தின் பொருள் சங்கிரகிக்கப்பட்டது. அதனை சிஷ்ய னது வைராக்கியத் திடத்தன்மையின் பொருட்டு யுக்தியினுல் உபபாதனஞ் செய்து அநந்தரபாதத்தின் பொருள் இரண் டாவது தத்வம் பதார்த்த சோதனையாமென சங்கிரகிக்கப் பட்டது. அதனை விஸ்தரிக்கின்றவராய் "வினவப்படாதவர் ஆகி ஒருவருக்கும் ஒன்றையுங் கூறலாகாது" என்னும் சாஸ்திரார்த்தத்தினை சிக்ஷை செய்கின்றவராய் முதலில் குரு வின் உபரமத்தையும் சிஷ்யனது வினவையுந் தொடங்கு கின்ருர்.

சுலோகம்

इत्युक्त्वापरते गुरौ पुनरयं जिज्ञासयाप्रेरित
स्तत्वं शब्द निगद्य लक्ष्यविषयं शिष्योगुरुं पृच्छति ।
वैराग्येऽतिदृढीकृते सतियतः प्राज्ञो यतिर्मन्यते
संदीप्तं शिरसीवपावकमिदं संसारदुः खमहत् ।

பதவுரை

इति उक्त्वा – இவ்வாறு கூறி

गुरौ उपरते – குருவானவர் சாந்தியாயிருக்கும்போது

पुनः अयं शिष्यः – மீண்டும் இச்சீடனுனவன்

जिज्ञासया प्रेरितः – ஜிஞ்ஞாசையினுல் பிரேரிக்கப்பட்டவனுகி

तत्वं शब्द निगद्य लक्ष्य विषयम् – தத்துவம் பதங்களின்வாச்சி யமும் லக்ஷியமுமான யாதொரு விஷயமுண்டோ அதனை

गुरुं पृच्छति – குருவினிடத்தில் வினவுகின்ருன்.

தத்துவம் பத வாச்சியங்களால் லக்ஷியமான யாதொரு வஸ்துவுண்டோ அதனை வினவுகின்றானெனினுமாம்.

அத்தியந்தம் விரக்த புருடனுக்கு வினவுதலில் முயற்சி யெங்ஙனமாமென்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு ஜிஞ்ஞாசையினால் எனப்பட்டது. ஜிஞ்ஞாசுவுக்கும் விலம்ப மின்றி வினவின் முயற்சியில் ஏதுவினைக் கூறுகின்றார்.

वैराग्येऽतिदृढीकृतेसति – வைராக்கியம் அத்தியந்தம் திடமான போது

प्राज्ञः यतिः – பேரறிவினையுடைய சன்னியாசி

शिरसि संदीप्तं पावकमिव – சிரசின்கண் தகித்துக்கொண்டிருக்கின்ற அக்கினிபோன்று

इदंमहत्संसारदुःखम् – இந்த மகத்தான சமுசார துக்கத்தினை

यतः मन्यते – யாதொரு காரணத்தால் கருதுகின்றானோ

அக்காரணத்தால் குருவை வினவுகின்றான் என ஓட்டுக. 57

## அவதாரிகை

கூறப்பட்ட ரம்ஹதிபாதத்தின் பொருளைச் சிரவணஞ் செய்தவராயினும் சிலர் சமுசாரத்தினின்றும் வைராக்கியத்தை யும் அதன் திடத் தன்மையினையும் அடைகின்றார்கள் இல்லை. அவ்வாறு இவனுமாவனா அதாவது தத்துவோபதேசத் திற்கு யோக்கியனன்றாம் என்னும் சங்கையை நிராகரிக்கின்ற வனாய் தன்னிடத்தில் அத்தியந்த வைராக்கியத்தை சாமக் கிரியைத் தெரிசிப்பித்தல் வாயிலாக சிஷ்யன் அறிவிக்கிறான்.

சுலோகம்

वैराग्यं विषयेषु पूर्वमपिमेजातं हरेरर्चनात्
यज्ञादि क्रियया निरस्तफलया किंत्वद्यदार्ढ्यंगतम् ।
संसारस्य निरूपणेन धिगिदं कर्मादि जन्यं फलं
विश्वनश्वरमम्बुबुत् बुदसमं पद्मा सनान्तं जगत् ॥

பதவுரை

निरस्तफलया – பயனினபேக்ஷயின்றிய

यज्ञादि क्रियया – யஞ்ஞம் முதலிய கிரியையினால்

हरेः अर्चनात् – விஷ்ணுவைப் பூஜித்தலால்

विषयेषु – இகலோக பரலோக விஷயங்களில்

पूर्वमपि – முன்னமும்

मे वैराग्यं जातम् – எனக்கு வைராக்கியமுண்டாயிற்று

யக்ஞம் முதலியவற்றை அநுஷ்டிக்கின்றவருக்கும் சிலருக்கு வைராக்கியம் காணப்படாமையால் ஈசுரார்ப்பண புத்தியினாலேயே அதன் அநுஷ்டானம் அதன் சாதனமாமென்னுங் கருத்தால் விஷ்ணுவைப் பூஜித்தலால் என்று கூறப்பட்டது. அத்தகைய அநுஷ்டானத்தாலும் முன்பு பிரம்மலோக பரியந்தமான கரும பயன்களில் அநிச்சை வடிவ வைராக்கியமே யுண்டாயிற்று. இப்போதோ அவைகளில் அத்தியந்த ஜிஹாஸை வடிவ அதன் திடத்தன்மைப் பிராப்தியாயிற்று எனக் கூறுகின்றார்.

किंतु अद्य – ஆனால் இப்போது

संसारस्य निरूपणेन – சமுசாரத்தை விசாரித்தலால்

दार्ढ्यंगतम् – திடத் தன்மையை யடைந்துளது

அத்திடத்தன்மையினையே அபிநயத்தால் காட்டுகின்றார்.

कर्मादि जन्यम् – யஞ்ஞம் முதலியவற்றாலுண்டான

इदं फलम् – இந்த வனிதாதி விஷயமனைத்தும்

धिग् – சீ, சீ, அதாவது அருவருக்கத்தக்கது

पद्मासनान्तम् – பிரம்மலோக பரியந்தமான

विश्वं जगत् – சருவப் பிரபஞ்சமும்

अम्बु बुद्बुदसमम् – நீர்க்குமிழிபோன்று

नश्वरम् – நாசமுடையதாம்

ஜிஹாஸை—விடுதற்கு இச்சை

அவதாரிகை

அப்படியானல் சருவத்தினின்றும் விரக்தியுற்றவனும் சன்யாசியும் கிருதகிருத்தியனுமான உனக்கு இப்போது எதன்கண் இச்சையுளது என்னுஞ் சங்கைக்கு "துவம் பதார்த்த விவேகத்தின் பொருட்டு சருவ கருமங்களின் சன்னியாசமாம்" என்னும் வசனத்தால் துவம்பத வாச்சியார்த்தம் உலகத்தாலேயே யறியப்பட்டமையின் சருவானர்த்த சூனிய அதன் லக்ஷிய ஞானத்தின்கண் எனக்கு வாஞ்சையுளதெனக் கூறுகின்ருர்.

சுலோகம்

किंतु त्वंपदलक्ष्यमर्थमधुनाकर्तृत्व भोक्तृत्वयो
र्जाग्रद् भूगतयोरपोह मुखतोवाञ्छाऽवगन्तु मम ।
कर्तृ त्वादिकमस्य किं निजमभूत् स्वाभाविकं जाग्रतः
किंवा तत्परतः कुतश्चिदभवच्चैतन्यधातोरिति ॥

பதவுரை

किंतु – ஆனல் அதாவது சருவத்தின்கண்ணும்விராக முள்ளதாயினும்

जाग्रद्भूगतयोः – சாக்கிராவஸ்தையின் கண்ணுள்ள

कर्तृत्व भोक्तृत्वयोः – கருத்திருத்தன்மைபோக்திருத்தன்மை களின்

अपोहमुखतः – நிவாரணவாயிலாக

त्वं पदलक्ष्यम् अर्थम् – துவம்பத லக்ஷியார்த்தத்தினை

अवगन्तुम् – அறிதற்கு

अधुनामम – இப்போது எனக்கு

वाञ्छा – இச்சையுண்டாயிருக்கிறது

சொப்பனத்திலுள்ள கருத்திருத் தன்மை முதலியவை கட்கு மித்தியாத் தன்மையுண்மையால் அவற்றின் நிவர்த்தி ஆன்மாவின் கண் நிச்சயிக்கப்பட்டமையின் சாக்கிரத்தின்

கண்ணுள்ள என விசேஷிக்கப்பட்டது. அந்த இச்சை யினையே பிரகார சகிதமாகத் தெரிசிப்பிக்கின்றார்.

चैतन्यधातोः अस्य – சைதன்ய சுபாவமான இவ்வான்மாவிற்கு
जाग्रतः – சாக்கிராவஸ்தையில்
निजं कर्तृत्वादिकम् – தனது கருத்திருத்தன்மை முதலியது
किं स्वाभाविकम् अभूत् – சுவாபாவிகமா
किं वा तत् – அல்லது அஃது
परतः कुतश्चित अभवत इति – படிகத்தில் செம்மை நிறம் போன்று யாதேனுமுபாதியினுலா

## விசேஷவுரை

தனது என்பதனுல் சொரூபத்தால் அநாதி என்று வினவப்பட்டது என்னும் சங்கையுண்டாகும். அதை நிவர்த்தித்தற்பொருட்டு சுவாபாவிகமா எனப்பட்டது. அனன்யப் பிரயுக்தமென்பது பொருள். சைதன்ய சுபாவம்—சைதன்ய ஏகரசமாம். இது இரண்டாவது கோடியில் பீஜமாம். கருத்திருத்துவாதியினையுடையதாக வேறு வஸ்துவின் அதரிசனம் முதற்கோடியில் பீஜமாமென அறிக. 59

## அவதாரிகை

அற்றேல் தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களாலேயே அகருத்திராதி வடிவ பிரம்மத்தின் அபேதத்தைப் பிரதிபாதித்தலால் சீவனுக்குக் கருத்திருத்துவாதி சுவாபாவிகமன்றுமென சித்திக்கின்றது. அப்படியே "அவன் ஆண்டு யாதொன்றைக் காண்கின்ருனே அதனேடு தொடர்பின்றியவனுகின்ருன்" "இப் புருடன் அசங்கன்" என்பது முதலிய அவாந்தர வாக்கியங்களாலும் கருத்திருத்துவாதி சம்சர்க்கமற்றதாக வெளிப்படையாக சீவனுடைய சொரூபத்தைப் பிரதிபாதித்தலால் அதன்கண் ஜிஞ்ஞாசை யுனக்கு எங்ஙனமுண்டாம் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

சுலோகம்

यावत्त्वं पदलक्ष्यवस्तु विषयो बोधो नमे वर्तते
तावन्मे बधिरेषु गीतमिवतच्छ्रौतं वचोऽनर्थकम् ।
तस्मात्त्वं पदलक्ष्यवस्तुविषयः कर्तृत्वभोक्तृत्वयो-
र्जाग्रद्भूगतयो रपोह मुखतो बोधोममोत्पाद्यताम् ॥

பதவுரை

यावत् - எதுபரியந்தம்
त्वं पदलक्ष्यवस्तु विषयःबोधः - துவம் பதத்தின் லக்ஷியார்த்த விஷயக ஞானம்
मे न वर्तते - எனக்கு உண்டாகின்றதில்லையோ
तावत् मे - அதுபரியந்தம் எனக்கு
बधिरेषु गीतमिव - செவிடர்களிடத்தில் கானஞ்செய்தல் வியர்த்தமாவதுபோன்று
तत् श्रौतं वचः - தத்துவமசி முதலிய வேதாந்த வாக்கியம்
अनर्थकम् - வியர்த்தமாம்.

பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களாலுண்டான இதனை நான் செய்கின்றேன். இதனைச் செய்தேன், இனிமேல் செய்வேன் என்பதாதி யநுபவங்களாலும் "शास्त्रफलं प्रयोक्तरि" சாஸ்திரத்தின் பயன் அநுஷ்டிப்பவனிடத்தில் என்னும் நியாயத்தால் அநுக்கிரகிக்கப்பட்ட சுவர்க்கத்தை விரும்புபவன் வேள்வி செய்க என்பது முதலிய சுருதியினாலும் ஆன்மாவின்கண் மூன்று காலத்திலும் கருத்திருத்துவாதி வடிவ சமுசார சம்பந்தம் நிச்சயிக்கப்படுதலால் அதன்கண் அசம்சாரித்துவ விஷயக நூற்றுக்கணக்கான சுருதிவசனத்தாலும் நெருப்பு சூடின்றியது என்னும் வாக்கியத்தினைப் போன்று அயோக்கியத்தன்மை நிச்சய பிரதிபந்தத்தால் சமுசயமற்ற ஞானமே யுண்டாகின்றதில்லை. ஆனதால் ஆன்மாவின் அசங்கத்துவாதியினைப் பிரதிபாதிக்கின்ற

சுருதிவாக்கியம் செவிடர்கள் கேட்கின்ற சங்கீதம் போன்று அநர்த்தமாய்த் தோற்றுகின்றது. ஆதலின் அதன் கண் ஜிஞ்ஞாசை எனக்கு உண்டாகின்றது என்பது பொருள். அப்படியானல் உனக்கு இந்த தோஷத்தால் அதன் ஞானம் உண்டாகாதாயின் சுருதியினுலாவது என்னுலாவது செய்யத் தக்கது என்னையுளது என்னுஞ் சங்கைக்கு உன்னுலேயே யுக்தியினுல் அத்தோஷத்தை நீக்குதல் வாயிலாக அந்த ஞானம் சம்பாதிக்கத் தக்கதாமெனக் கூறுகின்ருர்.

तस्मात् – ஆதலால்

जाग्रद् भूगतयोः – சாக்கிராவஸ்தையிலுள்ள

कर्तृत्व भोक्तृत्वयोः – கருத்திருத்தன்மை போக்திருத்தன்மைகளின்

अपोह मुखतः – நிவர்த்தி வாயிலாக

त्वं पदलक्ष्यवस्तु विषयः बोधः – துவம்பதலக்ஷியார்த்த விஷயகஞானம்

मम उत्पाद्यताम् – எனக்கு உண்டாக்கத்தக்கதாம். 60

அவ்தாரிகை

இவ்வாறு சிஷ்யனுல் பிரார்த்திக்கப்பட்ட குருவானவர் பிரத்தியகான்மாவின் கண் சமுசாரித்துவ விஷயகப் பிரமையின் விரோதமிருத்தலால் அசமுசாரித் தன்மையினையறிய முடியாதென்று கூறப்பட்டதனை நிராகரிக்கின்றவராய் ஆன்மாவின் கண் கருத்திருத்துவாதி புத்திக்கு தேகதாதான்மிய புத்திக்குப் போன்று வலுவுள்ள அனுமான விரோதமிருத்தலின் பிராந்தித் தன்மையினை முதலில் கூறுகின்ருர்.

சுலோகம்

कर्त्रादेरवभासकत्वमगमः शुद्धः स्वयं भास्वर<br>
श्चैतन्येन निजेनतेन भवतः कर्त्रादिबुद्धिभ्रमः ।<br>
कूटस्थस्य चितात्मनस्तवकुतः कर्तृत्वभोक्तृत्वयोः<br>
शङ्काजागरितेऽपि कारकगणं कर्त्रादिकं पश्यतः ॥

பதவுரை

शुद्धः स्वयं भास्वरः - சுத்தனும் சுவயம் பிரகாசனுமாகிய நீ
निजेनचैतन्येन - உனது சொரூப வடிவ நித்திய
சைதன்னியத்தால்
कर्त्रादेः - கருத்துருத்தன்மை முதலியவற்றின்
अवभासकत्वमुअगमः - விளக்குந் தன்மையினையடைந்துள்
ளோய்
तेन भवतः - அதனுல் உனக்கு
कर्त्रादिवुद्धिः - நான்கருத்தாவென்பது முதலிய ஞானம்
भ्रमः - பிராந்தியேயாம்.

ஆன்மா கருத்துரு முதலிய வடிவமாக வாஸ்த்தவமாக வாகின்றதில்லை அதனை விளக்குவதால், எது எதனை விளக்குவதாமோ அது அதன் வடிவமாகின்றதில்லை. கடத்தைப் பார்க்கின்றவன் கடவடிவமாகாதது போன்று, கர்த்தா முதலிய வடிவம் தன்னினும் வேருன திருஷ்டாவினை யுடையது திருச்யமாதலால் சடமாதலால் கடம் போன்று என்பது முதலியவனுமானப் பிரயோகங்கட்கு அதிகவாற்ற லிருத்தலின் அவைகட்கு விரோதமாதலின் உனக்கு நான் கருத்தா போக்தா என்பது முதலிய ஞானம் பிராந்தியாம். ஆதலால் நீ சுத்தனும் நிச்ய முக்தனுமாவாய். அற்றேல் விளக்குந்தன்மையென்பது விளங்குதல் கிரியையின் கருத் துருத் தன்மையேயாம். அதனுல் பிரதிஞ்ஞைவசனத்திற் கும் ஏது வசனத்திற்கும் வியாகாதமாம் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு சொரூப வடிவ நித்ய சைதன்ய மெனப்பட்டது. அதாவது ஆன்மாவிற்கு அதன்கண் அதாவது விளங்குதல் கிரியையின்கண் கருத்துருத்தன்மை சம்பவியாமையால் அதன் (சைதன்யத்தின்) பலத்தால் ஆன் மாவின் கருத்தா முதலியவற்றின் சத்தையைப் பிரகாரமாக வுடைய சமுசயாதியின் விரோதித்தன்மையே அதனை விளக்குந் தன்மையாம். ஆதலின் கூறிய வியாகாதமின்ரும். அப்படியானுல் ஆன்மாவிற்கு ஞானம் குணமாதலின்

அதற்கு அதன் வடிவத்தன்மையின்றும் என்னுஞ் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு சுவயம் பிரகாசமெனப்பட்டது. ஆன்மாவிற்கு சுவயம்பிரகாச சித்ரூபத்தன்மை முன்பு உபபாதனஞ்செய்யப்பட்டமையானும் இனிமேல் கூறப்படுவதானும் சைதன்யம் ஆன்ம வடிவமேயாம் என்பது பொருள். இதனல் ஆன்மாவின் கண்ணேயே திருசியத்தன்மை வடிவ ஏதுவிற்கு வியபிசாரமாமென்பது நீக்கப்பட்டது. சித்ரூப வவ்வான்மாவின் கண் சைதன்யத்தின் விஷயத்தன்மை வடிவ திருச்யத்தன்மையே யில்லாமையின் என்பது கருத்து. சித்ரூப ஆன்மாவிற்கு ஓர் போதைய கிரியையின் கர்த்ருத்தன்மையும் அதன் அதீன போக்த்ருத்தன்மையும் கூடுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றூர்.

कूटस्थस्य चिदात्मनः – கூடஸ்தனுஞ் சித்வடிவனும்

कर्त्रादिकं कारकगणम्–கருத்துரு முதலிய காரகசமுதாயத்தினை

पश्यतः तत्र – காண்கின்றவனுமானவுனக்கு

जागरितेऽपि – சாக்கிராவஸ்தையின் கண்ணும்

कर्तृत्व भोक्तृत्वयोः – கருத்துருத் தன்மை போக்துருத்தன்மைகளின் விஷயகமாக

शङ्काकुतः – சங்கை எப்படியுண்டாகும்.

## விசேஷவுரை

அவனுக்கு காரியமும் கரணமுமின்றும். கூடஸ்தன் அசலன் நித்யன் என்பது முதலிய வசனங்களால் ஆன்மாவின் கண் சர்வ வியாபாரமும் நிஷேதிக்கப்படுதலானும் விஞ்ஞானம் எஞ்ஞுத்தைச் செய்கின்றது என்பது முதலிய வசனத்தால் சர்வ வியாபாரத்திற்கும் புத்தியினை கர்த்தாவாக உடையதாந்தன்மை கூறப்படுதலாலும் சாக்ஷி சேதனன் கேவலன் நிர்குணன் என்னுஞ் சுருதியால் கர்த்ரு முதலியவற்றின் சாக்ஷிக்கு அதன் வடிவத்தன்மை பொருந்தாமையானும் ஆன்மாவிற்கு சொரூபமாகக் கர்த்ருத்தன்மை முதலியவற்றின் சங்கை ஓர்போதுஞ் செய்யத்தக்கதன்று என்பது பொருள்.

## அவதாரிகை

மேலும் எவன் எவ்வியாபாரத்தை விளக்குகின்ருனே அவன் அதன்கண் கருத்தாவாவதின்ரும் எப்படி ஆகாசத்தின் கண்ணுள்ள சூரியனுனவன் பூமியின்கண்ணுள்ள சர்வ ஜனங்களின் கமனுதி வியாபாரத்தை விளக்குகின்றவனுயினும் அதன் கர்த்தாவாகின்றதில்லேயோ அது போன்று என்னும் வியாப்தியானது சாதாரண ஜனங்களுக்கும் பிரசித்தமாம். ஆதலால் சிதான்மாவும் முற்கூறிய பிரகாரத்தால் வியாபாரசகித காரியகரண சங்காதத்தை விளக்குந்தன்மையால் அதன் வியாபாரத்தின் கருத்தாவாவதின்ரும் எனத் தடையின்றி அனுமானமுதயமாதலின் அதற்கு சொரூபமாக கருத்துருத்தன்மையே சம்பவியாது எனக் கூறுகின்ருர்.

## சுலோகம்

व्यापारं सकलस्य भासयति यो भास्वत्करो भास्करो
नासौ कर्तृतया जनस्य विदितो भूमौ द्युलोकस्थितः ।
एवं स्वे महिमन्यवस्थितवतः संघातमुत्पश्यतः
स्वव्यापार समन्वितं तवकुतः कर्तृत्वमुत्प्रेक्षते ॥

## பதவுரை

भास्वत्करः - பிரகாசத்தைச் செய்கின்றவனும்

द्युलोकस्थितः - சுவர்க்க லோகத்தின் கண்ணுள்ளவனுமான

यः भास्करः - யாதொரு சூரியனுனவன்

भूमौ सकलस्य जनस्य - பூமியின்கண் சர்வ ஜனங்களின்

व्यापारं भासयति - வியாபாரத்தை விளக்குகின்ருனே

असौ - அச்சூரியனுனவன்

कर्तृतया न विदितः - அவ்வியாபாரத்தின் கருத்தாவாக அறியப்படவில்லே

சூரியனுக்கு சுவர்க்க லோகத்தின் கண்ணுள்ள என்னும் விசேஷணமானது அதிக வியவதானமிருத்தலால் அவனுக்கு பூமியின் கண்ணுள்ள சனங்களின் வியாபாரத்தில் கருத்திருத்தன்மையின் சம்பாவனையேயின்ருமென்று கூறு தற்பொருட்டாம். இவ்வாறே பக்ஷத்தின் கண்ணுமாம்.

एवं स्वे महिमनि - இவ்வாறு தனது மகிமையின்கண்
अवस्थितवतः - நிலைபெற்றவனும்
संघातम् उत्पश्यतः - தேகாதி சங்காதத்தைக் காண்கின்றவனுமான
तव - உனக்கு
स्वव्यापारसमन्वितम् - தனது வியாபாரத்தோடுகூடிய
कर्तृत्वम् - கருத்திருத்தன்மை
कुतः उत्प्रेक्ष्यते - எதனால் உத்பிரேக்ஷிக்கப்படுகின்றது
உத்பிரேக்ஷிக்க யோக்கியமன்ருமென்பது பொருள்

விசேஷவுரை

தனது மகிமையின்கண் நிலைபெற்றவன் என்பதனால் கூடஸ்த அசங்க நிரதிசயானந்த சொரூபமான மகிமையில் ஸ்திதியைக் கூறினமையால் ஓர் வியாபாரத்தின் கண்ணும் கருத்திருத்தன்மையின் சம்பாவனை யேயின்ருமென்று கூறப் பட்டது. 62

அவதாரிகை

அற்றேல் ஆன்மாவிற்கு சொரூபமாக கருத்திருத்தன் மையை அங்கீகரியாவிடின் यथाकारीयथाचारीतथाभवति எவ் வித கருமமுடையவனே எவ்வித ஆசாரமுடையவனே அவ் விதனுகின்ருன் என்பது முதலிய சுருதிக்கும் कर्ता शास्त्रार्थ वत्वात् சீவன் கருத்தாவாம் யஜிக்குக என்பது முதலிய சாஸ்திரத்திற்குப் பொருளுடைமை சித்தித்தலின் என்னும் சூத்திரத்திற்கும் பீடையுண்டாகும் என்னுஞ் சங்கைக்கு இத்தகைய சுருதி ஔபாதிக கருத்திருத்தன்மை

முதலியவற்றின் அனுவாதகமாதலானும் ஆன்மாவின்கண் ஔபாதிக கருத்திருத்தன்மையுமின்ரும் என்னும் மதத்தை நிராகரித்தலில் சூத்திரத்திற்குத் தாற்பர்யமாதலானும் கூறிய தோஷமின்ருமென்று கருதி அப்படியாணுல் கருத்திருத்துவாதியினையுடைய அவ்வுபாதி யாது என்னும் ஜிஞ்ஞாசையுண்டாக "இந்தப் பூதங்களினுலுண்டாகி" "பிரகிருதியின் குணங்களால் சருவப் பிரகாரத்தாலும் கருமங்கள் செய்யப்படுகின்றன" பிரகிருதியினுலேயே செய்யப் படுகின்றன என்பது முதலிய வசனத்தால் காரியகரண சங்காதாகாரமாகப் பரிணமித்த அவித்தையின் காரியமாகிய பூதசங்காதமே கருத்திருத்துவாதியினையுடைய உபாதியாம் எனக் கூறுகின்ருர்.

சுலோகம்

भूतानि पञ्चत्वमोह समुद्भवानि
संघातरूप परिणाममुपागतानि ।
कुर्वन्ति कर्मफलमश्नुवतेचतेषां
साक्षीत्वमन्तरविलुप्त चिदेकरूपः ॥

பதவுரை

त्वमोह समुद्भवानि - உனது அஞ்ஞானத்தைக் காரணமாக வுடைய

पञ्चभूतानि - பிருதிவிமுதலிய ஐந்து பூதங்களே

संघातरूपपरिणामम् उपागतानि - தேகத்துவயாகார பரிணுமத்தையடைந்தனவாகி

कर्म कुर्वन्ति - யாகாதி கருமத்தைச் செய்கின்றன

फलं च अश्नुवते - அவையே சுவர்க்காதி பயனையும் புசிக்கின்றன

ஆன்மாவிற்கு கருத்திரு சங்காத மத்தியில் பிரவேசத் தினை நிவர்த்தி செய்கின்ருர்.

तेषां अन्तः साक्षी - தேகாதிகட்கு உள்ளே சாக்ஷியாக

त्वम् - நீ இருக்கின்ருய்

அதன்கண் ஏதுவினைக் கூறல்

अविलुप्तचितेकरसः - நித்தியசிதேக ரஸனுதலின் 63

அவதாரிகை

அற்றேல் படிகத்தின்கண் செந்நிறம் போன்று ஆன்மாவின்கண் கருத்துருத்தன்மை முதலியவை ஔபாதிகமாயின் இரண்டு செந்நிறம்பிரதீதியாவதுபோன்று இரண்டு கருத்தா ஒரே தேகத்தில் பிரதீதியாதல் வேண்டும். அப்படியே ஆலக்தகம் (செம்பஞ்சுக் கொழம்பு) முதலியவற்றில் ஸ்படிகத்தன்மை முதலியவை பிரதீதியாகாதது போன்று காரியகரண சங்காதத்தில் சேதனத்தன்மை முதலியவை பிரதீதியாகலாகாது என்னும் சங்கைக்கு சித்தின் சாயையை கிரகிக்கின்ற சங்காதத்தின்கண் சித்தினபேத மாரோபிக்கப் படுதலால் கூறிய இரண்டு தோஷமுமின்ருமென்று கருதி அதன் சாயையை கிரகின்றதன்கண் அதனுகாரத்தினுரோப மாமென்பதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்ருர்.

சுலோகம்

क्षीरस्य पूर्णे चषके निरस्तो मणिर्यथामारकतोमहार्हः ।
क्षीरं समस्तं क्षणमात्रतस्तत् करोतितच्छायमनूनतेजाः ॥

பதவுரை

क्षीरस्य पूर्णेचषके - பாலினுல் நிரம்பப்பெற்ற பாத்திரத்தின்கண்

निरस्तः महार्हः - போடப்பட்ட மிக விலைபெற்ற

मारकतः मणिः - மரகத மணியானது

यथा — எப்படி

अनूनतेजाः - அபிபவம் பண்ணப்படாத பிரபையோடு கூடியதாயிருந்துகொண்டு

तत्समस्तं क्षीरम् - அப்பால் எல்லாவற்றினையும்

क्षणमात्रतः - நொடிநேரத்தில்

तच्छायं करोति - தனது நிறமுள்ளதாகச் செய்கின்றதோ 64

அவதாரிகை

தார்ஷ்ட்டாந்தத்தினைக் கூறுகின்ருர்:—

சுலோகம்

तथातमः संभवमच्छमन्त-र्बहिर्जडिम्नाऽन्वितमन्तरात्मा ।
जगच्चिदेकच्छवि चित्स्वरूपः करोतिसांनिध्यवशेन विश्वम् ॥

பதவுரை

तथा - அப்படியே
चित्स्वरूप, अन्तरात्मा - சேதன வடிவாந்தரான்மாவானது
तमः संभवम् - அஞ்ஞானத்தாலுண்டானதும்
अन्तः अच्छम् - உள்ளே சுவச்சமானதும்
बहिः जडिम्ना अन्वितम् - வெளியில் சடத்தன்மையோடு கூடியதுமான
विश्वम् जगत् - சர்வ சகத்தினையும்
सांनिध्यवशेन - வியாபாரமின்றிய தனது சத்தை மாத்திரத்தால்
चिदेकच्छवि - சித்தினபின்ன பிரகாசமுடையதாக
करोति - செய்கின்றது.

விசேஷவுரை

அந்தரான்மா சர்வசகத்தினையும் தனது சத்தை மாத்திரத்தினல் பிரகாசமுடையதாகச் செய்கின்றது எனக் கூட்டுக. அற்றேல் சாத்துவிகமும் சொச்சமுமான வந்தக்கரண முதலியவற்றிற்கு சித்தின் சாயையை கிரகிக்கு தன்மை இருப்பினும பூதபௌதிக வான்மகமும் தாமசமும் சுவச்ச மற்றதுமான ஜகத்திற்கு அதன் சாயையை கிரகிக்குந் தன்மை எங்ஙனமாம். அதன் கிரகணமில்லாதபோது சித்தின் சம்பந்தம் பொருந்தாமையின் அதன் விளக்கமெங்ஙன மாம், அன்றியும் அதற்கு (சீவனுக்கு) ஆண்டு தூல தேகத்தின்கண் ஆன்மத் தன்மையின் அபிமானந்தான் எங்ஙனங்கூடும் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு சகத்தினை விசேஷிக்கின்ருர். உள்ளே சுவச்ச

மானதும் வெளியில் சடத்தன்மையோடு கூடியதுமென. புத்தியினும் வெளியில் புத்தி சம்பந்தமற்றதாய் அஸ்வச்ச வடிவவஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருப்பினும் உள்ளே சுவச்சமாம். அதாவது புத்தியின் தாதாத்மியத்தால் பாகியத் தன்மையும் சடத்தன்மையுமபிபவம் பண்ணப்பட்டதென்பது பொருள். ஈண்டு இஃது அபிப்பிராயமாம். அவ்வத் தேகத்திற்கு அவ்வவ்வந்தக்கரணத்தோடு கூடிய சிதான்மாவின் கண் அத்யாசமிருத்தலின் சாத்துவிக வந்தக் கரணத்தின் சம்பந்தத்தால் சடத்தன்மை யபிபூதமாம். அத்தகைய வத்தேகத்திற்கு அந்தக்கரணத்திற்கு போன்று சொச்சத்தன்மை உண்மையால் சைதன்ய பிம்பத்தை கிரகிக்குந் தன்மையுள்ளது. அதனுல் அவ்வடிவமாகத் தோற்றுதல் பால்திருஷ்டாந்தத்தால் பொருந்துகின்றது. தேகாதியின் புறம்பாயுள்ளது, பிரமாணத்தின் அதீனமான சிதாபாசனேடு கூடிய அந்தக்கரணத்தின் சம்பந்தத்தால் அபிபவம் பண்ணப்பட்ட சடத்தன்மையினையுடையதும் சிதாபாசனேடு கூடியுள்ளதுமான கடாதிகட்கும் விளக்கம் பொருந்துகின்றது. இங்ஙனம் அவ்வத் தேவதைகளின் அந்தக்கரண தாதான்மியத்தினையுடைய பிருதிவியாதிகளிலும் அவ்வத் தேவதைகட்கு ஆன்மத்தன்மையின் அபிமானம் பொருந்துகின்றது. இங்ஙனம் விராட் புருடனுக்கும் வியாபக சருவ அந்தக்கரண தாதான்மியமுடைய சருவத்தூலப் பிரபஞ்சத்தின்கண் நான் என்னும் அபிமானம் பொருந்துகின்றது. ஆதலின் சருவமும் பரிசுத்தமாம். 65

## அவதாரிகை

அற்றேல் “ नानात्मानोऽव्यवस्थात् ” ஆன்மா நானுவாம் சுக துக்காதி போக வியவஸ்தையினுல், என்னும் அக்ஷ பாதருடைய சூத்திர வசனத்தால் ஆன்மாவின்கண் வாஸ்தவமாக நாநாத்தன்மையானது அதன் லிங்கமாயுள்ள கருத்திருத்துவாதி வியவஸ்தையின் நியாயத்தால் சித்தித் தமையின் முற்கூறிய அனைத்தும் கொள்ளத்தக்கதன்ருமெனின் அற்றன்று. “ஓர் தேவன் சருவ பூதங்களிலும் மறைவுபட்டுளன்” “பரமான்மா மாயைகளால் அநேக வடிவமானுர்” “எப்படிப் பிரகாச வடிவ சூரியனுனவன்

நாநா ஜலங்களில் பிரவேசித்து நாநாவாகின்றனனே" "இங்ஙனம் இவ்வஜ ஆன்மதேவன் உபாதியினுல் நாநாவாக செய்யப்படுகின்ருன்" என்பது முதலிய ஏகான்மத் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கு விரோதம் வருதலினுலும் நியாயசூத்திரம் நிர்மூலமாதலினுலும் சூத்திரத்திற் கூறப்பட்ட ஏது வியதிகரணத்தாற் சித்தித்தமையானும் அச்சூத்திரமே பௌத்தர் முதலியோரது சூத்திரம்போன்று கொள்ளத்தக்கதன்ருமென்று கருதி அப்படியாகுல் ஆன்மாவின்கண் தேவ மனுஷிய திரியக் முதலிய பேதப்ரதீதி எங்ஙனமாமென்னும் ஜிஞ்ஞாஸையுண்டாக அதற்கும் ஔபாதிகத் தன்மையினை உபாதியினை நிர்த்தேசஞ் செய்தல் வாயிலாக திருஷ்டாந்த சகிதம் கூறுகின்ருர்.

சுலோகம்

तान्येव कार्यकरणानि बहुप्रकार भेदंचबिभ्रति भवानपि तत्र लग्नः ।
भेदेनभाति जलपात्र निविष्टमूर्ति मार्तण्डमण्डलवदन्वयमन्तरेण ॥

பதவுரை

तानि - கருத்துருத் தன்மை முதலியவற்றினுபாதியாகக் கூறப்பட்ட

कार्यकरणानि एव - காரிய கரணங்களான தேகாதி சங்காதங்களே

बहुप्रकारं - தேவ மனுஷ்யாதி வடிவ அனேகப் பிரகாரமான

भेदं चबिभ्रति - பேதத்தினையும் தரிக்கின்றன

भवानपि - நீங்களும்

तत्र - காரியகரண சங்காதத்தின்கண்

अन्वयम् अन्तरेण - வாஸ்த்தவ சம்பந்தமின்றியே

लग्नः - மித்தியா தாதான்மியத்தை யடைத்தவராய்

जलपात्रनिविष्टमूर्ति मार्तण्डमण्डलवत् - நானுசல பாத்திரத்தில் பிரவேசித்த வடிவத்தினையுடைய சூரிய மண்டலம் போன்று

भेदेन भाति - பேதமாக விளங்குகின்றீர்,

### விசேஷவுரை

பேதத்தினையுமென்றவும்மையால் கருத்துருத்தன்மையினைக் கொள்க. பின்னமான உபாதியின் சம்பந்தமின்றி பிரதீதியாகாமையின் பேதங்கட்கு மித்தியாத்தன்மையாம். ஜல பாத்திரங்களில் சூரியனது பேதம் போன்று உபாதி சம்பந்தத்தால் பேதத்தை அங்கீகரியாவிடின் சூரியனுக்கும் சொரூபமாக நானுத்தன்மை பிராப்தியாம் என்பது கருத்து. 66

### அவதாரிகை

அப்படியானல் சிதான்மாவிற்கு பிரமாத்துருத்தன்மை சுவாபாவிகமாகும். அன்னியமான அசேதன பதார்த்தத்திற்கு அஃது சம்பவியாமையின் என்னுஞ் சங்கையை நிராகரிக்கின்றவராய் சர்வசரீரங்களிலும் ஆன்மபேதத்திற்கு ஔபாதிகத் தன்மையினுல் மித்தியாத்தன்மையை பிரதிபாதித்தலின்பயனுகிய வதனைக்கிய சித்தியினைக் கூறுகின்ருர்:

### சுலோகம்

अध्यात्ममेवमधिभूतमथाधिदैवं सूत्रं विराजमपि पश्यसि साक्षिभूतः।
साक्षित्वकारणमशेष जगन्निदान मज्ञानमात्मचिदवज्वलितं सदैव ॥

### பதவுரை

**अध्यात्मम्** — அத்தியாத்மத்தையும்
**एवमधिभूतम्** - அப்படியே யதி பூதத்தையும்
**अथाधिदैवम्** - அதி தைவத்தினையும்
**सूत्रं विराजमपि** — சூத்திரான்மாவையும் விராட் புருஷனையும்
**साक्षिभूतः पश्यसि** – சாக்ஷியாயிருந்து நீ பார்க்கின்ருய்.

### விசேஷவுரை

நான் எனத் தானகத் தோன்றுகின்ற சரீராதியும் அதன் தருமமும் அத்தியான்மமாம். இது என்னுந்தன்மையால் பாஹ்யமாகத் தோற்றுகின்ற காரிய சகித ஆகாசாதி பூதங்கள் அதிபூதமாம். ஆத்யான்மிக கரண முதலியவற்றிற்கு அனுக்கிரகம் செய்கின்ற பரிகர (பரிவார)

ஆதித்யாதி தேவதைகளின் சமுதாயம் அதிதைவமாம். பிராணனை பிரதானமாகவுடைய சமஷ்டி லிங்க தேகத்தினையும் உபாதியாகவுடைய சேதனம் சூத்திரான்மாவாம். சமஷ்டி தூல தேகத்தினை யுபாதியாகவுடைய சேதனம் விராட் புருஷனும். நீயே கூடஸ்த சொரூப சைதன்யத்தினலேயே அவ்வெல்லாவற்றின் விஷயக அபிஞ்ஞை முதலிய விவகாரத்தை பிரவிருத்திப்பிக்கின்ருய். பிரமாத்துருத் தன்மையாலோவன்ரும். மாதுருவான முதலியவற்றின் சாக்ஷியின்கண் அஃது (பிரமாதுருத்தன்மை) சம்பவியாமையாலும் அதற்கு கருத்திருத்தன்மை முதலியவற்றின் சமானத் தன்மையுண்மையால் ஆபாச சகித அந்தக்கரணத்தின் தருமத்தன்மை பொருந்தலினுலும் என்க. ஆன்மாவின் கணதன் பிரதீதியோ அந்தக்கரண உபாதியை முன்னிட்டதாம். ஆதலின் அதற்கு சொரூபமாக பிரமாதுருத்தன்மை யின்ருமென்பது கருத்து. அற்றேல் கூடஸ்தவசங்க சைதன்ய வடிவவான்மாவிற்கு ஒன்ருேடும் சம்பந்தமின்மையின் சாக்ஷ்ய பிரதியோகிக சர்வ சாக்ஷித்தன்மை எங்ஙனமாம் என்னுஞ் சங்கைக்கு கூடாததைக் கூட்டுவிக்கின்ற அஞ்ஞானத்தின் அதீனமான அனிர்வசனீய சம்பந்தத்தாலேயே அதற்கு சர்வ சாக்ஷித் தன்மை பொருத்தமாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

**सदैव आत्मचिद्वज्यलितम्** – எப்போதுமான்ம சேதனத்தால் விளங்குவதும்
**अशेषजगन्निदानम्** – சர்வ செகத்திற்குக் காரணமுமான
**अज्ञानम्** – அஞ்ஞானமே
**साक्षित्वकारणम्** - சாக்ஷித் தன்மைக்கு ஏதுவாம் 67

அவதாரிகை

அற்றேல் அஞ்ஞானத்தினுலும் ஒரே தேகத்தின்கண் நான் எனது என்னுமபிமானத்தால் எனக்கு அவ்வொரு தேகத்தோடேயே சம்பந்தமாம், பிரதேகங்களோடு அன்ரும். பிரதேகங்களில் அதன் (சம்பந்தத்தின்) அனுபவமின்மையானும் பிரமாணந்தரமின்மையினுலும் என்க, ஆதலால் சர்வதேக சாக்ஷித்தன்மை எனக்கு பொருத்தமன்ரும் என்னும் சங்கைக்கு எல்லா அவ்வவ்வத் தேகாபி

மானிகட்கு உன்னோடு அபின்னத்தன்மை உண்மையின் அங்ஙனமன்றென்று கருதி சர்வ சரீரங்களிலேயும் வாஸ்தவமாக சீவனுடைய அபேதத்தின்கண் இச்சுலோகம் துடங்கி ஏழு சுலோகங்களால் அனுமான ப்ரமாணங்களை கூறுகின்றார்.

சுலோகம்

देहव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
देहव्यक्तिर्देहताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वं याता - விவாத விஷயத்தன்மையினை யடைந்துள்ள
सर्वा देहव्यक्तिः - சருவ தேகங்களும்
तावकी - உன்னுடையதேயாம்
देहताकारणेन - தேகத்தன்மை வடிவ ஏதுவால்
तावकी देहव्यक्तिः इव - உன்னுடைய தேகம் போன்று

விசேஷவுரை

உன்னால் என்னுடையது இத்தேகம் என்று நிச்சயிக்கப்பட்ட தேகத்தினும் வேறான சருவ தேகங்களும் உன்னுடைய ஆன்மாவினால் ஆன்மாவையுடையனவாம். அல்லது உனக்கே போகாயதனங்களாம். தேகமாதலால் உன்னால் அவ்வாறு நிச்சயிக்கப்பட்ட உன்னுடைய தேகம்போன்று என்பது பொருள். அப்படியானால் எனக்கு சருவ தேகங்களிலுமுள்ள போகங்களின் அனுசந்தானமுண்டாதல் வேண்டும் என்னுஞ் சங்கைக்கு இந்த அந்தக்கரண விசிட்டனாகிய நினக்கு பரிச்சின்னத் தன்மையுண்மையால் சர்வ போகங்களோடு சம்பந்தமின்மையின் அவற்றின் அனுசந்தானமின்றாம். அந்தக்கரணத்தால் உபலக்ஷிக்கப்பட்ட சின்மாத்ரவடிவ உனக்கு சருவசாக்ஷித்தன்மையுண்மையால் சருவத்தின் அனுசந்தானமிஷ்டமேயாம். ஆதலால் அதற்கு சருவ சரீரங்களிலும் ஐக்கியத்தை அங்கீகரிப்பதில் யாதொரு பாதகமுமின்றாம் என்னுங் கருத்தால் அதனை முடிக்கின்றார்.

तस्मात् - ஆதலால்

सर्वभूतस्य: - சருவ தேகங்களிலுமுள்ள

आत्मा एकः - ஆன்மா ஒருவனேயாம்

இவ்வாறு பின்சுலோகங்களிலும் அறிக. 68

அவதாரிகை

இங்ஙனம் தேகத்திற்குப் போன்றே ஓரான்ம சம்பந்தித் தன்மையால் நிச்சயிக்கப்பட்ட ஓர் வியத்தி திருஷ்டாந்தத் தால் அதனினும் வேருனவையும் அதன் சாதியினையுடைய வையும் அனேகான்ம சம்பந்தித்தன்மையால் விவாதத் திற்கு விஷயமானவையுமான வஸ்துக்களில் அதன் ஜாதி யினை உடையதாந் தன்மை வடிவ ஏதுவால் அவ்வோர் ஆன்ம சம்பந்தித்தன்மை அனுமிக்கத்தக்கது. அதனுல் சருவதேகங்களிலும் விவாத விஷயமான ஆன்மாவின் அபேதம் வாஸ்தவமாக அவசியம் அங்கீரிக்கத்தக்கது என்று கருதி தருமியின் உபஸ்திதிக்ரமத்தால் சில அனு மானங்களைத் தெரிசிப்பிக்கின்ருர்.

சுலோகம்

संविद्वयक्ति विप्रतीत्यास्पदत्वं यातासर्वा तावकीतावकीव ।
संविद्वयक्तिः संविदात्मत्वहेतोस्तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वं याता - விவாத விஷயத் தன்மையினை யடைந்துள்ள

सर्वासंविद्वयक्तिः - சருவசம்வித் வியத்தியும்

तावकी - உன்னுடையதாம்

संविदात्मत्वहेतोः - சம்வித் வடிவமாதலால்

तावकी संविद्वयक्तिरिव - உனது சம்வித் வியத்திபோன்று

तस्माद् - ஆதலால்

सर्वभूतस्थः - சருவ தேகங்களிலுமுள்ள

आत्मा एकः - ஆன்மா ஒருவனேயாம்

வைதிகரால் கருதப்பட்டுள்ள சுவப்ரகாசஸ்புரணம் சம்வித் சப்தத்தின் பொருளாம். மற்றது முன்போன்று. 69

சுலோகம்

बुद्धिव्यक्ति विप्रतीत्यास्पदत्वं यातासर्वातावकीतावकीव ।
बुद्धिव्यक्तिर्बुद्धिताकारणे न तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वं याता - விவாத விஷயத்தன்மையினை யடைந்துள்ள

सर्वाबुद्धिव्यक्तिः - சருவ புத்திவியத்தியும்

तावकी - உன்னுடையதாம்

बुद्धिताकारणेन - புத்தித் தன்மை வடிவ ஏதுவால்

तावकी बुद्धिव्यक्तिरिव - உனது புத்தி வியத்தி போன்று

तस्माद् - ஆதலால்

सर्वभूतस्थः - சருவ பூதங்களிலுமுள்ள

आत्मा एकः - ஆன்மா ஒருவனேயாம்.

சாங்கியன் யோகி வேதாந்தியாகிய இவரது சம்மதமான புத்தி, புத்தி சத்தத்திற்குப் பொருளாம். 70

சுலோகம்

अक्षव्यक्ति विप्रतीत्यास्पदत्वं याता सर्वातावकीतावकीव ।
अक्षव्यक्तिस्त्व क्षताकरणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वं - விவாத விஷயத் தன்மையினை

याता - அடைந்துள்ள

सर्वाअक्षव्यक्तिः - சருவ அக்ஷவியத்தியும்

तावकी - உன்னுடையதாம்

अक्षताकारणेन - அக்ஷத்தன்மை வடிவ ஏதுவால்

तावकी अक्षव्यक्तिरिव – உனது அக்ஷவியத்திபோன்று
तस्मात् - ஆதலால்
सर्वभूतस्थः - சருவப் பிராணிகளிடத்திலுமுள்ள
आत्म एकः – ஆன்மா ஒருவனேயாம்

விப்பிரதிபன்ன இந்திரிய சமுதாயத்தையாவது அல்லது ஒவ்வோர் நேத்திராதியினையாவது யுத்தேசித்து அக்ஷவியத்தி எனப்பட்டது. 71

சுலோகம்

ज्ञानव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं यातासर्वातावकी तावकीव ।
ज्ञानव्यक्तिर्ज्ञानताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वम् - விவாத விஷயத் தன்மையினை
याता - அடைந்துள்ள
सर्वाज्ञानव्यक्तिः - சருவ ஞான வியக்தியும்
तावकी - உன்னுடையதாம்
ज्ञानताकारणेन - ஞானத்தன்மை வடிவ ஏதுவால்
तावकी ज्ञानव्यक्तिरिव - உனது ஞானவியத்திபோன்று
तस्मात् - ஆதலால்
सर्वभूतस्थः - சருவப் பிராணிகளிடத்திலுமுள்ள
आत्मा एकः – ஆன்மா ஒருவனேயாம்
சடஞானம் ஞானசத்தத்திற்குப் பொருளாம். 72

சுலோகம்

रागव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं यातासर्वातावकीतावकीव ।
रागव्यक्ती रागताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वम् - விவாத விஷயத்தன்மையினை
याता – அடைந்துள்ள
सर्वारागव्यक्तिः – சருவ இச்சைகளும்
तावकी - உன்னுடையதாம்
रागताकारणेन - இச்சைத் தன்மை வடிவஏதுவால்
तावकीरागव्यक्तिरिव - உனது இச்சை வியத்திபோன்று
तस्मात् – ஆதலால்
सर्वभूतस्थः – சருவப் பிராணிகளிடத்திலுமுள்ள
आत्मा एकः – ஆன்மா ஒருவனேயாம். 73

சுலோகம்

द्वेषव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकीतावकीव ।
द्वेषव्यक्तिर्द्वेषता कारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः ॥

பதவுரை

विप्रतीत्यास्पदत्वम् – விவாத விஷயத் தன்மையினை
याता – அடைந்துள்ள
सर्वाद्वेषव्यक्तिः - சருவ துவேஷ வியத்தியும்
तावकी - உன்னுடையதாம்
द्वेषता कारणेन – துவேஷத் தன்மை வடிவ ஏதுவால்
तावकीद्वेषव्यक्तिरिव - உனது துவேஷவியத்தி போன்று
तस्मात – ஆதலால்
सर्वभूतस्थः - சருவப் பிராணிகளிடத்திலுமுள்ள
आत्मा एकः – ஆன்மா ஒருவனேயாம்.

துவேஷ சப்தத்தின் பொருள் வெளிப்படையேயாம். இவ்வாறே சுகம் துக்கம் பிரயத்தினம் தருமம் அதருமம் முதலிய அனைத்தையும் பக்ஷமாக்கி ஆன்மாவின் ஒருமை அனுமிக்கத்தக்கது என்பது கருத்து. 74

அவதாரிகை

அற்றேல் கூறிய பிரகாரத்தால் ஒரே ஆன்மாவிற்கு இராகத்வேஷாதியினையுடையதாந் தன்மையால் அதன் நியத (வியாபக) கருத்திருத்துவாதி சருவ சம்சாரமும் அதற்கே சித்திக்குமாதலின் சாந்திகருமத்தின்கண் வேதாலம் புறப்பட்டது போன்று ஆகும். அகங்காரத்திற்கே இராகம் முதலிய தருமங்களாம். அதன் நியத சமுசாரமும் அதற்கேயாம். அசங்கமும் அதன சாக்ஷியுமான சிதான்மாவிற்கன்றும் என்று சொல்லற்க, அவ்வாறுயின் கூறிய அனுமானங்களால் அதற்கேயாண்டும் ஒருமை சாதிக்கப்பட்டதாகும். அதினினும் வேருன ஆன்மாவிற்கு அன்றுகும் ஆதலின் அயுக்தமாமெனனுஞ் சங்கைக்கு வாஸ்தவமாக கூறிய வடிவமுள்ளதாயினும் ஆன்மாவிற்கு அவித்தையினுற் செய்யப்பட்ட இராகாதியினையுடைய அகங்காரத்தின தாதான்மியாதீனமாக இராகாதியின் சம்பந்தம் பிராதிபாசிகமாக அங்கீகரிக்கப்படுகின்றதேயாம். அதாவது கூறிய அனுமானங்களால் அத்தகைய இராகாதியின் சம்பந்தத்தை அனுவாதஞ் செய்து அதன் சாக்ஷிக்கே ஒருமை சாதிக்கப்படுகின்றது. அகங்காரத்திற்கோ தேகந்தோறும் தனது சமான சத்தையினையுடைய பேதத்தை உடையதாந் தன்மை பிறிதோராற்றுற பெறப்படாத அனுபவாதியினுற் சித்தித்தமையால் கூறியவனுமானங்கட்கு அதன் விரோதமிருத்தலால் அதன்கண் பிரவிருத்தியின்றும் ஆதலின் விஷமத்தன்மையுளது என்று கருதி சாக்ஷியின்கண் ஒருமையைச் சாதித்தலின் பயனைக் கூறுகின்ருர்.

சுலோகம்

एवं सतीद मविवेक निबन्धनं ते
कर्तृत्वमात्मनि विभाति न वस्तुभूतम् ।
बालेन कल्पितमतीव विशुद्धरूपे
व्योम्नीवभूम्निमलिनत्व मबोधहेतोः ॥

பதவுரை

एवं सति - சர்வதேகங்களிலும் சாக்ஷியின் ஒருமை சித்தித்த வழி

अतीव – அத்தியந்தம்

विशुद्धरूपे भूम्नि – பரிசுத்தமும் வியாபகமுமான

आत्मनि – ஆன்மாவின்கண்

इदं कर्तृत्वम् – இந்தக் கருத்துருத்தன்மை முதலிய சம்சாரம்

अविवेक निबन्धनम् – அஞ்ஞானத்தை நிமித்தமாகக் கொண்டே

ते विभाति – உனக்குத் தோற்றுகின்றது

न वस्तु भूतम् – வாஸ்தவமாகவின்ரும்

अतीव विशुद्धरूपे – மிகவும் பரிசுத்தமான

भूम्नि व्योम्नि – வியாபகவாகாசத்தின்கண்

बालेन अबोधहेतोः – பாலகனுல் அஞ்ஞான வடிவ ஹேதுவினுல்

कल्पितं मलिनत्वमिव – கற்பிக்கப்பட்ட நீலநிறம்போன்று உனக்குத் தோற்றுகின்றதென வொட்டுக.

விசேஷவுரை

பரிசுத்த வியாபகவென்னும் விசேஷணங்கள் இரண்டிடத்தும் சேர்க்கப்பட்டன. கருத்துருத்தன்மை முதலிய பேதத்திற்கு ஆசிரய பேதத்தின் அபேக்ஷை இருத்தலாலும் சிதான்மாவிற்கு கூறிய பிரகாரத்தால் யாண்டும் ஒருமை இருத்தலால் அதனுசிரியத்தன்மை பொருந்தாமையானும் அதன்கண் அதன் பிரதீதி ஆகாசத்தில் நீலப் பிரதீதி போன்று பிராந்தியாம் என்பது பொருள். 75

அவதாரிகை

அற்றேல் காரியகரண சங்காதத்தினும் வேருக சர்வ சாக்ஷியாகிய கிதான்மாவேயின்ரும். எதன்கண் கருத்துருத்வாதி சம்சாரம் கற்பிதமாம். சொரூபமாக கடம் குட்டியம்

முதலானவற்றிற்குச் சமானமான சங்காதத்திற்கு சித்பிரகாசத்தின் அதீனமான சைதன்யத்தன்மையின்றி உள்ளிலும் வெளியிலும் சர்வ கர்மங்களில் கருத்துருத்தன்மை பொருந்தாமையால் சுவதந்திர சிதான்மா அங்கீகரிக்கத் தக்கதேயாம் என்று சொல்லற்க சூரியன் முதலிய சடப்ரகாசங்களால் உபகரிக்கப்பட்ட இந்திரிய வியாபாரத்தின் வலிமையினுலேயே அதற்கு (தேகத்திற்கு) சர்வ வியவகாரம் சம்பவித்தலின் என்னுஞ் சங்கைக்கு சூரியாதிப் பிரகாசங்கள் இல்லாதபோதும் சொப்பனம் மனோராச்சியம் சமாதி முதலியவற்றில் வியவகாரங் காணப்படுவதால் சங்காதத்தின் கண்ணுள்ள சிதாபாசவாயிலாகவே அதனது சர்வ வியவகாரத்திற்கும் பிரயோசகமாக (நிமித்தமாக) ஓர் சிதான்மா யாண்டுமங்கீகரிக்கத் தக்கதாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்

சுலோகம்

बाह्यैरसौरविनिशाकरवह्निवाग्भिर्ज्योतिर्गणैरुपकृतोऽपिहिकर्मजातम् ।
निर्वर्तयन्न खलु तावकमन्तरेण चैतन्यसंनिधिबलं पुरुषः करोति ॥

பதவுரை

असौ पुरुषः - சங்காத வடிவ விப்புருடன்

रविनिशाकरवह्निवाग्भिः – சூரியன் சந்திரன் அக்கினி வாக்கு என்னும்

बाह्यैः ज्योतिर्गणैः – வெளியிலுள்ள பிரகாச சமுதாயத்தால்

उपकृतः – உபகரிக்கப்பட்டவனுகி

निर्वर्तयन् अपि – சிலவிடத்து கருமத்தை செய்வதிலாற்றலுடையவனுயினும்

तावकम् – உன்னுற் செய்யப்பட்ட

चैतन्यसंनिधिबलम् अन्तरेण - சைதன்னிய சன்னிதியினதீனமான சிதா பாசவடிவ வலிமையின்றி

कर्मजातम् – சருவ கருமங்களையும்

नकरोतिखलु – செய்கின்றதில்லையன்ருே ?

விசேஷவுரை

அன்றோ என்பது கூறிய உபபத்தியை சூசிப்பித்தற் பொருட்டாம்.

अस्तमित आदित्येयाज्ञवल्क्य चन्द्रमस्यस्तमितेशान्तेऽग्नौ शान्तायां वाचि किं ज्योतिरेवायं पुरुष इत्यात्मैवास्य ज्योतिर्भवतीत्यात्मनैवायं ज्योतिषाऽऽस्ते पल्ययते कर्मकुरुते विपल्येतीति

(யாஞ்ஞவல்க்யரே சூரியனும் சந்திரனும அக்னியும் வாக்கும் அஸ்தமனத்தை அடைந்தபோது இப்புருடன் எந்தச் சோதியினை சகாயமாகக்கொண்டு வியவகரிக்கின்றான் என்னும் சங்கையுண்டாக இவனுக்கு ஆன்மவடிவச் சோதியே சகாயமாக இருக்கின்றது. ஆன்மவடிவ சோதியினாலேயே இவன் உட்காருகின்றான். செல்கின்றான், சென்று வயல் முதலியவற்றில் கருமத்தைச் செய்கின்றான். மீண்டும் திரும்பி வருகின்றான்) என்னும் சுருதியை சுலோகத்திலுள்ள ஹி என்னும் சத்தம் சூசிப்பிக்கின்றது. 76

அவதாரிகை

அற்றேல் தேகாதி சங்காதத்தின் கண்ணுள்ள கருத்திருத்தன்மை முதலியவற்றிற்கு நிமித்தமான யாதொரு சைதன்யச் சோதியுண்டோ அது அதன் தருமமாய் அதன் அந்தர்பூதமாகவே இருக்கட்டுமே அது சுதந்திரமாகத் தோற்றுமையின். ஆதலால் ஆன்மா சைதன்ய வடிவமன்றும். சைதன்யத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியோ ஈசுவர விஷயகமாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

சுலோகம்

ज्योतिर्द्वयान्तरित एवहि कर्म जातं
सर्वं करोति पुरुषोऽन्नमयः सदैव।
कर्मादिकारण विनिर्मितमस्य बाह्यं
ज्योतिस्त्व नित्यमनिमित्तकमान्तरंचित् ॥

பதவுரை

अन्नमयः पुरुषः – தூலசங்காதவடிவ வான்மா

ज्योतिर्द्वयान्तरित एवहि – சடம் அஜடம் என்னு மிரண்டு சோதிகளின் மத்தியிலிருப்பதாகியே

सदा एव – எப்போதுமே

सर्वं कर्मजातम् – சர்வ கரும சமுதாயத்தினையும்

करोति – செய்கின்றது.

மத்தியிலிருப்பதாகிய என்பதற்கு வாஸ்தவமாக ஜடமாகிய பாஹ்ய சோதியோடும் ஆந்தரமாகிய அஜடசோதியோடும் சம்பந்தியாததாய் என்பது பொருள். ஜடசோதியின் சம்பந்தமின்மை திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது. சைதன்யம் சங்காதத்தினுள் அந்தர்க்கதமன்று, அதனுபகாரக சோதியாதலால் ஆதித்யாதி போன்று. அன்றேல் அதாவது சங்காதத்தின் அந்தர்கதமாயின் அதற்கு அனந்தத்தன்மையின் பிராப்தியால் கௌரவ தோஷம் அடைவுறும். உதாகரிக்கப்பட்ட சுருதி விரோதமுமாம். அச்சுருதி ஈஸ்வர விஷயகமாம் என்பதும் சரியன்று.

" कतम आत्मेति योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः "

ஆன்மா என்பது யாது என்னுஞ் சங்கையுண்டாக பிராணன்களில் யாதொரு விஞ்ஞானமயனுண்டோ இருதயத்துள் யாதொரு சோதியுண்டோ அது ஆன்மாவாம் என்பது முதலிய வாக்கிய சேஷத்திற்கு அசங்கதத்தன்மை பிராப்தியாமாதலின். ஆதலால் சைதன்யத்தின் சுவதந்தரத் தன்மைக்குக் கேடின்மையினுல் அதுவே ஆன்மாவென்பது பொருள். அங்ஙனமாயினும் அச்சைதன்யத்திற்கு சங்காதத்தினுபகாரத்தன்மையுண்மையால் ஆதித்யாதி போன்று அநித்யத்தன்மையாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

अस्य – சங்காத வடிவ வான்மாவிற்கு

बाह्यं ज्योतिस्तु – வெளியிலுள்ள சூரியாதி சோதியோ

कर्मादिकारणविनिर्मितम् – கரும முதலிய காரணத்தா லுண்டு பண்ணப்பட்டதாகி

अनित्यम् – அனித்தியமாம்

आन्तरं चित् – ஆந்தர சேதனமானது

अनिमित्तकम् – ஓர் நிமித்தத்தாலுண்டானதன்ரும் ; ஆதலின் நித்தியமாம்.

விசேஷவுரை

முதலியவென்னுஞ் சொல்லால் ஆதித்யாதி பதவியை அடைவிக்கின்ற உபாசனையை கவருக. ஆதித்யாதிகட்கு கருமசாத்யத்தன்மை உண்மையின் கருமத்திற்கு நாசமுண்டாகும்போது நாசம் அவசியமுண்டாமாதலின் கருமசாத்யத் தன்மை அவ்வனுமானத்தின் கண்ணுபாதியாம். அவஸ் தாத்ரயத்தில் தொடர்ந்திருக்கின்ற சைதன்யத்திற்கோ கருமசாத்யத் தன்மையின்மையினுலும் கூறிய லாகவத்தாலும நித்யமேயாம் என்பது பொருள். 77

அவதாரிகை

அற்றேல் சப்தாதி விஷயகஸ்புரணம் ஓர் போதையதாதலாலும் சுகாதியினேதுவாதலாலும் அதன் வடிவமான சைதன்யம் கர்ம ஜன்யமாக ஏன் இன்ரும் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

சுலோகம்

श्रोत्रादिजन्य मतिवृत्तिषु बाह्यशब्दा-
द्यर्थाकृतिर्विशति कर्मवशेन कर्तुः ।
बोधाकृतिस्तु तदसंनिधि मात्रहेतु
र्धीवृत्तिषु प्रविशति स्व रसेननित्यम् ॥

பதவுரை

कर्तुः – சங்காத வடிவ வான்மாவிற்கு

कर्मवशेन – போகவேதுவான கருமவசத்தால்

श्रोत्रादिजन्यमतिवृत्तिषु – சுரோத்திர முதலிய விந்திரியத்தாலுண்டான புத்தியின் பரிணும வடிவ விருத்திகளில்

बाह्यशब्दाद्यर्थाकृतिः – வெளியிலுள்ளசப்த முதலிய விஷயங்களின் பிரதிபிம்பம்

विशति – பிரவேசிக்கின்றது; உண்டாகின்றதென்பது பொருள்.

धीवृत्तिषु – பிரத்தியக்ஷமு மப்பிரத்தியக்ஷமுமான சர்வசத்தி விருத்திகளில்

बोधाकृतिस्तु – சித்தின் பிரதிபிம்பமோ

तव संनिधिमात्रहेतुः – சேதன வடிவ வுனது சன்னிதி மாத்திரத்தைக் காரணமாக வுடையதாய்

नित्यं स्वरसेन – எப்போதும் சுவபாவத்தாலே

प्रविशति – பிரவேசிக்கின்றது; உண்டாகின்றதென்பது பொருள்.

### விசேஷவுரை

உண்டானவென்பது விருத்திக்கு விசேஷணமாம். சன்னிதியே கருமத்தின் அதீனமாமென்னுஞ் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு சுபாவத்தாலே எனப்பட்டது வியாபக சைதன்ய சுபாவத்தாலே என்பது பொருள். சத்தாதியாகார புத்தி விருத்திகட்கு சொரூபமாக ஓர் போதையதாந் தன்மை உண்மையாலும் சுகாதியின் ஏதுத்தன்மை உண்மையாலும் கரும ஜன்யத்தன்மை ஆவசியகமாம். அவ் விருத்திகளில் சைதன்யத்தின் பிரதிபிம்ப வடிவ ஸ்புரணத்திற்கும் கருமஜன்யத் தன்மையை அங்கீகரிக்கின் ஓர்போது விருத்திகளிருக்கும் காலத்திலும் ஸ்புரணமில்லாமல்போம். அங்ஙனமோ அன்றும். ஆதலால் விருத்தியின் உற்பத்தி மாத்திரமே ஆண்டு சைதன்யத்தின் பிரதிபலனத்தில் அபேக்ஷிக்கப்படுகின்றது. கருமம் அபேக்ஷிக்கப்படுகின்றதில்லை. ஆதலின் அதன் சாத்தியம் ஸ்புரணமன்றும். அன்றியும் அஃது சொரூபத்தால் ஓர் போதையதுமன்றும். சொரூப சைதன்யம் எப்போதுமிருத்தலால் என்பது கருத்து. 78

### அவதாரிகை

புத்தி விருத்திகளில் சித்தின் ஆகாரம். கருமத்தை நிமித்தமாகவுடையது. அவற்றிலுள்ள வெவ்வேறு ஆகா

ரத்தை உடையதாந்தன்மையால், அவற்றிலுள்ள விஷயா காரம் போன்று என்னுஞ் சங்கைக்கு இவ்வநுமானத்திற்கு அநுகூலதருக்கமின்ருமென்னுங் கருத்தால் முற்கூறியதனை திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துகின்ருர்.

சுலோகம்

स्वाभाविकीहि वियदन्विततता घटादेः
क्षीरादिवस्तु घटना पुनरन्यहेतुः ।
एवं धियामपि चिदन्विततताऽनिमित्ता
शब्दादि वस्तुघटना खलुकर्महेतुः ॥

பதவுரை

घटादेः – கடம் முதலியவற்றிற்கு
वियदन्विततता – ஆகாசத்தோடுள்ள சம்பந்தம்
स्वाभाविकी हि – சுவாபாவிகமாம்; ஆகாசம் வியாபகமாத லால் அதனேடு உற்பத்தியினுலே சம்பந்தம் சித்தித்துள தென்பது பொருள்
क्षीरादिवस्तु घटना – கடாதிகட்கு பால் முதலிய வஸ்துவோ டுள்ள சம்பந்தம்
पुनः अन्य हेतुः – போக்தாவின் கருமத்தை ஏதுவாகவுடைய தாம்
एवं धियामपि – இங்ஙனம் புத்திவிருத்திகட்கும்
चिदन्विततता – சேதன வடிவ ஸ்புரண சம்பந்தம்
अनिमित्ता – சுவாபாவிகமாம்
शब्दादि वस्तु घटना – சத்தாதி விஷய சம்பந்தமோ
कर्महेतुः खलु – கருமத்தை ஏதுவாகவுடையதாம். 79

அவதாரிகை

அற்றேல் பிரமாணஜன்ய அநித்திய ஞானத்தினும் வேருக அதனை உபாதியாகவுடையதும் போதாகிருதி சத்தத்தால் சொல்லப்பட்டதுமான ஸம்வேதனமேயின்ரும்.

எதற்கு நிமித்தத்தன்மையும் நித்தியத் தன்மையுமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றூர்.

சுலோகம்

सम्वेदनं यदिहमानफलं प्रसिद्धं
तच्चप्रमातरि विकारिणि निष्ठितंनः ।
तस्य प्रमातुरपि साक्षितयाऽन्तरात्मा -
सर्वस्य तिष्टति भवान विकाररूपः ॥

பதவுரை

इह – ஈண்டு வியவகாரபூமியின் கண்

यत् मानफलं प्रसिद्धम् – யாதொன்று பிரமாணத்தின் பயனுக பிரசித்தமோ

सम्वेदनम् – அதுவே சுவப்பிரகாச சம்வேதனமாம்

இச்சை முதலியவை போன்று தனது வியவகாரத்திலும் பிறவற்றின் வியவகாரத்திலும் அசமர்த்தமான சட ஞானத்திற்கு பிரமாணத்தின் பயனுந்தன்மை பொருந்தாமையின் சுவயம் பிரகாசமே பிரமாணத்தின் பயனுக அங்கீகரிக்கத் தக்கதாம். ஆதலின் அதுவே சம்வேதனமாம் என்பது பொருள். அங்ஙனமாயினும் பிரமாதாவின் வியாபாரத்தால் உண்டானதும் விஷயத்தின் கண்ணுள்ளதுமான சுவப்ரகாச ஞாதத்தன்மையே சம்வேதன முதலிய பதப்பிரதிபாத்யமாய் பிரமாணத்தின் பயனும். அதுவு மனித்தியமாம். எனின் அற்றன்று எனக் கூறுகின்றூர்.

तच्चनः – அந்த சம்வேதனமும் எமது மதத்தின்கண்

विकारिणि प्रमातरि – விகாரியாகிய பிரமாதாவின்கண்

निष्ठितम् – நிலைபெற்றுள்ளது

பிரமாணத்தின் பயனுகிய சுவப்பிரகாச வஸ்துவில் தன்னுலாவது பிறவற்றுலாவது உத்பத்தி முதலியவை சம்பவியாமையின் சடத்தின் தருமத்திற்கு உருவாதிக்குப் போன்று சடத்தன்மை நியமமானதால் அச்சம்வேதனத்திற்கு பிரமேய நிஷ்டத்தன்மை பொருந்தாமையின் தனது

அபிவியஞ்சக விருத்தியின் தாதான்மியத் தன்மை உண்மையால் அவ்விருத்தி வாயிலாக பிரமாதாவின் கண்ணுள்ளதேயாம். நான் அறிகின்றேன் என்பது முதலிய அனுபவத்தை அனுசரித்திருத்தலின் ஆதலால் எமது மதம் பொருத்தமாமென்பது பொருள். அப்படியானால் பிரமாதாவிற்கே தன் கண்ணுள்ள சம்வேதனத்தால் சர்வ சாதகத் தன்மை சம்பவித்தலால் அதனினும் வேருக சாக்ஷியை அங்கீகரித்தலினுற் பயனென்னை என்னுஞ் சங்கைக்கு பிரமாதா பிரமாண முதலியவற்றில் வேறு பிரமாதா பிரமாணம் சம்பவியாமையினுலும் தனக்குத் தன்னிடத்தில் பிரவிருத்தி விரோதமாதலினுலும் அதன் சாதகமும் வாஸ்தவமாக சுவதந்திரமும் நித்தியமும் ஏகமும் பிரமாணத்தின் பயனுந் தன்மை முதலிய கற்பனையற்றதுமான சுவப்பிரகாச சம்வேலனம் சர்வத்திற்கும் சாக்ஷிபூதமாக அங்கீகரிக்கத்தக்கது. அதுவே

"एषते आत्मा सर्वान्तरः"

"உன்னுடைய விந்தவான்மா சர்வாந்தரமாம்" என்பது முதலிய சுருதியாற் கூறப்பட்ட உனது வடிவமாம் எனக் கூறுகின்ருர்.

तस्य सर्वस्य प्रमातुरपि – பிரமாதா முதலிய அவ்வெல்லாவற்றிற்கும்

साक्षितया – சாக்ஷியாக

अन्तरात्मा अविकारः – அந்தரான்மாவும் நிருவிகாரமுமான

भवान् तिष्ठति – நீரிருக்கின்றீர். 80

அவதாரிகை

அற்றேல் கூறிய வடிவமுள்ள சாக்ஷியிருந்தபோதிலும் அஃது எனது வடிவமன்ரும். நானென்னும் ஞானத்தில் விளங்குகின்ற வஸ்துவே எனது வடிவமாதலின் அந்த ஞானத்தின்கண் கருத்துரு முதலிய வடிவமே விளங்குதலின் அதுவே எனது வடிவமாம் என்னுஞ் சங்கைக்கு வாஸ்தவமாக கூறிய சாக்ஷி வடிவமே உனக்கு நானென்னும் ஞானத்தின்கண் விபரீதத்தன்மையால் பிரகாராந்தரத்தால் விளங்குதலின் அதன் விஷயமான கருத்துராதி வடிவம்

தூலாதியுருவம் போன்று உனக்கு இன்றேயாம் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

சுலோகம்

कर्त्रादिसंनिधिबलेन तवापि कर्तृ
भोक्तृप्रमातृवपुरापतति भ्रमेण ।
तद्बुद्धिसंश्रयमनात्मगतं प्रतीचि
शुद्धेऽपि पश्यसि तमः पटलावृताक्षः ॥

பதவுரை

कर्त्रादि संनिधिबलेन – கருத்தா முதலியவற்றின் சன்னிதானத்தின் பலத்தால்

तवापि – அசங்க சிதான்மாவாகிய உனக்கும்

कर्तृ भोक्तृप्रमातृवपुः – கருத்தா போக்தா பிரமாதாக்களின் வடிவம்

भ्रमेण आपतति – பிராந்தியால் பிராப்தியாகின்றது.

அற்றேல் தூலத்தன்மை முதலியவற்றிற்கு ஆசிரயமான தேகம் தனியே இருப்பது போன்று சொரூபமாகக் கருத்திருத்தன்மை முதலியவற்றினையுடைய வஸ்து ஆன்மாவிலும் அன்னியமாக இன்றும். எதன் சன்னிதான பலத்தால் ஆன்மாவின்கண் அதன பிராந்தியுண்டாம் என்னுஞ் சங்கைக்கு " விஞ்ஞானம் யஞ்ஞத்தைச் செய்கின்றது " நான் ஈண்டேயிருக்கின்றேன் என்பது முதலிய சுருதியாலும் அநுபவத்தாலும் சித்தித்துள்ள ஆபாச சகித புத்தியே கருத்திருத்துவாதியினை உடையது. அதன் அவிவேகத்தாலேயே ஆன்மாவின்கண் கருத்திருத்துவாதியின் பிராந்தியாம் எனக் கூறுகின்றார்.

तद्बुद्धिसंश्रयम् – கருத்திருத்துவாதி தருமம் புத்தியின்கண் உள்ளது (இதனுலேயே)

अनात्मगतम् – அனுன்மசம்பந்தியாம். அதனை.

शुद्धेऽपि – நித்தியசுத்தமாயினும்

प्रतीचि – பிரத்தியகான்மாவின்கண்

तमः पटलावृताक्षः – அஞ்ஞானமாகிற படலத்தால் மறைக்கப் பட்ட ஞானநேத்திரத்தையுடைய நீ

पश्यसि – பார்க்கின்றாய்.

விசேஷவுரை

மற்றும் அக்கருத்திருத்துவாதி தருமம் ஆன்மாவின் பரிணாமமன்றாம். நிரவயவ ஆன்மாவிற்கு ஏது. சம்பந்தம் பொருந்தாமையால் பரிணாமம் பொருந்தாமையின் சொரூ பத்தாலேயே அதன் பரிணாமத்தை அங்கீகரிக்கின் முத்தி யின் அபாவம் பிராப்தியாம். நிருவிகாரத்துவத்தைப் போதிக்கும் சுருதிக்கு விரோதமுமாம். ஆன்மாவின்கண் மனதின் சையோக ஜன்னிய குணமுமின்றாம், நிரவயவ ஆன்மாவில் பிரதேச விருத்தி (அவயவத்திலிருப்பது) சம்யோகம் பொருந்தாமையின் இதனாலேயே மனம் ஆண்டு அதன் சாதகமன்றாம். அன்னியமும் அதன் சாதகமின்றாம். ஆதலால் ஆன்மாவிற்கு நிர்க்குணத்தன்மையைப் பிரதி பாதிக்கும் சுருதியினாலும் காமம் சங்கல்பம் முதலிவைகட்கும் மனோதருமத்தன்மையை பிரதிபாதிக்கும் சுருதியினாலும் அவற்றோடு நியதமான கருத்திருத்துவாதிகட்கும் மனோ தருமத்தன்மை யுண்மையால் ஆன்மாவில் அவற்றின் ஞானம் பிராந்தியேயாம் என்னுங் கருத்தால் அனான்ம சம்பந்தி எனப்பட்டது. 81

அவதாரிகை

மேலும் கருத்திருத்துவாதி வாஸ்தவமாக ஆன்மாவும் ஆன்மாவின் தருமமுமன்றாம். திருசியமாதலால், பருவ தாதி போன்று, அப்பிரயோஜகத் தன்மையுமின்றாம். கருத்திருத்துவாதியினை ஆன்மாவின் சொரூபமாகவாவது தருமமாகவாவது அங்கீகரிக்கின் அவ்வடிவத்தால் திருசியத் தன்மை பொருந்தாமையின் ஆசிரயமின்றிய அதற்கு ஓர் போதும் பிரதீதியின்மையினாலும் அதற்கு திருசியத் தன்மையின் அநுபபத்தியே விபக்ஷத்தில் பாதகமாம். ஆதலின், இவ்வாறு அநுமானத்தாலும் அதற்கு ஆன்ம அதன் தருமத்தன்மைகளின் அபாவம் சித்தித்தபோது

அதன் பிரதீதி பிராந்தியாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

சுலோகம்

कर्तृत्वादि च दृश्यवर्गपतितं द्रष्टुः स्वभावः कथं
सम्भाव्येततवप्रसन्नविमलस्वच्छप्रकाशात्मनः ।
यद्यद्दृश्यतया जगत्यभिमतं सर्वस्य तत्तद्भवेत्
दूरं द्रष्टुरिति प्रसिद्धमखिलं भूभृत्समुद्रादिकम् ॥

பதவுரை

दृश्यवर्ग पतितम् – திருசிய சமுதாயத்தினந்தர்க்கதமான
कर्तृत्वादि च – கருத்திருத்தன்மை முதலியவை
प्रसन्नविमलस्वच्छ प्रकाशात्मनः – பிரசன்னமும் நிர்மலமும் சுவச்சமும் பிரகாச வடிவமும்
द्रष्टुः तव स्वभावः – சாக்ஷியுமாகிய உனது சொரூபமாக
कथं सम्भाव्येत – எப்படி சம்பாவனை செய்யப்படும்?

ஆன்மத்தன்மை முதலியவற்றில் வியபிசாரமாம் என்னுஞ் சங்கைக்கு (ஆன்மத்தன்மை திருசியத்தில் அந்தர்கதமாயினும் ஆன்ம வடிவமாதலின் வியபிசாரமாமென்பது கருத்து) அதுவே சம்மதமின்றுமென்னுங் கருத்தால் சாமானிய வியாப்தியினைக் கூறுகின்றார்.

जगति यद् यद् – உலகின்கண் எது எது
दृश्यतया अभिमतं भवेत् – திருசியமாகக் கருதப்பட்டதாமோ
भूभृत समुद्रादिकम् – மலை, சமுத்திரம் முதலிய
तत्तदखिलम् – அவ்வெல்லாமும்
सर्वस्य द्रष्टुः – சருவதிருஷ்டாவினின்றும்
दूरमिति प्रसिद्धम् – தூரமென்பது பிரசித்தமாம்.

விசேஷவுரை

தூரம் = அதன் வடிவமல்லாததும் அதன் தருமமல்லாததுமாம். பிரசன்னத்தன்மை = நிருவிகாரத்தன்மை, நிர்மலத்

தன்மை = உற்பத்தியாதிமலரகிதத் தன்மை. சுவச்சத் தன்மை = அசங்கத் தன்மை.

82

அவதாரிகை

மேலும் இந்தக் கருத்திருத்தன்மை முதலியவை ஆன்மாவிற்கு அக்கினிக்கு ஜுவாலை முதலியவை போன்று ஆகந்துகமா அல்லது உஷ்ணம் முதலியவை போன்று சுவாபாவிகமா. முதற் பக்ஷம் சரியன்று. முற்கூறிய பிரகாரத்தால் அதன் ஏதுவை நிரூபிக்க முடியாமையின். ஏதுவின்றி ஆகத்துகம் சம்பவிக்கின்றதில்லையன்றோ. அன்றியும் ஆகந்துகத்தன்மையை அங்கீகரிக்கின் அதற்கு இரச்சு சர்ப்பம் போன்று மித்யாத்தன்மையும் பிராப்தியாமென்று கருதி இரண்டாவது பக்ஷத்தினை நிராகரிக்கின்றார்.

சுலோகம்

एतस्माच्च न जाग्रतस्तव भवेत् स्वाभाविकी कर्तृता
यद्येषा स्वत एव किं न भवति स्वप्नेऽपि ते तिष्ठतः ।
यत्स्वप्ने परिपश्यसि त्वमखिलं त्वन्मायया निर्मितं
कर्तृत्वादि न सत्यमत्र घटते कात्स्न्यानभिव्यक्तितः ॥

பதவுரை

एतस्माच्च – இனி கூறப்படுமேதுவினாலும்

जाग्रतः तव – சாக்கிரத்திலுள்ள உனக்கு

कर्तृता – கருத்திருத்தன்மை

स्वाभाविकी न भवेत् – சுவாபாவிகமன்றாம்.

ஏதுவினாலும் என்ற உம்மை முதற் பக்ஷத்தின் நிஷேதத்தை சமுச்சயஞ் செய்தற் பொருட்டாம். ஏதுவினால் என்று கூறினதை வெளிப்படுத்துகின்றார்.

एषा यदि स्वत एव – இந்தக் கருத்திருத்தன்மை சுவாபாவிகமேயாகுமாயின், அப்போது

स्वप्नेऽपि – சொப்பனாவஸ்தையின் கண்ணும்

तिष्ठतः ते – நிலைத்திருக்கின்ற உனக்கு

किं न भवति – ஏனின்றாம்.

அக்னியின் உஷ்ணம் அக்னியின் சொரூபம் உள்ள வரை தொடர்ந்திருத்தல்போல கருத்திருத்தன்மை முதலியவை ஆன்மாவிற்கு சுவாபாவிகமாயின் ஆன்மாவின் சொரூபமுள்ளவரை தொடர்ந்திருத்தல் வேண்டும். அங்ஙனமன்ரும். சொப்பனத்தின்கண் ஆன்மா இருப்பினும் அஃது (கருத்திருத்தன்மை) இன்மையின் என்பது பொருள். அற்றேல் கூறிய ஏது அசித்தமாம். சாக்கிரத்திற் போன்று சொப்பனத்தின்கண்ணும் இதனைச் செய்கின்றேன், இதனைப் புசிக்கின்றேன் என்பது முதலிய அனுபவத்தால் ஆன்மாவின் கண் அப்போதும் கருத்திருத்தன்மை முதலியவை இருத்தலின் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

स्वप्ने – சொப்பனுவஸ்தையில்

यत्र कर्तृत्वादि – யாதொரு கருத்திருத்தன்மை முதலியவற்றை

त्वं पश्यसि – நீ காண்கின்ருயோ

(तत्) अखिलं – அவ்வெல்லாமும்

त्वन्मायया निर्मितम् – உனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப் பட்டதாம்

अत्र सत्यं न घटते – ஈண்டு சத்தியமாகப் பொருந்துவதின்ரும்

कात्स्न्र्या नभि व्यक्तितः – வியாவகாரிக வஸ்துவிற்கு உசிதமான தேச கால சாதன சம்பத்தியினுல் யாதொரு அபிவியத்தியுண்டோ அஃதின்மையின்.

விசேஷவுரை

" स्वे शरीरे यथा कामं परिवर्तते "

" சொப்பனத்தில் தனது தேகத்திலேயே இச்சைப்படி சஞ்சரிக்கின்ருன் " என்னுஞ் சுருதியினுல் தனது சரீரத்திலேயே சொப்பனவஸ்து காணப்படுகின்றது. ஆண்டு வாஸ்தவ ஸ்நானம் போஜனம் கமனம் முதலியவற்றிற்கு உசிதமான தேச கால சாதன சம்பத்தி சம்பவியாமையால் அஃதின்றியும் அபிவியக்தமான அச்சொப்பன பதார்த்தத்திற்கு இந்திரஜாலக்காரனுற் சிருஷ்டிக்கப்பட்ட வஸ்து

போன்று அநிர்வசநீய மாயாமாத்திரத்தால் உண்டுபண்ணப்பட்டமையின் மித்தியாத்தன்மை ஆவசியகமாம். அது

मायामात्रं तु कात्स्न्र्येन नानभिव्यक्त स्वरूपत्वात्

(சொப்பன வஸ்து மித்தையாம் யோக்கிய தேச கால சாமக்கிரியினுல் உண்டுபண்ணப்படாமையின்) என வியாச பகவானுலும் கூறப்பட்டுளது. ஆதலால் சாக்கிரத்திலுள்ள கருத்திருத்துவாதிகட்கு சொப்பனத்தின்கண் அனுவிருத்தியின்ரும் என சித்தித்தது. கார்த்ஸ்னியம் = முழு வடிவம் அதாவது யோக்கிய தேச கால சம்பந்தம். 83

அவதாரிகை

கார்த்ஸ்னிய சத்தத்திற்கு அர்த்தாந்தரத்தைக் கூறுகின்றவராய் சொப்பனத்திற்கு அஃதின்மையினுல் அசத்தியத் தன்மையினைக் கூறுகின்ருர்,

சுலோகம்

कात्स्न्र्यं हीष्टमबाधनं न खलु तत्स्वप्नस्यजाग्रद्धिया
बाधाद्बाधितमेव सत्यमितिचेन्नैवं विरोधान्मिथः ।
सत्यत्वेनहि भाधितत्वघटना बाधेच सत्यं कुतः
सत्यं बाधितमित्यतीव पदयोः संबन्धिता दुर्घटा ॥

பதவுரை

कात्स्न्र्यं हि – கார்த்ஸ்னிய பதத்தின் பொருளோ

अबाधनम् इष्टम् – தேச கால வஸ்துக்களால் எதற்கு பாதமின்ருே அதுவாமென அங்கீகரிக்கப்பட்டுளது

तत्स्वप्नस्य न खलु – அபாதித வடிவவக் கார்த்ஸ்னியமானது சொப்பன பதார்த்தத்திற்கின்றேயாம்

जाग्रद्धिया बाधात् – சாக்கிர ஞானத்தால் பாதிக்கப்படுதலின்

சித்தாந்தத்தின்கண் மூலாஞ்ஞானத்தின் காரியமாகிய சொப்பன பதார்த்தத்திற்கு இதர பிராந்திவடிவ சாக்கிர ஞானத்தால் காரியசகித அவித்தையின் நிவர்த்திவடிவ

பாதம் சம்பவிக்கிறதில்லை. அங்ஙனமாயினும் கயிற்றின் கண்ணாரோபிக்கப்பட்ட சர்ப்பத்திற்கு பின்னருண்டான தண்ட பிராந்தியினாற் போன்று சாக்கிர ஞானத்தால் சொப்பனத்திற் காணப்பட்ட வஸ்துவிற்கு அப்போது அபாவ நிச்சயமுண்டாவதால் அதன் மித்யாத்வ நிச்சய வடிவ பாதம் அதனதீனமாமென்று கருதியங்ஙனம் கூறப்பட்டது எனவுணர்க.

अथरथान्रथयोगान्पथः सृजते

"சொப்பனத்தின்கண் தேர்களையும் குதிரைகளையும் மார்க்கங்களையும் சிருஷ்டிக்கின்றான்" என்று சுருதி கூறுதலின் சொப்பன பதார்த்தத்திற்கு சாக்கிர ஞானத்தினால் நிவர்த்தி மாத்திரம் பாத சப்தத்தின் பொருளாம் என்று கருதுகின்றவர்கள் சங்கிக்கின்றனர்.

**बाधितं सत्यमेव इतिचेत्** – பாதிக்கப்பட்டதாயினும் சத்தியமேயாமெனின்

முற்கூறிய மித்யாத்வநிச்சயமே பாதமாமென்று கருதி பரிகரிக்கின்றார்.

**न एवम्** – பாதிதவஸ்து சத்தியமாவதின்றாம்

**मिथः विरोधात्** – பரஸ்பரம் விரோதமாதலின்

பரஸ்பர விரோதத்தினை வெளிப்படுத்துகின்றார்.

**सत्यत्वे** – வஸ்துவிற்கு சத்தியத்தன்மை யுளதாய வழி

**नहि बाधितत्वघटना** – பாதிதத்தன்மை பொருத்துவதேயின்றாம்

**बाधेच** – வஸ்து பாதமாகுமாயின்

**सत्यं कुतः** – சத்திய மெங்ஙனமாம்

**सत्यं बाधितं इति पदयोः** – சத்தியம் பாதமென்னும் இவ்விரு பதங்கட்கும்

**सम्बन्धिता** – ஓர் விஷயத்தின்கண்ணே சாமானாதிகரண்ய பிரயோகமானது

**अतीव दुर्घटा** – அத்தியந்தம் அசங்கதமாம்.

## அவதாரிகை

அற்றேல் மாயையைப் பிரகிருதியென அறியவேண்டும் என்பது முதலிய சுருதிகளில் ஆகாசாதி சத்திய வஸ்துவின் பிரகிருதித் தன்மையால் மாயையின் சொரூபம் நிச்சயிக்கப்படுதலானும் சூத்திரக்காரரால் சொப்பனத்திற்கு மாயாமாத்திரத்தன்மையைக் கூறியிருத்தலானும் சொப்பனமும் சாக்கிரத்தோடு சமானமாம் என்பது அவரது கருத்து. இவ்வாருகவே ஆண்டு தேரில்லை என்பது முதலிய சுருதியும் சாக்கிரத்தின் தேர் முதலியவற்றினபாவபரமாம். ஆதலின் அதற்கு மித்யாத்தன்மையின்ரும் என்னும் சங்கைக்கு உலகின்கண் அனிர்வசனீய வவித்தையே மாயையென்னுஞ் சப்தத்திற்குப் பொருளாதலால் வைதிகமாயா சப்தத்திற்கும் அதுவே பொருளாதலின் அதனது காரியவாகாசாதிகட்கும் அனிர்வசனீயத் தன்மையுண்மையால் சாக்கிர வஸ்துவிற்கும் சத்தியத் தன்மையின்ரும். சாக்கிர சொப்பனங்கட்கு மித்தியாத்தன்மை சமானமாயினும் சொப்பனத்திற்கு அவித்தையினும் வேருன காரணஜன்னியத்தன்மை யுண்மையால் பிராதிபாசிகத்தன்மையும் சீக்கிரபாதமும் பொருந்துகின்றது என்று கருதி இனிக் கூறப்படும் அர்த்தசமுதாயத்தினை பிரதிஞ்ஞை செய்கின்ருர்:-

### சுலோகம்

मायामेनां जागरे लोकसिद्धा
मुक्त्वा तद्वत्स्वप्नमायां विविच्य ।
शक्तिव्याप्ती तत्रसिद्धे गृहीत्वा
मायासिद्धं जागरं साधयामः ॥

### பதவுரை

जागरे - சாக்கிராவஸ்தையில்
लोकसिद्धाम् - இந்திரசாலக்காரன் முதலியவரிடத்தில் பிரசித்தமான
एनां मायां - இந்த மாயையை
उक्त्वा - அவித்தை மாத்திரமாகப் பிரதிபாதித்து

तद्वत् - அதுபோன்று

स्वप्नमायाम् - சூத்திரக்காரராற் சொல்லப்பட்ட சொப்பனத்திற்கு மூலமான மாயையை

विविच्य - அவித்தை மாத்திரமாக நிரூபித்து

तत्र - அவித்தையில் அல்லது சொப்பனத்தில்

सिद्धे - விருத்த புருஷரது பிரயோகத்தாலும் பூயோ (அதிக) தெரிசனத்தாலும் அறியப்பட்ட

शक्ति व्याप्ती - சத்தியினையும் வியாப்தியினையும்

गृहीत्वा - கிரகித்து

जागरम् - சாக்கிரப் பிரபஞ்சத்தினை

मायासिद्धम् - அவித்தையின் காரியமாமென

साधयामः - சாதிக்கின்றேம்.

விசேஷவுரை

சொப்பனத்தில் விருத்தபுருடரது பிரயோகத்தால் மாயா சத்தத்தின் சத்தியினையும் காரியத்தன்மை வடிவ ஏதுவிற்கு அவித்தைவடிவ காரணத்தோடு வியாப்தியினையும் கிரகித்து (மறவாமல்) சாக்கிராவஸ்தையிலுள்ள ஆகாசாதிப் பிரபஞ்சமும் அவித்தையின் காரியமாமென சுருதியுத்தி அநுமானங்களால் உடனே சாதிப்போம் என்பது பொருள். 85

அவதாரிகை

ஆண்டு முதலில் உலகின்கண் மாயைக்கு தமஸ் சத்தத்தால் சொல்லப்பட்ட அவித்தையோடு அபேதத்தை சாதித்தற்கு ஆரம்பிக்கின்றார் :

சுலோகம்

लोकेहि मायाऽधिगता नमाया
तमोऽतिरिक्ताऽस्ति निरूप्यमाणा ।
व्याप्तिश्च शक्तिश्च निरूप्यमाणा
भविष्यतीहै वतु नेतरत्र ॥

பதவுரை

लोकेहि – உலகின்கண் பிரசித்தமான
मायाधिगता – இந்திரஜால வித்தையின் கண்ணறியப்பட்ட
माया – யாதொரு மாயையுண்டோ அது
निरूप्यमाणा – லக்ஷணப் பிரமாணங்களால் நிரூபிக்கப் படுகின்றதாகி
तमोऽतिरिक्तानास्ति – அவித்தையினும் வேறின்றாம்.

லக்ஷண முதலியவற்ருல் நிரூபிக்கப்படுகின்ற மாயை யினைய வித்தையினும் விலக்ஷணமாக நிரூபித்தற்கு முடியா தென பின்னர் கூறப்படுவதால் அதற்கு அவித்தை மாத் திரத்தன்மை சித்தித்த வழி திரண்ட பொருளைக் கூறுகின்ருர்.

शक्तिश्च – மாயாசப்தத்தின் சக்தியும்
व्याप्तिश्च – காரியத்துவ வடிவ ஏதுவின் வியாப்தியும்
निरूप्यमाणा – விசாரிக்கப்படுகின்றதாகி
इह एव भविष्यति – இவ் அவித்தையின் கண்ணேயே சம்ப விக்கும்
इतरत्र न तु – சத்திய வடிவ மாயையின் கண் சம்பவிப்பதே இன்ரும். 86

அவதாரிகை

அற்றேல் மணிமந்திரம் ஒளஷதம் முதலிய சத்திய வஸ்துவினையுடைய புருஷனிடத்தில் உலகின்கண் மாயாவி சப்தத்தின் பிரயோகம் நியமமாகக் காணப்படுதலால் அவனது விசேஷணமாயுள்ள மாயையும் சத்தியமேயாம் என்னுஞ் சங்கைக்கு அம் மாயையானது மந்திராதி வடிவ சத்திய வஸ்துவேயா அல்லது அதனுல் செய்யப்பட்ட புருஷனது சக்திவிசேஷமா? முதற்பக்ஷம் சரியன்றெனக் கூறுகின்ருர்.

சுலோகம்

मायाविनो नमणिमन्त्र मथौषधं वा
मायेति शक्यमिह वर्णयितुं कुतश्चेत् ।
सत्यंहि तत्सकलमिष्टमियं त्वसत्या
मायाततोऽन्यदिह किंचन वर्णनीयम् ॥

பதவுரை

मायाविनः – மாயையினையுடைய புருடனிடத்தில்
मणिमन्त्रम् – மணியினையாவது மந்திரத்தினையாவது
अथौषधं वा – ஔஷதத்தினையாவது
माया इति – மாயையாம் என
इह वर्णयितुं न शक्यम् – உலகின்கண் வர்ணித்தற்கு முடியாது.

மாயா சத்தத்திற்கு மணி முதலியவற்றின் வாசகத் தன்மையினை யங்கீகரித்தலில் பாதகமின்றாமென்று கருதி சங்கிக்கின்றான்.

कुतश्चित् – எதனால் வருணிக்கத்தகாதெனின்
பாதகமின்மை அசித்தமாமெனப் பரிகரிக்கின்றார்.
तत् सकलम् – மணி முதலிய அனைத்தும்
सत्यं हि इष्टम् – சத்தியமாகவே கருதப்பட்டுளது
इयंतु माया असत्या – இந்த மாயையோ அசத்தியமாம்
ततोऽन्यत् – ஆதலால் மணி முதலியவற்றினும் அன்னிய மாகவே
इह किंचन – ஈண்டு யாதேனுமொரு வஸ்து
वर्णनीयम् – மாயாசத்தத்தின் பொருளாக வருணிக்கத் தக்கது,

## விசேஷவுரை

மணி முதலியவற்றிற்கு சொரூபமாகவே மாயா சத்தத்தின் வாச்சியத் தன்மையா அல்லது மித்தையாகிய காரிய விசிஷ்ட ரூபத்தாலா, முதற்பக்ஷம் சரியன்று கேவலமணி முதலியவற்றின் சம்பந்தம் அறியப்படினும் மணியாதியினையுடைய புருடனிடத்தில் மாயாவி சத்தம் பிரயோகிக்கப் படாமையின், இரண்டாவது பக்ஷத்தின் கண்ணும் பிராப்தாப்பிராப்த விவேகத்தால் அநிர்வசனீய யானை குதிரை முதலிய காரியமே மாயா சத்தத்தின் கோசரமாம். ஆதலால் மித்தைவடிவ காரியமாகிய அதுவே மாயா சத்தத்தின் வாச்சியமாக அங்கீகரிக்கத் தக்கது. சொரூபமாக நாநா ஜாதியினையுடைய அதற்கு ஏக (மாயா) சத்த வாச்சியத் தன்மை பொருந்தாமையினால் அத்தகைய காரியத்தினாற் கற்பிக்கத்தக்கதும் அவ்வெல்லாவற்றினும் உபாதானத் தன்மையால் அநுகதமுமான அநிர்வசநீய அஞ்ஞானமே மாயா சத்தத்தின் வாச்சியமாம். அதன் தாதான்மியத்தினால் கடாதியின்கண் மண் முதலிய சத்தம் போன்று அதன் காரியத்தின்கண் மாயா சத்தத்தின் பிரவிருத்தியாம். அதன் (மாயையின்) சம்பந்தத்தால் புருஷனிடத்திலும் மாயாவி சத்தம் பொருந்துகின்றது. ஆதலின் மந்திரம் முதலியவை மாயா சத்தத்தின் பொருளன்று மென்பது கருத்து. 87

## அவதாரிகை

புருஷனிடத்திலுள்ள சத்தி விசேஷத்தின்கண் மாயா சத்தமாமென்னும் பக்ஷத்தினை அநுவாதஞ்செய்து நிஷேதிக்கின்றார்.

## சுலோகம்

सामर्थ्यमस्य मणिमन्त्र निमित्तमस्ति
मायाभविष्यति जनभ्रम हेतुरेषा ।
इत्युच्यते यदितदप्यति फल्गुकस्मात्
सामर्थ्यमप्यवितथं हितदिष्टमस्य ॥

பதவுரை

अस्य मणिमन्त्र निमित्तम् – மாயாவி புருடனுக்கு மணிமந்திரங் களை நிமித்தமாகவுடைய

सामर्थ्यमस्ति – யாதொரு ஆற்றலுளதோ

एषा माया भविष्यति – அவ்விதுவே மாயையாம்

जनभ्रमहेतुः – அதுவே மனிதர்களின் மோகத்திற்குக் காரண மாம்

इति यदि उच्यते –என்று உன்னுல் சங்கை செய்யப்படுமாயின்

तदपि अतिफल्गु – அதுவும் அத்தியந்தம் துச்சமாம்.

அம்மாயைக்குச் சமீபத்திலுள்ள ஜனங்களின் சுழற்சி யினனுபபத்தியால் கற்பிக்கப்படுந் தன்மையுண்மையின் அத்தியந்தந்துச்ச மெங்ஙனமாம் என சங்கிக்கின்ருன்.

कस्मात् – எதனுல் துச்சமாம்?

அச்சாமர்த்தியம் காரியத்தினனுசாரத்தால் அசத்திய மாக கற்பிக்கப்படுகின்றதா அல்லது சத்தியமாக கற்பிக்கப் படுகின்றதா, முதற்பக்ஷம் சரியன்று. உனதிஷ்டத்திற்குக் கேடு வருதலினுலும் எமதிஷ்டமடைவுறுதலினுலும் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

तदपि सामर्थ्यम् – மித்தை வடிவ காரியத்தாற் கற்பிக்கத்தக்க வச்சாமர்த்தியமும்

अस्य – புருடனுக்கு அல்லது பிரதிவாதிக்கு

अवितथं हि इष्टम् – சத்தியமாகவே சம்மதமாம்,

விசேஷவுரை

இரண்டாவது பக்ஷத்தில் காரியத்திற்கும் சத்தியத் தன்மையடைவுறும் சத்திய சாமர்த்தியத்தினதீனமான காரியத்திற்கும் சத்தியத் தன்மை நியமமாதலால் அதனுல் அதன்கண் மாயா சப்தமும் ஞானமும் பொருத்தமற்றன வாம். பிராந்திவிஷயத்தின்கண்ணேயே யவைகட்கு பிர சித்தியிருத்தலின் என்பது ஆகவே என்னுஞ் சொற் பொருளாம்.

## அவதாரிகை

அற்றேல் காசம் காமாலை முதலியவற்றிலுள்ள சாமர்த்தியத்திற்கு சத்தியத்தன்மையிருப்பினும் அதனதீன காரியத்திற்கு மித்தியாத்தன்மை இருப்பதுபோன்று புருஷனிடத்திலுள்ள சக்தி விசேஷவடிவ மாயைக்கு சத்தியத்தன்மையிருப்பினுமதனதீனகாரியம் மித்தையாக ஏருகாது என்னுஞ் சங்கைக்கு அப்படியாகுல் தோஷத்தின் கண்ணுள்ள சாமர்த்தியம் போன்று புருஷனிடத்திலுள்ளவச்சத்தியானது சுவாபாவிகமா அல்லது நேத்திராதியின்கண் பிராந்தி ஞானத்தையுண்டுபண்ணும் சாமர்த்தியம்போன்று ஆகந்துகமா என்று விகற்பித்து இரண்டு பிரகாரத்தாலும் நிருபிக்க முடியாமையின் அதற்கு சத்தியத் தன்மையினைச் சாதித்தலசக்கியமாமெனக் கூறுகின்ருர்.

## சுலோகம்

**नच शक्तिरस्ति सहजा यदिवा जनिताऽस्तिकेन चिदिति ब्रुवतः ।**
**परिपुष्कलं स्वमतनिर्वहणं भवितुं क्षमं तदनिरूपणतः ॥**

## பதவுரை

**अस्य शक्तिः** – மாயாவி புருடனது சக்திவிசேஷ மாயை
**सहजाऽस्ति** – சுவாபாவிகமாக இருக்கின்றது
**यदिवा केनचित्** – அல்லது குருவடிவ புருடனுல்
**जनिताऽस्ति** – உண்டானதாயிருக்கின்றது
**इति ब्रुवतः** – என்று கூறும் வாதிக்கு
**परिपुष्कलम्** – பரிபூரணமாக அதாவது இரண்டு பக்ஷத்திலும் நிர்த்தோஷமாக
**स्वमत निर्वहणम्** – தனது மதத்தின் நிர்வாகத்தை
**भवितुं नच क्षमम्** – செய்தற்கு ஆற்றலுமின்ரும்
**तद् अनिरूपणतः** – இரண்டு பிரகாரத்தாலும் அதனை நிருபிக்க முடியாமையின்

விசேஷவுரை

ஆற்றலும் என்ற உம்மை தோஷாதியின் கண்ணும் சத்திய சாமர்த்தியத்தின் சம்மதியின்மையை சமுச்சயஞ் செய்தற் பொருட்டாம். 89

அவதாரிகை

அவற்றுள் முதற் பக்ஷத்தின் துர்நிரூபத் தன்மையினை யுபபாதனஞ் செய்கின்றார் :

சுலோகம்

नच शुक्रशोणित समागमने नच गर्भ शायिन इयं विदिता ।
नचमातृयोनि विवरा दुदरा दपसर्पतो बहिरियं घटते ॥

பதவுரை

शुक्र शोणित समागमने – மாதா பிதாக்களின் சுக்கில சுரோணிதம் சேருங் காலத்தில்

इयं नच विदिता – ஸஹஜமாகிய சுவாபாவிக சக்திவடிவ மாயை விதிதமன்றும்

गर्भ शायिनः – மாதாவின் கருப்பத்தில் தங்கியிருக்கின்ற தேகத்தின் கண்ணும்

नच विदिता – விதிதமன்றும்

मातृयोनिविवराद् उदराद् – மாதாவின் உதரத்தினின்றும் யோனிவழியால்

बहिः अपसर्पतः – வெளியில் வருகின்ற தேகத்தின் கண்ணும்

इयं नच घटते – இந்த மாயாசக்தி பொருந்துவதின்றும்.

விசேஷவுரை

புருஷனுக்குத் தன்னால் ஜன்மமின்மையின் அவனது சத்திக்கு ஸஹஜத் தன்மையாவது அவனது தேகத்தோடு கூட ஜன்மமாமென்று கூறவேண்டும். அச் சத்தியின் ஜன்மம் கருப்பாதான சமயத்தில் சுக்கில சுரோணிதத்தின் சம்பந்தத்தாலேயே உண்டாகின்றதா அல்லது கருப்பத்தின் கண்ணேயே கரசரணாதியினையுடைய பிண்டவடிவ

பரிணமத்தால் உண்டாகின்றதா அல்லது மாதாவின் உதரத்தினின்றும் மிகக் கஷ்டமான துவாரத்தால் வெளியில் வருதலினுல் உண்டாகின்றதா. சருவப்பிரகாரத்தாலும் பொருத்தமின்ரும். அவ்வச்சமயத்தினனந்தரமே மாயையின் காரியம் காணப்படாமையின் அதன் சக்தியின் கற்பகமின்மையின். அதனது சத்துவம் சித்தியாதபோது அதனது சென்மமுமசித்தமாதலினென்பது பொருள். 90

## அவதாரிகை

இரண்டாவது பக்ஷத்தில் குருவானவர் சிஷ்யனிடத்தில் மணி முதலியவற்றினையே சமர்ப்பணஞ் செய்கின்ருரா அல்லது அதன் வாயிலாக சக்திவிசேஷத்தையும் சமர்ப்பணஞ் செய்கின்ருரா. முதற்பக்ஷத்தில் உனதிஷ்டமான சக்தியின் சித்தியின்ரும். இரண்டாவது பக்ஷமும் சரியன்று. மணி முதலியவற்றிற்கு ரச்சு சர்ப்ப முதலிய பொய்ப்பொருளின் காரணமாக நிச்சயிக்கப்பட்ட சாமர்த்தியத்தினையுடைய அஞ்ஞானத்தின் க்ஷோபகத் தன்மையால் பொய்ப்பொருளாகிய காரியத்தினுபயோகம் பொருந்தும்போது புருஷனிடத்தில் சக்தி முதலியவற்றின் கற்பகமின்மையினுல் அஃது பொருந்தாமையின் என்னும் கருத்தால் கூறுகின்ருர் :

### சுலோகம்

मणिमन्त्रमौषधमितीदृशकं विरहय्य नापरमिहार्पयति ।
पुरुषोऽपि कश्चिदतएवमियं परतोऽपि नास्य घटनामटति ॥

### பதவுரை

कश्चित् पुरुषोऽपि – ஓர் (குரு வடிவ) புருடனும்
मणिमन्त्रम् – மணியினையும் மந்திரத்தினையும்
औषधम् इति ईदृशकम् – ஔஷதத்தையும் இத்தகைய வேறு சாதனத்தையும்
विरहय्य अपरम् – விட்டு அன்னிய சாமர்த்தியத்தினை
इह न अर्पयति –சிஷ்யனிடத்தில் சமர்ப்பணஞ்செய்கிறதில்லை

ஆகந்துகமான புருடனது சத்தி மாயையாமென்னும் பக்ஷத்தின் அசம்பவத்தை முடிக்கின்ருர்.

अतः इयम् – ஆதலால் மாயாவடிவ சத்தி
एवं परतोऽपि – இங்ஙனம் இதர நிமித்தத்தாலும்
अस्य घटनाम् – புருடனது சம்பநதத்தின் சம்பாவனையை
न अटति – அடைகின்றதில்லை. 91

## அவதாரிகை

அற்றேல் மாயையைப் பிரகிருதியென அறியவேண்டும். "தேவசம்பந்தியும் குணமயமுமான இந்த என்னுடைய மாயை கடக்கத்தகாததாம்" என்பது முதலிய வசனம் முதலியவற்ருற் சித்தித்த மாயாசத்தி ஈசுரனிடத்தில் அங்கீகரிக்கத்தக்கதாம். அஃது அஞ்ஞானமேயென்று சொல்லற்க. அது தனது ஆசிரயத்திற்கு மோஹத்தைச் செய்வதனுலும் பிராந்தி விஷயத்தின் சமான வஸ்துவின் அபேக்ஷையினுலேயே இரச்சு முதலியவற்றில் சர்ப்பம் முதலியவற்றின் பிராந்திக்குக் காரணமாதலானும் என்க. ஈசுரனது மாயையோ அதனினும் விலக்ஷணமாம். அது தனது ஆசிரய ஈசுரனுக்கு மோஹத்தைச் செய்கின்றதில்லையன்ருே? "எவன் சருவஞ்ஞன் சருவவித்து ஒவ்வொரு யோனியையும் (பூதத்தையும்) ஆசிரயித்திருக்கின்ருன் ஏகன்" என்பது முதலிய சுருதியில் அவனுக்கு சருவஞ்ஞத் தன்மை மாயையின் நியத்திருத்தன்மை கேட்கப்படுதலால் மாயையால் மோகிதத்தன்மை பொருந்தாமையின். மாயைக்கு ஆகாசாதிப் பிராந்தியை யுண்டுபண்ணுவதில் அதன் சமானமான அன்னிய வஸ்துவின் அபேக்ஷையுமின்ரும். அதன் காரியத்தினும் அன்னியமின்மையின், அந்த மாயையே மந்திரம் முதலியவற்ரு லுபாசிக்கப்பட்ட ஈசுரனுல் பிரேரிக்கப்பட்டதாகி யோகி முதலிய சீவர்களுக்கு வசமாகி மற்றையர்களுக்கு மோகத்தைச் செய்கின்றது. ஆதலின் யாண்டும் மாயை ஜன்னியமன்ரும். ஆதலால் கூறிய தோஷமின்ரும் என மாயை அவித்தைகளின் பேதவாதிகளாகிய ஏகதேசிகள் கூறுகின்றனர். அவரைக் குறித்துக் கூறுகின்ருர் :

சுலோகம்

अन्यस्य विभ्रमकरी पुरुषस्य शक्ति
राकारमन्य मनपेक्ष्य मनीषिताचेत् ।
वाच्येह लौकिकजन व्यवहारभूमौ
मायागिरस्तदपि दुर्घटमिष्टहानेः ॥

பதவுரை

इह लौकिकजन व्यवहार भूमौ – ஈண்டு இலௌகிக ஜனங்களின் வியவகார பூமியின் கண்

अन्यम् आकारम् – அநத்தியஸ்தமும் பிராந்தி விஷயத்தின் சமானமுமான வஸ்துவை

अनपेक्ष्य – அபேக்ஷியாமலே

अन्यस्य – தனது ஆசிரயத்தினின்றும் அன்னியமான ஆகாசாதியின்

विभ्रमकरी – பிராந்தியினைச் செய்வதாய்

पुरुषस्य शक्तिः – பரமான்மாவின் யாதொரு சக்தியுண்டோ அது

मायागिरः वाच्या – மாயாசத்தத்தின் வாச்சியமாமென

मनीषिता चेत् – சம்மதமாமெனின்

ஈண்டு என்பதின் விவரணம் இலௌகிக என்பதாதி தூஷிக்கின்றார்.

तदपि दुर्घटम् – அதுவும் பொருந்தமன்றாம்

इष्टहानेः – உனது இஷ்டத்திற்குக் குறைவு வருதலின்.

விசேஷவுரை

கூறிய வடிவமுள்ள மாயையானது அநிர்வசநீயமா அல்லது சத்தியமா? முதற்பக்ஷம் பொருந்தாது. அநிர்வசநீயத்தன்மை அவித்தையின் சொரூபலக்ஷணமாதலால் மாயைக்கும் அநிர்வசநீயத்தன்மையை யுடன்படின் மாயையவித்தைகட்குப் பேதமாமென்னும் உனது இஷ்டம் சித்திக்

காது. அநிர்வசநீயத்தன்மை சமானமாயினும் தனது ஆசிரயத்திற்கு மோகத்தைச் செய்யுந் தன்மையாலும் அதன் இன்மையாலும் பேதமாமென்று சொல்லற்க. இரட்டைச் சந்திரன் முதலிய பிராந்திக்குக் காரணமான அவித்தைக்கும் அதன் மித்தியாத்தன்மையின் நிச்சயமுடைய தனது ஆசிரய சீவான்மாவினிடத்தில் மோகத்தைச் செய்யுந் தன்மையின்மையின், நீ கூறிய ரீதியால் மாயையினையுடைய சீவர்கட்கு ஈஸ்வரனுல் அர்ப்பிக்கப்பட்ட அவரது மாயையினுலே இதர மோகத்தைச் செய்யுந் தன்மைபோன்று ஆகாசாதி சத்தியத்துவப் பிராந்திக்குக் காரணமான அதனுலேயே அவர்கட்கும் மோகமுடையதாந் தன்மையை யங்கீகரித்தலால் மாயைக்கும் தனது ஆசிரயத்திற்கு மோகத்தைச் செய்யுந் தன்மை சமமாதலின். இதனுல் கருத்தாவினிச்சையால் காரியத்தைச் செய்வது மாயையாம். அவித்தையோ அங்ஙனமன்ரும். ஆதலின் அவைகட்குப் பேதமாமென்பதும் கண்டிக்கப்பட்டது. மாயையின் க்ஷோபக மந்திராதிப் பிரயோகம்போன்று அவித்தையின் க்ஷோபக அலாத சக்கிரப்பிரமணுதி (கொள்ளிக்கட்டையைச் சுழற்றுதல் முதலியவை) கட்கும் கருத்தாவின் இச்சையால் சாபாதிக்கப்படுந்தன்மை யுண்மையின், மாயை க்ஷோபத்தை அடைந்தபோது அதன் காரியம் கருத்தாவிற்கு இச்சை இல்லாவிடினும் அவித்தையின் காரியம் போன்று உற்பத்தியாவதால் இரண்டின் கண்ணும் காரியத்தின் இச்சையின்ரும். விதானத்திற்கும் சமானத்தன்மை யுண்மையின்,

तरत्यविद्यां विततां हृदियस्मिन्निवेशिते ।
योगीमाया ममेयाय तस्मै विद्यात्मने नमः ॥

இருதயத்தின்கண் எந்தப் பரமான்மா ஆவிர்ப்பவித்தபோது யோகியானவன் விசாலமான அவித்தை வடிவ மாயையைக் கடக்கின்ருனே அந்த அப்பிரமேய சிதான்மாவின்பொருட்டு நமஸ்காரம் என்பது முதலிய வசனத்தால் மாயையவித்தைகட்கு அபேதமே பொருத்தமாமென்பது கருத்து. க்ஷோபம் = கலக்கம், க்ஷோபகம் = கலக்கத்தைச் செய்வது. 92

## அவதாரிகை

மாயை சத்தியமாமென்னும் இரண்டாவது பக்ஷத்தினை அபசித்தாந்தத்தின் அடைவினுல் தூஷிக்கின்ருர் :

### சுலோகம்

मायामयत्व वचनादखिलं मृषेति
यद्भाष्यकार वचनं तदसङ्गतं स्यात् ।
प्रत्यक्ष मुत्सृजति कारण मन्यदन्यद्
यत्किञ्चि दानयसि कष्टमतः किमन्यत् ॥

### பதவுரை

मायामयत्व वचनात् - மாயையேயாம் என்னும் வசனத்தால்
अखिलं मृषाइति - சருவமும் மித்தையாமென
यद् भाष्यकार वचनम् - பாஷியக்காரரது யாதொரு வாக்கியமுண்டோ
तद् असङ्गतं स्यात् - அது அசங்கதமாகும்.

மாயை சத்தியமாயின் அதன் காரியமும் அவசியம் சத்தியமாம். அதனுல்

मायैव सन्ध्ये सृष्टिर्न परमार्थ गन्धोऽप्यस्ति

சொப்பனத்தில் சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தம் மாயையே பரமார்த்த கந்தமுமின்ருும் என்பது முதலிய பாஷியக்காரரது வசனம் அப்பிரமாணமாகும். மாயையின் காரியத்திற்கும் சத்தியத்தன்மையை யங்கீகரிக்கின் मायामात्र तु மாயா மாத்திரமாமென்னும் சிந்தாந்த சூத்திரமும் அசங்கதமாகும். सन्ध्ये सृष्टिराहुहि சொப்பனத்தில் சிருஷ்டி சத்தியமாம். சுருதி கூறுதலின் என்று கூறப்பட்ட பூருவபக்ஷத்தினை நிராகரணஞ் செய்தமையின், "பரமார்த்த வஸ்து தருமத்தால் சொப்பனம் அநபிவியத்த சொரூபமாதலால்" என சூத்திரத்திற் கூறிய ஏதுவும் விருத்தமாம். அது (மாயையின் காரியம்) அசத்தியத் தன்மையால் வியாப்தமாதலின்

மாயையைச் சத்தியமென அங்கீகரிக்கின் அதற்கு ஞான நிவர்த்தியத்தன்மை பொருந்தாமையால் "மறுபடியும் அந்தத்தில் விஸ்வமாயை நிவர்த்தியாம்': "இந்த மாயையைக் கடக்கின்றார்கள்" என்பது முதலிய வசனமும் அப்பிரமாணமாகுமென்பது கருத்து. மேலும் மாயையைப் பார்க்கின்றவர்கட்கு அதன் (மாயையின்) தத்துவ விஷயக அஞ்ஞானம் அனுபவசித்தமாக இருக்கின்றதேயாம். அதனுல் அவ்வஞ்ஞானத்திற்கே அன்வய வியதிரேகங்களால் காணப்படுகின்ற ஏதுத்தன்மை சத்தவாச்சியத் தன்மைகள் சம்பவிக்கும்போது அதனினும் வேருக சத்தியாவது சத்தியினையுடையதாவது மாயை கற்பிக்கத்தக்க தன்றும். கற்பகமின்மையின், கற்பகமின்றியும் கற்பனையை யங்கீகரிக்கின் அதிப்பிரசங்கமாமெனக் கூறுகின்ருர்.

प्रत्यक्षं कारणम् – சருவஜனங்களின் அநுபவமாயுள்ள மாயாவிவிஷய அஞ்ஞானத்தை

उत्सृजसि – தியாகஞ் செய்கின்ருய்

अन्यद् अन्यद् यत्किञ्चित् – யாதேனும் வேறு வேறு காரணத்தை

आनयसि – மாயாசத்தப் பிரவிருத்தியில் கொண்டுவருகிருய்

अतः अन्यत् – இதைப் பார்க்கிலும் வேறே

किं कष्टम् – என்ன கஷ்டமிருக்கின்றது? 93

## அவதாரிகை

அற்றேல் சருவஞ்ஞ ஈசுரனிடத்தில் அஞ்ஞத்தன்மைக்குப் பிரயோஜகமான அஞ்ஞானம் சம்பவியாமையின் அவனிடத்தில் சுருதி ஸ்மிருதிப் பிரஸித்தமான மாயை அதனினும் அன்னியமாகவே சகத்தின் காரணமாக அங்கீகரிக்கத் தக்கது என்னுஞ் சங்கைக்கு சின்மாத்திரத்தை யாசிரயித்த அஞ்ஞானம் அவ்வடிவ (சின்மாத்திர) ஈசுரனிடத்திலிருந்த போதிலும் அது அவனைக் குறித்து சொரூபத்தை மறைக்காமையின் அவனிடத்து அஞ்ஞத்துவாதிக்கு அப்பிரயோஜக

மான அஞ்ஞானமே கூறிய மாயையாக அங்கீகரித்தற்கு யோக்கியமாம். வேருக மாயையைக் கற்பித்தல் வீணேயாம் என்னுங் கருத்தாற் பரிகரிக்கின்ருர்—

சுலோகம்

अज्ञानमेव च भविष्यति शक्तिरेषा
सर्वप्रपञ्च जननी परमेश्वरस्य ।
माया श्रुतिस्मृतिवचोभिरुदीर्यमाणा
शक्तिग्रहोहि परविभ्रम हेतुशक्तौ ॥

பதவுரை

श्रुतिस्मृति वचोभिः – சுருதி ஸ்மிருதி வாக்கியங்களால்
उदीर्यमाणा – சொல்லப்படுகின்றதும்
सर्वप्रपञ्च जननी – சருவப் பிரபஞ்சத்தின் காரணமானதுமான
परमेश्वरस्य – பரமான்மாவின்
एषा माया शक्तिः – யாதொரு இந்த மாயாசக்தி யுண்டோ, அது
अज्ञानमेव च भविष्यति – அஞ்ஞானமேயாம். அதனினும் வேறன்ரும்.

விசேஷவுரை

அற்றேல் மாயையைக் காண்கின்றவரின் அநுபவசித்த அஞ்ஞானத்திற்கே மாயைத்தன்மை யுண்மையால் அவ்வஞ்ஞானத்தின் கண்ணும் காண்கின்ற அவர்களிடத்திலும் மாயை மாயாவி என்னும் சத்தத்தின் பிரயோகம் உண்டாதல் வேண்டும் என்னுஞ் சங்கைக்கு அநாதிவிருத்த வியவகாரத்தை யநுசரித்து இதரப் பிராமகத்துவ விசிஷ்ட (அன்னியரைச் சுழற்றுவிக்குந் தன்மையோடு கூடிய) அஞ்ஞானத்தின்கண் மாயை சத்தத்திற்கு சத்திக்கிரகணமாதலால் பின்னர் அதன் கண்ணேயே அதன் பிரயோகமாம். அப்படியே அதனையுடைய அப்பிராந்த (பிராந்தியற்ற) புருஷனிடத்தில் மாயாவி சத்தத்தின் பிரயோகமாம். அஞ்ஞான மாத்திரத்திலாவது அதனை உடையவரிடத்தில்

மாத்திரமாவது அச்சத்தங்களின் பிரயோகமன்றாம். இவ்வாறு வியவஸ்தை பொருந்துதலின் அங்ஙனமன்றெனக் கருதிக் கூறுகின்றார்.

परविभ्रम हेतुशक्तौहि – அன்னியரின் பிராந்திக்குக் காரணமான யாதொரு சக்தியுண்டோ அதன் கண்ணேயே

शक्तिग्रहः – மாயா சத்தத்திற்கு சத்திக் கிரகணமாம். 94

அவதாரிகை

அற்றேல் யூபம் ஆஹவநீயம் முதலிய சத்தத்திற்குப் போன்று மாயையைப் பிரகிருதியென அறியவேண்டும் என்பது முதலிய வாக்கியத்தின்கண் மாயை சத்தத்திற்கு பிரசித்தார்த்தகபத இதர பதத்தின் சமபிவியாகாரத்தால் அலௌகிக ஈசுரனது சத்தியாகிய சகத்தினுபாதானத்தின் கண் சத்திக்கிரகணம் சம்பவித்தலால் தனது ஆசிரயத்தினும் அன்னியருக்கு மோகத்தைச் செய்கின்ற அஞ்ஞானத்தின்கண் மாயாசத்தத்திற்கு சத்திக்கிரகணத்தைக் கற்பித்தல் பொருத்தமன்றாமெனின் அற்றன்றெனக் கூறுகின்றார்—

சுலோகம்

नचप्रसिद्धार्थ पदान्तराणां प्रयोगसान्निध्यवशेन शक्तिः ।
ग्रहीष्यतेऽस्येति समञ्जसंस्यादलौकिके शब्दइदंहि युक्तम् ॥

பதவுரை

प्रसिद्धार्थ पदान्तराणाम् – பிரசித்த அருத்தத்தினையுடைய இதர பதங்களின்

प्रयोग सान्निध्यवशेन – சமீபப் பிரயோக வசத்தால்

अस्य शक्तिः – மாயாபதத்தின் சத்தி

ग्रहीष्यते इति – கிரகிக்கப்படும் என்பது

न च समञ्जसं स्यात् – பொருத்தமன்றாம்.

அற்றேல் யூப ஆஹவநீயாதி சத்தம்போன்று என்று கூறப்பட்டதே எனின் அதற்குக் கூறுகின்றார்.

अलौकिके शब्दे हि – வைதிக சத்தத்தின் கண்ணேதான்

इदं युक्तम् – நீ கூறியபடி சத்தியின் கிரகணம் பொருத்தமாம்.

விசேஷவுரை

உலகின்கண் விருத்தபுருடரது வியவகாரத்தில் யூபம் முதலிய சத்தப்பிரயோகமின்மையினுல் விருத்தவியவகாரத்தின் அதீனமாக சக்திஞானம் சம்பவியாது. அதனுல் வேதத்தின்கண் பிரயோகிக்கப்பட்ட யூபம் முதலிய சத்தத்திற்கு சத்திஞானமின்றி அதனேடு கூடிய வாக்கியத்திற்கு போதிக்குந்தன்மை பொருந்தாமையின். அதனது சத்திஞானத்தின்கண்ணும் வேறு உபாயமின்மையினுல் பிரசித்தார்த்தத்தினையுடைய பதங்களின் சமீப உச்சாரணமே அதன் உபாயமாமென்பது பொருத்தமாமென்பது பொருள். 95

அவதாரிகை

மாயாசத்தத்தின்கண் யூபாதிசத்தத்தினும் விஷமத்தன்மையினைக் கூறுகின்ருர்—

சுலோகம்

अयंतु मायेति नशब्द एव मलौकिको लौकिकएव तस्मात् ।
यदर्थवाची जगतिप्रसिद्ध स्तमेववेदेऽपि सवक्ष्यतीह ॥

பதவுரை

एवम् – யூபம் முதலிய சத்தம் போன்று

माया इति अयं शब्दः – மாயையென்னு மிந்த சத்தம்

अलौकिकः न – அலெளகிகமன்ரும்

तु लौकिक एव – மற்ருே இலெளகிகமேயாம்.

அதற்கு இலெளகிகத்தன்மை சித்தித்த வழி பலிதத்தைக் கூறுகின்ருர்.

तस्मात् – மாயாசத்தம் இலெளகிகமாதலால்

इह जगति – ஈண்டு உலகில்

यदर्थवाची – எச்சத்தம் எப்பொருளின் வாசகமாக

प्रसिद्धः – பிரசித்தமோ

वेदेऽपि – வேதத்தின்கண்ணும்

सः तमेव वक्ष्यति – அச்சத்தம் அப்பொருளையே பிரதிபாதிக்கும்.

விசேஷவுரை

மாயையைப் பிரகிருதியென அறியவேண்டும் என்பது முதலிய வாக்கியத்தின்கண் இலௌகிக விருத்தரது வியவகாரத்தில் பிரயோகிக்கப்படுகின்ற மாயாசத்தத்திற்கு அன்னியரது பிராந்திக்கேதுவான அநிர்வசனீய வஸ்துவின் கண்ணேயே கூறிய பிரகாரத்தால் சத்தியினைக் கிரகித்த லின் அச் சத்தார்த்தங்களே வேதத்தின்கண் பிரத்தியபிஞ்ஞையால் அறியப்படுதலின் அப்பொருளை யாசிரயித்தே வாக்கியார்த்தப்பிரதீதி பொருந்தும்போது ஆண்டு தனியே சத்தியினைக் கிரகிப்பதில் பிரமாணமும் பிரயோஜனமுமின்மையினுல் அது (தனியே சத்தியினைக் கிரகித்தல்) பொருத்தமற்றதேயாம். ஆண்டு தனியே சத்தியினைக் கிரகிக்கின் விரீஹி முதலிய சத்தங்கட்கும் நீ கூறிய பிரகாரத்தால் வேதத்தின்கண் தனியே சத்தியினைக் கிரகித்தல் நேருமாதலின் என்பது கருத்து. 96

அவதாரிகை

அற்றேல் உற்பித்து. சித்திரா என்பது முதலிய சத்தங்கள் உலகின்கண் மண்வெட்டி, நிறம் முதலிய பொருள்களின் வாசகங்களாயினும் வேதத்தில்

उद्भिदा यजेत पशुकामः चित्रया यजेत पशुकामः

பசுவை விரும்பியவன் உற்பித்தால் யஜிக்குக. பசுவை விரும்பியவன் சித்திரையால் யஜிக்குக என்பது முதலிய பிரயோகங்களில் இலௌகிகார்த்தத்தைப் பரித்தியாகஞ் செய்து கருமவிசேஷத்தின் நாமதேயங்களாகப் பூர்வகாண்டத்தில் நிரூபிக்கப்பட்டுளது:

அஃதெப்படியெனின் ஆண்டு யஜிக்குக என்பதற்கு யாகத்தால் இஷ்டத்தைப் பாவிக்குக எனப் பொருள்கொள்ளின் மண்வெட்டி வாசக உற்பித்பதத்திற்கு சாமானாதிகரண்யமாக அதாவது உற்பித்துவடிவ யாகத்தால் என

அன்வயம் சித்திக்காது. உற்பித்பத யாகபதங்கட்கு ஏகார்த்தத்தன்மை சப்பவியாமையின். உற்பித்பதத்தால் அதனையுடையது விவக்ஷிக்கப்பட்டமையின் சாமானுதிகரண்ய அன்வயம் பொருத்தமாமென்று சொல்லற்க. அவ்வாருயின் மத்துவர்த்த (உடைமைப் பொருளில்) லக்ஷணைப் பிராப்தியாதலின். வையதிகரண்யத்தாலும் அன்வயம் இன்ரும். அதாவது உற்பித்தால் யாகத்தைப் பாவிக்குக. யாகத்தால் இஷ்டத்தைப் பாவிக்குக எனவும் அன்வயம் சம்பவியாது. எதனுலெனின் அப்போது அதாவது வையதிகரண்யான்வயத்தில் தயிரால் யஜிக்குக என்பதுபோன்று அன்னியத்தாற் பிராப்தமான யாகத்தின் அநுவாதத்தால் குணவிதியாகவாவது அல்லது சோமத்தால் யஜிக்குக என்பதுபோன்று விசிஷ்ட விதியாகவாவது ஆகும். முதற்பக்ஷம் சரியன்ரும். வேறு அதிகாரத்திலுள்ள யஜிசதத்தால் அபூருவ (நூதன) யாகம் பிரதீதியாதலின் அதனை யநுவதித்தல் கூடாமையால் அதன்கண் குணவிதி சம்பவியாதாதலின், இரண்டாவது பக்ஷமும் சரியன்ரும். அப்போது உற்பித் சாந்திய யாகத்தால் பசுவைப் பாவிக்குக என வாக்கியார்த்தம் ஆகும். அதுவோ சம்பவியாது. யாகத்தால் பசுவைப் பாவிக்குக என்னுமித் துணையானேயே அதிகாரவிதிக்கு ஆகாங்க்ஷை சாந்தியானமையின் விசிஷ்ட விஷயகத்தன்மையில் கௌரவதூஷணம் வருதலின், இரக்தபட நியாயத்தால் உற்பித்திற்கும் வாக்கியார்த்தத்தினுள் பிரவேசத்தை யங்கீகரிக்கின் யோக்கியதையின் அநுசாரத்தால் உற்பித்தால் யாகத்தையும் யாகத்தால் பசுவையும் பாவிக்குக என இவ்வாறே அன்வயமுண்டாம். அதனுல் ஓர் தடவை கேட்கப்பட்ட யாகத்தின்கண் வாஜபேயாதிகரணத்திற் கூறப்பட்ட நியாயத்தால் குணத்தை விதித்தற்பொருட்டு உத்தேசியத்தன்மையால் சித்தத்தன்மையும் பலனையுத்தேசித்து விதேயத்தன்மையால் அநுஷ்டேயத் தன்மையும்: உத்தேசியத் தன்மையாலேயே அநுவாத்தியத்தன்மையும், விதித்தலாலேயே அஞ்ஞாதத் தன்மையும் குணசாத்தியத்தன்மையால் பிரதானத்தன்மையும், பல சாதனத்தன்மையால் குணத்தன்மையும் ஆம். இவ்வாறு விருத்தத்திரிகத் துவயத்தின் பிராப்தியாம். சோமத்தால் யஜிக்குக என்பதன் கண்ணே திரவிய விசிஷ்ட யாகத்தின் உற்பத்திவிதித்தன்மையுண்மையால் அன்வய

பேதமின்மையின் விருத்தத்திரிகத்துவயத்தின் பிராப்தியின்ரும். ஆதலால் உற்பித் பதார்த்தபாகிய உலகப்பிரசித்த மண்வெட்டி முதலியவற்றிற்கு வேதவாக்கியார்த்தத்தில் எவ்வாற்ருனும் அன்வயம் பொருந்தாமையால் டித்தன் முதலிய பதம் போன்று சமீபத்திலுச்சரிக்கப்பட்ட கருமத்தின் நாமதேயமாகக் கற்பித்தலால் வைதிக உற்பித் முதலிய பதத்திற்கு ஆண்டு பின்னமாக சத்தியுளதென சித்தித்தது. அவ்வாறு மாயாசத்தத்திற்கும் வேதத்தின்கண் பின்னமாகப் பொருளுடைமையாம் என சங்கிக்கின்ருன் :

சுலோகம்

ननूद्भिदादेर्यदिनामलोके प्रसिद्धमर्थान्तर वाचकत्वम् ।
तथापिभावार्थनिपीडितस्य विजानते कर्मणिशक्तिमस्य ॥

பதவுரை

ननु – அற்றேல்

उद्भिदादे: – உற்பித்து முதலிய சத்தத்திற்கு

लोके यदि नाम – உலகின்கண் எப்படியும்

अर्थान्तर वाचकत्वम् – மண்வெட்டி முதலிய வேறு பொருளின் வாசகத்தன்மை

प्रसिद्धम् तथापि – பிரசித்தமாம் அங்ஙனமாயினும்

भावार्थनिपीडितस्य – பாவார்த்தவாசக யஜிபதத்தின் சாமாஞதிகரண்யத்தால் தள்ளப்பட்ட இலௌகிகார்த்தத்தினையுடைய

अस्य – உற்பித் முதலிய சத்தத்திற்கு

कर्मणि शक्तिम् – கருமத்தின்கண் சத்தியினை அதாவது யாக வாசகத்தன்மையினை

विजानते – பரீக்ஷகர் நிரூபிக்கின்றனர்.

97

அவதாரிகை

கூறிய நியாயத்தால் வைதிக உற்பித்து முதலிய பதத்திற்கு வேறு பொருளையுடையதாந் தன்மையினை யங்கீகரித்து தார்ஷ்டாந்தத்தில் மாயாசத்தத்தின்கண் அதன் விஷமத் தன்மையினைக் கூறுகின்றவராய்ப் பரிகரிக்கின்ருர் :

சுலோகம்

सत्यं नगत्यन्तरमस्ति तत्र ततस्तथा निश्चितमत्र नैवम् ।
मायागिरोऽज्ञाननिवेदनेऽपि नकाचिदत्रानुपपत्तिरस्ति ॥

பதவுரை

सत्यम् – நீ கூறியது உண்மைதான்
அங்கீகரித்ததனையே கூறுகின்றார்.

तत्र गत्यन्तरं नास्ति –ஆண்டு வேறு வழியில்லை

ततः तथा निश्चितम् –ஆதலால் அவ்வாறு நிச்சயிக்கப்பட்டது.

வைதிக உற்பித்து முதலிய பதத்தின்கண் கரும நாம தேயத்தன்மையின்றி இலௌகிகார்த்தத்தைப் போதித்தலால் வாக்கியார்த்த ஞானத்தி னுபயோகித்தன்மையின்றுப். ஆதலால் கருமநாமத்தன்மையால் வேதத்தின்கண் வேறுக சத்தி நிச்சயிக்கப்பட்டுள்ளது என்பது பொருள்.

மாயாசத்தத்தின்கண் விஷமத் தன்மையினைக் கூறுகின்றார் :

अत्र न एवम् – ஈண்டு அங்ஙனமின்றும்
அதன்கண் ஏதுவைக் கூறல்

माया गिरः – மாயா சத்தத்திற்கு

अज्ञान निवेदनेऽपि – அஞ்ஞானத்தைப் போதிக்குந் தன்மை யுடன்படினும்

अत्र – வேதத்தின்கண்

काचिद् अनुपपत्तिः – யாதோர் அநுபபத்தியும்

न अस्ति – இன்றும்.

விசேஷவுரை

மாயையைப் பிரகிருதியென வறியவேண்டும் என்னும் வாக்கியத்தின்கண் மாயாசத்தத்திற்கு உலகின்கண் அதன் பொருளாக அறியப்பட்ட அஞ்ஞானத்தைப் போதிக்குந் தன்மை யுடன்படினும் யாதோர் குறைவுமின்றும். அதற்கு அநிர்வசநீய சகத்தின் பிரகிருதித்துவ யோக்கியத் தன்மை யுண்மையின் என்பது பொருள்.

## அவதாரிகை

மாயையைப் பிரகிருதியென வறியவேண்டும் என்பதன் கண் மாயாசத்தத்திற்கு இலௌகிக அஞ்ஞானமாகிய அர்த்தத்தை யுடன்படினும் யாதோர் அநுபபத்தியுமின்றும் அங்ஙனமாயினும்

" मायिनं तु महेश्वरम् "

மாயையையுடையவன் மஹேஸ்வரன் என்னும் வாக்கியத்தில் அநுபபத்தியுளதேயாம். சருவஞ்ஞத்தன்மை முதலியவற்றினையுடைய மஹேஸ்வரனுக்கு அஞ்ஞத்தன்மை பொருந்தாமையின் என்றுசங்கித்து சொரூபமாக கூடஸ்த அசங்க அத்துவிதீய சித்வடிவ ஈஸ்வரனுக்கு சடப்பிரபஞ்சத்தின் உற்பத்திக்கநுகூலமான சத்திவடிவ அஞ்ஞானத்தை யங்கீகரிக்கினும் அதற்கு அவனைக் குறித்து சீவனுக்குப்போன்று சொரூபத்தை மறைக்குந்தன்மை யின்மையின் ஈசுரனுக்கு அஞ்ஞத்துவாதியின் பிரசங்காபாவம் அநேகவிடங்களில் நிரூபிக்கப்பட்டமையின் சருவஞ்ஞத்துவாதியின் அவிரோதியான அஞ்ஞாஞசிரயத்தன்மையை யங்கீகரிக்கின் யாதோர் அநுபபத்தியுமின்றுமெனக் கூறுகின்றார்.

## சுலோகம்

अज्ञानं जडशक्तिमात्रवपुषा सर्वेश्वरस्येष्यते
सर्वज्ञत्व विरोधि तन्नचभवेदुक्तप्रकारेण नः ।
सर्वज्ञेश्वर संश्रया भवति सैवाज्ञानमायाश्रुतौ
तस्मादुद्भिदिवेति वर्णनमिदं वैषम्यदुष्टं तव ॥

## பதவுரை

सर्वेश्वरस्य – பரமேஸ்வரனுக்கு

अज्ञानम् – அஞ்ஞானமானது

जडशक्तिमात्रवपुषा – சடசத்திமாத்திரவடிவத்தால்

इष्यते – அங்கீகரிக்கப்படுகின்றது

तच्च नः – அவ்வஞ்ஞானமும் எமது மதத்தில்

उक्तप्रकारेण – முற்கூறிய பிரகாரத்தால்
सर्वज्ञत्व विरोधि – சருவஞ்ஞத்தன்மைக்கு விரோதியாக
न भवेत् – ஆவதின்றும்
श्रुतौ – மாயையையுடையவனென்பதாதி சுருதியின்கண்
सा अज्ञानमाया एव – உலகப்பிரசித்தமான அஞ்ஞான வடிவ மாயையே
सर्वज्ञेश्वर संश्रया – சருவஞ்ஞ ஈசுரனை யாசிரயித்ததாக
भवति – விவக்ஷிக்கப்பட்டதாகின்றது.

திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

तस्मात् – ஆதலால்
उद्भिदिव इति – உற்பித்பதம் போன்று மாயாபதமுமாமென
तवइदं वर्णनम् – உனது இவ்வியாக்கியானம்
वैषम्यदुष्टम् – விஷமத்தன்மையால் தூஷிக்கப்பட்டதாம்.

விசேஷவுரை

மாத்திரபதத்தால் சருவேசுரனைக் குறித்து அஞ்ஞானத்திற்கு சொரூபத்தை மறைக்குந் தன்மை நிவர்த்திக்கப்பட்டது. வைதிக மாயாசத்தத்திற்கு உலகப்பிரசித்தமான அர்த்தத்தையறிவிக்குங்காலத்தில் அநுபபத்தி யின்மையால் அதற்கு உற்பித் முதலிய பதத்தின் சமத்தன்மைக் கூற்று பொருத்தமற்றதேயாமென்பது கருத்து. 99

அவதாரிகை

அற்றேல் உலகின்கண் மாயாசத்தம் அஞ்ஞானவாசகமாமென்பது பிரசித்தமின்றும். எதனால் வேதத்தின் கண்ணும் அப்பொருள் சித்திக்கும். மாயாவியின் அஞ்ஞானம் மாயாசத்தத்தின் பொருளாமென்று சொல்லற்க. விசேஷ தெரிசனமுடைய அவனுக்கு பிராந்தியின்மையால் அதன் மூலமான அஞ்ஞானம் பொருந்தாமையின், சமீபத்திருப்பவருக்கு அதன் விஷயக அஞ்ஞானமுளதேனும் அவர்களிடத்தில் மாயாவித்தன்மைப் பிரசித்தியின்மையால்

மாயாசத்தத்திற்கு அவரது அஞ்ஞானவாசகத்தன்மையும் பொருத்தமன்ரும் என்ருசங்கித்து காண்பவரது பிராந்திக்கு உபாதானமாயுள்ள அஞ்ஞானமே உலகில் மாயாவியின் மாயையாமென சொல்லப்படுகின்றது. அதுவும் சின்மாத்திரத்தினையே ஆசிரயமாகவும் விஷயமாகவுமுடைய மூலாஞ்ஞானமேயாமென்னும் கூடாபிப்பிராயமுடையவராயிருந்துகொண்டு பரிகரிக்கின்ருர்—

சுலோகம்

मायाऽनिर्वचनीयमेवतु तमोमायाविनो गीयते
द्रष्टृणां भ्रमकारणं विषयता मायावितातस्यतु।
तंहस्यादि विकल्पना घटितवन्मूढाशयाजन्तवो
रज्जुं सर्पतयैव तद्विरहितं जानन्त्य बुद्धत्वतः॥

பதவுரை

द्रष्टृणां भ्रमकारणम् – புலி முதலியவற்றைக் காண்பவரது பிராந்திக்குக் காரணமான

अनिर्वचनीयमेव – அநிர்வசனீயமேயாகிய

तमस्तु – அஞ்ஞானமே

मायाविनः माया – மாயாவியின் மாயையாமென

गीयते – சொல்லப்படுகின்றது.

அநிர்வசனீயமே என்னும் ஏகாரத்தால் அஞ்ஞானத்தின் சத்தியத்தன்மை நிவர்த்திக்கப்பட்டது.

அற்றேல் மாயாவியின்கண் வியாக்கிரம் முதலியவற்றின் பிராந்திக்குக் காரணமான அஞ்ஞானம் அவனுக்கின்ரும் மற்ருே புலி முதலியவற்றைக் காண்பவருக்கே அவ்வஞ்ஞானமாம். மாயாவி புருடனே அதன் விஷயமேயாம். அதன் ஆசிரயன் அன்ரும். ஆதலால் அன்னியர்களை யாசிரயித்துள்ள அஞ்ஞானத்தினை மாயையென அங்கீகரிக்கின் அவ்வஞ்ஞானத்திற்கு ஆசிரயனுகாத புருடன் எப்படி மாயாவியாவன் என்னும் சங்கை முற்கூறிய அபிப்பிராயத்தை யறியாதவனுக்கு உண்டாகின்றது. அச்

சங்கையை யங்கீகரித்து ஏகதேசிகளால் கூறப்பட்ட பரிகா ரத்தினைக் கூறுகின்றார்.

तस्य विषयितातु – அவ்வஞ்ஞானத்தின் விஷயத்தன்மையே

मायाविता – மாயாவித்தன்மையாம்.

அதன் ஆசிரயத்தன்மையன்றும். உலகின்கண் மாயையைக் காண்பவரால் அறியப்படாத புருடனிடத்தி லேயே மாயாவிசத்தத்தின் பிரயோகமும் பிரத்தியமும் நியமமாக வுண்மையின் என்பது பொருள்.

எதிரிலுள்ள மாயாவியின்கண் அவர்களால் அறியப் படாத் தன்மைதான் எங்ஙனமாம் என்றுசங்கித்து அவனை அன்னியர்கள் அன்னியப் பிரகாரத்தால் காண்கின்றமையின் உள்ளபடி யறியப்படாத்தன்மை இரஜ்ஜுவாதியிற்போன்று கற்பிக்கத்தக்கதாமெனக் கூறுகின்றார்.

मूढाशया जन्तवः – அபிப்பிராயத்தையறியாத பிராணிகள்

तद्विरहितं तम् – வாஸ்தவமாக யானை முதலிய வடிவமற்ற அம்மாயாவியை

रज्जुं सर्पतया इव – இரச்சுவைச் சர்ப்பமாக அறிவதுபோன்று

अबुद्धत्वतः – தமதஞ்ஞானத்தால்

हस्त्यादि विकल्पना घटितवत् – யானை, புலி முதலிய கற்பனை வடிவமுடையவனாக

जानन्ति – அறிகின்றார்கள்.

இவ்வாறறிவதனால் அவனிடத்தில் யதார்த்தத் தன்மை யால் அறியப்படாத்தன்மை யவசியமுளது. ஆதலின் அதுவே அவனுக்கு மாயாவித்தன்மையாம் என்பது பொருள். பிரத்தியயம் = ஞானம். 100

அவதாரிகை

அற்றேல் ஆகாசத்தின்கண்ணிருப்பதாக வுள்ளபடி விளங்குகின்ற சூரியன் முதலானவற்றில் அஞ்ஞாதத்தன்மை யின்றேனும் ஜலம் முதலியவற்றிலுள்ளதாக பிரதிபிம்பப்

பிராந்தி காணப்படுதலால் பிராந்தியின் அதிஷ்டானத்திற்கு அஞ்ஞாதத்தன்மை நியதமின்றும். இவ்வாருகவே அதனுல் மாயாவிக்கு அஞ்ஞாதத்தன்மை சித்தி யெங்ஙனமாம் என்று சங்கித்துசோபாதிகப்பிராந்திகட்கு உபாதியாற்றடுக்கப்பட்ட அதிஷ்டான தத்துவ ஞானத்தால் நிவர்த்தியத்தன்மையின் றேனும் நிருபாதிகப் பிராந்திகட்கு நியமமாக அதிஷ்டான தத்துவஞானத்தால் நிவர்த்தியத்தன்மையுண்மையின் அதன் (அதிஷ்டானத்தின்) அஞ்ஞாதத்தன்மை யின்மையினதினத் தன்மை நியதமேயாம். மாயாவியை விஷயஞ் செய்கின்ற யானை முதலிய பிராந்திக்கு உபாதியை நிருபிக்கக்கூடாமை யின் நிருபாதித்தன்மையில் விவாதமின்றும் என்று கருதி மாயாவிக்கு அதிஷ்டான தத்துவஞான யோக்கியத்தன்மை யையுபபாதனஞ் செய்கின்ருர்.

## சுலோகம்

सम्यग्ज्ञानबलेनतं विरहितं हस्त्यादिभिर्यत्क्षणे
जानीयुस्तदनन्तरं नसभवेद्धस्त्यादियुक्तः पुमान् ।
तेनासत्तम एव तत्रविषये मायाऽस्तु मायाविनः
सोऽज्ञातो वयमज्ञकोटिपतिता मायीसतेनोच्यते ॥

## பதவுரை

सम्यग्ज्ञानबलेन – யதார்த்த ஞானத்தால்

तं हस्त्यादिभिः विरहितम् – மாயாவியை யானை முதலிய வடிவ மின்றியவனுக

यत् क्षणे जानीयुः – எந்த க்ஷணத்தில் அறிவார்களோ

तदनन्तरम् – அதன் பின்னர்

सः पुमान् – அம்மாயாவியாகிய புருடன்

हस्त्यादि युक्तः – யானை முதலியவற்ருேடு தாதான்மிய முற்றவனுக

न भवेत् – ஆகான்.

மாயாவியினல் மந்திரம் முதலியவற்றினை யுபசம்மாரஞ் செய்யப்பட்டபோது மாயையைக் காண்கின்றவர்களது நேத்திராதிகட்குப் பிரதிபந்தமின்மையால் பிரதிபந்தமற்ற சந்நிகருஷம் உண்டாகின்றது, அச்சந்நிகருஷத்தால் இவன் இன்னன் எனக்கு யானை முதலிய வடிவினனகத் தோற்றுகின்றனன் என அந்த மாயாவியைச் சமீபத்திலுள்ளவர்கள் எப்போது வாஸ்தவமாக அறிவார்களோ அதனனந்தரம் அவர்கட்கு முன்போல யானை முதலியவற்றை விஷயஞ் செய்கின்ற பிராந்தியின்மையின் அம் மாயாவி தத்துவஞானத்திற்கு யோக்கியனென்பது பொருள்.

தத்துவஞானத்தால் நிவர்த்திக்கத்தக்க பிராந்தியின் அதிஷ்டானத்திற்கு அஞ்ஞானவிஷயத்தன்மை நியமமாகும் போது திரண்ட பொருளைக் கூறுகின்ருர்.

**तेन** – எதனல் மாயாவி கோசர அஞ்ஞானம் காண்பவருக்கு சித்தித்ததோ அதனல்

**तत्र विषये** – அவனை விஷயஞ்செய்கின்ற

**असत्र तम एव** – காண்பவராகிய நமது அஞ்ஞானமே

**मायाविनः** – மாயாவியின்

**मायाऽस्तु** – மாயையாம்.

ஆசிரய விஷய இரண்டன் சம்பந்தியாகிய அஞ்ஞானம் மாயையாகும்போது அதன் விஷயத்திற்கே மாயாவித் தன்மையாம். அதன் ஆசிரயத்திற்கின்ரும் என்பது எங்ஙனமாம் என்ருசங்கித்து அஞ்ஞத்தன்மை பிராந்தத்தன்மை முதலியவற்றையுடைய அஞ்ஞானத்திஞசிரயத்திற்கு மாயாவித்தன்மை உலகில் ஓரிடத்தும் காணப்படாமையினுலும் அஞ்ஞத்தன்மை முதலியவையற்ற அதன் விஷயத்தினை உலகத்திலும் வேதத்திலும் மாயாவித்தன்மையால் வியவகரித்தலாலும் அவனே அவ்வாறு சொல்லப்படுகின்ருன் என முடிக்கின்ருர்.

सोऽज्ञातः - மாயாவி நம்மால் அறியப்படாதவனுகவும்

वयम् अज्ञकोटि पतिता - நாம் அஞ்ஞபுருடரது கோடியில் அடங்கினவராகவுமிருக்கின்ருேம்

तेन सः - அதனுல் அஞ்ஞான விஷயனுகிய அவன்

मायी उच्यते - மாயாவியென்று சொல்லப்படுகின்ருன். 101

அவதாரிகை

இவ்வாறு அஞ்ஞானுன்மக மாயையின் ஆசிரய விஷய பேதத்தினை யங்கீகரித்து அதன் விஷயத்திற்கே மாயாவித் தன்மையாம் என்று ஏகதேசியினுற் கூறப்பட்டது. அதனை இப்போது ஆக்ஷேபிக்கின்ருர்.

சுலோகம்

नन्वेवंसतिरज्जुखण्डलकमप्यज्ञातमज्ञानिभिः
मायावीति गिरोच्यतां नतुतथा लोके प्रसिद्धिः क्वचित् ।
तेनाज्ञात विलक्षणत्वमुचितं मायाविनो लौकिका
मायावीति पुमांसमेवनिपुणं येनाहुरत्यादरात् ॥

பதவுரை

ननु - சங்கை

एवं सति - அஞ்ஞான விஷயத்திற்கு மாயாவித் தன்மை யாயின்

अज्ञानिभिः - அஞ்ஞானிகளால்

अज्ञातम् - அறியப்படாத அதாவது அஞ்ஞானத்திற்கு விஷயமான

रज्जुखण्डलकमपि - இரஜ்ஜுவின் துண்டமும்

मायावी इति गिरा - மாயாவி என்னும் சத்தத்தால்

उच्यताम् - சொல்லத்தக்கதாகும்

तथातुलोके - அவ்வாறே உலகின்கண்

क्वचित् नतुप्रसिद्धिः - ஓரிடத்தும் வியவகாரமின்ரும்

तेन – எதனல் அஞ்ஞாதத்தன்மை யதிப்பிரசங்கமாமோ அதனல்

मायाविनः – மாயாவியின் மாயாவித்தன்மைக்கு

अज्ञात विलक्षणत्वम् – அஞ்ஞாதத்தன்மையினும் அன்னியத் தன்மையே

उचितम् – கூறுதற்கு உசிதமாம்.

மாயாமய யானை முதலிய வடிவமின்றி தடஸ்தத்தன்மையால் சொரூபமாகப் பார்க்கப்படுகின்றவனும் அஞ்ஞாதத் தன்மையற்றவனுமான மனிதனிடத்தில் மாயாவித்தன்மை எதனல் கூறுகின்றனரோ அதனலும் அஞ்ஞாதத்தன்மை மாயாவித்தன்மையன்ரும் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

लौकिकाः – இலௌகிக மனிதர்

निपुणं पुमांसमेव – குசல புருடனையே

मायावीति – மாயாவியாமென்று

अत्यादरात् – மிகவும் விருப்பமாக

येन आहुः – கூறுகின்றனராதலின்,

துண்டமும் என்ற உம்மையால் தாணுத்தன்மையால் பிராந்திக்கு விஷயமான புருஷனை சமுச்சயஞ் செய்தனர். 102

அவதாரிகை

இவ்வாறு ஏகதேசியின் மதம் பூருவபக்ஷியினல் தூஷிக்கப்பட்டபோது தனது அபிப்பிராயத்தைப் பிரகடனஞ் செய்கின்றவராய் சித்தாந்தி கூறுகின்ருர்.

சுலோகம்

नैवं भ्रान्ति निमित्तकारणमयं संगृह्य सर्वेक्षणे
मन्त्रादिप्रचुरं प्रयत्नजनितं तज्जीवनो वर्तते ।
तेनात्रैवतु लोकरूढिरभवन्मायाविता गोचरा
यद्वद्ब्राह्मणता प्रसिद्धिरभवन्मुक्त्वा परिव्राजकान् ॥

பதவுரை

**न एवम्** – எவ்வாறு ஏகதேசியினுல் கூறப்பட்டதோ அவ்வாறு சரியன்ரும்

மற்ருே சுத்தசின்மாத்திராசிரயவிஷயகமூலாஞ்ஞானமே உலகின்கண்ணும் மாயையாம். அதுவே இலௌகிக (யானை முதலிய) மாயைக்கு உபாதானமாம். அதனதீன அஞ்ஞத்தன்மை முதலியவையற்ற பரமேஸ்வரனே மாயையால் அஞ்ஞர்களைச் சுழற்றுகின்றவனுய் யாண்டும் முக்கிய மாயாவியாம் என்பது கருத்து.

அப்படியானுல் உலகில் சீவவிசேஷனிடத்தில் மாயாவித்தன்மைப் பிரசித்தி யெவ்வாரும் என்ருசங்கித்து மாயையைக் கலக்குகின்ற மந்திரம் முதலியவற்றைப் பிரயோகிப்பவனுக்கு அதன் காரியத்தினுற்பத்தி முதலியவற்றில் சுதந்திரத்தன்மையுண்மையானும் அதனுற் செய்யப்பட்ட வியாமோகமின்மையானும் முக்கிய மாயாவியின் சமானத்தன்மை யுண்மையால் முக்கிய மாயாவியை யறியாதவனுக்கு அவனிடத்தில் முக்கியம்போன்று உலகில் மாயாவித்தன்மையின் வியவகாரமாம். மாயையால் மோகிக்கப்பட்டவரிடத்தின்ருமென்று கருதிக் கூறுகின்ருர்.

**अयम्** – பிறரை வஞ்சிக்கின்ற புருடனுனவன்

**मन्त्रादि प्रचुरम्** – மந்திரம் ஔஷதி முதலியவற்றைப் பிரதானமாகவுடையதும்

**प्रयत्न जनितम्** – பிரயத்தினத்தால் பிராப்தமுமான

**भ्रान्ति निमित्तकारणम्** – பிராந்தியின் நிமித்த காரணத்தை

**सम्गृह्य** – கிரகித்து

**तज्जीवनः** – அவ்வாறு சீவனேபாயத்தையுடைத்தானவனுகி

**सर्वक्षणे वर्तते** – எப்போதுமிருக்கின்ருன்

**तेनतु** – மாயையோடு கூறப்பட்ட சம்பந்தவிசேஷத்தாலேயே

**अत्र एव** – மாயாக்ஷேபக புருஷனிடத்திலேயே

मायाविता गोचरा – மாயாவிசத்தத்திற்கு இவன் முக்கியார்த்தமமென

लोकरूढिः अभवत् – உலகப் பிரசித்தியாமென்பது பொருள்.

அற்றேல் மாயாவிசத்தம் யௌகிக சத்தமாவதாலும் யோகமாகிய மாயாசம்பந்தம் காண்கின்றவர்களிடத்திலுமிருத்தலாலும மாயாக்ஷேபக புருஷனிடத்திலேயே அதன் பிரயோகமும் பிரத்தியயமும் எங்ஙனமாமென்ருசங்கித்து சாமர்த்தியம் (யோகம்) சமானமாயினும் முன்முன் பிரசுரப் பிரயோகத்தினதும் பிரத்தியயத்தினதும் சாமர்த்தியத்தால் ஓரிடத்திலேயே அவைகள் உண்டாகின்றன. வேறிடத்தில் இன்ரும் என்பதனைத் திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்—

परिव्राजकान् मुक्त्वा – சன்னியாசிகளை விட்டு

ब्राह्मणता प्रसिद्धिः – பிராமண சத்தத்திற்கு பிராமணத்தன்மைப் பிரசித்தி

यद्वद् अभवत् – எப்படியுளதோ அதுபோல

யாண்டு சன்னியாசிகளும் பிராமணர்களாக விவக்ஷிக்கப்பட்டார்களோ ஆண்டு கேவலப் பிராமணசத்தத்தால் அவர்களின் பிராப்தியுண்டாவதின்ரும். சன்னியாசி சத்தத்திற்கும் பிரயோகம் காணப்படுதலால், கேவலப் பிராமண சத்தத்தால் சன்னியாசிகளின் பிரசித்தி யெப்படியின்ருே அதுபோல் என்பது பொருள். நான்காவது பாதத்திற்கு மற்ருேர் அவதாரிகையும் மற்ருேர் பதப்பொருளும் வருமாறு. முக்கியார்த்தத்தை யறியாதவருக்கு கௌணார்த்தத்தில் முக்கியம் போன்று வியவகரித்தலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர்—

परिव्राजकान् – பிராம்மண சத்தத்திற்கு முக்கியார்த்தமான பிரம்மவேத்தாக்களாகிய சந்நியாசிகளை

मुक्त्वा – பரித்தியாகஞ் செய்து

यद्वद् ब्राह्मणता प्रसिद्धिः – எப்படி சிகை யஞ்ஞோபவீதமுடையவரிடத்தில் பிராமணத்தன்மைப் பிரசித்தி

अभवत् – உளதோ அதுபோன்று.

விசேஷவுரை

"சிரவண மனன நிதித்தியாசனங்களைச்செய்து பின்னர் பிராமணனாகின்றான்", "ஞானமயமான சிகையும் ஞான மயமான யஞ்ஞோபவீதமும் எவனுக்கு இருக்கின்றதோ அவனுக்கு சம்பூர்ண பிராமணத்தன்மையுமுளது என பிரம்மவேத்தாக்கள் அறிகின்றனர்" என்பதாதி வசனத்தால் கூறப்பட்ட பிரய்மத்தையறிந்த சன்னியாசிகளாகிய முக்கியப் பிராமணர்களைப் பரித்தியாகஞ் செய்து சிகை முதலியவற்றை யுடையவரிடத்திலேயே பிராமணசத்தத்தின் பிரசித்தியாவதுபோன்று ஈசுரனாகிய முக்கிய மாயாவியைப் பரித்தியாகஞ் செய்து உலகில் அன்னியருக்குப் பிராந்தியை உண்டுபண்ணுகின்ற பிராகிருத மனிதரிடத்தில் மாயாவித் தன்மையின் பிரசித்தியாம் என்பது பொருள். 103

அவதாரிகை

இவ்வாறு மாயை யவித்தைகட்கு அபேதத்தினையும் அதன்கண் பாதகமின்மையினையும் உபபாதனஞ் செய்து அதன் அநுவாதத்தால் திரண்டபொருளைக் கூறுகின்றார்—

சுலோகம்

एवं तावल्लोकसिद्धा माया
मिथ्याज्ञाना द्भिद्यतेऽतश्चतत्र ।
शक्तिव्याप्ति प्रत्ययौ वर्णयित्वा
वेदाल्लिङ्गा च्चान्यमायात्व सिद्धिः ॥

பதவுரை

एवं तावत् – இவ்வாறு கூறிய யுக்தியினால்

लोकसिद्धा माया – லௌகிக மாயையானது

मिथ्या ज्ञानात् – அஞ்ஞானன்மகாவித்தையில் நின்றும்

न भिद्यते – யாதொரு காரணத்தால் பின்னமின்றோ

अतश्च – அக்காரணத்தாலேயே

तत्र – லௌகிக மாயையின்கண்

शक्तिव्याप्ति प्रत्ययौ – மாயாசப்தத்திற்கு சக்தி ஞானத்தினை யும், மாயாமயத்தன்மை லிங்கத்திற்கு வியாப்தி ஞானத்தினையும்

वर्णयित्वा – பிரதிபாதித்து. அதாவது சம்பாதித்து

वेदात् – வைதிக மாயா சப்தத்தாலும்

लिङ्गात् च – காரியத்தன்மை வடிவ லிங்கத்தாலும்

अन्य मायात्वसिद्धिः – அன்னியத்திற்கு மித்தியாத்தன்மையின் சித்தியாம்.

விசேஷவுரை

உலகிற் சித்தித்த மாயையுமதன் காரியமும் அவித்தை யதன் காரியங்களினின்றும் வேறின்ரும். இவ்வேதுவினு லேயே உலகின்கண் மாயாசப்தத்திற்கு அவித்தையின்கண் சக்தி ஞானத்தினையும் எது மாயையின் காரியமோ அது அவித்தையின் காரியமாம் என வியாப்திஞானத்தினையும் சம்பாதித்து வைதிக மாயாசப்தத்தால் ஆகாசாதி துவைதத் தின் பிரகிருதிக்கும் காரியத்தன்மை லிங்கத்தால் அதன் காரியமாகிய துவைதத்திற்கும் மித்தியாத்துவத்தைச் சாதிக்கவேண்டுமென்பது பொருள். 104

அவதாரிகை

சுக்தி முதலியவற்றி னஞ்ஞானத்தின்கண் மாயைத் தன்மையின் பிரசித்தியின்மையால் அஞ்ஞானத்திற்கும் மாயைக்கு மபேதமெங்ஙனமாம் என்ருசங்கித்து அங்ஙன மாயினும் அஞ்ஞானத்தினும் வேறிடத்தில் அதன் பிரசித்தி யின்ரும். மூலாஞ்ஞானத்திற்கே கூறிய ரீதியால் அவ்வாறு பிரசித்தி யுண்மையின் என்னு மபிப்பிராயத்தால் கூறு கின்ருர் —

சுலோகம்

जाग्रद्भूमौ या प्रसिद्धेह माया
निर्णीता सा ताव दज्ञानमेव ।
तस्यां शक्ति व्याप्तिविज्ञानसिद्धे
विज्ञातव्यासैव वेदानुमानात् ॥

பதவுரை

इह जाग्रद्भूमौ – இவ்வுலகில் சாக்கிராவஸ்தையின்கண்

प्रसिद्धा या माया – மாயாவியின்கண் பிரசித்தமான யாதொரு மாயையுளதோ

सा तावदज्ञानं एव – அஃது அஞ்ஞானமேயாம் என

निर्णीता – நிச்சயிக்கப்பட்டது.

அதனுலும் ஜாக்கிரப்பிரபஞ்சத்திற்கு மாயையின் காரியத் தன்மையைக் கூறும் சுருதியினுலும் கூறிய பிரகாரத்தால் அதன் மித்தியாத்தன்மை சித்தியாமென திரண்ட பொருளை முடிக்கின்ருர்.

तस्याम् – மாயையின்கண்

शक्तिव्याप्ति विज्ञानसिद्धेः – சக்திஞானமும் வியாப்திஞானமும் சித்தித்தலால்

वेदानुमानात् – வேதவசனத்தினுலும் அனுமானத்தினுலும்

सा एव विज्ञातव्या – அந்த மாயையே அறியத்தக்கதாம். 105

அவதாரிகை

மூலாஞ்ஞானமே மாயையாகுமாயின் அப்போது சீக்கி ரத்தில் பாதிக்கப்படுகின்ற சொப்பனத்திற்கு அதன் காரியத்தன்மை பொருந்தாமையால் அதன்கண் சூத்திரக் காரரது மாயாமாத்திரத்தன்மையின் கூற்று எங்ஙனமாம் என்ருசங்கித்து சுக்தி ரஜதாதிக்குப்போன்று சொப்பனத் திற்கு ஒன்றினுல் வளைபட்ட சைதன்னியத்தின் அஞ்ஞான காரியத்தன்மையினைக் கூறுதற்கு முடியாதாகலின் ஜாக்கிரம் போன்று பூர்ணவான்மாவின் கண்ணேயே யத்தியாசமாத லால் பூர்ண சைதன்னியத்தினை விஷயஞ்செய்கின்ற மூலாஞ் ஞானத்தின் காரியத்தன்மையே அதற்கு அவசியம் அங்கீ கரிக்கத்தக்கதாம். இக்காரணத்தாலேயே சொப்பனத்திற்கு ஜாக்கிர ஞானத்தினுல் காரியசகித வவித்தையின் நிவர்த்தி வடிவ பாதம் சம்பவிக்கின்றதில்லை. மற்ருே மித்தியாத் தன்மையின் நிச்சயமாத்திர வடிவ பாதமாம், அதுவும்

பிரசித்த மாயா காரியத்தின் கண்ணும் சமானமாம். இவ்வாறாகவே சொப்பனம் மாயாமாத்திரமாம் என்னுஞ் சூத்திரக்காரரது வசனமும் பொருத்தமேயாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

சுலோகம்

स्वप्नेऽप्येवं स्वप्नदृङ् मोहमात्रा
दन्या काचि न्नप्रसिद्धास्ति माया ।
तत्रैवायं सूत्रकारस्य तस्मात्
मायाशब्दो वर्तते नापरत्र ॥

பதவுரை

स्वप्ने एवं अपि - சொப்பனாவஸ்தையில் அஞ்ஞானமே யதனுபாதானமாயினும்

स्वप्नदृङ्मोहमात्रात् - சொப்பன திருஷ்டாவான சுத்த சைதன்னிய விஷயகவஞ்ஞானத்தினும்

अन्या काचित् माया - வேறாக அவச்சின்ன சைதன்னியவிஷயக யாதொரு அஞ்ஞானமும்

प्रसिद्धा नास्ति - பிரசித்தமின்றாம்

तस्मात् तत्र एव - ஆதலால் மூலாஞ்ஞானத்தின் கண்ணேயே

सूत्रकारस्य - சூத்திரக்காரரான வியாசபகவானது

अयं मायाशब्दः - பிரசித்தமான மாயையென்னுங் கூற்று

वर्तते - பிரவிருத்திக்கின்றது

अपरत्र न - வேறிடத்தில் அதாவது அவச்சின்ன சைதன்னிய விஷயகவஞ்ஞானத்தின்கண் பிரவர்த்திப்பதின்றாம். 106

அவதாரிகை

சொப்பனத்தின்கண் சுத்த சைதன்னிய விஷயக அஞ்ஞானமே உபாதானமாமென்று கூறப்பட்டது. அங்ஙனமாயினும் சொப்பன திருஷ்டாவிற்கு மூடத்தன்மையுண்மையாலும் ஆண்டு அவனினும் அன்னியமாக சுழற்றுபவன்

காணப்படாமையானும் சூத்திரக்காரர் எவ்வபிப்பிராயத்தால் ஆண்டு அவித்தியாசப்தத்தினை பரித்தியாகஞ்செய்து மாயாசப்தத்தினைப் பிரயோகித்தார் என்னுமாகாங்க்ஷையுண்டாக அவரது அபிப்பிராயத்தினைக் கூறுகின்றார்—

சுலோகம்

शक्तिव्याप्ती प्रत्ययौ कारयिष्यन्
स्वप्ने स्थित्वा प्रत्यगज्ञानमात्रे ।
माया वाचा लोकवत्सूत्रकारो
वेदं लिङ्गं चोपनेतुं प्रवृत्तः ॥

பதவுரை

सूत्रकारः – வியாசபகவான்

प्रत्यगज्ञानमात्रे – பிரத்தியகான்மாவின் அஞ்ஞானமாத்திர மான

स्वप्ने स्थित्वा – சொப்பனுவஸ்தையினை யாசிரயித்து

शक्तिव्याप्ती प्रत्ययौ कारयिष्यन् – மாயாசப்தத்திற்கு அஞ்ஞானத்தின்கண் சக்தியினையும் மாயாமயத்துவமாகிய திருசியத்வ காரியத்துவாதி லிங்கத்திற்கு மித்தியாத்தன்மையோடு வியாப்தியினையும் உலகில் போதிக்கின்றவராய்

लोकवत् – உலகசித்த சொப்பனுதிபோன்று

वेदं लिङ्गंच – ஜாக்கிரப்பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையின்கண் மாயாமாத்திரமென்பதாதி வசனத்தினையும் திருசியத்துவாதி லிங்கத்தினையும்

उपनेतुं – பிரமாணத்தன்மையால் பொருத்துதற்கு

माया वाचा – மாயாமாத்திர மென்னும் வசனத்தால்

प्रवृत्तः – பிரவிருத்தித்தனர். சொப்பனத்தை நிரூபித்தாரென்பது பொருள். 107

அவதாரிகை

இங்ஙனம் கற்பிதத்தன்மையால் உலகிற் சித்தித்த சொப்பனத்தின்கண் சூத்திரக்காரரது மாயாமயத்தன்மை யின் வசன சாமர்த்தியத்தால் மாயை யவித்தைகட்கு அபே தத்தினை யுபபாதனஞ்செய்து மாயையின்கண் அஞ்ஞானத் தின் அசாதாரண தருமத்தைப் பிரதிபாதிக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய வசன சாமர்த்தியத்தாலும் அவைகட்கு அபேதம் சித்திக்கின்றது. ஆதலின் அவ் வபேதத்தின்கண் விவாதஞ்செய்யத்தக்கதன்றும் என மூன்று சுலோகத்தாற் கூறுகின்றார். அவற்றுள் முதலில் சிதான்ம சொரூபத்தை மறைக்குந்தன்மையாகிய அவித்தை யின் லக்ஷணம் மாயையின்கண்ணும் பகவானாற் கூறப் பட்டுளது. அதனை யறிகின்றவருக்கு அவைகளின் ஏகத் தன்மை நிச்சயம் அவசியம் உண்டாமெனக் கூறுகின்றார்–

சுலோகம்

अज्ञान मावरण मावरणंच माया
सर्वेश्वरेण हरिणा दृढमभ्यधायि ।
चैतन्यवस्तु न इति प्रतिपद्यमाना
स्तत्त्वं तदेकमिति निश्चयतः प्रतीमः ॥

பதவுரை

सर्वेश्वरेण हरिणा – சருவேசுவரனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானால்

चैतन्य वस्तुनः – சிதான்மாவிற்கு

आवरणम् अज्ञानम् – மறைப்பைச் செய்தல் அஞ்ஞானமாம்

मायाच आवरणम् – மாயையும் மறைப்பைச் செய்வதாம் என

दृढम् अभ्यधायि – திடமாகக் கூறப்பட்டது

इति प्रतिपद्यमानाः – இவ்வாறு அவரது வாக்கியத்தை யறி கின்ற யாங்கள்

तत् तत्त्वम् – மாயையவித்தைகளின் சொரூபம்

एकमिति – ஏகமாமென்று

निश्चयतः प्रतीमः – நிச்சயமாக அறிகின்றோம்.

## விசேஷவுரை

பகவானது வாக்கியம் பிராகிருத மனிதனது வாக்கியம் போன்று கருதத்தக்கதல்ல என்பார் சருவேசுரனென்ருர். குதர்க்கங்களால் மாறுபடுத்தத்தகாதபடி என்பார் திடமாக என்ருர். அதனைப் பிரதிபாதிக்கின்ற பகவானது வசனத்தை மூன்ருவது சுலோகத்திற் கூறுவர். சுவப்பிரகாசப் பிரத்தியக பின்ன வஸ்துவிற்கு அநிர்வசநீய அஞ்ஞானத்தினும் வேருக ஆவரணம் சம்பவியாமையால் அதன் ஆவரணத்தைச் செய்யுந்தன்மையால் பகவானுல் கூறப்பட்ட மாயை அஞ்ஞானமேயாமென நிச்சயிக்கின்ருேம் என்பது பொருள். 108

## அவதாரிகை

மற்றும் தத்துவஞான மாத்திரத்தால் நிவர்த்தியத் தன்மை அநிர்வசநீய அஞ்ஞானத்தினும் வேறிடத்திற் சம்பவியாமையால் அதுவும் அஞ்ஞானத்தினதே லக்ஷணமாம். அதுவும் மாயையின்கண்ணும் பகவானுலேயே கூறப்பட்டுளது. அதனுலும் அவைகட்கு அபேதம் சிரத்தையினுல் கிரகிக்கத்தக்கதாமெனக் கூறுகின்ருர்—

## சுலோகம்

ज्ञानं निवर्तकमपि द्वितयस्य तस्य
गीतागतः करुणया भगवाननुवाच ।
तेनापि तत्त्व मिदमेक मितिप्रतीति
रानीयते कथित लक्षण तुल्यभावात् ॥

## பதவுரை

गीतागतः – மஹாபாரதத்தின் சாரமாயுள்ள கீதையின்கண் வக்துருத்தன்மையால் பிரவிருத்தித்துள்ள

भगवान् – ஸ்ரீகிருஷ்ண பரமான்மாவானவர்

ज्ञानम् – தத்துவ ஞானமானது

द्वितयस्य तस्य – பிராந்தியினுலறியப்பட்ட மாயை யஞ்ஞானன் மகமாகிய வவ்விரண்டினது

निवर्तकमपि – நிவர்த்தகமாம் என்பதனையும்

करुणया उवाच – கிருபையினுற் கூறினர்

तेनापि – கிருஷ்ண பகவானது வசனத்தாலும்

कथित लक्षण तुल्यभावात् – கூறப்பட்ட லக்ஷணத்தின் சமத் தன்மை யுண்மையால்

इदं तच्चम् – மாயா அவித்தைகளின் சொரூபம்

एकमिति प्रतीतिः – ஓன்றேயாமென்னும் ஞானம்

आनीयते – உண்டாக்கப்படுகின்றது.

விசேஷவுரை

லக்ஷணத்தின் சமத்தன்மையாவது பிராந்திஹேதுவும் அநிர்வாச்சியமுமான சக்தி மாயையுமஞ்ஞானமுமாம் என்பது. அல்லது ஞானத்தை மறைக்குந் தன்மையும் தத்துவ ஞானத்தால் நிவர்த்தியத்தன்மையுமாம். பிராகிருத புருடன் போன்று கீர்த்தி முதலியவற்றையுத்தேசித்து பகவானது பிரவிருத்தியாமென்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு கிருபையாலென்று கூறப்பட்டது. 109

அவதாரிகை

பகவானுல் எவ்வசனங்களால் மாயை யஞ்ஞானங்கட்கு சொரூபத்தை மறைக்குந்தன்மையும் தத்துவஞான நிவர்த்தியத்தன்யையும் கூறப்பட்டதோ அவ்வசனங்கள் யாவை என்னுமாகாங்க்ஷையுண்டாக அவ்வசனங்களைக்கூறுகின்ருர்:

சுலோகம்

नाहं प्रकाश इति तावदनेन मायाऽ-
ज्ञानेन चाऽऽवृतमिती तरदप्यभाणि ।
मामेव येतुपरमं पुरुषं प्रपन्ना
ज्ञानेनतु प्रभृतिनाच धिया निवृत्तिः ॥

பதவுரை

**नाहं प्रकाश इति तावदनेन** – எனது யோக மாயையினுல் மறைக்கப்பட்ட யான் ஒருவருக்கும் விளங்குகிறதில்லை என்னும் வசனத்தினுல்

**माया अभाणि** –மறைப்பைச் செய்வதாக மாயை கூறப்பட்டது

**अज्ञानेनच आवृतमिति** – அஞ்ஞானத்தால் ஞானம் மறைக்கப் பட்டுள்ளது. அதனுல் பிராணிகள் மோகத்தை யடைகின்றனர் என்னும் வசனத்தால்

**इतरत् अपि अभाणि** – அஞ்ஞானமும் மறைப்பைச் செய்வ தாகக் கூறப்பட்டுள்ளது,

இதனுல் சிதான்மாவை மறைக்குந்தன்மை யிரண்டற்கும் சமானமாம் என்பது பொருள். அப்படியே மாயை யஞ்ஞானங்கட்கு தத்துவஞான நிவர்த்தியத்தன்மையைப் பிரதிபாதிக்கின்ற பகவானது வாக்கியத்தை தெரிசிப்பிக் கின்ருர்.

**परमं पुरुषं मामेव** - புருஷோத்தமனுகிய என்னையே

**ये तु प्रपन्नाः** – எவர்கள் சரணடைந்தார்களோ அவர்கள் இந்த மாயையைக் கடக்கின்றனர் என்னும் வசனத்தாலும்

**ज्ञानेनतु प्रभृतिना च** – ஞானத்தால் ஆன்மாவினஞ்ஞானம் எவருக்கு நாசமாயிற்ருே என்பது முதலிய வசனத்தாலும்

**धिया निवृत्तिः** – முறையே மாயையஞ்ஞானங்கட்கு நிவர்த்தி கூறப்பட்டுளது. ஆதலின் ஞான நிவர்த்தியத்தன்மையு மிரண்டற்கும் சமானமாமென்பது பொருள்.

விசேஷவுரை

என்னைச் சரணடைந்தார்கள் என்னும் வசனத்தால் பக்தியினுல் மாயையை கடத்தல் மாத்திரமே கூறப்பட்டு ளது. தத்துவ ஞானத்தால் அதன் நிவர்த்தியோ கூறப் படவில்லை என்று சொல்லற்க. ஞானியோ எனதான் மாவேயாமென்பது எனக்குச் சம்மதமாம் என்பது முதலிய வாக்கிய சேஷத்தின்கண் ஞானத்திற்கே ஸ்துதி காணப் படுதலால் சரணடைகின்ருர்கள் என்னும் வசனத்தால்

இந்த ஞானமே விவக்ஷிக்கப்பட்டமையினுலும், மாயையை முக்கியமாகக் கடத்தல் சம்பவியாமையால் பிரம்மஹத்தியைக் கடக்கின்ருன் என்பதாதி ஸ்தலத்தில் போன்று மாயையை கடக்கின்ருர் என்னும் வசனத்தால் அதனது நிவர்த்தியே விவக்ஷிக்கப்பட்டமையானுமென்க. 110

அவதாரிகை

அற்றேல் யாண்டுமஞ்ஞானபதத்திலுள்ள அகாரத் தால் ஞானத்தினபாவமே சொல்லப்படுகின்றது. அதுவும் பரிசேஷத்தால் அதனது பிராகபாவமேயாம், மாயையோ பாவவடிவமாம் ஆதலின் அவ்வஞ்ஞானத்தோடு அபின்ன மாக எங்ஙனமாம் என்ருசங்கித்து அதர்மம் அசுரன் என்பது முதலிய பதங்கட்கு தர்மாதியினும் விருத்தமான பாவவடிவ தீவினை முதலியவற்றின் பிரதிபாதகத்தன்மை இருப்பது போல அஞ்ஞான பதத்திற்கும் ஞானத்தின் விருத்தமான பாவவடிவ மாயையின் பிரதிபாதகத்தன்மை பொருந்து தலின் அங்ஙனமன்றெனக் கூறுகின்ருர்.

சுலோகம்

ज्ञानस्य प्रागभावा दपरमभिहितं प्रत्यगज्ञानमेत-
त्सम्सारव्याधिबीजं कथितनयवशा देवबुध्यस्व बुद्धया ।
ज्ञानेनाज्ञाननाशं कथयति भगवा नेषगीतागतः स
न्नज्ञानात्प्रागभावक्षय इति घटते तत्क्षये तत्प्रसूतेः ॥

பதவுரை

ज्ञानस्य प्रागभावात् – ஞானத்தின் பிராகபாவத்தினும்
अपरं अभिहितम् – அன்னியமாக அஞ்ஞானம் கூறப்பட் டுளது.

அபாவத்திற்கு மறைக்குந்தன்மை பொருந்தாமையி னென்பது பொருள். மேலும் தத்துவஞான நிவர்த்தியத் தன்மையாற் கேட்கப்பட்ட சம்சாரத்திற்கு அநிர்வசனீய பிரத்தியகான்மாவின் அஞ்ஞானமே உபாதானமாமென்று அநேகப் பிரகாரமாக பிரமாண யுக்தி பலத்தால் உபபாத னஞ் செய்யப்பட்டுளது. அதனுலும் அஃது அபாவவடிவ மன்றெனக் கூறுகின்ருர்.

एतत् प्रत्यगज्ञानम् – இந்த பிரத்தியகான்மாவி னஞ்ஞானத்தினை

सम्सार व्याधिवीजम् –சம்சாரமாகிய ரோகத்திற்குக் காரணமாமென்று

कथितनयवशादेव – கூறப்பட்ட யுக்திபலத்தாலேயே

वुद्ध्या वुध्यस्व – உனது புத்தியினு லறிவாய்

गीतागतः सन् – மற்றும் கீதையின் கண்ணே வக்துருத் தன்மையால் பிரவிருத்தித்தவரான

एषः भगवान् – சர்வஞ்ஞரான ஸ்ரீஹரியே

ज्ञानेन अज्ञाननाशं – தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தின் நாசத்தினை

कथयति – கூறுகின்றனர்

ज्ञानात् – தத்துவ ஞானத்தால்

प्रागभावक्षय इति – பிராகபாவத்தின் நாசமாமென்பது

न घटते – பொருந்துவதின்றும்

तत्क्षये – பிராகபாவம் நசிக்குங்காலத்தில்

तत्प्रसूतेः – தத்துவஞான முத்பத்தியாதலின்.

விசேஷவுரை

ஸ்ரீ பகவான் ஞானத்தால் எவரது அஞ்ஞானம் நசிக்கப்பட்டதோ என்னும் வசனத்தால் அஞ்ஞான நாசத்தின் கண் ஞானத்தை யேதுவாகக் கூறியுள்ளார். அஃது அஞ்ஞானத்தினை ஞானத்தின் பிராகபாவமெனவுடன்படின் பொருந்தாது. ஞானத்திற்கு தனது பிராகபாவத்தின் நாச வடிவத்தன்மை யுண்மையால் அத(நாசத்தின்) னேதுத்தன்மை பொருந்தாமையின். எவர்களது மதத்தில் பிராக பாவத்தின் நாசம் பிரதியோகியினுமன்னியமாக அங்கீகரிக்கப்பட்டுளதோ அவர்கட்கும் அஃது பொருத்தமற்றதேயாம். ஞானப்பிராகபாவத்திற்கு பிரதியோகியினும் அன்னியமாகிய நாசத்தின் பிராகபாவான்மகத்தன்மை பொருந்தாமையால் இடையே நாசத்தின் பிராகபாவம்

வேறு அங்கீகரிக்கத்தக்கதாம். அதனுல் அதற்கும் அன்னிய மாக நாசம் அதற்கும் அன்னியமாகப் பிராகபாவம் என இவ்வாறு பிரமாணமற்றப் பிராகபாவத்தினதும் அதன் நாசத்தினதும் அநவஸ்தையாகிய தோஷம் பிராப்தியா மாதலின்.

மேலும் அவர் மதத்தில் ஞானசாமக்கிரியினுலேயே ஞானவடிவப் பிரதியோகியினும் அன்னியமாகியநாசத்தின் உற்பத்தி பொருந்தாமையால் ஞானமே தனது பிராக பாவத்தின் நாச ஏதுவாகக் கூறத்தக்கதாம். அதுவோ சம்ப விக்கிறதில்லே. ஞானத்திற்குத்தனது பிராகபாவ சமயத்தில் உற்பத்தி சம்பவியாமையினுலும் அதனது நாசசமயத்தில் உற்பத்தியானதற்கு அதன் ஏதுத்தன்மை பொருந்தாமை யாலும் அதன் நாசத்தின் பின்னரே ஞானத்தினுற்பத்தி கூறத்தக்கதாம். இவ்வாருகவே பின்னருண்டான ஞானத் திற்கு முன்னருண்டான நாசத்தின் ஏதுத்தன்மை அத்தி யந்தம் பொருத்தமற்றதேயாம். ஆதலின் ஞானத்தின் பிரா கபாவவடிவ அஞ்ஞானத்திற்கு எவ்வாற்ருனும் பகவானுல் கூறப்பட்ட ஞானநிவர்த்தியத்தன்மை சம்பவியாமையால் ஞானத்தால் நிவர்த்திய அஞ்ஞானம் பாவவடிவமேயா மென்பது கருத்து. 111

## அவதாரிகை

கூறிய பிரகாரத்தால் மாயைக்கு அஞ்ஞான வடிவத் தன்மை சித்தித்தபோது சொப்பனுவஸ்த்தையின் கண் ணுள்ள கருத்துருத்தன்மை முதலிய பிரபஞ்சத்திற்கு பிரம்ம சூத்திரத்திற் கூறப்பட்ட மாயா மாத்திரத்தன்மை அஞ்ஞான மாத்திரத்தன்மையேயாம். அதனுல் அதன் மித்தியாத்தன் மையும் சித்தியாமெனத் திரண்ட பொருளேக் கூறுகின்ருர்.

### சுலோகம்

मायामात्रमतः समस्तमभवत् स्वप्ने प्रसिद्धं दृशः -
कर्तृत्वादि तमोमयं वितथमेवाज्ञानमात्रं यतः ।
तस्माज्जाग्ररितेऽपि नैतदभवत्स्वाभाविकं तत्पुन -
स्तादृक्षं तव सर्वदैवतु भवेत्स्वप्नेऽपि चैतन्यवत् ॥

பதவுரை

अतः – மாயைக்கு அஞ்ஞானத்தன்மை யுண்மையால்
दृशः स्वप्ने – சிதான்மாவிற்கு சொப்பனுவஸ்தையின்கண்
कर्तृत्वादि समस्तम् – யாதொரு கருத்துருத்தன்மை முதலிய வனைத்தும்
मायामात्रं प्रसिद्धं अभवत् – மாயாமாத்திரமாய் பிரசித்தமா யுளதோ
तमोमयं वितथमेव – அஞ்ஞான காரியமாகிய அவ்வனைத்தும் மித்தையேயாம்
अज्ञानमात्रं यतः – அஞ்ஞானமே வடிவமாதலின்
तस्मात् जाग्ररितेऽपि – ஆதலால் சாக்கிராவஸ்தையின் கண்ணும்
एतत् स्वाभाविकम् न अभवत् – கருத்துருத்துவ முதலியவை ஆன்மாவிற்கு இயற்கையன்றும்.

அவஸ்த்தையினை யுபாதியாகவுடைய திருஷ்ட்ருத் தன்மை முதலிய தருமங்கட்கு வியபிசாரமிருப்பினும் தடஸ்த்த வடிவ சிதான்மாவிற்கு யாண்டு மவ்வியபிசார மிருத்தலால் வியபிசாரமின்றும். இவ்வாறுகும் போது சிதான்மாவிற்கு சாக்கிராதியவஸ்த்தையின் கண் வியபி சாரமின்றுமென்பது கருத்து.

திருஷ்ட்ருத்தன்மை முதலியவற்றினை யான்மாவிற்கு சுவாபாவிகமென வங்கீகரிக்கின் பாதகத்தினைக் கூறுகின்றர்.

तव यत्पुनः तादृक्षम् – சிதான்மாவாகிய வுனக்கு கருத்துருத் தன்மை முதலியவை ஸ்வாபாவிகமாயின்
स्वप्नेऽपि सर्वदा एव – சொப்பனுவஸ்த்தையின் கண்ணும் சுழுத்தி பிரளய மோக்ஷங்களிலும்
चैतन्यवत् भवेत् – சைதன்னியம் போன்று அவற்றின் அனு விருத்தி யுண்டாதல் வேண்டும். 112

அவதாரிகை

வெந்ததும் பச்சையுமான குடத்தின் கண்ணுள்ள செம்மை நிறமும் பசுமை நிறமும் போன்று ஓர்போதய தர்மமும் சுவாபாவிகமாகட்டுமே எனின் அற்றன்று விகார முடைய வஸ்துவின் கண்ணஃது சம்பவிப்பினும் கூடஸ்த வான்மாவின்கண் சம்பவியாமையின் எனக் கூறுகின்றார்.

சுலோகம்

सत्यप्य लुप्तचिति यत्त्वयि नास्ति कर्तृ
भोक्तृप्रमातृ मुखमन्यदपीह किंचित् ।
जाग्र दशावगत मप्यखिलं न तत्ते
स्वाभाविकं भवितु मुत्सहते विरोधात् ॥

पदவுரை

इह - சுழுத்தி முதலியவற்றில்

अलुप्तचिति - கூடஸ்த சித்ரூபனான

त्वयि सत्यपि - நீ இருந்தபோதிலும்

जाग्रदशावगतम् - ஜாக்கிராவஸ்தையின் கண்ணுள்ள

कर्तृभोक्तृप्रमातृमुखम् - கருத்திருத்தன்மை போக்திருத்தன்மை பிரமாத்திருத்தன்மை முதலியவையும்

अन्यदपि - அதிதெய்வ முதலியவையும்

यत्किंचित् नास्ति - யாதொரு காரணத்தால் அற்பமுமின்றுமோ அதனால்

நித்திய சிதேகரச வான்மாவிற்கு ஆகந்துக கருத்துருத்வாதி சுவாபாவிகமாகாதென்பது பொருள். ஏது காணப்படாதபோது திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

तत् अखिलमपि - கருத்துருத் தன்மை முதலியவனைத்தும்

ते स्वाभाविकं भवितुम् - உனது பரமார்த்த சத்வடிவமாதற்கு

न उत्सहते - யோக்கியமன்றும்,

அப்பிரயோஜகத்தன்மையினையாசங்கித்துக் கூறுகின்றார்.

विरोधात् –வியபிசாரியாகிய தர்மத்திற்கு தர்மியின் சுவபாவத் தன்மையில் விரோதமாதலின்.

விசேஷவுரை

சத்திற்கும் வியபிசாரத்தினை அங்கீகரிக்கின் அதற்கு ஓர் போது அசத்துவமாகும். அதுவோ சம்பவிக்கிறதில்லை. சத்துவாசத்துவங்கட்கு ஒன்றன்கண் விரோதமாதலின், அஃது ஸ்ரீ கிருஷ்ண பகவானால்

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।

அசத்திற்கு இருப்பின்றும் சத்திற்கு இன்மையின்றும் எனக் கூறப்பட்டுளது. ஆதலால் வியபிசாரியாகிய வனைத்தும் அநிர்வசனியமேயாமென்பது பொருள். 113

அவதாரிகை

மேலும் பசு குதிரை முதலியவற்றிற்குப் போன்று அத்தியந்தம் பின்னமானவைகட்கு தர்ம தர்மித்தன்மை பொருந்தாமையால் கருத்துருத்வாதிகட்கு சத்தியத்தன்மையைக் கூறும் வாதியினால் ஆன்மாவிற்கும் கருத்துருத்துவாதிகட்கும் அபேதமும் வாஸ்தவமாமெனக் கூறுதல் வேண்டும். அதனால் ஒன்றற்கு அனுவிருத்தியுளதாய வழி மற்றொன்றற்கு வியாவிருத்தி பொருத்தமற்றதாம் என திருஷ்டாந்த சஹிதங் கூறுகின்றார்.

சுலோகம்

स्वाभाविकी हुतभुजः खलु नोष्णतातं
जातुप्रमुञ्चति न तामपि जातवेदाः ।
एवं भवन्तमपि जागरितोपलब्धं
स्वप्ने भवानपिच जागरितं न मुञ्चेत् ॥

பதவுரை

हुतभुजः - அக்கினியின்

स्वाभाविकी उष्णता – சுவாபாவிகமான உஷ்ணத்தன்மை

तं जातु - அவ்வக்கினியை ஓர்போதும்
न खलु प्रमुञ्चति – விடுகின்றதேயில்லை
जातवेदा अपि – அக்கினியும்
तां न मुञ्चति – உஷ்ணத்தன்மையை ஓர்போதும் விடுகிற தில்லை
एवं भवन्तमपि – இவ்வாறு சிதான்மாவாகிய உம்மையும்
जागरितोपलब्धम् – சாக்கிராவஸ்தையி லறியப்பட்ட கருத் திருத்தன்மை முதலியவை
(स्वप्ने न मुञ्चेत् – சொப்பனத்தில் விடலாகாது)
भवानपि च – நீவிரும்
स्वप्ने जागरितम् – சொப்பனத்தில் சாக்கிரகருத்திருத்துவாதி யினை
न मुञ्चेत् – விடலாகாது.

### விசேஷவுரை

சொப்பனுவஸ்தையில் நீ கருத்திருத்துவாதியை விட்டு விடுகின்றுய். கருத்திருத்துவாதியும் உன்னை விட்டுவிடு கின்றது. ஆதலால் கருத்திருத்துவாதிக்கும் ஆன்மாவிற் கும் தரும தருமித்தன்மை வாஸ்தவமன்றுமென்பது கருத்து. 114

### அவதாரிகை

அற்றேல் சொப்பனத்திலும் சாக்கிரத்திற்போன்றே வியவகாரம் காணப்படுதலால் சாக்கிரத்தின் கருத்திருத்து வாதி விட்டுவிடுகின்றது என்று எவ்வாறு கூறப்பட்டது என்னுஞ் சங்கைக்கு அதனையுபபாதனஞ் செய்கின்ருர்.

### சுலோகம்

स्वप्ने न जागरितमस्ति मृषात्वहेतोः
स्वप्नस्य सत्यमिति जागरितं वदन्ति ।
स्वप्नस्य बाधनबला दमृतत्वमुक्तं
तस्माच्चिदेव तवरूप मतोऽन्यदार्त्तम् ॥

பதவுரை

स्वप्नस्य मृषात्व हेतोः – சொப்பனம் மித்தையாதலால்

स्वप्ने जागरितं नास्ति – அதன்கண் அதனினும் விலக்ஷண மான சாக்கிரத்தின் கருத்திருத்துவாதியின்றும்

அற்றேல் சித்தாந்தத்தில் சாக்கிரமும் மித்தையாதலால் அதற்கு சொப்பனத்தினும் விலக்ஷணத்தன்மை யெவ்வாறு கூடுமென்னுமிடத்துக் கூறுகின்ருர்.

जागरितम् – சாக்கிராவஸ்தையிலுள்ள பதார்த்தத்தை

सत्यमिति वदन्ति – சத்தியமாமென்று கூறுகின்றனர்

சாக்கிராவஸ்தையிலுள்ள வஸ்துகட்கு அநிர்வசநீயத்தன்மை சமானமாயினும் அவித்தையினும் வேருன தோஷத்தாற் சன்னியமின்மையினல் தனது உசித அர்த்தக் கிரியையில் சாமர்த்திய வடிவ வியாவகாரிக சத்தியத்தன்மை நியதான்வய வியதிரேக விதிநிஷேத சாஸ்திரத்தால் சித்தித்துளது. அதற்கு மகாவாக்கிய ஜன்னிய ஆன்ம சாக்ஷாற்காரத்திற்கு முன்பு பாதமின்மையினுல் சத்தியத் தன்மையினை சாக்கிரத்திற் செய்யப்பட்ட பாவநாசத்தின் பொருட்டு பிராயச்சித்தத்தை விதிக்கின்ற தரும சாஸ்திரக் காரர் கூறுகின்றனர்.

स्वप्नस्य बाधनबलात् – சொப்பனத்திற்கு சாக்கிரத்தில் பாத முண்டாதலால்

अनृतत्वम् उक्तम् – மித்தியாத்துவம் கூறப்பட்டுளது

நித்திராதோஷ ஜன்னிய சொப்பனமோ பாமரராலும் மித்தையாக நிச்சயிக்கப்பட்டமையின் அதற்கு சாக்கிரத்தினும் விலக்ஷணத்தன்மை யுண்மையால் இரச்சு சர்ப்பத்திற்கு சமானமாக அநிருதத்தன்மையே சூத்திரக்காரர் முதலியோரால் கூறப்பட்டுளது. அதனுல் சொப்பனப் பிரபஞ்சத்திற்கு சாக்கிரத்தி லறியப்பட்டதினும் அன்னியத்தன்மை யுண்மையால் சொப்பனத்தில் அதன் அநுவிருத்தியின்றும் என்பது பொருள்.

திருக்திருசியங்கட்கு அநுவிருத்தி வியாவிருத்திகளின் பிரதிபாதனத்தின் பயனைக் கூறுகின்றார்.

तस्मात् – ஆதலால்
चिदेव तवरूपम् – சின்மாத்திரம் உனது வடிவமாம்
अतो अन्यदार्त्तम् – சின்மாத்திரத்தினு மன்னியமான வனைத்தும் விநாசமுடையதாம். தத்துவஞான பாத்தியமாமென்பது பொருள். 115

அவதாரிகை

ஜாக்கிராவஸ்த்தையிலுள்ள பதார்த்தமும் மித்தையாயின் அதனுள்ளடங்கிய சுருதியும் மித்தையாதலின் பாஷ்பதூமாதி (நீராவி) யினைற்போன்று அதனல் தத்துவஞானமுண்டாகாது என்று சங்கித்து "सूचकश्च हि श्रुतेः" சொப்பனம் நன்மை தீமைகளை சூசிப்பதாகும். காமிய கர்மங்கள் செய்யுங் காலத்தில் சொப்பனத்தில் ஸ்திரீயைப் பார்ப்பானாயின் அத்தகைய சொப்பன தெரிசனத்தால் விருத்தியையறிக என்று சுருதி கூறுதலின், என்னும் வியாச சூத்திரத்தின் சம்மதமான பரிகாரத்தினைக் கூறுகின்றார்.

சுலோகம்

स्वप्नोपलब्धमखिलं वितथं तथापि
तत्सूचयत्यवितथं परमार्थवस्तु ।
जाग्रद्दशावगत मप्यनृतं तथापि
तद्वत्तदप्यवगति क्षममेव भूम्नः ॥

பதவுரை

स्वप्नोपलब्धम् – சொப்பனவஸ்த்தையிலறியப்பட்ட
अखिलं वितथम् – அனைத்தும் மித்தையாம்
तथापि – அங்ஙனமாயினும்

तत् – சொப்பனத்திலறியப்பட்ட யானையின்மீது ஆரோகணித்தல் முதலியவை

अवितथम् – சொப்பன பதார்த்தம் போன்று பாதமற்ற

परमार्थ वस्तु – அர்த்தக்கிரியையில் யோக்கியமான இஷ்ட வஸ்த்துவினை

सूचयति – சூச்சிப்பிக்கின்றது

तद्वत् – அதுபோன்று

जाग्रद्दशावगतमपि – ஜாக்கிராவஸ்த்தையிலறியப்பட்ட பதார்த்தமும்

अनृतं तथापि – மித்தையாமாயினும்

तदपि – ஜாக்கிரத்திலுள்ள மித்தையான சுருதியாதியும்

भूम्नः – வியாபகவான்மாவின்

अवगति क्षममेव – ஸாக்ஷாத்காரத்தை யுண்டுபண்ணுவதில் ஆற்றலுடையதேயாம்.

## விசேஷவுரை

தத்துவமஸி முதலிய மஹாவாக்கியத்திற்கு மித்தியாத் தன்மை சமானமாயினும் ஸர்வப்பிரகாரத்தாலும் விஷயத்திற்குப் பாதமின்மையின் தத்துவத்தைப் போதிக்கும் ஆற்றலுடைதாம். ஆதலின் தத்துவ ஞானத்தின் ஏதுத் தன்மை பொருந்துகின்றது. அவ்வாறு மற்றைய பிரமாணங்கட்கு இன்ரும். அவற்றின் விஷயம் சுருதி முதலியவற்ருல் பாதிக்கப்படுதலின் என்பது கருத்து. 116

## அவதாரிகை

ஜாக்கிர சொப்பனங்களிரண்டும் மித்தையாமேல் அவைகட்கு முற்கூறிய விஷமத் தன்மை எங்ஙனமாம். அவித்தையினும் வேருன நித்திரை முதலிய தோஷத்தால் ஜன்னியத் தன்மையுண்மையால் சொப்பனத்திற்கு பிராதிபாசிகத் தன்மையும் அத்தோஷம் நீங்குங்கால் பாதமும் பொருந்துகின்றது. ஜாக்கிரத்திற்கு அஃதின்மையால் வியாவகாரிகத் தன்மையாம் என இவ்வாறு விஷமத்தன்மை

கூறப்படுமாயின் அப்போது நித்திரையுள்ளவரை சொப்பனமே யுண்டாதல் வேண்டும். சுழுத்தியுண்டாக லாகாது. சொப்பனத்தின் விசித்திரத் தன்மையுமுண்டாக லாகாது. அதனேதுவான நித்திரை ஏக வடிவமாதலின் என்றுசங்கித்து சொப்பனத்திற்கும் சுகதுக்கங்களின் பரியவசானத் தன்மையுண்மையால் அதிருஷ்ட சாத்தியத் தன்மையாவஸ்யகமாம். ஆதலின் நித்திரையிருக்குங் காலத்தும் அதிருஷ்டத்தின் உபரமத்தால் சொப்பனத் திற்கு லயம் உண்டாம். அதனுல் சுழுத்தியுண்டாம் கருமத்தின் விசித்திரத் தன்மையால் சொப்பனத்திற்கு விசித்திரத் தன்மையாம் என்னு மபிப்பிராயத்தால் கூறு கின்றுர்:

சுலோகம்

स्वप्नभ्रमोऽपि सुकृतादि निबन्धनत्वात्
तावत्परिस्फुरति याव ददृष्टमस्ति ।
क्षीणेतुतत्र लयमेति जगन्निदाने
गाढे तमस्यनुभवावगते प्रतीचः ॥

பதவுரை

स्वप्नभ्रमोऽपि – சொப்பன பதார்த்தமும்
सुकृतादि निबन्धनत्वात् – புண்ணிய பாவ கருமத்தைக் காரண மாக வுடைமையின்
यावददृष्टमस्ति – எதுபரியந்தம் புண்ணிய பாப கருமமுள தாமோ
तावत् परिस्फुरति – அதுபரியந்தமும் பிரதீதியாம்
तत्र क्षीणे – புண்ணிய பாவங்கள் நாசமாகுங் காலத்தில்
गाढे – சர்வவிசேஷ பிரகாச சூனியமும்
अनुभवावगते – அனுபவத்தாலறியப்பட்டதும்
जगन्निदाने – ஜகத்திற்குக் காரணமுமான
प्रतीचः तमसि – பிரத்தியக்கான்மாவின் அஞ்ஞானத்தின்கண்
लयमेति – நாசத்தை யடைகின்றது.

### விசேஷவுரை

ஜகத்திற்குக் காரணமான அஞ்ஞானத்தின்கண்ணே சொப்பனத்திற்கு லயத்தைக் கூறுகின்ற கிரந்தக்காரருக்கு மூலாவித்தையின் காரியத்தன்மை சொப்பனத்திற்கு சம்மதமாம். 117

### அவதாரிகை

அற்றேல் வெகு சீக்கிரத்தில் நாசமாகின்ற புண்ணிய பாவக்கிரியைக்கு காலாந்தரத்திலுண்டாகின்ற சொப்பனுதியேதுத்தன்மையே பொருத்தமற்றதாம். இவ்வாருகும்போது அக்கருமத்தின் நாசத்தால் சொப்பனத்தின் நாசமாமென்பது எவ்வாறு பொருந்தும் என்ருசங்கித்து ஓர்போது அனுஷ்டிக்கப்பட்ட கருமம் கூடஸ்த்தம்போல் இருக்கிறது என்னும் வசனத்தாலும் விதிநிஷேத சாஸ்த்திரத்தின் சாமர்த்தியத்தாலும காரகங்களையாசிரியித்த கிரியைக்கும் அதன் காரகங்கட்கும் பயனின் முடிவுவரை நிலைத்திருத்தலாகிய சூக்ஷ்ம வடிவம் கற்பிக்கப்படுகின்றது. அதர்சனவாசகமாகிய நாச சப்தத்திற்கும் சூக்ஷ்ம வடிவ சத்துவத்தைப் போதிக்குந் தன்மையுண்மையால், நாச சப்தத்தால் அதற்கு அசத்துவத்திலுபத்தியின்ரும். இவ்வாருகவே அதிருஷ்ட சூக்ஷ்மருபத்தால் நிலைத்திருக்கின்ற கிரியைக்கு சாஸ்த்திரத்தால் அறியப்பட்ட சொப்பனுதியின் ஏதுத் தன்மை முதலியது பொருத்தமேயாமென்னுங் கருத்தால் கூறுகின்ருர்.

### சுலோகம்

निष्पादिता सकलकारक वर्गसाध्या
सर्वेण कारकगणेन सहैव तावत् ।
तिष्ठेत्क्रिया परमसूक्ष्म तयेक्ष्यमाणा
सर्वेश्वरेण पुरुषः फलमत्ति यावत् ॥

### பதவுரை

निष्पादिता – அதிகாரி புருஷனல் அனுஷ்டிக்கப்பட்டதும்
सकल कारक वर्ग साध्या - ஸர்வகாரக சமுதயத்தால் சாத்யமும்
सर्वेश्वरेण ईक्ष्यमाणा – பரமேஸ்வரனல் பார்க்கப்படுகின்றதுமான

**क्रिया** – யாகாதிக் கிரியை

**सर्वेण कारकगणेन सहैव** – சர்வகாரக சமுதாயத்தோடு கூடவே

**परम सूक्ष्मतया** – அத்தியந்தம் சூக்ஷ்மவடிவத்தால்

**तावत् तिष्ठेत्** – அதுபரியந்தம் நிலைத்திருக்கும்

**यावत् पुरुषः फलमेति** – எதுவரை கருமகருத்தாவாகிய புருஷன் பயனை யடைவானோ அதுவரை யிருக்குமென வொட்டுக

## விசேஷவுரை

பயனின்பொருட்டு அதிகாரியால் கருமம் அநுஷ்டிக்கப் பட்டதாயினும் சடமாகிய அக்கருமத்திற்கு காலவிசேஷத்தில் பயனையாரம்பித்தற்பொருட்டு பிரவிருத்தி எங்ஙனமாம் சேதனனாயினும் அதனை யறியாதவனுக்கு அதனைப் பிரேரித்தலில் ஆற்றலின்மையினால் என்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு பரமேஸ்வரனால் பார்க்கப்படுகின்றதாகி என்று கூறப்பட்டது. போககாலத்தையறிந்த ஈஸ்வரனது ஈக்ஷணத்தால் பிரேரிக்கப்பட்டதாகி நியமமாக ஆண்டு வியாபாரமுடையதாகின்றது என்பது கருத்து. பயனை யடையும்வரை இருக்குமென்றதால் பயனின் அவசான காலத்தில் சூக்ஷ்மரூபமும் நாசமாமெனவுணர்க. 118

## அவதாரிகை

அற்றேல் விசித்திர சொப்பனத்திற்கு விசித்திர வாசனை யோடு கூடிய வஞ்ஞானத்தினாலேயே யுற்பத்தி சம்பவித்த லின் அதன்கண் கருமத்திற்கு உபயோகமின்றாம் என்றாசங்கித்து வாசனையினுத்போதவாயிலாக அதன்கண் அதற்கு உபயோகமாம் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :

## சுலோகம்

स्वप्नश्च जागरित मप्युभयं तवैव
मोहप्रसूतमपि कर्मफलं विभाति ।
कर्मक्षये तदखिलं परमात्ममाया
माश्रित्य सूक्ष्ममवतिष्टत एवलीनम् ॥

பதவுரை

स्वप्नश्च जागरितमपि उभयम् – சொப்பன பதார்த்தமும் சாக்கிர பதார்த்தமுமாகிய இரண்டுமே

तव मोह प्रसूतमपि – பிரத்தியக்வடிவ உனது அஞ்ஞானத்தாலுண்டானதாயினும்

कर्मफलमेव विभाति–கருமத்தின் பயனுகவே தோற்றுகின்றது.

திருஷ்டாந்தத்தின் பொருட்டு சாக்கிரபதார்த்தத்தின் கிரகணமாம். அஞ்ஞானத்தின் காரியமாயினும் சாக்கிர பதார்த்தம்

" यत्कर्म कुरुते तदभिसम्पद्यते "

"எக்கருமத்தைச் செய்கின்ருனே அதனுல் அடைகின்ருன்" என்பதாதி வசனத்தால் எப்படிக் கருமத்தின் காரியமோ அப்படி அஞ்ஞான கற்பிதமாயினும், சொப்பனம் கூறிய வசனத்தினுலேயே கருமத்தின் காரியமாமென அங்கீகரிக்கத் தக்கதென்பது பொருள்.

அப்படியானுல் சொப்பனத்தை யாரம்பிக்கின்ற வாசனைகட்கு சொப்பனுநுபவத்தின் அவசானத்தில் நாச முண்டாவதால் மீண்டும் சொப்பனம் உண்டாகலாகாதென்று சங்கித்து சொப்பனத்திற்கும் ஆத்தியந்திக நாசமின்மையால் மீண்டும் சொப்பனத்திற்கு ஏதுக்களான இதர வாசனைகள் உள்ளனவா மென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

कर्मक्षये - புண்ணிய பாப கருமங்கள் நசித்தபோது

तद् अखिलम् – கருமத்தால் ஆரம்பிக்கப்பட்ட சாக்கிர சொப்பன திருசியமனைத்தும்

परमात्म मायाम् – பரமான்மாவின் மாயையினை

आश्रित्य – ஆசிரயித்து

सूक्ष्मं लीनम् – சூக்ஷ்மமாய் லீனமாய்

अवतिष्ठते एव – இருக்கின்றதேயாம். 119

## அவதாரிகை

அற்றேல் சூக்ஷ்ம வடிவமாவது யாது. வாசனையா மெனின் அது நையாயிகருக்கு சம்மதமான பாவனை வடிவ சம்ஸ்காரமா அல்லது அதனினும் அன்னியமா. முதற்பக்ஷம் சரியன்று. அநுபவமாத்திரத்தாலுண்டான சம்ஸ்காரம் ஸ்மிருதிமாத்திரத்திற்கு ஏதுவாதலின் அச்சம்ஸ்காரத்திற்கு உனது சம்மதமான திருசிய வஸ்துவினுல் ஜன்னியத் தன்மையும் அதன் (திருசியத்தின்) ஏதுத் தன்மையும் சம்பவியாமையினுலும் நாசமடைந்த திருசியத்திற்கு அவ் வடிவ (சம்ஸ்கார)த் தன்மைச் சம்பவியாமையாலுமென்க. இரண்டாவது பக்ஷமும் சரியன்று. அதனை நிரூபிக்க முடியாமையாலும் பிரமாணமின்மையாலும். வாசனை அநுபவிக்கப்படுகின்ற தூலவஸ்துவோடு அபின்னமா அல்லது பின்னமா. முதற்பக்ஷம் சரியன்று. நாசமுற்ற வஸ்துவிற்கு திதியவஸ்தையினும் விசேஷமின்மைப் பிராப்தியாதலின் வஸ்துவிற்கு நித்தியத் தன்மைப் பிராப்தி யாம் ஆதலின், தூலசூக்ஷ்ம வடிவங்கட்குக் காரண காரியத் தன்மையின அநுபபத்திப் பிராப்தியாதலானும் என்க. இரண்டாவது பக்ஷத்தில் தூலத்திற்கு நாசமுண் டானபோது சூக்ஷ்ம வடிவத்தால் நிலைத்திருத்தலைக் கூறுதல் விருத்தமாம். வஸ்துவிற்கு நிரன்வய (ஆத்தியந்திக) நாசமும் அசத்திற்கு உற்பத்தியும் பிராப்தி யாம் அதுவோ சம்மதமின்ரும். அதன்கண் பிரமாணமு மின்ரும். அதாவது முதலாவதாகிய பிரத்தியக்ஷமின்று அநுபவமின்மையின் அன்றேல் அதாவது அநுபவத்தை யொப்பிடின் அதன்கண் விப்பிரதிபத்தியின் அபாவம் பிராப்தியாம். இதரப் பிரமாணமுமின்ரும். அதன்கண் லிங்க முதலியவற்றை நிரூபிக்கக் கூடாமையின் என்னுமிடத்துக் கூறுகின்ரூர்.

### சுலோகம்

उत्थानलिङ्ग कृतकल्पन यैतदेवं
विज्ञायते ननु तथावगतं तदानीम् ।
अज्ञानलीनमखिल जगदस्ति सूक्ष्मं
तत्रेति नानुभवना दवगम्य ते हि ॥

பதவுரை

**उत्थानलिङ्ग कृतकल्पनया** – மீண்டுமெழுதல் வடிவலிங்கத்தினுல் செய்யப்பட்ட அனுமான ரூப கற்பனையினுல்

**एतत् एवं विज्ञायते** – சுழுத்திப் பிரளயங்களில் காரியங்களின் சூக்ஷ்மவடிவமுளதாமென அறியப்படுகின்றது

**तदानीम्** – அக்காலங்களில்

**न तु तथावगतम्** – அவ்வாறு அதாவது சூக்ஷ்மவடிவங்களினுகார விசேஷம் அறியப்படுவதின்ரும்.

அவித்தையினது காரியங்களின் வாசனையெனப் பெயரிய சூக்ஷ்ம வடிவம் அக்காரியங்களினின்றும் அவற்றின் காரணத்தினின்றும் பேதரூபத்தாலும் அபேத ரூபத்தாலும் சத்துவ ரூபத்தாலும் அசத்துவ ரூபத்தாலும் நிருபிக்க யோக்கியமன்ரும். அனிர்வசனீயமாதலினுல் அங்ஙனமாயினும் காரியங்கட்கு உத்பத்திக்கு முன்பு சத்துவத்தையாவது அசத்துவத்தையாவது ஒப்பிடின் உத்பத்திபொருந்தாமையின் அவ்வுத்பத்தியே பொருத்த மற்றதாகி காரியங்களினது நிருபிக்கப்படாத விசேஷ சூக்ஷ்மவடிவத்தினைக் கற்பிக்கின்றது. அனுபலப்தியோடு விரோதமுமின்ரும் அதற்கு அப்போது உபலப்தியோக்கியத் தன்மையின்மையின், சம்சாரமண்டலத்தில் மனம் முதலியவற்றினுற்பத்திக்குப் பூர்வம் நாமரூப விசேஷம் யாதொன்றுமின்ரும் சூத்திரான்மாவாகிய மிருத்யுவினுலேயே மறைக்கப் பட்டிருந்தது அப்போது ஈதனைத்துமவ்யாகிருதமாயிருந்தது, பின்னர் அது நாமரூபங்களாலேயே வெளிப்பட்டது என்னுஞ் சுருதியினையும் பிர்மாவின் பகலாரம்பகாலத்தில் அவ்வியக்தத்தினின்றும் சர்வ வியக்திகளுமுண்டாகின்றன என்றும் ஸ்மிருதியினையும் விசாரித்துப் பார்த்தலாலும் அஃது அங்கீகரிக்கத்தக்கதாம் என்பது கருத்து. அப்படியாஞல் ஜாக்கிர முதலியவற்றைப் போன்று சுழுத்தியின்கண்ணும் ஸர்வவுபாதிகளுமிருக்குமாயின்

‘ सता सौम्य तदा सम्पन्नो भवति ’

ஸௌம்யனே சுழுத்திகாலத்தில் சத்ரூபபரமான்மாவோடு அபேதத்தையடைந்தவனுகின்ருன் என்பது முதலிய வசனத்

தால் கூறப்படுகின்ற சத்தினடைவு விருத்தமாகுமே என்று சங்கித்து அப்போது அவற்றின் (காரியங்களின்) பிரதீதி யின்மையால் அதனதீனமான விக்ஷேபத்தினபாவமாத் திரத்தினால் சத்தினடைவைக் கூறும் வசனம் பொருத்த முடையதேயாம் என்னுமபிப்பிராயத்தினால் அப்போது அதனனுபலம்பனத்தையுபபாதனம் செய்கின்றார்.

तत्र – சுழுத்தியவஸ்த்தையின்கண்

अखिलं जगत् – ஸர்வப் பிரபஞ்சமும்

अज्ञान लीनम् – அஞ்ஞானத்தின்கண் விலீனமாகி

सूक्ष्मम् अस्ति – சூக்ஷ்மமாய் இருக்கின்றது

इति – ஆதலின்

अनुभवनात् – பிரத்தியக்ஷானுபவத்தால்

न अवगम्यते हि – அறியப்படுகின்றதில்லை என்பது பிரசித்தமாம்.

விசேஷவுரை

சத்தாயினும் சூக்ஷ்மவஸ்த்துவின் அப்பிரதீதி உலகின்கண் பிரசித்தமாமென்பது பொருள். 120

அவதாரிகை

அற்றேல் சுழுத்திய வஸ்த்தையில் அஞ்ஞானமேயின்றும் அதனைச் சாதிக்கும் பிரமாணமின்மையின், எதன்கண் விலீனமாகி ஜகத்து சூக்ஷ்ம ரூபத்தாலிருக்கும். ஆண்டு இந்திரியங்களின் வியாபாரமுமின்றும் அப்போது அவைகள் ஒடுங்கியிருத்தலின் அதனதீனமான லிங்காதி ஞானமுமாண்டு சம்பவிக்கின்றதில்லை. சாக்ஷியினாலேயே அதன் (அஞ்ஞானத்தின்) சித்தியாமென்னற்க. கேவலஸாக்ஷிக்கு அதன் சாதகத்தன்மையை யங்கீகரிக்கின் அதிப்பிரசங்கமாம் ஆதலின் என்றுசங்கித்து கேவலஸாக்ஷியினால் அப்போது அஞ்ஞானமே அநுபவிக்கப்படுகின்றது. சுழுத்தியில் அஞ்ஞானத்தினுமன்னியத்திற்கு ஸாக்ஷியோக்கியத் தன்மையின்மையின் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

சுலோகம்

अज्ञानमेवतु तदात्रगतं त्वदीयं
येनोत्थितो वदसि नावगतं मयाऽद्य ।
सुप्तेन किंचिदपि गाढतमस्यभूवं
क्षिप्तः समस्तविषयावगमासमर्थः ॥

பதவுரை

तदा त्वदीयम् – சுழுத்திகாலத்தில் உனது

अज्ञानमेव अवगतम् – அஞ்ஞானமே அறியப்பட்டுள்ளது

அப்போது அஞ்ஞானத்தின் ஞானமுமின்ரும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

येन उत्थितः – யாதொரு காரணத்தினுல் நீ எழுந்தவனுகி

अद्य सुप्तेन मया – இன்று தூங்கின என்னுல்

किंचिदपि नावगतम् – யாதொன்றும் அறியப்படவில்லை என

वदसि – கூறுகின்ருயோ அதனுல் அஞ்ஞானத்தின் ஞானமுளது.

யாதொன்றும் அறியப்படவில்லை யென்பதன்கண் ஏதுவினைக் கூறுகின்ருர்.

गाढतमसि क्षिप्तः – கெட்டியான அஞ்ஞானத்தின்கண் மூழ்கினவனுகி

समस्त विषयावगमासमर्थः – சருவ விஷயங்களையும் அறிவதன்கண் ஆற்றலற்றவனுகி

अभूवम् – இருந்தேன் (எனவுங் கூறுகின்றனை).

நித்திரைகாலத்திலுள்ள அஞ்ஞானத்தின் வியவகாரம் வியவகரிக்கப்படுகின்ற அஞ்ஞான விஷயகஞானத்தினதீனமாதலால் அதன் சித்தியாமென்பது பொருள். 121

அவதாரிகை

அற்றேல் நித்திரையினின்றுமெழுந்த புருடனுக்கு ஸ்மிருதியின் அபாவத்தை லிங்கமாகவுடைய நித்திரைகாலத்திலுள்ள ஞானுபாவவிஷயக அநுமானத்தாலேயே கூறிய வியவகாரம் பொருந்துதலின் இதனுல் (தூங்கி

யெழுத்தவனுக்குண்டாகும் நினைப்பினுல்) சுழுத்தி காலத்தில் உனது அபிமதமான அஞ்ஞானமும் அதனநுபவமும் எவ்வாறு சித்திக்கும் எனின் அற்றன்று ஞானமிருந்த போதிலும் காலாந்தரத்தில் அதனதாவது அதன் விஷயத்தினதாவது ஸ்மிருதியின் அநுற்பத்தி வெகுவாகக் காணப்படுதலால் வியபிசாரியாகிய ஸ்மிருதியின் அபாவத்திற்கு ஞானுபாவத்தைச் சாதிக்குந்தன்மை பொருந்தாமையின், வேறு லிங்கத்தையும் நிருபணம் பண்ணக் கூடாமையால், தூங்கி எழுந்தவனுக்கு சுழுத்தியில் என்னுல் யாதொன்றும் அறியப்படவில்லை யென்னுமிந்த ஞானம் சுழுத்தியிலுள்ள சருவவஸ்து விஷயக அஞ்ஞானத்தின் ஸ்மரணமேயாமென அவசியம் அங்கீகரிக்கத்தக்கது. சுழுத்தியின்கண் அதன் அநுபவமில்லையாயின் அதினின்றும் எழுந்தவனுக்கு அதன் ஸ்மரணம் பொருந்துவதின்ரும். அதன் ஸ்மரணமும் அதன் மூலானுபவமும் ஞானுபாவத்தை விஷயஞ் செய்வனவாமென்பதும் பொருத்தமன்ரும். அன்னிய மதத்தில் சுழுத்திகாலத்தில் அநுயோகி முதலியவற்றின் ஞானமில்லாமையால் அஃது பொருந்தாமையின். அநுயோகி முதலியவற்றின் ஞானத்தை யங்கீகரிக்கின் சுழுத்திக்குக் கேடுண்டாம். ஆதலினுலும் யாதொன்றும் அறியப்படவில்லை யென்னும் அநுபபத்தியினுலும் என்க. சித்தாந்தியின் அபிமதமான சாக்ஷியினுலும் விசேஷமாகப் பிரதியோகியின் உபஸ்திதியின்றி ஞானுபாவத்தைக் கிரகித்தல் சம்பவியாமையால் அதன் ஸ்மரணமும் பொருந்தாமையின். ஆதலால் சருவபதார்த்தத்தின் சத்தையை விஷயஞ்செய்கின்ற பாவவடிவ அஞ்ஞானமே அப்போது சாக்ஷியினுல் அநுபவிக்கப்பட்டதாகி பின்பு ஸ்மரிக்கப்படுகின்றது என்று கூறத்தக்கதாம் என்று கருதி விபக்ஷத்தில் பாதகத்தினைக் கூறுகின்ருர்.

சுலோகம்

अज्ञानमत्र यदिनानुभवात् प्रसिद्धं
नाज्ञासिषं त्विति कुतस्तवनिश्चयोऽभूत ।
अज्ञानमस्त्यवगतं च सुषुप्तिकाले
तेनेति निश्चिनु तवानुभव प्रमाणात् ॥

பதவுரை

अत्रानुभवात् – சுழுத்தியில் அநுபவத்தால்

अज्ञानम् यदि न प्रसिद्धम् – அஞ்ஞானமானது பிரசித்தமாகா தாயின்

तव – நித்திரையில் நின்றுமெழுந்த வுனக்கு

नाज्ञासिषमिति निश्चयः – ஒன்றுமறிந்திலேனென்னும் ஸ்மரண மானது

कुतः तु अभूत् – எவ்வாறு உண்டாம்

ஸர்வ காரியங்களின் லயஸ்தானமாகிய அஞ்ஞானமும் அதனனுபவமும் சாதிக்கப்பட்டது. அதனை இப்போது முடிக்கின்றார்.

तेन – நானொன்றுமறிந்திலேனென்னும் ஸ்மரணத்தால்

तव अनुभव प्रमाणात् – கற்பிக்கப்படுகின்ற வுனதனுபவமாகிய பிரமாணத்தால்

सुषुप्तिकाले – சுழுத்தியவஸ்த்தையில்

अज्ञानम् अस्ति – அஞ்ஞானமுளதெனவும்

अवगतं च इति – அஃது அறியப்பட்டது எனவும்

निश्चिनु – நிர்சயம் செய்வாய்.

விசேஷவுரை

அற்றேல் சுழுத்திகாலத்தில் யாதொரு பிரமாணமும் பிரவிருத்திக்கின்றதில்லை ஆதலின் அஞ்ஞானத்தினனுபவத்தை யெவ்வாறு நிச்சயிப்பேன் என்னுஞ் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு உனதனுபவ மெனப்பட்டது. சாக்ஷிக்கும் அகங்காரத்தினையும் அதன் தர்மத்தினையும் சாதிக்குந்தன்மை பிரசித்தமாதலால் அச்சாக்ஷியாற்சித்தித்த அஞ்ஞானம் நிராகரிக்கத்தகாதாம் என்னுங் கருத்தால் பிரமாணத்தால் எனப்பட்டது. 122

அவதாரிகை

அற்றேல் கூறிய ஸ்மிருதிவடிவ பராமரிசத்தின் சாமர்த்தியத்தால் அஞ்ஞானமு மதனனுபவமுமுளதாமேல் அப்

போது நான் சுழுத்தியில் யாதொன்றையு மறிந்திலேன் என்னும் பராமரிசமுங் காணப்படுதலால் சுழுத்தியில் அகங்காரமும் அதனனுபவமும் கற்பிக்கத்தக்கதாம். அதுவோ சம்மதமின்ரும் பொருத்தமுமின்ரும். அகங்காரத்தையும் அதனனுபவத்தையுங் கற்பிக்கின் சர்வ காரியங்களின் லயமின்மையினுலும் விசேஷ விஞ்ஞானமிருத்தலினுலும் சுழுத்திக்குக் கேடுண்டாமென்ருசங்கித்து சுழுத்தி காலத்தில் சத்தினடைவைப் பிரதிபாதிக்கின்ற வசனத்திற்கு விரோதம் வருதலின் அகங்காரமும் அதனனுபவமுமாண்டின்ரும். 'सति सम्पद्य न विदुः' "சத்தில் அடைந்து அறிகின்ருர்களில்லை" என்பது முதலிய வசனத்தால் அஞ்ஞான மாத்திரமும் அதன் பராமரிச பலத்தால் அஞ்ஞான மாத்திரத்தினனுபவமும் அங்கீகரிக்கப்படுகின்றது. ஆதலால் கூறிய தோஷமின்ரும் என்னும் கருத்தாற் கூறுகின்ருர்.

சுலோகம்

स्पष्टानुभूति विषयो न तमस्तदानी
मासीदहंकरण हीनतयाऽधुनातु ।
निष्पाद्य कार्यमिदमंशमहं न जाने
मूढोऽस्मि चेत्यवगतेर्विषयत्वमागात् ॥

பதவுரை

तदानीम् – சுழுத்தியவஸ்த்தையில்
अहंकरण हीनतया – அகங்காரமின்மையினுல்
तमः स्पष्टानुभूति विषयः – அஞ்ஞானம் நானறியேனென்னும் சவிகற்பகானுபவத்திற்கு விஷயமாக
नासीत् – இன்ரும்.

அப்படியானுல் ஜாக்கிர முதலிய அவஸ்த்தையில் அதற்கு அத்தகைய ஸவிகற்பக அநுபவ விஷயத்தன்மை எவ்வாரும் என்ருசங்கித்து அப்போது அதிஷ்டான சைதன்னியத்தினபேதமாகவே அவித்தையினுல் அஃது

(அகங்காரம்) உண்டுபண்ணப்பட்டமையின் அதன் சம்சர்க்கத்தை விஷயஞ் செய்யுந்தன்மையால் அவ்வநுபவத்திற்கு ஸவிகற்பகத் தன்மையினடைவாமெனக் கூறுகின்றார்.

अधुना तु – ஜாக்கிரகாலத்திலோ
कार्यमिदमंशम् – இதமம்சமாகிய அகங்காரவடிவ காரியத்தினை
निष्पाद्य – உண்டுபண்ணி
अहं न जाने – நானறியேன்
मूढोऽस्मि च – மூடனாயிருக்கின்றேன்
इति च अवगतेः – என்னும் ஞானத்திற்கு
विषयत्वं अगात् – அஞ்ஞானம் விஷயத்தன்மையை யடைந்துளது.

விசேஷவுரை

இவ்வாறு தூங்கியெழுந்தவனுக்கு நான் ஒன்றுமறிந்திலேன் எனப் பராமரிசம் உளதாயினும் அக் (சாக்கிர) காலத்திலுள்ள அகங்காரமே தெய்வகதியால் அதன் (பராமரிசத்தின்) ஆசிரயகோடியில் உள்ளதாக சாக்ஷியினால் அநுபவிக்கப்படுகின்றது. பராமரிசத்தின் விஷயத்தன்மையாலோ ஸ்மரிக்கப்படுகின்றதில்லை. ஆதலால் நான் அறிந்திலேன் என்னும் ஸ்மிருதிக்கு அகங்காராம்சத்தில் பராமரிசத்தன்மையின் மையின் அதன் பலத்தால் சுழுத்தியில் அகங்கார கற்பனையும் அதன் அநுபவ கற்பனையுமின்றாமென்பது கருத்து.

பராமரிசம் = ஸ்மிருதிஞானம். 123

அவதாரிகை

அற்றேல் சுழுத்தியில் அஞ்ஞானம் அநுபவிக்கப்படுமாயின் யாதொன்றையும் அநுபவத்திலேன் என சருவாநுபவத்தின் நிஷேதம் பொருத்தமின்றியதாகும். ஆதலால் சுழுத்திகாலத்தில் அஞ்ஞானமாவது அதனநுபவமாவது இன்றாமென அறிகின்றேன். மேலும்

"तद्वा अस्यैतदतिच्छन्दा अपहत पाप्मा अभयरूपम्"

"சுழுப்த புருடனது இவ்வான்ம தத்துவம் இச்சையற்றது. பாவமற்றது, பயமற்றது" என்பது முதலிய சுருதியினை யாசிரயித்து துவம்பதார்த்த சோதனத்தின்பொருட்டு பிரவிருத்தித்த பாஷ்யக்காரர் முதலானவர்கள் சுழுத்தியவஸ்த்தையில் அஞ்ஞானமுமின்றுமெனக் கூறியுள்ளார். அதனாலும் அப்போது அஞ்ஞானமின்றும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :

சுலோகம்

एतावता तव तमोऽपि सुषुप्तिकाले
नास्तीति बुद्धिरुदितं गुरुभिश्च कैश्चित् ।
स्थाने क्वचित्क्वचिदतो द्वयमुच्यमानं
ग्राह्यं विविच्य भवता विषयं विभज्य ॥

பதவுரை

एतावता – ஸ்பஷ்டானுபவமின்மையினால்
सुषुप्ति काले – சுழுப்த்தியவஸ்த்தையில்
तमोऽपि नास्ति इति – அஞ்ஞானமுமின்றுமென
तव बुद्धिः – உனக்கு ஞானமுண்டாகின்றது.

சுழுப்த்தியவஸ்த்தையில் அஞ்ஞானம் வெளிப்படையாக ஸவிகற்பக ஞானத்தால் அநுபவிக்கப்படுகின்றதில்லை என்னு மித்துணையாலேயே யாதொன்றையு மனுபவித்திலேன் என்னும் கூற்று பொருந்துதலின், உனக்கு அப்போது அஞ்ஞானதியின்றும் என விபரீத ஞானம் இத்துணையாலேயே உண்டாகின்றது.

कैश्चित् गुरुभिश्च – பாஷ்யக்காரர் முதலிய ஆசாரியர்களாலும்
क्वचित् क्वचित् स्थाने – துவம்பதார்த்தத்தின் சுத்தியைப் பிரதிபாதிக்கின்ற அவ்வப் பிரகரணத்தில்
उदितं – அப்போது வெளிப்படையாக அநுபவமின்மையினாலேயே அஞ்ஞானமின்றுமென்று கூறப்பட்டது.

அவ்வஞ்ஞானத்தினதபாவத்தினுலோ அன்றும் அவர்களாலேயே

'एतं ब्रह्मलोकं न विदन्ति अनृतेन हि प्रत्यूढा सति संपद्य न विदुः'

"சுழுத்தியில் இந்த பிரம்ம வடிவலோகத்தினை யறிகின்றிலர் அஞ்ஞானத்தினுல் வஹிக்கப்பட்டுளார் ஆதலின் சத்தின் கண் அடைந்து அறிகின்றிலர்" என்பது முதலிய சுருதியின் பொருளாக அப்போது அஞ்ஞானம் நிருபிக்கப்பட்டமையின் என்பது பொருள். அப்படியானுல் விருத்தார்த்தத்தினையுடைய அவரது வாக்கியங்கட்கு கொள்ளற்பாலதாந் தன்மையெங்ஙனமாம் என்னுமிடத்துக் கூறுகின்ருர்—

अतः – யாதொரு காரணத்தினுல் விரோத ஞானம் போவியாமோ அக்காரணத்தால்

उच्यमानं द्वयं विषयम् – கூறப்படுகின்ற அஞ்ஞானத்தின் சத்துவமு மசத்துவமுமாகிய இரு விஷயமும்

विविच्य विभज्य – விசாரித்து பகுத்து

भवता ग्राह्यम् – உம்மால் கிரகிக்கத்தக்கது.

ஆசார்யர்களது விருத்தமான வசனத்வயவிஷயங்கட்கு அவிருத்தமான விஷயத்தை பின்னமாக கற்பித்து இரண்டும் கொள்ளத்தக்கதாம் என்பது பொருள். 124

அவதாரிகை

ஆசார்யர்களால் விருத்தமாகக் கூறப்பட்ட அவ்வசனத்வயம் யாது என்னு மாகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்ருர்—

சுலோகம்

नाज्ञान मस्तिच सुषुप्तिगतस्य पुंसो
गाढे तमस्य यमभूत्पुरुषः सुषुप्तः ।
इत्युच्यमान मविरुद्ध नया विविच्य
ग्राह्यं त्वयाऽनुभवयुक्ति निरूपणेन ॥

பதவுரை

सुषुप्तिगतस्य पुंसः – சுழுத்தியடைந்த புருடனுக்கு
अज्ञानम् नास्ति च – அஞ்ஞானமின்ரும்
सुषुप्तः अयम् पुरुषः சுழுத்தியடைந்த இப்புருடன்
गाढे तमसि – கெட்டியான அஞ்ஞானத்தில்
अभूत् – முழ்கியிருந்தான்
इत्युच्यमानम् – என்று கூறப்படுகின்ற இரண்டு வாக்கியமும்
अविरुद्धतया विविच्य – விரோதமில்லாதபடி விசாரித்து
अनुभवयुक्ति निरूपणेन – அநுபவத்தாலும் யுக்தியினுலும்
त्वया ग्राह्यम् – உன்னுல் கிரகிக்கத்தக்கது.

விசேஷவுரை

சுழுத்தியில் வெளிப்படையாக அஞ்ஞானத்தின் அனுபவமின்மையால் ஆசாரியர்கள் அஞ்ஞானத்தின் அபாவத்தைக் கூறினர். யாதொன்றையும் அறிந்திலேன் என்னும் பராமரிசத்தாற் கற்பிக்கப்படுகின்ற அனுபவத்தாலும் சுழுத்தியில் அஞ்ஞானமில்லையாயின் மீண்டும் எழுதல் பொருத்தாது என்னும் யுத்தியினுலும் அதன் சற்பாவத்தைக் கூறினர். ஆதலால் அவ்விரண்டு வசனமும் கொள்ளத்தக்கதேயாமென்பது கருத்து. 125

அவதாரிகை

இந்தப் பிரகாரம் அன்னிய ஆசாரியர்களாலும் அஞ்ஞானபதத்தை விட்டு பதாந்தரமுடைய வாக்கியங்களால் முகத்தாலும் அர்த்தத்தாலும் சுழுத்தியில் அஞ்ஞானத்தின் அபாவம் கூறப்படுகின்றது, அதுவும் வெளிப்படையாக அஞ்ஞானத்தின் அநுபவாபாவத்தாலேயேயாம். அஞ்ஞானத்தின் அபாவத்தாலன்ரும் எனக் கூறுகின்ரூர்.

சுலோகம்

एवं तमोऽपि न बभूव सुषुप्तिकाले
भाषान्तरेण पुरुषः परएव जीवः ।
निर्बीजता मुपगतः स निरन्वयेन
नस्पष्टमत्र तमसो ऽनुभवोऽस्ति यस्मात् ॥

பதவுரை

सुषुप्तिकाले – சுழுப்தியவஸ்த்தையில்

एवं तमोऽपि न बभूव – இங்ஙனம் தமமும் இன்றும்

भाषान्तरेण – என்னுஞ் சப்தாந்தரத்தால் அஞ்ஞானத்தினபாவம் போதிக்கப்பட்டது

जीवः परः पुरुष एव – சுழுத்தியில் ஜீவன் பரமான்மவடிவனேயாம் என்பதனுல் அர்த்தத்தால் அஞ்ஞானத்தினபாவம் சூசிப்பிக்கப்பட்டது

सः – சுழுத்திகாலத்தில் அச்சீவனுனவன்

निरन्वयेन – துக்கம் ராக முதலிய சம்சார சம்பந்தமின்மையினுல்

निर्बीजतां उपगतः – ஸம்சார காரணத்தின் சூனியத்தன்மையினை யடைந்துள்ளான் என்பது மற்றோர் வாக்கியம்

अत्र तमसः – சுழுத்தியில் அஞ்ஞானத்தினது

स्पष्टम् अनुभवः – வெளிப்படையான அநுபவம்

यस्मात् नास्ति – யாதொரு காரணத்தாலின்றுமோ அக்காரணத்தால் இவ்வாக்கியங்கள் கூறப்பட்டன என்பது பொருள்.

விசேஷவுரை

அஞ்ஞான சப்தத்தையபேக்ஷித்து தமமென்பது சப்தாந்தரமாம். 126

அவதாரிகை

என்னுலும் இத்தகைய வாக்கியங்கள் கூறப்படுகின்றன. இத்துணையால் எனக்கு அப்போது அஞ்ஞத்தன்மையின்

அபாவம் சம்மதமின்ரும். மற்ருே நான் அறிகின்றிலேன் என இங்ஙனம் வெளிப்படையாக அநுபவிக்கப்படுகின்ற அஞ்ஞானமுளதாயினும் புத்திமுதலிய காரியமின்மையினுல் அஃது இல்லாதது போன்று கருதப்பட்டதேயாம் ஆதலின் நீ சுத்தன் என்பது முதலிய எனது வசனமும் கொள்ளற் பாலதாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்—

சுலோகம்

अज्ञानतज्ज मतिहीन तयासुषुप्ते
शुद्धःपरोऽसि भगवानसि नित्यमुक्तः ।
कामश्च कर्मसकलंच तदाकुतस्त्यं
चित्सागरे ऽनवकरेत्वयि तायमाने ॥

பதவுரை

अज्ञानतज्ञमतिहीनतया — அகங்காரஞ்சேர்ந்த அஞ்ஞான விஷயக சவிகற்பக ஞானமின்மையால்

सुषुप्ते — சுழுத்தியவஸ்தையில்

शुद्धः परोऽसि — பரிசுத்த பரமான்மாவாயிருக்கின்ருய்

नित्यमुक्तः भगवानसि — நித்திய முக்த பகவாஞயிருக்கின்ருய்

तदा — அப்போது

चित्सागरे — ஞானசமுத்திரமும்

अनवकरे — அவச்சேதகமின்றியதும்

तायमाने — விஸ்தீர்ணமும் அதாவது திரிவித பரிச்சேத சூனியமுமான

त्वयि — உன்னிடத்தில்

कामश्च कर्म — காமமும் கருமமும்

सकलं च — காமாதியின் காரியமும்

कुतस्त्यम् — ஏது. இன்ருமென்பது பொருள்.

## அவதாரிகை

அற்றேல் சுழுத்தியவஸ்தையில் கூறிய பிரகாரத்தால் ஆன்மாவிற்கு சுத்தத்தன்மை முதலியவை உளதாகும். நித்திய முக்தத் தன்மையோ பொருந்தமன்ரும். சாக்கிர சொப்பனங்களில் நாநாவித துக்கங்களை யநுபவிக்கின்ற ஆன்மாவிற்கு அஃது பொருந்தாமையின் என்ருசங்கித்து அப்போது துக்கம் முதலிய பந்தம் தோற்றினபோதிலும் படிகத்தில் சென்னிறம் போன்று அஃது அன்னிய உபாதியினையுடைமையால் மித்தையாதலின் துக்காதியினையுண்டு பண்ணுகின்ற அகங்கார முதலியவற்றிற்கு அவித்தையின் காரியத் தன்மையால் மித்தியாத் தன்மையுண்மையின் ஜாக்கிர முதலிய அவஸ்தைகளிலும் வாஸ்த்தவமாக ஆன்மா முக்தமும் சுத்தமும் ஆகின்றதேயாம். சுழுத்திய வஸ்த்தையிலோ துக்காதியின் தோற்றமின்மையினுல் ஆன்மாவிற்கு நித்தியமுக்தத் தன்மை முதலியவை அயுக்தமன்ரு மென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்—

## சுலோகம்

आसी दहंकरण मात्मतमो निमित्तं
तज्जाग्रतश्च भवतः स्वपतश्च दुःखम् ।
आनीय दर्शयति तन्न सुषुप्ति काले
बीजक्षया दितिभवा नति निर्मलोऽभूत् ॥

## பதவுரை

आत्मतमो निमित्तम् – தமத்தின் காரியமான
अहंकरणं आसीत् – யாதொரு அகங்காரமுளதோ
तत् जाग्रतश्च – அது ஜாக்கிராவஸ்த்தையை யடைந்தவனும்
स्वपतश्च भवतः – சொப்பனுவஸ்த்தையை யடைந்தவனுமானவுனக்கு
दुःखं आनीय – துக்கத்தைப் பொய்யாக அடைவித்து
दर्शयति – தெரிசிப்பிக்கின்றது

सुषुप्तिकाले बीजक्षयात् – சுழுத்தியவஸ்த்தையில் ஆன்மாவின் கண் உபாதியாய் இருந்து துக்கத்தை யுண்டுபண்ணுகின்ற அகங்கார வடிவ பீஜப் நசித்துப்போதலால்

तत् न इति – துக்கம் இன்ரும் ஆதலின்

भवान् अतिनिर्मलः अभूत् – நீ நித்திய சுத்தாதி வடிவனுய் இருக்கின்ருய்

சுழுத்தியவஸ்தையில் பீஜம் நசித்துப் போதலால் எனவொட்டுக. 128

அவதாரிகை

அற்றேல் அகங்காரத்தின் காரணமாக யாதொரு தமம் கூறப்பட்டதோ அதன் சொரூபம் யாது அஞ்ஞானமேயாம் எனின் அற்றன்று சொப்பிரகாசசித்ரூப ஆன்மாவின்கண் ஞானுபாவ வடிவ அஞ்ஞானம் சம்பவியாமையினுலும் அதற்கு அகங்காராதியின் காரணத் தன்மை பொருந்தாமை யினுலும் என்க. அனுதிபாவ வடிவ அஞ்ஞானமும் பிரமாணமற்றதாம் அதனது நிவர்த்தகத்தினை நிரூபிக்கக் கூடாமையின் மோக்ஷாபாவப் பிராப்தியுமாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்—

சுலோகம்

सद्रूप मावरणता नुभवा दभीष्ट
मज्ञान मात्मचिति नैशतमो वदेतत् ।
ज्ञानं दिवाकरवदस्य जड प्रकाश
रूपं निवर्तकमिति प्रवदन्ति धीराः ॥

பதவுரை

एतत् अज्ञानम् – இந்த அஞ்ஞானமானது

आत्मचिति – சொப்பிரகாச ஆன்மாவின்கண்

आवरणतानुभवात् – சொரூபத்தை மறைக்குந்தன்மையால் அநுபவிக்கப்படுதலின்

नैशतमोवत् – இரவிலுள்ள இருள்போல

सद्रूपं अभीष्टम् – பாவவடிவமாகக் கருதப்பட்டுளது

जडप्रकाशरूपं ज्ञानम् – மஹாவாக்கிய ஜன்னிய விருத்திவடிவ சாக்ஷாத்காரமானது

दिवाकरवत् – சூரியன் இருளை நிவர்த்திசெய்வதுபோன்று

अस्य निवर्तकमिति – அஞ்ஞானத்தின் நிவர்த்தியினைச் செய்வதாமென்று

धीराः प्रवदन्ति – புத்திமான்கள் கூறுகின்றனர்.

## விசேஷவுரை

சொப்பிரகாசமும் அத்துவயமும் நிரதிசயாநந்தமுமான பிரம்மத்தின்கண் அஃது இல்லை விளங்கவில்லை என விபரீத வியவகாரங்காணப்படுதலால் அத்தகைய வியவகார யோக்கியத் தன்மை வடிவ ஆவரணத்தின் ஏதுவாக நான் பிரம்மத்தை யறியேன் என்று அநுபவிக்கப்படுகின்ற அஞ்ஞானமே நிச்சயிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ கிருஷ்ணபகவானுலும் அஞ்ஞானத்தால் ஞானம் மறைக்கப்பட்டுளது எனக் கூறப்பட்டுளது. அவ்வஞ்ஞானமும் பாவவடிவமாம். ஆவரணத்தைச் செய்வதால் பிரசித்த இருள்போன்று என்னும் அநுமானத்தால் அதற்கு பாவவடிவத் தன்மை சித்தித்தலின் அகங்காராதியின் உபாதானத் தன்மையில் யாதொரு அனுபபத்தியுமின்ரும். அதன் நிவர்த்தகத்தினை நிருபிக்க கூடாமையுமின்ரும். சொரூப வடிவசித்பிரகாசத்திற்கு கூறிய ஆவரணத்தால் பிரதிபந்தஞ் செய்யப்பட்டமையின் நிவர்த்திக்குந் தன்மையின்றேனும் மஹாவாக்கியத்தாலுண்டான பிரம்மசாக்ஷாத்காரத்தால் ஆவரணம் நசித்தபோது பிரதிபந்தமற்ற சித்பிரகாசத்திற்காவது சூரியன்போன்று ஜடப்பிரகாசவடிவ விருத்தியாகிய சாக்ஷாத்காரத்திற்காவது அதனை நிவர்த்திக்குந் தன்மை பொருந்துதலின் என்பது முதலியவை முன்பே உபபாதனம் செய்யப்பட்டுள்ளன. ஆதலால் யாதொரு தோஷமு மின்ருமென்பது கருத்து. 129

## அவதாரிகை

மேலும் சம்வித்து சொப்பிரகாசமா மென்று கூறுகின்ற வர்களும் அதனுற்பத்தியாதியினை யங்கீகரிக்கின்றவர்களு மான பிராபகரரால் அதனுற்பத்திக்கு பூர்வம் அதனஸ்புரண வடிவ அதனஞ்ஞானம் அங்கீகரிக்கப்படுகின்றன. அஃது பாவவடிவமாகவே அவரால் அவஸ்யம் அங்கீகரிக்கத் தக்கது. சம்வித்விஷயக சொப்பிரகாச ஞானமாவது ஜட வடிவஞானமாவது அவர் மதத்தில் இன்மையால் அதன் பாவவடிவவஞ்ஞானம் சம்பவியாமையின். வாஸ்த்தவமாக இவர்களுக்கு சம்வித்தினுற்பத்தி முதலியவற்றின் பிராந்திக் குக் காரணமாந்தன்மையாலும் அதன் விஷயக பாவவடிவ அஞ்ஞானத்தின் சித்தியாம். கூறிய பிரகாரத்தால் அவர் மதத்தில் ஆண்டு ஞானுபாவ வடிவ அஞ்ஞானம் சம்பவி யாமையின் என்னுங் கருத்தால் கூறுகின்ருர்—

சுலோகம்

प्रावादुकैरपि तथैव तदेषितव्यं
संवेदनेऽस्फुरण मभ्युपयद्भि रग्रे ।
संवेदने नखलु संविदभावरूप
मज्ञान मभ्युपगतं नचबुद्ध्यभावः ॥

பதவுரை

अग्रे - ஸம்வேதனத்தி னுற்பத்திக்கு முன்பு
संवेदने - ஸப்வித்தின்கண்
अस्फुरणं उपयद्भिः - அஸ்புரணத்தை யங்கீகரிக்கின்ற
प्रावादुकैरपि - வாதிகளாலும்
तत् तथैव - அஞ்ஞானம் பாவவடிவமாகவே
एषितव्यम् - அங்கீகரிக்கத்தக்கது

தேற்ற ஏகாரத்தால் அஞ்ஞானம் அபாவவடிவமன்ரு மென்று கூறப்பட்டது. அதில் ஏதுவினைக் கூறுகின்ருர்:

संवेदनेऽज्ञानम् - சம்வித்தின்கண் அஞ்ஞானம்
संविदभाव रूपम् - சம்வித்தின் அபாவவடிவமாக

न खलु अभ्युपगतम् – அங்கீகரிக்கப்படவில்லை

नच बुद्ध्यभाव: – சடபுத்தியின் அபாவவடிவமாகவும் அங்கீகரிக்கப்படவில்லை. 130

அவதாரிகை

இங்ஙனம் அநாதிபாவ வடிவ அஞ்ஞானம் முன்பு கூறப்பட்டதாயினும் மறதியுள்ள புருடனைக் குறித்து மறுபடியும் உபபாதனஞ் செய்து அதற்கு சகத்தின் உபாதானத் தன்மை சித்தித்ததெனக் கூறுகின்றவராய் சுழுத்தியவஸ்தையில் அதனது சுபாவத்தைக் கூறுகின்ற சுருதி ஆசாரியரது வாக்கியங்கட்கு முன்பு கூறப்பட்ட அவிரோதத்தினை முடிக்கின்றவராய் ஆன்மாவிற்கு நித்திய சுத்தத்துவாதி சித்தித்ததெனக் கூறுகின்றார்—

சுலோகம்

तस्मादशेष जगदेक निदानभूत
मज्ञानमात्मविषयं न विरुद्धमूचुः ।
वेदावसान वचनानि मुनीश्वराश्च
स्थानेषुभूरिषु ततोऽवकरो नकश्चित् ॥

பதவுரை

तस्मात् – அஞ்ஞானம் அபாவவிலக்ஷணமாதலால்

अशेष जगदेक निदानभूतम् – ஸர்வ ஜகத்திற்கும் உபாதான காரணமாக

अज्ञानम् – அஞ்ஞானமுளது

आत्म विषयम् – ஆன்மவிஷயக வஞ்ஞானத்தினையுத்தேசித்து

वेदावसान वचनानि – வேதாந்த வாக்கியங்களும்

मुनीश्वराश्च – முனீஸ்வரர்களும்

भूरिषु स्थानेषु – அனேக விடங்களில்

विरुद्धं न ऊचुः – விரோதமாகக் கூறினாரில்லை

ततः कश्चित अवकरः न – ஆதலால் யாதொரு விரோதமுமின்றாம்.

## விசேஷவுரை

வேதாந்த வாக்கியங்களாவன:

**सता सौम्य तदा सम्पन्नो भवति, सति संपद्यन विदुः**

"ஸௌம்யனே சுழுத்தியில் சத்தோடு ஐக்கியத்தை யடைந்தவனாகின்றான், சத்தில் அபேதத்தினையடைந்து அறிகின்றிலர்" என்பன முதலியவை. அவற்றின் வியாக்கியானக் கருத்தாக்கள் முனீஸ்வரர்களாம். 131

## அவதாரிகை

இங்ஙனம் 122-வது சுலோகத்தில் சுழுத்தி காலத்தில் அஞ்ஞானமுளது அஃது அறியப்பட்டது என்று கூறப்பட்ட அஞ்ஞானத்தின் சத்துவம் உபபாதனம் செய்யப்பட்டது. அங்ஙனமாயினும் அதன் ஞானம் சம்பவிக்கின்றதில்லை. அப்போது அறிகின்றவனுன பிரமாதாவின்மையின் சுழுத்தி காலத்தில் பிரமாதாவினையங்கீகரிக்கின்ற அவனுக்கு உபாதியாயுள்ள அகங்காரத்திற்கும் அப்போது சத்துவம் பிராப்தியாம். அதனுல் சுழுத்தியினபாவம் அடைவுறும் ஆதலின் சாக்ஷியினுலேயே அஞ்ஞானம் அறியப்பட்டது என்று சொல்லற்க அகங்காரமின்றி கூடஸ்த்த அசங்கசைதன்னியத்திற்கு திருசியசம்பந்தம் பொருந்தாமையால் சாக்ஷித்தன்மை சம்பவியாமையானும் என்றுசங்கித்து சுழுத்தியவஸ்த்தையில் அஞ்ஞானமாத்திரமே திருசியமாதலால் அதன் சம்பந்தம் அனுதியாயினும் சைதன்னிய சொருபத்தினனுசாரத்தால் அஞ்ஞானமாத்திரத்தின் அதீனத்தன்மை பொருந்துதலினுலும் ஆங்காரத்திற்கு ஆண்டு உபயோகமின்மையினுலும் அசம்பவமாதலினுலும் அஞ்ஞானவுபகிதமாகியே சிதான்மா சுழுத்தியில் அஞ்ஞானத்தின் சாக்ஷியாம். அச்சிதான்மாவே சாக்கிராதிகாலங்களில் அகங்காரத்தாலும் உபகிதமாகி அகங்காரத்திற்கும் அதன் தர்மத்திற்கும் சாக்ஷியாம். அப்படிக்கன்றேல் அதிப்பிரசங்கம் வரும், அஞ்ஞானம் அகங்காரமென்னுமிரண்டினுல் உபகிதமாகியே பிரமாண ஜன்னிய விருத்தியினையபேக்ஷித்து ஞாதவஸ்த்துவின் சாக்ஷியாகின்றது ஆதலின் திருசியமாகிய வகங்கார விசிஷ்ட பிரமாதாவிற்கு ஓரிடத்தும் சாக்ஷித்தன்மையின்ரும் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்—

ஸுலோகம்

साक्षित्वमात्म तमसा मतिकञ्चुकेन
मातृत्वमेतदपि नेह सुषुप्तिकाले ।
यद्धेतुकं भवति यन्नहि तद्विनातत्
सम्भाव्यते नच तदत्र सुषुप्तिकाले ॥

பதவுரை

आत्म तमसा – தனது அஞ்ஞான மாத்திரத்தால்

साक्षित्वम् – சிதான்மாவிற்கு சாக்ஷித்தன்மையாம்

அப்படியானுல் சாக்ஷியினுலேயே சருவப்பிரதீதியும் சம்பவித்தலால் பிரமாதாவினுற் பயனென்னை யென்ருசங்கித்து உலகப்பிரசித்த பிரமாதா முதலிய வியவகாரத்திற்கு நிருவிஷயத்தன்மை பொருந்தாமையாலும் பிரமாதிருத்தன்மையின்றி கருத்திருத்துவாதி பொருத்தாமையாலும் சிதான்மாவே புத்தியின் தாதான்மியத்தை யடைந்ததாகி பிரமையின் ஆசிரயத் தன்மையால் பிரமாதாவாக சாக்கிரத்தில் ஆகின்றது. சுழுத்தியிலோ புத்தியே யின்மையினுல் பிரமாதிருத்தனமையுமின்ருமெனக் கூறுகின்ருர் —

मतिकञ्चुकेन – புத்திவடிவ சட்டையின் சம்பந்தத்தால்

मातृत्वम् – சிதான்மாவிற்கு பிரமாதிருத் தன்மையாம்

एतदपि – இந்த புத்திவடிவ சட்டையும்

इह सुषुप्तिकालेन – ஈண்டு சுழுத்தியவஸ்தையி லின்ரும்

புத்தியின்ருயினும் அஞ்ஞான விசிட்ட சேதனத்திற்கு சுழுத்தியில் பிரமாதிருத்தன்மையே னின்ருகும் என்ருசங்கித்து பிரமையானது புத்தியின் பரிணும விசேஷத்தோடு கூடிய சைதன்ய வடிவமாதலால் பிரமையின் கருத்திருத்தன்மை வடிவ பிரமாதிருத்தன்மையும் புத்திவிசிஷ்ட சேதனத்திற்கே பொருத்தமாம். அஞ்ஞானமாத்திரவிசிஷ்ட சேதனத்திற்குப் பொருத்தமின்ரும் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்—

यद् यद्धेतुकं भवति – எக்காரியம் எக்காரணத்தா லுண்டா கின்றதோ

तद् तद्विना – அக்காரியம் அக்காரணமின்றி

नहि सम्भाव्यते – சம்பவிக்கிறதில்லை

अत्र सुषुप्ति काले – பிரகிருதத்தில் சுழுத்தியின்கண்

नच तद् – புத்திவடிவ காரணமின்ரும், அதனுல் பிரமாத் திருத்தன்மைவடிவ காரியமுமின்ரு மென்பது பொருள். 132

அவதாரிகை

அற்றேல் சுழுத்தியின் கண் புத்தியின்ருமென்பது எங்ஙனமாம். எதனுல் புத்தியினதீனமான பிரமாதிருத்தன்மை சித்தியாது. சுழுத்தியில் புத்தி நசித்தது என்னும் அநுபவமில்லையன்ரே. புத்தியின் சற்பாவ அநுபவமின்மையினுலேயே அதனபாவம் கற்பிக்கப்படுகின்றது என்று சொல்லற்க. அவ்வாருயின் அஞ்ஞானத்தினது அநுபவமும் வெளிப்படையாக இன்மையினுலும் நிருவிகற்ப அநுபவத்திற்கு அதன் அசத்துவசங்கையை நிவர்த்திக்குந்தன்மையின்மையாலும் அஞ்ஞானத்தினது அபாவமும் பிராப்தியாகும். சுழுத்தியில் காரிய சமுதாயம் விலீனமாகி சூக்ஷுமரூபத்தால் நிலைத்திருக்கின்றது என்னுமிதுவும் அநுபவமின்மையினுலேயே சித்திக்காது என்னுமிடத்துக் கூறுகின்ருர்—

சுலோகம்

अज्ञानमस्ति सकलंच सुषुप्तिकाले
तत्रप्रलीनमिति यद्यपि नास्ति पुंसः ।
स्पष्टानुभूति रपवर्ग विलक्षणत्वा
देष्टव्यमेवतु सुषुप्तिभुवस्तथात्वम् ॥

பதவுரை

सुषुप्तिकाले – சுழுத்தியவஸ்தையில்

सकलं च अज्ञानम् अस्ति – காரியசகித அஞ்ஞானம் சூக்ஷுமரூபமாக நிலைத்திருக்கின்றது

तत्र प्रलीनमिति - ஆண்டு அஞ்ஞானம் ஸூக்ஷ்மரூபமாக இருக்கின்றது என

पुंसः स्पष्टानुभूतिः - புருடனுக்கு வெளிப்படையான அநுபவம்

यद्यपि नास्ति - இன்றும். அங்ஙனமாயினும்

अपवर्ग विलक्षणत्वात् - மோக்ஷத்தினும் வைலக்ஷண்யமிருத்தலால்

तथात्वम् सुषुप्तिश्रुतः - சுழுத்தியில் அஞ்ஞானத்தினிருப்பு

एष्टव्यमेवतु - அவசியம் அங்கீகரிக்கத்தக்கதேயாம்,

## விசேஷவுரை

புத்தி சவிகற்பகத்தன்மையால் எதுபரியந்தமுள்ளதோ அதுபரியந்தமும் சாக்ஷி பாஸ்யமாதலாலும் சுழுத்தியில் அஃது விளங்காமையாலும் அஃது உளதாயின் சுழுத்திக்குக் கேடு வருதலாலும் அப்போது புத்தியின் அபாவம் ஆவசியகமாம். அஞ்ஞானம் முதலியவற்றின் அநுபவம் வெளிப்படையாக இன்றேனும் அவற்றின் இருப்பு மாத்திரம் அங்கீகரிக்கத்தக்கதாம். அங்கீகரிக்காவிடின் காரண மாத்திரத்தின் அபாவத்தால் அது மோக்ஷமேயாகும். ஆகவே மீண்டும் அதினின்றும் எழுதல் கூடாது. ஆதலால் அவ்வவஸ்தை மோக்ஷத்தின் விலக்ஷணமாதலாலும் சாக்கிரம் முதலியவற்றின் விலக்ஷணமாதலாலும் சருவகாரியமும் சுழுத்தியில் விலீனமாகி அஞ்ஞானத்தில் ஸூக்ஷ்மரூபத்தால் நிலைத்திருக்கின்றதென அங்கீகரிக்கத்தக்கது. அன்றேல் அசத்தினின்றும் உற்பத்தி பொருந்தாமையின். "எப்போது தூங்கினவனாகி சொப்பனத்தைக் கிஞ்சித்தும் காண்கிறதில்லையோ அப்போது இவ்வான்மாவின் கண்ணேயே ஏகமாகின்றான். அப்போது இவ்வான்மாவில் வாக்கிந்திரியந்தம் சருவநாமங்களோடு கூட லயத்தையடைகின்றது". சுழுத்திகாலத்தில் சகலமும் விலீனமாகும்போது தமத்தினால் மறைக்கப்பட்டவனாய் என்பது முதலிய சுருதியினாலும் மேற்கூறப்பட்டது அங்கீகரிக்கத்தக்கதேயாம் என்பது கருத்து.

## அவதாரிகை

அற்றேல் சுழுத்தியில் அஞ்ஞானம் சொரூபமாக இருக்குமாயின் அப்போது சாக்கிர சொப்பனங்களில் அதன் இருப்பில் விவாதமின்மையினுல் சைதன்யம்போன்று மூன்றவஸ்தையிலும் வியபிசாரமின்மையினுல் அஃது ஆன்மாவின் சுபாவமாகும். ஆதலால் சுபாவத்தினின்றும் அஞ்ஞானத்தை வேறு பிரிப்பதன்கண் திருஷ்டாந்தமின்மையின் அதினின்றும் வேற்றுமை சித்தியாதபோது ஆன்மா அசுத்தமேயாகும் என்று சங்கிக்கின்ருன்.

## சுலோகம்

एवंसतीह तमसो न विविच्यवस्तु
साक्षान्निवेदयितु मस्ति निदर्शनं चेत् ।
नैतत्परागवगते विषयो विभाति
गाढंतमो नतुतथाऽवगतिः प्रतीचि ॥

## பதவுரை

एवं सति – சுழுத்தியில் அஞ்ஞானமிருக்குமாயின்
इह – மூன்றவஸ்தையிலும்
तमसः विविच्य – அஞ்ஞானத்தினின்றும் வேறு பிரித்து
वस्तु साक्षात् – ஆன்மவஸ்துவை நேரே
निवेदयितुम् – தெரிவித்தற்கு
निदर्शनं नास्ति इति चेत् – திருஷ்டாந்தம் இல்லையெனின்
न एतद् – நீ கூறியது சரியன்று
गाढं तमः – கெட்டியான அஞ்ஞானமானது
परागवगतेः – திருசியத்தன்மையால் அநுபவத்திற்கு
विषयः विभाति – விஷயமாக விளங்குகிறது
प्रतीचि तु – பிரத்தியகான்மாவின் கண்ணே
न तथाऽवगतिः – அவ்வாறு திருசியமாக அநுபவமின்ரும்.

## விசேஷவுரை

மோக்ஷாவஸ்தை பரோக்ஷமாதலானும் விவாதவிஷய மாதலானும் அது திருஷ்டாந்தமன்றுமென்று கருதி நேரே எனப்பட்டது. இனிச் சித்தாந்தியின் சமாதானத்தின் கருத்து வருமாறு. எப்போது அஞ்ஞானம் பஷ்டமாக அநுபவிக்கப்படுகின்றதோ அப்போது பிரமாதாவினுல் அஞ்ஞானம் உளது என பாஹ்யத்தன்மையால் காணப் படுகின்றது. ஆன்மாவோ நானென திருசியவிலக்ஷணத் தன்மையால் அபரோக்ஷத்திருக்குருபப் பிரத்தியக் தன்மை யால் சுயம் விளங்குகின்றது. ஆதலால் அஞ்ஞானத்திற்கு கடாதிக்குப்போன்று பாஹ்யத்தன்மையுண்மையால் அத னின் விருத்தமான பிரத்தியக் சுபாவத்தன்மையின்றும் என்று வேறு பிரித்தலால் ஆன்மாவின்கண் சுத்தி பொருந்துகின்றது. 134

## அவதாரிகை

அங்ஙனமாயினும் சுழுத்தியின்கண் ஆன்மாவினதும் அஞ்ஞானத்தினதும் பிரத்தியக் தன்மையாலும் பராக் தன்மையாலும் வெளிப்படையாக அநுபவமின்மையால் அப்போது அதனை வேறுபிரித்தல் கூடாதென்றுசங்கித்து சாக்கிரம் முதலியவற்றில் வேறு பிரிக்கப்பட்டவைகளோடு அபேதமிருத்தலின் அவைகட்கு ஆண்டும் வேறு பிரித்தல் சுலபமாமென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

## சுலோகம்

प्रत्यक्पराग्विषयवस्तु विवेचनाय
क्लेशेन सम्भवति कस्यचिदत्र जन्तोः ।
दृश्यं तमो घटपटादिव देषतस्स
द्रष्टा सुषुप्ति सुविचिद् घनविग्रहोऽभूत् ॥

## பதவுரை

**अत्र कस्यचिद् जन्तोः** – சுழுத்தியில் யாதொரு பிராணிக்கும்
**प्रत्यक्पराग्वस्तु विवेचनाय** – பிரத்தியகான்மாவையும் அஞ்ஞானத்தையும் பிரித்தற்பொருட்டு

क्लेशो न सम्भवति - யாதொரு வருத்தமுமின்றும்
सुषुप्ति सुप्ते - சுழுத்தியவஸ்தையில்
घठपटादिवद् - கடபடாதிபோன்று
तमः दृश्यम् - அஞ்ஞானம் திருசியமாம்
एषः चिद्घन विग्रहः - சிதானந்தவடிவ இவ்வான்மா
तस्य द्रष्टाऽभूत - அஞ்ஞானத்திற்கு சாக்ஷியாகவுளது என வேறுபிரித்தல் பொருந்துதலின். 135

அவதாரிகை

அங்ஙனமாயினும் மூன்றவஸ்தையும் சேதனத்தின் தருமமாக அநுபவிக்கப்படுதலால் அவ்வவஸ்தைகளால் கலங்கியுள்ள ஆன்மாவிற்கு சுத்தத்தன்மை எங்ஙனமா மென்னுமிடத்துக் கூறுகின்றார் :

சுலோகம்

तिस्रोऽपि चिद्घनतनोस्तवदृश्यभूता
दूरे चकासतिमतेर्बहिरेव तावत् ।
आविस्तिरो भवनधर्मतयाह्यवस्थाः
कः सङ्करो विमलचिद्वपुषस्तवाभिः ॥

பதவுரை

मतेः तिस्रोऽपि अवस्थाः - புத்தியின் மூன்றவஸ்தைகளும்
चिद्घनतनोः तव - சிதேகரசமான உனக்கு
दृश्यभूताः तावत् - கடாதிபோன்று திருசியங்களேயாம்
बहिरेव - அதனுல் அவை புறம்பாயுள்ளன உனது தருமங்களன்றுமென்பது பொருள்.

மேலும் சாக்கிராவஸ்தை இந்திரியாதி ஜன்னிய புத்தி விருத்திரூபமாதலாலும் சொப்பனுவஸ்தை அதன் வாசனையால் விளங்குதலாலும் சுழுத்தியவஸ்தை அதன் லயவடிவ சூக்ஷ்ம ரூபமாதலாலும் அஞன்மபுத்தி சம்பந்தியாகிய அவ்வவஸ்தைகள் சொரூபத்தை விசாரிக்குங்காலத்தில்

திருக்குவடிவ ஆன்மாவினின்றும் தூரத்தில் அதன் சம்சர்க்க அயோக்கிய தேசத்தில் விளங்குகின்றன. ஆதலால் அவை ஆன்மதருமங்களாக எங்ஙனமாம். மற்றே ஆகா எனக் கூறுகின்றார்.

**दूरे चकासति** – தூரத்தில் விளங்குகின்றன

அவஸ்தைகள் போக்குவரத்தை யுடைமையால் இரச்சு சர்ப்பம்போன்று மித்தையாதலானும் அவற்றின் அதீனமான அசுத்தி ஆன்மாவிற்கு இன்றாம் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

**आविस्तिरो भवन धर्मतया** – சாக்கிரம் முதலியவை ஆவிர்ப்பாவ திரோபாவ தருமமுடைமையால்

**आभिः** – அவைகளால்

**विमलचिद्वपुषः तव** – நிருமல சிதான்மாவாகிய உனக்கு

**सङ्करः कः** – வாஸ்தவ சம்பந்தமின்றாம். 136

## அவதாரிகை

அற்றேல் அவஸ்தைகளையுடைய அகங்காரத்தின் சம்பந்தத்தால் அக்கினிசம்பந்தி ஜலத்தின் உஷ்ணம் போன்று சிதான்மாவிற்கும் அவஸ்தையினை யுடையதாந் தன்மை நீக்கமுடியாதாம். ஆதலின் அதற்கு சுத்தி பொருந்தாது என்றாசங்கித்து அகங்காரமும் அதன் சம்பந்தமும் அத்துவிதீய அசங்க சிதான்மாவின்கண் அவித்தையினாற் கற்பிக்கப்பட்டமையின் அவித்தையில்லாத போது அவைகள் வாஸ்தவமாக இன்றாம். ஆதலின் அவற்றின் அதீனமான அசுத்தியெங்ஙனமாம் என்று கருதிக் கூறுகின்றார் :

சுலோகம்

त्वय्येव कल्पितमहं करणं बिभर्ति
तिस्रोऽपिताः सहितमेवतु तचताभिः ।
त्वच्चित्प्रकाश विषयत्वमुपेत्यभाति
स्वाज्ञानवत्तव नरूपमतश्चतुष्कम् ॥

பதவுரை

त्वयि कल्पितम् - உன்னிடத்தில் கற்பிக்கப்பட்ட

अहंकरणम् एव - அந்தக்கரணமே

ताः तिस्रोऽपि - அம் மூன்றவஸ்தைகளையும்

बिभर्ति - தரிக்கின்றது.

அற்றேல் எது அவஸ்தையையுடையதாமோ அதுவே ஆன்மாவாம் ஆகவே அதற்குக் கற்பிதத் தன்மை எங்ஙனமாம் என்னும் பாமரருடைய சங்கையை நிராகரிக்கின்றவராய் திருசிய அகங்காராதியின் சாக்ஷியாகிய திருக்குவடிவ ஆன்மாவிற்கு அதனின்றும் வேறுபாடு முன்பு அநேகப் பிரகாரமாகக் கூறப்பட்டுளதாயினும் அதனை நினைப்பூட்டுகின்றார்.

तच ताभिः - அவ்வந்தக்கரணம் அவ்வவஸ்தைகளோடு

सहितमेव तु - சேர்ந்தே

त्वच्चित्प्रकाशविषयत्वमुपेत्य - உனது சிற்பிரகாசத்தின் விஷயத் தன்மையினையடைந்து

अज्ञानवत् भाति - அஞ்ஞானம் போன்று விளங்குகின்றது.

திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

अतः चतुष्कम् - ஆதலால் அந்தக்கரணமும் அவஸ்தைகளுமாகிய நான்கும்

तवरूपं न - வாஸ்தவமாக உனது வடிவமும் தருமமுமன்றுமென்பது பொருள். 137

அவதாரிகை

கூறிய நான்கும் ஆன்மாவினின்றும் வேறாயின் ஆன்மாவிற்கு அத்துவயத்தன்மை சித்தியாது. சாங்கியாதி மதத்தின் பிராப்தியுமாம் என்றாசங்கித்துக் கூறுகின்றார்.

சுலோகம்

नान्वेति तत्त्वचिता व्यतिरेकिताच
दूरे नसम्भवति तस्य चतुष्टयस्य ।
ना भावरूप भजनाय समर्थमेत
देवं चिदेवतु चतुष्टयमेतदासीत् ॥

## பதவுரை

तत् – அந்தக்கரணம் முதலிய நான்கும்

तव चिता – உனது சொரூப சைதன்னியத்தோடு

न अन्वेति சொரூபத்தாலாவது தருமத்தாலாவது சம்பந்திக்கிறதில்லை

तस्य चतुष्टयस्य – அந்நான்கிற்கும்

व्यतिरेकिताच – சேதனத்தை யாசிரயிக்காமல் சுதந்திரமாக விருக்குந்தன்மையும்

दूरे न सम्भवति – அத்தியந்தம் சம்பவிக்கிறதில்லை. அபேதமும் பேதமுமின்றுமென்பது பொருள்

अभावरूप भजनाय – அபாவவடிவத்தை யடைதற்பொருட்டும்

एतत् न समर्थम् – கூறியநான்கும் சாமர்த்தியமுடையதன்றும், சூனியமுமன்றுமென்பது பொருள்.

एवं एतत चतुष्टयम् – இங்ஙனம் இந்த நான்கும்

चिदेव तु आसीत् – சின்மாத்திரமாம்.

## விசேஷவுரை

அந்த நான்கும் சத்தா அல்லது அசத்தா முதற் பக்ஷத்திலும் சித்தின் அபேதத்தால் சத்தா அல்லது பேதத்தால் சத்தா. அல்லது பேதாபேதத்தால் சத்தா. முதற் பக்ஷம் சரியன்று சடா சடங்கட்கும் வியபிசாரி அவ்வியாபிசாரிகட்கும் வாஸ்தவமாக அபேதம் சம்பவியாமையின் இரண்டாவது பக்ஷமும் சரியன்று. பேதமே இரண்டாவது அத்தியாயத்திற் கூறப்பட்ட பிரகாரத்தால் நிரூபிக்கமுடியாமையின் சத்தை பொருந்தாமையின் மேலும் அப்பேதமும் பேதத்தால் சத்தாயின் அனவஸ்தை வருதலானும் அதன் (பேதத்தின்) அபேதமும் கூறிய பிரகாரத்தால் சம்பவியாமையினுலும் என்க. மூன்ருவது பக்ஷமும் சரியன்று. இரண்டு பக்ஷத்திலும் கூறப்பட்ட தோஷம் வருதலானும் விரோதமாதலானும் ஓரிடத்தில் பேதாபேதம் சம்பவியாமையின்.

அசத்துமன்ரும் முயற்கோட்டிற்குப்போல அபரோக்ஷத்தன்மை பொருந்தாமையினுலும் இருக்கின்றது என்னும்

அநுபவத்திற்கு விரோதம் வருதலானும் என்க. ஆதலால் அன்வய வியதிரேகபாவ மின்மையினுல் அவித்தையும் அதன் காரியமுமாகிய துவைதத்திற்கு சிதாகார சன்மாத்திரத் தன்மையில் பரியவசானமிருத்தலால் அதுவே அதன் சொரூபமாம். அதனின் விபரீதமோ அநிர்வசநீய வடிவமாய் தத்துவஞானத்தால் பாதிக்கப்பட்டதாகிக் கூறப்பட்ட சொரூபமாகவே மிஞ்சுகின்றது. ஆதலால் கூறப்பட்ட தோஷத்துவயத்தின் பிராப்தியின்றுமென்பது கருத்து. 138

## அவதாரிகை

சாக்கிரம் முதலியவற்றிற்கு மித்தியாத்தன்மையும் சைதன்யத்திற்கே சத்தியத்தன்மையால் அதன் அதிஷ்டானத் தன்மையும் ஆகுமாயின் அப்போது நீ மேற்கூறிய வண்ணமாம். அங்ஙனமோ அன்றும். சாதகமின்மையினுலும் வியபிசாரித்தன்மை சுழுத்தி மூர்ச்சை முதலிய அவஸ்தைகளில் சைதன்யத்தின்கண்ணுமிருத்தலாலும் என்றுசங்கித்து

"नहि द्रष्टुर्दृष्टेर्विपरिलोपो विद्यते"

திருஷ்டாவின் திருஷ்டிக்கு நாசமின்றும் என்பது முதலிய சுருதியினுலும் பிரத்தியபிஞ்ஞையின் பிரமாணந்தன்மையாலும் அப்போதும் அதன் போக்குவரத்துகளில் அநுகதமாய் சாக்ஷிசைதன்யமுளதேயாம். அநுகதமாய் சாக்ஷி சைதன்யமில்லையாயின் அவ்வவஸ்தைகளின் பராமரிஸம் (அநுசந்தானம்) பொருந்தாமற்போம். ஆதலால் அதற்கு சத்தியத்தன்மை யுண்மையால் வியபிசாரிகளாகிய அவஸ்தைகளின் அதிஷ்டானத்தன்மை பொருத்தமேயாமென்னுங் கருத்தாற் கூறுகின்றூர்:

## சுலோகம்

जाग्रत्स्वप्नसुषुप्तिमूर्च्छिततनू निष्क्रान्त्यवस्थासु य-
च्चैतन्यं व्यभिचारिवस्त्वनुगतं तत्सत्यमेवात्मनः ।
यत्किंचिद्व्यभिचारितन्ननुमृषास्त्रक्सर्पदण्डादिव -
न्नानुस्यूत चिदात्मवस्तुवदितुं शक्यं मृषारज्जुवत् ॥

பதவுரை

जाग्रत स्वप्नसुषुप्तिमूर्च्छिततनू निष्क्रान्त्यवस्थासु – சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி மூர்ச்சை மரணமாகிய அவஸ்தைகளில்

आत्मनः यच्चैतन्यम्–ஆன்மாவின் யாதொரு சைதன்யமானது

व्यभिचारिवस्त्वनुगतम् – வியபிசாரி வஸ்துக்களில் அநுகதமாகவுளதோ

तत् सत्यमेव – அது சத்தியமேயாம்.

அங்ஙனமாயினும் அவஸ்தைகளின் மித்தியாத்தன்மையில் வியபிசாரித்தன்மை அப்பிரயோஜகமாம் என்ருசங்கித்து சத்திற்காவது அசத்திற்காவது போக்குவரத்து சம்பவியாமையின் அவைகட்கு அநிர்வசநீயத்தன்மை ஆவசியகமாம். ஆதலின் வியபிசாரித்தன்மைக்கு மித்தியாத்தன்மையால் வியாப்திசித்தித்தலின் அப்பிரயோஜகமன்ரு மென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

यत्किंचिद्व्यभिचारि – யாதொரு வஸ்து வியபிசாரியாமோ

तत् ननु – அது நிச்சயமாக

स्रक्सर्पदण्डादिवत् मृषा – மாலை சர்ப்பம் தண்டம் முதலியவை போன்று மித்தையேயாம்.

மேலும் சைதன்யம் மித்தையாம். மித்தையின் சம்பந்தியாதலால் மித்தையாவஸ்துபோன்று என்ருசங்கித்து இவ்வநுமானத்தின்கண் வியபிசாரித்தன்மை உபாதியாம். சாதனவியாபகத் தன்மையுமின்ரும். பக்ஷத்தின்கண் அஃதின்மையின் எனத் திருஷ்டாந்தசகிதம் கூறுகின்ருர்.

रज्जुवत् – இரச்சுபோன்று

अनुस्यूत चिदात्मवस्तु – கற்பிதங்களில் அநுஸ்யூதமான சிதான்மவஸ்துவை

मृषा वदितुं – மித்தையென்று கூறுதற்கு

न शक्यम् – முடியாது.

அவதாரிகை

அற்றேல் மாலை சர்ப்பம் முதலியவை இரச்சுவின் அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்டமையின் இரச்சுவே அவற்றின் வாஸ்தவ வடிவமாம். அதன் விபரீதமோ மித்தையாமென்று கூறுதல் பொருத்தமாம். இவ்வாறு அவஸ்தைகளின் தருமியாகக் கூறப்பட்ட அந்தக்கரணம் ஆன்மாவின் அஞ்ஞானத்தாற் கற்பிதமன்றும், அஃது அநாதியாதலின், எதனால் ஆன்மாவே வாஸ்தவமாம். மற்றே அந்தக்கரணமும் வாஸ்தவமாம், வாஸ்தவமாக வுடன்படாவிடின் அதன் சம்பந்தியான கருமத்தினதும் அதன் பலத்தினதும் பிரவாஹத்திற்கு அநாதித்தன்மை பொருந்தாமற் போம். அதனாலும் ஆன்மா மூன்றவஸ்தைகளிலும் சாக்ஷியாக விளங்கும் போது அதன்கண் அஞ்ஞானம் சம்பவியாமையானும் அந்தக்கரணத்திற்கு அஞ்ஞான கற்பிதத்தன்மை பொருந்தாமையின் என்னுமிடத்துக் கூறுகின்றார் :

சுலோகம்

जाग्रत्स्वप्न सुषुप्तिधर्मकमिदं चित्तं त्वदज्ञानतः
प्रादुर्भूतमतस्त्वमेव सततं त्वत्तो नतद्भिद्यते ।
स्वाज्ञानं चतवानुभूतिबलतः सिद्धं मृषा तत्त्वतो
नासीदस्ति भविष्यतीति भवतः पूर्णाचितिः शिष्यते ॥

பதவுரை

जाग्रत् स्वप्न सुषुप्ति धर्मकमिदम् चित्तम् – சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னுமிவைகளைத் தருமமாக வுடைய இந்தச் சித்தம்

त्वदज्ञानतः – உனது அஞ்ஞானத்தால்

प्रादुर्भूतम् – உற்பன்னமாம்

अतः सततं त्वम् एव – ஆதலால் எப்போதும் அது உனது வடிவமேயாம்

त्वत्तः तद् न भिद्यते – உன்னினின்றும் அது பின்னமன்றும்

கருத்திதுவாம் அந்தக்கரணத்திற்கு வியத்தரூபத்தால் அநாதித்தன்மையின்றும். "அது மனதைச் செய்தது", "இதனினின்றும் பிராணன் மனது சருவேந்திரியங்கள் உண்டாயின" என்பது முதலிய சுருதியின்கண் உற்பத்தி கேட்கப்படுதலாலும் சாக்ஷிமாத்திரத்திற்கு விஷயமான சித்தத்திற்கு போதல் வருதலின்றி ஓர்போதைய அநுபவ விஷயத்துவம் பொருந்தாமையானும் என்க.

" तदापीतेः सम्सार व्यपदेशात् "

சுழுத்தியில் லயத்தை யடைந்திருத்தலின் சமுசாரத்தைக் கூறுதலின் என்னும் சூத்திரத்தின்கண் கூறப்பட்ட நியாயத்தால் சுழுத்தி முதலியவற்றின்கண்ணும் சூக்ஷுமரூபத்தால் இருத்தலின் அநாதியான கருமம் முதலானவற்றின் பிரவாகத்திற்கு ஏகாசிரயத்தன்மை பொருத்தமாம். விளங்குகின்ற ஆன்மாவின்கண் அஞ்ஞானமேயின்றும் என்பதும் சரியன்று. விளங்குகின்ற ஆன்மாவின்கண் நிரதிசயானந்த அத்துவயப் பிரம்மான்மத்தன்மையின் அஞ்ஞானம் அநுபவத்தாலும் யுக்தியினுலும் சித்தித்திருத்தலின். சடபதார்த்தத்திற்கு சுதந்திரமாக விளங்குந்தன்மையின்மையால் சிதான்மாவின்கண் அது அவித்தையினுற் கற்பிதமேயாம், ஆதலின் ஆன்மாவே சருவாவஸ்தையோடுங் கூடிய சித்தத்தின் சொரூபமாம். அப்படியானுல் அஞ்ஞானத்திற்கு அஞ்ஞான கற்பிதத்தன்மை யின்மையின் மித்தியாத்தன்மை சித்தியாது. ஆதலின் துவைதத்தின் அடைவுண்டாம் என்றுசங்கித்துக் கூறுகின்றுர்.

तव अनुभूति बलतः – உனது அநுபவ பலத்தால்

सिद्धं स्वाज्ञानं च – சித்தித்த தனது அஞ்ஞானமும்

मृषा – மித்தையேயாம்

तत्त्वतः नासीद् – வாஸ்தவமாக முன்னரின்றும்

नास्ति न भविष्यति इति – இப்போதுமின்றும். இனிமேலுமின்றும் ஆதலின்

भवतः पूर्णचितिः – உமது பரிபூர்ண சின்மாத்திரசொரூபமே

शिष्यते –மிஞ்சுகின்றது.

### விசேஷவுரை

அத்துவய அசங்க சொப்பிரகாச சிதான்மாவின்கண் அது வாஸ்தவமாக சம்பவியாமையின் சடத்தன்மை திருசியத்தன்மைகளால் அதன்கண் மித்தியாவடிவத்தன்மை சித்தித்தலின் மூன்று காலத்திலும் சொரூபமாக சத்துவமின்றிய காரியசகித அஞ்ஞானம் பிரதீதியாயினும் வாஸ்தவமாக பூர்ணானந்த சிதான்மாவே மிஞ்சுகின்றது என்பது பொருள். 140

### அவதாரிகை

அற்றேல் எல்லா வாதிகளும் தத்தம் மதத்தில் யுத்திகளைக் கூறுகின்றனர். அத்துணையால் எனக்கு அதன்கண் சிரத்தை யுண்டாகின்றதில்லை. இங்ஙனம் யுத்திகளால் துவம்பதார்த்த சுத்தி உபபாதனஞ் செய்யப்பட்டதாயினும் அதன்கண் சிரத்தை யெங்ஙனமுண்டாம் என்ருசங்கித்து யுத்திமாத்திரத்திற்கு ஸ்திரத்தன்மையின்மையின் யுத்திமாத்திரத்தால் அதன்கண் சிரத்தையினநுற்பத்தி பொருத்தமேயாம். ஈண்டோ யுத்திகளால் உபகரிக்கப்பட்ட ஆகம வாக்கியங்களாலேயே வெளிப்படையாகப் பிரதிபாதிக்கப் படுதலால் கூறப்பட்ட துவம்பதார்த்த சுத்தியின்கண் சிரத்தை வைக்கத்தக்கதாமெனக் கூறுகின்ருர்.

### சுலோகம்

ज्योतिर्ब्राह्मणवाक्यमानबलतः सम्पूर्णरूपाचिति
जाग्रत्स्वप्नसुषुप्तिधर्मरहिता मोक्षाय निश्चीयते ।
तस्मादस्मदुदीरितं स्वकवपुः श्रद्धत्स्वमानं विना
नास्माभिः प्रतिपादिता चितिरियं वाक्यार्थसंबन्धिनी ॥

### பதவுரை

ज्योतिर्ब्राह्मणवाक्यमानबलतः — பிரகதாரண்ய சுருதியில் ஜோதிர் பிராம்மண வாக்கியமாகிய பிரமாண பலத்தால்

सम्पूर्णरूपाचितिः — பரிபூரணமாகிய சேதனம்

जाग्रत्स्वप्नसुषुप्तिधर्मरहिता – சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென்னும் தருமமின்றியதாகி

मोक्षाय निश्चीयते – மோக்ஷஏதுவான வாக்கியார்த்த போதத்தின்பொருட்டு நிச்சயஞ் செய்யப்படுகின்றது

तस्माद् अस्मदुदीरितम् – ஆதலால் நம்மாற் கூறப்பட்ட

स्वकवपुः श्रद्धत्स्व – சுவசொரூபத்தின்கண் சிரத்தையை வைப்பாயாக

इयं वाक्यार्थसंबन्धिनी चितिः – வாக்கியார்த்த சம்பந்தியாகிய இந்தச் சேதனமானது

मानं विना – பிரமாணமின்றி

अस्माभिः न प्रतिपादिता – எம்மால் பிரதிபாதிக்கப்படவில்லே.

விசேஷவுரை

ஜோதிர்ப்பிராம்மணத்தின்கண் வியவகரிக்கப்படுகின்ற வஸ்துவைப் பிரகாசஞ்செய்கின்ற சூரியன் முதலிய ஜோதிகள் இல்லாத சொப்பனம் மனோராஜ்ஜியம் முதலியவற்றில் வியவகாரத்திற்குக் காரணமான ஜோதி யாது என்று கருதி இப்புருடன் என்ன ஜோதியை யுடைத்தானவனு யிருக்கின்ருன் என்னுஞ் சங்கைக்கு இவனுக்கு ஆன்மாவே ஜோதியாம் என்று உத்தரத்தைக் கேட்டு தேகாதி அநேக பதார்த்தங்கள் நான் என்று விளங்குதலால் அவற்றுள் அசாதாரணமான ஆன்ம சொரூபத்தை யறியும் வேட்கையினுல் ஆன்மா யாது என்று மீண்டும் சங்கை செய்ய அதற்கு "பிராணன்களில் யாதொரு விஞ்ஞானமயனுண்டோ இருதயத்தில் உள்சோதியுண்டோ" என்பது முதலியவற்ருல் உத்தரங் கூறப்பட்டது. அவ்வாக்கியத்தால் தேகம், இந்திரியம் பிராணன் புத்தி அதன் விருத்தியாகிய க்ஷணிக விஞ்ஞானம் அஞ்ஞானம் ஆகிய இவற்றினின்றும் விலக்ஷணமான ஆன்மாவைக் கூறி அவ்வான்மாவிற்கு "புத்தியோடு சமானனுயிருந்துகொண்டு இரண்டு லோகங்களிலுஞ் சஞ்சரிக்கின்றது" என்பதால் புத்தியை யுபாதியாகவுடைய சமுசாரத்தை நிர்த்தேசஞ்செய்து அச்சமுசாரத்திற்கு "தியானஞ் செய்கின்றதுபோல" என்பதாதியால் மித்தியாத்தன்மை கூறப்பட்டது மீண்டும் "புத்திசகிதனுகி

சொப்பனத்தையடைந்து" என்பதாதியால் சாக்கிர சொப்பன மரண ஜன்மங்களுக்குக் கிரமத்தால் பிராப்தியினை அநுவாதஞ்செய்து வியபிசாரிகளாகிய அவைகட்கு அனுன்மாவின் சுபாவத்துவத்தைப் பிரதிபாதித்து மீண்டும் "அந்த இவ்வான்மா இந்தச் சம்பிரசாதத்தில்" என்பதாதியால் கிரமத்தினையுடைய அவஸ்தைகளை அநுபவித்தல் வாயிலாக "அவன் ஆண்டு யாதொன்றைக் காண்கின்றானோ அதனோடு சம்பந்தமில்லாதவனாகின்றான். இப் புருடன் அசங்கன்" எனக் கிரியையின் சமீப உச்சாரணத்தால் அவ்வவ்வவஸ்தையின் கண்ணுள்ள வஸ்துவின் சாக்ஷிமாத்திரத் தன்மையால் அதன் அசங்கத்தன்மையை யுபபாதனஞ் செய்து அனந்தரம் "எப்போது தூங்கினவனாகி யாதொரு இஷ்ட பதார்த்தத்தையும் விரும்புகிறதில்லையோ. யாதொரு சொப்பனத்தையும் காண்கிறதில்லையோ" என சுழுத்தியினை யாரம்பித்து "அந்த இவ்வான்ம தத்துவம் ஆசையற்றது, பாபமற்றது அபயவடிவம்" என்பதாதிப் பிராமண சேஷத்தால் சருவ காமகருமாதியற்ற சுவப்பிரகாச நித்திய சிதானந்தான்மக துவம்பத லக்ஷிய வினவப்பட்ட ஆன்மசொருபம் நிருபிக்கப்பட்டது. இவ்வாறு "ஆன்மா வியாபகமாகவுளது பிரகாசமாகவுளது அகாயம் அவ்விருணம் அஸ்நாவிரம் சுத்தம் அபாபவித்தம்" என்பது முதலிய சுருதிகளாலும் கூறப்பட்ட துவம்பதார்த்தமே நிருபிக்கப்பட்டது. ஆதலால் நிருபிக்கப்பட்ட இப்பொருளின்கண் அசிரத்தைக்குக் காரணம் யாதொன்றுமின்றாமென்பது கருத்து.141

அவதாரிகை

துவம்பதார்த்த சுத்தியின்பொருட்டு அன்னியமும் சிரவணஞ் செய்யத்தக்கதாம் என்னும் புத்தியை நிராகரிக்கின்றவராய் அதன் நிச்சயத்தினை முடிக்கின்றார்.

சுலோகம்

एतत्त्वंपदलक्ष्यवस्तु भवता यत्पृष्टमासीत्पुरा
तन्निर्णीत मतोऽन्यदस्तियदिते चित्तस्थितं पृच्छतत् ।
बुद्धिस्थं कुरु पूर्वमुक्तमखिलं यद्वक्ष्यमाणंच तत्
वोढुं धारयते मनः स्थिरतरं श्रद्धाधनाद्याश्रयः ॥

பதவுரை

भवता यत् एतत्त्वं पदलक्ष्य वस्तु - உன்னால் யாதொரு இந்த துவம்பதத்தின் லக்ஷிய வஸ்து

पुरापृष्टम् आसीत् - முன்பு வினவப்பட்டதோ

तत् निर्णीतम् - அது நிச்சயஞ் செய்யப்பட்டது.

தத்பத லக்ஷிய விஷயக வினாவின் பிரகரணத்தில் சந்தேகத்தோடு கூடிய சித்தமுள்ள புருடனைக் குறித்து சாமானியமாக அதன் (சந்தேகத்தின்) அநுமதியினை சூசிப்பிக்கின்றார்.

अतोऽन्यद् यदि अस्ति - இதனினும் அன்னியமாக யாதேனும் வினவத்தக்கதிருக்குமாயின்

ते चित्त स्थितम् - உனது புத்தியின் கண்ணுள்ள

तत् पृच्छ - அதனை வினவுவாயாக.

கேட்டதை மறவாதிருத்தலும் கேட்கத்தக்கதன்கண் சித்தத்தின் ஏகாக்கிரமும் சிரவணம் பயனுடையதாம் பொருட்டு சிஷ்யனுக்கு ஆவசியகமாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

पूर्वमुक्तम् अखिलम् - முன்கூறப்பட்ட அனைத்தினையும்

बुद्धिस्थं कुरु - புத்தியின்கண் நிலைத்திருப்பதாகச் செய்

यच्च वक्ष्यमाणम् - யாதொன்று இனிக் கூறப்படுவதாமோ

तत् बोद्धुम् - அதனையறிதற்கு

श्रद्धाधनाद्याश्रयः - இலௌகிக தனாதியை விட்டு சிரத்தையாகிய தனத்தையாசிரயித்தவனாகி

ते मनः - உனது மனத்தை

स्थिरतरं धारय - அத்தியந்தம் ஏகாக்கிரம் ஆகும் வண்ணம் தாரணை செய்வாய். 142

அவதாரிகை

இங்ஙனம் குருவின் சம்மதியினைப் பெற்று சீடன் சந்தேகமற்றவனாய்க் கூறப்பெற்ற அர்த்தத்தில் ஜிஞ்ஞாசையின் நிவர்த்தியினை சூசிப்பிக்கின்றவனாய் போலியாக

அறியப்பட்ட வஸ்துவின்கண் ஜிஞ்ஞாஸையின் மிகுதியைப் பிரகடனஞ் செய்தல் வாயிலாக தத்பதார்த்தத்தை வினவுகின்றான் எனக் கூறுகின்றார்.

சுலோகம்

इत्युक्ते गुरुणा स पृच्छति पुनस्त्वं शब्दलक्ष्यं मम
ज्ञातं न्यायबलेन पूर्वमुदिता वस्थात्रयापोहनात् ।
तच्छब्देनतु लक्ष्यमर्थमधुना बोद्धुं मनोमामकं
धावत्याशुतमप्यपोह्य सकलद्वैत प्रपञ्चं वद ॥

பதவுரை

गुरुणा इत्युक्ते – குருவினால் இவ்வாறு உபதேசிக்கப்பட்டபோது

स पुनः पृच्छति – சீடன் மீண்டும் வினவுகின்றான்

न्याय बलेन – நியாய பலத்தால்

पूर्वमुदितावस्था त्रयापोहनात् – முன்பு கூறப்பட்ட அவஸ்தாத்திரயங்களை நிவர்த்தித்தலால்

त्वं शब्दलक्ष्यम् – துவம்பதத்தின் லக்ஷியார்த்தமானது

मम ज्ञातम् – என்னால் அறியப்பட்டது

तच्छब्देन तु – தற்பதத்தாலோ

लक्ष्यमर्थम् – லக்ஷியார்த்தத்தினை

अधुना बोद्धुम् – இப்போது அறிவதற்கு

मामकं मनः – எனது மனமானது

आशु धावति – சீக்கிரமாக ஓடுகின்றது, அவசரப்படுகின்றது என்பது பொருள்

सकल द्वैतप्रपञ्चम् अपोह्य – சருவத் துவைதப் பிரபஞ்சத்தினையும் நிவர்த்தித்து

तमपि वद – அதனையும் கூறுவாயாக.

### விசேஷவுரை

முன்பு துவைதப் பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை கூறப்பட்டது; அங்ஙனமாயினும் வாக்கியார்த்தான்வயி யாகிய தற்பதார்த்த நிச்சயமின்றி அது திடமாகின்றதில்லை என்னுங் கருத்தால் சருவத் துவைதப் பிரபஞ்சத்தினையும் நிவர்த்தித்து என்று கூறப்பட்டது. 143

## தத்பதத்தின் லக்ஷியத்தை நிரூபித்தல்

### அவதாரிகை

போலிஞானத்தினதீனமான சமுசய கோடியைத் தெரி சிப்பிக்கின்றவராய் அதனை நிவர்த்திசெய்கின்ற நிச்சய ஞானம் உண்டாதற்பொருட்டு விசாரம் ஆரம்பிக்கத்தக்க தெனக் கூறுகின்ருர்.

சுலோகம்

किं सप्रपञ्च मिदमस्त्वथवा समस्त
द्वैतप्रपञ्चरहितं परिपूर्णरूपम् ।
यद्वोभयात्मकमिदं परमार्थतोऽस्तु
विष्णोः परंपद मितीह विचारणीयम् ॥

பதவுரை

इदं विष्णोः परं पदम् – அது காஷடை அது மேலான கதி என்பது முதலிய சுருதியாலறியப் பட்ட விஷ்ணுவின் பரமபதம்

सप्रपञ्चं किमस्तु – பரமார்த்தமாக பிரபஞ்ச சகிதமா

अथवा समस्त द्वैतप्रपञ्चरहितं परिपूर्णरूपम् – அல்லது பரமார்த்த மாக சருவத் துவைதப்பிரபஞ்சமுமற்ற பரிபூர்ண சொரூபமா

यद्वा उभयात्मकम् इदम् परमार्थतोऽस्तु इति – அல்லது பரமார்த் தமாக உபயவடிவமா என்று

इह विचारणीयम् – ஈண்டு விசாரிக்கத்தக்கது.

விசேஷவுரை

பரமார்த்தமாக என்பது மற்ற இரண்டு கோடியிலும் சேர்க்கப்பட்டது. சேர்க்காவிடின் கோடிகளின் விரோதம் பிரதீதியாகாதாகலின். 144

அவதாரிகை

அற்றேல் பிரம்மம் அலௌகிகமாதலாலும் வேதாந்தங்கள் நிர்த்தோஷமாதலாலும் உனக்கு அவற்றின்கண் சமுசயம் எங்ஙனமாம் என்ருசங்கித்து சம்பாவித விஷயகமும் அசம்பாவித விஷயகமுமான நாநாவித வேதாந்த வாக்கிய சிரவணத்தால் உண்டான எனது சித்த தோஷத்தாலேயே அச்சமுசயமாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

சுலோகம்

वेदान्तवाक्यगतिरत्र बहुप्रकारा
काचित्कथञ्चिदिति संशय उत्थितो मे ।
तत्त्वं प्रकाशय निवर्तय मोहमूलं
मत्संशयं मम हिताय भवत्प्रसीद ॥

பதவுரை

अत्र – பிரம்மத்தின்கண்

वेदान्तवाक्य गतिः – வேதாந்த வாக்கியத்தின் பிரவிருத்தி

बहुप्रकारा – அநேகப் பிரகாரமாம்.

அநேகப் பிரகாரத்தினையே கூறுகின்ருர்.

काचित् कथञ्चित् इति – ஒவ்வொரு வாக்கியமும் ஒவ்வொரு விதமாம் ஆதலின் அதாவது

சிருஷ்டியாதி வாக்கியத்தின் பிரவிருத்தி சப்பிரபஞ்ச பிரம்மத்தின் கண்ணதாம். இதுவுமல்ல, இதுவுமல்ல. அஸ்தூலம் என்பது முதலிய வாக்கியத்தின் பிரவிருத்தி நிஷ்பிரபஞ்சப் பிரம்மத்தின் கண்ணதாம். அது சலிக்கின்றது, அது சலிக்கின்றதில்லை, கண்ணின்றியே காண்கின்றது, காதின்றியே கேட்கின்றது, இருந்துகொண்டே

தூரத்திற் செல்கின்றது, படுத்துக்கொண்டே எங்கும் செல்கின்றது என்பது முதலிய வாக்கியத்தின் பிரவிருத்தி விரோதமுடைய உபயவடிவப் பிரம்மத்தின்கண் காணப்படுகின்றது என்பது பொருள். அப்படியானுல் என்னுல் செய்யத்தக்கது என்னை என்னும் குருவின் அபிப்பிராயத்தை யாசங்கித்து அதன் பிரதிஞ்ஞையை நினைக்கின்றவனுய்த் தனது அபீஷ்டத்தைப் பிரார்த்திக்கின்ருன்.

**तत्त्वं प्रकाशय** – தற்பதார்த்தப் பிரம்மத்தினைப் பிரகாசஞ் செய்வீராக

அச்சமன்வயாத்தியாயத்தின் கண்ணேயே ஔபநிஷதப் பிரம்மதத்துவம் பிரகாசிதமாமென்ருசங்கித்துக் கூறுகின்ருர்.

**मोहमूलं** – அசம்பாவனை முதலிய புத்தியை மூலமாகவுடைய
**मत्संशयं निवर्तय** – எனது சந்தேகத்தை நிவர்த்திப்பாயாக.

நான் சங்கை செய்வதற்குக்கூட அறியாதவனுக இருக்கின்றேன். எனது இதத்தை யறிகின்ற தேவரீராலேயே அது செய்யத்தக்கதாமென்னுங் கருத்தால் கூறுகின்ருர்.

**मम हिताय भव** – எனது சுபத்தின்பொருட்டு ஆவாயாக.

இவன் ஏனிங்ஙனம் நிர்ப்பந்தஞ் செய்கின்ருன் என இவ்வாறும் நினைக்கத்தக்கதல்ல என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

**प्रसीद** – பிரசன்னமாவாய். 145

அவதாரிகை

இங்ஙனம் பிரார்த்திக்கப்பட்ட குருவானவர்

"न स्थानतोऽपि परस्योभयलिङ्गं सर्वत्र हि"

"ந ஸ்தானதோऽபி பரஸ்ய உபயலிங்கம் ஸர்வத்ரஹி" என்பதாதி சூத்திரத்தாற் சூசிப்பிக்கப்பட்ட நியாயத்தால் நிர்ணயஞ் செய்யப்பட்டமையின் வாஸ்தவமாக நிஷ்பிரபஞ்சப் பிரம்மம் வேதாந்தவேத்தியமாம் என உபபாதனஞ் செய்கின்ருர்.

சுலோகம்

न स्थानतोऽप्यस्ति परस्य कश्चिद् विशेष योगः परमार्थ रूपः ।
स्वतः पुनर्दूर निरस्तएव परस्य तत्त्वस्य विशेष योगः ॥

பதவுரை

परस्य परमार्थरूपः – பிரம்மத்திற்குப் பரமார்த்தமாக
कश्चित् विशेषयोगः – சப்பிரபஞ்சத் தன்மை வடிவ ஓர் விசேஷ மானது
स्थानतोऽपि नास्ति – உபாதியினுலுமின்று
स्वतः पुनः – சொரூபமாகவோ
परस्य तत्वस्य – பரப்பிரம்மத்திற்கு
विशेष योगः – சப்பிரபஞ்சத்தன்மை வடிவம்
दूर निरस्त एव – வெகுதூரம் தள்ளப்பட்டதேயாம்.

விசேஷவுரை

சவிசேஷத்தன்மையும் நிர்விசேஷத்தன்மையும் பிரம்மத்திற்கு சுவாபாவிகமா அல்லது இரண்டில் ஒன்று ஔபாதிகமா? முதற்பக்ஷம் சரியன்று. வஸ்துவிற்கு சொரூபமாகவிருந்த இரண்டு வடிவம் பொருந்தாமையின், இரண்டாவது பக்ஷத்தில் நிர்விசேஷ வடிவம் சோபாதிகமா அல்லது சவிசேஷ வடிவம் சோபாதிகமா? முதற்பக்ஷம் சரியன்று. ஆகாசாதிகளாகிய உபாதியனைத்திற்கும் சவிசேஷத்தன்மை யுண்மையால் சொரூபமாக சவிசேஷமாம். அங்ஙனமாகுங்கால் அதன் அதீன நிர்விசேஷத் தன்மை பொருந்தாமையின், அன்றேல் அதாவது சவிசேஷத்தினதீனமாக நிர்விசேஷத்தன்மையை யங்கீகரிக்கின் பிரபஞ்சத்திற்கே சவிசேஷத்தினை யுபாதியாகக் கொண்டு நிர்விசேஷத்தன்மை ஏன் ஆகாது? இரண்டாவது பக்ஷமும் சரியன்று. ஔபாதிக வடிவத்திற்கு ஸ்படிகத்தில் செம்மைநிறம் போன்று மித்தியாத்தன்மை யுண்மையால் சுவாபாவிகத் தன்மை பொருந்தாமையின் சுவபாவமாகப் பிரம்மம் நிர்விசேஷமேயாம். ஆதலின் எமது இஷ்டஞ் சித்தித்தலின், வாஸ்தவமாகப் பிரம்மம் சவிசேஷமேயாம்.

நிர்விசேஷத்தன்மை அதற்கு சுவாபாவிகமாகவாவது ஔபாதிகமாகவாவது இன்றேயாம் என்று சொல்லற்க. நிர்விசேஷப் பிரம்மபரமான அநேக சுருதிகளுக்கு விரோதம் வருதலின், அதன் கண்ணேயே சுருதிசமன்வயம் உபபாதனஞ் செய்யப்பட்டமையானும் என்பது கருத்து. 146

## அவதாரிகை

அற்றேல் "அந்தஸ்தத்தர்மோபதேசாத்" என்பது முதலிய சூத்திரங்களால் சகுணப் பிரம்மம் நிருபிக்கப்பட்டது. உபாதியினுலும் பரமார்த்தமாக சவிசேஷத்தன்மை யின்ருமென்பதனேடு விரோதமாமென்று சொல்லற்க. சகுணத்தன்மைக்கு ஔபாதிகத்தன்மையால் அதனைப் பரிகரித்தலின் என்ருசங்கித்து ஔபாதிகமும் சத்தியமாயின் அதனைப் பரிகரித்தல் பொருந்தாமையின் அதன் மித்தியாத் தன்மை அங்கீகரிக்கத்தக்கதாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

## சுலோகம்

स्वाभावतश्चिद्घनविग्रहस्य मृषाह्युपाधि प्रभवा विशेषाः ।
यथाजपापुष्पनिबन्धनास्यान्मृषामणेर्लोहितिमातथैव ॥

## பதவுரை

स्वभावतः – இயற்கையாகவே
चिद्घनविग्रहस्य – ஞானகனவடிவ பரமான்மாவிற்கு
उपाधिप्रभवा – மாயை முதலிய உபாதியினுலுண்டான
विशेषाः – சவிசேஷத்தன்மை வடிவங்கள்
मृषाहि – மித்தையேயாம்.

மேலும் பரமான்மாவின் சவிசேஷ வடிவம், மித்தையாம் சோபாதிகமாதலால். படிகத்தின் செந்நிறம் போன்று என்னும் அநுமானத்தாலும் அதன் மித்தியாத்தன்மை சித்திக்கின்றது எனக் கூறுகின்ருர்.

**यथा जपापुष्प निबन्धनः** – எப்படி செம்பரத்தம்புஷ்பத்தை நிமித்தமாகவுடைய

**मणेर्लौहितिमा** – படிகத்தின் செந்நிறமானது

**मृषास्यात् तथैव** –மித்தையாமோ அப்படி.

### விசேஷவுரை

படிகமணியின் கண்ணும் அப்போது சத்தியமாகவே செந்நிறம் உற்பன்னமாம் ஆதலின் திருஷ்டாந்தம் சாத்திய வைகல்யமாமென்று சொல்லற்க. அதன் கண் வெண்மைநிற மிருக்கும்போது செந்நிறத்தின் உற்பத்தி பொருந்தாமை யின் அதன் (வெண்மை நிறத்தின்) நாசமும் அப்போது உருவநாசத்தின்கண் நிச்சயிக்கப்பட்ட காரணமின்மையால் சம்பவியாமையின் இங்ஙனம் அதன் வாஸ்தவ செந்நிறத் தின் உற்பத்தி காரணம் சம்பவியாமையாலும் அஃது சம்ப வியாது. செம்பரத்தம்பூ அதன் நிறம் ஆகிய இவைகளின் அவிவேக மாத்திரத்தால் படிகத்தின்கண் செந்நிறத்தின் வியவகாரமாம் அல்லது அதன் உருவமே படிகத்தின்கண் பிராந்தியினுல் தோற்றுகின்றது. அதன்கண் அநிர்வசநீய மாக வேறு செந்நிறம் இன்ரும் என்று சொல்லற்க, இது செம்பரத்தம் புஷ்பமன்று; அதன் நிறமும் படிகத்தின்கண் இன்ரும் என்று ஸ்பஷ்டமாக பேதம் காணப்படுதலின். அது (புஷ்பம்) இருக்கும்போது படிகத்தின்கண் அதன் உருவத்தின் ஆரோபம் சம்பவியாமையாலும் என்பது முதலிய கிரந்தத்தால் பத்மபாதாச்சாரியர் முதலியோரால் உபபாதனஞ் செய்யப்பட்டுளது. ஆதலால் பொய்யான செந்நிறமே படிகத்தின்கண் தோற்றுகின்றதாகலின் சாத் திய வைகல்யமின்ருமென்பது கருத்து. 147

### அவதாரிகை

அற்றேல் ஈசுரத்தன்மை சீவத்தன்மைகட்கு அநாதித் தன்மையுண்மையால் படிகத்தில் செந்நிறத்திற்குப்போன்று ஔபாதிகத்தன்மை பொருந்தாமையின் வாஸ்தவத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதாம். அதனுல் வாஸ்தவமாகவே ஆன்மா விற்கு சவிசேஷத்தன்மையாமென்ருசங்கித்துக் கூறுகின்ருர்.

ஸுலோகம்

मायोपाधेरद्वयस्येश्वरत्वं कार्योपाधेर्जीवता च प्रतीचः ।
मिथ्यैवस्याद्बन्धुजीवप्रसून संपर्कोत्था रक्ततेवाश्मकादेः ॥

பதவுரை

अद्वयस्य – அத்துவயப் பிரம்மத்திற்கு
मायोपाधेः – மாயையாகிற உபாதியினுல்
ईश्वरत्वम् – ஈசுரத்தன்மையாம்
प्रतीचः – பிரத்தியகான்மாவிற்கு
कार्योपाधेः – காரியவடிவ அந்தக்கரணேபாதியினுல்
जीवता च – சீவத்தன்மையாம்
मिथ्यैवस्यात् – சீவத்தன்மை ஈசுரத்தன்மைகளிரண்டும் மித்தையேயாம்.

விசேஷவுரை

ஈசுரத்தன்மையாவது சகத்தின் சிருஷ்டி முதலியவற்றில் நிரங்குச சாமர்த்தியமாம். அதுவும் கூடஸ்த அசங்க அத்துவிதீய வஸ்துவிற்கு சொரூபத்தாற் சம்பவிக்கிறதில்லை ஆதலின் அதன் சாமர்த்தியமுடைய சிதாபாச சகித மாயையின் அதீனமேயாமாதலின் பிரம்மத்திற்கு ஈசுரத்தன்மை அதனை யுபாதியாகவுடையதேயாம். அஃது அநாதியாயினும் மாயையின் சம்பந்தத்திற்குப்போன்று அதனதீனசத்தையை யுடையதாந்தன்மையால் அதன் அதீனத்தன்மை பொருந்துதலின், அதனுல் அதற்கு வியாவகாரிகத்தன்மையிருப்பினும் மித்தியாத்தன்மை பரிகரிக்கத்தகாததேயாம்.

அஞ்ஞத்தன்மைவடிவ சீவத்தன்மையும் அநாதியாம். அங்ஙனமாயினும் புத்தி முதலிய காரியமுளதாய வழி அதனுபகிதத்திற்கு கர்த்திருத்துவாதி விக்ஷேப ரூப அனர்த்த ரூபத்தாலும் விளங்குகின்றது. ஆதலின் அவ்வடிவத்தால் அதற்குக் காரியோபாயத்தன்மையின் கூற்ரும். சுவரூபத்தாலோ அதுவும் அவித்தையின் அதீனமாதலால் அவித்தையை யுபாதியாகவுடையதாம். ஆதலின் அதுவும் கருத்திருத்துவாதியோடுகூட மித்தையேயாம். ஆதலின் சுவரூபத்தால் பிரம்மம் நிர்விசேஷமாமென்பது பொருள்.

ஔபாதிகத்தன்மைக்கு மித்தியாத்தன்மையோடு வியபிசார சங்கையை நீக்குதற்பொருட்டு வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர்.

वन्धुजीवप्रसून संपर्कोत्था – பந்துஜீவமெனப் பெயரிய புஷ்ப சம்பந்தத்தாலுண்டான

रक्तता – செந்நிறமானது

अभ्रकादेः इव – அப்பிரகாதிக்கு மித்தையாவதுபோன்று.

பந்து ஜீவம்=உச்சித்திலகமாம். அப்பிரகம் =ஸ்வச்சமான ஓர் தாதுவிசேஷம். 148

அவதாரிகை

அற்றேல் வெள்ளை வஸ்திரம் முதலியவற்றில் பல்லாதக (சேற்ருங்கொட்டை) நீலித்திரவியம் முதலியவற்றின் இரசத்தை யுபாதியாகவுடைய கருநிறத்திற்கு வஸ்திரம் முதலியவற்றின் அழிவு பரியந்தம் அழிவு காணப்படாமையின் ஆண்டு அதற்கு சத்தியத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதாம். அதனுல் ஆண்டு ஔபாதிகத்தன்மை மித்தியாத்தன்மையை வியபிசரிக்கின்றது எனின் அற்றன்று எனக் கூறுகின்ருர்.

சுலோகம்

भल्लातकादिरसयोग निवन्धनंच
वस्त्रेकलङ्कितमनेन पथा।निरस्तम् ।
तस्यापिपक्ष पतितत्वमभीष्टमेव
तस्मादसौ नभवति व्यभिचारभूमिः ॥

பதவுரை

भल्लादकादि रसयोग निवन्धनंच – பல்லாதக (சேற்ருங்கொட்டை) முதலியவற்றின் இரசசம்பந்தத்தை நிமித்தமாகவுடைய

वस्त्रेकलङ्कितम् – வஸ்திரத்திலுள்ள கருப்பு

अनेन पथा निरस्तम् – இந்த வழியால் நிராகரிக்கப்பட்டது.

வஸ்திரம் முதலியவற்றிலுள்ள சுவாபாவிகமான வெண்மை நிறத்தின் நாசத்தில் நிச்சயிக்கப்பட்ட காரணமின்மையினுல் அதன் நாசம் பொருந்தாமையானும் அஃதிருக்கும்போது வாஸ்தவமாக வேற்றுருவத்தின் உற்பத்தி பொருந்தாமையானும் அதனுற்பத்தியில் நிச்சயிக்கப்பட்ட காரணமின்மையினுலும் ஆண்டு அது வாஸ்தவமாகப் பொருந்துகிறதில்லை என்பார். இந்த வழியால் நிராகரிக்கப் பட்டது என்ருர். இவ்வாருகவே அதுவும் (வஸ்திரத்தின் கருப்பு) படிகத்தில் செந்நிறம் போன்றும் மித்தையெனக் கற்பிக்கப்படுகின்றது. ஆண்டு தனது அபாவமிருக்கும் போதே தானிருத்தலின். ஆண்டு உபாதியாயுள்ள திரவிய சம்பந்தத்தை மதுரஜலத்தில் லவணசம்பந்தத்தினைப் போன்று நீக்கமுடியாமையானும் அவ்வுபாதியால் சேர்ப் பிக்கப்பட்ட மித்தையான கருப்பு நிறத்திற்கு திரவியமுள்ள வரை ஸ்திதி பொருந்துதலினுலும் என்க. ஆதலால் கூறிய ஏதுவால் இப்படிப்பட்டது வியபிசாரத்திற்குத் திருஷ்டாந்தமாக உபயசம்மதமன்ருமெனக் கூறுகின்ருர்.

तस्यापि – வஸ்திரத்திலுள்ள கருமைக்கும்
पक्षपतितत्त्वमेव – பக்ஷசமத்தன்மையே
अभीष्टम् – கருதப்பட்டுளது
तस्माद् असो – ஆதலால் இஃது
व्यभिचारभूमिः – வியபிசார ஸ்தலமாக
न भवति – ஆகின்றதில்லை. 149

அவதாரிகை

அற்றேல் அத்துவிதீய ஆன்மாவின்கண் சீவத்தன்மை ஈசுரத்தன்மை முதலிய விசேஷம் மித்தையாயினும் அதற்கு ஔபாதிகத்தன்மை எதனுல் சித்திக்கும் என்ருசங்கித்து அதன்கண் சுருதியைப் பிரமாணமாக்கின்ருர்.

சுலோகம்

यथाह्ययं ज्योतिरात्मा विवस्वा नपोभिन्ना बहुधैकोऽनुगच्छन् ।
उपाधिना क्रियते भेदरूपो देवः क्षेत्रेष्वेव मजोऽयमात्मा ॥

பதவுரை

यथाहि अयम् – எப்படி ஆகாசத்தில் ஏகத்தன்மையால் பிரத்தியக்ஷமாகின்ற

ज्योतिरात्मा विवस्वान् – பிரகாச சொரூபனுன சூரியன்

बहुधा भिन्ना अपः – பாத்திரபேதத்தினுல் அநேகப்பிரகாரமாக அதாவது குறைவு மிகுதி வடிவத்தால் பின்னமான ஜலங்களில்

एको अनुगच्छन् – ஒருவனே பிரதிபிம்ப வடிவத்தால் பிரவேசிக்கின்றவனுய்

उपाधिना – சொரூபத்தாலும் பிரகாரத்தாலும் பின்னுநுருபமான உபாதியினுல்

भेदरूपः क्रियते – பேதவடிவமாகச் செய்யப்படுகின்ருனே

பேதம் நிரூபிக்கப்படுகின்றது எதனுல் அது பேத வடிவம் பேதத்தின் அநுயோகியும் பிரதியோகியுமாம். தன்னைப் பிரதியோகியாகவுடைய மித்தையாகிய பேதத்தையுடையதாக போதிக்கப்படுகின்றது என்பது பொருள்.

एवं देवः अयम् आत्मा – அப்படி சொரூபப் பிரகாசத்தாற் பிரகாசிக்கின்ற இவ்வான்மாவாகிய

अजः – அஜனும்

क्षेत्रेषु – மகாபூதங்கள் அகங்காரம் என்பதாதியால் பகவானுற் கூறப்பட்ட உபாதிகளில்

பிரதி பிம்ப பாவத்தால் பிரவேசித்தவனுகி மித்தையாகவே பேத வடிவமாக செய்யப்படுகின்ருன். சுவ ரூபத்தாலோ சுத்தபுத்த அத்துவிதீய ஆனந்த வடிவமென்பது பொருள். 150

அவதாரிகை

இவ்வாறு ஈசிதவ்ய (ஆளத்தக்க) சீவபேதத்திற்கு ஔபாதிகத்தன்மையுண்மையால் அதனபேக்ஷயினையுடைய ஈசுரத் தன்மையும் ஔபாதிகமாதலால் மித்தையாம். “ சாக்ஷி சேதனம் கேவலம் நிர்க்குணன் ” என்பது முதலிய

சுருதியால் சித்தித்த சுத்த சிதான்மானந்த அகண்டான்ம சொரூபமே சத்தியமாம் எனதனது மதத்தைக் கூறி மதாந்தரத்தை யெழுப்புகின்றார்.

சுலோகம்

ऐश्वर्यमस्य परमात्मन उक्तमन्यैः
साक्षात् स्वरूप मवबोध सुखादितुल्यम् ।
तेनेशते किल यथायथमीशितव्यान्
भृत्यान्प्रतीश्वरतया जगतीभृतोऽपि ॥

பதவுரை

अस्य परमात्मनः – இந்த பரமான்மாவின்
ऐश्वर्यम् – யாதொரு ஐச்வர்யமுண்டோ அது
अवबोधसुखादि तुल्यम् – சத்தியஞானநந்தாதிக்குச்சமானமாக
साक्षात् स्वरूपम् – நிருபாதிக சொரூபமாக
अन्यैः उक्तम् – அன்னியர்களால் கூறப்பட்டுளது.

ஐச்வர்யம் சுவாபாவிகமெனவும் நிருபாதிகமெனவும் இரண்டுவிதமாம். அவற்றுள் நிருபாதிகபரமான்மாவிற்கு சொரூபமாயுள்ள ஐச்வர்யம் சுவாபாவிதமும் ஏக வடிவமுமாம். அந்தர்யாமி முதலானவர்களிலோ அவ்வைச்வர்யம் மாயையை யுபாதியாகவுடையதாய் தாரதம்மியமாயுளது: அவற்றுள் முதலாவது ஐச்வர்யம் சத்திய என்பதாதி திருஷ்டாந்தத்தால் தெரிசிப்பிக்கப்பட்டது. அற்றேல் அதிகாரிகளும் சவிசேஷர்களுமான பிரமா முதலானவருக்கே ஐச்வர்யம் சாஸ்திரசக்தியால் பிரசித்தமாம். அது நிருவிசேஷான்மாவின்கண் எங்ஙனமாம் என்றாசங்கித்து அவர்கட்கும் பரமான்மாவின் சொரூபமாயுள்ள ஐச்வர்யத்தினுலேயே தனது ஈசிதவ்யர்களை (வேலைக்காரர்களை)க் குறித்து ஈசுரத்தன்மையாம். அது சைதன்னியத்தினுலேயே போத்திருத்தன்மை (அறியுந்தன்மை) போன்று என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

तेन – பரமான்மாவின் சொரூபபூத ஐச்வர்யத்தினலேயே

जगतीभृतोऽपि – பிரமா முதலானவர்களும்

यथायथम् – தாரதம்மியமாக

ईशितव्यान् भृत्यान्प्रति ईश्वरतया – ஆளத்தக்க பிருத்தியரைக் குறித்து ஆளுந்தன்மையுண்மையால்

ईशते किल – நியாமகராக ஆ ன்றனர் அல்லவா.

அல்லவா என்பது அருசியைச் சூசிப்பிக்கின்றது. 151

அவதாரிகை

அற்றேல் அவர்களது ஐச்வர்யம் ஞானகருமம் முதலியவற்ருல் சாத்தியமும் தாரதம்மியத்தோடு கூடியதுமாம். ஆதலின் அது பரமான்மாவின் சொரூப வடிவமாக எங்ஙனமாம் என்று சங்கித்து அஃது அவர்களிடத்தும் ஞானகருமம் முதலியவற்ருல் ஜன்னியமன்ரும். மற்ரே அதன் அபிவியங்கியமாம் வியஞ்சகதாரதம்மியத்தாலும் ஔபாதிக தாரதம்மியமும் நாநாத்துவமுமாமென்று சுகாதி திருஷ்டாந்தத்தால் கூறுகின்றவராய் இரண்டாவது ஐச்வர்யத்தினைத் தரிசிப்பிக்கின்ருர்.

சுலோகம்

नित्यं प्रियादिषुसुखं प्रतिबिंबितंस -
ल्लोकेवदन्ति विषयेन्द्रिय संप्रयोगात् ।
उत्पन्नमन्यदिति तद्वदिहेश्वरत्वं
मायातदुत्थमतिषु प्रतिबिंबितं सत् ॥

பதவுரை

प्रियादिषु – பிரியமோதப் பிரமோத விருத்திகளில்

नित्यं सुखम् – நித்திய சொரூப சுகமானது

प्रतिबिंबितम् सत् – பிரதிபிம்பித்ததாகி

विषयेन्द्रिय सम्प्रयोगात् – விஷயத்திற்கும் இந்திரியத்திற்கும் உள்ள சம்பந்தத்தால்

उत्पन्नम् अन्यदिति – செனித்ததென்றும் நாநாவென்றும்
लोके वदन्ति – உலகின்கண் கூறுகின்றனர்
तद्वत् – அதுபோன்று
इह – உலகின்கண்ணும் ஆகமத்தின்கண்ணும்
मायातदुत्थमतिषु – மாயையிலும் அதனுற்றேன்றிய அந்தக்கரணத்திலும்
प्रतिबिंबितं सत् – பிரதிபிம்பித்ததாகி
ईश्वरत्वम् – ஈஸ்வரத்தன்மையும் உற்பன்னமென்றும் நாநாவென்றும் கூறுகின்றனர்.

விசேஷவுரை

பிரியமோதப் பிரமோதங்களாவன இஷ்ட வஸ்துவின் தரிசனத்தாலும் இலாபத்தாலும் அநுபவத்தாலும் முறையே ஜன்யமானவையும் சொரூப சுகத்தின் அபிவியஞ்சகமுமான அந்தக் கரணத்தின் விருத்தி விசேஷங்களாம். எப்படி சுகமும் சைதன்யமும் வாஸ்தவமாகக் கூடஸ்த ஏகரஸ சொரூபமாயினும் அந்தக் கரணத்தின் பரிணும வடிவ உபாதிகளில் பிரதிபிம்பித்தலால் அவற்றினை யுபாதியாக வுடையனவாகி உற்பத்தி நாசம் நாநாத்தன்மை தாரதம்யம் என்னும் சொற்களால் வியவகார யோக்கியமாகின்றனவோ அப்படி ஐஸ்வரியமும் சொரூபமாக நிரபேக்ஷத்துவ கூடஸ்தைக சொரூபமாயினும் உபாதி வசத்தால் சாபேக்ஷத்துவாதி வியவகாரயோக்கியமாகப் பொருந்துகின்றன என்பது பொருள். 152

அவதாரிகை

அவற்றுள் மாயாப் பிரதிபிம்பித ஐச்வர்யம் அந்தர்யாமிக்கேயாம். அவர் மதத்தில் மாயையின்கண் பிரதிபிம்பித்த சைதன்யமே ஈசுரனுதலின், அவனது ஐச்வர்யத்திற்கு ஈசிதவ்யாபேக்ஷிதத்தன்மை யுற்கிருஷ்டத்தன்மை பின்னத்தன்மைகள் மாயையை யுபாதியாகவுடையனவாம். சமஷ்டி வியஷ்டி புத்தியை யுபாதியாகவுடைய இரண்யகருப்

பாதி ஐச்வர்யத்தின் உற்பத்தி நாசம் தாரதம்மியம் முதலியதும் புத்தியை யுபாதியாகவுடையதாம் என்னுங் கருத்தால் முற்சுலோகத்தின் நான்காவது பாதத்தின் பொருளைப் பகுக்கின்றார்.

சுலோகம்

मायानिविष्ट वपुरीश्वर बोधएष
सर्वेश्वरो भवति सर्वमपेक्ष्यमाणः ।
बुद्धिप्रविष्टवपुरेष तथेश्वरः स्या-
दात्मीयभृत्य जनवर्ग मपेक्षमाणः ॥

பதவுரை

ईश्वर बोधः – சொரூபமாக நிரபேக்ஷ ஐச்வர்யவடிவ போதான்மாவாகிய

एषः – இந்தப் பரமான்மா

मायानिविष्टवपुः – மாயையிற் பிரதிபிம்பித்தவராகி

सर्वमपेक्षमाणः – சமஸ்த ஈசிதவ்யத்தை யபேக்ஷித்து

सर्वेश्वरो भवति – நிரங்குச ஐச்வர்யவானாக ஆகின்றார்

एषः – இப்பரமான்மாவே

तथा बुद्धिप्रविष्टवपुः – அப்படியே புத்தியின்கண் பிரதிபிம்பித்த இரண்யகருப்பாதி வடிவராய்

आत्मीयभृत्य जनवर्गम् – தனது வேலையாட்களின் சமுதாயத்தை

अपेक्षमाणः – அபேக்ஷித்து

ईश्वरः स्यात् – ஈசுரனாக ஆவான்.

விசேஷவுரை

இப் பரமான்மா இரண்யகருப்ப வடிவராகி சில ஈசிதவ்யர்களைக் குறித்து தாரதம்மியத்தோடு கூடிய ஓர்போதைய ஐச்வர்யவானாக ஆவார் என்பது பொருள்.

## அவதாரிகை

அப்படியானல் நிருபாதிக பரமான்ம சொரூப ஐச்வர்யம் வீணேயாம். அஃது நிஷ்பிரயோஜனமாதலானும் புத்தியையுபாதியாகவுடைய சீவர்களால் அடையக் கூடாமையானும் என்ருசங்கித்து அப்படிப்பட்ட பரமான்மாவின் அபேத சாக்ஷாற்காரமுடையவனும் புத்தி முதலிய வுபாதி பாதமாகும்போது அதன் பிரதிபிம்பிதத்தன்மையற்றவனும் பிரதிபிம்பாந்தரவடிவம் பொருந்தாமையால் பிம்பவடிவ நிருபாதிக பரமான்ம வடிவனுமான சீவான்மாவிற்கு அவனது (பரமான்மாவின்) சொரூபமாயுள்ள நிரபேக்ஷ ஐச்வர்யமும் அடைவுறுதலால் சுவாராஜ்ய வடிவ ஆப்த காமத்தன்மை சித்தித்தலால் வீணன்ருமெனக் கூறுகின்ருர்:

### சுலோகம்

सम्यग्ज्ञान ध्वस्तसर्वप्रपञ्चः स्वीये रूपे निर्गुणे निर्विशेषे ।
पूर्णैश्वर्ये स्वप्रकाश स्वभावे स्वाराज्येऽस्मिन् सस्वराडेव तिष्ठेत् ॥

### பதவுரை

सम्यग्ज्ञानध्वस्त सर्वप्रपञ्चः – தத்துவ ஞானத்தால் ஸர்வப் பிரபஞ்சமும் நிவர்த்தியாகப் பெற்ற

सस्वराडेव – அந்த முத்தன் தனது வடிவத்தால் விளங்குகின்றவனுகியே

स्वीये रूपे – தனது வடிவமும்

निर्गुणे निर्विशेषे – நிர்க்குணமும் நிர்விசேஷமும்

पूर्णैश्वर्ये – பரிபூர்ண ஐச்வர்ய வடிவமும்

स्वप्रकाश स्वभावे – ஸ்வப்பிரகாச சொரூபமுமான

अस्मिन् स्वाराज्ये – இந்த ஸ்வாராஜ்யத்தின்கண்

तिष्ठेत् - நிற்பன்.

### விசேஷவுரை

அத்தியந்தம் பின்னகுணமுடையதாந் தன்மையின்றேனும் தாதான்மியத்தால் விசேஷத்தன்மை இருக்கலாமே

என்னுஞ் சங்கையை நீக்குதற்பொருட்டு நிர்விசேஷமென்று கூறப்பட்டது. 154

அவதாரிகை

ஐச்வர்யப்பிராப்தி வடிவ முத்தி ஞானத்தால் அடையத்தக்கது என்பதன்கண் சுவேதாச்வதரசுருதியைப் பிரமாணமாக்குகின்றார்.

சுலோகம்

ज्ञात्वा देवं सर्वपाशापहानिः क्षीणैः क्लेशैर्जन्ममृत्यु प्रहाणिः ।
तस्याभिध्यानात्तृतीयं देहभेदे विश्वैश्वर्यं केवल आप्तकामः ॥

பதவுரை

तस्य अभिध्यानात् - ஈச்வரனைப் பிரத்தியக்வடிவமாகத் தியானஞ் செய்தலால்

देवं ज्ञात्वा - பரமான்மாவைச் சாக்ஷாற்கரித்து

सर्वपाशापहानिः - தேகமிருக்கும்போதே அவித்தை அஸ்மிதை முதலிய ஸர்வக் கிலேசங்களின் நிவர்த்தி செய்யப்படுகின்றது

क्षीणैः क्लेशैः - க்ஷயத்தையடைந்த அக்கிலேசங்களால்

जन्ममृत्यु प्रहाणिः - கருமத்தை யாரம்பம் செய்யாமையால் அதனை மூலமாகவுடைய ஜன்ம மரணங்களின் அத்தியந்த நிவிருத்தி யுண்டாகின்றது. பிராரப்த கருமங்கட்கு போகத்தால் நாசமுண்டாதலால்

देहभेदे - தேகத்திற்கு நாசமுண்டாகும்போது

केवलः - நிர்விசேஷனாகவே

तृतीयम् - முற்கூறியதை யபேக்ஷித்து மூன்றாவதான

विश्वैश्वर्यम् - விச்வ ஐச்வர்யத்தை யடைந்து

आप्तकामः - ஆப்த காமனாயிருக்கின்றான்

விசேஷவுரை

என்று கூறிய சுருதியின் பொருளை யறிதலால் முத்தியின்கண் ஐச்வர்யத்தின் சித்தியாமென்பது அவரது அபிமானமாம். 155

அவதாரிகை

அற்றேல் மேற்சுலோகத்தின் முற்பாதியால் பந்த நிவிருத்திவடிவ மோக்ஷம் வெளிப்படையாகவே கூறப்பட்டது. பிற்பாதியாலோ அவரைத் தியானித்தலாலென சகுண அகங்கிரக உபாஸனையை அநுவாதஞ் செய்து அதன் பயனும் பந்தமோக்ஷங்களை யபேக்ஷித்து மூன்ருவதும் அவ்விரண்டின் விலக்ஷணமும் சமஸ்த ஸ்தூல சூக்ஷ்ம உபாதிக ஈசிதவ்ய விஷயகமுமான இரண்யகர்ப்ப ஐச்வர்யம் கூறப்பட்டது. ஆண்டு பந்தமின்ரும் துக்கமின்மையின் மோக்ஷமுமின்ரும். துவைத விஷயகமாதலானும் அவித்தையின் காரியமாதலானும் முத்தியேதுவான வித்தையின் அனதீனமாதலானும் என்க. ஆதலால் மூன்ருவதான அவ்வைச்வர்யத்தினையடைந்து இருக்கும் புருடன் ஆண்டே விவேக வைராக்கியாதியினை யுடையவனுய் சுயமே தோற்றுகின்ற வேதாந்த வாக்கியத்தாலுண்டான தத்துவ சாக்ஷாற்காரத்தாலேயே அத்தேகம் க்ஷயமாகும்போது கேவலனுய் ஆப்தகாமனுய் நித்திய சுத்தாதி வடிவப் பிரம்மமேயாகின்ருன் என கிரமமுத்தியே கருதப்பட்டுளது. ஆதலால் இந்தச் சுருதியானது பரம முத்தியில் ஐச்வர்யத்தின் இருப்பில் எங்ஙனம் பிரமாணமாம் என்று அருசியுண்டாக அதன்கண் சாந்தோக்கிய சுருதியைத் தெரிசிப்பிக்கின்ருர்.

சுலோகம்

सस्वराडितिच विद्यते श्रुतिः वर्णितेश्वरवपुः प्रकाशिनी ।

तेनसत्य सुखबोधवद्भवेदीश्वरत्वमितिकेचिदूचिरे ॥

स स्वराडितिच श्रुतिः – அவன் சுவராட் (தானே விளங்குபவன்) என்னுஞ் சுருதி

वर्णितेश्वरवपुः प्रकाशिनी – வருணிக்கப்பட்ட ஈச்வர வடிவத்தைப் பிரகாசஞ் செய்வதாக

विद्यते – இருக்கின்றது.

ஸாம்ராஜ்யாதிபோன்று சுவாராஜ்யமும் ஐச்வர்ய வடிவத்தால் பிரசித்தியாயிருத்தலின், கூறிய சுருதியினுல் ஆண்டு அஃது சித்தியாமென்பது கருத்து இங்ஙனம் ஏகதேசியின் மதத்தைத்திருஷ்டாந்த சகிதம் உபபாதனஞ் செய்து அதனை முடிக்கின்ருர்.

**तेन** - அதனுல்

**सत्यसुखबोधवत्** - சச்சிதானந்தம் போன்று

**ईश्वरत्वं भवेदिति** - ஈச்வரத்தன்மை சம்பவிக்குமென்று

**केचिद् ऊचिरे** - சிலர் கூறுகின்றனர். 156

அவதாரிகை

மேற்கூறிய மதத்தினைத் தூஷிக்கின்ருர்.

तन्नभाति चतुरस्रमुच्चकै स्तत्प्रमाण विरहादिहश्रुतौ ।

सत्यबोध सुखवन्नतत्परा सत्युवाचयत ईश्वरं श्रुतिः ॥

பதவுரை

**तत् चतुरस्रम्** - வாதியின் மதம் சுந்தரமாக

**उच्चकैः न भाति** - சிறப்பாகத் தோற்றுவதில்லை

தத்துவவேத்தாக்களால் அடையத்தக்க அவ்வைச் வர்யம் யாது அதாவது பரமான்மாவின் சிதேகரச வடிவ சொரூபமே வாஸ்தவ ஐச்வர்யமா அல்லது சர்வஞ்ஞத்துவ சர்வநியந்திருத்துவாதி வடிவதருமமா? முதற்பக்ஷம் சரியன்று, அகண்ட சைதன்ய ஏகரசத்தை முத்தர்களால் அடையத்தக்கதாக சித்தாந்தியினுல் அங்கீகரித்தமையின் மதபேதம் பொருந்தாமையால் ஆண்டு ஐச்வர்ய பரிபாஷை நிவர்த்திக்கத்தக்கதன்ருமாதலின்.

இரண்டாவது பக்ஷத்தில் தருமதருமிகட்கு அத்தியந்தம் அபேதமா? அல்லது பேதமா? அல்லது பேதாபேதமா? முதற்பக்ஷம் சரியன்று தருமதருமிபாவம் பொருந்தாமையி ஞலும் சாபேக்ஷ நிரபேக்ஷங்கட்கு வாஸ்தவாபேதம் சம்பவியாமையானும் என்க. இரண்டாவது பக்ஷமும் சரியன்று அத்தியந்தம் பின்னமானவைகட்கும் பசு குதிரை

கட்குப் போன்று கருமதருமிபாவம் பொருந்தாமையின், மோக்ஷத்தின் கண்ணும் அஃதிருக்குமேல் அத்துவிதத்திற்குக் கேடு வருதலினுலும் பேத சொருபத்தையும் அதில் பிரமாணத்தையும் இரண்டாவதத்தியாயத்திற் கூறிய நீதியால் நிருபிக்கக் கூடாமையின் அதன் சத்தியத் தன்மை பொருந்தாமையாலும் என்க. இதனுல் மூன்ருவது விகற்பமும் கண்டிக்கப்பட்டது. மேலும் பேதம் அபேதத்தின் அபாவவடிவமாதலால் அவைகட்கு ஓரிடத்தில் விரோதமாமாதலின் மூன்ருவது பக்ஷம் அசம்பவமுமாம் அபேதத்தின் அவிருத்த வேறு வஸ்துவாக அங்கீகரிக்கின் பேதஞானத்தால் அபேதப் பிராந்தியின் நிவர்த்தி ஓரிடத்தும் உண்டாகாது அது (பேதம்) அதற்கு (அபேதத்திற்கு) விரோதமின்மையின், அது (பேதம்) இருப்பினும் ஸ்தம்பகும்பாதிகட்குப் போன்று தரும தருமி பாவமின்மையினுலுமென்க. மற்றும் கூறிய ஐஸ்வர்யம் திருசியமா அல்லது அதிருசியமா. முதற்பக்ஷத்தில் அதற்கு சத்தியத் தன்மை சித்தியாது. திருசியத்திற்கு மித்தியாத் தன்மை நியமமாதலின், அதனை விஷயஞ் செய்கின்ற ஞானத்தையும் அதன் சம்பந்தத்தையும் நிருபணஞ் செய்யக்கூடாமையின் அது (திருசியத் தன்மை) அசம்பவமுமாம். இரண்டாவது பக்ஷத்தில் அஃது சொப்பிரகாசமாக அங்கீகரிக்கத் தக்கதாம். அன்றேல் அதற்கு அசுத்துவம்பிராப்தியாம் ஆதலின் அதாவது அதற்கு ஆன்ம மாத்திரத் தன்மையாமாதலின் அதன் தருமத்தன்மை எங்ஙனமாம். மேலும் கூறிய ஈசுரத் தன்மை ஈசிதவ்யத்தின் அபேக்ஷையையுடைமையின் முத்தியில் அஃது (ஈசிதவ்யம்) இன்மையின் அதன் அபேக்ஷயினையுடைய ஈசுரத் தன்மையும் சித்தியாது. முன்னமும அதனபேக்ஷயுடைமையின் * மாயிகமே யாமாதலின் நீ கூறிய அவ்விருவிதமும் அசம்பவமாம் என்பது கருத்து.

மேலும் உலகின்கண்ணும் வேதத்தின் கண்ணும். தத்துவசாக்ஷாற்கார முடையவருக்கு முத்தியின் கண்ணும் ஆன்மைஸ்வர்யமுளதென்பதன்கண் ஏது வின்மையின் அது அசித்தியாம் எனக் கூறுகின்ருர்.

---

* மாயிகம் — மாயையாற் கற்பிதம்.

इह श्रुतौ – உலகிலும் வேதத்திலும்

तत्प्रमाणविरहात् – ஐச்வர்யத்தைப் போதிக்கும் பிரமாண மின்மையின்

அற்றேல் சத்தியம் ஞானமனந்தம் பிரம்மம். விஞ்ஞான மானந்தம் பிரம்மம், என்பது முதலிய சுருதியினுல் எப்படிப் பிரம்மத்திற்கு சத்தியாதி வடிவத்தன்மை சித்திக்கின்றதோ அப்படி " சருவத்தையும் வசமாகவுடையவன் சருவத்திற்கும் ஈசானன் " என்பது முதலிய சுருதியினுல் அதற்கு ஈசுரத் தன்மை சித்தித்தலின் பிரம்மத்திற்கு அது வாஸ்தவமாம். அதனுல் பிரம்மபாவத்தை யடைந்த வித்துவானுக்கும் அவ்வைஸ்வர்யம் நீக்கமுடியாதாம் என்ருசங்கித்து தற்பர சுருதியாலும் அதற்பர சுருதியாலும் அறியப்பட்ட தன்மையால் திருஷ்டாந்த தாஷ்டாந்தங்கட்கு விஷமத் தன்மை யுண்மையின் அங்ஙனமன்ரும் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

ईश्वर श्रुतिः – இவன் சருவேஸ்வரன் என்னும் சுருதி

सत्यबोधं सुखवत् – சத்திய ஞானுநந்த சுருதிபோன்று

तत्परा सती – சுவார்த்தத்தில் தாற்பரியமுடையதாயிருந்து கொண்டு

यत न उवाच – கூறிற்றில்லையாதலின். 157

அவதாரிகை

கூறிய விஷயத்தன்மையினையே வெளிப்படுத்துகின்ருர்.

சுலோகம்

तत्पर श्रुतिवचः प्रमाणकं सत्यबोधसुखविग्रहं परम् ।

ब्रह्मतद्वदिह नेश्वरत्वभाक् तत्परश्रुतिवचः प्रमाणकम् ॥

பதவுரை

सत्यबोधसुखविग्रहंपरंब्रह्म – சத்திய ஞானுனந்தவடிவ பரப்பிரம்மமானது

तत्परश्रुतिवचः प्रमाणचम् – பிரம்மத்தின்கண் தாற்பரியமுடைய சுருதிவசனத்தைப் பிரமாணமாக எப்படி யுடையதோ

तद्वत् इह – அப்படி விசாரதசையின்கண்

ईश्वरत्व भाक् – ஐஸ்வரியத்தின சித்தி

तत्परश्रुतिवचः प्रमाणकं न – ஐஸ்வரியத்தில் தாற்பரியமுடைய சுருதிவசனத்தைப் பிரமாண மாக வுடையதன்று.

விசேஷவுரை

சத்திய ஞானமனந்தம் பிரம்மம் என்பது முதலிய வாக்கியங்கள் அறிய விரும்பிய பிரம்ம சொரூபத்தின் லக்ஷணததைக் கூறுகின்றமையினாலும் அஃது அபூர்வமாதலி னாலும் பிரம்மத்திற்கு சத்தியாதி வடிவம் வாஸ்தவமன்றேல் அதன் லக்ஷியத்திற்கு பிரம்மத்தன்மை பொருந்தாமையி னாலும் அதன் ஞானத்தால் முத்தியைப் பிரதிபாதிக்கும் சுருதியின் அனந்தரக் கிரந்தத்தால் அதற்கு அனந்தத் தன்மை முதலானவற்றைப் பிரதிபாதித்தலாலும் அதன் அசத்தியத்துவாதி ஞானத்தின்கண் நிந்தை கேட்டுப்படுத லாலும் அதன் பிரகரணத்திற்கு வேறு அர்த்தம் பொருந் தாமையினாலும் அவைகட்கு சத்தியாதி வடிவப் பிரம்மத்தின் கண் தாற்பரியம் பொருத்தமேயாம்.

சருவத்தையும் வசமாகவுடையவன் என்பது முதலிய சுருதியோ காபேக்ஷ ஐஸ்வர்யத்தைக் கூறுதலாலும் அஃது அவிந்தியாதசையின் கண்ணேயே சம்பவித்தலாலும் அத்துணை மாத்திரத்திற்கு காரிய லிங்கக அநுமான கம்யத் தன்மையால் அபூருவத்தன்மையின்மையாலும் நிரதிசயா நந்த பிரம்மபாவத்தாலேயே பரமபுருஷார்த்தம் சித்திக்கும் போது அதற்குப் பிரயோஜனமின்மையினாலும் அனந்தரம் स एष नेति नेति அவ்விவ்வான்மா இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் நிஷேத சுருதிக்கு விரோதம் வருதலாலும் அச் சுருதி அவ்வைஸ்வர்யத்தைப் போதிப்பதில் தாற்பரிய முடையதன்று. மற்றோ அதன் அநுவாதத்தால் அதனுல் உபலக்ஷிக்கப்பட்ட சேதனத்திற்கு பிரத்தியகான்மாவோடு

அபேதத்தைப் போதிப்பதில் தாற்பரியமுடையதாம். "அவ் விவரே மகான் அஜன் ஆன்மா அஜரன் அமரன் அமிருதன் அபயன் பிரம்மம்" என அதனையே யுபசம்மரித்தலால் என்பது கருத்து. 158

அவதாரிகை

அற்றேல் "அவர் சுவராட்டு ஆகின்றார்" என நிரபேக்ஷ சாம்ராஜ்யத்திற்கு தத்துவஞானத்தின் பயனுந் தன்மை யறியப்படுதலின் அதன் நீக்கம் எவ்வாறு பொருந்தும் என்றாசங்கித்துக் கூறுகின்றார்.

சுலோகம்

या फलश्रुतिरिहोपवर्णिता सा नतत्परतयाऽवगम्यते ।
तत्त्वमादि वचनं हि तत्परं तत्परा न तु फलश्रुतिः क्वचित् ॥

பதவுரை

इह या फलश्रुतिः – ஈண்டு யாதொரு *பலசுருதி

उपवर्णिता - வருணிக்கப்பட்டதோ

सा तत्परतया – அது சுவார்த்தத்தில் தாற்பரியமுடையதாக

न अवगम्यते – அறியப்படுகிறதில்லை.

விசேஷவுரை

சுவாராஜ்யமானது நிரதிசயானந்தானுபவத்தின் கண்ணைரபேக்ஷ்ய வடிவ சுதந்திரத்தன்மையாயின் அது எமக்கு சம்மதமேயாம். அதனுவரணம் நீங்கும்போது அத்தகைய பிரம்மத்திற்கு அது அவசியம் சம்பவித்தலின், சருவமும் அவரது இச்சையின் அதீனமாயிருத்தல் வடிவ சுதந்திரத் தன்மை சுவாராஜ்யமாம் எனின் அது சரியன்று. அது அப்போது சம்பவியாமையின், "எப்போது இவனுக்கு சருவமும் ஆன்மாவேயாமோ அப்போது எதனை எதனால் பார்ப்பன்" என்பது முதலிய சுருதியினுல் துவிதத்தை விஷயஞ் செய்கிற சருவ வியவகாரத்தையும் நிஷேதித்தலாலும் அவித்தையினுற் கற்பித துவிதத்திற்கு அவித்தை

* பலசுருதி = பயனைப் போதிக்கும் சுருதி.

நிவிருத்தியாகும்போது நிவிருத்தி அவசியம் சம்பவித்த லாலுமென்க. அதன் (அவித்தையின்) அபேக்ஷையினை யுடைய அதற்கு (துவிதத்திற்கு) அப்போது (அவித்தை யின் நிவிருத்தி காலத்தில்) ஸ்திதி பொருத்தாமையின், சாபேக்ஷவஸ்து அதனுல் (அவித்தையினுல்) கற்பிதமாதலி னுலும் ஸ்வாராஜ்ய சுருதி சுவார்த்தத்தில் தாற்பரியமுடைய தன்றென்பது பொருள்.

மேலும் அர்த்தவாதத்தாலறியப்பட்ட பலத்திற்கு பிரதான வாக்கியத்தால் அபேக்ஷிக்கப்பட்ட தன்மையை நிமித்தமாகக் கொண்டு "பிரதிதிஷ்டந்தி" என்னுமர்த்த வாத வாக்கியத்திற்கு சுவார்த்த பரத்தன்மை அங்கீகரிக்கப் படுகின்றது. பிரகிருதத்திலோ சச்சிதானந்த அனந்த பிரம்மாத்மா பேதபரமும் பிரதானமுமான தத்துவமாதி மகாவாக்கியங்களால் கூறப்பட்ட சுவாராஜ்ய வடிவப்பயன் அபேக்ஷிக்கப்படவில்லை. மாருக அதன் (மகாவாக்கியத் தின்) அர்த்தவிரோதி அதன் (அர்த்தவாதத்தின்) பயனு மாதலின் தற்பரத்தன்மை அதன் அர்த்தவாதத்திற்குப் பொருந்துகிறதில்லை என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

तत्त्वमादि वचनं हि – தத்துவமசி முதலிய மகாவாக்கியமோ

तत्परम् – சுவார்த்தத்தில் தாற்பரியமுடையதாம்

फलश्रुतिः – பயனைப் போதிக்கும் சுருதி

क्वचित – ஓரிடத்தும்

नतु तत्परा – சுவார்த்தத்தில் தாற்பரியமுடையதன்ரும். 159

அவதாரிகை

பிரதான வாக்கியத்தால் அபேக்ஷிக்கப்படாத அர்த்தத் தினையுடைய அர்த்தவாதத்தின் சுவார்த்தபரத்தன்மையில் அதிப்பிரசங்கத்தைக் கூறுகின்ருர்—

சுலோகம்

सामगानमपि तत्स्वरूपतां जक्षणं च जगतश्च सर्जनम् ।
अश्नुवीत फलवाक्यतः श्रुतं तत्स्वरूपमिति यद्युपेयते ॥

பதவுரை

फलवाक्यतः श्रुतम् - பயனைப் போதிக்கும் வாக்கியத்தால் கேட்கப்பட்ட ஐஸ்வரியாதி

मितत्स्वरूपमिति - அதனது சொரூபமாமென

यद्यपेयते - அங்கீகரிக்கப்படுமாயின்

सामगानमपि - சாமகானமும்

तत्स्वरूपताम् - அதன் சொரூபத் தன்மையை

अश्नुवीत - அடையும்

जक्षणं च - விஷயங்களை யநுபவித்தலும்

जगतश्च सर्जनम् - சகத்தின் சிருஷ்டியும் அதன் சொரூபமாம்.

விசேஷவுரை

அதன் - மோக்ஷத்தின் அல்லது முத்தனது அல்லது பிரமத்தின்.

ஹா உ என சாமத்தைக் கானஞ் செய்கின்றவனுயிருக்கின்ருன். புசிக்கின்றவனுய் விளையாடுகின்றவனுய் ரமிக்கின்றவனுய் எவ்விஷ்ட விஷயத்தை இச்சிக்கின்ருனே அது இவனுக்கு சங்கற்பத்தாலேயே பிரதிபாதியாகின்றது'' என்னும் பல சுருதியால் சாமகானுதி அறியப்பட்டுளது. உம்மையால் ''இஷ்டமான அன்னத்தையுடையவனுய் இஷ்டமான உருவத்தையுடையவனுய் இவ்வுலகங்களில் சஞ்சரிக்கின்றவனுய்'' என்பது முதலிய சுருதியாற் கூறப்பட்டதையுங் கொள்க. 160

அவதாரிகை

அற்றேல் சித்தாந்தத்தின்கண் அர்த்தவாதத்தாலறியப்பட்ட தேவதையின் விக்கிரகாதி எப்படி யங்கீகரிக்கப்படுகிறதோ அப்படி முக்தனுக்கு சாமகானுதியும் அங்கீகரிக்கத்தக்கதாம். இவ்வாருகவே கூறப்பெற்ற அதிப்பிரசங்கம் எமக்கு சம்மதமேயாம் என்ருசங்கித்து வாஸ்தவந்தான் பிரமாணுந்தரத்தோடு விரோதமின்மையின் அர்த்தவாதத்தாலுண்டான தேவதையின் விக்கிரகாதி

ஞானத்திற்கு சாமான்யத்தாற் பிராப்தமான சுவதப்பிராமாண்யத்திற்கு நிவர்த்தியின்மையின் அதன் அங்கீகாரம் பொருத்தமேயாம். சாமகானுதிக்கோ சரீராதியின் அபேக்ஷை இருத்தலினுலும் மோக்ஷத்தின்கண் "இவன் அசரீரன். அமிருதன் வித்துவான் நாமரூபங்களினின்றும் விடுபட்டவன்" என்பது முதலிய சுருதிகளால் சரீராதியை நிஷேதித்தலாலும் அதனை யபேக்ஷித்த சாமகானுதி அன்னியபரமான அர்த்தவாதத்தால் அறியப்பட்டுளது. அஃது அங்கீகரித்தற்கு யோக்கியமன்றும் எனக் கூறுகின்றார்—

சுலோகம்

अर्थवादगतमभ्युपेयते नप्रमान्तर विरोधियन्मतम् ।
सामगानमथ जक्षणादिवा तत्परश्रुतिविरुद्धमिष्यते ॥

பதவுரை

अर्थवादगतं यत् — அர்த்தவாதத்தா லறியப்பட்ட யாதொரு வஸ்துவானது

प्रमान्तर विरोधि — பிரமாணுந்தரத்தோடு விரோதமுடையதாக

नमतम् — கருதப்படவில்லையோ

अभ्युपेयते — அது அங்கீகரிக்கப்படுகின்றது

सामगानमथ — சாமகானமாவது

जक्षणादिवा — பக்ஷணம் முதலியதாவது

तत्परश्रुति विरुद्धम् इष्यते — அசங்கநிருவிசேஷபிரம்மபரமான சுருதியோடு விருத்தமாக அங்கீகரிக்கப்படுகின்றது. ஆதலால் அஃது சம்மதமன்று. 161

அவதாரிகை

அப்படியானுல் ஈஸ்வரத்தன்மைக்குப் பரமான்மாவின்கண் சரீராதியின் அபேக்ஷையின்மையினுல் கூறிய சுருதி விரோதமின்மையின் அர்த்தவாதத்தாலறியப்பட்ட அஃது அங்கீகரிக்கத்தக்கதாமென்றுசங்கித்து அங்ஙனமாயினும் நிருவிசேஷபரமான வேறு சுருதியோடு விரோதமிருத்தலால் அதுவும் சாமகானுதிக்குச் சமானமேயாம் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்—

சுலோகம்

ईश्वरत्वमपि तत्परश्रुति र्नेतिनेति परिदुःखिता सती।
वारयत्यवशिनष्टिकेवलं चित्स्वरूपमनवद्यविग्रहम् ॥

பதவுரை

नेति नेति - இதுவுமல்ல இதுவுமல்ல என்னும்
तत्परश्रुतिः - நிருவிசேஷ பிரம்ம பரமான சுருதி
परिदुःखिता सती - அத்தியந்தம் துக்கமுடையதாயிருந்து கொண்டு
ईश्वरत्वमपि - ஈஸ்வரத்தன்மையினையும்
वारयति - நிஷேதிக்கின்றது.
अनवद्यविग्रहम् - நிர்த்தோஷ வடிவமான
केवलं चित्स्वरूपम् - கேவல சிதான்மாவினை
अवशिनष्टि - மிஞ்சும்படி செய்கின்றது.

விசேஷவுரை

"இதுவுமல்ல இதுவுமல்ல தூலமல்ல அணுவல்ல இதனினும் அன்னியம் மித்தை" என்பது முதலிய சுருதி பேததரிசனத்தால் பயம் முதலியவற்றை யடைத்த சமுசாரியாகிய சீவனைக் கண்டு துக்கமுடையதாயிருந்துகொண்டு ஆன்மாவினும் வேறான அனைத்தையும் நிஷேதித்து அபயானந்த அநுபூதி மாத்திரமான ஆன்மாவைப் பரிசேஷஞ் செய்கின்றது. அதற்கு விரோதம் வருதலால் ஈசுரத்தன்மையினையும் அப்போது அங்கீகரிக்கலாகாது என்பது பொருள். 162

அவதாரிகை

அற்றேல் உதாகரிக்கப்பட்ட சுருதியானது மாயையை உபாதியாகவுடைய ஈஸ்வரத்தன்மை முதலிய விசேஷத்தையே நிஷேதிக்கின்றது. பகவானுடைய பகசத்தத்தால் சொல்லப்பட்ட சுவாபாவிக ஈசுரத்தன்மை முதலியவற்றை

நிஷேதிக்கின்றதில்லை. ஆதலால் பகவத் பிராப்தி வடிவ முக்தியின்கண் அது அங்கீகரிக்கத்தக்கதாகுமென்று சங்கிக்கின்றான்.

सोपाधीश्वरतानिषेधनपरा सा नेति नेति श्रुतिः
साक्षाद्भागवतं निरस्तनिखिलोपाधिस्वरूपं पुनः ।
विश्वैश्वर्यमिहोच्यमानमधुना मोक्षेततस्तत्परैः
वाक्यैरस्य विरुद्धतानवसरो मुख्यं ततो गृह्यताम् ॥१६३॥

**नेति नेति श्रुतिः सा** இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் யாதொரு சுருதியுண்டோ அது

**सोपाधीश्वरता निषेधनपरा** -- மாயையை யுபாதியாகவுடைய ஈசுவரத்தன்மையை நிஷேதிப்பதில் தாத்பர்யமுடையதாம்.

**इह मोक्षे**-'அவன் சுவராட்டு' என்பது முதலிய வாக்யத்தின் கண் மோக்ஷத்தில்

**अधुना**-இப்போது

**उच्यमानं विश्वैश्वर्यं पुनः** - சொல்லப்படுகின்ற விஸ்வைஸ்வர்யமோ

**साक्षाद् निरस्तनिखिलोपाधिस्वरूपम्** - நேரே சகலோபாதியுமற்ற வடிவமாகிய

**भागवतम्**-பகவத்சொரூபமாம்.

நேரே என்பதன் விவரணம் சகல என்பது. நிஷேத சுருதிகட்கு உபாதியோடுகூடிய விசேஷத்தை நிஷேதிப்பதில் தாற்பரியம் சித்தித்தவாதி பலிதத்தைக்கூறுகின்றார்.

**ततः**-ஆதலால்

**अस्य**-நிருபாதிக ஐசுவர்யத்திற்கு

**तत्परैः वाक्यैः** -ஸோபாதிக ஐசுவர்யபரமான வாக்கியங்களால்

**विरुद्धतानवसरः** -விருத்தத் தன்மைக்கு அவகாசமின்றாம்.

விரோதமிலதாய வழிபலிதத்தைக் கூறுகின்றார்.

ततः - விரோத மின்மையினுல்

मुख्यं गृह्यताम् - முக்கியமாகிய நிருபாதிக ஐசுவர்யம் கிரகிக்கத் தக்கதாம். (163)

(அ) ஸோபாதிக ஐஸ்வர்யத்தினும் வேருக நிருபாதிக வடிவ ஐஸ்வர்யத்தின்கண் பிரமாணமின்மையினுல் கூறிய விபாகம் பொருத்தமற்றதாம். நிரபேக்ஷ பரமான்ம வஸ்துவிற்கு ஸாபேக்ஷ ஐஸ்வர்ய வடிவத்தன்மையும் பொருத்தமற்றதாம். இக்காரணத்தாலேயே பகவத்சத்தமும் மாயிக ஐஸ்வர்யாதி சம்பந்தத்தை நிமித்தமாகக்கொண்டு அவரிடத்து பிரவிருத்திக்கின்றது. மோக்ஷ தசையின்கண் கூறப்பட்டமையின் அதற்கு (ஐஸ்வர்யத்திற்கு) நிருபாதிகத்தன்மை வடிவ சொரூபத் தன்மையும் நிஷேத சுருதிகட்கு ஸோபாதிக சொரூபத்தை விஷயஞ் செய்யுந்தன்மையும் அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது அதிவியாப்தியாம் என்னுங்கருத்தாற் சித்தாந்திக்கின்ருர்.

सामगानमथजक्षणं जगत्सर्जनं च निरूपाधिगृह्यताम् ।
नेति नेति वचसा निषिध्यते जक्षणादिकमुपाधिसंश्रयम् ॥ १६४ ॥

सामगानम्-சாமகானமும்

अथजक्षणम् பக்ஷணமும்

जगत्सर्जनं च-சகத்தின் சிருஷ்டியும்

निरूपाधि-நிருபாதிக ஈசுர சொரூபமாமென

गृह्यताम्-கிரகிக்கத்தக்கது

नेति नेति वचसा-இதுவுமல்ல இதுவுமல்ல வென்னும் வசனத்தாலோ

उपाधि संश्रयम्-சோபதிகமான

जक्षणादिकम्-பக்ஷணம் முதலியவை

निषिध्यते-நிஷேதிக்கப்படுகின்றது என கிரகித்தல் வேண்டும்.

அதிப்பிரசங்கம் அதிவியாப்தி என்பன ஒரு பொருட் சொற்கண் அதிவியாப்தியாவது ஐஸ்வர்யத்தை சோபாதிகம்

நிருபாதிகமென இரண்டு விதமாக அங்கீகரித்து மோக்ஷ தசையில் நிருபாதிக ஐஸ்வர்யத்தையுடன்படின் சாமகானுதியினையும் சோபாதிகம் நிருபாதிகமென இரண்டு விதமாக அங்கீகரித்து முத்தியில் நிருபாதிக சோமகானுதியினையும் அங்கீகரித்தல் வேண்டும் என்பது. (164)

(அ) சாமகானுதியின்கண் பிரமாணமின்மையின் இருவிதத் தன்மை பொருந்தமின்றியதாம் என்று கூறிடின் அப்போது அது ஐஸ்வர்யத்தின் கண்ணும் சமானமாமென தனது அபிப்பிராயத்தை பரமதத்தையநுவதித்தலால் வெளிப்படுத்துகின்றார்.

सामगानमथ जक्षणं जगत्सर्जनं च न खलु द्विधेष्यते ।
तत्प्रमाणविरहादिहेति चेदीश्वरत्वमपि न द्विधा भवेत् ॥ १६५ ॥

**सामगानम्**- சாமகானமும்

**अथजक्षणम्**–பக்ஷணமும்

**जगत्सर्जनं च**-சகத்தின் சிருஷ்டியும்

**इह खलु**-ஈண்டு-ஆன்மாவில் அல்லது லோக வேதங்களில்

**द्विधा न इष्यते**--இரண்டு விதமாக அங்கீகரிக்கப்படுகிறதில்லை

**तत्प्रमाणविरहादिति चेत्** - அதன் கண் பிரமாண மின்மையினெனின்

**ईश्वरत्वमपि** -ஈஸ்வரத்தன்மையும்

**द्विधा न भवेत्** - இரண்டு விதமாக ஆகாது அதன் கண் பிரமாண மின்மையின் (165)

(அ) 151வது சுலோகத்தில் ‘பரமான்மாவிற்கு ஞானசுகாதிக்குச்சமானமாக ஐஸ்வர்யம் சொரூபமாமென்று வாதிகளாற் கூறப்பட்டுளது’’ என்று யாதென்று சொல்லப்பட்டதோ அதன் கண் திருஷ்டாந்தத்தினையங்கீகரித்து தார்ஷ்டாந்தத்தின்கண் விஷமத்தன்மையைக் கூறுதற்பொருட்டு ஞானத்தின்கண் முதலில் இருவிதத் தன்மையினையுபபாதனஞ் செய்கின்றார்.

ज्ञानमस्ति खलु बाह्यगोचरं निर्विशेषमविनाशि च द्विधा ।
बाह्यगोचरमपोह्य केवला स्वापमोक्षसमये चितिः स्थिता ॥ १६६ ॥

பதவுரை

**ज्ञानं बाह्यगोचरम्** – ஞானமானது பாஹியத்தை விஷயஞ் செய்கின்றதாய் விநாசியாயும்

**निर्विशेषमविनाशि च**–நிருவிசேஷமாய் அவிநாசியாயும்

**द्विधाऽस्ति** – இரண்டு விதமாகவுளது.

இந்திரியாதிகளோடு சம்பந்தித்தார்த்தத்தை விஷயஞ் செய்வது அவற்ருலுண்டாயதுமான அந்தக்கரண விருத்தி வடிவ ஞானமொன்று. மற்ருென்று அதன் சாதக சாக்ஷிவடிவ ஞானமாம் என்பது பொருள். நிருவிசேஷம் என்பதற்கு விஷயம் கரணம் முதலியவற்றை யபேக்ஷியாதது என்பது பொருள். அவற்றுள் முதலாவது ஞானம். ஸாபேக்ஷ மாதலினுலும் ஆமோபாயியாதலினுலும் ஆன்மாவின் சொரூப மன்று. மற்ருே ஔபாதிகமும் அலீகமுமாம் இரண்டாவது ஞானமோ எப்போது மிருத்தலாலும் நிரபேக்ஷமாதலாலும் பரமார்த்தான்ம சொரூபமேயாம். அதற்கு அதன் பேதத்தில் பிரமாணமின்மையின். ஞானத்தின் உற்பத்தியாதியினநுபவம் இதர விஷயகமாதலின் என்று கருதிக் கூறுகின்ருர்.

**बाह्यगोचरमपोह्य** – பாஹிய விஷயக விருத்திக்ஞானத்தை விட்டு

**केवला चितिः**–நிருவிசேஷ ஞானமானது

**स्वापमोक्षसमये**–சுழுத்தி காலத்திலும் மோக்ஷ காலத்திலும்

**स्थिता**–நிலைபெற்றுள்ளது (166)

(அ) அற்றேல் கூறியவிரண்டாவதான சாக்ஷிஞானத்தின்கண் பிரமாணமின்மையினல் பிரதிஞ்ஞை மாத்திரத்தால் கூறிய இருவிதத்தன்மை சித்திக்கிறதில்லையெனின் அற்றன்று அகங்காரத்திற்கும் அதன் தருமங்களான காம சங்கற்பாதி கட்கும் தாரையாக உண்டாகின்ற ஞானங்கட்கும் சொப்பன மநோராஜ்ஜிய சுழுத்திகட்கும் சொப்பிரகாச நித்திய சைதன்ய மின்றி தமது காலத்தில் விளக்கம் பொருந்தாமையினுலும் அவைகளில் பிரமாணப் பிரவிருத்தியை யநேகந்தடவை

நீக்கினமையானும் தமது காலத்தில் பிரதீதியை யங்கீகரியா விடின் காலாந்தரத்தில் அவைகளின் பராமரிஸம் பொருந் தாமையானும் அப்போது அவற்றின் சாதகமான நித்திய சைதன்யம் ஆவசியகமாம் என்று கருதி கூறிய ஞானத்துவயத் தின்கண் வைதிக புருஷனைக் குறித்து சுருதியைப் பிரமாண மாக்குகின்றார்.

पश्यन्नपश्यति गिरा कथयां बभूव
साक्षादनश्वरविनश्वरचिद्विभागम् ।
तात्पर्यतः श्रुतिवचः स्फुटमेव नैव-
मैश्वर्यवस्तुनि विभागवचःश्रुतिर्नः ॥ १६७ ॥

பதவுரை

श्रुतिवचः-யத்வைதத்நபஸ்யதி என்பது முதலிய சுருதி வாக்கியம்

साक्षात्- முக்கிய விருத்தியால்

अनश्वरविनश्वरचिद्विभागम्-அவிநாசியெனவும் விநாசி யெனவும் சேதன விபாகத்தை

पश्यन्नपश्यति गिरा -ஆன்மா காண்கின்றவனாயினும் காண் கின்றதில்லை யென்னும் மொழியால்

तात्पर्यतः-தாற்பரியத்தால்

स्फुटमेव कथयाञ्चभूव- வெளிப்படையாகவே கூறிற்று

அங்ஙனம் கூறிற்றாயினும் தாற்பரியமின்றியது உபேக்ஷிக்கத் தக்கதாகும். இதுவோ அங்ஙனமன்றென்பார் தாற்பரியத்தா லென்றார்.

சுழுத்தியினை யாசிரயித்து ''சுழுத்தியில் ஆன்மா காண்கிற தில்லையென யாதொன்று நீ யறிகின்றாயோ அது அங்ஙனமன்று ஆண்டு சொரூபத்தை சைதன்னியத்தால் சருவ சாக்ஷியாத லால் பார்க்கின்றவனாயிருந்தே பதார்த்த சமுகத்தைக் காண்கிற தில்லை. திருஷ்டாவின் சாக்ஷி வடிவ திருஷ்டிக்கு லோப மின்றாம். அவிநாசியாதலால், சுழுத்தியில் இரண்டாவது பதார்த்தமின்றாம் அதனினும் அன்னியமாக எதனைக்காண்பன்'' என்னும் சுருதி வாக்கியம் அப்போது துவைதத்தைக் காண்கிற

தில்லையென்பது யாதொன்றுண்டோ அது சரிவன்று சர்வப் பிரகாரத்தாலும் ஞானமின்மையின் மற்றோ பார்க்கின்ற வனுகியே பார்க்கின்றதில்லை யென்னும் வசனத்தால் சுவப் பிரகாச சொரூப ஞானத்தைப் பிரதிபாதிக்கின்றதாகியே துவைத விஷயகமும் இந்திரியாதியினதீனமுமான சவிகற்பக ஞானத்தை நிஷேதிக்கின்றது. சுழுத்தியில் சுவப்பிரகாச சொரூப ஞானத்தின் சற்பாவத்தில் ஏதுவைக் கூறுகின்றது திருஷ்டாவின் என. ஆன்மாவின் சொரூப வடிவ திருஷ்டிக்கு அல்லது அகங்காரத்தின் சாக்ஷிவடிவ யாதொரு திருஷ்டி யுண்டோ அதற்கு விபரிலோபமின்றும் அவிநாசியாதலால். சருவ விநாச சாக்ஷித்தன்மையால் அதன் (விநாசத்தின்) யோக்கியமன்மையின் என்பது பொருள். இங்ஙனம் நித்திய திருஷ்டியையுபபாதனஞ் செய்து அதனினும் வேறன திருஷ்டி நிஷேதிக்கப்பட்டதுஎன உபபாதனஞ் செய்கின்றுர் சுழுத்தியி லென. இந்தச் சுருதியானது கூறிய அர்த்தத்தில் தாற்பரிய முடையதாம் ''ஆண்டு முகர்கிறதில்லை'' என்பதாதியனந்தரக் கிரந்தத்தால் இப்பொருளினையே யப்பியசித்தலால் (மீண்டும் கூறுதலால்) ஆதலால் கூறிய ஞானத்தின் இருவிதத்தன்மை முதலியவற்றில் விவாதஞ் செய்யத்தக்கதன்றென்பது பொருள். இங்ஙனம் ஞான திருஷ்டாந்தத்தைப் பிரமாண சகிதமாக அங்கீகரித்து தார்ஷ்டாந்தம் அப்பிரமாணமாதலால் அங்கீகரிக் கத்தக்கதன்றெனக் கூறுகின்றுர்.

एवमैश्वर्यवस्तुनि - இங்ஙனம் ஐஸ்வர்யவஸ்துவின் கண்

नः — எங்கட்கு

त्रिभागवचश्रुतिः न-விபாகத்தைப் பிரதிபாதிக்கும் சுருதி வாக்கிய மின்றும். (167)

(அ) இப்போது சுகத்தின் திருஷ்டாந்தத்தாலும் தார்ஷ்டாந்தத்தின்கண் விஷமத்தன்மையைக் கூறுதற் பொருட்டு ஞானத்திற்குப்போன்று சுகத்தினிருவிதத்தன்மை பிராமாணிகமாதலால் அங்கீகரிக்கத்தக்கதாமெனக் கூறுகின்றுர்.

एवं न वा अर इति श्रुतमेव तावत्
पुत्राद्युपाधिपुरुषस्य सुखं विनाशि ।

नित्यं निरन्तरमनन्तमपारमुक्तं
ब्राह्मं सुखं वचनकोटिशतैश्च यत्नात् ॥ १६८ ॥

एवं नवा अत्र इति-ஞானமிருவிதமாவது போன்று மைத்ரேயி புத்திரரது சுகத்தின் பொருட்டு என்பதாதி சுருதியில்

पुरुषस्य -புருடனுக்கு

पुत्राद्युपाधि -புத்திராதிகளை யுபாதியாகவுடைய

सुखं विनाशि-சுகம் நாசமுடையதாமென

तावत् श्रुतमेव-கேட்கப்பட்டதேயாம். அப்படியே

वचनकोटिशतैश्च-விஞ்ஞானமானந்தம் பிரம்மம் என்பது முதலிய அநேக சுருதிகளால்

ब्राह्मं सुखम् -பிரம்ம வடிவ சுகமானது

नित्यं निरन्तरम्-நித்யமாகவும் நிரந்தரமாகவும்

अनन्तमपारम्-அனந்தமாகவும் அபாரமாகவும்

यत्नात् उक्तम् யத்தினத்தாற் கூறப்பட்டுளது.

விசேஷவுரை

மாலை சந்தனம் வஸ்திரம் ஆபரணம் முதலிய விஷய ஜன்னியமும் விநாசமுடையதும் சுகபத வாச்சியமுமான ஓர் சுகம் அனுபவசித்தமாம். விஷயாதிகளில்லாதபோதும் பரமப் பிரேமைக்கு விஷயமாந்தன்மையால் அநுமிக்கப்படுகின்றதும் ஆன்ம வடிவமும் நித்தியமுமான மற்றோர் சுகமும் சித்தமாம். அப்படியே சுருதியாலும் அதற்கு இருவிதத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதாம். ''புத்திரர்களுடைய சுகத்தின் பொருட்டு புத்திரர்கள் பிரியர்களாகின்றதில்லை'' என்பது முதலிய சுருதியானது ஆன்ம சுகத்தின் சேஷமாக புத்திராதிகளில் பிரியத் தன்மையைக் கூறுகின்றதாய் அயற்றினதீனமான அநித்திய சுகத்தைத் தெரிசிப்பிக்கின்றது. அப்படியே ''எது பூமாவோ (வியாபகமோ) அது சுகம், விஞ்ஞானமானந்தம் பிரம்மம். இந்த ஆனந்தத்தின் லேசத்தை யாசிரயித்தே இதரப் பிராணிகள் சீவிக்கின்றன. யாதொரு ஆனந்த வடிவ அமிருதம் விளங்குகின்றதோ. பிரம்மத்தின் ஆனந்தத்தை அறிகின்றவன் என்பது முதலிய சுருதிகளாலும் சாந்தமன

முள்ளவனும் இரஜோகுணமற்றவனுமான இந்த யோகியை பிரம்ம வடிவ உத்தமமான சுகமடைகின்றது. யாதொரு ஆத்தியந்திக சுகமுண்டோ அது புத்திக்கிராஹ்யமும் அதீந்திரியமுமாம். எதனையடைந்து பின்னர் வேறு லாபத்தை யுயர்வாகக் கருதுகிறதில்லையோ. என்பது முதலிய ஸ்மிருதிகளாலும் நித்திய நிரதிசயாத் துவிதீய பூர்ணப்பிரம்ம வடிவ சுகம் தாற்பரியத்தால் தெரிசிப்பிக்கப்பட்டது. आनन्दादयः प्रधानस्य ஆனந்தாதிகள் பிரதானத்திற்கு என்னும் சூத்திரமும் அதனையே விஷயஞ்செய்வதாம். இவ்வாருகவே ஆனந்தத்திற்கு இருவிதத்தன்மைபொருத்தமேயாமென்பது கருத்து (168)

(அ) ''இங்ஙனம் ஐஸ்வர்யவஸ்துவின் கண் எமக்கு விபாகத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியின்ரும்'' என்று 167 வது சுலோகத்திற் கூறப்பட்டதை இப்போது விஸ்தரிக்கின்றவராய் சுகத்தினும் விஷமத்தன்மையினை தார்ஷ்டாந்தத்தின் கண் கூறுகின்ருர்.

ऐश्वर्यवर्णनमिह द्विविधं न वेदे
नित्यं क्वचित् क्वचिदनित्यमिति प्रतीमः ।
ऐश्वर्यमात्रकथनं पुनरस्ति मोक्षा-
दवीक्षुमोक्षसमये च न तत्परं तत् ॥ १६९ ॥

பதவுரை

इह वेदे-உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும்
क्वचित् नित्यम्-சிலவிடத்து நித்தியமாகவும்
क्वचिदनित्यमिति-சிலவிடத்து அநித்தியமாகவும்
द्विविधमैश्वर्यवर्णनम् - இரண்டுவிதமாக ஐஸ்வர்யத்தை வர்ணித்தலை
न प्रतीमः-அறிகின்றிலோம்.

இவ்வுலகின் கண்ணே நித்திய அநித்திய வடிவத்தால் இருவித ஐஸ்வர்யம் பிரசித்தமன்ரும். வேதத்தின் கண்ணும் பரமான்மாவிற்காவது சீவான்மாவிற்காவது நித்திய அநித்திய விபாகத்தால் ஓரிடத்திலாவது அநேக விடத்திலாவது அஃது கேட்கப்படவில்லை. எதனுல் விசேஷ(ஐஸ்வர்ய)த்தை நிஷேதிக்கும் சுருதி ஔபாதிகமாக கற்பிக்கத்தக்கதாகும்.

அற்றேல் ''இவன் சருவேச்வரன்'' என்பதாதியால் மோக்ஷ தசையின் கண் கேட்கப்படுதலாலும். அப்படியே ''பிரம்மா தேவர்கட்கு முதலில் உண்டானர் அவர் விஸ்வத்தின் கருத்தாவும் புவனத்தின் கோப்தா (ரக்ஷகர்)வுமாவர்'' 'இந்திரன் சுவர்க்கத்திற்கு ஈசுவரன் பிருதிவிக்கு வைவஸ்வத மநு. ஜனங்கட்கு யமன் அரசன்' என்பதாதியால் மோக்ஷத்தின் கீழ்ப்பூமிகளிலும் கேட்கப்படுதலால் நித்தியாநித்ய பேதத்தால் இருவித ஐஸ்வர்யமும் பிராமாணிகமாமென்று ஆசங்கித்து மோக்ஷ தசையின் கண் அதனைக் கூறுகின்ற அர்த்தவாதத்திற்கு வேறு சுருதியோடு விரோதமிருத்தலால் சாமகானுதி சுருதிக்குப்போன்று அதன் கண் தாற்பரிய மின்மை கூறப்பட்டமையின் அங்ஙனமன்றென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

ऐश्वर्यमात्र कथनम् पुनः-ஐஸ்வர்யத்தை மாத்திரம் வருணித்தலோ

मोक्षादर्वाक्षु மோக்ஷத்தின் கீழ்ப்பூமிகளிலும்

मोक्षसमये च -மோக்ஷ தசையிலும்

अस्ति -உளதேயாம். அங்ஙனமாயினும்

तत् -மோக்ஷ தசையில் ஐசுவர்யத்தைப் பிரதிபாதிக்கும் சுருதி

तत्परं न -அதன்கண் தாற்பரியமுடையதன்ரும் மற்ரே துதிபரமாம் (169)

(அ) அற்றேல் பரமேஸ்வரனது நிரங்குச ஐஸ்வர்யம் இதுவுமல்ல என்பதாதி சுருதியால் நிஷேதித்தற்கு யோக்கிய மன்ரும். அன்னியத்தால் அப்பிராப்தமான அதற்கு நிஷேதம் பொருந்தாமையின். சுருதியால் பிராப்தமான அதற்கே நிஷேதமாமென்று சொல்லற்க. சுருதிக்கு அதன்கண் தாற்பரியமிலதாயவழி அதனையடைவிக்குந் தன்மை பொருந்தாமையின். சுருதிக்கு அதன்கண் தாற்பரியத்தையங்கீகரிக்கினே அதற்கு விரோதம் வருதலானேயே நிஷேதக சுருதியினுல் அதனை நிஷேதிக்கமுடியாது. சித்த வஸ்துவின் கண் விகற்பமும் பிரவேசிக்கிறதில்லை. ஆதலால் நிஷேதசுருதி நிரங்குச ஐஸ்வர்யத்தினும் வேருனதை விஷயஞ்செய்வதாமாதலின் அதன் விரோதமின்மையின் ஐச்வர்யசுருதி அதன்கண் தாத்பர்யமுடையதாம் என்ருசங்கித்து,

"प्रियशिरस्त्वाद्यप्राप्तिरुपचयापचयौ हि भेदे"

(பிரியசிரஸ்த்வாத்யப்ராப்தி: உபசாயாபசயௌ ஹி பேதே)

என்னும் பிரம்மசூத்திரத்தினையாசிரயித்துப் பரிசரிக்கின்றார்—

प्रियशिरस्त्वकथा खलु यादृशी
भवति तादृशमेव तदीरणम् ।
तदनु नेति च नेति वचःश्रुते-
र्यदपि मोक्षगतं स्तुतये हितम् ॥ १७० ॥

பதவுரை

प्रियशिरस्त्वकथा – ஆனந்தமயன் பிரம்மமென்னும் பக்ஷத்தில் பிரியம் சிரஸ் என்பது முதலிய வார்த்தை

यादृशी खलु भवति – எப்படியுபாசனுபரமோ

तादृशमेव – அப்படியே

तदीरणम् – ஐஸ்வர்யத்தைக் கூறுதலும் துதிபரமாம்

ஆனந்தமயனுக்கு பிரம்மத்தன்மை பக்ஷத்தில் விஞ்ஞானமய கோசத்திலுள்ள பிரியமோதாதியினை உபாஸனையின் பொருட்டு ஆனந்தமயனது அவயவத்தன்மையால் அடைவிக்கின்றதாய் (போதிக்கின்றதாய்) அவனுக்குப் பிரியமே சிரஸு என்பது முதலிய சுருதியானது அதன்கண் தாற்பரியமுடையதன்றும். அதற்கு அவ்வாறு உபாஸனையில் தாற்பரியமுண்மையின். இங்ஙனம் சத்தியகாமத்துவம் சத்திய சங்கல்பத்துவம் ஸம்யத்வாமத்துவம் முதலிய சுருதியும் வியாவகாரிக ஈஸ்வரனிடத்தில் அனுமானத்தாலறியப்பட்ட சத்திய காமத்துவாதியினையுபாஸனையின் பொருட்டு அடைவிக்கின்றதாய் அதன்கண் தாற்பரியமுடையதன்றும். அதற்கு உபாஸனை விதியில் தாற்பரியமுண்மையின், அப்படியே தத்பதவாச்சிய வியாவகாரிக ஈஸ்வரனிடத்தில் அவாந்தரதாத்பர்யத்தால் சுருதியாலடைவிக்கப்பட்ட அல்லது அனுமானத்தால் அடைவிக்கப்பட்ட ஐஸ்வரியத்தினை முத்தியிலும் துதியின் பொருட்டு

அநுவாதஞ்செய்து சிருஷ்டியாதி சுருதியர்த்தம் போன்று மகாவாக்கியத்தால் அபேக்ஷிக்கப்பட்ட தற்பதலக்ஷியசித்தியின் பொருட்டு நிஷேதம் பொருந்துதலின் முத்தியின்கண் ஐஸ்வர்ய சித்தியின்றுமென்பது பொருள். ‘இவன் சருவேஸ்வரன்’ என்பது முதலிய சுருதிக்கு ‘அவ்விவர் இதுவுமல்ல இதுவுமல்ல ஆன்மா’ என்னும் சுருதியோடு சமீப உச்சாரணத்தால் ஏக வாக்கியத் தன்மையுண்மையினாலும் அதன் (ஐஸ்வர்யத்தின்) நிஷேதம் ஆவசியகமாமெனக் கூறுகின்றார்.

**तदनु च**–இவன் சருவேஸ்வரன் என்னும் சுருதியின் பின்பு

**नेति नेति वचःश्रुतेः**–இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் வாக்கியம் கேட்கப்படுதலின்

அற்றேல் ஐஸ்வர்யம் நிஷேதிக்கத்தக்கதாமேல் மோக்ஷத்தின்கண் அது கூறத்தக்கதன்றும் பங்கப்பிரக்ஷாலனநியாயம் பிராப்தியாதலின் என்றுசங்கித்துக் கூறுகின்றார்.

**मोक्षगतं यद्**–மோக்ஷத்தின்கண் யாதொரு ஐஸ்வர்யப் பிரதிபாதனமுண்டோ

**तदपि हि स्तुतये**–அதுவும் ஸ்துதியின் பொருட்டாம்

பங்கப்பிரக்ஷாலனநியாயமாவது சேற்றை மிதித்து காலைக் கழுவுதலைப் பார்க்கிலும் சேற்றைப் பரிசியாமல் தூரத்திற் (விலகி) செல்லுதலாம். (170)

(அ) அற்றேல் சிலவிடத்து நிஷேத வாக்கியத்தின் சமீப உச்சாரணமின்றியும் பரமான்மாவிற்கு ஐஸ்வர்யம் நிர்த்தேசஞ் செய்யப்படுகின்றது. அதாவது ‘இவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித்தார்’ ‘பரமான்மாவின் பயத்தால் வாயு சஞ்சரிக்கின்றது’ என்பது முதலியவிடங்களில் நிஷேதவசனமின்றியே ஐஸ்வர்யம் காணப்படுகின்றது. அஃது வாஸ்தவமாக ஏனாகாது என்றுசங்கித்து அவ்வாக்கியங்கட்கும் நிருவிசேஷ வஸ்துவின்கண் தாற்பரியம் அங்கீகரிக்கத்தக்கதாம். அன்றேல் அதன்கண் தாற்பரியமுள்ள அநேக சுருதிகளின் விரோதத்தை நீக்கமுடியாது. ஆதலின் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

स्वातन्त्र्यमीश्वरगिरा गुणमार्गवृत्ति-
माश्रित्य पूर्वगुरवः प्रतिपादयन्ति ।
सिंहस्य शौर्यगुणवत्परमेश्वरस्य
स्वातन्त्र्यलक्षणगुणोऽव्यभिचारिरूपः ॥ १७१ ॥

பதவுரை

पूर्वगुरवः -முன்னோர்களான ஆசிரியர்கள்

गुणमार्गवृत्तिम्-கௌணீ விருத்தியினை

आश्रित्य - அங்கீகரித்து

ईश्वरगिरा-ஈஸ்வர சத்தத்தால்

स्वातन्त्र्यम् - சுதந்திரத்தன்மையினை

प्रतिपादयन्ति-பிரதிபாதிக்கின்றார்கள்

சுதந்திரத்தன்மை-அபராதீனத்தன்மை பாஷ்யக்காரரோ कारणत्वेन चाकाशादिषु यथा व्यपदिष्टोक्तेः என்னுமதிகரணத்தின்கண் 'இவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித்தது' என்னும் வாக்கியம் சுதந்திரத்தன்மையினைத் தெரிசிப்பிக்கின்றதாய் பரமான்மாவை அபரப்பிரயோஜ்யத்தன்மையால் ஈஸ்வரன் எனக்கூறிற்று எனக் கூறுகின்றனர். அதாவது ஈஸ்வர சத்தத்திற்கு கௌணீவிருத்தியினால் அவரது சுதந்திரமாத்திரத்தில் தாத்பரியமுண்மையினால் அதுவே சிருஷ்டியாதிவாக்கியத்தாலும் கருதப்பட்டுளது என்பது கருத்து.

அற்றேல், தனது வாச்சியாவ்வியபிசாரியாகிய குண சம்பந்தத்தைக் கருதியே வேறிடத்தில் கௌணசத்தம் பிரயோகிக்கப்படுகின்றது. சுதந்திரத்தன்மையோ ஈச்வர சத்தவாச்சிய இராஜகுமாராதிகளில் வியபிசாரத்தை அடைகின்றது என்றாசங்கித்து முக்கிய ஐஸ்வரியம் ஈஸ்வரனுக்கேயாமாதலின் அவரே ஈஸ்வரசத்தவாச்சியர் அவரிடத்தில் சுதந்திரத்தன்மை அவ்வியபிசாரியாம் ஆதலின் அதன் விஷயகௌணப்பிரயோகம் பொருத்தமேயாம் எனத் திருஷ்டாந்தசகிதம் கூறுகின்றார்.

सिंहस्य शौर्यगुणवत् -சிம்மத்திற்கு சௌர்யகுணமிருப்பது போன்று

परमेश्वरस्य -பரமேஸ்வரனுக்கு

स्वातन्त्र्यलक्षणगुणः-சுதந்திரத்தன்மை வடிவ குணம்

अव्यभिचारिकरूपः வியபிசாரமின்றியதாயிருக்கின்றது. (171)

(அ) அற்றேல் பரமான்மாவின் கண்ணேயே ஈஸ்வர சத்தம் கௌணமாம் என்று பாஷியக்காரரால் கூறப்பட்டுள்ளது ஆதலால் அவரே அதன் வாச்சியமாக எங்ஙனமாவர் சுதந்திரத் தன்மைதான் எங்ஙனமாம் என்றுசங்கித்து அவித்யாதசையின் கண் அதன் (ஆவித்தை) சபலத்திற்கு ஐஸ்வர்யம் நிரங்குசமா மாதலின் அவரே ஈஸ்வரசத்தவாச்சியர். அதன் (ஐஸ்வர்ய) பலத்காலேயே அவருக்கு சுதந்திரத்தன்மை சித்திக்கின்றது. அவரே நிருபாதிவடிவத்தால் ஈஸ்வரசத்தத்திற்குக்கௌணார்த் தமாம். ஆதலின் ஆண்டும் அதன் பிரயோகம் பொருத்தமாம் எனக் கூறுகின்றார் :—

ऐश्वर्यवस्तु परिगृह्य तदत्यजन्तः
सामर्थ्यसिद्धिमुपपादयितुं क्वचिच्च ।
सर्वेश्वरश्रुतिवचः समुदाहरन्ति
स्वातन्त्र्यलक्षणगुणस्य तमस्वितायाम् ॥ १७२ ॥

பதவுரை

तमस्वितायाम् -பூருவாசிரியர்கள் அஞ்ஞானதசையில்

स्वातन्त्र्यलक्षणगुणस्य ஈஸ்வரத்தன்மையின்

सामर्थ्यसिद्धिम्-அர்த்தத்தால் சித்தியினை

उपपादयितुम् -பிரதிபாதனஞ் செய்வதற்கு

ऐश्वर्यवस्तु परिगृह्य- மாயையையுபாதியாகவுடைய முக்கிய ஐஸ்வர்யத்தை யங்கீகரித்து

तदत्यजन्तः-அதனை நிராகரணஞ் செய்யாமலே

**क्वचिच्च**-சகுணப் பிரம்மப் பிரகரணத்தில்

**सर्वेश्वरश्रुतिवचः**- சருவேஸ்வரத்துவ விஷயக சுருதி வாக்கியத்தினை

**समुदाहरन्ति**- உதாகரிக்கின்றூர்கள். (172)

(அ) இப்போது சருவேஸ்வரனென்னும் சுருதியின் சாமர்த்தியத்தால் சுவாதந்திரியத்தன்மையினை சாதிக்கும் பிரகாரத்தைத் திருஷ்டாந்தசகிதம் கூறுகின்றூர்:—

सिंहश्रुतिर्न घटते यदि शूरताऽस्य
न स्यात्तथैव परमेश्वरता श्रुतिश्च ।
नैश्वर्यलक्षणगुणः परमात्मनश्चे-
दित्यर्थलब्धिमभिसंदधते महान्तः ॥ १७३ ॥

பதவுரை

**अस्य शूरता**-சிம்மத்திற்கு சூரத்தன்மையானது

**यदि न स्यात्**-இல்லையாயின்

**सिंहश्रुतिः न घटते** -சிம்மசத்தத்தின் பிரயோகம் பொருந்தாது

**तथैव** -அப்படியே

**परमात्मनः** -பரமான்மாவிற்கு

**ऐश्वर्यलक्षणगुणः** - ஐஸ்வர்யத்தைச் சின்னமாகவுடைய சுதந்திரத்தன்மை வடிவகுணம்

**न चेत्** -இல்லையாயின்

**परमेश्वरताश्रुतिश्च** - சருவேஸ்வரன் என்னும் சுருதியும் (பொருத்தமற்றதாம்)

**इति अर्थलब्धिम्** -- இவ்வாறு அர்த்தத்தினுல் பிராப்தியினை

**महान्तः अभिसंदधते**-மகான்கள் கூறுகின்றூர்கள்.

## விசேஷவுரை

எப்படி சிம்மத்தன்மைக்கு வியாபகமாதலால் சிம்ம சத்தத்தாற் கூறப்படாதாயினும் சௌர்யம் அதன் அர்த்தத்தில் (சிம்மத்தின் கண்) அர்த்தத்தாற்சித்திக்கின்றதோ அப்படி எவனுக்கு எவனைக்குறித்து ஐஸ்வர்யமோ அவனுக்கு அவனைக் குறித்து பரவசத்தன்மையின்மையாமென்னும் வியாப்தியினல் சருவருக்கும் வசமாகாத்தன்மை வடிவ சுதந்திரத்தன்மை யின்றி சருவேஸ்வரத்தன்மை பொருந்தாமையின் அச் சுருதியின் சாமர்த்தியத்தாலேயே ஈஸ்வரனிடத்தில் உபசாரம் அற்ற (முக்கிய) சுதந்திரத்தன்மை வடிவ குணத்தின் சித்தியாமென்பது பொருள். (173)

(அ) அற்றேல் சுருதார்த்தாபத்திப் பிரமாணத்தாற் சித்தித்ததற்கு சுருதி சித்தத்தன்மையின்மையின் ஈஸ்வா னிடத்தில் வஸ்துத்துவாதிலிங்கத்தால் யாதொரு பரதந்திரத் தன்மை சங்கையுண்டோ அது நீக்கமுடியாதாகும் என்று சங்கித்து சுருதார்த்தாபத்திப்பிரமாணகம்யமின்றி சுருதார்த்தமே ஸ்திதிபெருமையின் சுருதியை மூலமாகவுடைய அர்த்தாபத்திக்கு சுருதிசமானத்தன்மை சுருதியினுலேயே அடைவிக்கப்பட்டது என்பது நியாயமுணர்ந்த பெரியோரது சம்மதமாம் இவ்வாருகவே அதன் (அர்த்தாபத்தியின்) விரோத முளதாயவழியும் அநுமானமுதயமாதற்கு யோக்கியமன்ரும் என்னுங்கருத்தாற் கூறுகின்ருர் :—

श्रौतार्थवृत्तिबललभ्यमपीह वस्तु
श्रौतं वदन्ति निकटत्वमनुस्मरन्तः ।
आसन्नवृष्टिमपि देवमुदीरयन्ति
वर्षन्तमेव हि जना भुवितादृगेतत् ॥ १७४ ॥

## பதவுரை

निकटत्वमनुस्मरन्तः – சாமர்த்தியத்தாற் சித்தித்த வஸ்து விற்கு சிரௌதார்த்தத்தின் சமீபத் தன்மையைக் கருதுகின்ற மகான்கள்

श्रौतार्थवृत्तिवललक्ष्यमपि वस्तु - முக்கியார்த்தத்தில் சத்தத்திற்கு யாதொரு விருத்தியுண்டோ அதன் சாமர்த்தியத்தாலடையத் தக்க வஸ்துவினையும்

श्रौतं वदन्ति- சுரௌதவடிவ முக்கியார்த்தமாகவே கூறுகின்றார்கள்.

அதன் அவ்வியவகிதத்திற்கும் அதன் சத்தத்தால் வியவகரித்தலைத் திருஷ்டாந்தத்தால் உபபாதனஞ்செய்கின்றார்

भुवि जनाः -உலகின் கண் ஜனங்கள்

आसन्नवृष्टिमपि -சமீபத்தில் மழைபெய்வதாயினும்

वर्षन्तमेव देवम् - தற்காலத்தில் மழைபெய்கின்றதாகவே மேகத்தை

उदीरयन्ति - கூறுகின்றார்கள்

तादृग् एतद् -அப்படி யிதுவுமாம்

சிரௌதார்த்தத்தின் சமீபத்தன்மை யுண்மையால் சுதந்திரத் தன்மைக்கு சிரௌதத்தன்மையா மென்பது பொருள். ஈண்டு ஈஸ்வர சுருதியால் லக்ஷிக்கப்பட்ட சுதந்திரத் தன்மையினை சுத்தான்மமாத்திரத்தால் விவக்ஷித்தன்மையின் அதனால் அதற்கு சகுணத்தன்மையினடைவு இன்றும் என்பதனையுமறிக. (174)

(அ) அற்றேல் சூத்திரகாரரான வியாஸபகவானே,

'पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ'

பராபித்தியாநாத்துதிரோஹிதம் ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ

என்னும் சூத்திரத்தால் சீவனுக்கு சுவாபாவிக ஐஸ்வர்யமே அவித்யாதசையின்கண் தேகாதியபிமான வசத்தால் திரோகிதமாய் ஈசுவரத் தியானத்தால் முத்தியின்கண் அபிவியக்தமாகின்றது எனக்கூறுகின்றார் ஆதலின் முத்தியில் ஆன்மாவிற்கு நிருவிசேஷத் தன்மை எங்ஙனமாமென்னுஞ் சங்கையை சூத்திரக்காரரது அபிப்பிராயத்தைத் தெரிசிப்பித்தலால் பரிகரிக்கின்றார்:—

ऐश्वर्यमज्ञानतिरोहितंसद्ध्यानादभिव्यज्यत इत्यवोचत् ।
शरीरिणः सूत्रकृदस्य यत्तु तदभ्युपेत्योदितमुक्तहेतोः ॥ १७५ ॥

பதவுரை

सूत्रकृत्-வியாசபகவான்

अस्य शरीरिणः-இந்தச் சீவனுக்கு

ऐश्वर्यम्-பரமேஸ்வர ஐஸ்வர்யமானது

तिरोहितम् सद्-அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டதாகி

ध्यानाद् अभिव्यज्यते-ஈசுரத்தியானத்தால் முத்தியில் அபிவியத்தமாகின்றது

इति यत्तु अवोचत्-என்று யாதொன்றைக் கூறினரோ

तदभ्युपेत्य-அஃது பிரௌடிவாதத்தால்

उदितम्-அவரால் கூறப்பட்டது

उक्तहेतोः - ஐஸ்வர்யத்தின் கண் பிரமாணுபாவம் கூறப்பட்டமையின்.

விசேஷவுரை

பிரமசூத்திரத்தின்கண்ணே சொப்பன ரதம் முதலியவைகட்கு நிச்சயிக்கப்பட்ட காரணமில்லையாயினும் சீவனுக்கு ஈஸ்வரனது அம்சத்தன்மையுண்மையின் அவனே தனது ஐஸ்வர்யவசத்தால் வாஸ்தவமாகவே சொப்பனபிரபஞ்சத்தை சிருஷ்டிப்பன் என்று சங்கையுண்டாக ஐஸ்வர்யம் உளதாயினும் அப்போது மறைக்கப்பட்டமையின் சீவனுக்கு ஈஸ்வரன் போன்று விசித்திரவாஸ்தவப் பிரபஞ்சசிருஷ்டித்தன்மையின்ரும் என்று பிரௌடி சூத்திரக்காரரால் வாதத்தாற் கூறப்பட்டது. தனது சித்தாந்தத்தாலன்று. न स्थानतोऽपि परस्य ந ஸ்தானதோபி பரஸ்ய என்பதாதியாற் கூறப்பட்ட சுருதி நியாயங்களுக்கு விரோதம் வருதலினுலும் அதன் விரோதாபாவாதிகளை நிரூபிக்கமுடியாமையானுமென்பது பொருள். (175)

(அ) மேலும் சூத்திரத்திற் கூறப்பட்டுளது என்னுமித்துணையாலேயே வாஸ்தவ ஐஸ்வர்யம் அங்கீகரிக்கத்தக்க

தன்று. அதற்கு சுருதிக்குப்போன்று தன்றற் பிராமாண்ய மின்மையினலும் பிரமாணத்தாலபேக்ஷிக்கப்பட்ட நியாய மாத்திரத்தின் சூசகத்தன்மையுண்மையானுமென்க. சீவனது சுவாபாவிக ஐஸ்வரியத்தின்கண் பிரமாணத்தையாவது நியாயத்தையாவது சொற்பமும் கூறுதற்கு சக்கியமன்ரும். ஈஸ்வரனது அம்ஸமாதலால் சீவனிடத்தில் அவனது ஐஸ்வர்ய முளது என்று சொல்லற்க. அவ்வம்ஸமே பேதம் முதலிய வடிவத்தால் நிருபிக்க முடியாமையால் சித்தியாமையின். அம்ஸத்திற்கு அம்ஸியின்கணுள்ள சாமர்த்தியமுடைய தாந்தன்மை நியமமின்மையினலும் என்க. ஈஸ்வரனது ஐஸ்வர்யத்தின் சுவாபாவிகத்தன்மையின்கண்ணும் பிரமாண மின்ருமென்று கூறப்பட்டது என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்:—

अथवा चितिवत् प्रतीयतां पुरुषस्येश्वरतापि वास्तवी ।
यदि किंचन कारणं भवेन्न विना सा तदिहाभ्युपेयते ।।१७६।।

பதவுரை

अथवापि -அல்லது
पुरुषस्यापि ईश्वरता -சீவனுக்கும் ஐசுவர்யம்
वास्तवी यदि -வாஸ்தவமா இருக்குமாயின்
चितिवत् प्रतीयताम् -ஞானம்போன்று தோற்றவேண்டும்
किंचन कारणं भवेत् -சொற்பப் பிரமாணமுமிருக்கும்
तद् विना -பிரமாணமின்றி
सा इह न अभ्युपेयते - ஐஸ்வர்யம் ஈண்டு அங்கீகரிக்கப் படுகின்றதில்லை. (176)

(அ) மேலும் कामादीतरत्र तत्र चायतनादिभ्यः காமாதீதரத்ர தத்ரசாயதநாதிப்ய: என்னும் சூத்திரத்தின்கண் சாந்தோக் யத்தில் ‘ இந்தப்பிரம்மபுரத்தில் தகர புண்டரீகவேஸ்வமுளது ’ இதனுள் தகராகாசமுளது. என்று தொடங்கிய தகராகாசத் திற்கு ‘யாதொரு இவ்வான்மா பாபமற்றவர் ஜரையும் மரணமும் சோகமும் பசியும் தாகமுமற்றவர் சத்தியகாமர் சத்திய சங்கல்பர் ’ என்று கூறப்பட்ட சத்தியகாமாதி குணங்கட்கும் பிரகதாரண்யத்தில் ‘அவ்விவ்வான்மா மகான் அஜன் பிராணன்

களில் இவன் விஞ்ஞானமயன் யாதொரு இருதயாகாசமுண்டோ அதன்கண் இருக்கின்றார். சருவத்தையும் வசமாகவுடையவன் சருவத்திற்கும் ஈசானன். என பரமான்மாவின்கண் கூறப்பட்ட வசித்தன்மை முதலிய குணங்கட்கும் பரஸ்பரம் உபசம்மாரம் வருணிக்கப்பட்டுளது. ஆண்டு दहर उत्तरेभ्यः தகர உத்தரேப்ய: எனக்கூறிய நியாயத்தால் தகராகாசம் பிரம்மமேயாம் அங்ஙனமாயினும் அதன் வித்தை சகுணப் பிரம்மத்தை விஷயஞ்செய்வதாம். 'எவர்கள் ஆன்மாவையும் அதன் கண்ணுள்ள சத்திய காமாதி குணங்களையும் உபாசித்துச் செல்லுகின்றார்களோ அவர்களுக்கு சருவலோகங்களிலும் காமசாரமுண்டாகின்றது' என காமாதி குணங்கட்கும் வேத்தியத்தன்மை கேட்கப் படுதலால் பிரகதாரண்யகத்திலும் 'இனிமேல் மோக்ஷத்தின் பொருட்டே கூறுவாயாக' என்று வினவையாரம்பித்திருத்தலாலும் 'அந்த இவ்வான்மா இதுவுமல்ல இதுவுமல்ல' என உபசம்மாரஞ் செய்திருத்தலாலும் அதன் வித்தை நிர்க்குண விஷயகமேயாம். இவ்வாறாகவே பின்ன வித்தைகளில் உபசம்மரிக்கப்பட்ட (சங்கிரகிக்கப்பட்ட) காமாதி குணங்கட்கு உபாசனையாவது பிரமிதியாவது பிரயோஜனமன்றாம். அதனால் உபசம்மரிக்கப்பட்ட காமாதி குணங்களால் சகுணத்தன்மை பிரகதாரண்யகத்தில் சூத்திரக்காரருக்கு சம்மதமின்றாம். இவ்வாறு கேட்கப்பட்ட வசித்துவாதி குணங்களாலும் உபசம்மரிக்கப்பட்ட குணங்களினாற்போன்று பிரம்மத்திற்கு சகுணத்தன்மை விலக்ஷிக்கப்பட்டதன்றாமென சித்திக்கின்றது என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

कामादि तत्र च भवेदितरत्र चेति यत्सूत्रकारवचनं तदुदीक्षमाणाः ।
कामादिकेन दहरस्थगुणेन तुल्यं सर्वेश्वरादिगुणजातमिति प्रतीमः ॥

*பதவுரை*

कामादि -சத்திய காமத்துவாதி குணங்கள்

तत्र च भवेत् -நிர்குணவித்தையின் கண் உபசம்மாரமாம்

इतरत्र च इति - சகுண வித்யையின் கண்ணும் நிர்க்குண வித்தையின் கண்ணுள்ள சருவேஸ்வரத்துவாதிகளின் உபசம்மாரமாமென்று

यत्सूत्रकारवचनम् -சூத்திரக்காரருடைய யாதொரு வாக்கிய முண்டோ

तद् उदीक्षमाणाः - அதனை விசாரிக்கின்ற நாங்கள்

दहरस्थगुणेन - தகரவித்தையின் கண்ணுள்ள

कामादिकेन -சத்திய காமாதி குணங்களோடு

सर्वेश्वरादिगुणजातम् - சருவேஸ்வரத்துவம் முதலிய குண சமூகத்தை

तुल्यमितिप्रतीमः - சமானமா மென்றறிகின்றோம்

உபசம்மாரம்=கிரகித்தல் (177)

(அ) அப்படியானல் அவைகளின் பரஸ்பர உபசம்மாரத்திற்குப்பயன் யாது என்ருசங்கித்து பிரகதாரண்யத்தில் சத்திய காமாதி குணங்களினுப சம்மாரத்திற்குப் பரிசேஷத்தால் துதி மாத்திரம் பயனும் என்று கூறுகின்ருர்.

दहरस्थगुणोपसंहृतेः स्तुतिमात्रं विरहय्य नापरम् ।
फलमस्ति परात्मनिष्ठिते वचने वाजिभिरादृते महत् ॥ १७८ ॥

பதவுரை

दहरस्थगुणोपसंहृतेः -தகர வித்தையின் கண்ணுள்ள சத்திய காமாதி குணங்களின் உபசம்மாரத்திற்கு

स्तुतिमात्रं विरहय्य - துதிமாத்திரத்தினை விட்டு

अपरं फलं नास्ति -வேறுபயனின்ரும்

परात्मनिष्ठिते -நிருவிசேஷ பரமான்மாவின் கண் தாற்பரிய முள்ளதும்

वाजिभिः आदृते - வாஜஸநேயி சாகையையுடைய மகரிஷிகளால் ஆராதிக்கப்பட்டதுமான

वचने-வாக்கியத்தின் கண்ணே

महत् -மகத்தான பயனிருக்கின்றது. (178)

மகத்து=நேரே புருஷார்த்தத்தின்கண் பரிவாசன முள்ளது.

(அ) அப்படியாயினும் வசித்துவம் முதலிய குணங்கள் வஸ்து தத்துவத்தைப்போதிக்கும் பிரகரணத்தில் கேட்கப்பட்டமையின் வஸ்து விசேஷ வடிவமாமென்றுசங்கித்து சூத்திரக்காரராலேயே அவைகட்கு சத்திய காமம் முதலிய குணங்களின் சமானத்தன்மையைக் கூறினமையின் உபசம்மரிக்கப்பட்ட சத்தியகாமாதி குணங்கட்குப்போன்று கேட்கப்பட்ட வசித்துவாதி குணங்கட்கும் துதிக்குந்தன்மையும் கூறிய பிரகாரத்தால் சுதந்திரத்தன்மையினையுபலக்ஷிப்பிக்குந் தன்மையும் அங்கீகரிக்கத்தக்கது எந்த பிரகாரத்தாலும் வஸ்துவின் சொரூபத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதன்று என்னுங்கருத்துடையவராய்க் கூறுகின்றார்.

दहरादुपसंहृतैर्गुणैः सदृशाश्चेद्वशितादि लक्षणाः
नतदापरमात्मरूपतां प्रतिपत्तुं कलयाऽपि शक्नुयुः ॥ १७९ ॥

பதவுரை

दहरादुपसंहृतैः गुणैः – தகரவித்தைனின்றும் கிரகிக்கப்பட்ட சத்தியகாமாதி குணங்களோடு

वशितादिलक्षणाः – சருவவசித்துவம் முதலான குணங்கள்

सदृशाश्चेद् – சமானமாக உபகாரத்தைச் செய்யுமாயின்

तदा – அப்போது

परमात्मरूपताम् – பரமான்மாவின் சொரூபத்தன்மையை

प्रतिपत्तुम् – அடைவதற்கு

कलयाऽपि न शक्नुयुः – லேசமும் சமர்த்தமாகா (179)

(அ) அற்றேல் 'பிரகிருதியின்கண் லீனமானவனுக்கு எவன் பரனோ அவன் மஹேஸ்வரன்' என்னுஞ்சுருதியின்கண் அவ்வியாகிருதத்தினின்றும் மேலான சுத்தசேதனத்திற்கு பரமேஸ்வரத்தன்மையைக் கூறியிருத்தலால் அதற்கு அது வாஸ்தவமாமென்றுசங்கித்து வசித்துவாதியின் சன்னிதியில் படிக்கப்பட்ட சருவேஸ்வரத்தன்மையே ஈண்டும் பிரத்தியபிஞ்ஞையால் அறியப்படுதலினாலும் அதற்கும் முற்கூறிய பிரகாரத்தால் துதிக்குந்தன்மையுண்மையானும் இதுவும் அங்ஙனமேயாமெனக் கூறுகின்றார்:—

परमेश्वरतागुणोऽप्यतः स्तुतये तस्य परस्य वस्तुनः ।
परिकीर्तित इत्युपेयतामविशेषाद्वशितादिलक्षणैः ॥ १८० ॥

பதவுரை

अतः - இதனுல் அதாவது
वशितादिलक्षणैः - வசித்துவம் முதலான குணங்களோடு
अविशेषात् – சமானமாயிருத்தலால்
परमेश्वरतागुणोऽपि - பரமைஸ்வர்ய வடிவ குணமும்
तस्य परस्य वस्तुनः - அப்பரவஸ்துவினது
स्तुतये - துதியின் பொருட்டு
परिकीर्तितः इति - கூறப்பட்டதாமென
उपेयताम् – அங்கீகரிக்கத்தக்கது.

இதனுல் என்பதன் வியாக்கியானம் வசித்துவம் முதலான என்பது. (180)

(அ) அற்றேல் ஈசுரத்தன்மை (ஐஸ்வர்யம்) ஒவ்வொரு வேதாந்தத்தின்கண்ணும் அனேகந்தடவை கேட்கப்பட்டிருத்தலால் அஃது வாஸ்தவ சொரூபமாமென்ருசங்கித்து காரணத்தன்மை சாக்ஷித்தன்மைப் பிரதிவந்தியால் இரண்டு சுலோகத்தால் பரிகரிக்கின்ருர் :—

कारणत्वमपि चित्सुखादिवत्तत्स्वरूपमिसि किं न गृह्यते ।
ईश्वरत्वविषये विपश्चितां पक्षपातकरणे न कारणम् ॥ १८१ ॥

பதவுரை

कारणत्वमपि –சகத்தின் காரணத்தன்மையும்
चित्सुखादिवत् - ஞானனந்தாதி போன்று
स्वरूपमिति –பரமான்மாவின் சொரூபமாமென்று
किं न गृह्यते –ஏன் கிரகிக்கப்படுகின்றதில்லை,

காரணத் தன்மைக்கு ஸாபேக்ஷத்தன்மையுண்மையின் நிரபேக்ஷ ஆன்ம சொருபமாக அஃது கிரகிக்கப்படுகின்றதில்லை என்ருசங்கித்து ஈஸ்வரத்தன்மைக்கும் ஈஸிதவ்யத்தின் அபேக்ஷையுண்மையின் சமானமாமென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்,

**ईश्वरत्वविषये** -ஈசுரத்தன்மை விஷயத்தில்

**विपश्चिताम्** -புத்திமான்களுக்கு

**पक्षपातकरणे** -பக்ஷபாதத்தைச் செய்வதன் கண்

**न कारणम्**- யாதொரு காரணமுமின்ரும். (181)

பிரதிவந்தி-சமான உத்தரம்.

**साक्षिताऽपि परमात्मनो भवेदीश्वरत्ववदियं न संशयः ।**
**नित्यसिद्धनिजबोधरूपवद्रूपमेव निरूपाधिकं विभोः ॥ १८२ ॥**

பதவுரை

**ईश्वरत्ववत्** -ஈசுரத்தன்மை போன்று

**इयं साक्षिताऽपि** - சுருதியுக்திகளால் சித்தித்த சாக்ஷித் தன்மையும்

**विभोः परमात्मनः** - வியாபகமான பரமான்மாவிற்கு

**नित्यसिद्धनिजबोधरूपवद्** -நித்தியசித்ததனது ஞானவடிவம் போன்று

**निरूपाधिकं रूपमेव भवेद्** - நிருபாதிக வடிவமேயாகும்

**न संशयः** - சமுசயமின்ரும்

சாக்ஷித்தன்மைக்கு சாக்ஷியத்தின் அபேக்ஷை உண்மையின் பரமான்மாவின் சொரூபத்தன்மையின்ருமெனவும் சங்கிக்கத்தக்கதல்ல உத்தரங் கூறிவந்தமையின் என்னுங்கருத்தால் சமுசயமின்ருமெனப்பட்டது. (182)

(அ) பிரம்மத்திற்குக் காரணத்தன்மையும் சாக்ஷித் தன்மையும் சுருதியினுற் கூறப்படவில்லையாதலின் (ஐஸ்வர்யத்

தினும்) விஷமத்தன்மையுளதென்றுசங்கித்து அதன்கண் மந்திரங்களை மூன்று சுலோகத்தால் உதாகரிக்கின்றார்.

एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षी चेता केवलो निर्गुणश्च ॥

பதவுரை

एको देवः - பரமான்மா ஏகனும் தேவனும்

सर्वभूतेषु गूढः - சருவபூதங்களில் மறைவுபட்டவனும்

सर्वव्यापी - சருவவியாபகனும்

सर्वभूतान्तरात्मा - சருவபூதங்களின் அந்தரான்மாவும்

कर्माध्यक्षः - கருமாத்தியக்ஷனும்

सर्वभूताधिवासः - சருவபூதங்களினதிவாசனும்

साक्षी चेताः - சாக்ஷியும் சேதனனும்

केवलो निर्गुणश्च - கேவலமும் நிர்குணமுமாம்

விசேஷவுரை

பிரம விஷ்ணுவாதிபேதத்தை நிராகரிக்கும் பொருட்டு ஏகனெனப்பட்டது. அதற்கு (ஆன்மாவிற்கு) சடத்தன்மையை நிராகரிக்கும் பொருட்டு தேவனெனப்பட்டது விளக்கவடிவன் சித்து ரூபனென்பது பொருள். அது பிரம்மாண்டத்தினின்றும் வெளியிலுள்ளது என்னும் சங்கையை நிராகரித்தற்பொருட்டு சருவபூதங்களில் எனப்பட்டது. அவைகளில் தோற்றுமை யாகிய விரோதத்தைப் பரிகரித்தற்பொருட்டு மறைவுபட்டவ னெனப்பட்டது. அப்படியானால் பரிச்சின்னமாமேயெனின் அன்றெனக் கூறுகின்றார் சருவவியாபகனென. அங்ஙனம் ஆயினும் ஆகாசம் போன்று பாஹ்யமாமே யென்னுஞ் சங்கையை நிவர்த்திசெய்கின்றார். சருவபூதங்களினந்தரான் மாஎன. அப்படியானால் சீவன்போன்று கருத்திருத்துவாதி சமுசாரியாவனேயெனின் அன்றெனக் கூறுகின்றார் கருமாத்தி யக்ஷனென. புத்தி முதலி யவற்றின் வியாபாரங்களில்தான் சந்நிதி மாத்திரத்தால் அத்தியக்ஷனேயாவன் அவற்றையுடை யவனன்று என்பதுபொருள். அதனினும் அன்னியமான வஸ்து சகத்தினுபாதானமாம் என்னுஞ் சங்கையை நிவர்த்தி செய்

கின்ருர் சருவபூதங்களினதிவாசனென. சருவபூதங்களும் அத்தியஸ்தத்தன்மையால் எதன்கண் வாசஞ் செய்கின்றனவோ அது சருவபூதங்களினதிவாசமாம். சகத்துவடிவ பரிணமத்தை நிராகரிக்கின்ருர் சாக்ஷியென, சாக்ஷிய வஸ்துவிற்கு சாக்ஷியின் தருமத்தன்மை பொருந்தாமையின் ஆத்தியாசிகசம்பந்தத்தாலேயே அதன் சாக்ஷியாமென்பதுபொருள். அப்படியானுல் நேரேபார்த்தலால் சாக்ஷியாமாதலின் பார்த்தல் வியாபாரத்தையுடையதாதலின் அதற்கு கூடஸ்தத்தன்மையின்ருமெனில் அன்றெனக்கூறுகின்ருர் சேதனன் என. சொருபவடிவ ஞானத்தாலேயே விளக்குபவன், வியாபாரவாயிலாலன்றென்பதுபொருள். அதன்கண் வியாபாரமின்மையில் ஏதுவின் சம்பந்தமின்மையை ஏதுவாகக் கூறுகின்ருர் கேவலமென. அசங்கனென்பது பொருள். அப்படியானுல் சுகம் முதலிய குணங்களின் சம்பந்தமுண்மையின் அசங்கத்தன்மையெங்ஙனமாமென்ருசங்கித்து அது அதன் வடிவமாதலால் குணகுணிபாவமின்றெனக் கூறுகின்ருர். நிர்க்குணமென சருவத்திற்கும் சாக்ஷியாயிருத்தலாலேயே அதற்கு அன்னியமாகவும் பாவமாகவும் பாவமாகவாவது அபாவமாகவாவது வாஸ்தவமாக யாதொரு தருமமுமின்ருமென்பது உம்மையின்பொருள். (183)

(அ) சீவனுக்குப்போன்று தேகத்துவயத்தால் பரிச்சின்னத் தன்மையை நிவர்த்தி செய்கின்ருர்.

न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते ।
परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च ॥

பதவுரை

तस्य कार्यं करणं च -பரமான்மாவிற்குத் தூலதேகமும் சூக்ஷுமதேகமும்

न विद्यते-இன்ரும்

அப்படியானுல் கருத்திருத்துவாதி தேகத்துவயத்தினதீனமாதலால் அஃதின்றியவனுக்கு சருவகருத்திருத்துவமாவது சருவஞ்ஞத்துவமாவது எங்ஙனம் கூடும். அவையில்லாதபோது ஈசுரத்தன்மைதான் எங்ஙனம் பொருந்துமெனின் அதற்குக் கூறுகின்ருர்.

तत्समश्चाभ्यधिकश्च -அவருக்கு சமமாகவாவது மேம்பாடாக வாவது

न दृश्यते -யாதொன்றும் காணப்படுகிறதில்லை

தேகாதி பரிச்சேதத்தின்கண் அபிமானமுள்ளவனுக்கே சருவஞ்ஞத்துவாதி பொருந்துகிறதில்லை. அஃதின்றிய வனுக்கோ ஞாதிருத்தன்மை முதலியவற்றில் சுதந்திரத் தன்மையுளது. அவனுக்கு சமானமானவனேயின்றும் மேம் பட்டவன் எங்ஙனமிருப்பான். மற்றோ இன்றும் ஆதலால் அவனே சருவஞ்ஞனும் சருவகருத்தாவுமாம் ஆதலின் அவனுக்கு காரணத்தன்மையும் ஈசுரத்தன்மையும் சித்தித்தது என்பதுபொருள்.

தேகாதியின்றியவனுக்கு சொற்ப கருத்திருத்தன்மையும் சம்பவிக்கிறதில்லை சருவகருத்திருத்தன்மையெங்ஙனமாமென்று சங்கித்து எவனுக்கு தேகாதியினதீனமான சாமர்த்தியமோ அவனுக்கே அஃதில்லாதபோது சாமர்த்தியமின்மையால் கருத்திருத்துவாதி இன்றுகுக எவனுக்கு மாயையெனப் பெயரியதும் மேலானதும் நிரதிசயமும் நாநாவிதமும் விசித்திர காரியாநுகூலமுமான சத்தி இயற்கையாகவே சித்தித்துளதோ அவனுக்கு தேகாதியின்மையால் யாதொரு குறைவுமின்று மெனக் கூறுகின்றார்.

अस्य पराशक्तिः -இவனுக்கு மேலான மாயாசக்தி

विविधैव श्रूयते - மாயையுடையவன் மஹேஸ்வரன் என்பதாதி சுருதியில் நாநாவிதமாகக் கேட்கப்படுகின்றது.

அங்ஙனமாயினும் சடமான அச்சக்தியினால் சருவஞ்ஞத் துவாதியின் சித்தி எங்ஙனமாம் என்னுமிடத்துக்கூறுகின்றார்.

स्वाभाविकी - அச்சத்தியானது இயற்கையாகவே சித்தித் துளதும்

ज्ञानबलक्रिया च - ஞான பலக்கிரியை வடிவினதுமாம்

### விசேஷவுரை

சொரூபவடிவஞானத்தினது அநாவிருதத்தன்மை வடிவம் யாதொரு பலம் (சாமர்த்தியம்) உண்டோ அதனால் வியா

கிருத அவ்வியாகிருத சருவ விஷயாவச் சின்ன ஸ்புரண வடிவகிரியை அதாவது அதனபிவியத்தி சுவாபாவிகமாம். அதாவது ''ஏவன் சருவவித்து'' என்பதாதி சுருதியின்கண் தேகாதியின் அபேக்ஷயில்லாமலே சித்தமாம். ஆதலால் ஈசுரத்தன்மை முதலியவை பொருத்தமேயாமென்பது பொருள். (184)

(அ) ஈசுரத்தன்மை முதலியவை சம்பவிப்பினும் அவருக்கு சருவேஸ்வரத்தன்மை சருவகாரணத்தன்மை எங்ஙனம் சம்பவிக்கும் அவருக்கு வேறு சுவாமி சம்பவித்தலின் என்றுசங்கித்துக் கூறுகின்றார்.

न तस्य कश्चित्पतिरस्ति लोके न चेशिता नैव च तस्य लिङ्गम् ।
सकारणं कैरणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः ॥

பதவுரை

लोके तस्य - உலகின் கண் பரமான்மாவிற்கு

कश्चित्पतिः नास्ति -ஓர் சுவாமி இன்றும்

न च ईशिता -நியந்தாவுமின்றும்

நியந்தாவினபாவத்திலேதுவைக் கூறுகின்றார்.

तस्य नैव च लिङ्गम्-பரமான்மாவிற்கு காரியகரண சங்காத வடிவ லிங்கமுமின்றும்

எதனுல் சேதனம் அறியப்படுகின்றதோ அது லிங்கமாம். எவன் தேகாதியால் பரிச்சின்னனும் பசிதாகாதியை யுடைய வனுமாகின்றுனே அவனுக்கே சுவாமி முதலியவை சம்பாவணை செய்யப்படுகின்றது. ஈசுரனுக்கோ அஃதின்மையினுலேயே வேறு சுவாமி சம்பவிப்பதில்லையாதலின். தான் சர்வேஸ்வரனு மென்பது பொருள் சருவகாரணத்துவத்தை யுபபாதனஞ் செய்கின்றார்.

सर्वकारणम् -அவரே சருவகாரியத்திற்கும் காரணமாம்

அவருக்கு ஓர் சுவாமியின்று மென்பதன் கண் வேறு ஏதுவைக் கூறுகின்றார்.

करणाधिपाधिपः - நேத்திராதிகரணங்களுக்குத் தலைவர்களான சூரியாதி தேவதைகளுக்கும் பாலகனாயிருப்பவன். ஆதலால் அவருக்கு யாதோர் சுவாமியுமின்றுமென்பது பொருள் சருவகாரணத்துவாதியினை முடிக்கின்றார்.

अस्य कश्चित् जनिता - பரமான்மாவிற்கு யாதொன்றும் காரணமாக

न च - இன்றும்

न च अधिपः - சுவாமியுமின்றும்

விசேஷவுரை

யாதொரு காரணத்தினால் இவருக்கு ஒரு காரணமின்றே அதனால் இவரே மூலகாரணமாவர். யாதொரு காரணத்தினால் வேறு சுவாமியின்றே அதனால் இவரே சருவேஸ்வரனுமென்பது பொருள். (185)

(அ) ஈசுரத்தன்மைக்குப் போன்று காரணத்துவாதிகட்கும் சிரௌதத் தன்மையினை (சிரௌதம் - சுருதிப்பிரதிபாத்யம்) முடிக்கின்றார்.

इति श्रुतिः कारणसाक्षिभावमैश्वर्यवद्ब्रूते परस्य पुंसः ।
अतःपरत्वान्नतदिष्यते चेद् द्वयं तृतीयं न तथेषितव्यम् ॥ १८६ ॥

பதவுரை

इति श्रुतिः - இந்தப் பிரகாரம் மேற்கூறிய சுருதியானது

परस्य पुंसः - பரமான்மாவிற்கு

कारणसाक्षिभावम् - காரணத் தன்மையினையும் சாக்ஷித் தன்மையினையும்

ऐश्वर्यवद्ब्रूते - ஐஸ்வர்யத்தினைப்போன்று கூறுகின்றது.

காரணத் தன்மை சாக்ஷித் தன்மையாகிய இரண்டும் அன்னியபரமான மந்திராதிகளால் சமர்ப்பிக்கப்பட்டமையின் வஸ்துவின் சொரூபமாக அங்கீகரிக்கப்படுகிறதில்லையென்று ஆசங்கித்து மூன்றாவதாகிய ஈஸ்வரத் தன்மையும் மந்திராதி

யினுல் அவ்விரண்டோடு கூடவே சொல்லப்பட்டமையின் அதுபோன்றே கிரகிக்கத்தக்கதன்றெனக் கூறுகின்ருர்.

**अतत्परत्वात्** – கூறிய சுருதியானது சொரூபபரமின்மையினுல்

**तद्द्वयम्** – காரணத் தன்மை, ஸாக்ஷித் தன்மையாகிய இரண்டும்

**न इष्यते चेत्** – அங்கீகரிக்கப்படுகின்றதில்லையெனின்

**तृतीयं तथा** – மூன்ருவதும் அவ்வாறே

**न एषितव्यम्** – அங்கீகரிக்கத்தக்கதன்ரும். (186)

(அ) காரணத்துவாதி சுருதிக்கு அகண்டைகரசத்துவபரமான வேறு சுருதியோடு விரோதமிருத்தலின் சுவார்த்தபரத்தன்மையின்ருமெனின் ஈசுரத்துவ சுருதிக்கும் அது சமானமேயாம். ஆதலின் மூன்றும் தள்ளத்தக்கதேயாமெனக் கூறுகின்ருர்.

**अतत्परत्वं श्रवणस्य तुल्यं त्रिषु त्रयंतेन विवर्जनीयम् ।**
**अथेष्टमेकं त्रयमेषितव्यं विशेषहेतोरनिरूपणे न ॥ १८७ ॥**

பதவுரை

**त्रिषु** – காரணத்தன்மை சாக்ஷித்தன்மை ஈசுரத்தன்மைகளில்

**श्रवणस्य** – சுருதிக்கு

**अतत्परत्वं तुल्यम्** – சுவார்த்தத்தில் தாற்பரியமின்மை சமானமேயாம்

**तेन त्रयम्** –அதனுல் மூன்றும்

**विवर्जनीयम्** –தள்ளத்தக்கதேயாம்

ஈசுரத்தன்மைக்கு அகண்ட சொரூபமாத்திரத்தன்மை உண்மையின் வேறு சுருதியோடு விரோதமின்றெனின் காரணத்துவாதியும் அவ்வாறே அங்கீகரிக்கத்தக்தாம். அதற்கு சாபேக்ஷத்தன்மை யுண்மையின் நிரபேக்ஷ வஸ்து மாத்திர பரத்தன்மையின்ருமெனின் ஈசுரத்தன்மைக்கும் அஃது சமானமேயாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

अथ एकमिष्टम् - ஈசுவரதன்மை சம்மதமாமெனின்

त्रयं एषितव्यम् - மூன்றும் அங்கீகரிக்கத்தக்கதாம்

विशेषहेतोः अनिरूपेण न - விலக்ஷண ஏதுவை நிரூபிக்க முடியாமையின் (187)

(அ) அப்படியானல் மூன்றுமே வஸ்துவின் சொரூபமாகவும் சத்தியமாகவுமாகட்டுமே என்ருசங்கித்து அவற்றுள் முதலில் ஈசுரனுக்கும் ஈசிதவ்யத்திற்கும் பரஸ்பரம் அபேக்ஷை உண்மையின் ஈசுர ஈசிதவ்யத்தன்மைக்கு மித்தியாத்துவத்தைக் கூறுகின்றவராய் அதற்கு அகண்ட வஸ்து சொரூபத்தன்மை அயுக்தமாமென்னுங் கருத்தினராய்க் கூறுகின்ருர்.

ईशितव्यमनपेक्ष्य नेश्वरो नेशितव्यमपि तद्वदीश्वरम् ।
अन्तरेण घटते ततो मृषा मोहमात्रपरिकल्पितं द्वयम् ॥ १८८ ॥

பதவுரை

ईशितव्यमनपेक्ष्य - சாசனஞ் செய்யத்தக்க பதார்த்தத்தை யபேக்ஷியாமல்

ईश्वरः न घटते - சாசனஞ் செய்பவன் சம்பவிக்கிறதில்லை

ஈசுரத்தன்மை சம்பவிக்கிறதில்லை என்பது பொருள்.

तद्वत् - ஈசுரத்தன்மைபோன்று

ईशितव्यमपि - ஈசிதவ்யமும்

ईश्वरमन्तरेण - ஈசுரனையபேக்ஷியாமல்

न घटते - பொருந்துகிறதில்லை.

ततः - ஆதலால்

मोहमात्रपरिकल्पितम् - பிராந்திமாத்திரத்தாற் கற்பிக்கப் பட்ட

द्वयं मृषा - ஈசுரன் ஈசிதவ்யமென்னுமிரண்டும் மித்தையேயாம்.

### விசேஷவுரை

இரண்டிற்கும் அன்னியோன்னியாதீன நிருபணத்தன்மையால் பரஸ்பர சாபேக்ஷத்தன்மையுண்மையின் இரண்டினது பிரமிதியுமே பொருந்தாமையால் இரண்டும் பிராந்திமாத்திரத்தால் சித்தித்தமையின் அநிர்வசநீயமாமென்பது பொருள். இவ்வாறு பின்னருமறிக. (188)

(அ) இவ்வாறு காரணத்துவமும் அபேக்ஷையோடு கூடியதாதலின் காரியம்போன்று கற்பிதமாம். அஃதெப்படி எனின் காரணத்தன்மைக்கு காரியத்தினும் நியத பூருவ விருத்தித்தன்மையுண்மையானும் காரியத்தன்மைக்கும் காரணத்தினும் நியதமாகப்பின்னிருக்குந் தன்மை யுண்மையானும் பரஸ்பராபேக்ஷயுண்மையால் முன்பின் தன்மைகட்கும் பரஸ்பராபேக்ஷ யுண்மையாலெனக் கூறுகின்ருர்.

कार्यवस्तुविरहय्यकारणं न क्वचिद् घटयितुं क्षमेमहि ।
नापि कारणमपोह्य केवलं कार्यवस्तु परिकल्पयेमहि ॥

### பதவுரை

**कार्यवस्तु विरहय्य** - கடாதி கார்யவஸ்துவினையபேக்ஷியாமல்

**कारणं घटयितुम्** - மண் முதலிய காரணவஸ்துவினை சித்தி செய்வதற்கு

**क्वचिद्** - ஓரிடத்தும்

**न क्षमेमहि** - சமர்த்தரல்லேம்.

**कारणं अपोह्य** - மண் முதலிய காரணவஸ்துவினையபேக்ஷியாமல்

**केवलं कार्यवस्तु अपि** - கேவலம் கடம் முதலிய காரிய வஸ்துவினையும்

**न परिकल्पयेमहि** - கற்பிப்பதில் சமர்த்தரல்லேம்.

காரணவஸ்து - காரணத்துவம். அதாவது அதுவும் வஸ்துவின் சொருபமன்றென்பது கருத்து. (189)

(அ) இப்போது சாக்ஷித்தன்மைக்கும் சாபேக்ஷத்தன்மை உண்மையால் கற்பிதத்தன்மையுண்மையின் வஸ்துவின் சொரூபத்தன்மையின்றுமென்று கருதி கூறுகின்றார்.

साक्ष्यवस्तु परिहृत्य साक्षिता साक्षिणं च परिहृत्य साक्ष्यता।
नेष्यते न घटते च तेन तत् साव्यपेक्ष्यमुभयं परस्परम् ॥

பதவுரை

साक्ष्यवस्तु परिहृत्य - சாக்ஷியமாகிய கடாதிவஸ்துவினைப் பரித்தியாகஞ் செய்து

साक्षिता न इष्यते - சாக்ஷித்தன்மை யங்கீகரிக்கப் படுகின்றதில்லை

साक्षिणं च परिहृत्य -சாக்ஷியைப் பரித்தியாகஞ் செய்தும்

साक्ष्यता न इष्यते -சாக்ஷியத்தன்மை யங்கீகரிக்கப்படுகிறதில்லை.

ஒவ்வொன்றைப் பரித்தியாகஞ்செய்து இரண்டும் சித்தியாதபோது பலிதத்தைக் கூறுகின்றார்.

तेन- அதனால்

परस्परं सव्यपेक्ष्यम् - பரஸ்பராபேக்ஷையோடு கூடிய

तदुभयम् - அவ்விரண்டும் வாஸ்தவமாகப்

न च घटते - பொருந்துகிறதில்லை.

அதனால் கற்பிதமாதலால் சாக்ஷித்தன்மையும் வஸ்துவின் சொரூபமன்றென்பது பொருள். (190)

(அ) அற்றேல் பிரமாதாபிரமேயம் முதலியவற்றிற்கு பரஸ்பராபேக்ஷயிருப்பினும் சத்தியத்தன்மையிருப்பது போன்று சுசுரத்தன்மை முதலியவைகட்கும் அஃது ஏன் கூடாது என்றுசங்கித்து திருஷ்டாந்தம் அசித்தமாமென்று கருதி ஆண்டும் கூறிய நியாயத்தினுற் கற்பிதத் தன்மையினை சாதிக்கின்றார்.

न प्रमेयमपहाय मातृता नापि मातृविरहे प्रमेयता।
मातृमेयरहिता न च प्रमाणरहितं प्रमाफलम् ॥ १९१ ॥

பதவுரை

प्रमेयमपहाय-பிரமேயத்தினைவிட்டு

मातृता न-பிரமாதிருத்தன்மையின்றும்

मातृविरहे-பிரமாதிருத்தன்மையில்லாதபோது

नापि प्रमेयता-பிரமேயத்தன்மையுமின்றும்

मातृमेयरहिता-பிரமாதாவும் பிரமேயமுமின்றி

न च प्रमा பிரமையுமின்றும்

பிரமையில்லாதபோது பிரமாதிருப் பிரமேயங்களுமின்றும் என்பது உம்மையின் பொருள். இங்ஙனம் பிரமைக்கு பிரமாணத்தினபேக்ஷையும் அதற்குப் பிரமையின் அபேக்ஷையும் உளதாதலின் பரஸ்பராபேக்ஷை யுண்மையின் ஈதனைத்தும் கற்பிதமே யென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

प्रमाणरहितम् -பிரமாணமின்றி

न प्रमाफलम् -பிரமையாகிற பயனுமின்றும் (191)

(அ) இங்ஙனம் கருமம் முதலிய காரகங்களைப் பிரேரிப்பது கருத்தாவாதலாலும் கருத்தாவின் வாஞ்சிததமம் கருமமாதலாலும் அவைகட்கும் பரஸ்பராபேக்ஷையுளது இங்ஙனம் கிரியாகாரகங்கட்கும் கிரியைக்கும் அதன் பயனிற்கும் பரஸ்பராபேக்ஷை யுண்மையால் கற்பிதத்தன்மையுண்மையின் சத்தியத்தன்மையின்றுமென்று கருதிக் கூறுகின்றார்:—

कर्तृ कर्म परिहृत्य नेष्यते कर्म कर्तृरहितं न च क्वचित् ।
कर्तृकर्मरहिता न च क्रिया न क्रियाविरहितं क्रियाफलम् ॥ १९२ ॥

பதவுரை

कर्म परिहृत्य-கருமத்தினைவிட்டு

कर्तृ न इष्यते -கருத்தா அங்கீகரிக்கப்படுகின்றதில்லை

कर्तृरहितं-கருத்தாவின்றி

कर्म न च क्वचित् -கருமம் ஓரிடத்துமின்றும்

कर्तृकर्मरहिता - கருத்தாவும் கருமமுமின்றி

न च क्रिया–கிரியையுமின்ரும்

क्रियाविरहितं–கிரியையின்றி

न क्रियाफलं –கிரியையின் பயனுமின்ரும். (192)

(அ) இங்ஙனம் அநுவிருத்த வியாவிருத்த வடிவங்களாயுள்ள சாமானிய விசேஷங்கட்கும் பரஸ்பராபேக்ஷையுண்மையின் மித்தியாத்தன்மையுளதெனக் கூறுகிருர்:—

सामान्यं न विशेषवस्तुविरहे तस्माद्विना तन्न च
स्वातन्त्र्येण घटामुपाश्नुति ततः सापेक्षमेतद्द्वयम् ।
यत् सापेक्षमिहेक्षितं भवति तन्मायामयं स्वप्नवत्
तस्मादीश्वरतादि कल्पितवपुः स्वीकुर्महे न्यायतः ॥१९३॥

பதவுரை

विशेषवस्तु विरहे–விசேஷ பதார்த்தமின்றி

सामान्यम् –சாமானிய பதார்த்தமானது

स्वातन्त्र्येण घटाम्–சுதந்திரமாக பொருத்தத்தை

न उपाश्नुति –அடைகிறதில்லை, இருப்பதில்லை என்பது பொருள்

तस्माद् विना–சாமானியமின்றி

तद् न च उपाश्नुति–விசேஷ வஸ்து சுதந்திரமாக இருப்பதில்லை

ततः एतद्द्वयम् -ஆதலால் இவ்விரண்டும்

सापेक्षम्- பரஸ்பராபேக்ஷையினையுடையது

எது பரஸ்பராபேக்ஷையினையுடையதோ அது மித்தையாமென்பது இருக்குக எது ஏதேனுமொன்றனையபேக்ஷிப்பதாமோ அவ்வெல்லாமுமே மாயிகமாம். இவ்வாருகும்போது பரஸ்பராபேக்ஷையினையுடையது மித்தையாமெனக் கூறவேண்டியதென்னையுள என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்.

यत् सापेक्षम्-எவ்வஸ்து அபேக்ஷையினையுடையதாக

इह ईक्षितं भवति-இவ்வுலகில் காணப்பட்டதோ

तद् मायामयम्-அது கற்பிதமாம்

स्वप्नवद्-சொப்பனம்போல

திரண்ட பொருளை முடிக்கின்றார்

तस्मात्-ஆதலால்

ईश्वरतादि-ஈசுவரத்தன்மை முதலியவற்றை

कल्पितवपुः-கற்பித வடிவமாக

न्यायतः स्वीकुर्महे-நியாயத்தால் அங்கீகரிக்கின்றோம். (193)

(அ) மேலும் பின்னபதார்த்தங்கட்கு ஈசுவர ஈசிதவ்யத்துவமா, அல்லது அபின்னபதார்த்தங்கட்கா அல்லது பின்னாபின்னங்கட்கா. முதற்பக்ஷம் சரியன்று. பின்னமான ஈசுவரனுக்கு சீவர்களோடு சம்பந்தத்தை நிரூபிக்க முடியாமையால் அவனுக்கு அவர்களைப் பிரேரித்தலாதிவடிவசாசனம் பொருந்தாமையானும் அவரோடு அபேதபரமான சுருதிக்கு விரோதம் வருதலானுமென்க. இரண்டாவது பக்ஷமும் சரியன்று. அத்தியந்தம் அபின்னமாயின் ஈஸ்வர ஈசிதவ்யபாவம் பொருந்தாமையின் என்று கருதி மூன்றாவது பக்ஷத்தின் கண்ணும் சொரூபமாக அபின்னர்களான சீவேஸ்வரர்களுக்குப் பேதம் ஔபாதிகமா அல்லது நிருபாதிகமா முதல் பக்ஷத்தின் கண்ணும் அஃது சத்தியமா அல்லது அசத்தியமா. சத்தியத் தன்மை பக்ஷத்தின் கண்ணும் பேதத்திற்கு ஔபாதிகத் தன்மை அபேதத்தோடு அவிரோதத்தின் பொருட்டு சொல்லப்படுகிறதா அல்லது அதன் சத்தியத்தன்மையின் பொருட்டு சொல்லப்படுகிறதா, அந்திமபக்ஷமும் சரியன்று வியாகாத தோஷம் வருதலின் என்று கருதி அவிரோதத்தின் பொருட்டு என்னும் முதற்பக்ஷத்தினை மூன்று பாதத்தால் தூஷிக்கின்றார்.

अभिन्नता भिन्नतया विरुद्धा विभिन्नताऽभिन्नतया तथैव ।
उपाधिभेदे परिकल्पितेऽपि विना पुनस्तं किमुदीरणीयम् ॥

பதவுரை

उपाधिभेदे परिकल्पितेऽपि-உபாதி பேதம் கற்பிக்கப்பட்ட தாயினும்

अभिन्नता-அபேதமானது

भिन्नतया विरुद्धा பேதத்தோடு விரோதமாம்

विभिन्नता-பேதமானது

अभिन्नतया तथैव-அபேதத்தோடு அப்படியே விரோதமாம்

வாஸ்தவமாக அபின்ன வஸ்துவின்கண் சத்தியமாக ஔபாதிகபேதம் யாண்டும் காணப்படாமையின் அதற்கும் அபேதத்தோடு விரோதம் பரிகரிக்கத்தக்கதன்றென்பது பொருள். ஔபாதிகபேதத்திற்கு அசத்தியத்தன்மை பக்ஷத்தின்கண் அதனதீனமான ஈசுவரத்துவ ஈசிதவ்யத்துவம் முதலியவற்றிற்கும் அசத்தியத்தன்மைப் பிராப்தியாதலின் இஷ்டாபத்தியாமென்பதனைக்கருதி பேதத்திற்கு அநௌபாதிகத்தன்மை பக்ஷத்தின்கண் கைமுதிக நியாயத்தால் அபேதத்தோடு விரோதத்தைக் கூறுகின்றவராய் அவைகட்கு ஓரிடத்தில் அசம்பவத்தினைக் கூறுகின்றார்.

तं पुनः विना-உபாதியின்றி

किम् उदीरणीयम्-சொல்லத்தக்கதென்னையுள

விசேஷவுரை

சோபாதிகபேதத்திற்கும் அபேதத்தோடு விரோதமுண்டாகும்போது நிருபாதிகபேதத்திற்கு அபேதத்தோடு விரோதமாமென்று கூறவேண்டியதென்னை. ஆதலால் இந்தப் பக்ஷமும் சம்பவிக்கிறதில்லையென்பது பொருள். (194)

(அ) அற்றேல் இயற்கையாக சீதளமான ஜலத்தின் கண்ணும் அக்கினியின் சம்பந்தத்தால் உஷ்ணம் சத்தியமாகவே காணப்பட்டுள்ளது. அச்சலத்தாலும் தாகாதி காணப்படுதலின். இங்ஙனம் ஔபாதிகபேதமும் சத்தியமாக ஏனாகாது என்றாசங்கித்துத் திருஷ்டாந்தத்தின் சம்மதியின்மையாற் பரிகரிக்கின்றார்:—

स्वभावतो यन्मिथुनं विरुद्धं न तन्निमित्तान्तरतः कदाचित् ।
उपैति सख्यं परमार्थवृत्त्या भ्रमादलभ्यं न च किंचिदस्ति ॥ १९५ ॥

பதவுரை

स्वभावतः-இயற்கையாகவே

यत् विरुद्धं मिथुनम्-யாதொரு விருத்தமான சம்சர்க்க முண்டோ

तत् -அது

निमित्तान्तरतः-ஏதேனும் ஒருபாதியினுல்

कदाचित्- ஓர்போதும்

परमार्थवृत्त्या- சத்தியமாக

सख्यं न उपैति-சாமானுதிகரண்யத்தினையடைகிறதில்லை

திருஷ்டாந்தத்திலும் ஜலத்தின்கண்ணுள்ள அக்கினியின் உஷ்ணத்திற்கே தாகாதியின் ஏதுத்தன்மை சம்பவிக்கின்றது ஜலத்தில் சத்திய உஷ்ணம் முதலியவற்றில் பிரமாணமின்மையின் ஆண்டு சீதோஷ்ணங்கட்கு சாமானுதிகரண்யமின்றுமென்பது பொருள் அப்படியானுல் ஜலத்தின் கண்ணுள்ள தாக உஷ்ணத்தின் பிரதீதி யெங்ஙனமாம். அதன்கண்ணுள்ள சீதளமும் ஏன் பிரதீதியாகின்றதில்லை யென்னுமிடத்துக் கூறுகின்ருர்.

भ्रमात् अलभ्यम् பிராந்தியினுல் அடையத்தகாத வஸ்து

किंचित् न च अस्ति-யாதொன்றுமின்ரும்

விசேஷவுரை

இயற்கையாகவே உஷ்ண சுபாவமுள்ள அக்கினி வடிவ உபாதி சம்பந்தத்தால் படிகத்தில் செந்நிறம் போன்று பிராந்தியினுலேயே ஜலாதியின்கண் உஷ்ணம் முதலியவற்றின் பிரதீதியாம். அதன் சீதளத்திற்கும் படிகத்தின் வெண்ணிறத்திற்குப் போன்று உபாதியினுல் அபிபவமாயிருத்தலின் அப்பிரதீதியும் பொருந்துகின்றது. அப்படிக்கன்றேல் ஜலத்தின் சம்பந்தமான உஷ்ண சீதங்களின் உற்பத்தி நாசங்கட்கு நல்ல காரணத்தை நிருபிக்க முடியாமையினுல் அவைகளின் பிரதீதியும் அப்பிரதீதியும் உண்டாகாது என்பது பொருள். (195)

(அ) அற்றேல் உனது மதத்திற்போன்று பேதாபேதங்கட்கு சேர்ந்திருக்குந்தன்மை பரமதத்திலும் ஏன் கூடாது என்ருசங்கித்து எமது மதத்தின்கண் வாஸ்தவாபேதமுள தாயினும் பேதம் அநிர்வசநீயாவித்தையின் அதீனமாதலால் மித்தையாமாதலின் அவைகட்கு சமசத்தையையுடையதாந் தன்மையின்மையின் விரோதமின்ருமாதலின் சுத்தியின்கண் ரஜதத்திற்கும் அதனபாவத்திற்கும்போன்று சேர்ந்திருக்குந் தன்மை பொருந்துகின்றது, இங்ஙனம் உனது மதத்தின் கண்ணும் ஜீவேஸ்வரர்கட்கு அநிர்வசநீயாஞ்ஞானமாகிய உபாதியினையுடையது பேதமாம் இயற்கையாகவுள்ளது அபேதமாம் என அங்கீகாரமாயின் அப்போது ஆமென்று கூறுகின்ருேம். ஆனல் அஞ்ஞானத்தினும் வேருன சத்திய உபாதியினையுடையது பேதம் அது வாஸ்தவமாமென அங்கீகரிக்கிருே அஃது சம்பவிக்கிறதில்லை. சமசத்தையினை யுடைய விருத்தபதார்த்தங்கட்கு ஓரிடத்தில் ஓர்காலத்தில் சேர்ந்திருக்குந்தன்மை பொருந்தாமையின் அப்பதார்த்தங் களினுள்ளடங்கிய உபாதியே சம்பவியாமையின் எனத் திருஷ்டாந்தத்தாற் கூறுகின்ருர் :—

न रविशार्वरसख्यकृदीक्ष्यते जगति कश्चिदुपाधिरमोहतः ।
यदि भवेत् स भवेत् भवतो मतः स न भवेत् यदि सोऽपि न संभवेत् ॥

பதவுரை

जगति—இவ்வுலகின்கண்

रविशार्वरसख्यकृत्—சூரியனுக்கும் அந்தகாரத்திற்கும் சேர்க்கையைச் செய்கின்ற

कश्चिदुपाधिः—யாதோருபாதியும்

अमोहतः- மோகத்தினும் வேருக

न ईक्ष्यते—காணப்படுகிறதில்லை

சூரியனுக்கும் அந்தகாரத்திற்கும் ஸாஹித்ய (சேர்க்கை) ஏதுவான உபாதி காணப்படாமையினுலேயே இல்லாதொழிக. அபின்னவஸ்துவின்கண் வாஸ்தவமாக பேதத்தைச்செய்கின்ற உபாதி ஏன் கூடாதென்ருசங்கித்து அதுவும் ஓரிடத்தும் காணப் படாமையின் அதன் சமானயோகக்ஷேமமாமெனக்கூறுகின்ருர் :

स यदि भवेत्-சூரியனுக்கும் அந்தகாரத்திற்கும் அவிரோதம் சம்பவிக்குமாயின்

भवतो मतः- உமது அபிமதமான பேதாபேதங்கட்கு அவிரோதமும்

भवेत्-சம்பவிக்கும்

स यदि न भवेत्-அஃது சம்பவியாதாயின்

सोऽपि न संभवेत्-உமது அபிமதமும் சம்பவியாது (196)

(அ) ஆன்ம வஸ்துவின்கண் பொருத்தமற்ற மோகமும் பேதத்தை யெப்படிப் பொருத்துவிக்குமென்றுசங்கித்து காணப் பட்டதன்கண் பொருந்தாமையின்றுமென்னும் நியாயத்தாற் பரிகரிக்கின்றார் :—

खमपि खादति खण्डितमीक्षते निजशिरो नयनेन करार्पितम् ।
किमपि दुर्घटमस्य न विद्यते यदि विमूढमतिर्भवति स्वयम् ॥ १९७ ॥

பதவுரை

खमपि खादति- சொற்பனம் உன்மத்தை முதலிய அவஸ்தைகளில் ஆகாசத்தையும் புஜிக்கின்றான்.

निजशिरः खण्डितम्-தன்னுடைய தலை கழுத்தினின்றும் பிரிக்கப்பட்டதாய்

करार्पितम्-கரத்தின்கண் வைக்கப்பட்டதாய்

नयनेन ईक्षते-நேத்திரத்தாற் காண்கின்றான்

இவ்வாறு சாக்கிராவஸ்தையின் கண்ணும் ஆகாசத்தில் நீலநிறம் சந்திரனிடத்தில் ஒட்டையளவு முதலியவை வாஸ்தவமாகப் பொருந்தாதாயினும் மோகத்தாலேயே பொருத்தமா மென்று கருதிக் கூறுகின்றார்

विमूढमतिः-மோகத்தோடு கூடிய புத்தியுடையவனாக

स्वयं यदि भवति-தான் ஆவனாயின்

अस्य दुर्घटम्-இவனுக்குப் பொருந்தாதது

किमपि न विद्यते-யாதொன்றுமின்றாம் (197)

(அ) இங்ஙனம் ஈஸ்வர ஈசிதவ்ய பேதத்திற்கு அவித்தையினதீனத்தன்மையால் மித்தியாத்தன்மையுண்மையின் அதன் அதீனமான ஈசுவரத்துவாதிகமும் அவ்வாறே யாமென சொருபமாக நிருவிசேஷ ஆன்மதத்துவம் கூறப்பட்டது. இப்போது "எதினின்றும் இப்பூதங்களுண்டாகின்றனவோ" என்பது முதலிய சுருதிகளினுல் ஜகத்தின் காரணத்தன்மை யறியப் படுதலின் நிருவிசேஷத் தன்மை ஆன்மாவிற்கு எங்ஙனமா மென்று சங்கித்து காரணத்துவாதியினையும் இனிக் கூறப்படும் பிரகாரத்தால் நிருபிக்கமுடியாமையின் ஆவித்தியக (அவித்தையினுற்கற்பித) மாதலாலும் அச்சுருதிக்கும் அதன் கண் தாற்பரியமின்மையினுலும் சொருபமாக வஸ்து கூடஸ்த ஏகரசமாமெனக் கூறுகின்ருர்:—

इतश्च निर्भेदकमात्मतत्त्वं निरूपणे कारणकार्यतादेः ।
अनादिमायैकनिबन्धनत्वादसम्भवादस्य तु वस्तुवृत्त्या ॥ १९८ ॥

பதவுரை

इतश्च-இதனுலும்

आत्मतत्त्वं निर्भेदकम्-ஆன்ம தத்துவம் நிருவிசேஷமாம்
இதனுலுமென்ற ஏதுவினையே விஸ்தரிக்கின்ருர்

कारणकार्यतादेः-காரண காரியத்தன்மை முதலியவற்றை

निरूपणे-விசாரிக்கும்போது

अनादिमायैक निबन्धनत्वात्-அநாதியநிர்வசநீய அஞ்ஞான மாத்திரத்தாற் கற்பிதத்தன்மை நிச்சயம் வருதலால்

अस्य-காரியகாரணம் முதலியவை

वस्तुवृत्त्या-வாஸ்தவமாக

असम्भवात्तु-சம்பவியாமையினுலேயே

முதலிய சத்தத்தால் காரியகாரணத்தின் விசேஷமான உபாதான உபாதேயம் முதலியவற்றைக்கொள்க அஞ்ஞான மாத்திர கற்பிதத் தன்மையில் ஏது சம்பவியாமையென்பது.

(அ) அவற்றுள் காரியத்தன்மையை நிரூபிக்க முடியாமையின் அதனால் நிரூபிக்கப்பட்ட காரணத்தன்மையும் துர்நிருபமாமென்று கருதுகின்றவராய் அசத்திற்கா சத்திற்கா காரியத்தன்மையென்று விகற்பித்து முதலில் அசத்துகாரியமன்றென்று ஆரம்பித்து சத்திற்கும் காரியத்தன்மை அயுக்தமாமென்பது பரியந்தமானக் கிரந்தத்தால் தூஷிக்கின்றார்:—

असन्न कार्यं गगनप्रसूनवन्ध्यासुतादेः करणाप्रसिद्धेः ।
न प्रागसत् कार्यमिति प्रवादः प्रशस्यते तस्य विरोधहेतोः ॥ १९९ ॥

பதவுரை

असत् कार्यं न-அசத்து காரியமன்றும்

गगन प्रसूनवन्ध्यासुतादेः —ஆகாசத்தாமரை மலடிமைந்தன் முதலியவற்றிற்கு

करणाप्रसिद्धेः - உற்பத்தியாவது உற்பாதகமாவது பிரசித்தியின்மையின்

அற்றேல் உற்பத்திக்கு முன்பு அசத்தாகிய காரியத்திற்கும் அபாவப் பிரதியோகித்தன்மை மலடிமைந்தன் முதலானவற்றைப் பார்க்கிலும் விசேஷமாம். அதனால் அதற்கு உற்பத்தி முதலியவை பொருந்துகின்றது எனின் அற்றன்று சொரூப சூனியமான அசத்ின்கண் தருமவடிவ அல்லது சுவசொரூப வடிவசத்தினது அபாவப்பிரதியோகித் தன்மையும் சம்பவியாமையின். அதற்கும் (அபாவப் பிரதியோகித் தன்மைக்கும்) அசத்துவத்தையங்கீகரிக்கின் அசத்தாகிய காரியத்திற்கு அவ்விசேஷத்தால விசேஷத்தையுடையதாந்தன்மை சித்தியாது. அப்படிக்கன்றேல் மலடிமைந்தன் முதலானவற்றிற்கும் அவ்விசேஷத்தால் அதனையுடையதாந்தன்மைப் பிராப்தியாம். அப்படியானால் அபாவமே அசத்தாகிய காரியத்திற்கு விசேஷமாமெனின் அற்றன்று அதற்கு அசத்தோடு சமபந்தமின்மையினால் விசேஷத்தன்மை பொருந்தாமையின், அபாவத்தின் சொரூபமே அதன் சம்பந்தமாமென்று சொல்லற்க. அவ்வாறாயின் மலடிமைந்தன் முதலானவற்றிற்கும் அவ்விசேஷம் உண்டாம். அபாவ மாத்திரத்திற்கும் அவ்வடிவ சம்பந்தத்திற்கும் சருவாசத்தோடு சாதாரணத்தன்மையுண்மையின். மேலும் அசத்தாகிய காரியத்திற்கு அபாவமே

மலடிமைந்தன் முதலானவற்றிற்குப் போன்று சம்பவியாது அது அதற்கு விசேஷ மெங்ஙனமாம். என்பது கருத்து.

அற்றேல் மலடிமைந்தன் முதலானவை அத்யந்தம் அசத் தானதால் அதற்கு உற்பத்தியாவது அபாவமாவது இல்லா தொழிக. காரியத்திற்கோ உற்பத்திக்கு முன்பே அசத்துத் தன்மையுண்மையின் அத்தியந்த அசத்துத் தன்மையின்மை யின் அதற்கு உற்பத்தி முதலியவை பொருத்தமாமெனின் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்.

कार्यं प्राग् असत्-காரியமானது உற்பத்திக்கு முன்பு அசத்தாம்

इति प्रवादः- என்னுங்கூற்று

न प्रशस्यते-சிறப்புடையதன்றாம்

तस्य विरोधहेतोः -அசத்திற்கு முன்பு என்னும் விசேஷண சம்பந்தம் யுக்திக்கு விரோதமாதலின்

விசேஷவுரை

ஆண்டுக்காரியத்திற்கு சத்துவாசத்துவங்கள் தருமமா அல்லது சொருபமா. முதற்பக்ஷத்தின்கண்ணும் அவைகள் பின்னதருமிகளின் தருமங்களா அல்லது ஒரே தருமியின் தருமங்களா. முதற்பக்ஷத்தில் அசத்திற்குக் காரியத் தன்மையின் சித்தியின்றாம். உற்பன்னமான சத்தாகிய காரியத் திற்கு அதனினும் அன்னியத் தன்மையுண்மையால் காரியத் திற்கும் உற்பத்திக்கு முன்பு அசத்துவம் சித்தியாது. அப்போது அசத்தாகிய அதற்கு அதனினும் அன்னியத்தன்மையுண்மை யால். இரண்டாவது பக்ஷமும் சரியன்று. தருமியின்றி ஓர் போதைய தருமம் சம்பவியாமையால் சத்துவகாலத்தில் அதன் தருமியாகிய காரியத்தின் சத்துவம் ஆவசியகமாதலால் அதன் கண் அதன் விரோதியாகிய அசத்துவம் பொருந்தாமையின் சற்காரியவாதம் பிராப்தியாமாதலின். முதற்பக்ஷத்திலுள்ள இரண்டாவது விகற்பமும் சரியன்று. பின்னமும் விருத்தமு மான சத்துவாசத்துவங்களுக்கு அவிருத்தமும் அபின்னமுமான வஸ்துவின் சொருபத்தன்மை பொருந்தாமையின், சத்துவா சத்துவங்கட்கு பின்னவஸ்துவின் சொருபத்தன்மையை யங்கீ கரிக்கினே அசத்திற்குக் காரியத்தன்மையின் சித்தியின்றாம்

என்பதாதியாற் கூறப்பட்ட தோஷம் பரிகரிக்கத் தகாதாம். ஆதலால் அசத்திற்குக் காலாந்தரத்தில் சத்துவம் பொருந்தாமையின் எது அசத்தோ அது எப்போதும் அசத்தேயாம் ஆதலின் அசத்திற்குக் காரியத்தன்மையின் சம்பாவனையின்றாமென்பதுபொருள். (199)

(அ) மேலும் அசத்தாகிய காரியத்திற்கு உற்பத்திக்கு முன்பு அசத்து என முற்காலத்தால் விசேஷிக்கப்பட்ட தன்மையே பொருந்தாது. எதனால் அது அத்தியந்தாசத்தினின்றும் வியாவர்தியமாம் (பிரிக்கத்தக்கதாகும்) சொரூப சூனியமான அசத்திற்கு ஓர் விசேஷணத்தோடு சம்பந்தம் பொருந்துகின்றதில்லை யல்லவா. அங்கீகரிக்கப் படுகின்றது மில்லை. அன்றேல் அதாவது சொரூபத்தை யங்கீகரிக்கின் சொரூப சூனியத்தன்மைக்கு வியாகாதம் வரும். பிரத்தியக்ஷாதிப்பிரமாணங்களுக்குள் ஏதேனும் ஒன்றற்கு அதனை சாதிக்குந்தன்மை பொருந்தாமையினாலும் அதனை சாதிக்கின்ற அன்னியப் பிரமாணத்திற்குப் பிராப்திவருதலினாலும் என்று கருதி அசத்திற்கு விசேஷண மாத்திரத்தின் அசம்பவத்தைத் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்:—

विशेषणानामसति प्रवृत्तिर्न दृश्यते क्वापि न युज्यते च ।
युधिष्ठिरात्प्रागभवन्नरेन्द्रो वन्ध्यासुतः शूर इतीह यद्वत् ॥ २०० ॥

பதவுரை

असति- அசத்பதார்த்தத்தின்கண்

विशेषणानां प्रवृत्तिः-விசேஷணங்களின் பிரவிருத்தி

क्वापि न दृश्यते-ஓரிடத்துங் காணப்படவில்லை

न युज्यते च-பொருத்தமுமன்று

युधिष्ठिरात्प्राक्- தருமபுத்திரராகிய யுதிஷ்டிரருக்கு முன்பு

वन्ध्यासुतः नरेन्द्रः-மலடிமகன் அரசனாக

अभवत्-இருந்தான்

शूर इति-சூரனாகவுமிருந்தானென்பது

इह यद्वत् -இவ்வுலகில் எப்படி அப்பிரசித்தமோ அது போன்று (200)

(அ) இங்ஙனம் அசத்திற்குக் காரியத்தன்மையின் அசம்பவத்தைக்கூறி அதனுற்பத்திக்கும் அசம்பவத்தைக் கூறுகின்றூர் இரண்டு சுலோகத்தால்:—

उत्पत्तिरप्यस्य निरूप्यमाणा न काचिदागच्छति युक्तिमार्गम् ।
स्वसत्तया स्वैः समवायिकारणैरपीह या स्यात् समवायिताऽस्य ॥

असज्जनिः सेत्युपवर्ण्यमानं सुदुर्घटं न ह्यसतो युजैभिः ।
सदेव सद्भिः सह सर्ववस्तु सङ्गच्छते न त्वसदेव सद्भिः ॥ २०२ ॥

பதவுரை

अस्य उत्पत्तिः-அசத்திற்கு உற்பத்தி

निरूप्यमाणा-விசாரிக்கப்படுகின்றதாகி அதாவது அசத் காரியவாதிகளால் அநேகப் பிரகாரமாக சொல்லப்படுகின்றதாகி

काचिदपि-யாதொன்றும்

युक्तिमार्गम्-விசார மார்க்கத்தினை

न आगच्छति-அடைகின்றதில்லை. யுக்தியை சகிக்கின்றதில்லையென்பது பொருள்

அவர்களால் சொல்லப்படுகின்ற அதனை யநுவாதஞ்செய்து அதன் அசம்பவத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றூர்.

अस्य स्वसत्तया – அசத்தாகிய காரியத்திற்குத் தனது சத்தையோடு

या समवायिता-யாதொரு சமவாயித்தன்மை

स्यात् - உண்டோ காரியத்தில் சத்தா ஜாதியின் சமவாயமென்பது பொருள்

अपि-அல்லது

इह-காரணங்களில்

स्वैः समवायिकारणैः-தனது சமவாயி காரணங்களோடுகூட

या समवायिता- யாதொரு சமவாயித்தன்மையுண்டோ தனது சமவாயி காரண சமவாயித்தன்மை யென்பது பொருள்

सा-அது

असज्जनिः इति-அசத்திற்கு உற்பத்தியாமென்று

उपवर्ण्यमानम्-வருணிக்கப்படுகின்றது

सुदुर्घटम्- பொருத்தமன்று அசத்தின் ஜன்மம் அத்யந்தம் அசம்பவமாமென்பது பொருள்

அதன் கண் ஏதுவைக் கூறுகின்றார்.

असतः --உற்பத்திக்கு முன்பு அசத்தாயும் எதனோடும் சம்பந்தா யோக்கியமாயுமுள்ள பதார்த்தத்திற்கு

एभिः-சத்தா ஜாதி முதலியவற்றோடு

न हि युज्ञा-சம்பந்தம் பொருத்தமன்று

அசத்திற்கு சம்பந்தாயோக்கியத் தன்மையில் யுத்தியினைக் கூறுகின்றார்.

सर्ववस्तु-சருவ பதார்த்தங்களும்

सदेव-சத்தாயிருந்தே

सद्भिः सह-சத்பதார்த்தங்களோடு

सङ्गच्छते-சம்பந்திக்கின்றன

असदेव- அசத்தாயிருந்து

सद्भिः न तु - சத்வஸ்துக்களோடு சம்பந்திக்கின்றதில்லை

விசேஷவுரை

சம்பந்தத்திற்கு சத்தாகிய சம்பந்தித்துவயங்களின் அதீனத்தன்மை நியமமாதலின் அதற்கு அசத்தின் அதீனத் தன்மை பொருந்தாமையின் அஃது (சம்பந்தம்) சத்பதார்த்தங் கட்கே பொருத்தமாம் சத்திற்கும் அசத்திற்கும் அன்றாமென்பது பொருள். (201-202)

(அ) அற்றேல் உனது மதத்தில் சத்தாகிய பிரம்மத்திற்கு அசங்கத்தன்மை யுண்மையால் ஒன்றேடும் சம்பந்தமில்லாதது போன்று அதனை (பிரம்மத்தை) யுடைய சடவஸ்து கட்கும் சத்துவமின்மையால் சத்தாகிய வஸ்துவே சத்வஸ்துக்களோடு சம்பந்திக்கின்றது என்று கூறப்பட்டது எங்ஙனம் பொருந்து மென்ருசங்கித்து பிறனது மதத்தால் இது கூறப்பட்டதா மென்று கருதி அவனது மதத்தில் சம்பந்திக்கு சத்துவம் நியமமா மென்பதைக் காண்பிக்கின்றவராய் அஃது (சத்துவம்) இன்றியகாரியத்திற்கு சம்பந்தா சம்பவத்தைக் கூறுகின்ருர்.

सती हि सत्ताऽस्य पटस्य दृष्टा तथैव सन्तः पटतन्तवोऽपि ।
तया च तैश्चास्य कथं पटस्य सम्बन्धिता स्यादसतो वदैतत् ॥ २०३ ॥

பதவுரை

अस्य पटस्य-பிரத்தியக்ஷமாயுள்ள இந்த படத்திற்கு
सत्ता-யாதொரு சத்தையுண்டோ அது
सती हि दृष्टा-சத்தாகவே காணப்பட்டுளது
तथैव-அப்படியே
पटतन्तवोऽपि-படத்தின் ஆசிரயமாயுள்ள தந்துக்களும்
सन्तः-சத்தாகவே காணப்பட்டன இவ்வாருகும்போது
तया च तैश्च-சத்தையோடும் தந்துக்களோடும்
असतः अस्य पटस्य-அசத்தாகிய இந்த படத்திற்கு
कथं सम्बन्धिता स्यात्-எப்படி சம்பந்தமுண்டாம்
एतत् वद-உத்தரங்கூறுவாயாக (203)

(அ) அப்படியாஞல் உற்பத்தியினுல் திதியினையடைந்த காரியத்திற்குக் காரணங்களோடும் சத்தையோடும் சம்பந்த முண்டாகட்டுமே என்ருசங்கித்து அதன் சம்பந்தமே அதனுற்பத்தியாமென்று உன்ஞல் கூறப்பட்டமையின் ஆன்மாசிரய தோஷத்தினடைவு உண்டாமாதலின் உற்பத்தியே பொருத்த மற்றதாமெனக் கூறுகின்ருர் :—

स्वकारणैस्तन्तुभिरेवमस्य स्वसत्तया चान्वय एव जन्म ।
तवेष्टमेवं सति जन्म तस्य न शक्यते वर्णयितुं पटस्य ॥ २०४ ॥

பதவுரை

**स्वकारणैस्तन्तुभिः**-தனது காரணமான தந்துக்களோடும்

**एवं स्वसत्तया च**-அப்படியே தனது சத்தையோடும்

**अन्वय एव**-சம்பந்தமே

**अस्य जन्म**-படத்தின் உற்பத்தியாம் என்பது

**तव इष्टम्**-உனது சம்மதமாம்

**एवं सति**- இவ்வாருகும்போது

**तस्य पटस्य** அந்தப் படத்தின்

**जन्म**-உற்பத்தியினை

**वर्णयितुं न शक्यते**·வருணித்தற்கு ஆற்றலின்ரும். (204)

(அ) அற்றேல் காரியத்திற்கு உற்பத்திக்கு முன்பு அசத்துவ முளதாயினும் உற்பத்திகாலத்தில் சத்துவமிருத்தலின் அப்போதே சத்தைமுதலியவற்ருேடு சம்பந்தித்தலால் சத் வஸ்துவே சத்வஸ்துக்களோடு சம்பந்தத்தை யடைகின்றது. என்னும் நியமம் ஈண்டும் பொருந்துகின்றதென்ருசங்கித்து அவ்வசத்தின் உற்பத்தியென்பது உற்பத்தி க்ஷணத்தில் அதன் சத்துவமா அல்லது சத்தை முதலியவற்ருேடு அன்வயமேயா. அவ்விரண்டுமெனின் அப்படியாளுல் சத்தை முதலியவற்ருேடு அன்வயமாகும் க்ஷணத்தில் சத்தை முதலியவற்ருேடு அன்வய முடையதற்கே சத்தை முதலியவற்ருேடு அன்வயமாமென்று கூறப்பட்டதாகும். இது பொருத்தமன்று. அசத்தின்கண் பொருத்தமற்ற உற்பத்தி முதலியவற்றிற்கே தன்னை யுபபாத னஞ் செய்யுந் தன்மை பொருந்தாமையின், என்று கருதி அசத் திற்கு முன்பு கூறப்பட்ட சத்தின் அன்வயாயோக்கியத்தன்மை யினை உதாகரணசகிதமாக நினைப்பூட்டுகின்ருர்.

तदन्वयात्प्रागसतः कथंस्यात्तदन्वयो न ह्यसदन्वयाय ।
सता समर्थं नहि वन्ध्यया तत्पुत्रः समन्वेति कदाचिदत्र ॥ २०५ ॥

பதவுரை

तदन्वयात् प्राक् - சத்தையோடும் காரணங்களோடும் சம்பந்தித்தற்கு முன்பு

असतः - அசத்தாகிய காரியத்திற்கு

तदन्वयः - அவற்றேடு சம்பந்தம்

कथं स्यात् - எப்படியுண்டாம்

असत् सता - அசத்தானது சத்வஸ்துவோடு

अन्वयाय - சம்பந்தித்தற் பொருட்டு

न हि समर्थम् - யோக்கியமன்றுதலின்

अत्र वन्ध्यया - இவ்வுலகின் கண் மலடியோடு

तत्पुत्रः - அவளுடைய புத்ரன்

कदाचित् न हि समन्वेति - ஓர்போதும் சம்பந்திக்கிறதில்லை.

விசேஷவுரை

மேலும் காரியத்திற்கு கேவலம் சத்தை முதலியவற்றின் சமவாயமே உற்பத்தியாமென்பது சரியன்று. அது எப்போதுமிருத்தலினுல் அதன்பொருட்டுள்ள காரணத்திற்கு வியர்த்தத் தன்மைப் பிராப்தியாதலின், காரியத்தாலுபலக்ஷிக்கப்பட்ட அவற்றின் சமவாயம் உற்பத்தியாமென்பது சரியன்று. கூறிய தோஷத்தைப் பரிகரிக்கமுடியாமையின், ஆதலால் காரிய விசிஷ்டஸத்தை முதலியவற்றின் சம்பந்தமே காரியத்தினுற்பத்தியாமென்று சொல்லத்தக்கது. அதுவும் அசத்தாகிய காரியத்திற்குப் பொருந்தாது. ஆகந்துக (இடையிற்றேன்றிய) விசேஷண விசிஷ்டத்திற்கு விசேஷண சாத்தியத்தன்மையுண்மையால் முன்பு அசத்தாகிய காரியத்திற்கு அதனை சாதிக்குந்தன்மை பொருந்தாமையின். ஆதலால் கூறப்பெற்ற உற்பத்தியின் லக்ஷணம் அசம்பவமாமென்பது கருத்து. அன்வயம்=சம்பந்தம். (205)

(அ) அற்றேல் படத்திற்கு முதற்கணத்தின் சம்பந்தமே உற்பத்தியாம் சத்தை முதலியவற்றின் சம்பந்தம் உற்பத்தியன்றும் அது இரண்டாவது முதலிய க்ஷணத்தின் கண்ணுமிருத்தலின் என்று நவீன தார்க்கிகர் கூறுகின்றனர் அவரை மறுக்கின்றூர்.

न च किंचिदन्यदसतो वदितुं पटवस्तुनोऽत्र शकनीयमितः ।
जनिशब्दवाच्यमनवद्यतया तदयुक्तमेवमसदुद्भवनम् ॥ २०६ ॥

பதவுரை

असतः पटवस्तुनः-அசத்தாகிய படவஸ்துவிற்கு
जनिशब्दवाच्यम्-உற்பத்தி
इतः अन्यत् किंचित् -கூறியதினின்றும் வேறு பிரகாரம்
अत्र -வைசேஷிகமதத்தின்கண்
अनवद्यतया वदितुम् -நிர்தோஷமாகக் கூறுவதற்கு
न च शकनीयम् -யோக்கியமன்றும்

அசத்திற்கு சத்தை முதலியவற்றோடு கூறிய பிரகாரத்தால் சம்பந்தம் சம்பவியாதது போன்று முதற்க்ஷணத்தோடும் சம்பந்தம் சம்பவியாது. மேலும் அசத்தாகிய காரியத்திற்கு முதற்க்ஷணத்தோடு சம்யோக சம்பந்தம் சம்பவிக்கிறதில்லை, அதற்கு சம்யோகி ஏது வாதலின், அசத்திற்கு அதன் ஏதுத் தன்மை பொருந்தாமையின். சமவாய சம்பந்தமும் சம்பவியாது, இதனை வாதியும் அங்கீகரியாமையின். சொரூப ஸம்பந்தமும் சம்பவியாது. அசத்திற்கு நிஸ்ஸொரூபத்தன்மை யுண்மையால் கூரிய ரீதியால் சொரூபம் சம்பவியாமையின் சொரூப வடிவ சம்பந்தமும் சம்பவியாமையின். வாதிகளால் நசித்த வஸ்துவிற்கும் நசியாத வஸ்துவிற்கும் சொரூப சம்பந்தத்தை யங்கீகரித்தமையின் இரண்டாவது முதலிய க்ஷணத்திலுள்ள காரியவடிவமும் முதலாவது க்ஷணத்தோடு சம்பந்தமாம் ஆகவே அப்போதும் அதாவது முதலாவது க்ஷணத்திலும் அதனுற்பத்தியின் பிராப்தியாமாதலினுலும். சொரூப சம்பந்தத்தை வேறிடத்தும் நிருபிக்கக் கூடாமையினுலும். மேலும் சருவக்ஷணமும் தனது பூருவக்ஷணத்தின் உத்தரகாலத்திலிருப்பதால் அதற்கு முதலாந்தன்மையும் சம்பவியாது. அதனதன் உற்பத்தி க்ஷணமே அதன் முதற்க்ஷணமாம் என்று சொல்லற்க அன்னியோன்னியா சிரயம் வருதலின்

அற்றேல் தனது சமான காலத்திலுள்ள பதார்த்தத்தினைப் பிரதியோகியாகவுடைய துவம்சத்தின் அநாதார

க்ஷணமே காரியத்தின் முதற்க்ஷணமாம் எனின் அற்றன்று தான் என்னுஞ்சத்தத்தால் முதற்க்ஷணத்தால் வரைந்து கொள்ளப்பட்ட காரியத்தைக் கூறிடின் அன்னியோன்னியாசிரயதோஷம் பிராப்தியாமாதலின், அவ்வக்காரிய மாத்திரத்தைக் கூறிடினும் இரண்டாவது முதலிய க்ஷணத்திலுள்ளகாரியத்திற்கும் தான் என்னுஞ்சத்தார்த்தத்தன்மையாம். அதனுல் இரண்டாவது முதலிய க்ஷணத்திலுள்ள காரியத்தின் சமான காலத்திலுள்ள பதார்த்தங்களைப் பிரதியோகியாகவுடைய துவம்ஸங்கள் மூன்ருவது முதலிய க்ஷணங்களிலேயே சம்பவிக்கின்றன அவற்றினநாதாரத்தன்மை இரண்டாவது முதலிய க்ஷணங்களிலும் இருக்கின்றது ஆதலின் அவைகளும் முதற்க்ஷணங்களாக ஆகும் அதனுல் உற்பத்தியின் லக்ஷணத்தில் முதல் என்னும் விசேஷணம் வியர்த்தமாம் இரண்டாவது முதலிய க்ஷண சம்பந்தங்களில் அதிவியாப்தியுமாம். மேலும் தனது சமானகாலத்திலுள்ள என்பது முதலிய லக்ஷணத்தில் அத்தகைய யாதேனுமோர் திரவியத்தைப் பிரதியோகியாகவுடைய துவம்சத்தின் அநாதாரத்தன்மை விவக்ஷிதமா அல்லது தனது சமான காலத்திலுள்ள சருவ வஸ்துக்களையும் பிரதியோகியாகவுடைய துவம்ஸத்தின் அநாதாரத்தன்மை விவக்ஷிதமா. முதற்பக்ஷம் சரியன்று. படத்தின் சமானகாலத்திலுள்ள ஓர் வஸ்துவிற்கு மாசம் முதலியவற்றிற்குப்பின்பு த்வம்ஸம் சம்பவித்தலால் அதன் அநாதாரத்தன்மை படசம்பந்தி இரண்டாவது முதலிய க்ஷணங்களிலுமிருக்கின்றது ஆதலின் ஆண்டு அதிவியாப்தியாம். இரண்டாவது பக்ஷத்தில் சருவ என்பது வஸ்துவிற்கு விசேஷணமா அல்லது துவம்ஸத்திற்கு விசேஷணமா. முதற்பக்ஷம் சரியன்று பட சமான காலத்திள்ள ஆகாசம் முதலிய சருவ வஸ்துக்களுக்கும் வாதியின் மதத்தில் துவம்ஸ மின்மையால் சருவவஸ்து என்பதனேடு கூடிய லக்ஷணம் அசம்பவமாமாதலின், இரண்டாவது பக்ஷமும் சரியன்று படத்தின் சமான காலத்திலுள்ள பத்து பனிரெண்டு முதலிய வஸ்துகட்கு காலாந்தரத்திலுண்டாகின்ற எவ்வளவு த்வம்ஸங்களுண்டோ அவற்றின் அநாதாரத்தன்மை படசம்பந்தி இரண்டாவது முதலிய க்ஷணங்களிலுமிருக்கின்றது ஆதலின் கூறிய தோஷம் முன்போலவேயாம் ஆதலின். சரம (கடைசி)த்துவம்ஸத்தின் சமகாலத்திலுள்ள எவ்வஸ்துவிற்கும் துவம்ஸமின்மையால் அதனது (சரமதுவம்ஸத்தின்) முதற்க்ஷணத்தில்

அதனோடு (சரமத்துவம்ஸத்தோடு)கூடிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி வருதலானும் என்க.

மேலும் கூறப்பெற்ற சருவத்துவம்ஸங்களின் அநாதாரத் தன்மை யென்பது அவற்றின் ஆதாரங்களினின்றும் பின்னத் தன்மையா அல்லது துவம்ஸத்தின் அத்யந்தாபாவ முடைமையா. முதற்பக்ஷத்தில் கற்பாந்தரத்திலுள்ள க்ஷணங் களுக்கே வருணிக்கப்பட்ட துவம்சங்களின் ஆதாரத்தன்மை சம்பவித்தலால் அதன் பின்னத்தன்மை பட சம்பந்தி சருவ க்ஷணங்களிலுமிருக்கின்றது ஆதலின் அத்தோஷம் முன் போலவேயாம். இரண்டாவது பக்ஷத்திலும் வருணிக்கப்பட்ட துவம்ஸங்களின் அத்தியந்தாபாவங்கட்கு முக்காலத்திலு மிருக்குந்தன்மை யுண்மையால் படத்தின் இரண்டாவது முதலிய க்ஷணங்களிலும் இருப்பு ஆவசியகமாதலால் ஆண்டு அதிவியாப்தியை நீக்கமுடியாமையின், இம்மதத்தினை அதிக மாகத் திரஸ்காரஞ் செய்வதினின்றும் நிவர்த்தியாகின்றோம். இவ்வபிப்பிராயத்தாலேயே உற்பத்தி வேறு பிரகாரம் நிர்தோஷ மாகக் கூறுதற்கு யோக்கியமன்று மென்று கூறப்பட்டது. இவ்வாறு அசத்தின் உற்பத்தியினை நிருபிக்க முடியாதென் பதனை யுபபாதனஞ் செய்து பலித்ததைக் கூறுகின்றார்.

तद् एवम् —ஆதலால் இங்ஙனம் விசாரிக்கும் போது

असदुद्भवनम् —அசத்தின் உற்பத்தியினை யங்கீகரித்தல்

अयुक्तम् - பொருத்தமன்றும் (206)

(அ) வைசேஷிகர் முதலியோரால் வருணிக்கப்பட்ட பிரகாரத்தால் காரியத்தின் உற்பத்தி துர்நிருபமாம் அங்ஙன மாயினும் கபில மதத்தை யநுசரித்திருக்கின்றவர்களால் அத்தி யந்தம் அநபிவியக்தத்திற்கு காரகங்களின் அதீனமான அபி வியக்தி யுற்பத்தியாம் என்பதாக யாதொன்று சொல்லப்படு கின்றதோ அது நிர்தோஷமாமென்று சங்கித்துக் கூறுகின்றார், அசத்காரியவாதிகளால் அதனை அங்கீகரியாமையின். வேறு கதியின்மையால் அதனை யங்கீகரிக்கின் சற்காரியவாதத்தின் அடைவு உண்டாம் அதனால் தனது சித்தாந்தத்திற்குக் கேடுண்டாமென்று கூறுகின்றார்:—

न च वर्णितादपरमत्रभवाननुमन्यते जनिवचोऽर्थमितः ।
यदि वर्ण्यते किमपि तत्र भवेत् स्वमतप्रहाणमलिनीकरणम् ॥ २०७ ॥

பதவுரை

इतः वर्णितात् - வைசேஷிகர் முதலியோரால் வருணிக்கப்பட்ட இந்த மார்க்கத்தினின்றும்
अपरं जनिवचोऽर्थम् - வேருன உற்பத்தியினை
अत्रभवान् அசத்காரியவாதியாகிய தாங்கள்
न च अनुमन्यते - அங்கீகரிப்பதேயின்ரும்
तत्र किमपि - சத்காரியவாதிகளால் கூறப்பட்டவைகளுள் ஏதேனுமோர் லக்ஷணம்
यदि वर्ण्यते - உம்மால் வருணிக்கப்படுமாயின்
स्वमतप्रहाणमलिनीकरणम् - அப்போது தனது சித்தாந்தத்தின் தியாக வடிவ தோஷம்
भवेत् - உமக்கு உண்டாகும் (207)

(அ) எமது சித்தாந்தத்திற்குக் கேடு எங்ஙனமுண்டாமென்று ஆசங்கித்து கணுதாது கூற்றிற்கு விரோதம் வருதலாலென்று கருதி அவரால் செய்யப்பெற்ற உற்பத்தியின் லக்ஷணத்தைக் கூறுகின்ருர் :—

समवायिकारणगणेन तथा सह सत्तया च पटवस्त्विह यत् ।
समवैति तत् कणभुगिच्छति तज्जनिशब्दवाच्यमिति नान्यदितः ॥

பதவுரை

इह पटवस्तु - இவ்வுலகில் படவஸ்துவானது
समवायिकारणगणेन - சமவாயி காரணங்களோடும்
तथा सत्तया च सह - அப்படியே சத்தாஜாதியோடும்
समवैति - சமவாய சம்பந்தத்தால் சம்பந்திக்கிறது
यत् तत् - என்பது யாதொன்றுண்டோ அது

तज्जनिशब्दवाच्यम् -அந்த படத்தின் உற்பத்தியாம்

इतः नान्यदिति -இதனினுமன்னியமன்றும் என்று

कणभुग् इच्छति - கணாத மகரிஷி இச்சிக்கின்றனர் கூறுகின்றனரென்று பொருள். (208)

(அ) அப்படியானால் மிக்க தபசினையுடைய அம்மகரிஷியினால் கூறப்பட்டது ஆதரிக்கத்தக்கதாம் என்று ஆசங்கித்து அவரது வசனம் மநு முதலியோரது ஸ்மிருதிபோன்று அநுஷ்டேய விஷயகமின்மையின் சித்த பதார்த்தத்தின் நிர்ணயத்தில் உபயோகியான நியாயமாத்திரத்தை சூசனஞ் செய்வதாலும் அந்த நியாயங்களுக்குக்கூறிய ரீதியால் வலுவுள்ள விரோதி நியாயத்தால் கெடுக்கப்பட்ட தன்மையுண்மையானும் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்:—

न तदत्र सम्भवति युक्तिवशादुपवर्णितं तदतिविस्तरतः ।
न च किंचिदन्यदुचितं भवतो वदितुं स्वपक्षमपरित्यजतः ॥ २०९ ॥

பதவுரை

तद् अत्र-ஆதலால் காரியத்தின்கண்

तद् न सम्भवति -உற்பத்தி எவ்வாறு சம்பவிக்கிறதில்லையோ அவ்வாறு

युक्तिवशात्-யுக்தி வசத்தால்

अतिविस्तरतः-மிகவும் விஸ்தாரமாக

उपवर्णितम्-வருணிக்கப்பட்டது

அப்படியானால் அவர் கூறியதைப்பரித்தியாகஞ் செய்து அன்னியராற் கூறப்பட்டது ஆதரிக்கத்தக்கதாம் என்று சங்கித்து அசத்காரியவாதிக்கு அஃது பொருத்தமன்றும் வருணிக்கப்பட்ட அபசித்தாந்த தோஷத்தின் அடைவு உண்டாதலின் என்று கூறுகின்றார்.

स्वपक्षम् अपरित्यजतः भवतः -தனது பக்ஷத்தைப் பரித்தியாகஞ் செய்யாத உமக்கு

अन्यत् किंचित् -வேறேயாதேனுமொன்றை

वदितुम् - கூறுதற்கு

न च उचितम्-பொருத்தமன்ரும். (209)

(அ) உற்பத்திக்கு முன்பு அசத்தாயுள்ள காரியத்திற்கு உற்பத்தியாம் என்னும் பக்ஷத்தின் உபபாதனஞ் செய்யப்பட்ட துர்நிருபத்தன்மையினை யநுவாதஞ் செய்து திரண்ட பொருளைக் கூறுகின்ருர் :—

निरूपणायां न यतोस्ति कश्चिदुत्पत्तिशब्दार्थ इह त्वदीये ।
पक्षे ततो दुर्घटताप्रसिद्धिरसज्जनेरुक्तनयेन तावत् ॥ २१० ॥

பதவுரை

निरूपणायां-விசாரிக்குங்காலத்தில்

इह त्वदीये पक्षे-ஈண்டு உனது பக்ஷத்தின்கண்

उत्पत्तिशब्दार्थः-அசத்தின் உற்பத்தி

यतः कश्चित् -யாதொருகாரணத்திஞல் யாதொன்றும்

नास्ति ततः -இன்ரு அக்காரணத்திஞல்

असज्जनेः-அசத்காரியத்திஞற்பத்தியினது

उक्तनयेन - கூறிய மார்க்கத்தால்

तावत् दुर्घटताप्रसिद्धिः -துர்க்கடத்தன்மை பிரசித்தியாம் சித்திக்குமென்பது பொருள். (210)

(அ) இப்போது உற்பத்திக்கு முன்பும் சத்தாகிய காரியத்திற்கே உற்பத்தியாமென்னும் மதத்தினை காரக வியாபாரத்திற்கு வியர்த்தத்தன்மை வடிவ தோஷம் வருதலால் தூஷிக்கின்ருர் :—

सतोऽपि कार्यत्वमयुक्तमेव निरूपणे कारणकृत्यहानेः ।
न कारणव्यापृतिरत्र शक्या सतः स्वरूपे वदितुं फलाय ॥२११॥

பதவுரை

निरूपणे - விசாரஞ் செய்யின்

सतोऽपि - சத்திற்கும்

कार्यत्वम् अयुक्तमेव-காரியத்தன்மை பொருத்தமற்றதேயாம்

कारणकृत्यहानेः - காரக வியாபாரத்திற்கு சாத்திய மின்மையின்

காரியசித்தியே காரண வியாபாரத்தின் சாத்தியமா மெனின் அஃது காரியத்தின் சத்தையேயா அல்லது அதன் குணத்தின் சத்தையா அல்லது அதன் ஆவரண நிவிருத்தியா. அல்லது அதன் அபிவியக்தியா அல்லது அதன் அநபிவியக்தி யின் நீக்கமா. முதற்பக்ஷம் சரியன்று அவரது மதத்தில் காரியத்தின் சொரூபம் காரண வியாபாரத்திற்கு முன்புமிருத்த லால் அதன் சாத்தியத்தன்மை யின்மையினெனக் கூறுகின்றார்:—

अत्र स्वरूपे-சத்காரியத்தின் சொரூபத்தில்

कारणव्यापृतिः - கர்த்தா முதலிய காரகங்களின் வியாபாரம்

फलाय वदितुम् பலத்தின் நிமித்தமாகக் கூறுதற்கு

न शक्या-ஆற்றலின்றும் (211)

(அ) இரண்டாவது பக்ஷத்தினை சங்கிக்கின்றான்:—

गुणं क्षिपत्कारणमर्थवत्त्वं लभेत चेन्नात्र गुणस्य भावात् ।
न चेद्गुणोऽसत्करणं प्रसक्तं निरर्थकं कारणकर्म तस्मात् ॥

பதவுரை

गुणं क्षिपत्-காரியத்தின் கண் குணத்தை யுண்டுபண்ணு கின்றதாய்

कारणम् - கர்த்தா முதலியவற்றின் வியாபாரம்

अर्थवत्त्वं लभेत चेत् - பயனுடைமையையடையு மெனின்

காரியம் போன்று அதன் குணமும் அதன் கண் முன்பு சத்தா அல்லது அசத்தா என்று விகற்பித்து முதற் பக்ஷத்தில் காரியம் போன்று அசாத்தியமா மெனக் கூறுகின்றார்

न - அது சரியன்று

अत्र गुणस्य भावात् - காரியத்தின் கண் குணம் முன்னமே யிருத்தலால்

இரண்டாவது பக்ஷத்தினை யநுவாதஞ் செய்து அபசித்தாந்தத்தின் அடைவால் தூஷிக்கின்றார்.

गुणः न चेत् - காரக வியாபாரத்திற்கு முன்பு காரியத்தின் கண் குணமின்றெனின்

असत्करणं प्रसक्तम् - காரக வியாபாரத்திற்கு அசத்தை யுண்டுபண்ணுதல் பிராப்தியாம்.

கூறிய இரண்டு பக்ஷத்தின் கண்ணும் காரண வியாபாரம் வியர்த்தமாமெனத்திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

तस्मात् - ஆதலால்

कारण कर्म - கர்த்திரு முதலியவற்றில் வியாபாரம்

निरर्थकम् - வியர்த்தமாம். (212)

மூன்றுவது பக்ஷத்தினை யநுவதிக்கின்றார்:—

मलं निरस्यार्थवदिष्यते चेन्मलोऽपि सन्नैव निरस्य इष्टः ।
सतोऽविनाशादसतोऽजनेश्च वृथा ततः कारणमत्र पक्षे ॥२१३॥

பதவுரை

मलं निरस्य - ஆவரணத்தை நிவர்த்தி செய்து

अर्थवत् - காரணம் பொருளுடையதாம் என

इष्यते चेत् - அங்கீகரிக்கப்படுமாயின்

அது சரியன்று அசத்திற்கு சத்துவம் அங்கீகரியாதது போன்று சத்திற்கும் அசத்துவத்தினை யங்கீகரியாமையின் உனது மதத்தில் அதன் நிவர்த்தியும் பொருத்தமற்றதாம் எனக் கூறுகின்றார்

सन्मलः - சத்தாகிய ஆவரணம்

निरस्योऽपि - நிவர்த்திக்கத்தக்கதாகவும்

नैव इष्टः -உமக்கு சம்மதமேயின்ரும்

सतोऽविनाशात् - சத்திற்கு விநாசமின்மையின்

மேலும் விநாசமும் முன்பு அசத்தா அல்லது சத்தா முதற் பக்ஷம் சரியன்று அசத்தின் உற்பத்தி உனக்கு அநிஷ்டமாதலின் எனக் கூறுகின்ருர்.

असतोऽजनेश्च - அசத்திற்கு உற்பத்தியின்மையினுலும்

இரண்டாவது பக்ஷமும் சரியன்று ஆவரண விநாசம் முன்னமேயிருக்குமாயின் காரக வியாபாரத்திற்கு வியர்த்தத் தன்மை வருதலின் என்பது உம்மையின் பொருள். ஆவரண நிவர்த்தியின் கண்ணும் உபயோகமில்லாதபோது திரண்ட பொருளைக் கூறுகின்ருர்:—

ततः अत्र पक्षे -ஆதலால் இப்பக்ஷத்தின் கண்

कारणं वृथा -காரண வியாபாரம் வியர்த்தமாம்

காரக மெனினும் காரணமெனினும் ஒக்கும் மலமெனினும் ஆவரணமெனினுமொக்கும். (213)

(அ) அபிவியத்தியும் அநபிவியத்தியின் நீக்கமும் காரண வியாபாரத்திற்கு முன்பு சத்துவமாயின் காரண வியாபாரம் வியர்த்தமாம் அசத்துவமாயின் அபசித்தாந்தத்தின் அடைவாமென முற்கூறிய தோஷம் வருதலினுலேயே நான்காவது ஐந்தாவது பக்ஷங்களும் பொருத்தமற்றனவாமெனக் கூறுகின்ருர்:—

तस्मादभिव्यक्तिकरी न हेतुप्रवृत्तिरत्रार्थवती घटेत ।
न चानभिव्यक्तिनिराससृत्या तस्मान्न सत्कार्यवचः प्रशस्तम् ॥

பதவுரை

तस्मात् -கூறிய தோஷத்தால்

अत्र हेतुप्रवृत्तिः -ஈண்டு காரண வியாபாரம்

अभिव्यक्तिकरी - அபிவியத்தியைச் செய்வதாய்

अर्थवती -பொருளுடையதாக

न घटेत -பொருந்தாது

अनभिव्यक्ति निरासमृत्या च - அநபிவியத்தியின் நிவர்த்தி மார்க்கத்தாலும்

न -காரண வியாபாரம் பயனுடையதன்று

அப்படியானால் காரண வியாபாரம் காரியத்தினுற்பத்தியில் உபயோகமின்றியதாகவே யிருக்கட்டுமே யென்று ஆசங்கித்து தனது பிரக்கிரியைக்கு வியாகாதம் வருதலால் சற்காரிய வாதமே தள்ளத்தக்கதாமென திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

तस्मात् -ஆதலால்

सत्कार्यवचः -சற்காரிய வாதம்

न प्रशस्तम् -சிரேஷ்ட மின்றாம் (214)

(அ) மேலும் சற்காரியத்தின் அபிவியத்தியே உற்பத்தியாமென்னும் பக்ஷத்தில் அதன் அபிவியஞ்சக காரண வியாபாரத்தின் சத்துவம் எப்போதுமா அல்லது ஓர்போதா முதற் பக்ஷத்தில் சருவாபிவியஞ்சகங்களும் நித்தியமாதலால் அவற்றினதீனமான சருவகாரியத்தின் அபிவியத்தியும் எப்போது முளதாதல் வேண்டுமெனக் கூறுகின்றார்:—

नित्या च कारकगणस्य सती प्रवृत्ति-
नित्यं व्यनक्ति सकलं फलमित्यवश्यम् ।
वक्तव्यमत्र न लयो न सुषुप्तिमूर्च्छे
नो चेन्न सृष्टिरिति कष्टमुपस्थितं वः ॥ २१५ ॥

பதவுரை

कारकगणस्य - கருத்தா முதலிய காரகக்கூட்டத்தின்

सती प्रवृत्तिश्च - சத்தாகிய பிரவிருத்தியும்

नित्या -நித்தியமாமெனின் அப்போது

सकलं फलम् -சகல காரியத்தையும்

नित्यं व्यनक्ति इति -எப்போதும் அபிவியக்தியினைச் செய்யு மென்று

अवश्यं वक्तव्यम् -அவசியம் சொல்லவேண்டும்

அப்படியே யாகட்டுமெனின் அதன்கண் இதனை வினவ வேண்டும் காரியத்தின் அபிவியத்தி அதன் உபலப்தியி னின்றும் அன்னியமா அல்லது அதுவேயா அவற்றுள் முதற் பக்ஷத்தில் காரியத்திற்கும் அதன் அபிவியத்திக்கும் எப் போதும் சத்துவம் பிராப்தியாதலால் பிரளயகாலத்திலும் லயமுண்டாகாதெனக் கூறுகின்றார்.

अत्र -அபிவியத்திக்கும் நித்தியத்தன்மையினை யங்கீகரிக்கும் பக்ஷத்தில்

न लयः -பிரளயம் சித்திக்காது

காரியத்தின் அபிவியத்தியே உபலப்தியாமென்னும் பக்ஷத் தில் அவ்வெல்லாவற்றிற்கும் கூறிய ரீதியால் நித்தியத்தன்மைப் பிராப்தியாதலால் சருவப்பிரகார ஞானங்களின் உபராம வடிவ ஸுஷுப்தி மூர்ச்சைகள் சித்தியாதெனக் கூறுகின்றார்.

न सुषुप्तिमूर्च्छे -ஸுஷுப்தி மூர்ச்சைகள் சித்தியாது

லயமில்லாத வழி ஞானஞேயான்மகமான பிரபஞ்சத்தின் சிருஷ்டியும் சித்தியாது எப்போதுமிருத்தலினாலேயே, அதனால் ஒன்றனது உற்பத்தியின் பொருட்டாவது நாசத்தின் பொருட்டாவது புத்திமானாகிய புருடனுக்கு பிரவிருத்தி பொருந்தாமையின் சற்காரியவாதியாகிய பருவதத்திற்கு சீவனமும் துர்க்கடமாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

नो चेत् -காரக வியாபாரத்திற்கு சத்துவமில்லையாயின் அப்போது

न सृष्टिः इति -சிருஷ்டி சித்திக்காது ஆதலின்

वः -சற்காரியவாதியாகிய உங்கட்கு

कष्टमुपस्थितम् -துன்பம் பிராப்தமாம் (215)

(அ) அற்றேல் வேதாந்திகளாலும் அசத்திற்கு உற்பத்தியினை யங்கீகரியாமையின் பொருளால் சத்திற்கே அதனைக் கூறவேண்டும் அதனால் தனது பக்ஷத்தின்கண்ணும் கூறிய தோஷம் வருகலால் அத்தோஷம் அன்னியனைக் குறித்து கொடுக்கத்தக்கதன்று " எந்த இடத்தில் இரண்டுபேருக்கும் தோஷம் சமமோ " என்னும் நியாயத்தால் என்றுசங்கித்து எம்மால் சத்திற்கும் உற்பத்திவிதியினை யங்கீகரியாமையின் ஆண்டுக் கூறிய தோஷத்திற்குப் பிராப்தியின்மையின் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார் :—

वेदान्तवादिसमयेऽपि समानमेत-
च्चोद्यं परैर्न खलु वाच्यमिहाप्रसक्तेः ।
अस्मन्मते न खलु संव्यवहारमात्रे
मायामये किमपि दूषणमस्ति यस्मात् ॥ २१६ ॥

பதவுரை

वेदान्तवादिसमयेऽपि -வேதாந்த மதத்தின் கண்ணும்

एतच्चोद्यं समानम् - இந்த சங்கை சமானமாமென்று

परैः न खलु वाच्यम् -வாதிகளால் சொல்லத்தக்கதன்று

इह अप्रसक्तेः ஈண்டு பிராப்தியின்மையின்

அப்படியானால் காணப்படுகின்ற உற்பத்தி முதலியவை எதற்கு என்றுசங்கித்து சத்துவம் முதலிய வடிவத்தால் நிரூபிக்கக்கூடாமையின் அநிர்வசநீயமும் ஆகாசத்தில் நீல நிறம்போன்று வியவகாரமாத்திரத்திற்கு விஷயமானதுமான வற்றிற்கே அவையாமென்று கூறுகின்றவராய் இரண்டு பக்ஷத்தின்கண்ணும் கூறப்பெற்ற தோஷத்தின் அப்பிராப்தியினையுபபாதனஞ் செய்கின்றார்

अस्मन्मते -எமது மதத்தின்கண்

संव्यवहारमात्रे - வியவஹாரமாத்திரத்திற்கு விஷயமும்

मायामये -மாயாமயமுமானவற்றில்

किमपि दूषणम् -முன்பு வருணிக்கப்பட்ட யாதொரு தூஷணமும்

यस्मात् न खलु अस्ति -இன்றுமாதலின் (216)

(அ) சாந்தோக்கிய வாக்கியத்தின் பிரகாரத்தால் பிரமநந்தி ஆசாரியராலும் பூருவபக்ஷத்தில் அசத்தினின்றும் சத்திலுற்பத்தியில் தோஷங்கூறி வியாவகாரிக மாயாமய பக்ஷத்தினுல் சமாதானங் கூறப்பட்டது. அசத்திற்கு உற்பத்தியின்ருஞ் சம்பாத்தியத் தன்மை யின்மையின். சத்திற்கும் உற்பத்தியின்ரும் பிரவிருத்திக்கு வியர்த்தத்தன்மை வருதலால் சத்துவம் அவிசேஷமாதலின். அபிவியத்தியின் பொருட்டாமெனின் அது சரியன்று அதுவும் சத்துவமாதலானும் பிரவிருத்தி நித்தியமாதலானும் எப்போதும் அபிவியத்தியின் ஆபத்தியாம். எமது பக்ஷத்தில் வியவகாரமாத்திரமாதலின் கூறிய தோஷமின்ருமென்னும் அவரது வசனம் கூறிய நியாயத்தால் சஹகரிக்கப்பட்ட வாசாரம்பணுதி சுருதியை மூலமாகவுடைமையின் அவசியம் அங்கீகரிக்கத் தக்கதாமென்னுங் கருத்தாற் கூறுகின்ருர்:—

आत्रेयवाक्यमपि संव्यवहारमात्रं
कार्यं समस्तमिति नः कथयाम्बभूव ।
सत्कार्यवादविषयो न हि दोषराशि-
र्मायामये भवितुमुत्सहते विरोधात् ॥ २१७ ॥

பதவுரை

आत्रेयवाक्यमपि -அத்திரி மஹரிஷியின் வம்சத்திலுதித்த பிரமநந்தி ஆசிரியரின் வசனமும்

कार्यं समस्तम् -காரியமனைத்தும்

संव्यवहारमात्रमिति — விவகார மாத்திரமாமென்று

नः कथयाम्बभूव -எமக்குக் கூறிற்று

இம்மதத்தின்கண் சற்காரியவாதத்தில் கூறப்பட்ட தோஷத்தின் அப்பிராப்தியினையுபபாதனஞ் செய்கின்ருர்

सत्कार्यवाद विषयः -சற்காரியவாதத்தினை விஷயஞ் செய்கின்ற

दोषराशिः -முற்கூறிய தோஷ சமூகம்

मायामये -சருவமும் மாயையின் காரியமாமென்னும் பக்ஷத்தில்

भवितुम् -பொருந்துதற்கு

न हि उत्सहते -பிரவிருத்திக்கிறதில்லை

विरोधात् -விரோதமாதலின்

சத்விலக்ஷணத்தன்மை பக்ஷத்தில் சத்துவத்தை முன்னிட்ட தோஷத்தின் இன்மை யாவசியகமாதலின் அதன் (சத்தின்) விரோதத்தால் அத்தோஷத்தின் அப்பிராப்தியாம் என்று கருதி விரோதத்தால் என்று கூறப்பட்டது. (217)

(அ) காரியத்தின்கண் அசத்விலக்ஷணத் தன்மையினையும் அங்கீகரித்தலால் அசத்காரியவாத பக்ஷத்தில் கூறப்பட்ட தோஷங்களின் அடைவும் ஈண்டின்றுமெனக் கூறுகின்றார்

काणाददर्शनसमाश्रयदोषराशिर्दूरान्निरस्त इह संव्यवहारमात्रे ।
वेदान्तभूमिकुशलो मुनिरनिर्वंश्यस्तेनाह कार्यमिह संव्यवहारमात्रम् ॥

பதவுரை

इह संव्यवहारमात्रे -ஈண்டு வியவகாரமாத்திரத்திற்கு விஷயமான பதார்த்தத்தில்

काणाददर्शनसमाश्रय दोषराशिः -கணாத மதத்தினையாசிரயித்துள்ள தோஷக்குவியல்

दूरात् निरस्तः -வெகு தூரத்தில் தள்ளப்பட்டது

சற்காரியவாதிகளால் காரிய காரணங்கட்கு அத்தியந்தம் பேதத்தை யங்கீகரியாமையின் அவ்வாதம் அத்வைத வாதத்திற்கு சொற்பம் சமீபித்ததாம் அங்ஙனமாயினும் அதன் கண்ணுள்ள தோஷங்கள் எப்போது ஈண்டு நிராகரிக்கப்பட்டனவோ அப்போது அத்தியந்தம் பேதத்தோடு கூடிய அசற்காரிய வாதத்தின் கண்ணுள்ள தோஷங்கள் தூரமாகத் தள்ளப்பட்டன என்னுங் கருத்தால் தூரத்தில் எனப்பட்டது.

ஈண்டு சத் அசத் என்னும் இரண்டு பக்ஷங்களிலும் கூறப்பட்ட தோஷம் சம்பவியாமையின் பிரமநந்தி ஆசிரியர் சித்தாந்தமாக காரியத் துவாதியினை அநிர்வசநீய பதார்த்தத்திற்கே என்று கூறுகின்றார் என பிரகிருதத்தை முடிக்கின்றார்.

इह तेन -ஈண்டு முற்கூறிய தோஷமின்மையினுல்

वेदान्त भूमिकुशल: -வேதாந்த சாஸ்திரத்தில் நிபுணரும்

अत्रिवंश्य: -அத்திரிமகரிஷியின் வம்சத்திலுதித்தவருமான

मुनि: -- பிரமநந்தியெனப்பெயரிய ஆசிரியர்

इह - இந்த மதத்தில்

कार्यं संव्यवहारमात्रम् -காரியம் சதசத் விலக்ஷண மாயா மயமென்று

आह -கூறியுள்ளார் (218)

(அ) அற்றேல் பிரம நந்தி ஆசிரியரால் அநேக பக்ஷங்கள் கூறப்பட்டமையின் அவற்றுள் விவர்த்த பக்ஷத்தை ஆதரிப்பதில் ஏது வென்னை யென்ருசங்கித்து சாந்தோக்கியத்தின் ஆருவது பிரபாடகத்தின் பிரமேயமாகிய அத்துவிதீய வஸ்துவின் சித்தியின்பொருட்டு ''காரியம் வாக்கினுலாரம்பிக்கப்படுகின்றது நாமமாத்திரமாம் மிருத்திகையே சத்தியமாம்'' என்பது முதலிய சுருதியினை யாசிரயித்து விவர்த்தவாதம் அவரால் கூறப்பட்டமையின் அதுவே அவரது சம்மதமான சித்தாந்தமாமாதலின் அதுவே ஆதரிக்கத்தக்கதாமென்று கருதி கூறுகின்ருர்:—

षष्ठप्रपाठकनिबद्धमुदीरितं यत्तत् सत्यमेव खलु सत्यसमाश्रयत्वात् ।
तत्रैव यत् पुनरुवाच समुद्रफेनदृष्टान्तपूर्वकमदो व्यवहारदृष्ट्या ।२१९॥

பதவுரை

षष्ठप्रपाठकनिबद्धम् -சாந்தோக்யத்தின் ஆருவது பிரபாடகத்தின் வியாக்கியானத்தில்

यत् उदीरितम् -யாதொன்று அவரால் சொல்லப்பட்டதோ

तत् सत्यमेव खलु -அவ்வெல்லாமும் சத்தியமாகவே நிச்சயிக்கப்பட்டது

सत्यसमाश्रयत्वात् -சத்வஸ்துவை விஷயஞ்செய்தலின்

அப்படியானால் ஆண்டே கடலின் அலை, நுரை முதலிய திருஷ்டாந்தத்தால் பரிணாமவாதமும் அவரால் கூறப்பட்டமையின் அதுவும் ஏன் ஆதரிக்கத்தக்கதன்று என்றுசங்கித்து அவராலேயே சற்காரியவாதம் கூறிய ரீதியால் தூஷிக்கப் பட்டமையின் அதன் வாஸ்தவத்தன்மை அவருக்கு சம்மத மன்றும் மற்றோ வியவகார திருஷ்டியினையாசிரயித்து அத்வை தத்தின் சம்பாவனையின் பொருட்டாமென்னும் கருத்தாற் கூறுகின்றார்

तत्रैव -சாந்தோக்யத்தின் ஆறுவது பிரபாடக வியாக்கியானத்திலேயே

समुद्रफेनदृष्टान्त पूर्वकम् -சமுத்திரத்தின் நுரை முதலிய திருஷ்டாந்த வாயிலாக

यत्पुनरुवाच -யாதொன்றைக் கூறினாரோ

अदः व्यवहारदृष्ट्या – அது வியவஹார திருஷ்டியினால் கூறப்பட்டது. (219)

(அ) அற்றேல் சருவபேதரகித முக்கிய அத்வைத சம்பாவனையின் பொருட்டு விவர்த்தவாதமே சமீபத்திலுள்ளதா மாதலின் அதுவே வருணிக்கத்தக்கது பேத சத்தியத் தன்மை யின் அவிரோதியாகிய பரிணாமவாதம் வியவகார திருஷ்டியை ரக்ஷிக்கும் பொருட்டு வருணிக்கத்தக்கதன்று என்றுசங்கித்து அத்தியந்தம் பேதத்தின் சத்தியத்தன்மையில் அபிநிவேச முள்ள புருடனுக்கு முதலிலேயே விவர்த்தவாதத்தின்கண் பிரவேசம் துர்க்கடமாம் ஆதலின் அவனது அபிநிவேசத்தை நீக்குதற்பொருட்டு வியவகார திருஷ்டியை ரக்ஷிக்கின்ற அவரால் பரிணாமவாதம் முதலில் அவனைக்குறித்து உபபாதனஞ் செய்யப்பட்டது. பின்பு அத்திருஷ்டியினையும் யுத்தியினைச் சகியாமையால் மெள்ள விடுவித்து அதனினும் சமீபமாயுள்ள விவர்த்தவாதத்தினை வருணித்து பிரம்ம நந்தியென்பவர் சுத்தாத்வைதத்தினை இரக்ஷித்தார். அதனால் அவரது பரிணாமக் கூற்றும் சூத்திரக்காரரது வசனம்போன்று பொருத்தமேயா மென்னுங் கருத்தாற் கூறுகின்றார்:—

पूर्वं विकारमुपवर्ण्य शनैः शनैस्तद्दृष्टिं विसृज्य निकटं परिगृह्य तस्मात् ।
सर्वं विकारमथ संव्यवहारमात्रमद्वैतमेव परिरक्षति वाक्यकारः ॥

பதவுரை

पूर्वं विकारं उपवर्ण्य -முன்பு பரிணாமவாதத்தை வருணித்து

शनैः शनैः - (அநுபபத்தியைத் தோற்றுவித்தல் கிரமத்தால்) மெள்ள மெள்ள

तद्दृष्टिं विसृज्य -அப்பரிணாம திருஷ்டியினை பரித்தியாகஞ் செய்து

तस्माद् निकटम् - பரிணாம வாதத்தினும் சமீபமாயுள்ள அதாவது முக்கியாத்வைத சித்தியின் பொருட்டு அந்தரங்கமான

सर्वं विकारम् -சகல காரியமும்

संव्यवहारमात्रम् - வியவகாரமாத்திரமாம் பரமார்த்தமன்றென்னும் விவர்த்தவாதத்தினை

अथ परिगृह्य - பின்பு சித்தாந்தமாக அங்கீகரித்து

अद्वैतमेव - அபவாத திருஷ்டி விஷயமான முக்கியாத்வைதத்தினையே

वाक्यकारः -பிரம்மநந்தி ஆசிரியர்

परिरक्षति -நன்கு காப்பாற்றுகின்றார்.

சருவ அநுபபத்தியையும் பரிகரித்தலால் சாதிக்கின்றார் என்பதுபொருள். அந்தரங்கமான விவர்த்தவாதத்தினையென ஓட்டுக. (220)

(அ) பிரம்ம நந்தியாசிரியரால் செய்யப்பட்ட சூத்திர வடிவ வாக்கியங்கட்கு பாஷியத்தினைச் செய்த திராவிடாச்சாரியாரும் அத்துவயப்பிரம்மத்திற்குப் பிரத்தியகான்மாவோடு அபேதம் வாக்கியகாரருக்கு (பிரமநந்திக்கு) சம்மதமாமெனக் கூறியுள்ளார் ஆதலால் பிரமநந்திக்கு பரிணாமவாதம் சம்மதமின்றாமென நிச்சயிக்கப்படுகின்றது எனக்கூறுகின்றார்:—

अन्तर्गुणा भगवती परदेवतेति प्रत्यग्गुणेति भगवानपि भाष्यकारः ।
आहस्म यत्तदिह निर्गुणवस्तुवादे सङ्गच्छते नतु पुनः सगुणप्रवादे ॥

### பதவுரை

भगवानपि भाष्यकारः -சருவஞ்ஞரான திராவிடாச்சாரியரும்

भगवती परदेवता -பகவதியாகிய பரதேவதை

अन्तर्गुणा इति -அந்தர்க்குணமுள்ளவளெனவும்

प्रत्यग्गुणा इति -பிரத்யக்குணமுள்ளவளெனவும்

यद् आह स्म யாதொன்றைக்கூறினரோ

तद् इह निर्गुणवस्तुवादे -அது ஈண்டு நிர்க்குண வஸ்து வாதத்தின்கண்

सङ्गच्छते -பொருந்துகின்றது

सगुणप्रवादे -சகுணவாதத்தின்கண்

न तु पुनः -பொருந்துகின்றதில்லை

### விசேஷவுரை

"அந்த இந்தத் தேவதை ஈக்ஷணஞ்செய்தது" என்னுஞ் சுருதியை யநுசரித்து பரதேவதை என்பதனுல் பிரம்மமே சொல்லப்படுகிறது. அந்தர்க்குணமென்பதன் வியாக்கியானம் பிரத்தியக்குணமென்பது. ஈண்டு குண சத்தம் சொரூபபரமாம் அன்னியதேவதைகள் பராக்கு வடிவங்களாம் பரதேவதையோ பிரத்தியகான்ம சொரூபமாம் அபரோக்ஷசிதேகரசமாமென்பது பொருள் நிர்க்குணவஸ்துவாதமாவது விகாரம் முதலிய சருவ விசேஷமுமற்றதாய் பரமார்த்தமாக ஆன்மவஸ்துவேயுளது என்னும் மதம். (221)

(அ) இங்ஙனம் சத்திற்காவது அசத்திற்காவது காரியத் தன்மை சம்பவியாமையால் அநிர்வசநீயத்திற்கே அது (காரியத்தன்மை)வாமென அதனை (காரியத்தன்மையினை) நிரூபணஞ்செய்து காரணத்தன்மையும் அநிர்வசநீயமேயாம் வாஸ்தவமன்ரும் என்று கூறப்பட்டது. மற்றும் பின்ன பதார்த் தங்கட்கும் அபின்னபதார்த்தங்கட்கும் காரியகாரணத்தன்மை பொருந்தாமையால் அக்காரிய காரணத்தன்மையும் அநிர்வச நீயமாமென்று கருதி பின்ன பதார்த்தங்கட்கு அதனை நிராகரிக்கின்ருர் :—

न खलु कारणकार्यसमन्वयो भवति जातुचिदत्र विभिन्नयोः ।
किमिह सागरसह्यसमाश्रयो भवति कारणकार्यसमन्वयः ॥ २२२ ॥

பதவுரை

अत्र विभिन्नयोः -இவ்வுலகின்கண் அத்யந்தம் பின்ன பதார்த்தங்கட்கு

कार्यकारणसमन्वयः -காரிய காரணத்தன்மை

जातुचित् - ஓர்போதும்

न खलु भवति -உண்டாகின்றதேயில்லை

ஏகாரத்தால் சூசிப்பிக்கப்பட்ட வியாப்தியினை அதாவது யாண்டு யாண்டு பேதம் ஆண்டு ஆண்டு காரியத்தன்மையின் அபாவமாமென பேதத்திற்கு காரியத்தன்மையின் அபாவத்தோடுள்ள வியாப்தியினைத் தெரிசிப்பிக்கின்றார்.

सागरसह्यसमाश्रयः-சமுத்திரத்தினையும் ஸஹ்யபர்வதத்தினையுமாசிரயித்ததாகி

कारणकार्यसमन्वयः-காரணகாரியத்தன்மையின் சம்பந்தம்

इह भवति किम्- இவ்வுலகில் உண்டாகின்றதா? இல்லை.

விசேஷவுரை

ஸஹ்யபருவதம் சமுத்திரமாகிய இரண்டனுள் ஒன்றற்கு நியதபூருவவிருத்தித்தன்மையின்மையினாலேயே காரியகாரணத்தன்மையினபாவமாம். பேதமாத்திரத்தாலன்றாம் என்று சொல்லற்க. பேதத்திற்கு அதன் (காரியகாரணத் தன்மையின்) அபாவத்தாலும் வியாப்தத் தன்மையிருத்தலின் பின்ன பதார்த்தங்கட்கு தற்பாவமும் (காரியகாரணத் தன்மையும்) பொருத்தமின்றாம் என்பது கருத்து. (222)

(அ) இங்ஙனம் காரியகாரணங்களின் அபேத பக்ஷத்திலும் தற்பாவம் பொருத்தமின்றாமென திருஷ்டாந்த சகிதங் கூறுகின்றார்:—

न च तथायमभिन्नसमाश्रयो भवितुमुत्सहतेऽनभिवीक्षणात् ।
न हि घटो विदधाति घटं क्वचिन्न च पटः पटमित्थमनीक्षणात् ॥

பதவுரை

तथा-எப்படிக் காரிய காரணபாவம் பின்னவஸ்துவை ஆசிரயித்ததாய் சம்பவிப்பதின்றோ அப்படி

अयं-இது.

अभिन्नसमाश्रयः- அபின்ன வஸ்துவையாசிரயித்ததாகவும்

भवितुं नच उत्सहते-சம்பவிப்பதின்ரும்.

अनभिवीक्षणात् - உலகிற் காணப்படாமையின்

காணப்படாமையினையே இருவருக்குஞ் சம்மதமான திருஷ்டாந்தத்தால் விஸ்தரிக்கின்றுர்.

घटः घटम्-குடம் குடத்தினை

क्वचित् न हि विदधाति-ஓரிடத்தும் உண்டுபண்ணுவதின்ரும்

न च पटः पटम्-வஸ்திரமும் வஸ்திரத்தினை உண்டு பண்ணுவதின்ரும்

इत्थं अनीक्षणात्- இவ்வாறு காணப்படாமையின். (223)

(அ) மேலும் காரணமாகக் கருதப்பட்டுள்ள வஸ்து சொற்ப வியாபாரத்தோடு கூடிய தன்மையால் குர்வத்ரூபமாயிருந்துகொண்டு காரியத்தையுண்டுபண்ணுவதா அல்லது அகுர்வத்ரூப உதாசீனமாகவேயிருந்துகொண்டு காரியத்தை உண்டுபண்ணுவதா முதற்பக்ஷத்தில் அக்குர்வத் வடிவமும் காரியமா அல்லது அகாரியமா. முதற்பக்ஷத்தில் குர்வத் வடிவத்தையுண்டுபண்ணுவதாக வேறு குர்வத்வடிவம் அங்கீகரிக்கத்தக்கதாம் இங்ஙனம் அதுவும் காரியமாதலால் அதனையுண்டுபண்ணுவதாக வேறு குர்வத் வடிவம் அங்கீகரிக்கத்தக்கதாம். இங்ஙனம் அனவஸ்தை வருதலால் ஓர் காரியமும் சித்தியாதெனக் கூறுகின்றுர் :—

कुर्वत्कारणपक्षमाश्रितवतः कुर्वच्च कुर्वत्कृतं
तत्कुर्वच्च तथाविधान्यकृतमित्येषाऽनवस्था भवेत् ।
कुर्वद्रूपमकार्यमिष्टमिति चेन्नित्यं जगज्जायतां
नित्यं मा जनि वा विशेषविरहादेतत् समस्तं जगत् ॥

பதவுரை

कुर्वत्कारणपक्षम् -குர்வத் வடிவம் காரணமாமென்னும் பக்ஷத்தினை

आश्रितवतः -ஆசிரயிக்கும் புருடனுக்கு

कुर्वच्च -குர்வத் வடிவமும்

कुर्वत्कृतम् வேறு குர்வத்வடிவத்தால் செய்யப்பட்டதாம்

तच्च कुर्वच्च -அக்குர்வத் வடிவமும்

तथाविधान्यकृतम् -அப்படிப்பட்ட வேறு குர்வத் வடிவத் தாற் செய்யப்பட்டதாம்

इत्येषाऽनवस्था -இவ்வாறு அனவஸ்தாதோஷம்

भवेत् -உண்டாகும்

புருடனுக்கு அனவஸ்தா தோஷமுண்டாகுமெனக்கூட்டுக. குர்வத் வடிவம் அகாரியமென்னும் பக்ஷத்தை எழுப்புகின்ருர்.

कुर्वद्रूपम् -குர்வத் வடிவம்

अकार्यम् इष्टमिति चेत्-அகாரியமாகக் கருதப்பட்டுள்ள தெனின்

அப்படியாஞல் அக்குர்வத் வடிவம் சருவகாரணங்கட்கும் இருக்கின்றதா இல்லையா. முதற்பக்ஷத்தில் அகாரியமான குர்வத் வடிவமெப்போதுமிருத்தலால் அதன் காரியமாகிய அனைத்தும் எப்போதும் உண்டாதல் வேண்டும். காரணங் கட்கு அஃதின்றென்னும் இரண்டாவது பக்ஷத்திலோ அஃது (குர்வத் வடிவம்) இன்றியவைகட்கு ஜனகத் தன்மையின் மையால் சருவகாரியமும் ஓர்போதும் உண்டாகாது எனக் கூறுகின்ருர்.

जगत् नित्यं जायताम् -ஜகத்து எப்போதும் உண்டாதல் வேண்டும்

वा एतत् समस्तं जगद्-அல்லது இந்த சம்பூர்ணசகத்தும்

नित्यं माजनि -எப்போதும் உண்டாகலாகாது

विशेषविरहात् -விசேஷமின்மையின்

குர்வத்=உண்டுபண்ணுகிற, விசேஷம்=விலக்ஷணத் தன்மை. (224)

(அ) அகுர்வத் வடிவம் ஜனகமாமென்னும் பக்ஷத்தினை அதிப்பிரசங்கத்தால் தூஷிக்கின்றார்:—

सर्वं सर्वसमुद्भवाय घटते कुर्वन्न चेत्कारणं
न ह्यस्मिन् क्वचिदस्ति कस्यचिदपि व्यापारवत्ता यतः।
तस्मात् कारणकार्यतादि सकलं मायामयं तत्वतो
नासीदस्ति भविष्यतीति सकलं चैतन्यशेषं महत् ॥

பதவுரை

कुर्वत्कारणं नचेत्- குர்வத் வடிவம் காரணமில்லையாயின்

सर्वं सर्वसमुद्भवाय - சருவமும் சருவத்தின் உற்பத்தியின் பொருட்டு

घटते - பொருத்தமாம் உபயோகமாமென்பது பொருள்

अस्मिन् क्वचित् - இந்தப் பக்ஷத்தில் எக்காரியத்தின் கண்ணும்

कस्यचिदपि - எக்காரணத்திற்கும்

व्यापारवत्ता - வியாபாரத்தையுடையதாந் தன்மை

यतः नह्यस्ति - இன்றுமாதலின்

அற்றேல் உதாசீன வஸ்துவிற்கும் அன்வய வியதிரேகங்களால் சிலசிலவிடங்களிலே காரணத்தன்மையைக் கிரகித்தலால் கூறிய அதிப்பிரசங்கமின்றும் எனின் அற்றன்று. உதாசீனமாய் வனத்திலுள்ள தண்டாதிகட்குப்போன்று அன்வயம் முதலியவையேயின்மையின். வியாபாரகாலத்தில் தண்டத்துவாதி சாமான்யாவச்சின்னமாகவே அன்வயாதிகளைக் கிரகித்தலால் அவ்வாகாரத்தாலேயே தண்டாதிகட்கு கடாதியின் ஏதுத்தன்மையாமென்று சொல்லற்க. வியாபாரமின்றிய வனத்திலுள்ள தண்டாதியின்கண் அன்வயாதிகளின் அபாவ நிச்சயமுளதாய வழி சாமான்யத்தால் அன்வயாதி

களின் ஞானமே சம்பவியாமையின். அதற்கு (தண்டத்திற்கு) ஏனையகாரணங்களின் சமீபத்தன்மையுளதாயவழி அன்வயாதிகளைக் கிரகித்தலால் கூறிய தோஷமின்றுமென்று சொல்லற்க. உதாசீன தண்டத்திற்கு அதன் சன்னிதியே சம்பவியாமையின் வியாபாரமுடையதற்கே அன்வயம் முதலியவற்றால் காரணத் தன்மையைக் கூறவேண்டும் வியாபாரமுடையதற்கும் அஃது முன்னரே கண்டிக்கப்பட்டுளது ஆதலின் மாயிக (மாயா கற்பித) மாதலால் காரணம் முதலியவை மித்தையே யாமென திரண்ட பொருளைக் கூறுகின்றார்

तस्मात् -ஆதலால்

कारणकार्यतादि सकलम् -காரணத் தன்மை காரியத் தன்மை முதலிய அனைத்தும்

मायामयम् -மாயாமயமாம்

மாயாமயமான அதனாலும் துவைதத்தின் அடைவாமென்றுசங்கித்து பாரமார்த்திகத்துவைதம் காலத்திரயத்திலுமின்மையால் மாயிக (மாயாகாரிய)த்திற்கும் தத்துவஞான பாத்தியத்தன்மையுண்மையின் வாஸ்தவமாக சைதன்யமே அத்துவிதீயமாக மிஞ்சுகிறது எனக் கூறுகின்றார்:—

तत्त्वतः -வாஸ்தவமாக

नासीत् अस्ति भविष्यतीति -முன்னமுமில்லை இப்போதுமில்லை இனிமேலுமில்லையாதலின்

सकलं जगत् -சருவஜகத்தும்

चैतन्यशेषम् – சைதன்னியத்தையேயவதியாகவுடையது

(225)

(அ) அற்றேல் குர்வத்தன்மையின்றியும் எதற்கு எதன்கண் சத்தியோ அதனைக்குறித்து அது காரணமாம் எது எதனது சக்கியமோ அது அதன் காரியமாம் என யாண்டும் காரியகாரணத்தன்மை நியமம் சித்திக்கின்றது என்று சங்கித்துக் கூறுகின்றார்:—

सकलशक्तिविकल्पनयान्वये सकलशक्यविकल्पनयान्वयः ।
सकलशक्यविकल्पनयान्वये सकलशक्तिविकल्पनयान्वयः ॥ २२६ ॥

பதவுரை

सकलशक्ति विकल्पनयान्वये - சகல காரணத்திலுள்ள சக்திகட்கும் வியவஸ்தையாக அன்வயமாயின் அப்போது

सकलशक्य विकल्पनयान्वयः - சகல சக்யங்கட்கும் வியவஸ்தையாக அன்வயமுண்டாம்

सकलशक्य विकल्पनयान्वये - சகல சக்கியங்கட்கும் வியவஸ்தையாக அன்வயமுளதாயின்

सकलशक्ति विकल्पनयान्वयः - சருவசக்திகட்கும் வியவஸ்தையாக அன்வயமாம்

விசேஷவுரை

சத்திக்கும் சக்கியத்திற்கும் பரஸ்பராதீன நிருபணத் தன்மையுண்மையின் சகல சத்திகட்கும் இது இதன்கண்ணேயே சக்தமாமென வியவஸ்தையால் அன்வயமுளதாயவழி சகல சக்கியங்கட்கும் இது இதனதே சக்கியமாமென வியவஸ்தையால் அன்வயமாம். சகல சக்கியங்கட்கும் கூறிய வியவஸ்தையால் அன்வயமுளதாயவழி சகல சத்திகட்கும் கூறிய வியவஸ்தையால் அன்வயமாமென்பது பொருள் (226)

(அ) அதனுற் சித்தித்ததென்னையென்னுமிடத்துக் கூறுகின்ருர்:—

इति परस्परसंश्रयता यदा वद कथं जगतः परमार्थता ।
यदि पुनर्जगतोऽपरमार्थता परममस्ति पदं परमात्मनः ॥

பதவுரை

इति परस्परसंश्रयता यदा - இங்ஙனம் அன்யோன்யாசிரய தோஷமுண்டாகும்போது

जगतः परमार्थता - சகத்திற்கு பாரமார்த்திகத்தன்மை

कथं वद - எங்ஙனமாம் நீ கூறுவாயாக.

சத்திசக்கியவடிவ காரணகாரியான்மக சகத்திற்கு பரஸ்பராதீன சித்தியையுடையதாந்தன்மையால் வாஸ்தவமாக சம்பவியாமையின் மாயாமயத்தன்மை சித்தியாமென்பது பொருள்.

காரியகாரணான்மகமான துவைதத்திற்குமித்தியாத்தன்மை சித்தித்தபோது அதனதிஷ்டானமான ஆன்மதத்துவம் நித்திய சுத்தாதி வடிவமாய் சுருதிப்பிரமாணத்தால் சித்திக்கின்றது எனத்திரண்டபொருளைக் கூறுகின்றார்.

यदि पुनर्जगतोऽपरमार्थता சகத்திற்கு மித்தியாத்தன்மை சித்தித்தபோது

परमात्मनः -பரமான்மாவிற்கு

परमं पदम् अस्ति - விசுத்த சொரூபம் சித்திக்கின்றது.

(227)

(அ) இங்ஙனம் விவர்த்தவாதத்தால் அவித்தையும் அதன் காரியமுமான சகத்திற்கு அபாரமார்த்தத் தன்மை யுண்மையின் அத்துவயாநந்த பிரம்மமே வாஸ்தவமாமென்று கூறப்பட்டது ''இவ்வான்மாவிற்கு பராசத்தி நாநாவிதமாகக் கேட்கப்படுகின்றது'' என்னுஞ்சுருதியால் சடமும் அசடமு மான அநேகசத்தியறியப்படுதலின் சடவடிவ அவித்தையாகிய சத்திக்கு அசத்தியத்தன்மையிருப்பினும் சிற் சத்திக்கு சத்தியத் தன்மையுண்மையால் சத்தியோடுகூடிய பிரம்மமும் சத்தியமேயாம் அதன் பரிணாமமான சகத்தும் சத்தியமேயாம் என எவர்கள் கருதுகின்றார்களோ அவரது மதத்தை யநுவாதஞ் செய்கின்றார்:—

चिच्छक्तिः परमेश्वरस्य विमला चैतन्यमेवोच्यते
सत्यैवास्य जडापरा भगवतः शक्तिस्त्वविद्योच्यते ।
संसर्गाच्च मिथस्तयोर्भगवतः शक्त्योर्जगज्जायते-
ऽसच्छक्त्या सविकारया भगवतश्चिच्छक्तिरुद्रिच्यते ॥

பதவுரை

परमेश्वरस्य - பரமான்மாவிற்கு இரண்டு சக்திகளுண்டு அவற்றுள்

चिच्छक्तिः विमला -சிற்சக்தியானது நிர்மலமாகவும்

चैतन्यमेव -சைதன்யமாகவும்

सत्या एव उच्यते - சத்தியமாகவுமே சொல்லப்படுகின்றது

अस्य भगवतः -இப்பரமான்மாவின்

अपरा शक्तिस्तु -மற்ருேர் சக்தியோ

जडा अविद्या ஜடமாகவும் அவித்தையாகவும்

उच्यते -சொல்லப்படுகின்றது

சிற்சத்தியானது சொரூபமாக விகாரமாமென்னும் மதத்தினை நிர்மல சைதன்னியமென்னும் விசேஷணங்களால் நிவர்த்திசெய்தார். அதற்கும் இதர சத்திக்குப்போன்று அசத்தியத்தன்மையையாசங்கித்து சைதன்னியத்திற்கு சத்தியத்தன்மையுண்மையால் சைதன்யவடிவ சிற் சத்தியும் சத்தியமேயாமென சத்தியமென்னும் விசேஷணத்தாற் கூறினர்.

அற்றேல் சிற்சத்தி நிருவிகாரமாதலானும் மற்றைய சத்தி சடமாதலானும் அவ்விரண்டினுலும் சகத்தினுற்பத்தி எங்ஙனமா மென்னுமிடத்துக் கூறுகின்ருர்.

भगवतः -பரமான்மாவின் கண்

तयोः शक्त्योः -சிற்சக்தி சடசக்திகளின்

मिथः संसर्गाच्च -பரஸ்பரம் சம்பந்தத்தால்

जगत् जायते -சகத்து உண்டாகின்றது

அங்ஙனமாயினும் நிருவிகாரமான சிற் சத்திக்கு விகார மெங்ஙனமாம் என்ருசங்கித்து சுபாவமாக விகாரமின்றிய தாயினும் சோபாதிகமாக அஃது சம்பவிக்கின்றது எனக் கூறுகின்ருர்

सविकारया -விகாரத்தோடு கூடிய

असच्छक्त्या -சட சக்தியின் சம்பந்தத்தால்

भगवतः चिच्छक्तिः -பரமான்மாவின் சிற் சக்தியானது

उद्रिच्यते -விகார (சகத்து) வடிவத்தால் வெளிப்பாட்டை யடைகின்றது. (228)

(அ) அவரது மதத்தை முடிக்கின்றார்:—

इत्येवं कथयन्ति केचिदपरे श्रद्धालवस्तत्पुनः
कस्याञ्चिद् भुवि संमतं च विदुषां नेष्टं तु भूम्यन्तरे ।
कर्मोपास्तिविधानभूमिषु तथा सत्संमतं निर्गुणे
तत्त्वे तत्परवेदवाक्यविषये त्वालोचिते नेष्यते ॥ २२९ ॥

பதவுரை

इत्येव केचिदपरे —இங்ஙனம் இங்ஙனம் வேறு சிலர்

श्रद्धालवः —சிரத்தையினையுடையவராய்

कथयन्ति — கூறுகின்றனர்

பிரகாரியையும் பிரகாரத்தையும் அநுவதித்தற் பொருட்டு இங்ஙனம் என இருபதமாம். அவர்களுக்குக் கூறிய அர்த்தத்தில் யாதொரு பிரமாணமுமின்றும் மற்றே தமது குரு வாக்கியங்களிலுள்ள சிரத்தைமாத்திரத்தினுல் இங்ஙனம் கூறுகின்றனர் என்று கருதி சிரத்தையுடையவரெனப்பட்டது. "இவ்வான்மாவிற்கு பராசத்தி நாநாவிதமாகக் கேட்கப் படுகின்றது" என்னுஞ்சுருதியோ பரமான ஓர் மாயாசத்திக்கே காரியபேதத்தாலேயே நாநாவிதத் தன்மையை கூறுகின்றது "தனது குணங்களால் மறைக்கப்பட்ட தேவான்மசத்தியை" யென அதற்கே சத்துவாதிகுணமயத் தன்மையைக்கூறுதலின். சிற்சத்தி ஈண்டு கேட்கப்படுகின்றதில்லை வேறிடத்துமின்று மென்பது கருத்து

மேலும் எவர்களால் இந்த மதம் பிரவிர்த்திக்கப்பட்டதோ அவர்கட்கும் முற்கூறிய விகார திருஷ்டி தசையின்கண்ணேயே இஃது சம்மதமாம் சத்திக்கும் சத்தியுடையதற்கும் அபேத தசையின்கண் தரும தருமி பாவம் பொருந்தாமையின். வேத தசையிலும் பிரம்மத்திற்கு சடத்துவம் பிராப்தியாதலாலும் "விஞ்ஞானமானந்தம்" என்பதாதி சுருதிக்கு விரோதம் வருதலாலுமென்க. ஆதலால் கூறிய விகார திருஷ்டி தசையின் கண் இஃது பொருத்தமாம். விவர்த்ததிருஷ்டி தசையின்கண் பொருத்தமன்றாம் எனக் கூறுகின்றார்.

तत्पुनः -மேற் கூறிய மதமானது
कस्यांचिद्भुवि - சில பூமியின் கண்
संमतं च -சம்மதமாம்
भूम्यन्तरे तु -வேறு பூமியின் கண்ணே
विदुषां नेष्टम् -வித்வான்களுக்கு சம்மதமின்றும்

சில என்பதனை விஸ்தரிக்கின்றார்.

कर्मोपासितविधानभूमिषु - கருமோபாஸனைகளை விதிக்கின்ற ஸ்தலங்களில்
तथा सत्सम्मतम् - அவ்வாறு சாதுக்களுக்கு சம்மதமாம்

வேறு பூமியின் கண் என்பதனை விஸ்தரிக்கின்றார்.

तत्परवेदवाक्यविषये - நிருவிசேஷவஸ்துவின் கண் தாற்பரியமுள்ள வேதாந்த வாக்கியத்திற்கு விஷயமாக
आलोचिते - விசாரிக்கப்பட்ட
निर्गुणे तत्त्वे तु -நிர்குணவஸ்துவின் கண்ணே
न इष्यते - அங்கீகரிக்கப்படுகின்றதில்லை

நிர்குணதத்துவ பரமான வாக்கிய விஷயத்தின் விசாரம் न स्थानतोऽपि परस्य ந ஸ்தானதோபி பரஸ்ய என்னுஞ் சூத்திரத்தின்கண் தெரிசிப்பிக்கப்பட்டது என்பது கருத்து. (229)

(அ) மேலும் ''பிரகிருத ஏதாவத்வம்'' என்னுஞ் சூத்திரத்தால் நிச்சயிக்கப்பட்ட மூர்த்தா மூர்த்தப் பிரமாணத்தின் தாற்பரியத்தாலும் பூதபௌதிக ஆவ்வவ்வாசனான்மக சமஸ்தப் பிரபஞ்சத்தின் நிஷேதத்தால் அத்துவய சிதானந்தாதிவடிவ அகண்டப் பிரம்மமே பரமார்த்தத்தன்மையால் நிச்சயிக்கப் பட்டமையின் கூறிய பரிணாமவாதம் வாஸ்தவமாகக் கிரகிக்கத் தக்கதன்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

मूर्तामूर्ततदुत्थलिङ्गपुरुषव्यामिश्रभूता चिति-
र्वीप्सापूर्वकनेति नेति वचनप्रध्वस्तसर्वद्वया ।

संपूर्णे परमे सुखे परिहृताशेषे शिवे शाश्वते
नित्ये शुद्धमहिम्नि तायिनि परे भूम्न्यक्षरे तिष्ठति ॥

பதவுரை

| | |
|---|---|
| मूर्तामूर्ततदुत्थलिङ्गपुरुष-व्यामिश्रभूता चितिः | மூர்த்தமும் அமூர்த்தமும் அவற்று லுண்டான லிங்க சரீரத்தை யுபாதி யாகவுடைய புருஷனுமாகிய இவை களில் கலந்துள்ள யாதொரு சேதனமுண்டோ அது |
| वीप्सापूर्वकनेति नेति वचनप्रध्वस्त सर्वद्वया | வீப்ஸையின் (இரண்டு தடவை சொல்லுதல்) வாயிலாக இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் வசனத்தால் சருவத்துவைதமும் எப்போது நீக்கப்பட்டதாக ஆகின்றதோ அப்போது |

संपूर्णे परमे सुखे – அபரிச்சின்ன நித்திய சுக வடிவமும்

परिहृताशेषे – நாமரூபமற்றதும்

शिवे शाश्वते - சிவமும் சாஸ்வதமும்

नित्ये शुद्धमहिम्नि - நித்தியமும் சுத்த சொரூபமும்

तायिनि परे – வியாபகமும் பரமும்

भूम्नि अक्षरे –அக்ஷரமுமாகிய பிரம்மத்தின்கண்

तिष्ठति – நிலைபெறுகின்றது

விசேஷவுரை

'மூர்த்தமும் அமூர்த்தமுமென பிரம்மத்திற்கு இரண்டு வடிவங்கள்' என்பதாதியால் பிருதிவி அப்பு தேஜஸ் என்பவற்றை மூர்த்தமாகவும் வாயு ஆகாசம் என்பவற்றை அமூர்த்தமாகவும் இங்ஙனம் சருவசகத்தையும் இரண்டு விதமாக உபபாதனஞ் செய்து அத்தியான்மம் அதிதெய்வமாகிய இவற்றை அமூர்த்தரசான்மக லிங்க வடிவ புருஷனுக்கூறி "அந்த இப்புருஷனுடைய வடிவம் எப்படி மகாரஜதம்வாஸ:" என்பதாதியால் அதன் வாசனு வடிவ சொப்பனுதிப் பிரபஞ்

சத்தைக் கூறி "இனி இதுவுமல்ல இதுவுமல்ல என்பது பிரம்மத்தின் உபதேசம்" என்பதாதியால் வீப்ஸையினுல் பிரகிருத சருவத்துவைதத்தினையும் நேரே நிஷேதிக்கின்றதாகி சுருதி அவ்வெல்லாவற்றிற்கும் மித்தியாத் தன்மையினையே தெரிசிப்பிக்கின்றது. இதனினின்றும் அன்னியம் என்பதாதியால் நிஷேதத்திற்கு அவதியாய் உருவமுடையப் பிரம்மம் வாஸ்தவமாமெனப் பிரதிபாதிக்கின்றதில்லை. ஆதலால் பரிணுமவாதம் பொருத்தமன்ருமென்பது பொருள்.

மகாரஜதம்=பொன், வாஸ:=வீடு. (230)

(அ) அற்றேல் சத்தியத் தன்மையால் பிரசித்தமான பிரபஞ்சத்திற்கு சுருதியினுலும் நிஷேதஞ்செய்யமுடியாது. சத்தியத் தன்மையின் அநுபவத்திற்கு விரோதம் வருதலின் என்ருசங்கித்து தன்னுலும் 'பிறவற்ருலும் சத்தியத் தன்மையின் சித்தி சம்பவியாமையின் தன்னுற் சித்தித்த சைதன்யத்தின்கண் தாதான்மிய அத்தியாசத்தினுலேயே அத்தகைய அநுபவமாமென்று கருதி வேறு பிரகாரத்தால் அதன் சித்தியின் அநுபபத்தியினைக் கூறுகின்ருர்:—

जगन्महिम्ना न जगत्प्रसिद्धिर्न चिन्महिम्नाऽपि जगत्प्रसिद्धिः ।
नच प्रमाणाज्जगतः प्रसिद्धिस्ततोऽस्य मायामयताप्रसिद्धिः ॥ २३१ ॥

பதவுரை

जगन्महिम्ना - சடப்பிரமேயவஸ்துவின் சாமர்த்தியத்தால்
न जगत्प्रसिद्धिः -சகத்தின் சித்தியின்ரும்

அப்படியாளுல் சுவப்பிரகாச சைதன்யத்தின் சாமர்த்தியத்தினுல் அதன் சித்தியாமெனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

चिन्महिम्नाऽपि - சேதனத்தின் சாமர்த்தியத்தினுலும்
न जगत्प्रसिद्धिः - சகத்தின் சித்தியின்ரும்

அங்ஙனமாயினும் பிரத்யக்ஷாதி பிமாணத்தின் சாமர்த்தியத்தினுல் அதன் பிரசித்தியாமெனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்.

प्रमाणात् - பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களாலும்

नच जगतः प्रसिद्धिः -சகத்தின் சித்தியின்ரும்

ஈண்டுள்ள பிரதிஞ்ஞைகளெல்லாவற்றின்கண்ணும் ஏதுக்களை அடுத்த சுலோகத்திற் கூறுவர். அப்படியானுல் அதன் பிரதீதி யாங்ஙனமென்ருசங்கித்து சொப்பனம்போன்று அஃது பிராந்தியேயாமென்று கருதி அதன் உபபத்தியின்பொருட்டு சகத்திற்கு அநிர்வசநீய மாயையினுல் உண்டான தன்மையைக் கூறுகின்ருர்

ततोऽस्य -ஆதலால் இச்சகத்திற்கு

मायामयताप्रसिद्धिः - மாயையின் காரியத்தன்மை சித்தியாம்

உபபத்தி=பொருத்தம். (231)

(அ) இப்போது பிரதிஞ்ஞைசெய்யப்பெற்ற அர்த்தங்களைக் கிரமமாக ஏதுக்களால் சாதிக்கின்ருர்:—

जडत्वहेतोर्न जगन्महिम्ना न चिन्महिम्ना तदसङ्गभावात् ।
नच प्रमाणात्तदकारकत्वात् कृतस्य जाड्यादजडाजनेश्च ॥

பதவுரை

जगन्महिम्ना -சகத்தின் சாமர்த்தியத்தால்

न – சகத்தின் சித்தியின்ரும்

जडत्वहेतोः - சடத்வமாதலின்

चिन्महिम्ना -சைதன்யத்தின் சாமர்த்தியத்தால்

न – சகத்தின் சித்தியின்ரும்

तदसङ्गभावात् - அது அசங்கமாதலின்

प्रमाणात् -பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களாலும்

न च - சகத்தின் சித்தியின்ரும்

तदकारकत्वात् - அவற்றிற்கு ஒன்றை யுண்டுபண்ணுந் தன்மையின்மையின்

कृतस्य जाड्यात् – காரியத்திற்கு சடத்தன்மை நியமமாதலானும்

अजडाजनेश्च –அசடசம்வித்திற்கு உற்பத்தியின்மையினுலுமென்க

## விசேஷவுரை

சகத்தின் சித்தியென்பது மூன்றிடத்தும் வருவிக்கப்பட்டது. சடபதார்த்தங்களுக்கு தன்னுலாவது பரஸ்பரத்தாலாவது சித்தியையங்கீகரிக்கின் தமது சத்தையின்கண் சமுசயாதி பொருந்தாமற்போம். ஆதலால் சகத்தின் சாமர்த்தியத்தால் அதன் சித்தியின்ரும். சுவப்ரகாசசித்தின் சாமர்த்தியத்தாலுமின்ரும். அதற்கு கூடஸ்த அசங்கவடிவத் தன்மையுண்மையால் வாஸ்தவமாக சடசம்பந்தமின்மையினுல் அதனைச் சாதிக்குந்தன்மை பொருந்தாமையின். பிரமாணங்கட்கும் சொருபமாக சாதிக்குந்தன்மை பொருந்தாமையின். சடப்பயணையாவது அசடப்பயணையாவது யுண்டுபண்ணி அதனைச் சாதிக்குந்தன்மை சொல்லத்தக்கதாம். அதுவும் பொருந்துவதின்ரும். அவைகட்கு வியஞ்சகத்தன்மையுண்மையால் காரகத்தன்மை பொருந்தாமையின். சுவப்பிரகாச சம்வித் ஜனகத்தன்மையே வியஞ்சகத்தன்மையாமென்று சொல்லற்க. ஜன்னியவஸ்துவிற்குக் கடாதிக்குப்போன்று சுவப்பிரகாசத்தன்மை பொருந்தாமையினுலும் சுவப்பிரகாச வஸ்துவிற்கு கூடஸ்தத் தன்மையுண்மையால் உற்பத்தி பொருந்தாமையினுலுமென்க. (232)

(அ) அற்றேல் சுவப்பிரகாச சைதன்யத்தின் சாமர்த்தியத்தினுலேயே சடப்பிரபஞ்சத்தின் சித்தியுண்டாம் அவைகட்கு (சைதன்யத்திற்கும் பிரபஞ்சத்திற்கும்) சம்பந்தமின்ருமென்னற்க. விஷயவிஷயிபாவவடிவ சம்பந்தம் சம்பவித்தலின் என்ருசங்கித்து அச்சம்பந்தம் திருக்குதிருசியமாத்திரத்தினதீனமாயின் அதிப்பிரசங்கமாம் ஆதலால் அதற்குப் பிரயோஜகமாக வேறு அவைகட்கு அசாதாரண சம்பந்தம் கூறத்தக்கது. தாதான்மியமாவது சம்யோகமாவது சமவாயமாவது திருக்குதிருசியங்கட்கு சம்பவியாது, அவைகளின் விஷயவிஷயிபாவ சம்பந்தத்திற்குக்காரணமாக வேறே முக்கிய சம்பந்தமுமின்ரும் ஆதலால் அன்னிய சம்பந்தத்தையபேக்ஷிக்கின்ற விஷயவிஷயிபாவ வடிவ சம்பந்தமுமின்ருமென்று கருதிக்கூறுகின்ருர்.

न सङ्करो नापि च संयुतिस्तयोर्न चास्ति तद्वत् समवायसंभवः ।
ततो न चिच्चेत्यसमन्वयं प्रति प्रतीयते काचन मूलसङ्गतिः ॥ २२३ ॥

பதவுரை

तयोः न सङ्करः - திருக்கு திருசியங்கட்கு தாதான்மிய சம்பந்தமின்றும்

नापि च संयुतिः - சம்யோக சம்பந்தமுமின்றும்

तद्वत् समवायसम्भवः न चास्ति - அதுபோன்று சமவாய சம்பந்தமுமின்றும்

ततः - ஆதலால்

चिच्चेत्यसमन्वयं प्रति - திருக்கு திருசியங்களின் சம்பந்தத்தை குறித்து

काचन मूलसङ्गतिः - ஓர் மூல சம்பந்தம்

न प्रतीयते - அறியப்படுகின்றதில்லை.

விசேஷவுரை

பேதாபேதங்கட்குள்ள சம்பந்தம் தாதான்மியமாம். திருக்குவஸ்துவோடு திருசிய வஸ்துவிற்கு அஞ்ஞான கற்பித தாதான்மியமுளதெனின் அஃது எமக்கும் சம்மதமாம். வாஸ்தவ தாதான்மியமோ உட்டன்மை புறத்தன்மையால் விரோதமிருத்தலின் சம்பவிப்பதின்றும். பேதாபேதங்கட்கும் பரஸ்பரம் விரோதமிருத்தலின் தாதான்மிய வடிவ அச் சம்பந்தம் ஓரிடத்தும் சம்பவிக்கின்றதில்லை. இவ்வாறு திருக்கு வஸ்து திரவியமன்மையின் அதனுடன் சம்யோகமும் பொருந்துகிறதில்லை. குணாதி திருசியங்கட்கும் அஃது பொருந்தாமையினாலும் என்க. சமவாய சம்பந்தமும் சருவ திருசியத்திற்கு திருக்கு வஸ்துவோடு எவராலும் அங்கீகரிக்கப் படுகின்றதில்லை. அஃது அப்பிராமாணிகமாதலால் யாண்டும் அதற்கு இருப்பு இன்மையினாலும். ஆதலால் திருக்கு திருசியங்கட்கு மூலசம்பந்தம் யாதொன்றுமின்மையின் விஷய விஷயித் தன்மைச் சம்பந்தம் சம்பவிப்பதின்றும் என்பது கருத்து. (௨௨௩)

(அ) அற்றேல் திருக்குத் திருசியங்கட்கு விஷய விஷயித் தன்மைச் சம்பந்தத்தின்கண் யோக்கியதையே மூலசம்பந்த மாம் என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

न योग्यतामात्रनिबन्धनो भवेज्जडात्मनोरत्र विवक्षितोऽन्वयः।
तदा हि तस्या अनपायिरूपतः सदात्मनः स्यादनपायिसंसृतिः ॥

பதவுரை

योग्यतामात्रनिबन्धनः - விஷய விஷயித்துவ யோக்கியதை மாத்திரத்தைக் காரணமாகக்கொண்டு

जडात्मनोः - திருக்குத் திருசியங்களின்

विवक्षितोऽन्वयः - விவக்ஷிக்கப்பட்ட விஷய விஷயித்துவ சம்பந்தம்

अत्र न भवेत् - ஈண்டு சம்பவியாது.

அந்த யோக்கியதையானது அதன் சொருபமேயா அல்லது அதனின்றும் வேறு? இரண்டாவது பக்ஷத்தின் கண்ணும் அஃது நித்தியமா அல்லது அநித்தியமா? அநித் தியமென்னும் இரண்டாவது பக்ஷம் சரியன்று. அதன் காரணத்தை நிரூபிக்க முடியாமையினாலும் கூடஸ்த அசங்க வடிவ திருக்கு வஸ்துவிற்கு தன்னாலும் அன்னியத்தாலும் அஃது சம்பவியாமையினாலும் என்று கருதி சொருப பக்ஷத் திலும் நித்திய பக்ஷத்திலும் திருசிய தரிசனத்தின் ஆபத்தி வருதலின் அதன் (திருசிய தரிசனத்தின்) அதீனமான சமுசாரத்திற்கு ஓர்போதும் நிவர்த்தியுண்டாகாது எனக் கூறுகின்றார்.

तदा हि - அப்போது அதாவது யோக்கியதையே நிமித்த மாயின்

तस्या अनपायिरूपतः - யோக்கியதையின் வடிவம் நித்திய மாதலால்

सदात्मनः - சத்து வடிவ ஆன்மாவிற்கு

अनपायिसंसृतिः स्यात् - சமுசாரம்நித்தியமாம். (234)

(அ) அற்றேல் சொரூப சம்பந்தமே திருக்குத் திருசியங்களின் விஷய விஷயித் தன்மைக்கு நியாமகமாம் எனின் அற்றன்று அஃது ஞானசொரூபமாத்திரமாயின் அதிவியாப்தியாம் (கடஞானத்திற்குப் படம் விஷயமாதல் வேண்டும்). கடாதிவடிவ ஞேயவிசேஷ சொரூபமாயின் அன்னிய வஸ்து அதற்கு விஷயமாக ஆகாது. அதற்கு (சொரூப சம்பந்தத்திற்கு) ஞேயமாத்திர சொரூபத்தினையங்கீகரிக்கினும் அதிவியாப்தி சமானமேயாம். இதனாலேயே ஞானஞேய உபய வடிவத் தன்மையின்றும். அவ்வாறாயின் கூறிய தோஷத்தைப் பரிகரிக்கக்கூடாமையின்.

அற்றேல் வேறு சம்பந்தமின்றி விசிஷ்ட ஞானத்தின் விஷயத் தன்மையே சொரூப சம்பந்தமாமெனின் அற்றன்று விசிஷ்ட ஞானத்தின்கண் சம்பந்தம் உள்ளடங்கியிருத்தலால் ஆன்மாசிரய தோஷமுண்டாம். மற்றும் வருணிக்கப்பட்ட விஷயத் தன்மையைக் குறித்து விசிஷ்ட ஞானம் விசேஷணமாவது உபலக்ஷணமாவது ஆகும். முதற்பக்ஷத்தில் விசிஷ்ட ஞான விசிஷ்ட விஷயத் தன்மை வடிவ சம்பந்தத்தை விஷயஞ்செய்கின்ற விசிஷ்ட ஞானத்திற்கு விசேஷண கோசரத் தன்மையுமாம். அதுவோ பொருத்தமன்றும். அன்னியரால் அஃது அங்கீகரிக்கப்படுகின்றதுமில்லை- இரண்டாவது பக்ஷத்தில் விஷயத் தன்மை மாத்திரம் சொரூப சம்பந்தமெனக் கூறப்பட்டதாக ஆகும். இவ்வாறாகவே அதிவியாப்தி பரிகரிக்கத்தகாதாம். ஆதலால் அவித்தையினாற் கற்பிதமான அநிர்வசநீய சொரூப சம்பந்தத்தாலேயே சேதனத்தின் சாமர்த்தியத்தால் ஆகாசாதி சடப்ரபஞ்சத்தின் பிரசித்தியாம் எனக் கூறத்தக்கது. ஆதலின் சடமனைத்தும் சேதனத்தின் விவர்த்தமாமென அவசியம் கொள்ளற்பாலதெனக் கூறுகின்றார்:—

ततो वियन्मुख्यमदो जगज्जडं चिदात्मनोऽस्यैव विवर्त इष्यताम् ।
अनाद्यविद्यापटसंवृतात्मनस्तदोपलभ्यत्वममुष्य कल्प्यते ॥ २३५ ॥

பதவுரை

ततः—ஆதலால் அதாவது திருக்குத்திருசியங்கட்கு சம்பந்தம் பொருந்தாமையினால்

वियत्प्रमुखम् -ஆகாசம் முதலான

अदः -பரோக்ஷமாயும் அபரோக்ஷமாயுமுள்ள

जडं जगत् -சடப் பிரபஞ்சம்

अनाद्यविद्यापटसंवृतात्मनः - அநாதியவித்தையாகிற படத்திஞல்மறைக்கப்பட்ட வடிவினதாகிய

अस्य चिदात्मनः एव -இச்சிதான்மாவினதே

विवर्त इष्यताम् - விவர்த்தமாக அங்கீகரிக்கத்தக்கதாம்

तदा-சேதனத்தின் விவர்த்தமாகும்போது

अमुष्य - இப்பிரபஞ்சத்திற்கு

उपलक्ष्यत्वम् - அறியப்படுந்தன்மை

कल्प्यते - சற்பிக்கப்படுகின்றது

விசேஷவுரை

சேதனத்தின் விவர்த்தமாயின் சருவமும் சேதனத்தில் அத்யாசமாயிருத்தலால் எல்லாமும் எப்போதும் அச்சித்திஞல் விளங்கவேண்டும் என்ருசங்கித்து மறைக்கப்பட்ட சைதன்யம் தானும் விளங்காமையால் அதற்கு அன்னியத்தை விளக்குந் தன்மை வெகுதூரயாம் இன்ருமென்பது பொருள். எப்பதார்த்தத்திற்கு பிரமாணஜன்னிய விருத்திஞானத்தின்கண் மறைக்கப்படாத சித்தின் சம்பந்தம் சம்பவிக்கின்றதோ அதுவே அப்போது அதனைல் விளங்குகின்றது என அதன் நியமம் பொருத்தமாம் என்னுங்கருத்தால் அநாதியவித்தையென்பதாதி விசேஷணங் கூறப்பட்டது (235)

(அ) அற்றேல் சம்வித்திற்கு ப்ரமாணத்தின் பயனுந் தன்மையால் பேதம் அபாவம் உற்பத்தி நாசம் முதலியவை அநுபவிக்கப்படுகின்றன. ஆதலால் அது சருவாதிஷ்டானமாக எங்ஙனமாகும்? ஆகாசம் முதலியவைதான் அதன் விவர்த்தமாக எங்ஙனமாமென்ருசங்கித்து அதன் பேதம் முதலியது உபாதியின் பராமரிசமின்றியறியப்படாமையின் அதன்கண் உபாதி கற்பிதமானதுவே பிராந்தியினுல் அநு

பவிக்கப்படுகின்றது. பிரமாணத்தாலன்றும் என முன்னமே உபபாதனஞ்செய்யப்பட்டது. ஆதலால் கூடஸ்த அத்துவயாதிவடிவ அச்சம்வித்தே சருவவிவர்த்தாதிஷ்டானமாதலின் கூறிய தோஷமின்றும் என்று கருதிக் கூறுகின்றார்:—

संविित्तिभेदतदभावतदीयजन्मनाशादयो न खलु मानबलेन लभ्याः ।
न ह्यस्ति मानमिह किंचन तद् यदस्याः धर्मस्वरूपविषयीकरणे समर्थम् ॥

பதவுரை

संवित्तिभेद तदभाव तदीय जन्मनाशादयः — ஞானத்தின் பேதம் அதனபாவம் அதன் உற்பத்திநாசம் முதலியவைகள்

मानबलेन — பிரமாணத்தின் சாமர்த்தியத்தால்

न खलु लभ्याः — அறியத்தக்கனவன்றும்

மேலும் சொப்பிரகாசவடிவ சம்வித்திற்கு வேறு பிரகாசத்தின் விஷயத்தன்மையின்மையினுல் அஃது சொரூபமாகவாவது பேதம் முதலியவற்றின் தருமியாகவாவது பிரமாணந்தரத்தால் சித்திக்கிறதில்லை. தானே தனது சத்தை மாத்திரத்தைச்சாதிப்பதாம். பேதம் முதலியவற்றையும் சாதிப்பதின்றும். இங்ஙனம் சாதகமின்மையினுலேயே ஞானத்தின் பேதம் முதலியவை சித்தியாவெனக் கூறுகின்றார்.

अस्याः — சம்வித்தினது

धर्मस्वरूपविषयीकरणे — தருமத்தையும் சொரூபத்தையும் விஷயஞ் செய்வதன் கண்

यत् समर्थम् — யாதொன்று சமர்த்தமாமோ

तत् मानम् — அத்தகைய பிரமாணம்

इह किंचन — ஈண்டு யாதொன்றும்

नहि अस्ति — இன்றுமாதலின் (236)

(அ) அப்படியாஞல் சம்வித்திற்குப் பிரமாணத்தின் பயனுந்தன்மை எங்ஙனமாமென்றுசங்கித்து நிருபாதிகமான

சம்வித்திற்குக் கூறிய பிரகாரத்தால் கூடஸ்தத் தன்மை முதலியவை சித்தித்தபோது அவற்றிற்கு விரோதம் வருதலின் வாஸ்தவமாகப் பிரமாணத்தின் பயனுந்தன்மையும் இல்லையெனக் கூறுகின்றார்:—

तस्मान्न मानफलता निरूपाधिकस्य संवेदनस्य घटतेऽविषयत्वहेतोः।
एवं च मानफलसिद्धिसमन्वयेन सिद्धिर्जडस्य जगतो न कदाचिदस्ति॥

பதவுரை

तस्मात् - ஆதலால்

निरूपाधिकस्य संवेदनस्य - நிருபாதிகமான ஸம்வேதனத்திற்கு

मानफलता - பிரமாணத்தின் பயனுந்தன்மை

न घटते - பொருந்துவதின்றும்

ஆதலாலென்னும் பதார்த்தத்தையே கூறுகின்றார்.

अविषयत्वहेतोः - உற்பத்தி முதலியவற்றினைச் சாதிக்கும் பிரமாணத்தின் விஷயத்தன்மையின்மையின்

கூறிய ரீதியினால் சொப்பிரகாச சம்வேதனத்திற்குப் பிரமாணத்தின் பயனுந்தன்மை பொருந்தாமையினாலும் பிரமாணம் சடமாயின் சகத்திற்கு அந்தகாரத்தன்மைப் பிராப்தியாதலினாலும் பிறரது மதத்தின்கண் பிரமாணத்தின் பயனுயுள்ள சம்வேதனத்தின் விஷயத்தன்மையால் யாதொரு சடத்தின் சித்தியுண்டோ அதாவது அதன் அசத்துவாதி சங்கையின் நிவிருத்தி அங்கீகரிக்கப்பட்டதோ அது பொருந்துகிறதில்லையெனத் திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

एवं च - ஸம்வித்திற்குக் கூடஸ்தத் தன்மையுண்மையால் வாஸ்தவமாகப் பிரமாணத்தின் பயனுந்தன்மையின்றுமென சித்தித்தபோது

मानफलसिद्धि समन्वयेन - பிரமாணத்தின் பயன் வடிவ யாதொரு சித்தியுண்டோ அதன் சம்பந்தத்தால்

जडस्य जगतः - சடமாகிய சகத்தின்

सिद्धिः कदाचित् - விளக்கம் ஓர் போதும்

नास्ति - இன்ரும் (237)

(அ) அற்றேல் சித்தாந்தத்தின்கண்ணும் பிரத்தியக் சைதன்யத்தின்கண் பாஹ்ய சடபதார்த்தத்திற்கு சம்பந்தம் பொருந்தாமையின் சைதன்யத்தின் மகிமையால் சடத்தின் விளக்கமெங்ஙனமுண்டாம். சம்பந்தமின்றியே சைதன்யம் அதனைச் சாதிக்கின்றது என்னலும் பொருந்தாது. அதிவியாப்தி வருதலினுலும் பரோக்ஷாபரோக்ஷ வேற்றுமை பொருந்தாமையினுலும் என்ருசங்கித்து சேதனத்திற்கும் சடத்திற்கும் பரஸ்பர தாதான்மியாத்தியாசத்தையங்கீகரித்திருத்தலால் ஆத்யாசிக சம்பந்தத்தாலேயே சடத்தை சாதிக்கின்றதாய் சைதன்யம் விருத்திவிசேஷத்தோடு சம்பந்தமுற்ற விஷயத்தால் அபிவியக்தமாயிருந்துகொண்டு அவ்விஷயத்தை அபரோக்ஷமாக விளக்குகின்றது. கேவல ஆவ்விஷயாகார விருத்தியினுல் அபிவியக்தமாயிருந்துகொண்டு அவ்விஷயத்தை பரோக்ஷமாக விளக்குகின்றது. ஆதலால் எமது மதத்தின்கண் யாதொரு அநுபபத்தியுமின்ருமென்னுங்கருத்தால் கூறுகின்ருர்.

इतरेतराध्यसनमस्त्वनयोरुभयोरतो दृगदृशोरनिशम् ।
अपरस्परव्यतिकरानुभवादिह शुक्तिकारजतविभ्रमवत् ॥ २३८ ॥

பதவுரை

अतः - சம்பந்தாந்தரம் சம்பவியாமையின்

अनयोः दृगदृशोः उभयोः - இந்தத் திருக்குத்திருசியமென்னுமிரண்டற்கும்

इतरेतराध्यसनं अस्तु - அன்னியோன்னியாத்தியாசமிருக்கட்டும்.

அங்ஙனமாயினும் (சம்பந்தாந்தரம் சம்பவியாவிடினும்) இரண்டில் ஒன்றன் அத்தியாசமேயிருக்கட்டும் அன்னியோன்னியாத்தியாசம் வேண்டாம் என்ரு சங்கித்து "பிராந்திகளில் அத்தியஸ்தமே விளங்குகிறது" என்பதாதியால் முதலாவது அத்தியாயத்தில் 36-வது சுலோகத்தில் கூறப்

பட்டதனை நினைப்பூட்டுகின்றவராய் கடம் விளங்குகின்றது இருக்கின்றது கடம் என்பதாதி யநுபவத்தினைத் திருஷ்டாந்த சகிதமாக அதன் (அன்னியோன்னியாத்தியாசத்தின்) சித்தியில் ஏதுவாகக் கூறுகின்றார்.

शुक्तिकारजत विभ्रमवत् - இது ரஜதம் என்னும் பிராந்தி போன்று

इह अपरस्परव्यतिकरानुभवात् - ஈண்டு அன்னியோன்னியாத்தியாசம் அநுபவிக்கப்படுதலின் (238)

(அ) அன்னியோன்னியாத்தியாசத்தின்கண் அத்தியஸ்தங்களான சேதன சடங்கட்கு மித்தியாத்தன்மை யுண்மையின் சூனியமே பரமதத்துவமாகுமென்று முற்கூறிய அநுசந்தானத்தின் கண் சாமர்த்தியமின்றிய ஒருவன் சங்கிப்பானாயின் அவனைக் குறித்து முதலாவது அத்தியாயத்திற் கூறப்பட்ட பரிகாரத்தினை நினைப்பூட்டுகின்றார். என்று ஒருவன் எனக் கூட்டுக.

संसिद्धा सविलासमोहविषये वस्तुन्यधिष्ठानगी-
र्नाधारेऽध्यसनस्य वस्तुनि ततोऽस्थाने महान् संभ्रमः ।
केषांचिन्महतामनूनतमसां पाण्डित्यगर्वादय-
मन्योन्याध्यसने निरास्पदमिदं शून्यं जगत्स्यादिति ॥ २३९ ॥

பதவுரை

सविलासमोहविषये वस्तुनि - காரிய சகித அக்ஞானத்தின் விஷயமான வஸ்துவின் கண்

अधिष्ठानगीः -அதிஷ்டான மென்னும் பெயர்

संसिद्धा - பிரசித்தமாம்

अध्यसनस्य -அத்யாசத்தின்

आधारे वस्तुनि -ஆதாரமாகிய வஸ்துவின் கண்

न - அதிஷ்டான மென்னும் பெயரின்றாம்

ततः -ஆதலால்

अनूनतमसाम् மிக்க அறியாமையினையுடைய

केषांचिन्महताम् சில மகான்களுக்கு

पाण्डित्यगर्वात् - பண்டிதத்தன்மையின் கருவத்தினுல் உண்டாகா நின்ற

अन्योन्याध्यासने - சிற்சடங்களுக்கு அன்னியோன்யாத்தியாசத்தை யங்கீகரிக்கின்

इदं जगत् -இந்தப் பிரபஞ்சமானது

निरास्पदम् -ஆசிரயமற்றதாய்

शून्यं स्यादिति -சூனியமாகுமென்னும்

महान् अयं संभ्रमः - மகத்தான இந்தப் பிராந்தியானது

अस्थाने - தகுதியற்றதாம்

ஆதலால் உண்டாகின்ற பிராந்தியானது தகுதியற்றதாமெனக் கூட்டுக.

விசேஷவுரை

சருவப் பிராந்திகளிலும் அதிஷ்டான ஆதாரங்கட்குப் பேதமுண்மையின் அறியப்படாத விசேஷாம்சம் அதிஷ்டானமாதலாலும் அதன்கண் அத்தியஸ்த பதார்த்தத்தோடு சமானுதிகிருதத்தன்மையால் தோற்றுகின்ற சாமான்யாம்சம் ஆதாரமாதலாலும் ஆதாரத்திற்கே பிரதீதியை யநுசரித்து அத்தியஸ்த சம்சிருஷ்ட (சம்பத்த) வடிவத்தால் ஆண்டு அத்தியஸ்தத் தன்மையை யங்கீகரித்தலின் அவ்வடிவத்தால் அதற்கு மித்யாத்தன்மை யிருப்பினும் அதன் விசேஷ வடிவமும் அஞ்ஞாதமும் அதிஷ்டான பதத்தால் அறியத்தக்கதும் அத்தியாச பாதக தத்துவஞான கோசரமும் சத்தியஞானுதி வடிவமுமான பரமான்மா பரமார்த்தத்தன்மையால் மிஞ்சுதலின் சூனிய வாதத்தின் பிராப்தியின்றும். அதன் அஞ்ஞானத்தாலேயே சிலருக்கு எமது மதத்தின்கண் அதன் ஆபாதனமாமென்பது பொருள். (239)

(அ) மேலும் இரண்டாவதத்தியாயத்தின்கண் புருஷாது புத்தியின் அவஸ்தா விசேஷத்தால் சகத்திற்கு பரிணுமத்

தன்மையினையும் இருவித விவர்த்தத் தன்மைகளையுமாசிரயித்து பிரம்மத்திற்கு அத்துவிதீயத் தன்மையைப் பிரதிபாதித்தலாலும் சூனியவாதப் பிராப்தியின்றுமென்று கருதி ஆண்டுக் கூறிய நான்கு சுலோகங்களையும் அநுவதிக்கின்றார்:—

कृपणमध्यमपक्वधियां नृणां मतिविलासविधात्रितयं क्रमात् ।
परिणतिर्बहुजीवतमस्विता परमपुंसि तमःपरिकल्पना ॥ २४० ॥

பதவுரை

**कृपणमध्यमपक्वधियां नृणाम्** - கிருபணரும் மத்திமரும் பரிபக்குவமதியினருமான மனிதர்களின்

**मतिविलास विधात्रितयम्** - புத்திவிலாசத்தின் மூவிதத் தன்மையினை யபேக்ஷித்து

**क्रमात्** - கிரமமாக

**परिणतिः** - பரிணாமவாதமும்

**बहुजीवतमस्विता** - அநேக சீவர்களுக்கு அஞ்ஞானமும்

**परमपुंसि** - பரமான்மாவின்கண்

**तमःपरिकल्पना** - அஞ்ஞானத்தின் கற்பனையும் கூறப்பட்டது.

விசேஷவுரை

பேதத்தின்கண் அத்தியந்தம் அபிநிவேசத்தால் நான் ஈசுவரன் முதலானோரது பராதீனன் சமுசாரியே என தீன மதியினர் எவரோ அவர் கிருபணரெனப்படுவர்.

அத்தியந்த பேதவாதத்தின்கண் காரிய காரணத்தன்மை முதலியவை பொருந்தாமையின் அதனைப் பரித்தியாகஞ் செய்து பிரம்மத்தின் பரிணாமமே சகத்து என்று எவர் கருதுகின்றனரோ அவர் மத்திமரெனப்படுவர்.

விரோதம் முதலியவற்றின் அநுசந்தானத்தால் அதனையும் பரித்தியாகஞ்செய்து பிரம்மத்தின்கண் மாயையால் அநிர்வசநீயமாய் சகத்து உளது என்று எவர் கருதுகின்றனரோ அவர் பரிபக்குவ மதியினர். இவர்களது புத்தி விருத்தியின் மூவிதத்தன்மையினையபேக்ஷித்துக் கிரமமாக அத்தியந்த பேதபுத்தியைத் தள்ளுதற்பொருட்டு பரிணாமவாத

மாம். பரிணும புத்தியைத் தள்ளுதற்பொருட்டு அநேக சீவ அஞ்ஞானக் கற்பனையால் விவர்த்தவாதமாம் அதனையும் தள்ளுதலால் சுத்த சிதானந்தவடிவ பரமான்மாவே தனது அவித்தையினல் சுவப்பனுதிக்குச் சமானமான பந்தத்தை அநுபவிக்கிறது. தனது ஞானத்தால் விடுபடுகின்றது என அத்துவிதீயப் பிரம்மத்தின் சத்தியத்தன்மை உபபாதனஞ் செய்யப்பட்டது. ஆதலால் சூனியத்தன்மையின் ஆபத்தி யின்ருமென்பது பொருள். (240)

(அ) பரிணுமம் முதலியவற்றின் கற்பனையில் மூலம் யாதென்ருசங்கித்து "பரோக்ஷ வஸ்துவும் அபரோக்ஷ வஸ்துவுமாயிற்று". "வாக்கினுல் ஆரம்பிக்கப்படுகின்றது. விகாரம் நாமமாத்திரமாம்" என்பது முதலிய சுருதியும், "போக்தாவின் ஆபத்தியினுல்", "அதனனன்னியத்துவம் ஆரம்பண சத்தாதிகளால்" என்பது முதலிய சூத்திரமும் இச்சுருதி சூத்திரங்களை விஷயமாகவுடைய பாஷியமும் இதன்கண் மூலமாம் என்னுங்கருத்தாற்கூறுகின்ருர்:—

श्रुतिवचांसि मुनिस्मरणानि च द्वयविशारदगीरपि सर्वशः ।
त्रयमपेक्ष्य विधात्रितयं विना न हि घटामुपयान्ति कदाचन ॥

பதவுரை

श्रुतिवचांसि - சத்தும் தியத்துமாயிற்று என்பன முதலிய சுருதி வசனங்களும்

मुनिस्मरणानि च - போக்திரு ஆபத்தியினுல் என்பன முதலிய வியாச சூத்திரங்களும்

द्वयविशारदगीरपि - கூறிய சுருதி சூத்திரங்களின் வியாக்யான வடிவ பாஷிய வசனமும்

सर्वशः - சருவப் பிரகாரத்தாலும்

त्रयमपेक्ष्य - மூவித புருஷரையபேக்ஷித்துப் பிரவிருத்தித்தன.

இதனையே வியதிரேகமுகத்தால் திடஞ்செய்கின்ருர்.

विधात्रितयं विना - புருஷரின் மூவிதத்தைவிட்டு

कदाचन - ஓர்போதும் கூறிய வசனங்கள்

घटाम् न हि उपयान्ति - பொருத்தத்தையடைகின்றதில்லை. ஆதலின் (241)

(அ) விருத்தவிஷயத்தையுடையனவும் நாநா புருஷர்களிடத்திலிருப்பனவுமான இச்சிருஷ்டிகட்கு (பரிணமம் விவர்த்தங்கட்கு) அத்துவிதீயப் பிரம்மஞானத்தின்கண் பரியவ‘சானம் எங்ஙனமாயென்ருசங்கித்து அவஸ்தா விசேஷத்தையபேக்ஷித்து ஒருவனிடத்திலேயே அவைகட்கு இருப்பு கூறப்பட்டமையின் இச்சங்கை முன்னமே கண்டிக்கப் பட்டுளது என்னுங்கருத்தாற்கூறுகின்ருர்:—

पुरुषमेकमपेक्ष्य च भूमिकात्रितयमस्ति पुरोदितमेव तत् ।
तदनुपारवशादखिलश्रुतिस्मृति वचांसि वयं घटयामहे ॥ २४२ ॥

பதவுரை

एकं पुरुषमपेक्ष्य च - ஒரு புருஷனையபேக்ஷித்தே

भूमिकात्रितयमस्ति - அவஸ்தை மூன்றுமுளது. அதாவது மூவித சிருஷ்டியுளது.

तत् पुरोदितमेव - அஃது முன்பு கூறப்பட்டதேயாம்.

तदनुपारवशात् - ஒரு புருஷனிடத்துள்ள கிரமமாயுள்ள திருஷ்டிபேதத்தையநுசரித்தே

अखिलश्रुतिस्मृतिवचांसि - சருவ சுருதிஸ்மிருதி வாக்கியங்களையும்

वयं घटयामहे - நாங்கள் பிரதிபாதிக்கின்ருேம்.

2-வது அ. 93-வது சுலோகத்தில் கூறப்பட்டுள்ளது. (242)

(அ) அற்றேல் சூத்திரக்காரருக்குத்தான் பரிணமம் முதலிய திருஷ்டித்திரயத்தைச் சூத்திரிப்பதின்கண் யாது மூலமென்ருசங்கித்து சுருதிவசனங்கள் என்பதனுல் சூசிப்பிக்கப் பட்ட சூத்திரமூலத்தை விஸ்தரிக்கின்றவராய் முடிக்கின்ருர்.

परिणतिं च विवर्तदशाद्वयं स्थितमनुक्रमतः श्रुतिशासने ।
अनुशशास मुनिप्रवरः सुधीः पुरुषबुद्धिमपेक्ष्य यथाक्रमम् ॥ २४३ ॥

பதவுரை

श्रुतिशासने स्थितम् —சுருதி வாக்கியத்தின்கண்ணுள்ள
परिणतिम् – பரிணும வாதத்தினையும்
विवर्तदशाद्वयम् இருவித விவர்த்த வாதத்தினையும்
अनुक्रमतः – அநுசரித்து
यथाक्रमम् —கிரமப்படி
पुरुषबुद्धिमपेक्ष्य – புருஷருடைய புத்திபேதத்தை யபேக்ஷித்து
सुधीः मुनिप्रवरः – நல்ல புத்தியுடையவரும் முநிசிரேஷ்டருமான வியாசபகவான்
अनुशशास – சாஸனஞ்செய்தார். சூத்திரம் செய்தார் என்பது பொருள்.

விசேஷவுரை

"சத்தும் தியத்துமானுர்" "இந்திரர் மாயைகளால் அநேக வடிவங்களானுர்" "அஜையும் ஏகமும் லோஹித சுக்ல கிருஷ்ண வடிவமுமாம்" என்பதாதி சுருதி வாக்யார்த்த நிருணயத்தின் பொருட்டு அத்துவித ஞானத்தின்கண் பரியவசானமாகின்ற திருஷ்டித் திரயத்தை சூத்திரக்காரர் சூத்தரித்தார் (சூத்தரஞ் செய்தார்) என்பது பொருள். (243)

(அ) அற்றேல் நாமரூபான்மகமானப் பிரபஞ்சம் பிரம்மத்தின் பரிணுமமாயினும் அல்லது அதன் விவர்த்தமாயினும் பிரபஞ்சத்தினுள்ளடங்கிய சுருதிகட்கும் பிரம்மத்தின் காரியத் தன்மையால் பௌருஷேயத் தன்மைப் பிராப்தியாதலின் அப்பிராமாண்யமாம் ஆதலால் அவற்றின் அர்த்த நிச்சயத்தின் பொருட்டு சூத்திரத்தைச் செய்தல் எற்றிற்கு என தன்னை மீமாம்ஸகனுகக் கருதும் புருடன் சங்கிக்கின்றுன்:—

यदि परिणतिरेषा चिद्विवर्तोऽथवा स्यात्
भवति ननु तदानीं वेदशास्त्रे विरोधः ।

न हि खलु कृतकत्वेऽपौरुषेयत्वहेतु-
र्भवितुमलमियं नो मानता स्वप्रयुक्ता ॥ २४४ ॥

பதவுரை

ननु - சங்கை

एषा यदि परिणतिः - இச்சுருதியானது சித்தின் பரிணாமமாயினும்

अथवा चिद्विवर्तः स्यात् - அல்லது சித்தின் விவர்த்தமாயினும்

तदानीम् - அப்போது

वेदशास्त्रे - வேதமாகிய சாஸ்திரத்தின்கண்

विरोधः भवति - விரோதமுண்டாம் அதன்கண் பிராமாண்யாநுபபத்தியாமென்பது பொருள்.

அற்றேல் பௌருஷேயத்தன்மையிருப்பினும் வேதத்திற்குப் பிராமாண்யம் தார்க்கிகரால் ஸ்தாபிக்கப்பெற்றுளது. ஆதலால் அதற்கு அப்பிராமாண்யத்தின் அடைவு எங்ஙனமாமென்று சங்கித்து அவரது மதம் கண்டிக்கப்படுவதால் வைதிகரான நம்மால் அபௌருஷேயத்தன்மையையேதுவாகவுடையசுவதப் பிராமாண்யமே வேதத்திற்கு அங்கீகரிக்கப்படுகிறது. அது அதற்கு பௌருஷேயத் தன்மையையுடன்படின் பொருந்தாதெனக் கூறுகின்றார்.

कृतकत्वे - வேதத்திற்கு காரியத்தன்மையையுடன்படின்

अपौरुषेयत्वहेतुः - அபௌருஷேயத்தன்மையை ஏதுவாகக் கொண்டு

इयं स्वप्रयुक्ता मानता - இந்த சுவதப்பிரமாணத் தன்மை

नो भवितुम् - எமது மதத்தில் உண்டாவதற்கு

नहि खलु अलम् - சமர்த்தமன்றாம். (244)

(அ) அற்றேல் சூத்திரக்காரராலேயே பிரம்மத்திற்கு சாஸ்திரத்தின் யோனி (காரண)த்தன்மையைக் கூறினமையின் வேதத்திற்கு அதன் காரியத்தன்மை பரிகரிக்கத்தகாதாம் என்றுசங்கித்து அப்படியானுல் பிறிதாற் பிராமாண்யத்தின்

அடைவு வருதலின் வைசேஷிகர் முதலியோரது மதத்திற் பிரவேசமுண்டாமென்று கூறுகின்றார்:—

कणभुगभिमतिर्वा कल्पनीया तदानीं
सुरगुरुमतमेवोपास्यमाहोस्विदुच्चैः ।
इति निपतति चोद्य ब्रह्मणो विश्वसृष्टिः
यदि भवति न चेद्वा नित्यमायाति विश्वम् ॥२४५॥

பதவுரை

तदानीम् - வேதம் பிரம்மத்தின் காரியமாமென்புழி

कणभुगभिमतिर्वा – கணாத மஹரிஷியின் சம்மதமான பரதப் பிராமாண்யம்

कल्पनीया – கற்பிக்கத்தக்கதாம்.

அவரது மதத்தின்கண் வேதவாக்கியத்தைச் செய்தற்கு மூலமாயுள்ள பிரமாணத்தை நிருபிக்க முடியாமையின் அதுவும் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை என்றுசங்கித்து அப்படியானால் வேதத்திற்கு அப்பிராமாண்யம் வருதலின் லோகாயதர் முதலியோரது மதத்திற் பிரவேசமாம் என்று கூறுகின்றார்.

आहोस्वित् – அல்லது

सुरगुरुमतमेव – பிருஹஸ்பதியின் சம்மதமாகிய சார்வாக மதமே

उच्चैः उपास्यम् –அத்தியந்தம் அனுஷ்டிக்கத்தக்கதாம்

பிருஹஸ்பதியினால் ராஜபுத்திரர்களை மோஹிப்பித்தற் பொருட்டு காம சாஸ்திரம் செய்யப்பட்டமையின் பிருஹஸ்பதி சம்மதம் எனப்பட்டது. நாமருபான்மகமான பிரபஞ்சம், பிரம்ம காரியம் எனபுழி வேதத்திற்கு பௌருஷேயத்வ சங்கையை முடிக்கின்றார்.

ब्रह्मणः विश्वसृष्टिः –பிரம்மத்தில்நின்றும் பிரபஞ்சத்தின் சிருஷ்டியானது

यदि भवति – உண்டாகுமாயின்

इति चोद्यं निपतति –இவ்வாறு பௌருஷேயத்தன்மை சங்கை பிராப்தியாகின்றது.

அப்படியானல் வேதத்திற்கு பிரம்மத்தின் காரியத் தன்மையே தியாகஞ் செய்யப்படுகின்றது என்ருசங்கித்து அப்போது வேதத்திற்கும் அதன் பிரதிபாத்யத்திற்கும் நித்தியத் தன்மை வருதலின் சிருஷ்டிப் பிரளயாதிகள் இல்லாமற்போம் என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்.

न चेद्वा - வேதம் பிரம்மத்தின் காரியமன்ருமெனின்
विश्वं नित्यमायाति - வேதமும் அதன் பொருளும் நித்தியமாகும் (245)

(அ) புருஷநிருவர்த்திதத்தன்மை மாத்திரம் வேதத்திற்கு பௌருஷேயத்தன்மையாயின் அஃது பாட்டருக்கும் பிராபாகரருக்கும் சமானமாம் அதனுல் அஃது எமது மதத்தின்கண் தோஷமாக கூறத்தக்கதன்ரும் என பரிகரிக்கின்ருர்:—

ननु सदृशमिदं वश्चोद्यमस्मासु कस्माद्विनिहितमुभयेषां पूर्वमीमांसकानाम्।
अवगतिकृतमेतद्वाचकत्वं पदानामवगतिरियमिष्टा नश्वरी तत्क्षणेन ॥

பதவுரை

पूर्वमीमांसकानाम् -பூர்வமீமாம்ஸகர்களான
वः उभयेषाम् - பாட்டரும் பிராபாகரருமான உங்களிருவருக்கும்
इदं चोद्यम् -இந்த பௌருஷேயத்தன்மை சங்கையானது
सदृशं ननु -சமானமேயாம். (இவ்வாருகும்போது)
अस्मासु -எம்மிடத்தில்
कस्मात् विनिहितम्-எக்காரணத்தால் பிரயோகிக்கப்பட்டது

அனுதி பதசமுதாயத்திற்கே வேதத்தன்மையங்கீகரித்தலால் மீமாம்சகரது மதத்தில் அதற்கு புருஷ நிருவர்த்திதத் தன்மை எங்ஙனம் சமானமாம் என்ருசங்கித்துக்கூறுகின்ருர்.

पदानां एतत् वाचकत्वम् -பதங்களின் கண்ணுள்ள வாசகத் தன்மையானது
अवगति कृतम् -ஞானத்தாற் செய்யப்பட்டதாம்

इयं अवगतिः - இந்த ஞானமும்

तत्क्षणेन -அதே க்ஷணத்தில்

नश्वरी इष्टा-நாசமுடையதாக அங்கீகரிக்கப்பட்டுளது

விசேஷவுரை

ஏகமாயினும் அநேகமாயினும் வர்ணமாத்திரத்திற்கு பதத் தன்மை பொருந்தாமையின் வாசகத்தன்மையே வர்ணங்களில் பதத்தன்மையாம் அதுவும் கிரமவிசேஷமுடைய வர்ண விசேஷங்களில் வியுத்பத்திகாலத்தில் அறியப்படுகின்றது. அதனுல் பதத்தன்மை கிரமவிசேஷத்தோடு கூடியிருத்தலினுல் நித்ய விபுவாய வர்ணங்களுக்கு சொருபமாகக் கிரமம் பொருந்தாமையின் தனித்தனி வர்ணங்களின் அனுபவத்தின் கண்ணுள்ள கிரமத்தின் ஆரோபமுடைய அவைகட்கு பதத் தன்மை கூறவேண்டும். அப்போது ஆரோபத்திற்கு அநித்தியத் தன்மையால் புருஷ நிருவர்த்திதத் தன்மையுண்மையின் அவ்வாரோப விசிட்டபதமும் அவ்வாறேயாம். ஆதலின் பதங்கட்கு அனுதித்தன்மை இன்ருமென்பது பொருள். (246)

(அ) மற்றும் பதசமுதாய மாத்திரத்திற்கு வேதத்தன்மை யின்மையின் கிரம விசேஷத்தோடு கூடிய பதசமுதாயத்திற்கே வேதத்தன்மையைக் கூறவேண்டும். மீமாம்ஸக மதத்தில் பதங்களில் சொருபமாகக் கிரமமின்ரும். அதனுல் தனித்தனி பதத்தை கோசரிக்கின்ற ஞானத்தின் கண்ணுள்ள நியதக் கிரமத்தின் ஆரோபத்தின்கண்ணேயே பதங்களின் வேதத் தன்மையாம் ஆதலின் வேதத்திற்கு நித்தியத்தன்மையின்ரும். பதங்களில் ஆநுபூர்வீ விசேஷத்தின் ஆரோபத்திற்கு அநித்தி யத்தன்மையுண்மையின் அதனேடு (ஆரோபத்தோடு) கூடிய வேதத்திற்கும் அஃது அவசியம் சம்பவித்தலின் அதன் அதீன மான அப்பிரமாணத் தன்மை பரிகரிக்கத் தகாதெனக் கூறுகின்ருர்:—

अवगतिगतमेवापेक्ष्य पूर्वापरत्व-
प्रतिनियममियं वो वेदता वेदराशेः ।
क्षणिकमभवदित्थं वेदशास्त्रं समस्तं-
कथमिव तदिदानीं वेदशास्त्रं प्रमाणम् ॥ २४७ ॥

பதவுரை

अवगतिगतमेव -பதங்களின் அனுபவத்தின்கண்ணேயுள்ள

पूर्वापरत्व प्रतिनियमम् -நியதபூர்வாபரத்தன்மையினையே

अपेक्ष्य அபேக்ஷித்து

वः वेदराशेः -உங்கட்கு பதசமுதாயத்தின்கண்

इयं वेदता இந்த வேதத்தன்மை அதாவது பிரமாணத் தன்மை சம்மதமாம்

इत्थम् -இந்தப் பிரகாரம்

समस्तं वेदशास्त्रम् -சர்வவேத சாஸ்திரமும்

क्षणिकं अभवत् -க்ஷணிகமாம்

तत् इदानीम् -ஆதலால் இப்போது

वेद शास्त्रम् -வேதமாகிய சாஸ்திரம்

प्रमाणं कथमिव -பிரமாணமெங்கனமாம் ஆகாதென்பது பொருள். (247)

(அ) கூறிய பிரகாரத்தால் வேதத்திற்கு அநித்தியத் தன்மையிருப்பினும் தனது பிரமேயமாகிய தர்மாதர்ம முதலிய வற்றை கோசரிக்கின்ற பிரமாணாந்தரத்தை அபேக்ஷியாமை யினால் தன்னிடத்திலுள்ள பூர்வாபரத் தன்மையின் கண் புருஷனுக்கு சுதந்திரத் தன்மையின்மையின் அனபேக்ஷத் தன்மையும் அபௌருஷேயத்தன்மையுமாம். ஆதலின் அதன் பிரமாணத்தன்மைக்கு ஸ்வதஸ்த்வம் சித்திக்கின்றது. அஃது முதியோராலும் ''यत्नतः प्रतिषेध्या नः पुरुषाणां स्वतन्त्रता'' எமது மதத்தில் புருஷர்களின் ஸ்வதந்தரத்தன்மை யத்தனத்தால் நிஷேதிக்கத்தக்கதாமென கூறப்பட்டுளது' என்னுங்கருத்தாற் சங்கிக்கின்ருன் :—

पुरुषमतिनिवेशो नास्ति वेदप्रमेये
विषय इति यदीष्टा मानता स्वप्रयुक्ता ।
सदृशमिदमिदानीं कारणं मानतायां-
परमपुरुषसृष्टे वेदशास्त्रेऽप्यभीष्टम् ॥ २४८ ॥

பதவுரை

वेदप्रमेये विषये - வேதமாத்திரத்தாலறியத்தக்க விஷயத்தின் கண்ணே

पुरुषमतिनिवेशः - புருஷனுடைய புத்திக்கு பிரவேசம்

नास्ति इति - இன்றுமாதலின்

स्वप्रयुक्ता मानता - வேதத்திற்கு ஸ்வதப்பிராமாண்யம்

यदि इष्टा - சம்மதமாயின்

காரியமாயினும் வேதத்திற்கு ஸ்வதப்பிரமாணத் தன்மைக்குக் காரணமாக ஸ்வார்த்தத்தில் பிரமாணாந்தரத்தின் அநபேக்ஷத்தன்மை முதலியது யாதொன்று கூறப்பட்டதோ அது அதற்கு பிரம்ம காரியத்து மதத்தின் கண்ணும் சமானமாம். ஆதலின் அவரது மதத்தில் அதற்கு அப்பிராமாண்யத்தினு பத்தியைச் செய்தல் அசங்கதமெனக் கூறுகின்றார்.

इदानीम् - அஞ்ஞான தசையின்கண்

परमपुरुषसृष्टे - பரமேஸ்வரனால் உண்டுபண்ணப்பட்ட

वेदशास्त्रेऽपि - வேதத்தின் கண்ணும்

मानतायाम् - ஸ்வதப்பிரமாணத் தன்மையின்கண்

इदं कारणम् - இந்தப் பிரமாணத்தின் அனபேக்ஷத்தன்மை வடிவ காரணம்

सदृशम् अभीष्टम् - சமானமாக அங்கீகரிக்கப்பட்டுளது. (248)

(அ) சமானமென்பதனையே உபபாதனஞ் செய்கின்றார்.

न हि खलु मतिपूर्वा ब्रह्मणः सृष्टिरिष्टा
निगदितुरिव सृष्टिर्वेदविद्यासु नित्यम् ।
भवति तु पुनरेषा तस्य निःश्वासकल्पा
श्रुतिवचनमपीदं वस्तु वक्ति स्फुटं नः ॥ २४९ ॥

பதவுரை

वेदविद्यासु-வேத வித்தைகளில் (வேதங்கட்கு)

ब्रह्मणः सृष्टिः-பரமான்மாவினின்றும் சிருஷ்டி

नित्यम्-சருவ கற்பங்களிலும்

मतिपूर्वा-புத்தி பூருவகமாக

न हि खलु इष्टा -இஷ்டமின்றும். அதன் அநிஷ்டத்தன்மை வாதிகட்கும் பிரசித்தமாம்.

பரமான்மாவிற்கு சருவஞ்ஞத்தன்மை யுண்மையால் வேதார்த்தத்தையறியுந்தன்மை யுண்மையின் அவரால் செய்யப்பெற்ற வேதத்தின் சிருஷ்டி அவரது புத்திபூருவகமேனுகாது என்று ஆசங்கித்து அவரது மதத்தில் அவருக்கு வேதத்தைச் சிருஷ்டிப்பதில் ஏதுத்தன்மையின்மையின் அது புத்திபூருவகமன்றுமென்பதன் கண் திருஷ்டாந்தத்தைக்கூறுகின்றார்.

निगदितुरिव-வேதத்தினத்தியாபகருக்கு வேதஉச்சாரணத்திற்போன்று.

எப்படி வேதார்த்தத்தையறிந்த ஒருபாத்தியாயருக்கு வேதவாக்கியத்தினுச்சாரணம் அதனர்த்தஞானத்தினதீனமன்றே மற்றே முன்பு அறியப்பட்ட வேதத்தின் ஸ்மரணமாத்திராதீனமோ கேவல பாடகர்களிடத்தில் அவ்வாறே காணப்படுதலின் அப்படி பரமான்மாவிற்கும் அதன் அர்த்த ஞானமிருந்தபோதிலும் அது சிருஷ்டியின் கண் ஏதுவன்றுமென்பது பொருள்.

அவரது ஞானம்போன்று அதன் கண் அவரது பிரயத்தினத்திற்கும் உபயோகமின்று மென்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

तस्य एषा सृष्टिः-பரமான்மாவிற்கு வேதத்தின் சிருஷ்டி

निश्वासकल्पा-மூச்சுக்காற்று போன்று

पुनस्तु भवति-பிரயத்தினமின்றியே உண்டாகின்றது.

"இந்தப் பரமான்மாவிற்கு மூச்சுக்காற்றுப்போன்று இந்த இருக்குவேதம் யஜுர்வேதம்" என்பது முதலிய சுருதியும் கூறிய அர்த்தத்தின்கண் பிரமாணமாம் எனக்கூறுகின்றார்

श्रुतिवचनमपि-சுருதி வாக்கியமும்

इदं वस्तु - வேதத்தின் சிருஷ்டி ஈசுவரனுடைய புத்தி பூருவகமன்றென்னுமிப்பொருளை

नः स्फुटं वक्ति - எமக்கு ஸ்பஷ்டமாகக் கூறுகின்றது.

''உற்பத்திநாசமின்றிய நித்தியவாக்கு பரமேஸ்வரனால் சிருஷ்டிக்கப்பட்டது என்னும் ஸ்மிருதிவசனமுங் கொள்ளற்பாலது. (249)

(அ) புருஷனால் நிர்வர்த்திதத் (உண்டு பண்ணப்பட்ட) தன்மை மாத்திரத்தால் வேதத்திற்கு தன்னால் பிராமாண்யம் இல்லையாயின் பிறர்மதத்தின் கண்ணும் அதன் ஆபத்தியாம் என்று முன்பு கூறப்பட்டது. இப்போது மீமாம்ஸகனைக்குறித்து அவ்வேதுவிற்கு இந்திரியங்களில் வியபிசாரமிருத்தலால் ஆபாஸத்தன்மையாம் என்றுகருதி இந்திரியத்திற்குப்போன்றே வேதத்திற்கும் தன்னால் பிராமாண்யம் நீக்கமுடியாதாமெனக் கூறுகின்றார் :—

अपि च पुरुषकर्मोद्भूतिकानीन्द्रियाणि
स्फुटमिव गमयन्ति स्वं स्वमन्यानपेक्षम् ।
विषयमिति हि दृष्टं तद्वदिष्टं च तस्मा-
दिह किमपि न चोद्यं वाच्यमेतद्भवद्भिः ॥ २५० ॥

பதவுரை

अपि च-மேலும்

पुरुषकर्मोद्भूतिकानि-அதிருஷ்ட வாயிலால் ஜீவரது கர்மத்தினால் உத்பத்தியினையுடைய

इन्द्रियाणि -சுரோத்திர முதலிய இந்திரியங்கள்

स्वं स्वं विषयम् - சப்தாதி வடிவ தத்தம் அசாதாரண விஷயத்தை

अन्यानपेक्षम्-பிறவற்றையபேக்ஷியாமலே

स्फुटम् अवगमयन्ति-ஸ்பஷ்டமாகவறிவிக்கின்றன

इति हि दृष्टम् -என்பது காரியவசத்தாலேயே காணப்பட்டு உளது

तद्वत् इष्टं च-அப்படியே உமக்கும் சம்மதமாம்

तस्मात्-ஆதலால்

इह-வேதங்களில்

किमपि एतत् चोद्यम्-யாதொரு சங்கையும்

भवद्भिः न वाच्यम्-உம்மால் செய்யத்தக்கதன்று

விசேஷவுரை

இந்திரியங்களின் பௌருஷேயத்தன்மையிருப்பினும் தன்னுற் பிராமாண்யம் பொருந்துதல் போல வேதங்களின் கண்ணும் தன்னுற் பிராமாண்யம் பொருந்துதலின் உமது சங்கைக்கு அவகாசமின்ரும் என்பது பொருள். (250)

(அ) அனேக வடிவங்களாவேமென அவர் ஈக்ஷித்தார், அனேக வடிவங்களாவேமென அவரிச்சித்தார்'' என்பது முதலிய சுருதிகள் வீக்ஷணபூர்வகம் பரமான்மாவினின்றும் பிரமாணத்தின் சிருஷ்டியைக் கூறுகின்றனவாய் பிரமாணுந் தரத்தின பேக்ஷையுடையதாக வேத சிருஷ்ட்டியை சூசிப்பிக் கின்றன. பிரமாணமின்றி யீக்ஷணம் பொருந்தாமையினென்று சங்கிக்கின்ருன் :—

श्रुतिवचनमनेकं वक्ति तस्येक्षितृत्वं
मतिमदिति ततस्तन्नेष्यते कस्य हेतोः ।
इति यदि मनुषे तन्मैव मंस्थाः कुतश्चे-
त्सकलकरणहीनं ब्रह्म नः शास्ति शास्त्रम् ॥ २५१ ॥

பதவுரை

श्रुतिवचनम् अनेकम्-அநேக சுருதி வாக்கியம்

तस्य ईक्षितृत्वम्-பரமான்மாவினீக்ஷணம்

मतिमत् इति वक्ति-(புத்தி) பிரமாண பூர்வகமாமெனக் கூறுகின்றது

ततः तत्-ஆதலால் அஃது

कस्य हेतोः न इष्यते - எவ்வேது விஞலங்கீகரிக்கப்படுகின்ற தில்லை

इति यदि मनुषे-என்று நீ கருதுவையாயின்

உதாகரிக்கப்பட்ட சுருதிகளில் பிரமாணத்தினதீனமாக ஈக்ஷணம் கேட்கப்படாமையின் அஃது சங்கிக்கத்தக்கதன்று எனக்கூறுகின்றார்.

तत् मैव मंस्थाः-அவ்வாறு அதனைக்கருதற்க

அங்ஙனமாயினும் அதனனுபபத்தியிஞல்பிரமாணுந்தரத்தின தீனமாக ஈக்ஷணமாம் என்று கூறப்பட்டமையின் அதன் கண் நிஷேதம் எங்ஙனமாம் என்று சங்கிக்கின்ருன்.

कुतश्चेत्-எதனலெனின்

ब्रह्म सकलकरणहीनम्-பரமான்மா சர்வகரணமும் அற்றதாம் என

शास्त्रम् नः शास्ति-சாஸ்த்திரம் நமக்குக் கூறுகின்றது.

விசேஷவுரை

பரமான்மாவிற்கு காரியமும் கரணமுமின்றும் நேத்திரமும் சுரோத்திரமுமின்றும், வாக்கும் மனமுமின்றும், அப்பிராணன், அமனன், சுத்தன இப்புருடன் அசங்கன் என்பது முதலிய சுருதியிஞல் பரமான்மாவிற்கு காரியகரணத்தினபாவமறியப் படுதலின் பிரமாணத்தினதீனமான ஈக்ஷணம் அவருக்குப் பொருந்தாதென்பது பொருள். (251)

(அ) அப்படியாஞல் அவரீக்ஷித்தாரென்பது முதலிய சுருதி நிராசிரயமாமென்றுசங்கித்து சிதாபாசனேடு கூடிய மாயாவிருத்தியே ஆண்டு ஈக்ஷணமாக விவக்ஷிதமாம். நம் மனேருக்குப்போன்று பிரமாணத்தினதீனமான புத்தி விருத்தி விவக்ஷிதமன்றும். அவருக்கு புத்தி முதலியவற்றினபாவம் கூறப்பட்டமையின் என்று கூறுகின்றார்:—

चितिगत जडशक्तेराद्य इष्टो विवर्त-
श्चिति निकट निवेशाल्लब्ध दीप्तिर्जडोऽपि ।

श्रुतिशिरसि निपुणैरीक्षणं कथ्यते त-
न्न तु परमपदस्यापीक्षणं बुद्धिवृत्तिः ॥ २५२ ॥

பதவுரை

चितिगतजडशक्तेः-சிதான்மாவின் கண்ணுள்ள சடவடிவ மாயா சக்தியின்

आद्यः विवर्तः- முதலாவது பரிணாமமாக

इष्टः तत्-யாதொன்று கருதப்பட்டதோ அது

जडोऽपि- சடமாயினும்

चितिनिकट निवेशात्- சித்தின்கண் அத்தியஸ்தமாதலின் (சிதாபாசனோடு கூடியிருத்தலின்)

लब्धदीप्तिः-பிரகாசத்தையடைந்ததாகி

श्रुतिशिरसि- வேதாந்தத்தின்கண்

निपुणैः-குசலர்களான மகான்களால்

ईक्षणम् कथ्यते- ஈக்ஷணமென்று சொல்லப்படுகிறது

बुद्धिवृत्तिस्तु புத்தி விருத்தியோ (சீவனுக்குப்போன்று)

परमपदस्यापि-பரமான்மாவிற்கும்

ईक्षणं न-ஈக்ஷணமாக சொல்லப்படுகிறதில்லை

விசேஷவுரை

அது ஈக்ஷணமென்று சொல்லப்படுகின்றதெனக் கூட்டுக. சடமாகிய வீக்ஷணம் பிரம்மத்தின் தருமமாக எங்ஙனமா மென்னுஞ் சங்கை சித்தின்கண் அத்தியஸ்தமாதலின் என்ப தாதியால் நிவர்த்திக்கப்பட்டது. (252)

(அ) இங்ஙனம் வேதத்திற்கு பரமான்மாவினின்றும் ஜன்னியத்தன்மையிருப்பினும் தனது அர்த்தத்தை விஷயஞ் செய்கின்ற பிரமாணாந்தரத்தின் அதீனத்தன்மையின்மை யினாலும் பரமான்மாவிற்கு அதன் சுரத்தினது ஆநுபூர்வி முதலியவற்றில் சுதந்திரத்தன்மையின்மையினாலும் நிரபேக்ஷத்

தன்மை அபௌருஷேயத்தன்மைகளால் வேதம் தன்னுற் பிரமாணமாமென்பதனைக் கேட்டு மீமாம்ஸகன் சாந்தியான போது அதனைச் சகியாதவனாய்த்தார்க்கிகன் எதிர்த்து நிற்கின்றான் :—

ननु च डित्थडवित्थपदादिवत् सकलमेव तु सामयिकं पदम् ॥
अनुमिमीमहि पूर्वनिदर्शनादनुमितिर्भवतीति किमद्भुतम् ॥ २५३ ॥

பதவுரை

ननु च - அற்றேல்

डित्थडवित्थपदादिवत्–டித்தன் டவித்த னென்பது முதலிய பதங்கள் போன்று

सकलमेव तु पदम्- கோ-கட முதலிய சர்வ பதங்களுமே

सामयिकम् -சங்கேதத்தினையுடையதாம் என

अनुमिमीमहि -அனுமிக்கின்றோம்

கரசரணுதிகளோடுகூடி உத்பன்னமாகிய பிண்ட விசேஷத்தினைக்கண்டு அதன் வியவகாரத்தின் பொருட்டு அவனது பிதா முதலியோரால் தனது புத்தியால் செய்யப்பட்ட டித்தன் டவித்தன் முதலியபதம் அதன்கண் (பிண்டவிசேஷத்தின்கண்) சங்கேதஞ் செய்யப்பட்டதாகி அதன் வாசகமாகக்காணப் பட்டுளது. அதனல் விவாதவிஷயமான கோ-கட முதலியபதம் ஒருவனல் தனதர்த்தத்தின்கண் சங்கேதஞ்செய்யப்பட்டது பதமாதலின் டித்தன் முதலிய பதம் போன்று என்னுமனுமானத்தால் ஸர்வ பதார்த்தங்களின் சம்பந்தத்திற்கு பிரமாணந்தரத்தின் அபேக்ஷை சித்தித்தபோது அத்தகைய பதசமுதாயவடிவ வேதத்திற்கும் அதனபேக்ஷை நீக்கமுடியாதாம். ஆதலின் அதற்கு நிரபேக்ஷத்தன்மைவடிவ பிரமாணத்தன்மை எவ்வாறு சித்திக்கும் சித்தியாதென்பது பொருள்.

சிலவிடத்து காண்டல் மாத்திரத்தினல் இவ்வனுமானம் எவ்வாறு உதிக்கும் என்றுசங்கித்து வியபிசாரம் காணப் படாமையினல் இவ்வனுமானம் கூறிய திருஷ்டாந்தத்தால் யாருக்குத்தான் உதிக்காது எனக்கூறுகின்றார்.

पूर्वनिदर्शनात् –அனுமானப்பிரயோகத்திற்கு முன்பு காணப் பட்ட திருஷ்டாந்தத்தால்

अनुमितिः भवति इति -அனுமிதியுண்டாகின்றது என்பதன் கண்

किम् अद्भुतम् -ஆச்சர்யமென்னே (253)

(அ) டித்தன் முதலிய பதார்த்த சம்பந்தத்திற்கு ஆகந்துகத் தன்மை கூறியவனுமானத்தின்கண்ணுபாதியாம் சாதனவியாபகமாமென்று சொல்லற்க இப்போது வியவகரிக்கப் படுகின்ற கடாதிபதார்த்த சம்பந்தத்திற்கே அநாதி விருத்த வியவகார விஷயத்தன்மையுண்மையால் அதற்கு (கடாதி பதார்த்த சம்பந்தத்திற்கு) அனுதித்தன்மை யுண்மையின் சிருஷ்டியினுதிகாலத்திலுள்ள கடாதி பதார்த்த சம்பந்தத்தின் வியவகாரம் அதனினும் முற்காலத்திலுள்ள அதன் சம்பந்த ஸ்மிருதியினைக் காரணமாகவுடையது கடாதி பதார்த்த சம்பந்தத்தின் வியவகாரமாதலின் இப்போதுள்ள அதன் வியவகாரம்போன்று என்று அனுமானித்தலின் "கிருத யுகத்தினுதயில் பரமான்மாவினுல் தூய்மையுற்றவனும் மிக்க கீர்த்தியுள்ளவனும் ஸர்வஞ்ஞனும் தைர்யவானும் ஆகிய ரிஷி பூர்வஸ்மரணையோடுகூடியே பிறக்கின்ருர்" என்பது முதலிய வசனத்தால் சிருஷ்டியினுதிகாலத்தில் உண்டானவரும் ஈஸ்வரனது அனுக்கிரகத்தைப்பெற்றவருமான இரணியகர்ப்பர் முதலியோருக்கு பூர்வகற்பத்திலுள்ள பதார்த்தசம்பந்தத்தினனு சந்தானம் பொருந்துதலினுலும அதன் சம்பந்தத்திற்கு அனுதித் தன்மை நிச்சயம் வருதலின் அந்நிச்சயத்திற்கு விரோதம் வருதலின் அதற்கு சிருஷ்டிகாலத்திலும் கிருதகத்தன்மை கூறெணுது என்னுங்கருத்தாற் கூறுகின்ருர். (சித்தாந்தியி னுத்தரம்):—

अनादिवृद्धव्यवहारलक्षणे कथं प्रमाणे परिपन्थिनि स्थिते ।
गवादिशब्दे समयोऽनुमास्यते डवित्थशब्दादिवदेतदुच्यताम् ॥२५४॥

பதவுரை

अनादिवृद्धव्यवहारलक्षणे - அனுதிவிருத்த வியவகாரத்தை லிங்கமாக உடைய

प्रमाणे -பதார்த்த சம்பந்தத்தின் அனுதித்தன்மையினனு மானம்

परिपन्थिनि स्थिते-விரோதியாயிருக்கும்போது

गवादिशब्दे -கோகடாதி சப்தத்தின் கண்

डवित्थशब्दादिवत् -டவித்தன் என்பது முதலிய சப்தத்தைப் போன்று

समयः कथं अनुमास्यते - சங்கேதம் எவ்வாறு அனுமிக்கப் படும்?

एतत् उच्यताम् -நீ இதற்கு உத்தரங்கூறுவாயாக (254)

(அ) மேலும் ஸர்வபதங்கட்கும் அவற்றினர்த்தங்களில் சங்கேதத்தைச் செய்பவனிடத்துப் பிரமாணமின்மையினுலும் அது (சங்கேதம்) சித்தியாது. அஃது எப்படியெனின் அஃது (சங்கேதம்) பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் சித்திக்கின்றதில்லை. அனுபவமின்மையின். அன்றேல் அதன்கண் விப்பிரதிபத்தி பொருந்தாமற்போம் அனுமானப் பிரமாணத்தானுஞ்சித்திக் கின்றதில்லை. அஃது உபாதியோடு கூடியது என தூஷிக்கப் பட்டமையின். சாதிருசிய முதலிய வியவஸ்தித வஸ்துவினை விஷயமாகவுடையதாதலின் உபமானப்பிரமாணம் அதன்கட் சங்கிக்கத்தக்கதன்ரும். ஆகமப்பிரமாணத்தானுமன்று ஸர்வ பதார்த்த சம்பந்தங்கட்கு ஒருவனுற் சங்கேதஞ்செய்யப்பட்ட தன்மையைப் பிரதிபாதிக்கின்ற வசனம் காணப்படாமையின் அர்த்தாபத்திப்பிரமாணத்தாலுமன்று அஃதின்றிபொருந்தாமை வடிவ வஸ்த்து இன்மையின். இப்போதுள்ள பதார்த்த சம்பந்தத்தின் வியவகாரத்திற்கு அனுதிவிருத்த வியவகாரத்தி னதீனத்தன்மை உபபாதனம் செய்யப்பட்டமையின் ஆதலால் பாவ சாதகப்பிரமாணங்களில் யாதொன்றுமின்மையின் அதன் (சங்கேதகர்த்தாவின்) சத்பாவம் துர்லபமாம் மாருய் பாவத்தைச் சாதிக்கின்ற பிரமாணபஞ்சகத்தின் அனுதயவடிவ அபாவப் பிரமாணத்தால் அதனபாவமேயாமென நிச்சயிக்கப் படுகின்றது எனக் கூறுகின்ருர் :—

सतः प्रमाणाभिमतेषु पञ्चसु प्रमाणमक्षादिषु किंचिदीक्ष्यते ।
नहीह संबन्द्धरि तेन तस्य वः खपुष्पकल्पत्वमभावमानतः ॥ २५५ ॥

பதவுரை

सतः -பாவபதார்த்தத்தின் சித்தியின் கண்

प्रमाणाभिमतेषु பிரமாணமாகக்கருதப்பட்டுள்ள

अक्षादिषु पञ्चसु - பிரத்தியக்ஷம் அனுமானம் உபமானம் சத்தம் அர்த்தாபத்தியென்னுமைந்தனுள்

किंचित्प्रमाणम् –யாதோர் பிரமாணமும்

इह संबन्द्धरि ஈண்டு சத்தார்த்த சங்கேதத்தைச் செய்பவனிடத்து

नहि ईक्ष्यते – காணப்படுகின்றதில்லை

तेन - அதனல் அதாவது பிரமாண பஞ்சகத்தினநுதய வடிவ

अभावमानतः – அபாவப் பிரமாணத்தால்

वः तस्य - உங்கட்கு சங்கேத கர்த்தாவின் கண்

खपुष्पकल्पत्वम् - ககனகுசுமத்திற்குச் சமத்தன்மை சித்திக்கின்றது. சங்கேதகருத்தா இல்லையென்பது பொருள். (255)

(அ) அற்றேல் இரவின்கண் உள்ளனவாயினும் சில பதார்த்தங்கள் எவ்வாற்ருனுந்தோற்றுகின்றதில்லை அங்ஙனமே பகலின்கண்ணும் உள்ளனவாயினும் நக்ஷத்திரம் முதலியவை தோற்றுகின்றதில்லை. அதுபோன்று சங்கேத கருத்தா இருப்பினும் அதன் அநுபலம்பம் பொருந்துதலின் அத்துணையால் அதன் அபாவ சித்தியெங்ஙனமாமென்ருசங்கித்து திருஷ்டாந்தத்தின்கண் முன்பாவது பின்பாவது தோற்றுதலினுல் அதன் அபாவம் பொருந்தாமையின் அப்போது உபலம்பத்தின் பிரதிபந்தகவசத்தாலேயே அதன் அநுபலம்பம் பொருத்தமாம் எனக்கூறுகின்ருர்:—

पुरोपलब्धो विषयो न दृश्यते यदा प्रमाणैरिह भावगोचरैः ।
तदा तु तत्रानुपलब्धिकारणं किमप्यभावादपरं हि मृग्यते ॥ २५६ ॥

பதவுரை

इह –வியவகார பூமியின் கண்

यदा भावगोचरैः प्रमाणैः - எப்போது பாவவிஷயக பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணபஞ்சகத்தால்

पुरा उपलब्ध. विषयः - முன்பு அறியப்பட்ட விஷயம்

न दृश्यते - காணப்படுகிறதில்லையோ

तदा तु तत्र - அப்போது அவ்விஷயத்தின் கண்

अनुपलब्धिकारणम् - அநுபலப்தியின் காரணம் அதாவது உபலப்தியின் பிரதிபந்தகம்

अभावादपरम् - அபாவத்தினும் வேருக

क्विपपि हि मृग्यते - திருஷ்டமாவது அதிருஷ்டமாவது தேடப்படுகிறது

முன்பு அறியப்பட்ட என்பது பின்பு அறியத்தக்க என்பதற்கும் உபலக்ஷணம். (256)

(அ) சருவபதத்தின் சங்கேதகருத்தாவின் கண்ணே பாவப் பிரமாணம் யாதொன்றும் எப்போது மெழாமையின் அதன் அபாவநிச்சயம் அவசியம் உண்டாமென்று திருஷ்டாந்த சகிதம் கூறுகின்ருர்:—

अत्यन्तानुपलब्धवस्तुनि पुनर्यः पञ्चकानुद्भव-
स्तस्याभावनिमित्तकः स न पुनस्तत्रापरं कारणम् ।
अन्विच्छन्ति मनीषिणो न हि शशेऽदृष्ट्वा विषाणास्तितां
तन्नादर्शनकारणान्तरपरा हेत्वन्तरान्वेषिणः ॥ २५७ ॥

பதவுரை

अत्यन्तानुपलब्धवस्तुनि - அத்தியந்தம் அறியப்படாத வஸ்துவின் கண்

यः पुनः पञ्चकानुद्भव सः - ஐந்து பிரமாணங்களின் யாதொரு அனுத்பத்தியுண்டோ அது

तस्य अभावनिमित्तकः - அவ்வறியப்படாத வஸ்துவின் அபாவத்தை நிமித்தமாகவுடையதாம்

तत्र अपरं कारणम्-பிரமாண பஞ்சகத்தின் அனுத்பத்தியில் அபாவத்தினும் வேருன காரணத்தை

मनीषिणः न पुनः अन्विच्छन्ति - வித்வான்கள் தேடுகின்றிலர்

शशे विषाणास्तिताम् - முயலினிடத்து கொம்பினிருப்பை

अदृष्ट्वा - காணுமல்

तत्र अदर्शनकरणान्तरपरा- முயலினிடத்து கொம்பின தர்சனத்திற்கு அபாவத்தினும் வேறு காரணத்தைத் தேடுகின்றவர்களாய் வித்வான்கள்

हेत्वन्तरान्वेषिणः नहि - அவ்வேறு காரணத்தை அறிய விரும்புகின்றிலர். (257)

(அ) மேலும் முதலில் சங்கேத கர்த்தாவினுல் அவ்வப் பதங்களை தனது முகத்தாலுச்சரித்து கேட்பித்து அவைகட்கு அவ்வவ்வர்த்த விசேஷங்களில் தன்னுற் செய்யப்பட்ட சாங்கேதிக சம்பந்தம் அறிவிக்கதக்கதாம். சரீரமின்றி உச்சாரண முதலியவை சம்பவிக்கின்றதில்லை சங்கேதத்தின் கருத்துருத் தன்மையினுலேயே அவனுக்கு சரீரமு மனுபவிக்கப் படுகின்றதென்று சொல்லற்க. அங்ஙனமாயினும் நானுசரீரத்தின்கண் பிரமாணமின்மையின் காணப்பட்டதினனுசாரமாக அவனுக்கு ஓர் சரீரமே சம்பவிக்கும். ஓர் சரீரத்தால் அத்தியந்தம் உயர்வு தாழ்வாயுள்ளவைகளும் மலை நதி சமுத்திர முதலியவற்ருல் (பிரதிபந்தகத்தால்) செல்லத் தகாதவைகளுமான சப்தங்களின் வியவகாரபூமி எல்லாவற்றிலும் ஒரேகாலத்திலாவது கிரமமாகவாவது ஒருவன் செல்லுவதற்கு எங்ஙனம் சமர்த்தனுவன் செல்லானுயின் அவ்வத் தேசவாசிகட்கு தன்னுற் செய்யப்பட்ட சாங்கேதிக சம்பந்தத்தை எங்ஙனம் போதிப்பன். அச்சம்பந்தத்தை யுணராவிடின் அவர்கட்கு சாப்தவியவகாரம் உண்டாகாது என்று கருதிக்கூறுகின்றுர்:—

विषमदुर्गमदेशसहस्रगः कथमिवैष नरः समयक्रियाम् ।
सकलशब्दतदर्थनिवेशिनीं वद विधातुमलं स्वयमेकलः ॥

பதவுரை

एषः नरः - காரியகரண சங்காதத்தால் பரிச்சின்னனாகிய புருஷன்

स्वयम् एकलः -தானே தனியனாகி

विषमदुर्गमदेशसहस्रगः - விஷமமும் துர்கமமுமான ஆயிரம் பிரதேசங்களிற்சென்று

सकलशब्दतदर्थनिवेशिनीम् -சர்வ சப்தங்கட்கும் அவற்றின் பொருளின் கண்ணுள்ள

समयक्रियाम् - சாங்கேதிக சம்பந்தத்தை

विधातुम् -விதித்தற்கு அதாவது போதித்தற்கு

कथमिव अलम् - எவ்வாறு சமர்த்தனாவன்

वद-சொல்

விசேஷவுரை

புருஷதிருஷ்டாந்தத்தால் அனுமிக்கப்பட்டவனுக்கு புருஷ சமத்தன்மையைக்கருதி புருடனென்று கூறப்பட்டது. (258)

(அ) மற்றும் உலகின் கண் சங்கேதத்தைச் செய்யும் புருடனானவன் கேட்கப்பட்ட வேறு சப்தத்தால் ஓர் பொருளைக் காண்பித்து இவன் டித்தனென வியவகரிக்கத்தக்கவன் என்று சங்கேதத்தைச் செய்கின்றான். பால்குடிக்கின்ற குழந்தைகட்குச் சமானமாயுள்ள சிருஷ்டியினாதிகாலத்திலுள்ள ஜனங்கட்கோ ஓர் பதத்தின் கண்ணும் விற்பத்தியின்மையினால் அவர்களைக்குறித்து வேறு பதத்தால் அர்த்தவிசேஷத்தால் நிர்த்தேசித்தல் பொருந்தாமையின் அறியப்படாத அர்த்த விசேஷத்தின்கண் பத விசேஷத்திற்கு சங்கேத சம்பந்தம் போதிக்கத்தகாதெனக் கூறுகின்றார்:—

अपिच किंचिदपि प्रतिपादकं नहि यदापदमस्ति जगन्मुखे ।
अनभिधाय पदं न तदा कथं समयमेष करिष्यति शङ्करः ॥ २५९ ॥

பதவுரை

अपि च-மேலும்

जगन्मुखे -சிருஷ்டியின் ஆதிகாலத்தில்

प्रतिपादकं किंचिदपि पदं यदा - யாதேனும் ஓர் பொருளைப் பிரதிபாதிக்கின்ற யாதோர்பதமும் எப்போது

नहि अस्ति तदा-இன்றுமோ அப்போது

एषः शङ्करः-அனுமானத்தாற் சாதிக்கப்பெற்ற ஈஸ்வரன்

पदम् अनभिधाय -பதத்தைக் கூறுமல்

समयं कथं करिष्यति-சங்கேதத்தை எப்படிச்செய்வன் (259)

(அ) அற்றேல் விற்பன்னமில்லாத புருடரைக்குறித்து கோகட முதலிய பொருளினை விரல் முதலியவற்றின் வியாபார விசேஷ வடிவ அபினயத்தால் காண்பித்து அதன்கண் கோ முதலிய பதங்கட்கு ஈஸ்வரன் சங்கேதத்தைப் போதிப்பன் என்னுஞ்சங்கையினை அனுவாதஞ்செய்து பரிகரிக்கின்றார்:—

अभिनयेन करिष्यति चेदयं समयमेतदतीव हि दुर्घटम् ।
नहि पदार्थसहस्रविमिश्रिते गवि तदाऽभिनयात्समयो भवेत् ॥

பதவுரை

अयं अभिनयेन-ஈஸ்வரன் அபிநயத்தால்

समयं करिष्यति चेत् -சங்கேதத்தைச்செய்வார்

एतद् अतीव हि दुर्घटम् -என்னுமிது அத்தியந்தம் பொருத்த மற்றதாம்

அதனையே உபபாதனஞ் செய்கின்றார்.

पदार्थ सहस्रविमिश्रिते - திரவியம் குணம் முதலிய அநேக பதார்த்தங்களோடு கலந்துள்ள

गवि கோபிண்டத்தின் கண்

तदा अभिनयात् -சிருஷ்டியினுதிகாலத்தில் அபிநயத்தால்

समयः नहि भवेत्-சங்கேத ஞானமுண்டாகாது

விசேஷவுரை

கோ முதலியவை நாநாவித அவயவம் குணம் கிரியை சாமான்யம் முதலியவற்ருேடு சங்கீர்ணமாயிருத்தலின் அபிநயத்தாலும் அவைகளுள் ஒன்றன் நிச்சயம் பொருந்தாமையின் கோ முதலிய பதங்கட்கு அர்த்தவிசேஷத்தின்கண் சம்பந்தம் அறியமுடியாது. சத்தவிசேஷமும் அர்த்தவிசேஷமும் உபஸ்திதமாயினும் அவைகட்கு வாச்சியவாசகத் தன்மை வடிவ சம்பந்த விசேஷமும் அறியமுடியாது அதனது நிருபகமின்மையின் என்பது கருத்து. (260)

(அ) மேலும் சத்தத்தால் அறியப்பட்ட வஸ்துவின்கண் சத்தசங்கேதத்திற்கு அன்னியோன்னியாசிரயம் வருதலால் அதனையறியமுடியாது. ஆதலின் பிரமாணாந்தரத்தால் அறியப்பட்ட வஸ்துவின்கண் அதன் ஞானம் கூறவேண்டும். அதனுல் தருமாதருமம் சுவர்க்கநரகம் தேவதை முதலிய பதார்த்தங்கள் பிரமாணாந்தரத்திற்கு யோக்கியமின்மையின் அவைகளில் சங்கேதத்தையறிதல் சம்பவியாமையின் அப்பதங்கட்கு போதகத்தன்மை சித்தியாதெனக் கூறுகின்ருர்:—

अपि च लौकिकमान बलाश्रयादधिगते विषये समयो भवेत् ।
अनुपलब्धसतत्वक देवता प्रभृतिकार्थगतः समयः कुतः ॥ २६१ ॥

பதவுரை

अपि च-மேலும்

लौकिकमानबलाश्रयात् - லௌகிக பிரமாண பலத்திஞசிரயத்தால்

अधिगते विषये-அறியப்பட்ட கடாதி விஷயத்தின் கண்

समयो भवेत् -சங்கேத ஞானமுண்டாம்

अनुपलब्धसतत्त्वक देवता प्रभृतिकार्थगतः — லௌகிக பிரமாணத்தாலறியப் படாத சொரூபத்தினை உடைய தேவதை முதலிய பொருளின் கண்

समयः कुतः-சங்கேத ஞானம் எவ்வாறுண்டாம்.

ஒருவாற்ருனுமுண்டாகாதென்பது பொருள். (261)

(அ) மேலும் சங்கேதத்தினதீனமான வியவகாரத்திற்கு அதன் கர்த்தாவின் ஸ்மரணம் வியாபகமாகக்காணப்பட்டுளது. கவாதி சப்தார்த்த சம்பந்த வியவகாரத்தின்கண்ணே கர்த்தாவின் ஸ்மரணமின்மையின் இவ்வியவகாரம் சங்கேதத்தினதீனமன்ரும் எனக்கூறுகின்ருர்:—

अपि च कर्तुरनुस्मरणं भवेद्यदि चकार पुमान्समयं गिराम् ।
न खलु कर्तृग बुद्धिबलं विना व्यवहृतिर्भवति व्यवहर्तरि ॥ २६२ ॥

பதவுரை

अपि च-மேலும்

गिराम् समयम् - கோகடாதி பதங்கட்க்குச் சங்கேதத்தினை

पुमान् यदि चकार - ஈஸ்வரன் செய்திருப்பாளுயின் அப்போது

कर्तुः अनुस्मरणं भवेत् -கர்த்தாவின் ஸ்மரண முண்டாம்

கர்த்தாவின் ஸ்மரணத்தன்மையின்கண் வியாபகத்தன்மையினை விபக்ஷத்தின் பாதகத்தைக் காண்பித்தலால் உபபாதனஞ் செய்கின்ருர். (விபக்ஷமாவது கர்த்தாவின் ஸ்மரணமின்றியே சங்கேதக்ஞானமுண்டாகாதென்பது)

व्यवहर्तरि -சங்கேதஞ் செய்யப்பட்ட வர்தங்களில் வியவஹரிக்கும் புருடனிடத்தில்

व्यवहृतिः-யாதொரு வியவஹாரமுண்டோ அது

कर्तृगबुद्धिबलं विना - சங்கேதகருத்தாவின் ஆப்தத்தன்மையின் ஸ்மரணமின்றி

**न खलु भवति** - உண்டாகின்றதில்லை.

விசேஷவுரை

சங்கேத கருத்தாவின்கண் ஆப்தத்தன்மையின் ஸ்மரணம் சங்கேதத்தினதீனமான வியவகாரத்திற்கு மூலமாம் இன்றேல் வஞ்சகர் முதலியோரால் செய்யப்பட்டது. என்னுஞ் சங்கையால் அதனதீனமான வியவகாரமுண்டாகாது என்பது பொருள். (262)

(அ) எவ்வியவகாரம் சங்கேதத்தினதீனமோ அவ்வியவகாரத்திற்கு சங்கேத கர்த்தாவின் ஸ்மரணம் வியாபகமாம் என்னும் வியாப்த்தியினை உதாகரணத்தின்கண் இருப்பதாக விஸ்த்தரிக்கின்றார்:—

न खलु पाणिनि पिङ्गलसंज्ञया व्यवहरन्ति तयोः स्मरणं विना ।
पदपदार्थपरस्परसंगतिं निरमिमीत ततो न जगद्गुरुः ॥ २६३ ॥

मतिमतां प्रवरो वृषभध्वजः कणभुगादिमुनिप्रवरः प्रभुः ।
ननु धरादि जगद्रचनाबलादनुमितोऽनवखण्डितशक्तिकः ॥ २६४ ॥

பதவுரை

**पाणिनि पिङ्गल संज्ञया** - பாணினி மஹரிஷியாலும் பிங்கல மஹரிஷியாலும் செய்யப்பட்ட பெயரால்

**तयोः स्मरणं विना** - அவர்களின் ஸ்மரணமின்றி

**न खलु व्यवहरन्ति** - உலகில் ஒருவரும் வியவகரிக்கின்றிலர்

ஆகார ஐகார ஔகாரங்கட்கு விருத்தியென்னும் பெயர் பாணினி மஹரிஷியினால் வைக்கப்பட்டுள்ளது. தீ, ஶ்ரீ, ஸ்த்ரீ என்பது முதலியவை பிங்கள மஹரிஷியாற் செய்யப்பட்ட பெயராம். அற்றேல் காரியத்தை லிங்கமாகவுடைய அனுமானப் பிரமாணத்தினாலேயே ஸர்வஞ்ஞனும் சர்வசக்தி சம்பன்னனுமான ஈஸ்வரன் சித்திக்கின்றான். அவரே தனதிச்சையினால் காயவ்யூகத்தையுண்டுபண்ணி உத்தம விருத்தத்தன்மையினையும் மத்திம விருத்தத்தன்மையினையுமடைந்து தன்னாற்

பிரயோகிக்கப்பட்ட பதங்களினுல் தனது சங்கேதத்தினனுசார மாக வியவகரித்தனர் அக்காலத்திலுள்ளவரும் அவரால் வியுற்பன்னருமான ஜனங்கள் அவரது வியவகாரத்தைக் காண்டலானேயே அவரிடத்து பிரவர்த்தக ஞானத்தையனுமித்து வியவகரிக்கப்படுகின்ற அவ்வவ்வஸ்துக்களில் சாமான்யமாகவும் விசேஷமாகவும் கொள்ளுதல் தள்ளுதலினுல் பத சம்பந்தத்தையறிந்து தாமும் அவ்வாறே வியவகரிக்கின்றவராய் அன்னியரிடத்தும் அவ்வியவகாரத்தைப் பிரவிருத்திப்பிக்கின்றனர் என்று கற்பிக்கின்ற பண்டிதர்களுடைய சங்கேத கருத்தாவின் ஸ்மரணம் உண்டுமுளது என்னுஞ் சங்கையினை நிவர்த்திக்கின்றவராய் பிரகிருதத்தை ஒன்றரை சுலோகத்தால் முடிக்கின்ருர்.

ततः -சங்கேதகர்த்தாவின் ஸ்மரண முண்டாகாமையினுல்

धरादिजगद्रचनावलात् -பிருதுவி முதலிய பிரபஞ்சத்தை உண்டு பண்ணுதலின் சாமர்த்தியத்தால்

ननु अनुमितः -நன்ருய் அனுமிக்கப்பட்டவரும்

अनवखण्डितशक्तिकः -தடையற்ற வாற்றலுடையவரும்

मतिमतां प्रवरः -புத்திமான்களுக்குள் சிறந்தவரும்

कणभुगादिमुनिप्रवरः -கணுதர் முதலிய மஹரிஷிகளுள் சிறந்தவரும்

वृषभध्वजः -ரிஷபக்கொடியை யுடைத்தானவரும்

जगद्गुरुः प्रभु -ஜகத்திற்கு சுவாமியுமான பரமேஸ்வரன்

पदपदार्थपरस्परसङ्गतिम् -பதத்திற்கும் அர்த்தத்திற்குமுள்ள பரஸ்பர சம்பந்தத்தினை

न निरममीत-உற்பத்தி செய்திலர்

விசேஷவுரை

கருத்தாவின் ஸ்மரணமுண்டாகாமையினுல் பரமேஸ்வரன் சம்பந்தத்தையுற்பத்தி செய்திலர் எனக்கூட்டுக.

ஈண்டு இஃது அபிப்பிராயம் காரியலிங்கத்தினையுடைய வனுமானத்தால் ஸர்வக்ஞனது சித்தியின்றும். பக்ஷமாகச் செய்யப்பட்ட அங்குராதிமாத்திரத்தை விஷயஞ்செய்கின்ற ஞானமுடையவன் சித்திப்பினும் அவனுக்கு சர்வகோசர ஞானம் சித்தியாமையின் பூமி, மலை, சமுத்திர முதலியவற்றிற்கு காரியத்தன்மையே அசித்தமாம். அப்போது அவற்றின் கருத்தாவின் சித்தி எங்ஙனமாம். அவைகட்கு சாவயவத் தன்மையுண்மையான் காரியத் தன்மையனுமிக்கப்படுகின்றது என்று சொல்லற்க. அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட தன்மையாகிய சாவயவத்வமும் சித்தியாமையின் மத்திம பரிமாணத்தன்மையும் அவற்றின் காரியத்தன்மையின்கண் லிங்கமன்றும். மஹத்துவத்திற்குப்போன்று அப்பிரயோஜகத் தன்மையுண்மையின். அற்றேல் அங்குர முதலிய காரியத்தா லனுமிக்கப்பட்ட ஞானம் லாகவத்தால் ஏகமாயும் நித்தியமாயும் சித்திக்கின்றதாய் வினிகமகமின்மையினால் சர்வகோசரமாயும் சித்திக்கின்றது ஆதலின் அதனையுடையவனுக்கு சர்வஞ்ஞத் தன்மை சித்தியாம் எனின் அற்றன்று லாகவத்தாலேயே கிருதி மாத்திரமுடையவனுக்கு அதன் கருத்துருத்தன்மை சம்ப வித்தலால் அதனை விஷயஞ்செய்கின்ற ஞானமே சித்தியாமை யின். ஞான இச்சைகட்கும் தனித்தனி காரணத்தன்மை சித்தித்த வழி அவைகட்கு நித்தியத்தன்மை சர்வ விஷயத் தன்மை முதலியவையும் லாகவத்தானேயே சித்தித்தலின். நித்திய கிருதியுடையவனுக்கு சர்வஞ்ஞத்வாதி சித்தியாம். என்று சொல்லற்க. அவ்வாறாயின் தேஹேந்த்ரியாதிகட்கும் தனித்தனி காரணத்தன்மை சித்தித்தவழி அவற்றிற்கும் நித்தியத்தன்மை முதலியவை பிராப்தியாதலின் அதனையும் அங்கீகாரஞ்செய்யின்

'न ह वै सशरीरस्य सतः प्रियाप्रिययोः अपहतिरस्ति'

'சரீரத்தோடு கூடியவனுக்கு சுகதுக்கங்களின் நீக்கமின்றும்' என்னும் சுருதியினாலும் போகாயதனத்திற்கே சரீரத்தன்மை யுண்மையானும் அதனை (சரீரத்தினை)யுடைய ஈஸ்வரனுக்கு சம்சாரம் பரிகரிக்கத்தகாதாம்.

'न तस्य कार्यं करणं च विद्यते' अकायं अव्रणं'

ஈஸ்வரனுக்கு தேஹேந்திரியங்களின்றும் என்பது முதலிய சுருதிக்கு விரோதம் வருதலினாலும் ஈசுவரனுக்கு வாஸ்தவமாக

சரீர முதலியவற்றையங்கீகரித்தல் தகாது. அற்றேல் சரீராதிகட்கு சரீரத் தன்மை முதலியவற்றினவச்சேதத்தால் அநித்யத் தன்மையறியப் படுதலின் அதற்கு விரோதம் வருதலின் நித்திய சரீராதியினனுமானம் அசங்கதமாம் எனின் அற்றன்று. அப்படியானல் ஞான இச்சை கிருதிகட்கும் லாகவத்தால் ஞானத் தன்மை முதலியவற்றினவச்சேதத்தால் அநித்யத்தன்மையறியப்படுதலின் அதற்கு விரோதம் வருதலின் அவற்றிற்கு நித்தியத்தன்மையினையும் அனுமித்தற்றகாது. ஆதலின் சர்வஞ்ஞத்துவாதியின் சித்தி எங்ஙனமாம். தூங்கி எழுந்தவன் முதற்றினத்தில் நடந்த வியவகாரங்களை ஸ்மரித்து வியவகரிப்பதுபோல பூர்வகற்பத்தின் சப்தார்த்த சம்பந்தத்தின் வியவகாரத்தை ஸ்மரித்து இக்கற்பத்திற் பிரவிருத்திப்பிக்கின்றவராய் இரண்யகர்ப்பர் முதலியோர் சுருதி ஸ்மிருதியாதியில் அறியப்பட்டபோது ஈஸ்வரனுக்கு காயவியூகாதியின் கற்பனையினல் அதன் பிரவர்த்தகத் தன்மையைக் கற்பித்தல் உசிதமன்றும். அதனை கற்பிக்கினும் நீ கூறிய ரீதியால் பூர்வகற்பத்தினுள்ள சப்தார்த்த சம்பந்தத்தின் வியவகாரத்தை பிரவிருத்திபிக்குந் தன்மையே ஈஸ்வரனுக்கு கற்பிக்கத்தக்கதாம். புதிதாக சங்கேத முதலியவற்றைச்செய்தலும் கற்பிக்கத்தக்கதன்று. கற்பனைக் கௌரவம் வருதலின். ஆதலால் சர்வபதார்த்த சம்பந்த சங்கேத கருத்தாவின்கண் பிரமாணமின்மையின் மோஹமாத்திரத்தினலேயே அதனங்கீகாரமாம். ஆதலின் அனுமானத்தாற் சாதிக்கப்பெற்ற ஈஸ்வரனிடத்தில் வாதியாற் கற்பிக்கப்பட்ட ஜகத்தின் சுவாமித்தன்மை முதலியவை வர்ணிக்கப்பட்ட ரீதியினல் பொருத்தமற்றதாம். என்னுங் கருத்தால் ஜகத்தின் சுவாமி என்பன முதலிய விசேஷணங்கள் அனுவதிக்கப்பட்டன. (263-264)

(அ) சித்தாந்தத்தின் கண்ணும் நாம ரூபான்மகமான பிரபஞ்சத்திற்கு ஈசுவர ஜன்னியத்தன்மையை யங்கீகரித்திருத்தலால் அதன் நிராகரணம் எங்ஙனமாமென்று ஆசங்கித்து எம்மால் கூடஸ்த சச்சிதாநந்த ஏகரச பரமான்மாவிற்கு சாஸ்திரவசத்தால் மாயையினல் விசித்திர சகத்தின் அபிவியத்தி ஏதுத்தன்மையை யங்கீகரித்தலின் அவரால் பிரமாணந்தரத்தால் அர்த்தத்தை யறிந்து செய்யப்பட்ட தாந் தன்மையின்மையின் வேதத்திற்கு அபௌருஷேயத்தன்மையால் தன்னற் பிராமாண்யத்தின் சித்தியாமென்னுங்கருத்தாற் கூறுகின்றர் :—

अपि तु वैदिकवाङ्मनसातिगानुदितलुप्तचिदेकरसात्प्रभोः ।
अभवदानकदुन्दुभिनन्दनादमतिपूर्वमिदं सकलं जगत् ॥ २६५ ॥

பதவுரை

अपि तु-மற்ருே

वैदिकवाङ्मनसातिगानुदित लुप्तचिदेकरसात् — வைதிகமும் வாக்குமனதிற்கு அவிஷயமும் உதயாஸ்தமன மற்ற சிதேகரசமும்

आनकदुन्दुभिनन्दनात् - வசுதேவனது புத்திரனுமான

प्रभोः -பரமான்மாவினின்றும்

इदं सकलं जगत् -இந்த சம்பூர்ண சகத்தும்

अमति पूर्वम् -அபுத்தி பூருவகமாகவே

अभवत् -உண்டாயிற்று.

விசேஷவுரை

வைதிகம் = வேதமாத்திரத்திற்கு விஷயம், பரமான்மாவிற்கே அவதாரத்தைத தெரிவித்தற்பொருட்டு வசுதேவனது புத்ரன என்று கூறப்பட்டது. அவருக்கு சருவஞ்ஞத்தன்மை முதலியவை யெப்படியும் சுருதியாதியாற் சித்தமாம் அங்ஙனமாயினும் வேதம முதலியவற்றின் அபிவியத்தியின் கண் அவை ஏதுவன்ரும் ஆதலின் அபுத்தி பூருவகமென்று கூறப்பட்டது. (265)

(அ) காரியத்தை லிங்கமாகவுடைய அனுமானப் பிரமாணத்தால் வாதியின் அபிமதமான சருவஞ்ஞ ஈசுவரன் சித்திககாவிடினும் உபதேசததை லிங்கமாகவுடைய அநுமானத்தால் அவனது சித்தியாமென கூறுகின்றவராய் அதற்கு (அநுமானத்திற்கு) அங்கமாயுள்ள வியாப்தியினை முதலில் தெரிசிப்பிக்கின்ருர் :—

ननु लौकिकवचसां नरमतिपूर्वकरचना
परिदृश्यत इति वैदिकवचसामनुमिनुमः ।

वचनं श्रुतिशिरसामपि नरधीकृतरचनं
वचनत्वत इव लौकिकजनमनिर्मित वचनम् ॥ २६६ ॥

பதவுரை

नतु लौकिकवचसाम् - அற்றேல் இலௌகிக வாக்யங்கட்கு

नरमतिपूर्वकरचना - புருடனது புத்தி பூர்வகவுற்பத்தி

परिदृश्यते इति - காணப்படுகின்றது ஆதலின்

वैदिकवचसाम् வைதிக வாக்யங்கட்கு

(ताम्) अनुमिनुमः -புருடனது புத்திபூர்வகவுற்பத்தியினை யனுமிக்கின்றோம்.

இப்போது அவ்வனுமானத்தைக் கூறுகின்றார்.

श्रुतिशिरसां वचनमपि - வேதாந்தவாக்கியமும்

नरधीकृतरचनम् புருடனது புத்தியாற் செய்யப்பட்டது

वचनत्वतः -வாக்கியமாதலால்

लौकिकजननिर्मितवचनमिव - இலௌகிகமனிதராற் செய்யப்பட்ட வாக்கியம் போன்று

விசேஷவுரை

வேதாந்தமென்பது வேதமாத்திரத்திற்கு உபலக்ஷணமாம். வைதிக வாக்கியமென உபக்கிரமத்திலிருத்தலின் (266)

(அ) அங்ஙனமாயினும் அசர்வஞ்ஞ (கிஞ்சிக்ஞ)னது புத்திபூர்வகத்தன்மையை சுவீகரித்து அர்த்தாந்தரத்தன்மை வருதலால் சர்வஞ்ஞஈஸ்வரனது சித்தியின்றாம். என்றாசங்கித்து பூதபவிஷ்யத்து முதலிய வடிவினதும் அபரிமிதமும் தர்மாதர்மாதிவடிவினதுமான வேதார்த்தத்தினை சுபாவமாக சர்வஞ்ஞத்தன்மையின்றி பிரமாணாந்தரத்தாலறியக் கூடாமையின் சர்வஞ்ஞத் தன்மையினதீனமான சீவபூர்வகவுற்பத்தி வேதத்தின்கண் பாதிக்கப்படுதலால் வாக்கியத்தன்மையேதுவிற்கு பக்ஷதர்மத்தன்மையின் பலத்தால் சொரூபமாக சர்வஞ்ஞஈஸ்வரனே வேத வுற்பத்தியின் கருத்தாவாகச் சித்திக்கின்றான். என்று கூறுகின்றார்:—

न च मादृशजनधीकृतवचनं श्रुतिवचनं
भवितुं क्षममिति वैदिकरचनाबलमिषतः ।
अनुमीयत इह शूलभृदिति चेदिदमशुभं
न हि वैदिकवचसामभिभवनास्पदमनुमा ॥ २६७ ॥

பதவுரை

श्रुतिवचनम्-வேதவாக்யம்

मादृशजनधीकृतरचनम् - என்போன்ற மனிதரது புத்தியாற் செய்யப்பட்டதாக

भवितुं न च क्षमम् इति - ஆவதற்கு யோக்கிய மன்றும் ஆதலின்

वैदिकरचनाबलमिषतः -வைதிக வாக்கியத்தைச் செய்தலிற் சாமர்த்திய வியாஜத்தால்

इह शूलभृत् -ஈண்டு பரமேச்வரன்

अनुमीयते इति चेत् -அனுமிக்கப்படுகின்ருனெனின்

நம்மனோரால் செய்யத்தகாத வடிவினதாயினும் வேதத்திற்கு அனுதித்தன்மை சம்பவித்தலால் கருத்தாவினபேக்ஷையயின்ரும். என்ருசங்கித்து ஆப்தனுற்செய்யப்பட்டதாந் தன்மையின்றேல் அதன்கண் அப்ரமாணத்தன்மை சங்கையை நீக்கமுடியாமையின அதன் பிரமாணத்தன்மையின் பொருட்டு ஆப்தனுற் செய்யப்பட்ட தன்மை கூறத்தக்கதாமென்று கருதி வைதிக என்பதாதி விசேஷணங்கூறப்பட்டது. வைதிக வாக்கிய ரசனையின் சாமர்த்தியத்தால் ஈச்வரனனுமிக்கப்படுகின்ருன் என்பதுபொருள். இம்மதத்தினை தூஷிக்கின்ருர்:—

इदम् अशुभम्-மேற்கூறியவனுமானம் சரியன்று

அனுமிக்கப்பட்ட ஈச்வரனது ஞானத்திற்கு மூலமில்லையாயினும் அனுதித் தன்மையுண்மையால் பிரமாணத் தன்மை எங்ஙனமங்கீகரிக்கப்படுகின்றதோ அங்ஙனம் முற்கூறிய பிரகாரத்தால் அபௌருஷேயமும் அனுதியாதலால் அனுப்த

ஞற்செய்யப்பட்டது என்பது முதலிய சங்கையற்றதுமான வேதத்திற்கும் தன்ஞற் பிரமாணத் தன்மை பொருந்துதலின் அதன் கருத்தாவிற்குச் சர்வஞ்ஞத்துவாதியைச் சாதித்தல் வீணேயாம். வேதத்திற்கு அபௌருஷேயத் தன்மையைப் பிரதிபாதிக்கின்ற சுருதிக்கு விருத்தமாதலின் இவ்வனுமானம் ஸ்வயமே அப்பிரமாணமாம். அஃது வேதத்தின் பௌருஷேயத் தன்மை முதலியவற்றைச் சாதித்தற்கு சமர்த்தமாகாதெனக் கூறுகின்ருர்.

वैदिकवचसाम् -வைதிக வாக்கியங்கட்கு

अभिभवनास्पदम् -பாதகமாக

अनुमा न हि-அநுமானப் பிரமாணமாவதின்ரும் (267)

(அ) வேதத்திற்கு அபௌருஷேயத் தன்மையைப் பிரதிபாதிக்கின்ற சுருதி யாது என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்ருர் :—

ब्रह्म स्वयम्भु परमात्मपदस्य वेदो
निःश्वासकल्प इति चापरमामनन्ति ।
वाक्यं तदस्य मतिपूर्वकताऽनुमानं
सद्यो निरस्यति न चेदपबाधितं स्यात् ॥ २६८ ॥

பதவுரை

ब्रह्म स्वयम्भु - வேதம் சுயம்புவாம்-தானேயுண்டானது

वेदः परमात्मपदस्य -வேதம் பரமான்ம சொரூபத்தின்

निःश्वासकल्प इति च-மூச்சுக்காற்றுக்கு சமானமாம் அதாவது அநாயாசமாக உண்டாயிற்று எனவும்

अपरं वाक्यम् - மற்ருேர் வாக்கியத்தினை

आमनन्ति -சில ரிஷிகள் படிக்கின்றனர்

तद् अस्य -அவ்வாக்கியம் வேதத்திற்கு

मतिपूर्वकताऽनुमानम् - புத்தி பூருவகத் தன்மையைச் சாதிக்கு மநுமாநத்தினை

सद्यो निरस्यति–உடனே–அநுமானப் பிரயோக காலத்தி
லேயே பாதிக்கின்றது

न चेद्–அநுமானத்தினை பாதிக்காதாயின்

अपबाधितं स्यात्-தான் பாதிக்கப்பட்டதாகவாகும்

விசேஷவுரை

परमेष्ठि ब्रह्मण: – பரமேஷ்டியாகிய பிரம்மாவுக்கு என்னும் பூர்வ வாக்கியத்தின்கண் இரண்யகர்பருக்கும் வேதத்தாலேயே வித்தையின் பிராப்தியினைக் கூறி வேதத்திற்கும் இலௌகிக வாக்கியத்திற்குப் போன்று பிரமாணுந்தராதீனுர்த்தத்தையுடையதாந் தன்மையை நிராகரித்தற் பொருட்டு வேதம் சுவயம்பு (ஒருவராற் செய்யப்படவில்லை) என்னுஞ் சுருதி வெளிப்படையாகவே வேதத்திற்கு அபௌருஷேயத் தன்மையினைக் கூறுகின்றது. அப்படியே

"अस्य महतो भूतस्य निश्वसितम् एतद्यदृग्वेदः"

இப்பரமான்மாவினது மூச்சுக்காற்றுப்போன்று ரிக்வேதம் உண்டாயிற்று என்பது முதலிய சுருதியும் உபக்கிரம உபசம்மாரங்களினுல் புருடனது மூச்சுக்காற்றுக்குப் போன்று வேதங்கட்கு புத்திபூர்வகத் தன்மையினை நிராகரிக்கின்றதாய் அவைகட்கு புத்திபூர்வகத் தன்மையினனுமானத்தினைப் பாதிக்கின்றது. அதனைப் பாதிக்காதாயின் தனக்குப் பிரமாணத் தன்மை பொருந்தாமற்போம் என்பது பொருள். (268)

(அ) கேவலம் ரிக்வேதாதி வடிவ சப்தப்பிரபஞ்சத்திற்கே அபுத்திபூர்வக சிருஷ்டியின்றும். மற்றோ

"इष्टं हुतं प्राशितं पायितं अयं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि अस्यैवैतानि सर्वाणि निश्वसितानि"

யாகம், ஹோமம், அன்னம், ஜலம், இவ்வுலகம், அவ்வுலகம், ஸர்வபூதங்கள் ஆகியவனைத்தும் இப்பரமான்மாவில் நின்றும் மூச்சுக் காற்றுப் போன்று உண்டாயின என்னுஞ் சுருதியினுல் ஸர்வகார்யக் கூட்டத்தின் உத்பத்தி முதலிய எல்லா விகாரங்களுமே மூச்சுக்காற்றுப் போன்று அபுத்தி பூர்வகமேயாம். அதனுல் வாதிகளது காரியத்தை லிங்கமாக

வுடையவனுமானமும் சுருதியோடு விருத்தார்த்தத்தையுடை மையின் அப்பிரமாணமாமெனக் கூறுகின்ருர்:—

सृजति रक्षति संहरति प्रभुः सकलमेव निविश्य नियच्छति ।
अमतिपूर्वकमिति श्रुतिशासने वद कथं मतिपूर்वकतानुमा ॥ २६९ ॥

பதவுரை

प्रभुः अमति पूर्वकम् - பரமேஸ்வரரானவர் அபுத்தி பூர்வக மாகவே

सृजति-சர்வத்தையும் சிருஷ்டிக்கின்ருர்

रक्षति संहरति-காக்கின்ருர் அழிக்கின்ருர்

सकलमेव निविश्य - சர்வத்திலும் பிரவேசித்து அதாவது சிதாபாச வாயிலாக சம்பந்தத்தினை யடைந்து

नियच्छति - நியமனஞ் செய்கின்ருர்

इति श्रुतिशासने -என்றிவ்வாறு சுருதி பிரதிபாதிக்கும்போது

मतिपूर्वकतानुमा - வேதங்கட்கு புத்தி பூர்வகத்தன்மை யினனுமானம்

कथं वद- எவ்வாறுதிக்கும் கூறுவாயாக. (269)

(அ) அற்றேல் மந்திரங்கட்கும் ஆயுர்வேதங்கட்கும் போன்று ஆப்தப்பிரமாணத் தன்மையால் அவைகட்குப் பிரமாணத் தன்மையாம் என்று கூறியிருத்தலின் ஆப்தனுற் கூறப்பட்டதாந் தன்மையன்றி வேதத்திற்குப் பிரமாணத் தன்மை எங்ஙனமாம் என்ருசங்கித்து வேதத்தின்கண் ஆப்தனுற் கூறப்பட்டதாந் தன்மை அனுமானத்தாற் சித்தித்ததா? அல்லது அதனை (பிரமாணத் தன்மையினை) விரிக்கின்ற சுருதியினுற் சித்தித்ததா? முதற்பக்ஷம் சரியன்று. அஃது முன்னமே கண்டிக்கப்பட்டமையின் என்று கருதி இரண்டாவது பக்ஷத்திலோ அப்பிரமாணத் தன்மையினுல் சங்கிக்கப்பட்ட சுருதியினுல் அஃது சித்தியாமையின் அதன் பிரமாணத் தன்மை முதலில் அறியத்தக்கதாம். அதனுல்

அன்னியோன்னியாசிரய தோஷம் வருதலின் ஒன்றுகூட சித்தியாதெனக் கூறுகின்றார்:—

आप्तोक्तत्व प्रत्यये मानभावो वेदस्यास्य ज्ञायते मानभावे ।
विज्ञाते सत्याप्तपूर्वत्वसिद्धि रित्यन्योऽन्यापाश्रयत्व प्रसङ्गः ॥ २७० ॥

பதவுரை

आप्तोक्तत्व प्रत्यये - ஆப்தனாற்கூறப்பட்டதாந் தன்மையின் ஞானமுளதாய வழி

अस्य वेदस्य - இவ்வேதத்திற்கு

मानभावः ज्ञायते - பிரமாணத்தன்மையறியப்படும்

मानभावे विज्ञाते सति - பிரமாணத்தன்மையறியப்பட்ட வழி

आप्तपूर्वत्वसिद्धिः - ஆப்தனாற் கூறப்பட்ட தாந்தன்மையின் ஞானமுண்டாம்

इति अन्योऽन्यापाश्रयत्व प्रसङ्गः - இவ்வாறு அன்னியோன்னியாசிரய தூஷணமுண்டாம் (270)

(அ) வேதத்திற்கு ஆப்தனாற் செய்யப்பட்டதாந்தன்மையினையங்கீகரியாவிடின் அதனாலுண்டான வித்தைக்கு எங்ஙனம் பிரமாணத் தன்மையின் சித்தியாமென்றுசங்கித்து சித்தி சப்தத்தாற் சொல்லப்பட்ட அதன் (பிரமாணத் தன்மையின்) ஞப்தி ஆக்ஷேபஞ் செய்யப்படுகின்றதா? அல்லது அதன் ஸத்தை யாக்ஷேபம் செய்யப்படுகின்றதா முதற்பக்ஷம் சரியன்று. வேதத்திற்கு அபௌருஷேயத் தன்மையைச் சாதித்தலால் அனாப்தனாற் செய்யப்பட்டதாந் தன்மை முதலியவற்றை நிமித்தமாகவுடைய அப்பிரமாணத் தன்மை சங்கைக்கு அவகாசமின்மையின் அதனால் (வேதத்தினால்) உத்பன்னமான வித்தை எப்போது கிரகிக்கப்படுகிறதோ அப்போது பிரமாணத் தன்மையாகவே கிரகிக்கப்படுகின்றது. ஆதலின் ஞானத்தின் பிரமாணத் தன்மை ஞப்தியால் சுவதஸ்த்வம் சித்திக்கின்றது என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

तस्मादेषा स्वप्रयुक्त प्रमाण भावज्ञाना वेदविद्याऽभ्युपेया ।
प्रामाण्यं स्यात्स्वप्रयुक्तं च तस्या वस्तुस्थित्या ज्ञप्तिवन्नान्यतस्तत् ॥

பதவுரை

तस्माद् - வேதத்திற்கு ஆப்தஞற் செய்யப்பட்டதாந் தன்மையில் அன்னியோன்யாசிரய தோஷம் வருதலால்

एषा वेदविद्या - இந்த வைதிகஞானம்

स्वप्रयुक्त प्रमाणभावज्ञाना - தனது அதீன பிரமாணத்தன்மையின் ஞானமுடையதாக

अभ्युपेया - அங்கீகரிக்கத்தக்கதாம்

இரண்டாவதுபக்ஷமும் சரியன்று. அபௌருஷேய வேதத்திற்கு அப்பிரமாணத் தன்மையின் பிரயோஜகம் (காரணம்) இன்மையின் அதஞல் (வேதத்தால்) உண்டான ஞானத்தின் பிரமாணத் தன்மைக்கு ஞானசாமக்ரீமாத்திரத்தினதீனத் தன்மையுண்மையால் வேறு காரணத்தினபேக்ஷயின்மையிஞல் உத்பத்தியின் கண்ணும் சுவதஸ்த்துவம் சித்தித்தலின் என அதன் ஞப்தி திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்,

तस्या वस्तुस्थित्या - வைதிக ஞானத்திற்கு வஸ்துவின் சுபாவத்தால்

ज्ञप्तिवत् प्रामाण्यम् - ஞப்திபோன்று பிரமாணத்தன்மை

स्वप्रयुक्तं च स्यात् - ஞானசாமக்கிரீ மாத்திர ஜன்னியமாம்

तत् न अन्यतः - அஃது வேறு காரணத்தாலன்ரும்

ஞானப்பிராமாண்யத்திற்கு பரதஸ்துவ கற்பனை அஞ்ஞான விஜ்ரும்பிதமாம் என்பது கருத்து. (271)

(அ) இங்ஙனம் வேதஜன்னிய பிரமையின் உற்பத்தி ஞப்திகட்கு சுவதஸ்த்துவத்தினைக் கூறி அவ்வாறே சைதன்யத்தினபிவ்யக்தி வடிவ பலத்தின்கண்ணும் வேறு காரணத்தினனபேக்ஷித் தன்மை வடிவ ஸ்வதஸ்துவத்தைக் கூறுகின்ருர் :—

ज्ञप्त्युत्पत्त्योर्यद्वदेवं प्रवृत्तावस्या युक्ता मानता स्वप्रयुक्ता ।
वेदोत्थाया बुद्धिवृत्तेर्नहीयमुत्पद्याऽन्यत्संविदे कांक्षतीति ॥ २७२ ॥

பதவுரை

अस्या वेदोत्थाया बुद्धिवृत्तेः - வேதத்தால் உண்டான புத்தி விருத்தி வடிவ ஞானத்தின்

प्रवृत्तौ - பலத்தினுற்பத்தியில்

ज्ञप्त्युत्पत्त्योः - ஞப்திக்கும் உற்பத்திக்கும்

यद्वत् एवम् - எங்ஙனம் ஸ்வதஸ்த்துவமோ அங்ஙனம்

स्वप्रयुक्ता मानता युक्ता - தன்னாற்பிராமாண்யம் பொருத்தமாம்

வித்தையினுற்பத்தியின் வியாப்யத்தன்மையால் அதன் பயன் சித்தித்தலின் அதன்கண் அன்னியத்தினபேக்ஷை பொருந்துகின்றதில்லையெனக் கூறுகின்றார்.

इयं उत्पद्य - இந்த ஞானமானது உதயமாகி

संविदे - அபிவ்யக்த சித்தின்பொருட்டு (சம்வாதத்தின் பொருட்டு)

अन्यत् नहि कांक्षतीति - வேறொன்றை விரும்புகின்றதில்லையாதலின் (272)

(அ) அற்றேல் வேதத்தின் பௌருஷேயத்தன்மை யனுமானத்திற்கு விரோதம் வருதலால் அதற்கு மூச்சுக் காற்றுப் போன்று அபுத்தி பூர்வகத் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியே வேறு பிரகாரத்தால் செலுத்தத்தக்கதாம். என்று ஆசங்கித்து நிரபேக்ஷமாய் பின்னுண்டாவதால் சுருதிக்கு பலமுண்மையினும் வர்ணிக்கப்பட்ட நியாயத்தால் வேதத்திற்கு புருடனது புத்தி பூர்வகத்தன்மை சம்பவியாமையானும். அதனனுமானத்திற்கே ஆபாசத்தன்மை யங்கீகரிக்கத் தக்கதாம். என கூறப்பட்டதன் அனுவாத பூர்வகம் முடிக்கின்றார்:—

विश्वं विष्णोरुत्थितं नामरूपं निःश्वासादिप्ररूयमित्याह वेदः ।
यत्तत्तथ्यं वर्त्मना वर्णितेन तस्मान्मिथ्या पौरुषेयानुमानम् ॥ २७३ ॥

பதவுரை

नामरूपं विश्वम् - நாமரூபான்மகமான பிரபஞ்சம்

निःश्वासादिप्रख्यम् - மூச்சுக் காற்றிற்கு சமானமாக

विष्णोः उत्थितमिति - பரமான்மாவில் நின்றுமுண்டாயிற்று என

वेदः यत् आह - சுருதி யாதொன்றைக் கூறுகின்றதோ

तत् वर्णितेन वर्त्मना- அஃது வர்ணிக்கப்பட்ட மார்க்கத்தால்

तथ्यम् - யதார்த்தமேயாம். அதாவது பாதகமாம்.

तस्मात् - ஆதலால்

पौरुषेयानुमानम् - பௌருஷேயத் தன்மையினனுமானமே

मिथ्या - பொய்யாம். அதாவது பாத்தியமாம். (273)

(அ) இங்ஙனம் வாக்கியத் தன்மையினை லிங்கமாக வுடையவனு மானத்தைக்கண்டித்து வேதத்திற்கு பிரம்மத்தின் பரிணாமத்தன்மையிலாவது அதன் விவர்த்தத்தன்மையிலாவது பௌருஷேயத்தன்மை யுண்மையால் நிரபேக்ஷத் தன்மை யின்றும் என்னுஞ் சங்கைக்கும் புத்தி பூர்வகமாகச் செய்யப் பட்டதாந் தன்மையின் அபாவ முதலியவற்றால் கூறப்பட்ட பரிகாரத்தினை முடிக்கின்றார்:—

परिणामविवर्तयोरतः परिकॢप्तावपि वेदगोचरः ।
नच चोद्यलवोऽपि विद्यते कथितेनैव पथाऽनपेक्षितः ॥ २७४ ॥

பதவுரை

परिणामविवर्तयोः - வேதத்திற்கு பிரம்மத்தின் பரிணாம விவர்த்தங்களை

परिकॢप्तावपि - கற்பிக்கினும்

अतः वेदगोचरः - இதனால் வேதவிஷயகமான

चोद्यलवोऽपि - சங்கையின் லேசமும்

न च विद्यते - உண்டாகின்றதில்லை.

இதனால் என்பதனையே விஸ்தரிக்கின்றார்.

कथितेनैव पथा - கூறப்பட்ட மார்க்கத்தினாலேயே

अनपेक्षतः - நிரபேக்ஷத் தன்மையுண்மையின். (274)

(அ) இங்ஙனம் தத்துவம் பதங்களின் லக்ஷிய சுத்த வஸ்துவைத் தெரிசிப்பித்தற்பொருட்டு நாமரூபான்மகமான பிரபஞ்சத்திற்கு பிரம்மத்தின் விவர்த்தத் தன்மையினைக் கூறி அதன் பிரசங்கத்தால் வந்துள்ள வேதத்தின் பௌருஷேயத் தன்மைச் சங்கையை நிராகரித்து இப்போது தத்துவம்பத வாச்சியார்த்தங்களில் ஹேயோபாதேய விபாகத்தை தெரிசிப்பித்தற் பொருட்டு இரு பதங்களின் வாச்சியார்த்தங்களை இரண்டு சுலோகங்களால் நிர்த்தேசஞ்செய்கின்றார்:—

उपाधिमौपाधिकमान्तरं चिदाभासनं चित्प्रतिबिम्बकं च ।
चिद्बिम्बमेवं चतुरः पदार्थान्विविच्य जानीहि तदर्थभाजः ॥ २७५ ॥

पதவுரை

उपाधिम् - உபாதியும்
औपाधिकम् आन्तरम् - ஔபாதிகமாய் ஆந்தரமாயுள்ள
चिदाभासनम् - சிதாபாஸனும்
चित्प्रतिबिम्बकं च - சித்தின் பிரதிபிம்பமும்
चिद्बिम्बम् - சித்தாகிய பிம்பமும் என
एवं तदर्थभाजः - இங்ஙனம் தத்பதத்தின் வாச்சியத் தன்மை லக்ஷியத் தன்மையினை அடைந்துள்ள
चतुरः पथार्थान्- நான்கு பதார்த்தங்களையும்
विविच्य जानीहि - பிரித்து அறிவாய்.

விசேஷவுரை

சிதாபாஸனுக்கு சத்தியத் தன்மையினையும் படிகத்தில் உள்ள செந்நிறத்திற்குப் போன்று உபாதியின் புறம்பாந் தன்மையும் நீக்குதற் பொருட்டு ஔபாதிகமாய் ஆந்தரமாய் என இரண்டு விசேஷணம் கொடுக்கப்பட்டது. மூலத்தில் ததர்த்த என்பதிலுள்ள அர்தத சப்தம் பாவப்பிரதானமாம். அர்த்தத் தன்மை என்பது பொருள். (275)

तथात्वमर्थेऽपि चतुष्टयं तत् विवेचनीयं निपुणेन भूत्वा ।
मतिश्चिदाभासनमेनमस्यां बिम्बं तदीयं प्रतिबिम्बकं च ॥

பதவுரை

तथा त्वमर्थेऽपि - எங்ஙனம் தத்பதார்த்தத்திற்கு நான்கு விதமோ அங்ஙனம் துவம் பதார்த்தத்தின்கண்ணும்

तत् चतुष्टयम् - உபாதி முதலிய வடிவினதாகிய நான்கும்

निपुणेन भूत्वा - குசலனுயிருந்துகொண்டு

विवेचनीयम् - பிரித்து அறியத்தக்கது

பிரித்து அறியத்தக்கது என்பதனையே விஸ்தரிக்கின்ருர்.

मतिः चिदाभासनम् - அந்தக்கரணமும் சிதாபாஸனும்

एवम् अस्यां बिम्बम् - அங்ஙனமே அதன் அதிஷ்டான பிம்பமும்

तदीयं प्रतिबिम्बकं च - அதன் பிரதிபிம்பமும் என நான்காம்.

(அ) தத்பதத்தினர்த்தமாகக் கூறப்பட்ட உபாதி முதலிய நான்கின் வடிவத்தினை விசேஷமாகத் தெரிசிப்பிக்கின்ருர்:—

उपाधिरज्ञानमनादिसिद्धमस्मिंश्चिदाभासनमीश्वरत्वम् ।
तदन्विता चित्प्रतिबिम्बकं स्यादुदीर्यते शुद्धचिदेव बिम्बम् ॥

பதவுரை

अनादिसिद्धम् अज्ञानम् -அனுதியாயுள்ளவஞ்ஞானமே

उपाधिः - ஈச்வரனுக்கு உபாதியாக சொல்லப்படுகின்றது.

अस्मिन् चिदाभासनम् - உபாதியின்கண் சித்தைப்போல் தோன்றுகின்ற பிரதிபிம்பம்

ईश्वरत्वम् - ஈச்வரத் தன்மையாம்

तदन्विता चित् - அவ்வாபாஸனேடு கூடிய சித்து

प्रतिबिम्बकं स्यात् - பிரதிபிம்பமாம்

शुद्धचिदेव - சுத்தசேதனமே

बिम्बमुदीर्यते - பிம்பம் என்று சொல்லப்படுகின்றது.

## விசேஷவுரை

அக்ஞானத்தின் கண்ணுள்ள சித்தின் பிரதிபிம்பமே ஈசுவரன் என்னும் மதத்தால் அஞ்ஞானவடிவவுபாதிக்கும் தத்பத வாச்சியத் தன்மை சம்மதமாம். சித்பிரதிபிம்பத்திற்கு அஞ்ஞான ஸம்ஸர்க்கத்தோடுகூடிய ஜகத் காரணத் தன்மை ஈசுவரத் தன்மை எனப்படுகின்றது. அஃது சித்பிரதிபிம்பத்தின்கண் சிதாபாஸ வியவஹாரத்திற்கு விஷயமாம் அதற்கு ஔபாதிகத் தன்மையால் மித்தியாத் தன்மை உண்மையின் கூறியவாபாசனேடு கூடிய சேதனம் தனது பிரதானத் தன்மையால் சித்தின் பிரதிபிம்பமெனப்படுகின்றது. வாஸ்தவமாக உபாதி சம்பந்தமுதலியவையின்றிய சுத்தசேதனமே பிம்பம் எனப்படுகின்றது. மாயையின்கண்ணுள்ள சித்தின் பிரதிபிம்பம் உபாதியிலுள்ள தர்மப்பிரதானத்தால் சிதாபாசனெனவும் சேதனப்பிரதானத்தால் சித்தின் பிரதிபிம்பமெனவும் சொல்லப்படுகின்றது என்பது பொருள், (277)

(அ) துவம்பதத்தினர்த்தமாகிய உபாதி முதலிய நான்கின் சொருபத்தினையும் விசேஷமாக தெரிசிப்பிக்கின்ருர் :—

उपाधिरन्तःकरणं त्वमर्थे जीवत्वमाभासनमत्र तद्वत ।
तदन्विता चित्प्रतिबिम्बमेवमनन्वितां तामिह बिम्बमाहुः ॥

## பதவுரை

अन्तःकरणमुपाधिः - (சீவனுக்கு) அந்தக்கரணம் உபாதியாம்

अत्र त्वमर्थे - ஈண்டு துவம் பதார்த்தத்தின்கண்

तद्वत् - தத்பத வாச்சியத்தின்கண் பிரவேசித்த ஈசுரத் தன்மைபோன்று

जीवत्वम् आभासनम् - சீவத்தன்மை சிதாபாஸனும்

तदन्विता चित् - கூறிய ஆபாஸனேடு கூடிய சேதனம்.

प्रतिबिम्बम् - பிரதிபிம்பமாம்

एवम् अनन्विताम् ताम् - இங்ஙனம் அன்விதமின்றிய சுத்த சேதனத்தை

इह बिम्बमाहुः - ஈண்டு பிம்பமென்று கூறுகின்றனர்,

## விசேஷவுரை

பிரமாதருத்தன்மை முதலிய தசையின் கண்ணேயே துவம்பதப் பிரயோகம் காணப்படுகின்றமையானும் அதற்கு அந்தக் கரண முபாதியாயிருத்தலானும் அவ்வந்தக்கரணமும் துவம்பதவாச்சியத்துளடங்கியதாமென்பது கருத்து. ஜீவத் தன்மையாவது லிங்கதேகத்தை உபாதியாகவுடைய கற்பித சமசாரித்தன்மையாம். அதற்கு சொரூபமாக மித்தியாத் தன்மையுண்மையின் ஆபாசத்தன்மையாம். (278)

(அ) இங்ஙனமிருபதங்களிலும் வாக்கியார்த்தத்தின் விபாகத்தினைக் கூறி அவற்றில் மித்தையாயுள்ளவர்த்தத்தினை பரித்தியாகஞ்செய்து சத்தியமாயுள்ளவர்த்தத்தின்கண் இரு பதமும் விட்டுவிடாத லக்ஷணையிறல் பரியவசானமாகின்றது. என்று கருதி அதன் கண்ணுள்ள சத்திய மித்தைகளின் விபாகத்தினைக் கூறுகின்றார்:—

उपाधिना सार्धमुपाधिजन्यमौपाधिकं सर्वमवेहि मिथ्या ।
भागं मृषा चित्प्रतिबिम्बकेऽपि बिम्बं पुनः सत्यमशेषमेव ॥

## பதவுரை

उपाधिजन्यम् - உபாதியினாலுண்டாகிய
औपाधिकं सर्वम् - ஔபாதிகமனைத்தினையும்
उपाधिना सार्धम् - உபாதியோடுகூட
मिथ्या अवेहि - பொய்யென்றறிவாய்.

அத்விதீய அசங்க சொப்பிரகாச சிதான்மாவின்கண் வாஸ்த்தவவஞ்ஞானம் சம்பவியாமையின் அவ்வஞ்ஞானம் மித்தையாம். இங்ஙனம் அதன் காரியமாகிய வந்தக்கரணமும் அவ்விரண்டினையுமுபாதியாகவுடைய ஈஸ்வரத்தன்மை ஜீவத் தன்மையுமாகியவனைத்தும், அஞ்ஞானத்தின் அதீனமாக சத்தையையுடைமையின் சொரூபமாகவே மித்தையாமென நிச்சயம் செய்வாய் என்பது பொருள்.

சித்பிரதிபிம்பத்தின்கண் அதனினும் விசேஷத்தினைக் கூறுகின்றார்.

चित्प्रतिबिम्बकेऽपि - சித்தின் பிரதிபிம்பத்தின்கண்ணும்
भागं मृषा - அக்ஞானமாகியவோர் பாகம் மித்தையாம்.

சித்திற்கே அவித்தையோடு கூடிய சிதாபாச விசிஷ்டத் தன்மையால் சித்பிரதிபிம்ப பதத்தின் வாச்சியத்தன்மை யுண்மையின் அதன்கண்விசேஷணும்சமாயுள்ளவஞ்ஞானமே மித்தைபாமென்று அறிவாய் என்பது பொருள். பிம்பஸ்வ ரூபத்தின்கண்ணே பாகத்திற்கு மித்தியாத்தன்மையின்றும், அஃது நிர்விபாக சுத்த சின்மாத்திர வடிவினதாதலின், பிரதிபிம்பத்தின்கண்ணுள்ள சத்திய சேதன பாகத்திற்கும் அத்துணைத் தன்மையுண்மையின் அதாவது நிர்விசேஷத் தன்மையுண்மையின் அதன் சொரூபமனைத்தும் சத்திய மென்றேயறிவாய் என்று கூறுகின்றார்.

बिम्बं पुनः - அதிஷ்டான பிம்பமோ
अशेषमेव सत्यम् - சம்பூர்ணமும் சத்தியமேயாம்.

விசேஷவுரை

இவ்வாறாகவே தத்துவம் பதங்களினால் பொய்ப்பொருளை விட்டு உண்மையாய சுத்த சின்மாத்திரத்தினை விட்டுவிடாத லக்ஷணையினால் கிரஹித்து சாமானாதிகரண்ய பலத்தால் அதனபேதத்தினைப் பிரதிபாதிக்கின்ற தத்துவமசி மஹா வாக்கியம் அகண்டார்த்தத்தினையுடையதாம் என்பது கருத்து.

(அ) தத்துவம்பத வாச்சியங்கட்குக் கூறிய நான்குவிதத் தன்மை அலௌகிகமாதலால் அசம்பவமாம் என்னுஞ்சங்கை யினை நிராகரிக்கின்றவராய் உபாதி முதலிய நான்கும் உலகின் கண்ணும் பிரசித்தமாமெனக் கூறுகின்றார்:—

अप्पात्रमप्पात्रगतत्वमेवमप्पात्रगोऽप्पात्रगताद्बहिश्च ।
दिवाकरो दिव्यवतिष्ठमानो न शक्यतेऽपोहितुमिद्धतेजाः ॥

பதவுரை

अप्पात्रम् - ஜலத்தோடு கூடிய சராவ முதலியதும்
अप्पात्रगतत्वम्- ஜலபாத்திரத்தின்கண் சூரியனது ஆபாசத் தன்மையும்

एवम् अप्पात्रगः - இங்ஙனம் ஜலபாத்திரத்தின்கண் சூரியனது பிரதிபிம்பமும்

अप्पात्रगतात् बहिश्च - ஜலபாத்திரத்தினும் அதன் தர்மத்தினும் புறம்பான

दिवि अवतिष्ठमानः - ஆகாசத்தில் நிற்கின்ற

इद्धतेजाः - மிக்கப் பிரகாசமுள்ள

दिवाकरः - சூரியனுமாகிய நான்கும்

अपोहितुं न शक्यते - நிவர்த்தித்தற்கு யோக்கியமன்றும்.

விசேஷவுரை

ஜலபாத்திரத்தின்கண் என்பது பிரதிபிம்பத்தின்கண் கற்பிக்கப்பட்ட தர்ம சமூகங்கட்கு உபலக்ஷணமாம். புறம்பு என்பது சம்சர்க்கமின்றியதற்காம். அதன்கண் ஏது ஆகாசத்தில் நிற்கின்ற என்பது. உள்ளபடி பிரகாசிக்கின்ற என்பது பொருள் அதன்கண்ணும் ஏது மிக்க பிரகாச என்பது. அதற்கு ஜலபாத்திரத்தில் இருத்தல் முதலிய கற்பித தரும சமுதாயம் ஆபாசபதத்தால் போத்தியமாம் அது மித்தையாதலால் தள்ளத் தக்கதாயினும் அது சொருபமாக வாஸ்தவமாம் தள்ளத்தக்க தன்றென்பது பொருள். (280)

(அ) அற்றேல் காணப்பட்டமையானேயே தினகரனிடத்தில் கூறப்பட்ட வேற்றுமையுளதாகுக பரமான்மாவின் கண்ணே அங்ஙனங் காணப்படாமையின் விபாகமின்றுமென்று சங்கித்து

"यथा ह्ययं ज्योतिरात्मा विवस्वान्" "एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः"

"பிரகாசவடிவ இச்சூரியன் போன்று ஒரே ஆன்மாவே ஒவ்வொரு பிராணியினிடத்தும் நிலைபெற்றுள்ளது" என்பது முதலிய சாஸ்திரத்தினுல் பிம்பப் பிரதிபிம்ப முதலிய திருஷ்டாந்தத்தால் ஆன்மாவின் ஏகத்தன்மையைப் பிரதிபாதித்தலின் கூறிய பிரகாரத்தால் அஃது உபபாதனஞ் செய்யத் தக்கதாம். வேறுபிரகாரமாகச் செய்தற்கு இயலாது என்று கூறுகின்றுர்:—

पुरं पुरस्थत्वमथो पुरस्थं पुराद्बहिः शुद्धमवस्थितं च ।
तथा परं ब्रह्म सुसूक्ष्मयाऽपि धिया निराकर्तुमशक्यमेव ॥

பதவுரை

पुरम् - அக்ஞானமும் அந்தக்கரணமுமாகிய புரமும்

पुरस्थत्वम् - புரத்திலிருக்கும் தன்மையாகிய சிதாபாஸனும்

अथो पुरस्थम्- அப்படியே புரத்திலிருப்பதாகிய சித் பிரதி பிம்பமும்

तथा पुरात् बहिः - அப்படியே தேகமாகிய புரத்திற்கு வெளியில்

अवस्थितं - நிலைபெற்றுள்ள

शुद्धं परं ब्रह्म च - சுத்தசேதன பிம்ப வடிவ பரப்பிரம்மமும் ஆகிய நான்கினையும்

सुसूक्ष्मयाऽपि धिया - மிக்க நுண்மையான மதியாலும்

निराकर्तुमशक्यमेव - நிராகரித்தற்கு அசக்கியமேயாம் என்பது பொருள். (281)

(அ) அற்றேல் கூறிய விபாகத்தையங்கீகரிக்கின் பிரம்மத்திற்கு தினகரனுக்குப்போன்று சத்துவயத் தன்மையும் சவிசேஷத் தன்மையும் பிராப்தியாம் என்ருசங்கித்து அதன்கண் கூறப்பெற்ற விபாகத்திற்கு அனிர்வசனீயவஞ்ஞானத்தை மூலமாகவுடைமையால் மித்தியாத் தன்மை உண்மையின், அதன் நிவர்த்தியினுலேயே மஹாவாக்யத்தாலறியப்பட்ட சுத்தபிம்பவடிவ அகண்ட சிதேகரச பிரம்மத்தின்கண் உபாதியாலும் விசேஷத்தின் சம்பவமின்ரும். ஆதலின் சுவாபாவிக விசேஷத்தின் சம்பவம் வெகுதூரமாம் எனப்பரிகரிக்கின்றவராய் உபபாதிக்கப்பட்டதனை முடிக்கின்ருர் :—

न स्थानतोऽप्यस्ति परस्य तस्माद्विशेषयोगः परमार्थरूपः ।
स्वतः पुनर्दूरनिरस्तमेव परस्य तत्त्वस्य विशेषवत्त्वम् ॥ २८२ ॥

பதவுரை

तस्मात् परस्य – ஆதலால் பரப்பிரம்மத்திற்கு

स्थानतोऽपि – மாயை முதலிய உபாதியினுலும்

परमार्थरूपः – பாரமார்த்திக வடிவ

विशेषयोगः नास्ति – விசேஷ சம்பந்தமின்றும்

स्वतः पुनः – இயற்கையாகவோ

परस्य तत्त्वस्य – பரமான்மாவிற்கு

विशेषवत्त्वम् – விசேஷத்தையுடையதாந் தன்மை

दूरनिरस्तमेव - வெகுதூரம் தள்ளப்பட்டதேயாம் (282)

(அ) மேலும் சமன்வயமெனப்பெயரிய முதலத்தியாயத்தின்கண்ணேயே சருவவேதாந்தங்கட்கும் அத்துவிதீய அகண்டைகரசப் பிரம்மத்தின்கண் தாற்பரியத்தினை நியாயத்தால் பிரதிபாதனஞ்செய்தமையின் அதன் விருத்தமாக வாஸ்தவ ஸத்துவயத்வாதி அதன்கண் சங்கிக்கத்தக்கதன்றெனக் கூறுகின்றார் :—

श्रुतेश्च तात्पर्यमखण्डरूपे परे पुरस्तादुपपादितं च।
ततोऽपि तस्याद्वयरूपतोऽन्य द्रूपान्तरं कल्पयितुं न शक्यम् ॥

பதவுரை

अखण्डरूपे परे – நிர்விசேஷ பிரம்மத்தின்கண்

श्रुतेश्च तात्पर्यम् - உபநிஷத்துகட்கு தாற்பர்யமாமென

पुरस्तादुपपादितं च – பிரம்மசூத்திரத்தின் முதலத்தியாயத்தில் உபபாதனஞ்செய்யப்பட்டுளது

ततोऽपि तस्य – அக்காரணத்தானும் பரப்பிரம்மத்திற்கு

अद्वयरूपतः अन्यत् – அத்துவய வடிவத்தினும் வேருன

रूपान्तरम् - சேதனுசேதனன்மகமான வடிவத்தினை

कल्पयितुं न शक्यम् – கற்பித்தற்கு ஆற்றலின்றும். (283)

(அ) பிரம்மத்திற்கு ஜகத்காரணத் தன்மை நியந்துருத் தன்மை முதலியவற்றைப் பிரதிபாதிக்கின்ற பேத சுருதிக்கு விரோதம் வருதலினால் விபரீதத்தன்மையேனாகாது? அதாவது ஸத்துவயத் தன்மை வாஸ்தவமாகவும் அத்துவயத் தன்மை கற்பிதமாகவும் ஏனாகாது என்றாசங்கித்து பேத சுருதியின் துர்ப்பலத் தன்மையில் ஏதுவினைக் கூறுகின்றார்:—

भेदश्रुतिस्त्वन्यपरा समस्ता समस्तवेदेषु न तत्पराऽसौ ।
अतत्परा तत्परवेदवाक्यैर्विरुध्यमाना गुणवाद एव ॥ २८४ ॥

பதவுரை

समस्तवेदेषु – ஸர்வ வேதங்களிலும்

समस्ता भेदश्रुतिः - பேதத்தைக்கூறுகின்ற சுருதிகளனைத்தும்

अन्यपरा – அன்னியபரமாம்

असौ न तत्परा – அவை சுவார்த்தபரமன்றாம்

"अरूपवदेव हि तत्प्रधानत्वात्" – உருவாதிகளற்றதாகவே பிரம்மம் அறியத்தக்கது அஸ்தூலம், என்பன முதலிய சுருதிகள் நிஷ்பிரபஞ்ச பிரம்மதத்துவத்தின் கண் பிரதானமாயிருத்தலின்' என சூத்திரக்காரராலேயே பிரம்மத்திற்கு நிர்விசேஷத் தன்மையினையும் அபேதசுருதிகட்கு அதன் கட்டாற்பரியத்தினையும் நிச்சயம் செய்யப்பட்டமையினானும், பேதம் பிறவற்றால் சித்தித்தமையானும், புருஷார்த்தமன்றாதலானும், நிந்திக்கப்பட்டமையானும், உபக்கிரம முதலிய தாற்பரிய போதகலிங்க மின்மையினானும், பேதத்தினைக் கூறும் சுருதி அதன் கண் தாற்பரிய முடைய தன்றாம் என்பது பொருள். அன்னியார்த்தத்தின் கற்பனையினைக் கூறுகின்றார்.

तत्परवेदवाक्यैः – அபேதபரமான சுருதிவாக்கியங்களால்

विरुध्यमाना – விரோதிக்கப்படுகின்றதாய் இதனானேயே

अतत्परा – சுவார்த்தபரம் அல்லாததாய்

गुणवाद एव – பேத சுருதி குணவாதமேயாம்

விசேஷவுரை

न विधौ परः शब्दार्थः-விதாயக வாக்கியத்தின் கண் சப்தத்தின் பொருள் கௌணமன்றும் என்னும் நியாயத்தால் தத்பர சுருதியினை வேறு பிரகாரமாகச் செலுத்துதல் கூடாமையின். அதன் விருத்தமும் சுவார்த்த பரமன்மையால் துர்பலமுமான பேத சுருதியே லக்ஷணையினுல் பிரம்மத்தின் துதிபரமாகக் கற்பிக்கத்தக்கதாம், என்பது பொருள். (284)

(அ) மேலும் அபேத சுருதிக்கு சுவார்த்த பரத்தன்மையால் பிரதானத் தன்மையுண்மையின் அதன் சன்னிதியில் படிக்கப்பட்ட பேத சுருதி அதற்கு குணமாயுள்ளது. அதற்கு பாதகமன்றும். மற்றோ அதனனுகூலமாகவே அஃது செலுத்தத்தக்கதாமென்று கூறுதற்கு திருஷ்டாந்தத்தினை முதலிற் கூறுகின்றார்:—

न ह्यर्थवादा विधिभिर्विरुद्धा विध्यर्थसंकोचकरा भवन्ति ।
किं तु प्रधानानुगुणं यदेषामालम्बनं तत्खलु कल्पनीयम् ॥

பதவுரை

विधिभिः विरुद्धाः-விதிவாக்கியங்களோடு விரோதத்தை யடைந்துள்ள

अर्थवादाः – அர்த்த வாத வாக்கியங்கள்

विध्यर्थसंकोचकराः - விதிவாக்கியத்தின் பொருளைச் சங்கோசம் செய்வதாக

न हि भवन्ति – ஆகின்றதில்லை

அப்படியானுல் அவைகட்கு நிராசிரயத்தன்மையாமாலோவெனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

किं तु एषाम् – ஆனுல் இவ்வர்த்தவாத வாக்கியங்கட்கு

प्रधानानुगुणं यत् – பிரதானத்தின் அநுகூலம் யாதொன்று உண்டோ

तत्खलु आलम्बनम् – அதுவே விஷயமாக

कल्पनीयम् – கற்பிக்கத்தக்கதாம். பிரதானத்தினனுகூலம் விதேயத்தின் பிரசம்சை வடிவம். பிரசம்சை—துதி

(அ) பிரதான வாக்கியத்திற்கு விரோதியாக அர்த்தவாத வாக்கியமேயின்றும். ஆதலின் அஃது திருஷ்டாந்தமாக எங்ஙனமாம் என்றுசங்கித்து அவ்வாக்கியத்தினையுதாகரித்து அதன் கண் கூறிய பொருளினைத் தெரிசிப்பிக்கின்றார் :—

यथा ह्यजक्षीरविधेः समीपे यज्र्तिलादेः परिकीर्तनं तत् ।
प्रधानसंकोचभयादपास्य स्वमर्थमासीद्गुणवाद एव ॥

பதவுரை

अजक्षीरविधेः समीपे - 'ஆட்டின் பாலால் ஓமஞ்செய்க' என்னும் விதியின் சமீபத்தில்

जर्तिलादेः - ஜர்த்திலம் முதலியவற்றின்

यत्परिकीर्तनं तत् - யாதொரு பிரதிபாதனமுண்டோ அது

प्रधानसङ्कोचभयात् - பிரதான விதியின் சங்கோசபயத்தால்

स्वमर्थम् अपास्य - தனது முக்யார்த்தத்தைத் தியாகஞ் செய்து

गुणवाद एव - துதியின் பொருட்டு குணவாதமாகவே

यथा हि आसीत् - எங்ஙனம் நிச்சயிக்கப்பட்டதாயிற்றோ அதுபோன்று எனமேலொட்டுக

விசேஷவுரை

"ஜர்த்திலத்தின் யவாகுவினால் ஓமஞ் செய்க" அல்லது "கவீதுக்கின் யவாகுவினால் ஓமஞ் செய்க" "கிராமத்திலுள்ள பசுக்களை இம்சை செய்யற்க" "வனத்திலுள்ள பசுக்களை இம்சை செய்யற்க" என்னும் வசனத்தால் பிராணி இம்சையில்லாதிருக்குந் தன்மையால் வனத்திலுள்ள திலம் முதலிய திரவியத்தினையுடைய ஓமமும் சிறந்ததாமெனக்கூறி "ஜர்த்திலமும் கவீதுக்கும் அநாஹுதியாம் (ஓமஞ் செய்யத்தக்கதன்றும்) எனக்கூறுகின்றனர்" என்னும் வசனத்தால் அதன் நிந்தையினைக்கூறி "ஆட்டின் பாலால் ஓமஞ் செய்க" என விசிஷ்ட ஓமத்தை விதித்தலால் அதன் பரமாக இவ்வெல்லாமும் ஏகவாக்கியமாம். ஆண்டு அர்த்த வாதத்தின் கண்ணுள்ள ஜர்த்திலம் முதலிய திரவியம் விதேய மாகுமாயின் அப்போது

பிரதான வாக்கியத்தால் விதிக்கப்பட்ட ஆட்டின் பாலிற்கு விகற்பம் பிராப்தியாதலால் அவ்வாக்கியத்தின் விதியர்த்தத்திற்கு சங்கோசமுண்டாம் அது பொருத்தமன்றும். குணத்தை யனுசரித்து பிரதானத்தை சங்கோசஞ் செய்தல் அயுக்தமாதலின். ஆதலால் சருவதோஷமுமில்லாமையால் ஆட்டின் பாலினது ஓமம் சிறந்ததாமென இங்ஙனம் அதன் துதியை ஜர்த்தில என்பது முதலிய அர்த்தவாதம் லக்ஷணையினால் போதிக்கின்றதென்பது பொருள். ஜர்த்திலம்-வனத்திலுள்ள எள்ளு, கவீதுக்-வனத்திலுள்ள கோதுமை, யவாகு-அவைகளினுடை. (286)

(அ)கூறிய திருஷ்டாந்தத்தின்கண் பிரதான வாக்கியத்தை யனுசரித்து அர்த்தவாத வாக்கியம் வேறு பிரகாரமாக எப்படிக்கொண்டு செலுத்தப்பட்டதோ அப்படி ஈண்டும் அத்துவைத பிர்ம்ம ப்ரகரணத்தின்கண் படிக்கப்படுகின்ற சிருஷ்டி முதலியவற்றினைக் கூறுகின்ற அர்த்தவாதவாக்கியம் பிரதான வாக்கியத்தோடு அவிரோதத்தின் பொருட்டு லக்ஷணையினால் துதிபரமாகக்கொண்டு செலுத்தத்தக்கதாம் எனக் கூறுகின்றார் :—

एवं सतीहापि विरुध्यमानं वचो यदद्वैतपरैर्वचोभिः ।
तदस्तु गौणं यदि वा परस्य मायाप्रसूतद्वयवादिमुख्यम् ॥

பதவுரை

एवं सति - பிரதானத்தையனுசரித்த அர்த்தவாத வாக்கியங்கள் பிரதானவிரோதியன்றுமென்பது நியாயத்தால் சித்தித்தவழி

इहापि - வேதாந்தத்தின் கண்ணும்

अद्वैतपरैर्वचोभिः - அத்துவைதத்தில் தாற்பரியமுள்ள வசனங்களோடு

विरुध्यमानं यद्वचः - விரோதியாயுள்ள யாதொரு வசனமுண்டோ

तत् गौणम् अस्तु - அஃது கௌணமாகுக. கௌணம் - குணகீர்த்தனபரம். துதிப்பது என்பது பொருள்.

வேறு பிரகாரத்தால் அதன் விரோதத்தைக் கூறுகின்றார்.

यदि वा परस्य – அல்லது பிரம்மத்தின்

मायाप्रसूतद्वयवादि – மாயை அதன் காரியமாகிய துவைதத்தினைக் கூறுகின்றதாய்

मुख्यम् – முக்கியார்த்தத்தினையுடையதாகுக (287)

(அ) சிருஷ்டி முதலிவற்றைக் கூறுகின்ற வாக்கியமானது 'இந்திரன் (பரமான்மா) மாயைகளால் அநேக வடிவங்களானார்' என்பது முதலியவற்றோடு சேர்த்துப் படிக்கப்பட்டிருத்தலால் கற்பிதசிருஷ்டியாதியினை போதிக்கின்றதாய் நிஷேத்தியத்தை சமர்ப்பித்தலால் நிஷேத வாக்கியத்திற்கு அங்கமாம் என அதன் முக்கியார்த்தத்தையங்கீகரித்தபோதிலும் வாஸ்தவ அத்துவைத விரோதித்தன்மையதற்கு இன்றாமென நான்காவது பாதத்தின் பொருளினையே விஸ்தரிக்கின்றார்:—

भेदश्रुतिः कल्पितमेव भेदमालम्ब्य मुख्यार्थवती भवित्री ।
अतत्परा तत्परवाक्यभङ्गस्त्वतोऽन्यथायाति विना निमित्तम् ॥

பதவுரை

भेदश्रुतिः – சிருஷ்டி முதலியவற்றைக் கூறுகின்ற பேத சுருதியானது

कल्पितं भेदमेव – கற்பிதபேதத்தினையே

आलम्ब्य – ஆசிரயித்து

मुख्यार्थवती भवित्री– முக்கியார்த்தத்தினையுடையதாகும்

சிருஷ்டி முதலிய வாக்கியத்திற்கு மித்தையாகிய துவைதம் விஷயமாயின் தத்துவத்தை போதித்தல் வடிவபிரமாணத் தன்மை எங்ஙனமாம். அஃதில்லாதபோது தத்துவத்தை போதிக்கின்ற பிரம்மவாக்கியத்தோடு ஏகத்தன்மை தான் எங்ஙனமாம் என்றாசங்கித்து அதற்கு நிஷ்பிரயோஜனமாகிய தனதர்த்தத்தில் தாற்பரியமின்மையின் நிஷேத்தியத்தை சமர்ப்பித்தலால் நிஷேதவாக்கியத்தோடு ஏகத்தன்மையினையடைந்து அதன் வாயிலால் தாத்துவிக அத்துவய பிரம்மபரத்

தன்மையுண்மையின் சிருஷ்டிவாக்கியத்தின்கண் தத்துவத்தை போதித்தல் வடிவபிரமாணத்தன்மை பொருத்தமா மென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

अतत्परा - சிருஷ்டிவாக்யம் சுவார்த்தத்தில் தாற்பரிய முடையதன்றாம்

ஏன் இங்ஙனம் பரம்பரையாக சிருஷ்டியாதி வாக்கியத்திற்கு அத்துவிதீய பிரம்மத்தின்கண் தாற்பரியங் கற்பிக்கப்படுகின்றது. நேரே தனதர்த்தத்தின் கண்ணேயே அஃது ஏனின்றாம். என்றாசங்கித்து அவ்வாறாயின் சேஷி (அங்கி)க்கு விரோதமாம். அஃது (சேஷிவிரோதம்) அன்னியாயமாம். 'न प्रधानाद्गुणो यतः' 'பிரதானத்தைக் கெடுப்பதாக குணம் ஆகின்றதில்லையாதலின்' என நியமமிருத்தலின் என்று கருதிக் கூறுகின்றார்.

तत्परवाक्यभङ्गस्तु - அத்துவைத பரமான வாக்கியத்தின் பங்கமோ

निमित्तं विना - நிமித்தமின்றியே

इतः अन्यथा आयाति -இதில் நின்றும் (பேத சுருதியினும்.) வேறு பிரகாரமாகவாகும்

விசேஷவுரை

அபேதசுருதிக்குப் போன்று பேதசுருதிக்கு உபக்கிரமம் உபசம்மாரம் முதலிய லிங்கமின்மையின் அதற்கு அதன்கண் தாற்பரியம் நிர்நிமித்தமாம். (நிமித்தமற்றதாம்). அதற்பர சுருதியின் விரோதத்தால் தற்பரசுருதியின் பங்கமும் நிர்நிமித்தமாம் என்னுங் கருத்தால் நிமித்தமின்றி என்று கூறப்பட்டது.

(அ) இங்ஙனம் அத்துவைதப் பிரகரணத்தின்கண்ணுள்ள பேதசுருதிக்கு சுவார்த்தத்தின்கண் தாற்பரியமின்மையினால், அல்லது வியாவகாரிக துவைதவிஷயகத் தன்மையுண்மையினால், அதனோடு அவிரோதத்தினை அத்துவைத சுருதிக்கு உபபாதனஞ் செய்து உபாசனைப் பிரகரணத்தின் கண்ணுள்ள பேதசுருதிக்கும் சுவார்த்தத்தில் தாற்பரியமின்மையினால் கருமகாண்டத்திற்குப் போன்று வியாவகாரிக விஷயத்தைக் கூறுகின்றவராய் அதன் விரோதமும் இன்றாம் என்று கருதிக் கூறுகின்றார் :—

यदपि किंचिदुपासननिष्ठिताद्वचनतः प्रतिभाति परात्मनः ।
सकलगन्धरसादिमयं वपुस्तदपि कल्पितभेदसमाश्रयम् ॥२८९॥

பதவுரை

उपासननिष्ठितात् वचनतः - உபாசனைப் பிரகரணத்திலுள்ள வாக்கியத்தால்

परात्मनः - பரமான்மாவிற்கு

सकलगन्धरसादिमयम् - ஸர்வகந்த ஸர்வரஸாதி விசேஷணத்தோடு கூடிய

यदपि किंचित् वपुः - யாதோர் வடிவம்

प्रतिभाति - தோன்றுகின்றதோ

तदपि कल्पितभेदसमाश्रयम् - அதுவும் கற்பித பேதத்தையாசிரயித்ததாம்

விசேஷவுரை

உபாஸனைப் பிரகரணத்தின்கண் படிக்கப்பட்டதாயினும் அவ்வசனம் உபாஸனையை விதித்து 'மனோமயன் பிராண சரீரன் பாருபன் சத்தியசங்கற்பன் ஆகாசவடிவன் சருவ கருமன் சருவகாமன் சருவகந்தன் சருவரசன்' என்பதாதியால் உபாஸ்யதேவதை வடிவத்தை சமர்ப்பித்தலால் அவ்வாக்கியம் உபாஸனையின் விதிபரமாம் வஸ்துபரமன்று. உபாஸனையும் 'வாக்கை தேநுவடிவமாக உபாஸனை செய்க' என்பது முதலியவற்றிற்போன்று ஆரோபித உபாஸ்யவடிவத்தைக் கிரகித்தும் பொருந்தமாகின்றது என நிர்க்குண சுருதிபலத்தால் அங்கீகரிக்கத்தக்கது. ஆதலின் அதனாலும் வாஸ்தவமாக ஸவிசேஷத் தன்மையின்றுமென்பது பொருள். (289)

(அ) அற்றேல் சகுணவாக்கியத்தின் பலத்தால் நிர்க்குண வாக்கியமே ஸ்துதிபரமாகவாவது அல்லது பிராகிருத (பிரகிருதியின் காரிய) குணங்களின் அபாவ விஷயகமாகவாவது வேறு பிரகாரமாகக்கொண்டு செலுத்தத்தக்கதாம் என்றுசங்கித்து சகுண வாக்கியங்கட்குக் கூறிய பிரகாரத்தால் அன்னியபரத் தன்மையுண்மையாலும் துர்பலத்தன்மை யுண்மையினாலும் சுவார்த்தபரமான நிர்குணவாக்யங்கட்கோ பிரபலத்தன்மை யுண்மையினாலும் துர்பலத்தை யநுசரித்து பிரபலத்தை வேறு பிரகாரமாகக்கொண்டு செலுத்துதல் ஒருவருக்கும் சம்மதமின்றுமெனக் கூறுகின்றார்:—

न खलु निर्गुणवस्तुपरं वचः सगुणवाक्यविरोधनिमित्ततः।
स्वविषयादपसारयितुं बलादतिबलिष्ठपदान्वयमिष्यते ॥ २९० ॥

பதவுரை

अतिबलिष्ठपदान्वयम्-மிக்க பலமுள்ள பதங்களோடு கூடிய

निर्गुणवस्तुपरं वचः - நிர்குண வஸ்துவின் கண் தாத்பரிய முள்ள வாக்கியமானது

सगुणवाक्यविरोधनिमित्ततः - சகுணத்தைப் போதிக்கும் வாக்கியத்தின் விரோதமாகிய நிமித்தத்தால்

बलात् -பலாத்காரமாக

स्वविषयादपसारयितुम् - தனது விஷயத்தில் நின்றும் நிவர்த்தித்தற்கு

न खलु इष्यते- அங்கீகரிக்கப்படுகின்றதில்லை

விசேஷவுரை

நிர்க்குண வாக்கியம் பிரம்மத்தின் துதிபரமாகச் செலுத்த யோக்கியமன்ரும். ஸர்வகுணத்தின் நிஷேதத்தால் தோத்திரத்தின் பரியாயமான துதியை செய்தற்கு முடியாதாகலிகன். வாஸ்த்தவமாக சகுணத்திற்கு குணத்தை நிஷேதஞ்செய்யின் நிந்தையே பிரதீதியாகின்றமையானும், நிர்க்குண வாக்கியம் பிராகிருத குணத்தின் அபாவபரமாம், என்று கூறுதலும் தகுதியன்று ஸர்வகுணங்கட்கும் பிராகிருதத்தன்மையுண்மையால் பிராகிருத என்னும் விசேஷணம் பொருந்தாமையின், ஸர்வகந்தன், ஸர்வரஸன், என்பது முதலிய வசனங்களால் அப்பிராகிருத குணம் சித்தித்தலின் விசேஷணம் பொருத்தமாம் என்று சொல்லற்க. ஆண்டு குணங்கட்கு அப்பிராகிருதத்தன்மைப் பிரதீதியின்மையினுனும், பிருதிவியாதியின் கண்ணுள்ள கந்தாதிகளிளுலேயே அதன் காரண பிரம்மத்திற்கு ஸர்வகந்தாதியுடைய தாந்தன்மையால் உபாசனை விதி சம்பவிக்கும்போது அதனினும் வேருக அப்பிராகிருத குணத்தின் கற்பனை பொருந்தாமையினுனும், அன்றேல் அதாவது அப்பிராகிருத குணத்தைக் கற்பிக்கின் ஸர்வ சப்தத்தால் அதன்கண் அப்பிராகிருத துர்க்கந்தாதியும் சம்பவிக்கும், ஆதலால் கேவலன், நிர்குணன், என்பது முதலிய வாக்கியம்

வேறு பிரகாரத்தால் செலுத்தத்தக்கதன்று, இவ்வபிப்பிராயத்தினுலேயே, மிக்க பலமுள்ள பதங்களோடுகூடிய என்று கூறப்பட்டது. (290)

(அ) நிர்க்குணவாக்கியங்கட்கு தற்பரத்தன்மையுண்மையானும் வேறுபிரகாரத்தால் செலுத்தத்தகாமையானும், அதனனுசாரமாக சகுணவாக்கியங்கட்கு ஆரோபித துவைத விஷயகத்தன்மை சித்திக்கும்போது தத்பதவாச்சியத்தின்கண் பாகத்தியாக லக்ஷணையால் கொள்ளத்தக்க சொருபத்தினை தெரிசிப்பிக்கின்றவராய் பதார்த்த சோதனத்தை முடிக்கின்ருர்:—

तस्मात्तत्परवेदवाक्यगतिभिर्न्यायेन चात्मप्रभं
सर्वद्वैतविवर्जितं विगलितध्वान्तं शिवं शाश्वतम् ।
प्रत्यग्रूपमरूपगन्धरसकं तच्छब्दवाच्यस्थितं
वाक्यार्थान्वयि लक्षितं भगवतो विष्णोः पदं गृह्यताम् ॥

பதவுரை

तस्मात् - ஆதலால், நிர்க்குணபதத்தை தனதர்த்தத்தில் நின்றும் நீக்க முடியாமையின்

तत्परवेदवाक्यगतिभिः -நிர்க்குண பிரம்மபரமான வேதாந்த வாக்கியத்தின் பிரவிருத்திகளாலும்

न्यायेन च -நியாயத்தாலும்

आत्मप्रभम् -ஸ்வபிரகாசமும்

सर्वद्वैतविवर्जितम् ஸர்வத்துவைதமற்றதும்

विगलितध्वान्तम् -அஞ்ஞானவிருளற்றதும்

शिवं शाश्वतम् -சுகவடிவமும், நித்தியமும்

प्रत्यग्रूपम् -பிரத்தியகான்மாவின் சொருபவடிவமும்

अरूपगन्धरसकम् -ரூபரசகந்தமற்றதும்

तच्छब्दवाच्यस्थितम् தத்பத வாச்சிய சபலத்தின்கண் அதிஷ்டானத்தன்மையால் அனுகதமும்

वाक्यार्थान्वयि-வாக்கியார்த்த அபேதான்வய யோக்கியமும்

भगवतः विष्णोः पदम् - பகவானுகிய விஷ்ணுவின் சொருபமுமான

लक्षितं गृह्यताम् - தற்பத லக்ஷிய வஸ்து கிரகிக்கத்தக்கது.

விசேஷவுரை

நியாயத்தாலும் தத்பதலக்ஷ்யவஸ்து கிரகிக்கத் தக்கதெனக் கூட்டுக. நியாயமாவது உபாதிகட்கும் ஔபாதிகட்கும் மித்தியாத்தன்மையைச் சாதிக்கும் யுக்தியாம். பிரத்தியகான்மாவின் சொருபவடிவமென்பதனுல் சுகத்திற்குப் பரோக்ஷத்தன்மை நிவர்த்திக்கப்பட்டது. ரூபரஸகந்தமற்றது என்பது சங்கிக்கப்படுகின்ற ஸர்வகுணங்களினபாவங்கட்கு உபலக்ஷணமாம். இவ்வாறு கூறியவடிவம் தற்பதத்தின் லக்ஷியமாமென்பதன்கண் வாக்கியார்த்த அபேதான்வய யோக்கியமென்பது ஏதுவாம். ஔபாதிகம் = உபாதியினை யுடையது. (291)

(அ) நிர்குணவஸ்துவின் ஞானத்தாலேயே பரமபுருஷார்த்தம் பிராப்தியாதலின் அதுவே வேதாந்த கம்மியமாம் என்பதன்கண், கடசுருதியினை பிரமாணமாக உதாஹரிக்கின்ருர்:—

अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् ।
अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचायनीयं पदमीदृशं हरेः ॥

பதவுரை

यत् अशब्दम् - யாதொரு பிரம்மான்ம சொருபம் சப்தகுணமின்றியதும்

अस्पर्शं अरूपम् - ஸ்பருசகுண மின்றியதும் உருவகுணமின்றியதும்

अव्ययम् तथा अरसम् - உபக்ஷய மின்றியதும் அங்ஙனமே ரஸகுண மின்றியதும்

नित्यम् अगन्धवच्च-எப்போதும் கந்தகுண மின்றியதும்

अनादि अनन्तम् - காரண காரியமற்றதும்

महतः परम् - சமஷ்டி புத்தி வடிவ இரண்யகர்பனினும் மேலானதும்

ध्रुवम् - கூடஸ்தமுமாகவுளதோ

हरेः ईदृशं पदम्-அத்தகைய விஷ்ணுவின் பரமபதமானது

निचायनीयम् - அறியத்தக்கது.

விசேஷவுரை

எப்போதும் என்பதனை சப்தகுணமின்றியது என்பது முதலிய எல்லாவற்றோடுங் கூட்டுக. निचाय्य तन्मृत्युमुखात्प्रमुच्यते சத்தாதி குணமின்றிய கூடஸ்த ஆன்மாவை விசாரித்து அறிந்து மிருத்தியுவின் முகத்தினின்றும் விடுபடுகின்றான். என்னும் மந்திரத்தின் நான்காவது பாதத்தின் தாற்பரியார்த்தம் விஷ்ணுவின் பரமபதம் அறியத்தக்கது என்பதால் கூறப்பட்டது. (292)

(அ) சீவ சக ஈஸ்வரர்கட்கு சுத்தபிரம்ம மாத்திரத் தன்மையுண்மையின் அதுவே சத்தியமாமென்று கருதி அதன்கண் சுவேதாஸ்வதர மந்திரத்தையுதாகரிக்கின்றார்:—

भोक्ता भोज्यं प्रेरितारं च मत्वा सर्वं प्रोक्तं त्रिविधं ब्रह्ममेतत् ।
जीवेशानौ सृज्यमानं जगच्च शुद्धं ब्रह्मेत्याह वेदान्तवाक्यम् ॥

பதவுரை

भोक्ता भोज्यम् - போக்தாவாகிய ஜீவனையும் போக்கியமாகிய பிரபஞ்சத்தினையும்

प्रेरितारं च-பிரேரகனாகிய ஈஸ்வரனையும்

मत्वा-யுக்தியினால் அசத்தியமாக நிச்சயித்து

एतत् त्रिविधं सर्वम् - மூன்று விதமாகிய ஈதனைத்தும்

ब्रह्म प्रोक्तम् - பிரம்மமாகச் சொல்லப்பட்டது.

'பிரம்மம்' என்பது வைதிகப் பிரயோகமாதலின் குற்றமின்றாம். அல்லது.

मे तत् त्रिविधं सर्वम् - என்றால் அம்மூவிதமாகியவனைத்தும் பிரம்மமாகச் சொல்லப்பட்டது என்பது மந்த்ர திருஷ்டாவின் வசனமாம். இந்த மந்திரத்தின் தாற்பரியார்த்தத்தினைக் கூறுகின்றார்.

जीवेशानौ-ஜீவேஸ்வரர்களையும்

सृज्यमानं जगच्च - சிருஷ்டிக்கப்படுகின்ற ஜகத்தையும்

शुद्धं ब्रह्म इति சுத்தபிரம்மமாமென்று

वेदान्तवाक्यं आह-வேதாந்த வாக்கியம் கூறுகின்றது.(293)

(அ) பிரம்மத்தையறிந்தவன் பரத்தையடைகின்றான். என்னுஞ் சுருதியால் தற்பதலக்ஷிய சத்தியஞான ஆனந்த அனந்தவடிவ பிரம்மத்தினது சத்தியாதி வாக்கியத்தால் சித்தித்த ஞானத்தாலேயே மோக்ஷம் சம்பவித்தலால் தத்துவமஸி முதலிய வாக்கியம் வீணேயாம் என்னுமிடத்துக் கூறுகின்றார். பிரமத்தினது ஞானத்தாலேயே எனக் கூட்டுக.

पदार्थबोधेन कृतार्थता न ते मतिः परोक्षा हि पदार्थगोचरा।
अतो महावाक्यनिबन्धनैव धीरबोधविच्छेदकरी भविष्यति ॥

பதவுரை

पदार्थबोधेन - பதார்த்த மாத்திரத்தின் ஞானத்தால்

ते कृतार्थता न-உனக்குக் கிருதார்த்தத் தன்மையின்றாம்

पदार्थगोचरा हि मतिः-பதார்த்தத்தினை விஷயஞ் செய்கின்ற புத்தியோ

परोक्षा- பரோக்ஷமேயாம் அஃது அவித்தையினை நிவர்த்தி செய்யாதென்பது பொருள்.

अतः महावाक्यनिबन्धना धीरेव-ஆதலால் மஹாவாக்கியத்தாலுண்டான ஞானமே

अबोधविच्छेदकरी भविष்यति-அஞ்ஞானத்தை நாசஞ்செய்வதாகும்.

விசேஷவுரை

'அவித்தையதன் காரியத்தின்கண் அபிமானமுடையவர்' அவிவேகத்தால் நானாவித சிந்தையினையுடைய புருஷன் தீனபாவத்தால் சோகத்தையடைகின்றான்: என்பது முதலிய விடங்களில் சம்சாரத்திற்கு ஆன்மாவில் பிரம்மபாவத்தின்

அஜ்ஞானுதீனத்தன்மை கேட்கப்படுதலால் காரண சஹித சம்சாரம் அபரோக்ஷவத்தியாச வடிவமாம் ஆதலால் ஆன்மாவிற்கு பிரம்மத்தினபேத சாக்ஷாத்காரமின்றி அதன் நிவர்த்தி பொருந்தாது. அதனுல் சத்தியாதி வாக்கியத்தாலுண்டான ஞானம் பிரத்தியகபின்ன பிரம்மத்தைவிஷயஞ்செய்யாமையால் பரோக்ஷமாம். ஆதலின் அவ்வாக்கியத்தாலறியப்பட்ட பிரம்மத்தினனந்தத்தன்மை ஆகாசாதியினைப்போன்று ஜீவஸ்வரூபத்தை பாதித்தலாலும் பொருந்துதலின். அவ்வனந்தத் தன்மையின் பலத்தாலும் அவ்வபேத சாக்ஷாத்காரம் பொருத்தமின்ரும். ஆதலாலும் 'இப்புருஷன் நானுயிருக்கின்றேனென்று ஆன்மாவையறிவானுயின்'' ''எவன் நான் பிரம்மமாயிருக்கின்றேனென்று அறிகின்ருனே அவனே இவ்வெல்லாமுமாகின்ருன்'' என்பது முதலிய சுருதியின்கண் பிரத்யகபின்ன பிரம்மஞானத்திற்கே மோக்ஷஹேதுத் தன்மை கேட்கப்படுதலாலும் அந்த ஞானத்தையுண்டுபண்ணுகின்ற மகாவாக்கியங்களின்றி கிருதார்த்தத் தன்மை பொருந்தாமையின் அதன் வியர்த்தத்தன்மை சங்கிக்கத்தக்கதன்றென்பது பொருள்.

(அ) அங்ஙனமாயினும் சமானுர்த்தத்தினையுடைய அநேக மகாவாக்கியங்கள் வீணேயாம். (ஓர் வாக்கியத்தானேயே ஞானம் சம்பவித்தலின்) என்ருசங்கித்து நியமாத்தியயனத்தால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட (சுத்தி செய்யப்பட்ட) மகாவாக்கியத்திற்கே பயனுடைய பிரமிதியின் ஏதுத்தன்மையாம் என விசேஷத்தை யறிவித்தற்பொருட்டு சருவசாகைகளிலும் மகாவாக்கியங்கள் படிக்கப்படுகின்றன என்று கருதி அத்தியயன நியமத்தால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட மகாவாக்கியமே தடையற்ற சாக்ஷாற்காரத்திற்கேதுவா மென்று கூறுகின்ருர் :—

स्वाध्यायधर्मपठितं निजवेदशाखावेदान्तभूमिगतमादरपालितं च ।
संन्यासिना परदृशा गुरुणोपदिष्टं साक्षान्महावचनमेव विमुक्तिहेतुः ॥

பதவுரை

स्वाध्याय धर्मपठितम् - பிரம்மசரியம் குரு சேவை முதலிய அங்காநுஷ்டான பூர்வகம் படிக்கப்பட்டதும்.

निजवेदशाखा वेदान्तभूमिगतम् - தனது வேத சாகையின் சம்பந்தியான உபநிஷத்துக்களிலுள்ளதும்

आदरपालितं च - ஆதர பூர்வகம் பாலனஞ் செய்யப் பெற்றதும்

सन्यासिना परदृशा - சன்னியாசியும் தத்துவ ஞானியுமாகிய

गुरुणा उपदिष्टम् - குருவினுல் உபதேசம் பண்ணப்பட்டது மான

महावचनमेव - தத்துவமஸி முதலிய மஹாவாக்கியமே

साक्षात् विमुक्तिहेतुः - நேரே தத்துவ சாக்ஷாத்காரத்திற்குக் காரணமாம்

### விசேஷவுரை

மகாவாக்கியத்தின்கண் நியமாத்தியயனப் பிராப்தியின் பொருட்டு மீண்டுமதனை விசேஷிக்கின்ருர். தனது வேத சாகையென்பதாதியால். தனது சாகையினத்தியயனத்தில் நியமம் விதிக்கப்பட்டிருத்தலின் அதனுள்ளடங்கிய மஹா வாக்கியமும் அவ்வாறே. அத்தியயனஞ் செய்யத்தக்கதா மென்பது பொருள்.

நியமமாக அத்தியயனஞ் செய்யப்பட்டதாயினும் மறக்கப் பட்டதாயின் பயனின் பொருட்டு ஆகாது, என்னுங்கருத்தால் ஆதரபூர்வகம் என்று கூறப்பட்டது. "ஆசாரியனையுடைய புருஷன் அறிகின்ருன்" என்னுஞ் சுருதியால் சுயமே விசாரிக் கப்பட்டதாகிய அவ்வாக்கியம் பயனுடையதன்ரும், என்னுங் கருத்தால் சன்னியாசி, என்று கூறப்பட்டது. பிரம்மநிஷ்டை சன்னியாசிக்கே சம்பவித்தலின் இங்ஙனங் கூறப்பட்டது. மூலத்தில் விமுக்தி என்பது எதனுல் விடுபடுகின்ருனே அது விமுக்தி என்னும் வியுற்பத்தியினுல் தத்துவ சாக்ஷாத்காரத் திற்காம். (295)

(அ) அற்றேல் மஹாவாக்கியத்தால் தத்துவசாக்ஷாத் காரத்தினுற்பத்தி எங்ஙனமாம், சப்தத்திற்கு பரோக்ஷஞான ஹேதுத்தன்மை நியமமாதலின், என்ருசங்கித்து தத்துவ சாக்ஷாத்காரம் பிரமாணுந்தரத்தினதீனமாமென்பது உனது கருத்தா? அல்லது மஹாவாக்கியத்தால் பரோக்ஷஞானமே யுற்பத்தியாதலின் அதன் சாக்ஷாத்காரமேயின்ருமென்பது கருத்தா? என்று விகற்பித்து முதற்பக்ஷத்தை நிராகரிக்கின்ருர்.

नावेदविद्धि मनुते पुरुषं बृहन्तमित्याह वेदवचनं कथमन्यथैतत् ।
वाक्यान्तरं च कथमाह पुमांसमेनं साटोपमौपनिषदत्वविशेषणेन ॥

பதவுரை

अवेदवित् -வேதத்தை யறியாதவன்

बृहन्तं पुरुषम् -வியாபக பரமான்மாவை

न हि मनुते-அறிகின்றதேயில்லை என

इति वेदवचनं आह -இங்ஙனம் சுருதி கூறுகின்றது ஆதலின்

एतत् अन्यथा कथम् -பிரம்ம சாக்ஷாத்காரம் வேறு பிரகாரத்தால் அதாவது வேறு பிரமாணத்தால் எங்ஙனமுண்டாம்?

வேதத்தை அறியாதவனுக்கு பரமான்ம விஷயக புத்தியை நிஷேதித்தலால் அப்பரமான்மாவிற்கு பிரமாணாந்தரத்தின் அயோக்கியத்தன்மை யறியப்படுதலின் பிரமாணாந்தரத்தால் அதன் சாக்ஷாத்காரமெங்ஙனம் உண்டாமென்பது பொருள். இரண்டாவது பக்ஷமும் சரியன்று. "त तु औपनिषदं पुरुषं पृच्छामि" "ஔபநிஷத புருஷனை வினவுகின்றேன்" என்னுஞ்சுருதியால் புருஷனுக்கு ஔபநிஷதத் தன்மை விசேஷணத்தால் உபநிஷத்தினையே பிரமாணமாகவுடையதாந் தன்மையறியப்படுதலினாலும் அபரோக்ஷப் பிரம்மான்மாவின் கண் பரோக்ஷ ஞானத்திற்கு பிரமாணத் தன்மை சம்பவியாமையானும் சத்தஜன்னிய ஞானத்திற்கும் அபரோக்ஷ விஷயகத் தன்மையால் அபரோக்ஷத் தன்மை சம்பவித்தலானும் பிரம்மத்தின்கண் உபநிஷத்துக்களால் சாக்ஷாற்காரமே பொருத்தமாம். அன்றேல் அதாவது வாக்கியத்தால் அபரோக்ஷ ஞானத்தையொப்பாவிடின் ஔபநிஷத சுருதியானது பாதிக்கப்பட்ட அர்த்தத்தினையுடையதாகும் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

वाक्यान्तरं च -ஔபநிடத புருடனை என்னும் சுருதியும்

एनं पुमांसम् -இவ்வான்மாவை

साटोपम् - பரபரப்பாக

औपनिषदत्वविशेषणेन- ஔபநிடதத்தன்மை விசேஷணத்தோடு கூடியதாக

कथम् आह – எவ்வாறு கூறும்.

வாக்கியத்தால் அபரோக்ஷ ஞானத்தையங்கீகரியாவிடின் எவ்வாறு கூறும் எனக்கூட்டுக. பரபரப்பாவது ஔபநிடதான் மாவையறிந்த புருடனேடு அதனையறியாதவனுக்கு விவாதத்தின் அயோக்கியதையை வெளிப்படுத்தல் (296)

(அ) அற்றேல் வேதத்தையறியாதவன் என்னும் வசனத்தால் வேதமாத்திரத்திற்கும் ஔபநிஷதமென்னும் வசனத்தால் உபநிஷத் மாத்திரத்திற்கும் பிரம்மான்மாவின்கண் பிரமாணத்தன்மையைக் கூறுதலால் மகாவாக்கியமே சாக்ஷாத்காரத்திற்கு ஏதுவாமென்று கூறப்பட்டது எங்ஙனம் பொருந்துமென்று சங்கித்து வேதம் உபநிடதம் என்னும் பதங்களால் மகாவாக்கியத்தினையே கூறுதலால் விரோதமின்றுமெனக் கூறுகின்றுர் :—

उपनिषदिति वेद इत्यपीदं
समभिवदन्ति महावचो महान्तः ।
फलवदवगतिः स्यादन्तरेणैतदेकं
वचनमिति न शक्यं वक्तुमित्यादरोऽस्मिन् ॥ २९७ ॥

பதவுரை

महान्तः–ஆன்ம விசாரத்திற் குசலபுருடர்

उपनिषत् इति – உபநிஷத்து என்னும் பதத்தினையும்

वेद इत्यपि इदम् – வேதமென்னும் பதத்தினையும்

महावचः समभिवदन्ति – மஹாவாக்கியமாமென்று கூறுகின்றனர்

வேத சப்தம் அறிவிக்கின்றது எதுவோ அது வேதமாம் என்னும் வியுற்பத்தியினுல் அறியப்படாத பிரம்மான்ம தத்துவத்தை அறிவிக்கின்ற மஹாவாக்கியத்தினதே வாசகமாம். யோகவிருத்தியினுலேயே (காரணத்தாலேயே) பிரவிருத்தி சம்பவிக்கும்போது ரூடிவிருத்தியை (இடுகுறியை) கற்பித்தல்

உசிதமன்றாதலின். உபநிஷத்சப்தம் இனிச்சொல்லப்போகின்ற வியுற்பத்தியினால் அவித்தையை நிவர்த்திக்கின்ற தத்துவ ஞானத்தின் வாசகமாம். அங்ஙனமாயினும் அதன் (சாக்ஷாத்காரத்தின்) ஹேதுவான மஹாவாக்கியம் லக்ஷணையினால் உபநிஷத் சப்தத்தின் பொருளாம். வேதாந்த மாத்திரமன்றாம் என்பது தத்துவ வேத்தாக்களின் வியவகார மாமென்பது பொருள். அற்றேல் அறிவிக்கின்றது என்னும் வியுற்பத்தியினால் வேதமாத்திரத்தில் பிரவிருத்தி சம்பவித் தலின் மஹாவாக்கியமே வேதமாமென அவர்கட்கு விருப்பம் எங்ஙனமுண்டாமென்னுமிடத்துக் கூறுகின்றார்.

फलवदवगतिः – பரமபுருஷார்த்த ஹேதுவான தத்துவ சாக்ஷாத்காரம்

एकम् एतद्वचनमन्तरेण – ஏகத்தன்மையை விஷயஞ்செய் கின்ற மஹாவாக்கியமின்றியும்

स्यादिति वक्तुम् - உண்டாம் என்று கூறுதற்கு

न शक्यमिति – ஆற்றலின்றாம் ஆதலின்

अस्मिन् आदरः – அவர்கட்கு மஹாவாக்கியத்தின் கண்ணே வேதமாமென்னும் விருப்புள்ளது.

விசேஷவுரை

ஓர் சுலோகத்தின்கண்ணும் முன்பாதி பின்பாதிகட்கு பேதமுண்மையின் இசையின் பேதம் தோஷத்தின் பொருட் டற்றாம். அல்லது தத்துவ நிருபணத்தில் மனமுடையவரா யிருத்தலால் இசையின் பேதம் கவனிக்கப்படவில்லை என உணர்க. (297)

(அ) ஆன்றோரது பிரசித்தியினால் வேத பதத்திற்கும் உபநிஷத் பதத்திற்கும் மஹாவாக்கிய விஷயகத் தன்மை சித்தித்த வழி திரண்ட பொருளைக் கூறுகின்றார்:—

उपनिषदिति शब्दो वेदशब्दश्च तस्मा-
च्छ्रुतिशिरसि निविष्टो योज्यतामत्र वाक्ये।
अपरमखिलमस्यैवाङ्गभूतत्वहेतो-
रिह समभिनिविष्टं तद्गिरो वाच्यमासीत् ॥ २९८ ॥

பதவுரை

तस्मात् - ஆன்ஞேர்க்கு மேற் கூறிய வண்ணம் ஆதர விருத்தலின்

श्रुतिशिरसि - ஔபநிடத புருடனை வேதத்தையறியாதவன் என்னும் வேதாந்தமாகிய வாக்கியத்தின் கண்

निविष्टः -பிரவேசித்துள்ள

उपनिषदिति शब्दः - உபநிஷத்து என்னும் பதமும்

वेदशब्दश्च - வேதமென்னும் பதமும்

अत्र वाक्ये -பிரகிருத மஹா வாக்கியத்தின் கண்ணே

योज्यताम् - செலுத்தத்தக்கது மஹாவாக்கியமாக அறியத் தக்கதென்பது பொருள்.

அப்படியானல் மஹாவாக்கியத்தினும் வேருன பத சமுதாயத்தின்கண்ணும் லோகத்திலும் வேதத்திலும் வேத பதத்திற்கும் உபநிஷத் பதத்திற்கும் பிரயோகம் எங்ஙனமா மென்ருசங்கித்து அதன்கண் சாக்ஷாத்தாகவாவது பரம்பரை யாகவாவது மகாவாக்கியத்தின் சேஷத்தன்மை (அங்கத் தன்மை) யுண்மையின் சேஷியோடு (அங்கியோடு) அபேத உபசாரத்தால் அதன்கண்ணும் அப்பதங்களின் பிரவிருத்தி யாம் என்று கூறுகின்ருர்.

अपरं अखिलम् - மஹாவாக்கியத்தினும் வேருன ஸர்வ வாக்கியமும்

अस्यैव अङ्गभूतत्वहेतोः - மஹாவாக்கியத்திற்கே அங்கமா யிருக்கும் தன்மையினல்

इह समभिनिविष्टम्-மஹாவாக்கியத்தின் கண் அந்தர்க்கத மாய்

तद्गिरः वाच्यमासीत् - வேத உபநிஷத் பதங்களுக்கு விஷய மாயிற்று (298)

(அ) மஹாவாக்யமே தத்துவ சாக்ஷாத்காரத்திற்கு ஏது வாமென்பதன்கண் வைதிக லிங்கத்தினைக் கூறுகின்ருர்:—

पित्रा तत्त्वमसीति बोधनमनु स्पष्टं विजज्ञाविति
च्छान्दोग्ये यदवोचदेतदिह नो लिङ्गं भवेज्ज्ञापकम् ।
सर्वत्रैव महागिरामुपनिषच्छब्दो भवेद्ग्राहको
वेदश्चायमतोऽन्यदस्य निकटं तेनात्र वेदादिगीः ॥ २९९ ॥

பதவுரை

पित्रा - உத்தாலகராகிய பிதாவினால் சுவேதகேதுவாகிய புத்திரன்

तत्त्वमसि इति बोधनमनु - தத்துவமசி மஹாவாக்கியத்தின் உபதேசத்தினனந்தரம்

स्पष्टं विजज्ञौ इति - வெளிப்படையாக அறிந்தானென்று

छान्दोग्ये - சாந்தோக்ய சுருதியில்

यदवोचत् एतद् - யாதொன்று கூறப்பட்டதோ அது

नः इह - நமக்கு மகாவாக்கியமே தத்துவ சாக்ஷாற்கார ஜனகமென்பதன்கண்

ज्ञापकं लिङ्गं भवेत् - ஞாபகமாகிய லிங்கமாம்

சாந்தோக்ய சுருதியின் ஆருவது அத்தியாயத்தில் ஒன்பதாவது பரியாயத்தில் சுவேதகேதுவே தத்துவமசி என்பதனனந்தரம் "तद्धास्य विजज्ञौ". அதனையறிந்தான் என்பதனால் இந்தப் பிதாவின் உபதேசத்தினால் அவரால்உபதேசிக்கப்பட்ட தத்துவத்தை வெளிப்படையாக சாக்ஷாத்தாகவே அறிந்தான் என்று கூறப்பட்டமையின் மகாவாக்கியமே அவித்தையை நிவர்த்திக்கின்ற ஞானத்திற்குக் காரணமாம் என பெறப்படுகின்றது. அங்ஙனம் கொள்ளாக்கால் அக்கூற்று வியர்த்தமாம் என்பது பொருள். மஹா வாக்கியங்கட்கே பயனுடைப் பிரமிதியினேதுத்தன்மை சித்தித்த வழி திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

अतः सर्वत्रैव - ஆதலால் வேதாந்தங்களில் எல்லாவிடங்களிலும்

उपनिषच्छब्दः - உபநிஷத்து என்னும் பதமும்

अयं वेदश्च - வேதம் என்னும் பதமும்

महागिरां ग्राहको भवेत् - மகாவாக்கியங்களின் போதகமாம்

வேறிடத்தில் வேதாதி பதப் பிரயோகத்திற்குக் கூறப்பட்ட கதி (வழி) யினை நினைப்பூட்டுகின்றார்.

अन्यद् - மகாவாக்கியத்தினும் வேறான வசனம்

अस्य निकटम् - மகாவாக்கியத்தின் சமீபத்திலுள்ளது அதாவது அதனாலபேக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தை சமர்ப்பிக்குந்தன்மையால் அதன் ஏகார்த்த நிஷ்டமாம்

तेन अत्र - அதனால் வாக்கியாந்தரத்தின்கண்

वेदादिगीः - வேத முதலிய சப்தம் பிரவிருத்திக்கின்றது

(அ) அற்றேல் வார்த்திககாரராலேயே ஈண்டு உபநிஷத் சப்தம் பிரம்மவித்தையை மாத்திரம் விஷயஞ்செய்வதாமென்று ஆரம்பித்து இவ்வான்மாவை துவைதமற்ற பிரம்மத்திற் சேர்ப்பித்து அவித்தையினையும் அதன் காரியத்தினையும் எக்காரணத்தால் நாசஞ்செய்கின்றதோ அக்காரணத்தால் உபநிஷத்தாம் என்பதாதியால் பிரம்மவித்தையே உபநிஷத் பதத்தின் வாச்சியமாகக் கூறப்பட்டமையின் மஹாவாக்கியம் உபநிஷத் பதத்தின் அர்த்தமாக எங்ஙனமாம் என்றுசங்கித்து அவரால் கூறப்பட்டதனையும் அங்கீகரிக்கின்றார் :—

उपनिषद्वचसा परमात्मधीः सहजशक्तिवशेन निगद्यते ।
तदुपचर्यं महागिरि वर्तते निकटभावमपेक्ष्य तु मुख्यगीः ॥ ३०० ॥

பதவுரை

उपनिषद्वचसा - உபநிஷத் பதத்தால்

सहजशक्तिवशेन - அவயவத்தின் கண்ணுள்ள சக்தி வசத்தால்

परमात्मधीः निगद्यते -பிரம்ம வித்தை சொல்லப்படுகின்றது

இங்ஙனமாயின் மஹாவாக்கியம் உபநிஷத் சப்தார்த்தமாக எங்ஙனமாமென்னுமிடத்துக் கூறுகின்றார்.

तद् उपचर्य - உபநிஷத்பதம் உபசாரத்தால்

महागिरि वर्तते - மகாவாக்கியத்தின்கண் பிரவிருத்திக்கின்றது

மஹாவாக்கியத்திற்கு உபநிஷத் பதத்தின் வாச்சிய தத்துவ ஞானத்தின் ஏதுத்தன்மை யுண்மையால் அதன் (தத்துவ ஞானத்தின்) அபேத உபசாரத்தால் அல்லது லக்ஷணையினுல் உபநிஷத் பதத்தின் அர்த்தத் தன்மையாம் என்பது பொருள்.

அப்படியானுல் மஹா வாக்கியம் உபநிஷத் பதத்தின் முக்யார்த்தமாமென்று கூறப்பட்டது எங்ஙனம் பொருந்தும் என்ருசங்கித்து உபநிஷத் பதத்தின் முக்கியார்த்தமாயுள்ள தத்துவஞானத்தினேதுத்தன்மையால் அந்த ஞானத்தினை அபேக்ஷிதது அது சமீபமாயிருத்தலால் மகா வாக்யத்தில் உபநிஷத் பதத்தின் முக்கிய விருத்தியாமெனக் கூறுகின்ருர்.

निकटभावम् अपेक्ष्य तु - மகாவாக்கியத்தில் ஞானத்தின் சமீபத்தன்மையினையபேக்ஷித்தே

मुख्यगीः - உபநிஷத்பதம் முக்கியசத்தமாம். (300)

(அ) அற்றேல் மகாவாக்யத்திற்கும் அவாந்தர வாக்கியத்திற்கும் உபநிஷத் பதத்தின் வாச்சியத்தன்மையினபாவம் சமானமாகும்போது அவற்றில் உபநிஷத் பதத்திற்கு முக்கியத் தன்மை அமுக்கியத்தன்மைகளின் வியவஸ்தை எங்ஙனமாம் என்ருசங்கித்து வாச்சியார்த்தத்தோடு சாக்ஷாத் சம்பந்த முள்ள மஹா வாக்கியத்தின்கண் முக்கியம் போன்று உபஸ்தாபகத்தன்மை (தோற்றுவிக்குந்தன்மை) யுண்மையின் அதற்கு (உபநிஷத் பதத்திற்கு) முக்கியத் தன்மையின் உபதேசமாம். வேறிடத்தோ (அவாந்தர வாக்கியத்தின் கண்ணே) அஃதின்மையின் அமுக்கியத் தன்மையின் உபதேசமாம் என்னுங்கருத்தால் சமீபத்தன்மையினையபேக்ஷித்து என்று கூறினதை விஸ்தரிக்கின்ருர்:—

उपनिषद्वचनाभिहितात्मधीनिकटवर्ति महागिरि मुख्यवत् ।
उपनिषद्वचनं तदवान्तरे वचसि गौणवदत्र विवक्ष्यते ॥ ३०१ ॥

பதவுரை

अत्र -உலகத்திலும் வேதத்திலும்

उपनिषद्वचनाभिहितात्मधी- निकटवर्ति महागिरि } உபநிஷத்பதத்தாற் கூறப் பட்ட ஆன்ம ஞானத்தின் சமீபத்திலுள்ள மகாவாக்கியத் தின்கண்

उपनिषद्वचनम् -உபநிஷத்பதம்

मुख्यवद्विवक्ष्यते -முக்கியம்போல் விவக்ஷிக்கப்படுகின்றது

तदवान्तरे वचसि -அதன் அவாந்தர வாக்கியத்தின்கண்

गौणवद्विवक्ष्यते -கௌணம்போல் விவக்ஷிக்கப்படுகின்றது

(அ) மகாவாக்கியத்திற்கே தத்துவஞானத்தின் சமீபத் தன்மையாமென்பது எதனுலென்ருசங்கையுண்டாக பிதாவி ஞல் தத்துவமசியென்பதாதியாற் கூறப்பட்டதனை நினைப்பூட்டு கின்றவராய் திரண்ட பொருளைக் கூறுகின்ருர்:—

यतो महावाक्यत एव पुत्रो विजज्ञिवानस्य पितुः सकाशात्।
इति श्रुतं तेन स एव वेदस्तथा च सैवोपनिषच्च सिद्धा ॥ ३०२ ॥

பதவுரை

यतः पुत्रः -யாதொரு காரணத்தினுல் சுவேதகேதுவாகிய புத்திரன்

पितुः सकाशात् -உத்தாலகராகிய பிதாவினின்றும்

महावाक्यत एव -மகாவாக்கியத்திஞலேயே

अस्य विजज्ञिवान् -ஆன்ம தத்துவத்தினையறிந்தான்

इति श्रुतं तेन -என்று வினவப்பட்டதோ அக்காரணத் திஞல்

स एव वेदः -மஹாவாக்கியமே வேதமாம்

तथा च -அவ்வாறே

सा एव उपनिषच्च -அதுவே உபநிஷத்துமாம்

सिद्धा -என சித்தித்தது

விசேஷவுரை

அது என்பதனுல் மகாவாக்கியத்தைப் பராமருசஞ் செய்து விதேயமாகிய உபநிஷத்தினபேக்ஷையினுல் வேறு லிங்கத்தின் நிர்த்தேசமாம். 302

(அ) இங்ஙனம் (नावेदवित्) வேதத்தை அறியாதவன் (औपनिषदम्) ஔபநிடத புருடனை என்னுஞ் சுருதியின் பலத்தாலும் வைதிக லிங்க பலத்தாலும் மஹாவாக்கியமே பயனுடைப் பிரமிதியின் ஏதுவாம் என்று உபபாதனஞ் செய்யப்பட்டது. அதனையனுவாதஞ் செய்து சித்தித்த அர்த்தத்தை அதாவது மஹாவாக்கியத்தின் வியர்த்தத் தன்மை சங்கையின் நிராகரணத்தை முடிக்கின்ருர்:—

विना महावाक्यमतो न कश्चित्पुमांसमद्वैतमवैति जन्तुः ।
ततः पदार्थावगमान्न मुक्तिर्घटिष्यते तस्य परोक्षभावात् ॥ ३०३ ॥

பதவுரை

अतः महावाक्यं विना—கூறிய நியாயத்தால் மகாவாக்கியமின்றி

कश्चित् जन्तुः—யாதோர் பிராணியும்

पुमांसम् अद्वैतम्—பிரத்தியகான்மாவை பிரம்மாபின்னமாக

न अवैति—அறிகின்றதில்லை

ततः पदार्थावगमात्—ஆதலால் பதார்த்தமாத்திரத்தின் ஞானத்தால்

मुक्तिः न घटिष्यते—மோக்ஷம் பொருந்துவதின்ரும்

तस्य परोक्षभावात्—கேவல பதார்த்த ஞானத்திற்குப் பரோக்ஷத்தன்மையுண்மையின்

விசேஷவுரை

அபரோக்ஷ சம்சார பிராந்தியை நிவர்த்திக்குந் தன்மை சம்பவியாமையின் அதனுல் மோக்ஷம் சித்தியாதென்பது பொருள். 303

(அ) அற்றேல் தத்துவமசி முதலிய மஹாவாக்கியத்திற்கே மோக்ஷஹேதுவான அபரோக்ஷ ஞானத்தின் ஹேதுத்தன்மையிருத்தலின் அதுவே போதுமானது. பரோக்ஷ ஞானத்தின் ஏதுவான சத்தியம், ஞானம் என்பது முதலிய அவாந்தர வாக்கியம் வேண்டியதில்லை. ஆதலால் அதன் பொருளை நிரூபித்தல் வீணேயாம் என்னும் சங்கைக்கு அற்றன்றெனக் கூறுகின்றார் :—

पदार्थबोधं परिहृत्य वाक्यं न शक्तमात्मानुभवावसानाम् ।
धियं समानेतुमपेक्षितत्वादतः स यत्नेन निरूपितोऽभूत् ॥ ३०४ ॥

பதவுரை

वाक्यम् –மஹாவாக்கியமானது

पदार्थबोधं परिहृत्य ·பதார்த்த ஞானத்தைப் பரித்யாகஞ் செய்து

आत्मानुभवावसानाम् –ஆன்ம தத்துவத்தின் அபிவியக்தியைப் பயனாகவுடைய அதாவது சாக்ஷாத்கார வடிவ

धियं समानेतुम् –ஞானத்தையுண்டுபண்ணுதற்கு

न शक्तम् – ஆற்றலுடையதன்றும்

अपेक्षितत्वात् –பதார்த்த ஞானம் வாக்கியார்த்த ஞானத்தின் ஏதுத்தன்மையால் அபேக்ஷிக்கப் பட்டமையின்

अतः सः –ஆதலால் பதார்த்தம்

यत्नेन निरूपितः अभूत् – பிரயத்தினத்தால் நிரூபிக்கப்பட்டதாயிற்று. யாதொன்றும் வியர்த்தமின்றுமென்பது பொருள். (304)

(அ) அங்ஙனமாயினும் தத்துவம் பதங்களாலேயே அவற்றினர்த்தம் அறியப்படுதலின் அவாந்தர வாக்கியம் வீணேயாம் என்றுசங்கித்து அத்துணை மாத்திரத்தால் வாக்கியார்த்தான்வய யோக்கிய அர்த்தம் சித்தியாமையின் பதார்த்த சோதக அவாந்தர வாக்கியத்தினையபேக்ஷித்தே

அப்பதங்களால் அத்தகைய வர்த்தத்தின் உபஸ்திதியுள தாதலின் அவாந்தர வாக்கியம் வீணன்றுமென்று கருதி அதன் (அவாந்தர வாக்கியத்தின்) பலத்தாலறியப்பட்ட பதார்த்தங்களை நிர்த்தேசஞ் செய்கின்றார் :—

तच्छब्दादवगतमद्वितीयमासीत्प्रत्यक्त्वं समधिगतं त्वमित्यनेन ।
प्रत्यक्त्वं न खलु विनाऽद्वितीयमेवं नाद्वैतं भवितुमलं विना प्रतीचा ॥

பதவுரை

तच्छब्दात् - மஹாவாக்கியத்தின் தற்பதத்தால்

अद्वितीयं अवगतमासीत् - அத்துவைதப் பிரம்மம் அறியப் பட்டது.

त्वं इत्यनेन - துவம் பதத்தால்

प्रत्यक्त्वं समधिगतम् - பிரத்யகான்மாவறியப்பட்டது.

அவைகட்கும் பரஸ்பரம் பேதமுளதாயின் வாக்கியார்த் தத்தில் உபயோகமின்றுமென்று கருதி யுக்தியினால் அவை களின் அபேதத்தை சம்பாவனை செய்கின்றார்.

अद्वितीयं विना - அத்துவிதீய பிரம்மான்மத்தன்மையின்றி

प्रत्यक्त्वं न खलु - துவம் பதார்த்தத்திற்கு பிரத்தியக் தன்மைசித்திக்கின்றதில்லை.

एवं प्रतीचा विना - இங்ஙனம் பிரத்தியகான்மாவோடு அபேதமின்றி

अद्वैतं भवितुं नालम् - தத் பதார்த்தத்திற்கு அத்துவிதத் தன்மையாவதற்கு யோக்கியமின்றும்.

விசேஷவுரை

அத்துவிதீயப் பிரம்மத்திற்கு சருவாதிஷ்டானத் தன்மை யால் சருவாந்தரத்தன்மையுண்மையின் (பிரத்தியகான்மா விற்கு) அதன் அபேதமின்றி துவம்பதத்தால் போதிக்கப்பட்ட பிரத்தியக்துவமாகிய சருவாந்தர சாக்ஷி சைதன்ய வடிவம் பொருந்துகின்றதில்லை. சருவாந்தரத்தினும் புறம்பாயுள்ளதற்கு சருவாந்தரத்தன்மை பொருந்தாமையின். இங்ஙனம் தத

பதத்தால் போதிக்கப்பட்ட அத்துவிதீயமும் வருணிக்கப்பட்டப் பிரத்தியக்கான்மாவோடு அபேதமின்றி பொருந்துகிறதில்லை என யுத்தியால் அவை (ஆன்மாவும் பிரம்மமும்) அபின்னங் களாமென சம்பாவனை செய்யப்பட்டன என்பது பொருள்.

(அ) அற்றேல் அவாந்தர வாக்கியங்களாற் சித்தித்த பிரத்தியகான்மாவிற்கும் அத்துவிதப் பிரம்மத்திற்கும் கூறிய யுத்தியால் அபேத நிச்சயம சம்பவித்தலால் மகாவாக்கியங் களாற் பயனின்ரும் என்ரு சங்கித்து யுத்தி சம்பாவனை ஞானத் திற்கு எதுவ தலால் பிரமாணத்தினநுக்ராஹகமாம் (அநுக் கிரகத்தைச் செய்வது) ஆதலால் அதற்கு சுயமே நிச்சய ஞானத்தின் ஏதுததன்மை பொருந்தாமையினுலும் அதனுல் உண்டான ஞானத்திற்கு அவற்றின் அபேத விஷயகத்தன்மை யிருப்பினும் பிரமாண ஜன்னியத்தன்மை இன்மையால் பரோக்ஷத்தனமையுண்மையினுலும் அதன் அவித்தையை நிவர்த்தி செய்வதில் ஆற்றலின்மையினுலும் அதனை நிவர்த்திக் கின்ற நிச்சயாபரோக்ஷ ஞானத்திற்கு ஏதுவாயுள்ள மகா வாக்கியங்கள் பிரயோஜனமுடையனவாகின்றன என்னுங் கருத்தால் யுத்தியினுற் சனித்த ஞானத்தினும் வாக்கிய ஜன்னிய அநுபவத்திற்கு விசேஷத்தைக் கூறுகின்ருர்:—

तर्कप्रतीतिसमयेऽपि तदद्वितीयं
प्रत्यक् परिस्फुरति तत्प्रतिबिम्बितं सत् ।
वेदान्तवाक्य जनिताद्वयबुद्धिभूमि-
निष्ठ पुनः स्फुटतरं भवतीति भेदः ॥ ३०६ ॥

பதவுரை

तर्कप्रतीति समयेऽपि - யுத்திஜன்னிய ஞானகாலத்திலும்

तदद्वितीयं प्रत्यक् - அவ்வத்துவிதப் பிரத்தியகான்மா

तत्प्रतिबिम्बितं सत् - அந்த ஞானத்தில் பிரதிபிம்பித்ததாகி

परिस्फुरति - விளங்குகிறது.

वेदान्तवाक्यजनिताद्वय बुद्धिभूमिनिष्ठं पुनः— மகாவாக்கிய ஜன்னிய அத்துவ யாகார புத்திவிருத்தியில் பிரதி பிம்பித்ததாகியோ

**स्फुटतरं भवतीति भेदः** – அத்தியந்தம்ஸ்பஷ்டமாக விளங்குகிறது என்பது விசேஷமாம்.

### விசேஷவுரை

யுத்தி ஜன்னிய ஞானத்தில் பிரதிபிம்பித்ததாகி-பிரத்யக்ஷத்திற்போன்று தனது ஆகாரத்தையர்ப்பணஞ் செய்வதாய் விளங்குகிறதாயினும் அபரோக்ஷம்போன்று அநாவிருதமென்றென்பது பொருள். (306)

(அ) அற்றேல் ஓர் சுத்த வஸ்துவே பதார்த்த ஞானத்தின் கண்ணும் யுக்தி ஜன்னிய ஞானத்தின் கண்ணும் வாக்கிய ஜன்னிய ஞானத்தின் கண்ணும் பிரதிபிம்பித்ததாகி விளங்குமாயின் அதன்கண் ஸ்பஷ்டத்தன்மை அஸ்பஷ்டத்தன்மைகளின் விசேஷம் எதனுலாம் என்றுசங்கித்து அதன் அபிவ்யஞ்சக ஞானத்தின் கண்ணுள்ள யோக்கியதை வடிவ சுபாவத்தின் தாரதம்மியத்தை நிமித்தமாகக்கொண்டு அவ்விசேஷம் விளங்குகின்றது என திருஷ்டாந்த சஹிதம் கூறுகின்றார்.

**अधममध्यमशुद्धिनि दर्पणे परमशुद्धिनि चाननमात्मनः ।**
**तरतमक्रमतः प्रतिभासते तदिव तत्त्वमिह प्रतिपत्तिषु ॥ ३०७ ॥**

### பதவுரை

**अधममध्यमशुद्धिनि** - அதம சுத்தியினையும் மத்தியம சுத்தியினையும்

**परमशुद्धिनि च दर्पणे** - உத்தம சுத்தியினையும் உடைய கண்ணுடியின்கண்

**आत्मनः आननम्** - தனது முகமானது

**तरतमक्रमतः** - தாரதம்ய கிரமத்தால்

**प्रतिभासते** - விளங்குகின்றது.

**तदिव तत्त्वम्** - அதுபோன்று ஆன்மதத்துவம்

**इह प्रतिपत्तिषु** - ஈண்டு முற்கூறிய ஞானங்களில் விளங்குகின்றது. கிரமம்=வியுவஸ்தை. (307)

(அ) அற்றேல் சோதித தத்துவம்பதார்த்தங்கட்கு பரஸ்பரம் விலக்ஷணத் தன்மையின் இன்மை வடிவ லிங்கத்தால் அபேதானுமானம் சம்பவித்தலின் அவ்வனுமானத்திற்கு பிரமாணத் தன்மையால் நிச்சய ஹேதுத்தன்மையுண்மையின் மஹாவாக்கியம் எற்றிற்கு என்னுமிடத்துக் கூறுகின்றார்:—

एकदेशमुपलभ्य धर्मिणश्चैकदेशमपरं विजानते ।
धर्मिधीव्यवधिकारणादतो नानुमा ह्यनुभवाय वस्तुनः ॥ ३०८ ॥

பதவுரை

धर्मिणश्च एकदेशमुपलभ्य - பக்ஷத்தினது வியாப்பிய விசிஷ்ட வடிவ ஏகதேசத்தினையறிந்து

अपरमेकदेशम् - வியாபக விசிஷ்ட வடிவ மற்றோர் ஏகதேசத்தினை

विजानते - அறிகின்றனர்.

अतः - ஆதலால்

धर्मिधीव्यवधिकारणाद् - தருமிஞான வியவதானமாகிய காரணத்தால்

वस्तुनोऽनुभवाय - வஸ்துவின் அநுபவத்தின் பொருட்டு

अनुमा नहि - அநுமானம் சமர்த்தமின்றாம்.

விசேஷவுரை

மலையாகிய பக்ஷத்தின் புகையாகிய வியாப்பிய விசிஷ்ட வடிவ ஏகதேசத்தின் தெரிசனத்தால் அதன் வியாபகமாகிய வன்னி விசிஷ்ட வடிவ மற்றோர் ஏகதேசத்தினையாண்டும் அநுமிக்கின்றனர். அஃது சபரசுவாமியாலும் 'ஏகதேச தரிசனத்தால் வேறு ஏகதேசத்தின் ஞானம் அநுமானம்' என கூறப்பட்டுளது. ஆதலால் பக்ஷமாயுள்ளதற் பதார்த்தம் பரோக்ஷமாதலால் அதன் ஞான வாயிலால் உற்பத்தியாகின்ற அநுமிதிக்கும் அதனை விசேஷணமாகவுடைய அபேதத்தை விஷயஞ் செய்வதில் பரோக்ஷத்தன்மையுண்மையின் அதற்கு அபரோக்ஷாநுபவத்தன்மை பொருந்தாது ஆதலின். அதனால் அதன் அவித்தை முதலியவற்றிற்கு நிவர்த்தியின்மையின் அதனை நிவர்த்திக்கின்ற அகண்ட வஸ்துவின் சாக்ஷாற்காரத்

தின் பொருட்டு தத்துவமசி முதலிய வாக்கியம் பயனுடையதாம் என்பது பொருள். (308)

(அ) இங்ஙனம் மஹாவாக்கியங்கட்கு பயனுடையதாந் தன்மையை நிரூபித்து பதார்த்தசோதனப் பிரகரணத்தையுபசம்மாரம் செய்கின்றார்:—

एवं तावत्तत्त्वमर्थौ विशुद्धौ बोद्धव्यं चेदन्यदप्यस्ति पृच्छ ।
यद्यद्बुद्धं तत्तदादाय तिष्ठेर्यच्चाबुद्धं तत्र चाऽऽधत्स्व चेतः ॥ ३०९ ॥

பதவுரை

एवं तावत् तत्त्वमर्थौ - இங்ஙனம் தத்துவம் பதார்த்தங்கள்

विशुद्धौ- புறப்பொருளினின்றும் வேறு பிரித்து நிச்சயம் செய்யப்பட்டன.

வேதாந்த வாக்கியமனைத்தும் நிர்க்குணப் பிரம்மத்தின்கண் தாத்பரியமுடையதாகுங்கால் நியாயத்தால் இத்துணை ஞானமாமென்பதன்கண் சுருக்கமாகக் கூறப்பட்ட மூன்றுவது பாதத்தின் பொருளை விஸ்தாரஞ் செய்வதற்கு அதனை வினவுதற்பொருட்டு அனுமதியை கொடுக்கின்றார்

अन्यदपि बोद्धव्यं अस्ति चेत् - இனி வேறேயும் அறியத்தக்கதாக உளது என்று கருதுவையாயின்

पृच्छ - அதனை வினவுவாயாக.

यत् यत् बुद्धम् - எவ்வெவ்வஸ்த்து அறியப்பட்டதோ

तत् तत् आदाय तिष्ठेः - அவ்வவ்வஸ்துவினையநுசந்தானம் செய்துகொண்டேயிருப்பாய்.

यच्च अबुद्धम् - எவ்வஸ்த்து அறியப்படவில்லையோ

तत्र च - அதன்கண்ணும்

चेतः आधत्स्व - மனதை சாவதானஞ்செய். (309)

## குணங்களைக் கிரகித்தல்

(அ) துவைதத்தின் சத்தியத்தன்மை முதலியவற்றை நிராகரித்தலால் தத்பத லக்ஷிய அத்துவயவஸ்து நிரூபிக்கப் பட்டது. துவம்பத லக்ஷியமும் ஸர்வ சம்சாரமும் அற்றதாய் விக்ஞான கனசொரூபமாய் பிரத்தியக்மாத்திரமாய் உளதென்று கூறப்பட்டது அங்ஙனமாயினும் அவ்விரண்டன் வாசகங் களான நாநாசாகையின் கண்ணுள்ள பதங்கட்கு ஓரிடத்தில் உபசம்மாரஞ் செய்தலால் அவற்றின் லக்ஷியத்தின் இத்துணை யென்னும் நிச்சயமின்றி அபேத வடிவ வாக்கியார்த்தத்தின் கண் ஸர்வப் பிரகாரத்தாலும் சந்தேகமின்றிய அனுபவம் பொருந்தாமையின் தத்துவமஸி முதலிய வாக்கியத்தால் அத்தகைய அனுபவத்தின் பொருட்டு அவற்றின் கண்ணுள்ள பதார்த்த வாசக சமுதாயத்தினை இத்துணையென அறியும் வேட்கையினல் சிஷ்யனுடைய வினவையாரம்பிக்கின்ருர்:—

बुद्ध्वा तत्त्वंपदार्थावनुभवविषयं कर्तुकामस्तदैक्यं
वाक्याद्वाक्यार्थनिष्ठाच्छ्रुतिशिरसि गतादञ्जसा तत्त्वमादेः ।
तच्छेषापन्नमस्मिन् श्रुतिशिरसि वचोजातमन्यद्यदस्ति
तस्येयत्ता बुभुत्साकुलितनिजमतिः पृच्छति स्मैष भूयः ॥

பதவுரை

एषः तत्त्वंपदार्थौ बुद्ध्वा-சீடனானவன் தத்துவம் பதார்த்தங் களையறிந்து

वाक्यार्थनिष्ठात् –வாக்யார்த்தமாகிய அபேதத்தில் தாற் பரியமுள்ளதும்

श्रुतिशिरसि गतात् – வேதாந்தத்திலுள்ளதுமான

तत्त्वमादेः वाक्यात् –தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தால்

तदैक्यम् – கூடஸ்தப்பிரம்மங்களினைக்கியத்தை

अञ्जसा – நேரே. (அபரோக்ஷமாக)

अनुभवविषयं कर्तुकामः – அநுபவத்தின் விஷயமாக ஆக்கு தற்கு இச்சையுடையவனுய் (மீண்டும் வினவினனென ஒட்டுக)

अस्मिन् श्रुतिशिरसि – வேதாந்தங்களில்

तच्छेषापन्नम् - மகா வாக்கியத்தின் அங்கத்தன்மையை யடைந்துள்ள

अन्यद् यद् वचोजातम् अस्ति – அவாந்தரமெனப் பெயரிய யாதொரு வாக்கிய சமுதாயமுண்டோ

तस्य इयत्तावुभुत्साकुलितनिजमतिः - அதனது சொரூபத்தை இத்துணையென அறியும் வேட்கையினால் கலங்கிய புத்தியுள்ளவனாய்

भूयः पृच्छतिस्म – மீண்டும் வினவினான் (310)

(அ) அறிய விரும்பப்பட்ட வஸ்து அறியப்பட்டபோது மீண்டும் வினவுதல் எற்றிற்கு என்றுசங்கித்து அதன் பீஜத்தைக் காரண சகிதம் தெரிசிப்பிக்கின்றார் :—

अद्याप्यवान्तरवचः परिमाणबोध-
वैकल्यमस्ति मम तेन महावचोऽपि ।
वाक्यार्थबुद्धिमनुभूतिफलावसानां
नोत्पादयत्यहरहः श्रुतमप्यशक्तेः ॥ ३११ ॥

பதவுரை

अद्यापि – இப்போதும் (இன்னமும்)

अवान्तरवचः परिमाणबोधवैकल्यम्- அவாந்தர வாக்கியத்தின் பரிமாண ஞானத்தின் குறைவு

मम अस्ति – எனக்கு உளது.

तेन–அதனால் அதாவது பரிமாண ஞானமின்மையினால்

महावचोऽपि - மஹாவாக்கியமும்

अहरहः श्रुतमपि – தினந்தோறும் சிரவணஞ்செய்யப்பட்டதாயினும்

अनुभूतिफलावसानाम् – திடசாக்ஷாத்கார பயனின்கண் பரியவசானமுள்ள

वाक्यार्थबुद्धिम् - ஐக்கிய ஞானத்தினை

न उत्पादयति - உண்டுபண்ணுகிறதில்லை.

अशक्तेः - கூறிய காரணத்தால் சக்தி தடுக்கப்பட்டிருத்தலின் (311)

(அ) இப்போது வினுவின் சொரூபத்தை வெளிப்படுத்துகின்றார்:—

विधिमुखेन परस्य निवेदकं वचनजातमवान्तरसंज्ञितम् ।
यदपि भेदनिषेधमुखेन तत्परिमितिं प्रतिपादय मे प्रभो ॥ ३१२ ॥

பதவுரை

विधिमुखेन - ஞானனந்த முதலிய பாவவடிவத்தைச் சமர்ப்பித்தலாகிய விதிமுகத்தால்

परस्य निवेदकम् - பிரம்மசொரூபத்தைப் போதிக்கின்ற

अवान्तरसंज्ञितं यदपि वचनजातम् - யாதொரு அவாந்தர வாக்கிய சமுதாயமுண்டோ

भेदनिषेधमुखेन - பேதத்தை நிஷேதித்தல் வாயிலால்

परस्य निवेदकम् यदपि वचनजातम् - பிரம்ம சொரூபத்தைப் போதிக்கின்ற யாதொரு அவாந்தர வாக்கியமுண்டோ

तत्परिमितिम् - அவ்விரண்டனது பரிமாணத்தை

प्रभो मे - சுவாமி எனக்கு

प्रतिपादय - கூறவேண்டும். (312)

(அ) கருமத்திற்குப் போன்று பிரம்மத்திற்கும் அவ்வவ் வேதாந்தங்களில் அவ்வவ் ஞானங்களே உண்டாதற்கு யோக்கியமாமாதலின், அவ்வேதாந்தங்களில் சகுண பரத்வ நிர்குண பரத்துவ விபாகத்தைச் செய்து நிர்குணபரமான வேதாந்தங்களில் ஆனந்த முதலானவைகள் பிரம்மத்தின் தர்மங்களாகவறியத்தக்கன என்பதாதியால் கூறப்பட்ட நியாயத்தால் தனது சாகையின்கண்ணுள்ள நிர்குண

வாக்கியங்களில் கேட்கப்படாதவையும் அன்னியரது சாகை யின்கண்ணுள்ள அவ்வவ் வாக்கியங்களில் கேட்கப்பட்டவையு மான ஆனந்த நித்திய ஸர்வகத விபு பூர்ண அமிர்த அபய ஸர்வஞ்ஞ ஈச்வர அந்தர்யாமி முதலான சப்தங்களைத் தன் சாகையின்கண்ணுள்ள சத்திய ஞான அனந்தாதி வாக்கியங் களில் கிரஹணஞ்செய்கின்றவராய் அதன் பரிமாணத்தை நீ சுயமே அறிவாய் என்று ஆசிரியர் கூறுகின்றார்:—

सकलवेदशिरःसु परात्मधीपरवचःसु परापरबोधतः ।
अपुनरुक्तपदान्युपसंहरन्परिमितिं स्वयमेव तु वेत्स्यसि ॥ ३१३ ॥

பதவுரை

सकलवेदशिरःसु - முதலில் ஸகல வேதாந்தங்களிலும்

परापरबोधतः - இவ்வாக்கியம் ஸகுணத்தை விஷயஞ் செய்வது, இவ்வாக்கியம் நிர்குணத்தை விஷயஞ்செய்வது என்னும் ஞானத்தால்

परात्मधीपरवचःसु - நிர்க்குண பிரம்மஞானத்தின்கண் தாற் பரியமுள்ள வாக்கியங்களில்

अपुनरुक्तपदानि -தனது சாகையில் சொல்லப்படாதனவாய் பிறசாகையின்கண் சொல்லப்பட்ட பதங்களை

उपसंहरन् - கிரஹிக்கின்றவனாய்

परिमितिम् - அவாந்தர வாக்கியத்தின் அளவினை

स्वयमेव तु वेत्स्यसि - நீதானே அறிவாய் (313)

(அ) அற்றேல் சத்தியாதி வாக்கியத்தாலறியப்பட்ட யாதொரு வஸ்த்துவுண்டோ அதுவே சங்கிரஹிக்கப்பட்ட ஆனந்த முதலான பதங்களின் சமபிவியாஹாரத்தால் தோற்றுகின்றதா, அல்லது அதனினும் வேறு பொருளும் தோற்றுகின்றதா, முதற்பக்ஷத்தில் அப்பதங்களைச் சங்கிர ஹித்தல் வீணேயாம். இரண்டாவது பக்ஷத்திலோ அவ் வஸ்த்துவிற்கு அகண்டார்த்தத் தன்மை சித்தியாது. சங்கிர ஹிக்கப்பட்ட பதார்த்தங்களின் வைசிஷ்டியம் (சம்பந்தம்) அதனால் பிரதீதியாதலின் என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

अपुनरुक्तपदानि विना यतो न परिपुष्कलबुद्धिसमुद्भवः ।
अपुनरुक्तपदानि ततस्ततस्त्वमुपसंहर तत्त्वबुभुत्सया ॥ ३१४ ॥

பதவுரை

अपुनरुक्तपदानि विना - புனருக்தியல்லாத (அன்னிய வாக்கியங்களிற் சொல்லப்பட்ட) பதங்களின் உபசம்மாரமின்றி

यतः - யாதொரு காரணத்தினுல்

परिपुष्कलबुद्धिसमुद्भवः न - பரிபூர்ண ஞானமுதயமாகின்ற தில்லேயோ (அதனுல்)

ततस्ततः-அன்னியமான அவ்வவ் வாக்கியங்களில் நின்றும்

अपुनरुक्तपदानि - தனது வாக்கியத்திற் சொல்லப்படாத பதங்களே

तत्त्वबुभुत्सया -- தத்துவத்தையறியும் வேட்கையினுல்

त्वम् उपसंहर - நீ கிரகிப்பாய்

விசேஷவுரை

(தனது வாக்கியத்திற் சொல்லப்படாத) புனருக்தியல்லாத ஆனந்தாதி பதங்களால் லக்ஷிக்கப்பட்ட ஆனந்தாதி வியக்தியின் அபின்ன பிரம்மஞானம் பரிபூர்ண ஞான சப்தத்தின் பொருளாம். அதுவே அதன்கண் அதனின் விபரீதாகார சம்சயாதிக்கு விரோதியாம். ஆகையால் பதாந்தரங்களே கிரகித்தல் வியர்த்தமினரும். அகண்டார்த்தத் தன்மைக்கு குறைவுமின்ரும். பிரம்மததின்கண் சத்தியாதி பதங்களின் லக்ஷிய பேதத்தைப் போதிக்கினும் விசிஷ்டார்த்தத்தைப் போதிக்காமையின் அஃது (அகண்டார்த்தத் தன்மை) பொருந்துதலின் என்பது கருத்து. (314,

(அ) இங்ஙனமாயின் பாவவஸ்த்துவின்கண் தாற்பரியமுள்ள பிரகரணத்தின்கண் ஆனந்தமயனுக்குப் பிரியமே சிரஸாம், மோதம் தக்ஷிணபக்ஷமாம், பிரமோதம் உத்தர பக்ஷமாம், ஆனந்தம் ஆன்மாவாம் என பிரிய முதலானவை சிரசு முதலிய அவயவ வடிவமாகக் கேட்கப்படுதலின்

அன்னிய சாகையின்கண்ணுள்ள பிரம்ம வாக்கியங்களில் அவைகளின் கிரஹணமும் பிராப்தியாம் என்றுசங்கித்து அதனை நிவர்த்தித்தற் பொருட்டு, இது முக்கிய பிரம்ம வாக்கியம், இது அமுக்கிய பிரம்ம வாக்கியம் என பகுத்துணர்ந்து அவற்றுள் முக்கிய பிரம்ம வாக்கியத்திலுள்ள பதங்களினுபசம்மாரமே (கிரஹணமே) செய்யத்தக்கதாம் என முதலிற் கூறுகின்றார்:—

कुरु परापरवाक्यविवेचनं तदनु शब्दसमाहरणं कुरु।
प्रियशिरःप्रभृतीनि च यत्नवानुपचितापचितानि परित्यज ॥ ३१५ ॥

பதவுரை

परापरवाक्यविवेचनं कुरु - முதலில் நிர்க்குண வாக்கியத்தினையும் சகுண வாக்கியத்தினையும் பிரிப்பாயாக

तदनु शब्दसमाहरणं कुरु - அதன்பின்பு நிர்க்குண வாக்கியத்திலுள்ள சப்தங்களின் கிரகணத்தைச் செய்வாய்.

இவ்வாருகவே ஆனந்தமயனுக்கு பிரம்மத்தன்மையின்மையால் அவ்வாக்கியத்திலுள்ள பிரியமே சிரசு என்பது முதலிய பதங்களின் கிரகணம் முக்கியப் பிரம்ம வாக்கியங்களில் செய்யத்தக்கதன்றுமெனக் கூறுகின்றார்.

यत्नवान् - பிரயத்தனமுடையவனுயிருந்துகொண்டு

उपचितापचितानि - பருத்தும் இளைத்துமுள்ள

प्रियशिरःप्रभृतीनि च - பிரியம் சிரசு என்பது முதலானவற்றை

परित्यज - தியாகம் செய்

விசேஷவுரை

பருத்தும் இளைத்தும் உள்ள என்பது அவைகள் பிரம்மத்தின் தருமம் அன்றும் என்பதன்கண் லிங்கமாம். அவற்றுள் பிரியம் என்பது இஷ்ட வஸ்துவின் தரிசன மாத்திரத்

திருலே உண்டாகும் சொற்ப சந்தோஷமாம். அவ்விஷ்ட வஸ்த்து கிடைத்தபோது அதனினுமதிக சந்தோஷம் மோதமாம். அவ்வஸ்த்துவின் அநுபவத்தால் அதனினும் அதிக சந்தோஷம் பிரமோதமாம். அவற்றில் சாமான்யமாத்ரமானந்தமாம் என்க. பாவவஸ்த்து=சகுணப்பிரம்மம். (315)

(அ) அவைகட்கு பருத்ததும் இளைத்ததுமான வடிவமிருப்பினும் பிரம்மத்தின் தர்மத்தன்மையேனுகாது என்னுமாசங்கையின் "उपचयापचयौ हि भेदः" பருத்தல் இளைத்தலே விசேஷமாம் என்னும் சூத்திரத்தின் அவயவத்தினையாசிரயித்துப் பரிகரிக்கின்ருர்:—

उपचितापचितानि न निर्गुणे प्रियशिरःप्रभृतीनि कदाचन ।
निपुणधीरपि कश्चन योजयेदपि तु कोशगुणाः कथिता ह्यमी ॥३१६॥

பதவுரை

निपुणधीः अपि कश्चन - குசல புத்தியுடையவனுயினும் எவனும்

निर्गुणे - நிர்விசேஷ பிரம்மத்தின்கண்

उपचितापचितानि - பருத்துள்ளனவுமிளைத்துள்ளனவுமான

प्रियशिरःप्रभृतीनि - பிரியம் சிரசு என்பன முதலிய அவயவங்களை

कदाचन न योजयेत् - ஒருபோதும் பொருத்தமாட்டான்.

நிர்க்குண வஸ்த்துவின்கண் சுவாபாவிக குணகுணித்தன்மையின்மையின், அவை அதன் தர்மம் அன்ரும் என்பது பொருள். அப்படியானுல் அவைகட்குக் கேவல அசேதனத்தின்கண்ணும் ஸ்திதி பொருந்தாமையின் நிராசிரயத்தன்மை பிராப்தியாம், என்ருசங்கித்து அவைகட்கு சிதாபாஸனேடு கூடிய புத்தியின் தர்மத்தன்மையுண்மையின் அதனபேதத்தால் அதன் காரண ஆனந்தமயகோசத்தின்கண் அவை கூறப்பட்டன என்று கூறுகின்ருர்.

अपि तु अमी - மற்ருே பிரிய சிரசு முதலிய இவைகள்

कोशगुणाः कथिताः हि - ஆனந்தமய கோசத்தின் குணங்களாகவே கூறப்பட்டன. (316)

(அ) நிருபிக்கப்பட்டதனை முடிக்கின்றவராய் இனி கூறப்போவதனை ஆரம்பிக்கின்றார் :—

इति वचःपरिमाणमुदीरितं विधिवचःसु निषेधगिरां शृणु ।
बहु निषेध्यममूष्वपि तेन तास्वपि समाहर पूर्ववदेव तत् ॥ ३१७ ॥

பதவுரை

विधिवचःसु - விதிமுகத்தால் வஸ்த்துவைப் போதிக்கின்ற வாக்கியங்களில்

वचःपरिमाणम् - கிரகிக்கத்தக்க பதங்களின் அளவு

इति उदीरितम् - இங்ஙனம் கூறப்பட்டது.

निषेधगिरां शृणु - நிஷேத முகத்தால் போதிக்கின்ற பதங்களின் அளவினையும் கேட்பாய்.

நகாரத்தின் பொருளான நிஷேதம் ஒரே வடிவமானதால் அவற்றினைக் கிரகித்தல் வீணேயாம் என்றுசங்கித்து நிஷேதத்தின் பிரதியோகி பேதத்தால் நிஷேதம் பேதமாயிருத்தலின் அதன் பரிமாணமும் நிருபிக்கத்தக்கதாமெனக் கூறுகின்றார்.

अमूषु अपि - நிஷேத பதங்களிலும்

बहु निषेध्यम्- நிஷேதிக்கத்தக்க பிரதியோகி அநேகம் உளது.

तेन तासु अपि - அதனுல் அவற்றின் கண்ணும்

पूर्ववत् एव - விதி பதத்தினைப் போன்று

तत् समाहर - நிஷேத பதத்தினையும் கிரகிப்பாய். (317)

(அ) நிஷேத்தியத்தினைக் கிரகித்தல் வீணும் என்றுசங்கித்து! அக்கூற்றினபிப்பிராயத்தினை விஸ்த்தரிக்கின்றார் :—

अपुनरुक्तनिषेध्यनिषेधकृत् बहुपदाहरणं कुरु तास्वपि ।
यदि पुनर्न समाहरणं भवेत्परिमितप्रतिषेधनमापतेत् ॥ ३१८ ॥

பதவுரை

तासु अपि - நிஷேத வாக்கியங்களிலும்

अपुनरुक्तनिषेध्यनिषेधकृत बहुपदाहरणं कुरु - புனருக்தியில்லாதனவும் நிஷேத்தியத்தின் நிஷேதத்தைச் செய்வனவுமான அனேக பதங்களின் சங்கிரகத்தைச் செய்வாய்.

அற்றேல் பிரதிஷேதங்கட்கு ஆன்மவடிவத் தன்மையின்மையின் அவற்றினை சங்கிரகித்தல் வீணையாம் என்று சங்கித்து தூல முதலியவற்றின் பிரதிஷேதமின்றிய வழி அவ்வவ்வான்மத் தன்மையின் சங்கையை நிராகரிக்க முடியாமையானும், வேறு சாகையின்கண்ணுள்ள புனருக்தியில்லாத நிஷேதத்தினைச் சங்கிரகம் செய்யாவிடின் அதன் நிஷேத்தியான்மத் தன்மையின் சங்கையை நீக்கமுடியாமையானும், ஸர்வபிரதிஷேத பதங்களின் ஸங்கிரகம் ஆவஸ்யகமாம் என்னுங் கருத்தால் கூறுகின்றார்.

यदि पुनः समाहरणं न भवेत् - ஸர்வ பிரதிஷேத பதங்களின் கிரகணம் இல்லையாயின்

परिमितप्रतिषेधनमापतेत् - பரிமித நிஷேதமேயாகும். பரிமித = சொற்பம். (318)

(அ) அற்றேல் சத்தியாதி வாக்கியத்தின்கண்ணுள்ள பதங்கட்கும், அநிருதாதியின் வியாவிருத்தி ஞான ஏதுத் தன்மையுண்மையின், ஸ்தூலாதி நிஷேத வாக்கியத்தின் கண்ணுள்ள பதங்கட்கும் நிர்விசேஷ வஸ்துவைப் போதிக்கும் தன்மையுண்மையின் விதிநிஷேத வேற்றுமையெங்ஙனமாம் என்றுசங்கித்து விதிவாக்கியத்திலுள்ள பதங்கட்கு நேரே லக்ஷிக்கப்பட்ட தனது பொருளை சமர்ப்பித்தலும் பொருளால் அதன் விரோதியாகிய கற்பித வடிவத்தை நிவர்த்தித்தலும் என இரண்டு வியாபாரமிருக்கின்றது. நிஷேத வாக்கியத்திலுள்ள பதங்கட்கு அஃதின்றுமாதலால் விஷமத்தன்மையுண்மையின் அவற்றின் வேற்றுமை பொருத்தமாமென்று கருதிக் கூறுகின்றார்:—

विधिवचस्युभयं तु पदे पदे भवति संग्रहवर्जनरूपकम् ।
स्वकवपुःपरिकल्पितरूपयोर्न तु निषेधवचःसु तथा मतम् ॥ ३१९ ॥

பதவுரை

विधिवचसि तु - விதிமுகத்தால் வஸ்துவைப் போதிக்கும் வாக்கியத்தின்கண்ணே

पदे पदे - ஒவ்வொரு பதத்தின்கண்ணும்

स्वकवपुःपरिकल्पितरूपयोः - நேரே தன்னால் போதிக்கப்பட்ட சச்சிதானந்தாதி பாவவடிவ வஸ்துவினதும் அதன்கண் கற்பிக்கப்பட்ட சடாதி வடிவத்தினதும்

संग्रहवर्जनरूपकम् - முறையே கொள்ளுதலும் தள்ளுதலுமாகிய

उभयं भवति -இரண்டுமிருக்கின்றது.

निषेधवचःसु तु - நிஷேத வாக்கியங்களிலோ

तथा न मतम् - அவ்வாறு சம்மதமின்றும். (319)

(அ) நான்காவது பாதத்தின் பொருளையே விஸ்தரிக்கின்றார்:—

यदिह किञ्चिदबोधसमुद्भवं तदखिलं प्रतिषेधति केवलम् ।
नतु किमप्युपगृह्य परे पदे भगवतो निविशेत निषेधगीः ॥ ३२० ॥

பதவுரை

इह यत्किञ्चिद् - பரமான்மாவின்கண் யாதொரு வடிவம்

अबोधसमुद्भवम् - அஞ்ஞான கற்பிதமோ

तदखिलम् - அவ்வெல்லாவற்றையும்

निषेधगीः केवलम् - நிஷேத வாக்கியம் கேவலம்

प्रतिषेधति - நிஷேதிக்கின்றது.

किमप्युपगृह्य - பாவவடிவ யாதேனுமோர் சொருபத்தை ஸமர்ப்பித்து

भगवतः परे पदे- பகவானது சோதிக்கப்பட்ட சொருபத்தில்
न तु निविशेत —பிரவேசிக்கிறதேயில்லை.

விசேஷவுரை

கற்பிதத்தின் நிஷேத மாத்திரத்தால் அதிஷ்டானத்தின் கண் பாவவடிவ விசேஷத்தையறியமுடியாமையின் என்பது பொருள். (320)

(அ) விதிநிஷேத வாக்கியங்கட்குச் கூறப்பெற்ற விஷமத்தன்மையினை முடிக்கின்றவராய் ஓரம்சத்தால் சமத்தன்மையினையும் கூறுகின்றார் :—

इति विशेष इह प्रतिपादितो विधिनिषेधगिरोरुभयोरपि ।
अपुनरुक्तपदाहरणं पुनर्विधिनिषेधवचःस्वविशेषितम् ॥ ३२१ ॥

பதவுரை

इह विधिनिषेधगिरोः उभयोरपि - ஈண்டு விதிமுக நிஷேதமுக வாக்கியங்கள் இரண்டற்கும்

इति विशेषः - இங்ஙனம் விலக்ஷணத்தன்மை

प्रतिपादितः - பிரதிபாதிக்கப்பட்டது.

अपुनरुक्तपदाहरणं पुनः - புனருக்தியில்லாத பதங்களையத்தியாஹாரஞ்செய்தலோ

विधिनिषेधवचःसु - விதிவாக்கியத்தின்கண்ணும் நிஷேத வாக்கியத்தின்கண்ணும்

अविशेषितम् - சமானமேயாம். (321)

(அ) ஏகவாக்கியத் தன்மையினையடைந்துள்ளவையும், திருசியமாத்திர நிஷேதத்தில் தாற்பரியமுள்ளவையுமான நிஷேத பதங்களனைத்திற்கும் விடாத லக்ஷணையால் சுருதாசுருத விஷயத்தன்மையாம், சுருதார்த்தமாத்திர சொருபத்தினைப் போதிக்கின்ற விதிபதங்கட்கோ அதனபாவமாம் என இங்ஙனம் மற்றோர் விஷமத்தன்மையினை இரண்டு சுலோகத்தாற் கூறுகின்றார் :—

श्रुतपदैरुपसंहृतिशालिभिर्यदवशिष्टनिषेध्यनिषेधनम् ।
तदपि पूर्यमिहाभिमतं श्रुतेः श्रुतपदान्युपलक्षणमेव हि ॥ ३२२ ॥

பதவுரை

श्रुतपदैः - அவ்வப்பிரகரணத்தில் சாக்ஷாத் சுருத பதங்களாலும்

उपसंहृतिशालिभिः - வேறு பிரகரணத்தில் நின்றும் அத்தியாஹாரஞ்செய்யப்பட்ட பதங்களாலும்

यदवशिष्टनिषेध्य निषेधनम्- நிஷேதிக்கப்படாததாய் எஞ்சியுள்ள அனுன்மவடிவ நிஷேத்தியத்தின் யாதொரு நிஷேதக பதமுண்டோ

तदपि इह पूर्यम् - அதுவும் நிஷேத வாக்கியங்களில் சமுச்சயஞ்செய்யத்தக்கதாமென

श्रुतेः अभिमतम् - சுருதியின் சம்மதமாம்.

அதன் (சமுச்சயஞ்செய்யத்தக்க பதத்தின்) உபஸ்த்தாபகாபாவத்தினையாசங்கித்துக் கூறுகின்ருர். உபஸ்த்தாபகம்=தோற்றுவிப்பது.

श्रुतपदानि - சுருதியில் கேட்கப்பட்ட பதங்களோ

उपलक्षणमेव हि - கூறப்படாத ஏனைய நிஷேத பதங்கட்கும் உபலக்ஷணமேயாதலின்

விசேஷவுரை

ஈண்டு நாநாவானவை சிறிதுமில்லை என்பதாதி வசனத்தால் சாமானியமாக திருசியமாத்திரத்தின் நிஷேதம் சுருதமாம். அங்ஙனமாயினும் அதனைக் காதுகளை மூடிக்கொண்டு கேளாதவன்போன்று சில விசேஷங்களை நிஷேதிக்கின்ற அஸ்தூலாதி பதங்களினுலேயே கற்பித சருவநிஷேதமும் கூறிய ரீதியால் உபபாதனஞ்செய்யப்பட்டதெனவுணர்க. அல்லது "இதுவுமல்ல, இதுவுமல்ல" என்பது முதலிய வசனமும் உலகப்பிரசித்த திருசியமாத்திரத்தின் நிஷேதஞ் செய்வதால் எஞ்சிய பரீக்ஷகரால் கற்பிக்கப்பட்ட பிரதானம்

மஹத்தத்துவம் அஹங்காரம் பரமாணு துவியணுகம் விசேஷம் சமவாயம் முதலியவற்றின் நிஷேதத்தைக் கிரகித்தற் பொருட்டு சுருதியிற் கேட்கப்பட்ட பதங்கள் உபலக்ஷணமாமென்று கூறப்பட்டது. ஆதலின் விரோதமின்றும். எஞ்சிய பிரதானமென ஒட்டுக. (322)

(அ) சத்தியாதி பதங்கட்கும் லக்ஷகத்தன்மை சமானமாமென்றுசங்கித்து அவைகட்கு சுவார்த்தத்தினேகதேச லக்ஷகத்தன்மையிருப்பினும் சுருதார்த்தத்தின் அபரித்யாகத்தால் அசுருத லக்ஷகத்தன்மையின்றுமென விஷமத்தன்மையினைக் கூறுகின்றார்:—

समुपसंहृतशब्दसमन्वितैः श्रुतपदैर्विधिवाक्यगतैः पुनः ।
समुपलक्ष्यतया न परात्मनः किमपि रूपमिहाभ्यधिकं मतम् ॥

பதவுரை

समुपसंहृतशब्दसमन्वितैः - அன்னியப் பிரகரணத்தினின்றும் கிரகிக்கப்பட்ட பதங்களோடு கூடிய

विधिवाक्यगतैः - விதிவாக்கியத்தின்கண்ணுள்ள

श्रुतपदैः पुनः - சுருத பதங்களால்

समुपलक्ष्यतया - உபலக்ஷிக்கத் தக்கதாக

परात्मनः किमपि रूपम् - பரமான்மாவின் யாதோர் வடிவமும்

इह अभ्यधिकं न मतम् - ஈண்டு அதிகமாய்க் கருதப்படவில்லை. உபலக்ஷிக்கத் தக்க வடிவமின்றுமென்பது கருத்து. (323)

(அ) அற்றேல் நிஷேதக பதங்களால் அவசிஷ்ட (எஞ்சிய) நிஷேதம் உபலக்ஷிக்கப்படுவது போன்று விதி பதங்களாலும் அவசிஷ்ட பிரம்ம வடிவம் உபலக்ஷிக்கப் படலாமே என்றுசங்கித்து அவசிஷ்ட வடிவமேயின்மையின் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார்:—

न खलु संश्रुतसंहृतशब्दयोरविषयः परमात्मन इष्यते ।
किमपि रूपममुत्र हि नास्ति नः किमपि मानमतो न तदस्ति नः ॥

பதவுரை

संश्रुतसंहृतशब्दयोः - தனது பிரகரணத்தில் கேட்கப்பட்டதும் பிரகரணாந்தரத்தில் நின்றும் கிரகிக்கப்பட்டதுமான பதங்கட்கு

अविषयः - விஷயமாகாததாக

परमात्मनः किमपि रूपम् - பரமான்மாவினது யாதோர் வடிவமும்

न खलु इष्यते - அங்கீகரிக்கப்படுகின்றதில்லை,

விஷயமாகாத வடிவம் நிஷ்ப்பிரமாணமாம் என்பதன்கண் அதனைச் சாதிக்கும் ப்ரமாணத்தின் அபாவத்தினை ஏதுவாகக் கூறுகின்றார்.

अमुत्र हि - பரமான்மாவின் அறியப்படாத வடிவத்தின் கண்

नः किमपि मानं नास्ति - நமக்கு யாதோர் பிரமாணமுமின்றாம்.

சாஸ்திரமாவது ப்ரத்தியக்ஷாதியாவது இல்லையென்பது பொருள். அறியப்படாத வடிவத்தினபாவத்தினை முடிக்கின்றார்.

अतः नः तत् नास्ति- பிரமாணமின்மையினால் நமது பக்ஷத்தில் பரமான்மாவிற்கு அறியப்படாத வடிவமின்றாம்.

விசேஷவுரை

அசுருத நிஷேத்தியத்தின் ப்ராப்தி மாத்திரத்தால் அதன் நிஷேதம் சம்பவித்தலின் அதன் உபலக்ஷகத் தன்மை நிஷேத பதங்கட்குப் பொருத்தமாம். பாரமார்த்திக ப்ரம்ம சொரூபமோ வேதமொன்றற்கே விஷயமாகலின் ப்ரமாணாந்தரத்தால் அதன் சித்தியின்றாம். ஆதலின் ப்ரம்மபரமான வேதவாக்கியங்கட்கு சுருதசொரூபத்தை போதித்தலாலேயே நிராகாங்க்ஷத் தன்மையுண்மையின் அவற்றின் உபலக்ஷியமாக உருவாந்தரமில்லையென்பது கருத்து. (324)

(அ) அற்றேல் கருமகாண்டத்தின்கண் நாநாசாகையின் கண்ணுள்ள இதிகருத்தவ்யங்கட்கு ப்ரதானத்தின் பர

தந்திரத் தன்மையுண்மையின் ப்ரதானத்தின் ப்ரயோகபலத்தால் அவற்றின் உபஸம்மாரம் (கிரஹணம்) பொருத்தமாம். பிரம்மத்தின்கண்ணே விதி நிஷேதபதங்கட்கு இதிகருத்தவ்யத் தன்மையின்மையின் அவற்றின் உபஸம்மாரம் எங்ஙனமாமென்றுசங்கித்து அங்ஙனமாயினும் அவைகட்கு பரமான்ம ஞானத்தைப் ப்ரயோஜனமாகவுடையதாந் தன்மையால் அறியத்தக்கப் ப்ரதானமாகிய அதன்கண் (அதனைக் குறித்து) குணமாகுந்தன்மை யுண்மையினாலும் குணங்கட்குக் குணியின் பரதந்திரத் தன்மையுண்மையினாலும் ப்ரதானமாயுள்ள அந்தக் குணியானது யாண்டு யாண்டு வினவப் ட்டதோ ஆண்டு ஆண்டு குணமாயுள்ள பதசமுதாயம் புஷ்கல (சம்பூர்ண) அதன் ஞானத்தின் உபயோகமாகக் கிரகிக்கத்தக்கதாம் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

गुणतया हि पदानि परात्मनो विधिनिषेधवचःस्ववतस्थिरे ।
गुणगणो गुणितन्त्रतया गुणी भवति यत्र हि तत्र भवत्यसौ ॥ ३२५ ॥

பதவுரை

परात्मनः गुणतया हि - பரமான்மாவிற்குக் குணமாகவே

विधिनिषेधवचःसु - விதிநிஷேத வாக்கியங்களில்

पदानि अवतस्थिरे - பதங்கள் நிலைபெற்றுள்ளன.

यत्र गुणी भवति - எவ்விடத்து குணியாகிய பிரதானம் இருக்கின்றதோ

तत्र हि असौ गुणगणः - அவ்விடத்திலேயே அந்தக் குண சமுதாயம்

गुणितन्त्रतया भवति - குணியின் அதீனமாயிருக்கின்றது.

குணமாக = விசேஷணார்த்தத்தைப் போதிப்பதாக. (325)

(அ) உபசம்மாரப் ப்ரகாரத்தை உபசம்மரிக்கின்றவராய் மீண்டும் சிஷ்யனைக்குறித்து வினவின் பொருட்டு அநுமதியைக் கொடுக்கின்றார் :—

विधिनिषेधवचःपरिमाणतस्तव मया कथितं नयवर्त्मना ।
यदपरं तव वस्तु बुभुत्सितं तदिह नः पुरतः प्रकटीकुरु ॥ ३२६ ॥

பதவுரை

विधिनिषेधवचः - விதிநிஷேத வாக்கியம்

नयवर्त्मना - நியாய மார்க்கத்தால்

परिमाणतः - அளவாக

तव मया कथितम् - உனக்கு என்னால் கூறப்பட்டது.

यदपरं वस्तु - இனி வேறே யாதொரு வஸ்து

तव बुभुत्सितम् -உனக்கு அறிய விரும்பப்பட்டதோ

तदिह - அதனை கண்டு

नः पुरतः - எமக்கு முன்பு

प्रकटीकुरु - வினவினால் பிரகடனஞ்செய். (326)

## அந்தரங்க பகிரங்க சாதனங்களை நிருபித்தல்

(அ) யதார்த்த ஞானத்தின் சமீபித்த சாதனத்தையும் தூரத்த சாதனத்தையும் பகுத்தறியுந் தன்மையென்று கூறப்பட்ட 3-வது சுலோகத்தின் நான்காவது பாதத்தின் பொருளை விஸ்தரித்தற்கு அதன் விஷயக வினவையாரம்பிக்கின்றார் :—

अन्तरङ्गबहिरङ्गसाधने भेदतः कथय तद्बुभुत्सितम् ।
ज्ञानजन्मन इदं जिघृक्षितं हेयमेतदिति चोपपत्तिभिः ॥ ३२७ ॥

பதவுரை

ज्ञानजन्मने - ஞானத்தினுற்பத்தியின் பொருட்டு

अन्तरङ्गबहिरङ्गसाधने - அந்தரங்க பகிரங்க சாதனங்களை

भेदतः कथय - வேறுபடுத்திக் கூறுவாய்.

तद्बुभुत्सितम् - அவ்வந்தரங்கம் முதலிய சாதனந்தான் அறிய விரும்பப்பட்டது.

அதனை யறியும் விருப்பம் வீணேயாமென்ற சங்கை ஞானத்தினுற்பத்தியின் பொருட்டு என்பதனால் நிவர்த்திக்கப்பட்டது.

इदं जिघृक्षितम् - இது கிரகிக்க இச்சிக்கப்பட்டது. அதாவது அநுஷ்டிக்கத்தக்கது.

एतद् हेयम् इति च - இது தள்ளத்தக்கது என்றிவ்வாறு போலியாக என்னால் யாதொன்றறியப் பட்டதோ அதனை

उपपत्तिभिः (कथय) - யுக்திகளால் கூறுவாயாக. (327)

(அ) காரியத்தன்மையால் சாதனம் உன்னால் அறியப் பட்டதா என்றும் ஆகாங்க்ஷையுண்டாக அதனையே விஸ்தரிக் கின்றார் :—

अन्तरङ्गमपवर्गकाङ्क्षिभिः कार्यमेव यतिभिः प्रयत्नतः ।
त्याज्यमेव बहिरङ्गसाधनं यत्नतः पत्तनभीरुभिर्भवेत् ॥ ३२८ ॥

பதவுரை

अपवर्गकाङ्क्षिभिः - ஞானத்தை விரும்புகின்றவரும்

पत्तनभीरुभिः - ஜனக்கூட்டத்தில் பயத்தையடைந்தவருமான

यतिभिः प्रयत्नतः - சன்னியாசிகளால் முயற்சித்து

अन्तरङ्गमेव कार्यम् - அந்தரங்க சாதனமே அநுஷ்டிக்கத் தக்கதாம்.

बहिरङ्गसाधनम् - பகிரங்க சாதனம்

यत्नतः त्याज्यमेव भवेत् - முயற்சித்துத் தள்ளத்தக்கதேயாம்.

(அ) வினவப்பட்ட சாதன சமுதாயம் சுருதி நியாயங் களினநுசாரமாக என்னால் சொல்லப்படுகின்றது உன்னாலும் சிரத்தாபூருவகம் கேட்கத்தக்கது என்று குரு கூறுகின்றார் :—

उच्यते शृणु विविच्य साधनं ज्ञानजन्मनि यदूचिवान्गुरुः ।
अन्तरङ्गबहिरङ्गभेदतः शब्दशक्तिमनुसृत्य वैदिकीम् ॥ ३२९ ॥

பதவுரை

उच्यते शृणु - உனது வினவிற்கு உத்தரம் கூறப்படுகின்றது. சாவதானனாய் கேட்பாயாக.

वैदिकीम् शब्दशक्तिम् - வைதிக சப்த சக்தியினை

अनुसृत्य - ஆசிரயித்து

गुरुः ज्ञानजन्मनि - வியாச பகவான் ஞானோற்பத்தியின் பொருட்டு

अन्तरङ्गबहिरङ्गभेदतः - அந்தரங்கம் பகிரங்கமென்னும் பேதத்தால்

यत् साधनं विविच्य ऊचिवान् - சாதனத்தைப் பிரித்துக் கூறியுள்ளார். இது பிரசித்தமாம். (329)

(அ) வைதிக சப்த சக்தியை யாசிரயித்து என்பதனை விஸ்தரிக்கின்றவராய் லக்ஷணத்தின் பேதத்தால் வினவிய சாதனத்தின் பேதத்தை தெரிசிப்பிக்கின்றார்:—

यच्छ्रुतं विविदिषोदयाय तत्सर्वमेव बहिरङ्गसाधनम् ।

अन्तरङ्गमवगच्छ तत्पुनर्यत्परावगतिसाधनं श्रुतम् ॥ ३३० ॥

பதவுரை

विविदिषोदयाय - பிரம்மஜிஞ்ஞாசையின் உற்பத்தியின் பொருட்டு

यत् श्रुतम् - யாதொரு யஞ்ஞாதி கேட்கப்பட்டதோ

तत् सर्वमेव - அவ்வெல்லாமுமே

बहिरङ्गसाधनम् - பகிரங்கசாதனமாம்.

परावगतिसाधनम् - பிரம்மசாக்ஷாத்காரத்திற்கேதுவாக

यत् श्रुतम् - யாதொரு சமம் முதலியது கேட்கப்பட்டதோ

तत्पुनः अन्तरङ्गम् अवगच्छ - அவ்வெல்லாவற்றைம் அந்தரங்கசாதனமாக அறிவாய்.

விசேஷவுரை

பரமான்மாவின் விவிதிஷையின் சாதனமாக யாதொன்று விதிக்கப்பட்டதோ அஃது தத்துவஞானத்தைக் குறித்து பஹிரங்க சாதனமாம். அதுவும்

"तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन"

"அவ்விவ்வான்மாவை வேதாத்தியயனத்தாலும் யஞ்ஞத்தாலும் தானத்தாலும் அதன் சாதனவடிவ தபசாலும், ப்ராமணர்கள் அறிய விரும்புகின்றனர்" என்னுஞ் சுருதியால் விதிக்கப்பட்ட நித்திய வேதாத்தியயன முதலியதுவாம் அது இந்த ஜன்மத்திலாவது சென்ற ஜன்மத்திலாவது விவிதிஷையின் நிமித்தமாக முன்னிருத்தலால் ஞானத்தைக் குறித்து தூரமாயிருத்தலின் பஹிரங்கசாதனமாம். யாதொன்று ப்ரம்மசாக்ஷாத்காரத்தை யுத்தேசித்தே விதிக்கப்பட்டதோ அது அந்தரங்க சாதனமாம். அதுவும்

तस्मादेवंविच्छान्तो दान्तः उपरतस्तितिक्षुः श्रद्धावित्तो भूत्वा आत्मन्येवात्मानं पश्येत्

ஆதலால் இங்ஙனமறிகின்றவன் சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தையாகிய இவைகளையுடைத்தானவனுகி ஆன்மாவின் கண்ணேயே ஆன்மாவை தெரிசிக்குக என தெரிசனத்தினுத்தேசத்தால் விதிக்கப்பட்ட சமமுதலியனவை யும், சுரோத்வ்ய என்பதாதி சுருதியால் விதிக்கப்பட்ட சிரவணுதியுமாம். அஃது விவிதிஷையினனந்தரமே ஞான உதய பரியந்தம் அநுட்டிக்கத்தக்கதாந்தன்மையினுல் சமீபமாயிருத் தலின் அந்தரங்கமாம். அவ்விரண்டு சாதனமும் கூறிய சுருதிப் பிரமாணத்தை யுடையதாம் என்பது பொருள். (330)

(அ) விவிதிஷை வாக்கியத்தால் சருவகருமங்கட்கும் சம்யோக ப்ருதக்தன்மையால் (வாக்கிய பேதத்தால்) விவிதிஷையின் சாதனத்தன்மை விதிக்கப்படுகின்றது என்னும் மதத்தின்கண் அலவகட்கு (அந்தரங்க பகிரங்க சாதனங்கட்கு) வேறு லக்ஷணத்தைக் கூறுகின்றவராய் பகிரங்கத்தன்மை முதலியவற்றினை வெளிப்படுத்துகின்றுர்:—

यद्धि कारकतयाऽवगम्यते दूरतस्तदिह साधनं धियः ।
अन्तरङ्गमखिलं तु तत्पुनर्व्यञ्जकं भवति यत्परात्मनः ॥ ३३१ ॥

பதவுரை

यद् हि कारकतया-யாதொன்று காரகமாக

अवगम्यते - சுருதிகளில் அறியப்படுகின்றதோ

तदिह - அது சாஸ்திரத்தின் கண்

धियः दूरतः साधनम् - ஞானத்தின் பகிரங்கசாதனமாம்

यत्पुनः परात्मनः -யாதொன்று பரமான்மாவின்

व्यञ्जकं भवति-வியஞ்சகமாகின்றதோ

तदखिलं तु-அச்சாதனமனைத்தும்

अन्तरङ्गम् - ஞானத்திற்கு அந்தரங்கமாம்

விசேஷவுரை

அதிருஷ்டவாயிலாகவே பயனை யுண்டாக்குவது காரகமாம். ஜன்மாந்தரத்திலுள்ள யஞ்ஞாதியும் அதிருஷ்டவாயிலாக விவிதிஷையை யுண்டுபண்ணுகின்றதாகி ஞானத்திற்கு ஏதுவாதலின் தூரத்திலுள்ளதாமாதலின் பகிரங்கமாம். திருஷ்டவாயிலாகவே தத்துவ ஞானத்தின் ஏது எதுவோ அது அபிவியஞ்சகமாம். சமம் முதலியவையும் சிரவணம் முதலியவையும் திருஷ்டப் ப்ரதிபந்த நிவர்த்திவாயிலாக தத்துவஞானத்தினேதுவாதலின் அவை பரமான்மாவின் அபிவியஞ்சகமாம். அது ஞானத்தின் சமீபமாயிருத்தலால் அந்தரங்கமாமென்பது பொருள். (331)

(அ) இங்ஙனம் அந்தரங்க பகிரங்க பாகுபாட்டினைக்கூறி சன்னியாசிகளால் அந்தரங்க சாதனம் அவசியம் அநுஷ்டிக்கத் தக்கது பகிரங்க சாதனமோ தள்ளத்தக்கது என்று யாதொன்று கூறப்பட்டதோ அதனை விபக்ஷத்தைப் பாதிக்கும் வாயிலால் உபபாதனஞ்செய்கின்றார்:—

कारकस्य करणेन तत्क्षणाद्भिक्षुरेष पतितो भवेद् यथा ।
व्यञ्जकस्य परिवर्जनात्तथा सद्य एव पतितो भवेदसौ ॥ ३३२ ॥

பதவுரை

कारकस्य करणेन – காரகமாகிய புறச்சாதனத்தை யநுஷ்டித்தலால்

तत्क्षणाद् - அதே க்ஷணத்தில்

एषः भिक्षुः - இச்சன்யாசியானவன்

यथा पतितो भवेत् तथा—எங்ஙனம் பதிதனுவனே அங்ஙனம்

व्यञ्जकस्य परिवर्जनात्- வியஞ்சகமாகிய உட்சாதனத்தை விடுதலால்

असौ सद्य एव पतितो भवेद् - உடனே சன்னியாசி பதிதனுவன்

விசேஷவுரை

யஞ்ஞாதிவடிவகாரகத்திற்கு அக்கினி பத்னி தனம் முதலியவற்றின் அபேக்ஷயிருத்தலினுல் சன்னியாசிக்கு तद्भूतस्य तु नातद्भावः அவ்வடிவமான (தியாகஞ்செய்த)வனுக்கு அதனின் வேற்று (பற்றுதல்) வடிவம் சரியன்ரும் என்பதாதியால் கூறப்பட்ட நியாயத்தால் அவற்றைச் சேகரித்தலினுல் பதிதத்தன்மையெங்ஙனமவசியமுண்டாமோ அங்ஙனம் வியஞ்சகமாகிய சிரவணுதியைச் செய்யாமையானும் அவனுக்கு அது (ப்ரஷ்டத்தன்மை) சமானமேயாம். 'अरुन्मुखान् यतीन्' 'त्वंपदार्थ-विवेकाय' ''ஞானமில்லாத சன்னியாசிகளை'' 'த்வம் பதார்த்த விவேகத்தின் பொருட்டு' என்பதாதி வசனத்தின் பிரமாணத் தன்மையால் என்பது பொருள். (332)

(அ) அற்றேல் ''வேதனத்தை விரும்புகின்றனர்'' என்னும் வாக்கியத்தின்கண் இச்சிக்கப்படுந்தன்மையால் வேதனமே பிரதானமாகப் பிரதீதியாகின்றது. அதனுல் யஞ்ஞாதிகருமங்கட்கு அதன் கண்ணேயே விநியோகம் அவ்வாக்கியத்தின்கண் விதிக்கப்படுகின்றது. அப்பிரதானமாயுள்ள வேதன விருப்பத்தின்கண் விநியோகமின்ரும். இவ்வாருகும்போது அவைகளில் முதலிற் கூறப்பட்ட பகிரங்க சாதனத்தின் லக்ஷணமின்மையினுலும் சமதமாதியிற்போன்று அந்தரங்க சாதனத்தின் லக்ஷணமுண்மையினுலும் கூறிய அந்தரங்க பகிரங்க வேற்றுமை பொருத்தமின்றியதாமென்னுமிடத்துக் கூறுகின்ருர் :—

प्रत्ययार्थविषयं हि कर्मणामुच्यते विविदिषेयुरित्यतः ।
न प्रकृत्यभिहितार्थवेदने वेदवाचि विनियोगशासनम् ॥३३३॥

பதவுரை

वेदवाचि - யஞ்ஞத்தால் அறிய விரும்புகின்றனர் என்பதாதி வேதவாக்கியத்தின் கண்

कर्मणाम् - யாகாதி கருமங்கட்கு

प्रत्ययार्थविषयम् - ஸன்பிரத்தியயத்தினர்த்தமான இச்சை யினை விஷயமாக

विनियोग शासनम् - விநியோக சாஸனம்

विविदिषेयुः इत्यतः - அறியவிரும்புகின்றன ரென்பதனால்

उच्यते - சொல்லப்படுகின்றது

ஸன்பிரத்தியயார்த்தத்தின்கண் கருமங்கட்கு விநியோகம் சுருதியினால் சாஸனஞ் செய்யப்படுவதாகக் காணப்படுகின்ற தென்பது பொருள்.

प्रकृत्यभिहितार्थ वेदने नहि - வித் என்னும் பகுதியாற் கூறப் பட்ட ஞானத்தின் கண் விநியோகம் சொல்லப்படுகின்றதில்லை (333)

(அ) பகுதிப் பொருளின்கண் கருமங்கட்கு விநியோக மின்றும் மற்றே விகுதிப் பொருளின்கண் விநியோகமா மென்பதன்கண் நியாயத்தினைத் தெரிசிப்பிக்கின்றார்:—

न प्रधानमपहाय वेदनेनान्वयं व्रजति कर्म साधनम् ।
सङ्गतिर्भवति वेदनेच्छया वेदनेन नतु कर्मणां क्वचित् ॥३३४॥

பதவுரை

प्रधानमपहाय - பிரதானமாகிய இச்சையைப் பரித்தியாகஞ் செய்து

कर्मसाधनम्—சாதனமாகிய யஞ்ஞாதிகருமம்

वेदने न अन्वयम् - ஞானத்தோடு சம்பந்தத்தை

न व्रजति - அடைகிறதில்லை. மற்றே

कर्मणां वेदनेच्छया - கருமங்கட்கு ஞானத்தினிச்சை யோடேயே

सङ्गतिर्भवति - சம்பந்தமாம்

क्वचित् न तु वेदनेन—ஓரிடத்தும் ஞானத்தோடே யன்றும்.

விசேஷவுரை

ஞானத்திற்கு இச்சிக்கப்படுந்தன்மையுண்மையால் அருத்தத்தால் பிரதானத்தன்மையுளது அங்ஙனமாயினும் அறிதற்கு விரும்புகின்றனர் என சத்தத்தால் பிரகிருதியின் அர்த்தமாகிய ஞானத்திற்கு விசேஷணத்தன்மையுண்மையாலும் பிரத்தியயத்தின் அர்த்தமாகிய இச்சைக்கு விசேஷியத்தன்மையுண்மையாலும் அவைகளில் குணப்பிரதான பாவம் (தன்மை) தோற்றுதலால் அவற்றில் பிரதானமாக அறியப்பட்ட இச்சையினை விட்டு குணமாக அறியப்பட்ட ஞானத்தோடு யஞ்ஞாதிகருமம் சாதனத்தன்மையால் அன்வயத்தையடைகிறதில்லை. மற்றோ அதற்கு பிரதானமாயுள்ள ஜிஞ்ஞாஸையோடேயே அவ்வாறு சம்பந்தமுண்டாதல் பொருத்தமாம். எப்படி இராஜபுருஷனைக்கொண்டுவா என்னும் சத்தத்தால் பிரதானமாக அறியப்பட்ட புருஷனோடேயே கொண்டுவருதல் கிரியை அன்வயத்தையடைகின்றது அர்த்தத்தால் பிரதானமாயுள்ளவனாயினும் இராஜாவோடு அன்வயத்தையடைகிறதில்லை அப்படிப் பிரகிருதத்தின்கண்ணும் யஞ்ஞாதிகருமங்கட்கு சத்தத்தால் பிரதானமாயுள்ள இச்சையோடேயே அன்வயமாம் குணமாயுள்ள ஞானத்தோடே அன்றும் என்பதுபொருள்.

(அ) அற்றேல் சாப்தப்பிரதானத்தன்மை ஞானத்தின் கண்ணும் சமமாம் எனின் அற்றன்றெனக் கூறுகின்றார்:—

न प्रधानमिह वेदनं भवेत्प्रत्ययार्थविषयां प्रधानताम् ।
उत्ससर्ज भगवान्निरंकुशं येन पाणिनिरलङ्घ्यशासनः ॥३३५॥

பதவுரை

येन अलङ्घ्यशासनः - யாதொரு காரணத்தினால் கடக்கத்தகாத சாசனத்தினையுடைய

भगवान् पाणिनिः - பாணினி பகவான்

प्रत्ययार्थविषयां प्रधानताम् -பிரத்தியயார்த்தத்தின் கண்ணே பிரதானத்தன்மையினை

निरंकुशं उत्ससर्ज - நிரங்குசமாய் சாமான்யமாக ஸர்வ பிரத்தியயார்த்தங்களிலும் அறிவித்தனர் (அக்காரணத்தினால்)

इह वेदनम् - ஈண்டு ஞானமானது

प्रधानं न भवेत् - பிரதானமாகாது.

விசேஷவுரை

பாணினிமஹரிஷியானவர் எல்லாவிடங்களிலும் பகுதியின் மேல் விகுதியினை அர்த்த விசேஷத்தின்கண் விதிக்கின்றவராய் விகுதிப்பொருளிற்குப் பகுதிப்பொருளை யபேக்ஷித்து பிரதானத் தன்மை சூசிப்பிக்கின்றார். காத்தியாயன மஹரிஷியாலும் அஃது கூறப்பட்டுள்ளது. 'प्रकृतिप्रत्ययौ प्रत्ययार्थं सहब्रूतः प्राधान्येन' பகுதிவிகுதிகள் சேர்ந்து விகுதியின் பொருளை பிரதானமாகக் கூறுகின்றன'' என. ஆதலால் ஞானத்திற்கு சாப்த (சப்தத் தால்) பிரதானத்தன்மை இன்றென்பது பொருள். (335)

(அ) அங்ஙனமாயினும் சாமான்யமாகியவதற்கு (விகுதியி னர்த்தத்திற்கு) சன்விகுதியின் அர்த்தத்தில் அபவாதமிருத்த லால் மாறுபாடேயாமென்றுசங்கித்து நிரங்குச மென்பதனால் சூசிப்பிக்கப்பட்ட அபவாதத்தின் அபாவத்தினை விஸ்தரிக் கின்றார்:—

प्रत्यये सनि न चापवादकं किंचिदप्युदितवानसौ मुनिः ।
येन तत्र गुणभावमुद्वहेत्प्रत्ययाभिहितमर्थवस्तु नः ॥ ३३६ ॥

பதவுரை

तत्र - அறியவிரும்புகின்றனர் என்னும் பதத்தின் கண்

सनि प्रत्यये- ஸன்விகுதியினர்த்தத்தின் கண்

असौ मुनिः नः - பாணினி மகரிஷி நம்மைக்குறித்து

अपवादकम् - அபவாதத்தினை

किंचिदपि न च उदितवान् - சொற்பமும் கூறினாரில்லை

येन प्रत्ययाभिहितमर्थवस्तु - எதனால் விகுதியினாற் கூறப்பட்ட இச்சையாகிய வஸ்து

गुणभावम् उद्वहेत् -குணத்தன்மையினை வகிக்கும் 336

(அ) அற்றேல் धातोः कर्मणः समानकर्तृकादिच्छायां वा (இச்சையின் கருமமும் (செயப்படுபொருளும்) இச்சையின்

சமான கருத்தாவினையுடையதுமான தாதுவினின்றும் இச்சைப் பொருளில் ஸன் பிரத்தியயம் வரட்டும்) என்னுஞ் சூத்திரத்தில் பகுதிப் பொருளிற்கு ஸன்விகுதியின் பொருளினைக்குறித்து கருமத்தன்மையால் பிரதானத்தன்மையினைக் கூறினமையின் அபவாதம் கூறவில்லை யென்பது அசித்தமா மென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

धातोः कर्मण इत्युवाच भगवान्यत्पाणिनिस्तत्पुन-
र्धात्वर्थस्य न वेदयत्यभिमतं प्राधान्यमायुष्मतः ।
किं त्वार्थं न तु शब्दगम्यमवदत्तेनापि तद्योक्ष्यते
नोत्सर्गस्य विना निमित्तमपरं संकोचनं युज्यते ॥ ३३७ ॥

பதவுரை

पाणिनिः भगवान् -பாணினி பகவானனவர்

धातोः कर्मणः इति - இச்சையின் கருமமாகிய தாதுவில் நின்றும் என்று

यदुवाच तत्पुनः - யாதொன்றைக் கூறினரோ அஃது

आयुष्मतः अभिमतम् - நீண்ட வாயுளையுடையவனது சம்மதமான அதாவது இதரான்வயத்தின் பிரயோஜகமாக விச்சிக்கப்பட்ட

धात्वर्थस्य प्राधान्यम्-ஞானத்தின் பிரதானத் தன்மையினை

न वेदयति–அறிவிக்கின்றதில்லை

அற்றேல் கர்மத்தன்மை விசேஷணத்தால் அதன்கண் பிரதானத்தன்மை தோற்றுகின்றது ஆதலின் பிரதானத்தோடு இதரான்வயம் பொருத்தமாம் என்றுசங்கித்து சப்தப் பிரதானத்தன்மை அன்வயத்திற்குப் பிரயோஜகமாதலினலும் ஈண்டு அஃது இன்மையினலும், அங்ஙனமன்று என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

किं तु आर्थम् - ஆனல் பாணினி மஹரிஷியாற் சொல்லப் பட்ட பிரதானத் தன்மை அர்த்தத்தாலாம் அதாவது இச்சிக்கப்படுந்தன்மை சாமர்த்தியத்தால் அடைவுற்றது.

न तु शब्दगम्यम् - சப்தத்தாலடைவுற்றதன்றும்

அற்றேல் ஞானத்தின் பிரதானத் தன்மை தோற்றுமாயின் அஃது சாப்தமேனுகாது என்றுசங்கித்து அதன் (பிரதானத் தன்மையின்) பிரதீதி வேறு பிரகாரத்தால் பொருந்தும்போது அபவாதமின்றி பிரத்தியயார்த்த பிரதானத்தன்மை விஷயக சாமான்யத்தின சங்கோசம் பொருந்தாமையின் அதற்கு சப்தத்தன்மை கற்பிக்கத் தக்கதன்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றுர்.

तेन अपि - ஆர்த்திகப் பிரதானத் தன்மையாலும்

सत् योक्ष्यते - கருமத்வத்தினதீனமான பிரதானத்தன்மை பொருத்தமாம்

उत्सर्गस्य अपरं निमित्तं विना-சாமானியத்திற்குப் பாதகமின்றி

संकोचनं न युज्यते - சங்கோசம் பொருத்தமின்றும் (337)

(அ) அற்றேல் சூத்திரத்தின் கண்ணுள்ள கரும பதத்தால் பகுதிப் பொருளிற்கு (ஞானத்திற்கு) சாத்தத்தன்மை வடிவ பிரதானத்தன்மையே தோற்றுகின்றது இச்சைக்கு விஷயமாந்தன்மை வடிவ கருமத்தன்மைக்குப் பிரதானுர்த்தத் தன்மையுண்மையின் என்றுசங்கித்து அதற்கு சாத்தத்தன்மை வடிவ விசேஷ சூசகம் ஈண்டு யாதொன்றுமின்மையின் அங்ஙனமன்றெனக்கூறுகின்றுர்:—

धातोः कर्मण इत्युदीरणमिदं साधारणं दृश्यते
शब्दार्थत्वविशेषसूचकतया नह्यत्र सूत्रे पदम् ।
धात्वर्थस्यतु कर्मतावचनमत्रोच्चारितं केवलं
तत्त्वार्थेप्युपपद्यमानमधुना नोत्सर्गपीडाकरम् ॥ ३३८ ॥

பதவுரை

धातोः कर्मणः इत्युदीरणमिदम् -இச்சையின் கருமமாகிய தாது வினின்றும் ஸன்விகுதிவருக என்னும் பாணினி மகரிஷியின் கூற்று

साधारणं दृश्यते - பொதுவாகக் காணப்படுகின்றது

शाब्दार्थत्वविशेष सूचकतया - கரும வடிவ ஞானத்தின் கண் சாத்தத்தன்மை ஆர்த்தத்தன்மை யாகிய விசேஷத்தைக் குறிப்பிப் பதாக

अत्र सूत्रे न हि पदम्-இச்சூத்திரத்தின் கண் யாதொருபதமு மின்ரும்

சாத்தத்தன்மை-சத்தத்தாற்பெறுதி, ஆர்த்தத்தன்மை-அர்த்தத்தாற்பெறுதி, ஞானத்திற்கு ஆர்த்தத்தன்மை வடிவ விசேஷத்திணக் குறிப்பிக்கும் பதத்தினபாவத்திணக் கூறினது திருஷ்டாந்தத்தின் பொருட்டாம். குறிப்பிடுகின்ற பதத்தின அபாவத்திணயே விஸ்தரிக்கின்ருர்.

धात्वर्थस्य कर्मतावचनं तु - பகுதிப்பொருளிற்குக் கருமத் தன்மையைக் கூறும் வசனமே

अत्र केवलम् उच्चारितम्- இச்சூத்திரத்தின் கண் கேவலம் உச்சரிக்கப்பட்டுளது

तत्तु-கருமத்தன்மை வசனம்

அங்ஙனமாயினும் அதற்கு ஆர்த்திகத்தன்மையிணை யங்கீகரித்தல் எக்காரணத்திஞல் என்ருசங்கித்து விகுதிப்பொருளிற்குப் பிரதானத்தன்மையிணை விஷயஞ் செய்கின்ற சாமான்ய வசனத்திற்குப் பீடையைப் பரிகரித்தற்பொருட்டு அங்ஙன மங்கீகரித்ததாமென்று கூறுகின்ருர்.

तत्तु—கருமத்தன்மை வசனம்

आर्थेऽप्युपपद्यमानम्-ஆர்த்திகத் (அர்த்தத்தாற் சித்தித்த) தின் கண்ணும் பொருந்துகின்றதாகி

अधुना उत्सर्गपीडाकरं न - இப்போது சாமானியத்திணை பாதிப்பதின்ரும். (338)

(அ) அப்படியாஞல் இச்சையின் பிரதானத்தன்மையும் சாத்தமன்ரும் (சாத்தம்-சத்தத்தாற் சித்தித்தது) அதன் சாதகமின்மையின் என்ருசங்கித்து உத்ஸர்க்க (சாமானிய)த்தால் அதன் சித்தியிணை யபிப்பிராயப்பட்டு ஈண்டும் அதன் சாதகமுளதெனக் கூறுகின்ருர் :—

इच्छायामिति सूत्रकारवचनं प्राधान्यपक्षे भवे-
दिच्छार्थस्य समञ्जसं न खलु तत्सन्प्रत्ययार्थे गुणे ।
धात्वर्थे ननु सन्भवेदिति वदेदिच्छा गुणश्चेद्भवे-
दिच्छायामिति वक्ति तेन वदति प्राधान्यमिच्छागतम् ॥

பதவுரை

इच्छार्थस्य प्राधान्यपक्षे-இச்சை வடிவ விகுதியின் அர்த்தம் பிரதானமாம் என்னும் பக்ஷத்தில்

इच्छायामिति सूत्रकारवचनम् - இச்சையின் கண் என்னும் சூத்திரகாரருடைய வசனம்

समञ्जसम् भवेत् - பொருத்தமாகும்

सन्प्रत्ययार्थे गुणे - சன்விகுதியின் அர்த்தமாகிய விச்சை அப்ரதானமாகுங்கால்

तत् (समञ्जसं) न खलु - சூத்திரக்காரர் வசனம் பொருத்த மாகாது

இச்சையின்கண் என்னும் ஏழாம் வேற்றுமையினுல் அதற்கு சன் விகுதியின் விஷயத் தன்மையைக் கூறுதலினுல் அதுவே பிரதானமாம் என்பது அவரது அபிமதமாம் என பெறப் படுகின்றதென்பது பொருள். இச்சையை குணமாகவுடைய பகுதிப்பொருளே பிரதானமாக விவக்ஷிக்கப்படுமாயின் அப் போது சூத்திரம் வேறு பிரகாரமாம் எனக் கூறுகின்ருர்.

इच्छा गुणः भवेत् चेत्-இச்சையானது குணமாக (அப்ரதான மாக) ஆகுமாயின்

धात्वर्थे ननु सन्भवेत् - பகுதிப்பொருளின் கண்ணேயே ஸன் விகுதி வருக

इति वदेत्-என்று கூறுவார்

அஃது எனக்கு உடன்பாடாமென்னுஞ்சங்கையினைப் பரிகரிக்கின்றவராய் முடிக்கின்ருர்.

इच्छायाम् इति वक्ति - சூத்திரக்காரர் இச்சையின் கண் ஸன்விகுதி வருக எனக்கூறுகின்றனர்

तेन इच्छागतं प्राधान्यं वदति - அதனால் இச்சையின் கண் பிரதானத்தன்மையைக் கூறுகின்றனர். (339)

(அ) இச்சையின்கண் பிரதானந் தன்மை சுருதிசித்தமாம் எனச் சாதிக்கப்பட்டது. அதன் பயனையிப்போது கூறுகின்றார் :—

तस्मात्कर्म समस्तमेव तु भवेदिच्छाजनेः साधनं
शास्त्रेणोक्तमतः समस्तमपि तद्यत्नेन हेयं यतेः ।
द्रष्टव्यत्वमनूद्य साधनतया यत्तत्प्रतीचः श्रुतं
वेदान्तश्रवणादिकं भवति तत्कर्तव्यमावश्यकम् ॥ ३४० ॥

பதவுரை

तस्मात्- அறிய விரும்புகின்றனர் என்னும் வாக்கியத்தின் கண் விகுதியின் அர்த்தமாய விச்சை பிரதானமாகக்கேட்கப் படுதலாலும் பிரதான பதார்த்தத்தினங்கமாக இதர பதார்த்தங்கள் அன்வயமாதலாலும்

शास्त्रेण उक्तम् -சாஸ்த்திரத்தால் கூறப்பட்ட

समस्तमेव तु कर्म - வேதானுவசனம் முதலிய கருமங்களனைத்துமே

इच्छाजनेः साधनं भवेत् -விவிதிஷையினுற்பத்தியில் சாதனமாம்

இச்சிக்கப்படுகின்ற ஞானத்தின் சாதனமன்றுமென்பது இச்சுருதியின் வலியால் சித்தித்ததென்பது பொருள். இவ்வாறுகவே விவேக வைராக்யாதிசம்பன்னனும் உற்பன்னமான விவிதிஷையோடு கூடினவனுமான சன்னியாசிக்குப் பிரயோஜனமின்மையினாலும் பிரத்தியவாயத்திற்கேதுவாதலாலும் பஹிரங்க சாதனம் ஸர்வப்பிரகாரத்தாலும் தள்ளத்தக்கதாம் எனத் திரண்ட பொருளைக் கூறுகின்றார் :—

अतः तत्समस्तमपि - ஞானத்திற்கு ஏதுவாகாமையின் அக்கருமங்கள் அனைத்தும்

यतेः यत्नेन हेयम् - ஸன்னியாசிக்கு பிரயத்தனத்தால் விடத்தக்கதாம்

அங்ஙனமாயின் அவனால் அநுட்டிக்கத்தக்கது யாது என்னும் ஆகாங்க்ஷையுண்டாக முற்கூறிய அந்தரங்க சாதனமே ஆவஸ்யகமாதலாலும் அவனுக்கு அபிலஷிய (இச்சைக்கு விஷயமான) சாதனமாதலாலும் அநுட்டிக்கத் தக்கதாமெனக் கூறுகின்றார்.

प्रतीचः द्रष्टव्यत्वमनूद्य -பிரத்தியகான்மா தெரிசிக்கத்தக்கது என்பதனை யநுவாதஞ்செய்து

तत्साधनतया - தெரிசனத்தின் சாதனமாக

यत् वेदान्तश्रवणादि कं श्रुतं भवति - யாதொரு வேதாந்த சிரவணாதி கேட்கப்பட்டதோ

तत् आवश्यकं कर्तव्यम् - அஃது அவசியம் அனுஷ்டிக்கத் தக்கதாம்

விசேஷவுரை

ஆன்மா சிரவணஞ்செய்யத்தக்கது என்பது முதலிய வசனத்தால் கேட்கப்பட்ட சிரவணாதியும் சாந்தன் தாந்தன் (சமமுடையவன் தமமுடையவன்) என்பது முதலிய வசனத்தால் கேட்கப்பட்ட சமம் முதலியதும் அவசியம் அநுட்டிக்கத் தக்கதாம். (340)

(அ) அற்றேல் ''வேதாந்தங்களாலுண்டான ஞானத்தினால் நன்றாக நிச்சயிக்கப்பட்ட பிரம்மவடிவ அர்த்தத்தினை யுடையவராய்'' என்பது முதலிய வசனத்தால் ஆன்ம தத்துவ நிச்சயத்தின்கண் வேதாந்தங்கட்கு ஏதுத்தன்மை யறியப்படுதலால் அவைகட்குக் கருத்தவ்யத் தன்மை (அநுஷ்டிக்கத்தக்கதாந்தன்மை) யின்மையானும் தன்னாற் பிராமாண்யமுண்மையானும் இதி கருத்தவ்ய (செய்யும் பிரகார)த்தின் அபேக்ஷயின்மையால் யஞ்ஞம் முதலிய வற்றிற்கும் சமம் முதலியவற்றோடுகூடிய சிரவணாதிகட்கும்

வேதாந்தத்தினை எதுவாகவுடைய ஞானத்தின் சாதனத் தன்மையேயின்றும். ஆதலின் அவற்றில் அந்தரங்கத் தன்மை முதலிய வேற்றுமையின் சித்தியெங்ஙனமாம் என்றுசங்கித்து வாஸ்தவந்தான் வேதாந்த வாக்கியமே நிரபேக்ஷமாய் ஞானத்திற்குக் காரணமாம். அங்ஙனமாயினும் பிரதிபந்தத்தை நீக்குந்தன்மையால் இவை (சிரவணாதி)கட்கும் அதன்கண் உபயோகமிருத்தலால் சாதனத் தன்மை முதலியவற்றின் பிரதிபாதனம் பொருத்தமாமெனக் கூறுகின்றார்:—

वेदान्तवाक्यमिह कारणमात्मबोधे हेत्वन्तराणि परिपन्थिनिबर्हणानि ।
यज्ञादिकानि दुरितं क्षपयन्ति बुद्धेस्तत्त्वंपदार्थविषयं तम उत्तराणि ॥

பதவுரை

इह आत्मबोधे -ஈண்டு ஆன்ம ஞானத்தின் கண்

वेदान्तवाक्यं कारणम् -தத்துவமஸி முதலிய மஹாவாக்கியமே காரணமாம்

हेत्वन्तराणि – மற்றைய காரணங்களோ

परिपन्थिनिबर्हणानि – பிரதிபந்தத்தை நிவர்த்தி செய்வனவாம்

அங்ஙனமாயினும் அவைகளில் அந்தரங்கத் தன்மை முதலிய வேற்றுமை எங்ஙனமாமென்றுசங்கித்து அதன்கண் விசேஷத்தினைக் கூறுகின்றார்.

यज्ञादिकानि –யஞ்ஞம் தானம் தபசு முதலியவை

बुद्धेः दुरितं क्षपयन्ति – அந்தக்கரணத்தின் கண்ணுள்ள பாபத்தை நாசஞ் செய்கின்றன

उत्तराणि -சிரவண முதலியவை

तत्त्वंपदार्थविषयम् –தத்துவம் பதார்த்தத்தினை விஷயஞ் செய்கின்ற

तमः (क्षपयन्ति)–அஞ்ஞானத்தை நாசஞ் செய்கின்றன,

## விசேஷவுரை

கருமங்கள் விவிதிஷையின்பொருட்டுக் கேட்கப்படுதலால் விவிதிஷை விஷய ஸௌந்தர்ய ஞானத்தாலடையத்தக்க தாதலால் நேரே விவிதிஷைக்குக் கருமஜந்நியத் தன்மை பொருந்தாமையின் அதன் பிரதிபந்தகமான பாபத்வம்ஸம்-விவேகம் வைராக்கியம் இவற்றின் வாயிலாக அவைகட்கு விவிதிஷையின்கண் உபயோகமிருத்தலால் பஹிரங்கத் தன்மையாம். விசிஷ்ட அதிகாரியினைக் கருத்தாவாக வுடையதும் விவிதிஷையினனந்தரமுண்டாவதுமான சிரவ-ணாதிகட்கோ தத்துவம்பதார்த்தத்தின் அஞ்ஞான நிவர்த்தி வாயிலாக இச்சிக்கப்படுகின்ற ஞானத்தின்கண்ணேயே உபயோகமிருத்தலால் அந்தரங்கத் தன்மையாம் என்பது பொருள். (341)

(அ) அற்றேல் அக்ஞானம் ஏகமேயாம். அதுவும் சுத்த பிரத்யகபின்ன அத்துவிதீய பிரம்மத்தை விஷயஞ்செய்வதாம். வாக்கியார்த்த ஞானத்தாலேயே அதன் நிவர்த்தியாம் என்று முன்பு கூறப்பட்டது. அதனால் தத்துவம் பதார்த்தத்தின் அஞ்ஞான நிவர்த்தி சாத்தியமாம் என்பது பொருத்தமன்றும் என்றுசங்கித்து நாநாவித்தையினைக் கற்பிக்கின்ற மந்தபுத்தியினையுடைய மனிதரின் திருஷ்டியை யனுசரித்து இது கூறப்பட்டது. வாஸ்தவமாக அவித்தை பூர்ண பிரம்மத்தை விஷயஞ்செய்வதாய் ஏகமேயாம். அதனை நிவர்த்திசெய்கின்ற வித்தையும் ஏகமேயாம் என மிக்க அறிவினையுடைய புருடரது சம்மதமாமெனக் கூறுகின்றார்:—

तत्त्वंपदार्थविषयं तम इत्यपीदमर्वागवस्थजनदृष्टिमपेक्ष्य गीतम् ।
अज्ञानमुत्तमदृशां पुनरेकमेव संसारमूलमपवर्गफला च विद्या ॥

## பதவுரை

तत्त्वंपदार्थविषयम् — தத்துவம் பதார்த்தத்தினை விஷயஞ் செய்கின்ற

तम इत्यपीदम् — அஞ்ஞானத்தினை நாசஞ்செய்கின்றன என்னுமிதுவும்

अर्वागवस्थजनदृष्टिमपेक्ष्य गीतम् - பதார்த்த தத்துவத்தினை நன்கு அறியாத மனிதர்களின் திருஷ்டியினை யபேக்ஷித்துக்கூறப்பட்டது.

उत्तमदृशां पुनः -பதார்த்த தத்துவத்தினை நன்கு அறிந்த புருடரது புத்தியினை யபேக்ஷித்து

अज्ञानम् एकमेव - அஞ்ஞானம் ஒன்றேயாம்

संसारमूलम्-அதுவே சம்சாரத்திற்குக் காரணமாம்

अपवर्गफला च विद्या-மோக்ஷத்தைப் பயனாகவுடைய ஞானமும் ஒன்றேயாம். (342)

(அ) அப்படியானால் இம்மதத்தின்கண் சிரவணாதிக்குப் பயன் யாதென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

अज्ञानसंशयविपर्ययरूपकाणि ब्रह्मात्मबुद्धिजनन प्रतिबन्धकानि ।
तत्त्वंपदार्थविषयाणि निवर्तयन्ति ह्यावृत्तिमन्ति मननश्रवणादिकानि॥

பதவுரை

तत्त्वंपदार्थविषयाणि – தத்துவம் பதார்த்தத்தை விஷயஞ் செய்கின்றவையும்.

ब्रह्मात्मबुद्धिजननप्रतिबन्धकानि -பிரத்தியகபின்ன பிரம்ம ஞானத்தினுற்பத்தியில் பிரதிபந்தத்தைச் செய்கின்றவையுமான

अज्ञानसंशयविपर्ययरूपकाणि - அஞ்ஞான சந்தேக விபரீதங்களை

आवृत्तिमन्ति - மீண்டும் மீண்டும் அப்பியசிக்கப்பட்ட

मननश्रवणादिकानि - வேதாந்த சிரவணமனன நிதித்தியாசனங்கள்

निवर्तयन्ति - நிவர்த்திக்கின்றன.

## விசேஷவுரை

விசேஷ தெரிசனத்தின் அபாவம் அஞ்ஞானசத்தத்தின் பொருளாம். சிரவணம் வேதாந்தத்தின் தாற்பரிய கோசர அஞ்ஞான சமுசயாதிப் பிரதிபந்தத்தினை நிவர்த்திக்கின்றது. மனனமோ பிறமதத்தின் விரோத ஞானத்தினதீனமான பிரமேயாசம்பாவனாதி வடிவ பிரதிபந்தத்தினை நிவர்த்திக்கின்றது. நிதித்யாசனமோ சித்தத்தின் சஞ்சலத் தன்மை முதலிய பிரதிபந்தத்தினை நிவர்த்திக்கின்றது என இங்ஙனம் பேதத்தையுணர்க. திருஷ்டபயனையுடையதாந்தன்மையினாலேயே அவைகட்கு அவஹனனாதிபோன்று பயனுதயமாகும் பரியந்தம் ஆவிருத்தியும் செய்யத்தக்கதாமென்னுங்கருத்தால் அப்பியசிக்கப்பட்ட எனப்பட்டது. (343)

(அ) சிரவணாதிகட்குக் கூறிய பிரதிபந்த நிவர்த்தகத்துவ யோக்கியதையை அர்த்தத்தால அறிவிக்கின்றவராய் அவற்றின் சொருபத்தை ஒன்றரைச் சுலோகத்தால் கூறுகின்றார்:—

शब्दशक्तिविषयं निरूपणं युक्तितः श्रवणमुच्यते बुधैः ।
वस्तुवृत्तविषयं निरूपणं युक्तितो मननमित्युदीर्यते ॥ ३४४ ॥

## பதவுரை

शब्दशक्तिविषयम् - சப்தத்தின் சக்திவிஷயத்தினை

युक्तितः निरूपणम् - யுக்தியினால் விசாரித்தல்

बुधैः श्रवणम् उच्यते - வித்துவான்களால் சிரவணமென்று சொல்லப்படுகின்றது

वस्तु वृत्तविषयम् - தத்துவம்பத லக்ஷிய வஸ்துவின் ஐக்கிய விஷயத்தினை

युक्तितः निरूपणम्-யுக்தியினால் விசாரித்தல்

मननम् इति उदीर्यते - மனனமென்று சொல்லப்படுகின்றது.

## விசேஷவுரை

சக்தியென்னும் சப்தத்தால் ஈண்டு அதிகாரியால் அறிய விரும்பப்பட்ட வஸ்துவினையறிவிக்கும். சாமர்த்திய வடிவ வாக்கியத்தின்கண்ணுள்ள தாற்பரியம் கூறப்படுகின்றது. (சாமர்த்திய வடிவ தாற்பரியமெனக் கூட்டுக.) பதத்தின் கண்ணுள்ள சக்திகள் உலகின்கண்ணேயறியப்பட்டமையின் யுக்தியினுல் விசாரத்தையபேக்ஷியாமையின் விசாரம் பயனுடையதாகும்பொருட்டும் அபௌருஷேய வேதத்தின்கண் புருஷனது அபிப்பிராய வடிவ தாற்பரியத்தை நிராகரிக்கும் பொருட்டும் ஆண்டு சக்தி சப்தம் அத்தகைய தாற்பரிய விஷயகமாக பிரயோகிக்கப்பட்டது. தாற்பரிய விஷயத்தை விசாரித்தலாவது அதன் நிச்சயத்திற்கனுகூலமான மானஸ வியாபார வடிவமாய் உபக்கிரம உபசம்மாராதி விஷயக தர்க்க சஹிதமாயிருப்பது. அது சிரவணமென்று சொல்லப்படு கின்றது. அதாவது அதற்கு தாற்பரிய நிர்ணய வாயிலாக அதனஞ்ஞான சம்சயாதியினை நிவர்த்திக்குந்தன்மை பொருத்தமாம் என்பது கருத்து. தத்துவம்பதவைக்கிய விஷயத்தினை யுக்தியால் விசாரித்தலாவது பேதாதிப் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையை விஷயஞ்செய்கின்ற திருசியத்துவாதியின் அனுபபத்தி வடிவ யுக்திகளால் அதன் அத்துவிதீயத்வ சம்பாவனையின் ஞானத்திற்கு ஏதுவான மானஸ வியாபாரமாம். அது மனனமென்று சொல்லப்படு கின்றது. அது அதனசம்பாவனை முதலியவற்றின் நிவர்த்தக மாமென்பது பொருள். (344)

(அ) நிதித்யாசனத்தின் சொருபத்தினைக் கூறுகின்றுர்:-

चेतसस्तु चितिमात्रशेषता ध्यानमित्यभिवदन्ति वैदिकाः ।
अन्तरङ्गमिदमित्थमीरितं तत्कुरुष्व परमात्मबुद्धये ॥ ३४५ ॥

## பதவுரை

चेतसस्तु - வாக்கியத்தாலுண்டான புத்தி விருத்திக்கு

चितिमात्रशेषता - பிரம்மமாத்திரமாக நிலைத்திருக்குந்தன்மை

वैदिकाः ध्यानमिति अभिवदन्ति - வைதிகர்கள் நிதித்யாசன மென்று கூறுகின்றனர்.

ஸர்வஜட விஷயாகாரத் தன்மையின் தியாகத்தால் சித்தம் சிதேகரச ஆன்மாகாரமாய் நிலைத்திருத்தல் தியானமாம். அதாவது நிதித்யாசனமாம். அதனால் சித்தத்திற்கு தத்துவசாக்ஷாற்காரத்தின் அயோக்கியதை வடிவ சித்தத்தின் சஞ்சலத்தன்மையின் அதீனமான பிரதிபந்தம் நிவர்த்தியாகின்றது. அதனால் சிரவணாதிகட்கு முற்கூறிய பிரதிபந்தத்தின் நிவர்த்தகத்தன்மை பொருத்தமாமென்பது கருத்து. இங்ஙனம் சிரவணாதிகட்குப் பயனுடையதாந் தன்மையைச் சாதித்து அதன் நிருபணத்தை முடிக்கின்றவராய் திரண்டபொருளைக் கூறுகின்றார்.

इत्थमन्तरङ्गमिदमीरितम्-இங்ஙனம் அந்தரங்க சாதனம் கூறப்பட்டது

परमात्मबुद्धये - பிரம்மசாக்ஷாற்காரத்தின் பொருட்டு

तत् कुरुष्व - அதனை யநுஷ்டிப்பாயாக.

*விசேஷவுரை*

பிரதிபந்தத்தின் நிவர்த்தியின்றி பிரம்ம சாக்ஷாற்காரம் பொருந்தாமையின் அதனை விரும்பும் புருடனால் அதனை நிவர்த்திக்கின்ற சிரவணாதி அவசியம் அநுஷ்டிக்கத்தக்கதாமென்பது பொருள். (345)

(அ) முன்பு சிரவணாதி போன்று அநுஷ்டிக்கத்தக்க நிதித்தியாசனபதத்தின் அர்த்தம் கூறப்பட்டது இப்போது வார்த்திகக்காரரால் கூறப்பட்ட அர்த்தாந்தரத்தைக் கூறுகின்றார் :—

श्रवणमननबुद्ध्योर्जातयोर्यत्फलं तन्निपुणमतिभिरुच्चैरुच्यते दर्शनाय।
अनुभवनविहीना यैवमेवेति बुद्धिः श्रुतमननसमाप्तौ तन्निदिध्यासनं हि॥

பதவுரை

दर्शनाय जातयोः-ஆன்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டு ஆதர பூர்வகம் நிரந்தரமனுஷ்டிக்கப்பட்ட

श्रवणमननबुद्ध्योः - சிரவணமனன வடிவ ஞானங்கட்கு

यत् फलं तत् - யாதொரு ஆந்தராளிக பயனுண்டோ அஃது

निपुणमतिभिः- குசல புத்தியினையுடைய வார்த்திககாரரால்

उच्चैः निदिध्यासनमुच्यते - தாற்பரியத்தால் நிதித்தியாசன மென்று சொல்லப்படுகின்றது.

அவ்வாந்தராளிக பயனையே விஸ்தரிக்கின்றார்.

श्रुतमननसमाप्तौ - கூறிய ரீதியால் சிரவண மனனங்கள் பூர்த்தியாகுங்கால்

अनुभवनविहीना - பிரம்மான்மத் தன்மையின் அபரோக்ஷத் தன்மையற்றதாய்

एवमेव इति या बुद्धिः -நான் பிரம்மமே என்னும் வடிவின தாய் நிச்சயான்மக யாதொரு ஞானமுண்டோ

तत् निदिध्यासनं हि - அவற்றின் பயனாய அது நிதித்யாசன மென்று சொல்லப்படுகின்றது.

விசேஷவுரை

மூலத்திலுள்ள ஹி சப்தம் அவர் கூறிய யுக்தியை சூசிப் பிக்கும் பொருட்டு. அவ்யுக்தி யிதுவாம் " ஆன்மா தெரிசிக்கத் தக்கது சிரவணஞ் செய்யத்தக்கது மனனஞ் செய்யத்தக்கது நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது " என்று கூறப்பெற்ற தெரிசனம் முதலியவையே " ஓ மைத்திரேயி, ஆன்மாவின் தெரிசனத்தால் சிரவணத்தால் மனனத்தால் விஞ்ஞானத் தால்" என்னுஞ் சுருதியின்கண் அநுவாதஞ் செய்யப்படு கின்றன. ஆண்டு நிதித்தியாசனத்தை விஞ்ஞான பதத்தால் அநுவாதம் செய்தலின் அஃது தியானமன்றும் மற்றே கூறப் பெற்ற ஆன்ம நிர்ணயஞானமேயாம். விஞ்ஞானபதம் நிர்ணய ஞானத்தின்கண் ரூடமாதலின் நிதித்தியாசன பதத்திற்கு வேறிடத்தில் தியானத்தின்கண் பிரயோகம் காணப்படாமை யின் தியானத்தின்கண் விஞ்ஞான பதத்திற்கு ரூடியைக் கற்பிக்குமேதுவின்மையின். பிரகிருதவாக்கியத்தின்கண்ணே விஞ்ஞானபதத்தால் அநுவதித்தலாகிய பலத்தினால் பிரசித்த விஞ்ஞானமே நிதித்தியாசனமென நிச்சயிக்கப்படுகின்றது என்க. (346)

(அ) அங்ஙனமாயினும் "ஆன்மாவை ஓம் என்றிங்ஙனந்தியானஞ் செய்யுங்கள் அதனது தியானத்தால்" என்பதாதி சுருதியினால் தியானமும் ஆன்ம சாக்ஷாற்காரத்தின் பொருட்டு அநுஷ்டிக்கத்தக்கதாமென்று கருதி வேதாந்த வாக்கியம் ஈண்டு ஆன்மஞானத்தின்கண் காரணமாமென்பதாதியால் கூறப்பட்டதனையுபசம்மாரஞ் செய்கின்றார் :—

पूर्वाण्यदृष्टपरिपन्थि निबर्हणानि दृष्टं हरन्ति च विरोधिनमुत्तराणि ।
वाक्यं निरस्त सकलप्रतिबन्धकं सदात्मानमद्वयमखण्डमबुद्धमाह ॥

பதவுரை

पूर्वाणि - யஞ்ஞம் முதலியவை

अदृष्टपरिपन्थिनिबर्हणानि - விவிதிஷையின் பிரதிபந்தகமான பாப வடிவ அதிருஷ்டத்தை நிவர்த்தி செய்கின்றன

उत्तराणि - சிரவணம் முதலியவை

दृष्टं विरोधिनं हरन्ति च - பிரமாணப் பிரமேயங்களின் அசம்பாவனை முதலிய வடிவ திருஷ்டப் பிரதிபந்தத்தினை நிவர்த்தி செய்கின்றன

वाक्यम् -தத்துவமசி முதலிய மகாவாக்யம்

निरस्तसकलप्रतिबन्धकं सद् - சருவப்பிரதிபந்தமுமற்றதாய்

अबुद्धमात्मानम् - அஞ்ஞாதப் பிரத்தியகான்மாவை

अखण्डमद्वयमाह - அகண்டமாய் அத்துவயமாய் கூறுகின்றது. (347)

(அ) அற்றேல் யஞ்ஞாதியை யநுஷ்டித்தவருக்கும் சிலருக்கு விவிதிஷையுண்டாகின்றதில்லை ஆதலால் வியபிசார தோஷமுடையதாதலின் அது அதன் சாத்தியமன்றுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

यज्ञादिक्षपितसमस्तकल्मषाणां पुत्रादित्रयगतसङ्गवर्जितानाम् ।
संशुद्धे पदयुगलार्थतत्त्वमार्गे प्रायेणोद्भवति हि जन्मनीह विद्या ॥

பதவுரை

यज्ञादिक्षपित समस्तकल्मषाणाम्-யஞ்ஞாதிகளால் ஸர்வபாபமு மற்றவரும்

पुत्रादित्रयगतसङ्गवर्जितानाम् - புத்திரன் முதலிய மூன்றன் கண்ணும் பற்றற்றவருமான அதிகாரிகட்கு

पदयुगलार्थतत्त्वमार्गे संशुद्धे - தத்துவஞானத்தின் உபாயமான தத்துவம் பதார்த்தங்கள் சோதிக்கப்பட்டபோது

इह जन्मनि हि - இந்த ஜன்மத்தின் கண்ணேயே

प्रायेण विद्याउद्भवति-பெரும்பாலும் வித்தையுண்டாகின்றது.

விசேஷவுரை

யஞ்ஞாதியால் ஸர்வபாபமுமற்றவர் என்னும் விசேஷணத்திற்கு தார்பரியமிதுவாம் சிலருக்கு ஸர்வப் பிரகாரத்தாலும் பிரதிபந்தக கல்மஷத்தின் நிவர்த்தியின்மையினுல் பிரம்ம வித்தையுதயமாகாவிடினும் ஸர்வப் பிரதிபந்தக கல்மஷம் நசித்தபோது அதனுதய மவஸ்யமுண்டாம். ''कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते'' யாகாதிகர்மங்களால் பாபம் நசித்த போது அதன்பின் ஞானமுண்டாகின்றது, என்பதாதி வசனத்தால் என்பது பொருள். விவிதிஷையுண்டாயிருப்பினும் புத்ரேஷணை வித்தேஷணை லோகேஷணைகளால் கலங்கிய சித்தமுடையவர்களுக்கு திடஞானத்தினுற்பத்தி பொருந்தாமையின் அதன் பொருட்டு ஈஷணாத்திரயத்தின் தியாகமும் செய்யத்தக்கதாமென்னுங்கருத்தால் புத்திராதி மூன்றன்கண் பற்றற்றவரெனப்பட்டது. அம்மாத்திரத்தாலும் கூறிய ஞானத்தினுற்பத்தி பொருந்தாமையின் பிரமாண பிரமேயங்களின் விசாரத்தால் தத்துவம் பதார்த்தங்களும் சோதிக்கத்தக்கனவாம் எனக்கூறுகின்றூர் தத்வஞானத்தின் உபாயவென்பதாதியால் வர்ணிக்கப்பட்ட ஸம்பூர்ணசாதன சம்பன்னனும் தத்துவம் பதார்த்தத்தைச் சோதித்தவனுமானவதிகாரிக்கு இந்த ஜென்மத்தின்கண்ணேயே மோக்ஷஹேதுவான ஞானமுதயமாகின்றதா, அல்லது ஜென்மாந்தரத்தின் கண்ணுண்டாகிறதா, என்னும் சங்கைக்கு நியமமின்ரும் எனக்கூறுகின்ருர் பெரும்பாலுமென. '' ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात् ''

பிரதிபந்தமில்லாதபோது இச்சென்மத்தின்கண்ணே ஞான முண்டாகின்றது என்னுஞ் சூத்திரத்திற் கூறிய நியாயத்தைச் சூச்சிப்பிப்பது ஏகாரமாம். (348)

(அ) மேற் சூத்திரத்திற்கூறிய நியாயத்தாற் சித்தித்த வர்த்தத்தினையே விஸ்தரிக்கிறார்:—

अत्रैव जन्मनि भवेदपवर्गदायि वाक्यप्रसूतमनुभूतिफलावसानम् ।
ज्ञानं निवारकनिमित्तवशादमुष्मिञ्जन्मन्यपीति वचनादवगम्यते हि ॥

பதவுரை

अपवर्गदायि - மோக்ஷத்தைக்கொடுப்பதும்

वाक्यप्रसूतम् - மகாவாக்கியத்தாலுண்டானதும்

अनुभूतिफलावसानम् - சாக்ஷாற்காரத்தின் பயனாகிய அவித்தையின் நிவர்த்தியில் பரியவசான முள்ளதுமான

ज्ञानम् - திடாபரோக்ஷஞானம்

अत्रैव जन्मनि भवेत् - பிரதிபந்தமில்லையாயின் இதே ஜன்மத்தின் கண்ணுண்டாம்

निवारक निमित्तवशात् - இந்த ஜன்மத்தின் கண் ஞானோற்பத்தியில் பிரதிபந்தகமும் அன்னிய ஜன்மத்திற்கு ஏதுவுமான கருமத்தின் பிரபலத்தன்மையால்

अमुष्मिन् जन्मनि अपि - வேறு ஜன்மத்தின் கண்ணும் ஞான முண்டாம்.

ஜன்மாந்தரத்திற் செய்யப்பட்ட சிரவணம் முதலியவற்றால் மறுஜன்மத்தில் ஞானத்தின் உற்பத்தியுண்டாமென்பதன் பிரமாணத்தைக் கூறுகின்றார்

वचनात् - ஸ்மிருதி வசனத்தாலும் சிரௌதலிங்கத்தாலும்

इति हि अवगम्यते - இங்ஙனமறியப்படுகின்றது. (349)

(அ) அதன்கண் சிரௌதலிங்கத்தினை தெரிசிப்பிக்கின்றார் :—

ज्ञानोत्पत्तिं वामदेवस्य गर्भे श्रुत्वा विद्मः साधनं प्राच्यमस्य ।
योगभ्रष्टस्मृत्यवष्टम्भतोऽपि ज्ञातव्यं तत् साधनं प्राच्यमस्य ॥ ३५० ॥

பதவுரை

वामदेवस्य गर्भे -வாமதேவருக்குக் கர்ப்பத்தின் கண்ணே

ज्ञानोत्पत्तिं श्रुत्वा-ஞானோற்பத்தியைச் சிரவணித்து

अस्य प्राच्यं साधनं विद्मः-இவருக்குப் பூருவ ஜன்மத்தில் அநுஷ்டிக்கப்பட்ட சாதனத்தை யறிகின்றோம்

ஸ்மிருதிவசனத்தைத் தெரிசிப்பிக்கின்றார்

योगभ्रष्टस्मृत्यवष्टम्भतोऽपि - யோகப்ரஷ்டனை விஷயஞ் செய்கின்ற "அர்ச்சுனா இவ்வுலகிலும் அவ்வுலகிலும் அவனுக்கு நாசமின்று" மென்பதாதி கீதையை யாசிரயித்தலாலும்

अस्य प्राच्यं तत् साधनम् - யோகப்பிரஷ்டனுக்குப் பூருவ ஜன்மத்திலநுஷ்டிக்கப்பட்டசாதனம்

ज्ञातव्यम् - அறியத்தக்கதாம்

விசேஷவுரை

"गर्भे एव शयानो वामदेव एवमुवाच" மாதாவின் கருப்பத்திலிருந்துகொண்டே வாமதேவர் இங்ஙனம் கூறினார் என்பதாதியால் வாமதேவருக்குக் கருப்பத்தின் கண்ணேயே ஞானத்தினுற்பத்தி கேட்கப்படுகின்றது. அவருக்கு அப்போது சிரவணாதியின் சம்பவமின்றாம். ஆதலால் ஜன்மாந்தரத்திலுள்ள சிரவணாதியாலேயே அவருக்குக் கருப்பத்தின்கண் ஞானத்தினுற்பத்தியாமென்பது பெறப்படுகின்றது. அவருக்குப் பூருவ ஜன்மத்தின்கண்ணேயே சருவான்மகப் பிரம்மபாவத்தினநுபவம் உண்டாயிற்று அதன் ஸ்மரணத்தாலேயே மீண்டும் கருப்பத்தின் கண்ணும் அவருக்கு சருவான்ம பாவத்தின் கூற்றாம் என்று சொல்லற்க. தத்துவ

சாக்ஷாற்கார முண்டான பின்பு மீண்டும் கருப்பவாசம் பொருந்தாமையின், அவர் அதிகாரி புருஷராமென்பதன் கண் யாதொரு பிரமாணமுமின்ரும். ஆதலால் வாமதேவருக்குப் போன்று நிரம்பச்சாதனுநுஷ்டானமுடைய இதர சன்னியாசிக்கும் ஜன்மாந்தரத்தையுண்டுபண்ணுகின்ற வலுவுள்ள கருமமிருக்குமாஞல் அப்போது இச்சன்மத்தில் ஞானத்திநுற்பத்தியின்ரும் மற்ரே ஜன்மாந்தரத்தில் உண்டாம் எவனுக்கு அத்தகைய கருமமின்ரே அவனுக்கு அதே ஜன்மத்தில் ஞானத்திநுற்பத்தியாமென்னும் சாமானிய நியமத்தால் ஐஹிகஞானமேயுண்டாகின்றதென்பது பொருள். இனிக் கீதாஸ்மிருதியினைக் காட்டுதும். சாதனங்களை யநுஷ்டித்தவனும் சாக்ஷாத்காரமுண்டாகாதவனுமான புருடனுக்குத் தேகம் வீழ்ந்தபின்பு "கிருஷ்ணு! யோகசித்தியினையடையாது என்ன கதியை யடைகின்ருன்" என அர்ச்சுனனுல் அடையத்தக்க அவனது கதி வினவப்பட்டபோது பகவானுல் சுசியாயும் ஸ்ரீமானுயுமுள்ளவரது கிரகத்தின்கண் யோகப்பிரஷ்டன் ஜனிக்கின்ருன் என அவனுக்கு மறு ஜன்மத்தைக் கூறி "அதன்கண் பூருவஜன்மத்திற் பழகிய புத்திஸம்போகத்தினை யடைகின்ருன்" என வித்தையின் பிராப்தியினைக் கூறுதலால் சிலருக்கு பூருவஜன்மத்தில் அநுஷ்டித்த சாதனத்தால் மறுஜன்மத்தின் கண்ணும் ஞானத்திநுற்பத்தியாமென்பது பொருள். (350)

(அ) அற்றேல் சிரவணுதிகள் திருஷ்ட பயனையுடையனவாதலால் காரீரி முதலிய யாகத்திற்குப் போன்று இச்சென்மத்தின் கண்ணேயேயவற்றின் பயனை யங்கீகரித்தல் பொருத்தமாம் சென்மாந்தரத்தில் அங்கீகரித்தல் தகுதியன்ரும் என்று சங்கித்து திருஷ்ட பயனையுடையனவாயினும் இச்சென்மத்தின் கண்ணேயே பயனுண்டாதல் நியமமின்ரும். என திருஷ்டாந்த சஹிதம் கூறுகின்ருர்.—

चित्रादिवद्भवति साधनजातमस्य ज्ञानप्रसूतिकरमित्यवगच्छ सर्वम् ।
अभ्यग्रशुष्यदखिलौषधिकस्य पुंसो वृष्टिप्रदेष्टिरधिकारवशादिहैव ॥

பதவுரை

अस्य साधनजातं सर्वम् - இவ்வதிகாரிக்கு அநுஷ்டிக்கப்பட்ட சிரவணுதி சாதனங்களனைத்தும்

चित्रादिवत् - சித்திரை முதலிய யாகம் போன்று

ज्ञानप्रसूतिकरं भवतीति अवगच्छ - ஞானத்தை யுண்டுபண்ணுவதாமென்று அறிவாய்

பசுவை விரும்பிய புருடன் சித்திலா எனப்பெயரிய யாகத்தால் எஜிக்குக. கிராமத்தை விரும்பிய புருடன் சாங்கிரஹணி எனப்பெயரிய யாகத்தால் யெசிக்குக. என்பதாதியால் திருஷ்ட பசுவாதியின் சாதனமாக விதிக்கப் பட்ட சித்திரை முதலிய யாகத்திற்கு பசுவாதி பயனை யடைவிக்குந்தன்மை பிரதிபந்தகமின்றுயவழி இச் சன்மத்தின் கண்ணேயே யுளதாம். ஈண்டு பயன் தோற்றுதாயின் பிரதிபந்தக வசத்தால் இச்சன்மத்தின்கண் அப்பிராப்தியாம் ஜன்மாந்தரத்தின் கண் பிராப்தியாம் அங்கசகிதமாய் அநுஷ்டிக்கப்பட்ட கருமத்திற்குப் பயன் அவசிய முண்டாதல் நியமமாதலின். என்று எங்ஙனம் கற்பிக்கப்படுகின்றதோ அங்ஙனம் திருஷ்ட பயனையுடைய சிரவணுதிகட்கும் இச்சன்மத் திலாவது ஜன்மாந்தரத்திலாவது ஞானத்தை யுண்டாக்குந் தன்மை பொருத்தமாமென்பது பொருள். அப்படியானுல் காரீரியாகம் முதலியவற்றின் பயனுன விருஷ்டி முதலியவையும் அங்ஙனமேயாம் அதற்கும் ஈண்டு பயன் பிராப்தியாகாதபோது ஜன்மாந்தரத்திற் பயனைக் கற்பித்தலால் என்னுஞ் சங்கைக்கு அற்றன்றெனக் கூறுகின்ருர்.

अस्यग्रशुष्यदखिलौषधिकस्य पुंसः - சமீபித்த அதாவது வர்த்தமான யாகத்திஞரம்ப சமயத்தில் உலர்ந்து போயிருக்கின்ற சருவ ஓஷதியினையுடைய புருடனுக்கு

इष्टिः - விதிக்கப்பட்ட யாதொரு யாகமுண்டோ அது

अधिकारवशात् - அதிகாரவசத்தால்

इहैव वृष्टिप्रदा - ஈண்டே உடனே மழையைக்கொடுக்கக் கூடியதாம்.

### விசேஷவுரை

அதிகாரியாக்கப்படுகின்ருன் இதனுல் என்னும் வியுற்பத்தியினுல் அதிகாரம்-விதிபுருஷசம்பந்த நிமித்தமாகிய உலர்கின்ற பயிர்கள் சீவிக்கவேண்டுமென்கின்ற இச்சை. தற்காலத்

தில் உலர்கின்ற பயிர்கட்கு ஜன்மாந்தரத்தில் உண்டாகும் விருஷ்டியினுல் சீவனம் சம்பவியாமையின் சீவனத்தின் பொருட்டான விருஷ்டி அப்போதேயேயுண்டாம், அஃது உண்டாகாவிடின் அங்கவைகல்யம் கற்பிக்கத் தக்கதாம் என்பது கருத்து. (351

(அ) அற்றேல் அந்தரங்க சாதனுநுஷ்டானத்திற்கு இந்த ஜன்மத்திலாவது மறுஜன்மத்திலாவது வித்தையின் ஏதுத் தன்மை நியமமாவதுபோன்று பகிரங்கசாதனுநுஷ்டானத்திற்கும் நியதமாக விவிதிஷையின் ஏதுத்தன்மையைக் கூற வேண்டும். நியதமோ இன்ரும். அநாதிபவ பரம்பரையின் கண் சில ஜன்மங்களில் வேதாநுவசனுதி யநுஷ்டானமுடைய எல்லோருக்கும் விவிதிஷை யுண்டாகாமையின் என்ருசங்கித்து எல்லோருக்கும் பிரதிபந்தக பாபமணைத்தையும் நிவர்த்திக்கின்ற அநுஷ்டான விசேஷமின்மையின் விவிதிஷையின்ரு மென்று கருதி அதனை நிவர்த்திக்கின்ற அதனநுஷ்டான விசேஷத்தைக் கூறுகின்ருர் :—

वहिरङ्गसाधनमशेषगुरोः परमेश्वरस्य चरणाम्बुजयोः ।
नियमात् समर्पितमशेषमघं विनिहन्ति बुद्धिनिलयं सुमहत् ॥३५२॥

பதவுரை

अशेषगुरोः परमेश्वरस्य – சருவ குருவாகிய பரமேசுவரனது
चरणाम्बुजयोः – பாததாமரைகளில்
नियमात् समर्पितम् – நியமமாக சமர்ப்பிக்கப்பட்ட
वहिरङ्गसाधनम् – யக்ஞம் முதலிய பகிரங்க சாதனம்
बुद्धिनिलयं सुमहत् – சீவனது அந்தக்கரணத்தின் கண்ணுள்ள மகத்தான
अशेषमघम् – சருவ பாபத்தையும்
विनिहन्ति – நாசஞ்செய்கின்றது.

விசேஷவுரை

"என்னிடமிருந்தே ஸ்மிருதி ஞானம் மறதி யுண்டாகின்றது" என்னும் பகவானது வசனத்தால் அவரே சருவகுருவாம்.

அதனல் அவருக்குப் பிரீதி அவசியம் செய்யதக்கதாம் என்று கருதி சருவகுரு என்று கூறப்பட்டது. செய்யப்படுகின்ற சருவக்கிரியைகளின் சமர்ப்பணம் நியமமென்பதனல் கூறப்பட்டது. (352)

(அ) அப்படியானல் அந்தரங்க சாதனங்கட்கும் அநுஷ்டேயத் தன்மை சமமாதலால் ஈசுவரார்ப்பணஞ் செய்யத்தக்கதாமெனின் அற்றன்றெனக் கூறுகின்றார்:—

न तथान्तरङ्गमुपलब्धिजनेरुपकारकं शमदमप्रभृति ।
तदनुष्ठितं परमहंसजनैः परमात्मतत्त्वमुपलम्भयति ॥ ३५३ ॥

பதவுரை

शमदमप्रभृति, अन्तरङ्गम् - சமம், தமம் முதலியவந்தரங்க சாதனம்

तथा - பகிரங்க சாதனம்போன்று ஈசுவரனிடத்தில் சமர்ப்பித்தலால்

उपलब्धिजनेः न उपकारकम् - தத்துவஞானத்தினுற்பத்தியில் உபகாரகமன்றும். மற்றோ சாக்ஷாத்துபகாரகமாம்.

அங்ஙனமாயினும் அனதிகாரியினுல் அனுட்டிக்கப்பட்ட சிரவண முதலியவை அதனுபகாரகமன்றும். மற்றோ விவேக வைராக்கியாதி பூர்வகம் மூவேடணையையும் பரித்தியாகம் செய்தவதிகாரியினுல் அனுஷ்ட்டிக்கப்பட்டதாகி ஆன்மதத்துவ சாக்ஷாத்காரத்திற்கேதுவாமெனக் கூறுகின்றார்.

परमहंसजनैः - பரமஹம்ஸ சந்நியாசிகளால்

अनुष्ठितं तत् - அநுட்டிக்கப்பட்ட சிரவணுதி

परमात्मतत्त्वम् उपलम्भयति - பிரம்மத்தின் சொருபத்தை அறிவிக்கின்றது. (353)

(அ) ஈஸ்வரனிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட கருமங்கட்கு சித்தசுத்தி முதலியவாயிலாக ஞானத்தின் ஏதுத்தன்மையுளது என்பதன்கண் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

भगवाननादिनिधनः कृपया हरिरेतदाह जगदेकहितः ।
सकलं समर्प्य मयि युक्तमनाः कुरु कर्म शुद्धिकरमित्यसकृत् ॥

பதவுரை

अनादिनिधनः - உத்பத்தி நாசமில்லாதவரும்

जगदेकहितः - ஸர்வ ஜனங்கட்கும் ஹிதத்தைச் செய்பவருமான

हरिः भगवान् - ஸ்ரீ கிருஷ்ண பகவானுனவர்

कृपया एतदाह - கிருபையினுல் இவ்விஷயத்தினைக் கூறியுள்ளார்.

मयि सकलं समर्प्य - அதாவது பரமேசுவரனுன என்னிடத்தில் ஸர்வ கருமங்களையும் சமர்ப்பணஞ்செய்து

युक्तमनाः -என்னிடத்தில் வைக்கப்பட்ட மனமுள்ளவனுய்

कर्म कुरु - கருமங்களைச் செய்வாயாக:

शुद्धिकरमिति - அவை அந்தக்கரண சுத்தியைச் செய்வனவாம் என்று

असकृत् ( आह ) - அநேகந்தடவை கூறியுள்ளார்.

விசேஷவுரை

அர்ஜுனு எதனைச் செய்கின்றனையோ எதனை புசிக்கின்றனையோ, எதனை ஹோமஞ் செய்கின்றனையோ, எதனை தானஞ் செய்கின்றனையோ, யாதொரு தபத்தைச் செய்கின்றனையோ, அவை எல்லாவற்றையும் என்னிடத்தில் அர்ப்பணஞ்செய்வாய். இங்ஙனஞ்செய்வதனுல் சுப, அசுப பயனையுடைத்தான கருமபந்தனங்களினின்றும் விடுபடுவாய். ஸந்நியாச யோகத்தோடுகூடிய மனமுள்ளவனுய் விமுக்தனுய் என்னையடைவாய். விஷ்ணுவின் பிரீதியின் பொருட்டு அநுஷ்டிக்கின்றவனது கருமமனைத்தும் விலீனமாகின்றது என்பது முதலிய பகவானது வசனம் கூறிய வர்த்தத்தின்கண் பிரமாணமாமென்பது பொருள். அவ்வசனங்கட்குக் கூறிய வர்த்தத்தில் தாற்பரியமுடைமையை உணர்த்துதற்பொருட்டு அநேகந்தடவை என்று கூறப்பட்டது. (354)

(அ) பரமேசுவரனிடத்து அந்தரங்க சாதனங்களின் சமர்ப்பணம் செய்யத்தக்கதாம் என்பதன்கண் பிரமாணமின்மையின் அவைகட்கு அஃது இன்றியும் தத்துவஞானத்தின் ஏதுத்தன்மை பொருத்தமாமென விஷமத்தன்மையைக் கூறுகின்றார் :—

न तथान्तरङ्गफलसंन्यसनं क्वचिदूचिवानत इदं विदितम् ।
अनपेक्ष्य तत्फलपरित्यजनं परमात्मनिश्चयफलं तदिति ॥ ३५५ ॥

பதவுரை

तथा अन्तरङ्गफलसंन्यसनम् - பகிரங்க சாதனத்திற் போன்று அந்தரங்க சாதனத்தின் பலத்தியாகத்தை

क्वचिद् न ऊचिवान् - பகவான் ஓரிடத்தும் கூறினரில்லை.

अत इदं विदितम् - அதனால் இது அறியப்பட்டது.

இது என்பதனை விஸ்தரிக்கின்றார்.

तत् परमात्मनिश्चयफलम् इति - அந்தரங்க சாதனம் நேரே பிரம்மசாக்ஷாத்காரத்தைப் பயனாகவுடையதாதலின்

फलपरित्यजनम् - பலத்தின் பரித்தியாகத்தை

अनपेक्ष्य तत् - அபேக்ஷியாமலே அஃது அநுட்டிக்கத்தக்கதாமென இது அறியப்பட்டது எனக் கூட்டுக. (355)

(அ) கூறப்பெற்ற விபாகத்தின்கண் நியாமகயுத்தியினையும் கூறுகின்றார் :—

अपि च बन्धनहेतुतया श्रुतं सकलमीक्षणकौशलशालिनः ।
भवति शुद्धिकरं न च बन्धकृद् भवति कर्म तथा घटते हि तत् ॥

பதவுரை

अपि च सकलं कर्म - மேலும் சருவ கருமமும்

बन्धनहेतुतया श्रुतम् - பந்தத்திற்குக் காரணமாகக் கேட்கப்பட்டுள்ளது. அங்ஙனமாயினும்

ईक्षणकौशलशालिनः - பிரம்மஞானத்தில் சாமர்த்தியம் உடைய புருடனுக்கு

ஸமஸமீக்ஷணகௌசல என்னும் பாடத்தில் பிரம்மார்ப்பண புத்தியால் அநுஷ்டானமுடையவனுக்கு என்று பொருள்.

शुद्धिकरं भवति - அந்தக்கரண சுத்தியைச் செய்வதாகின்றது.

न च बन्धकृद् भवति - பந்தத்தைச் செய்கின்றதாக ஆகின்றதில்லை.

கருமங்கட்கு இயற்கையாக சமுசாரபந்தமே பயனும் என்பது "புண்ணிய கருமத்தால் புண்ணியவானுகின்ருன் பாப கருமத்தால் பாபியாகின்ருன். புண்ணியக் கயிற்ருல் மேற்செல்கின்ருன். பாபக் கயிற்ருல் கீழ்செல்கின்ருன்" என்பதாதி வசனத்தால் அறியப்பட்டுளது. அங்ஙனமாயினும் ஈசுவரனிடத்திற் சமர்ப்பிக்கப் பெற்ற கருமங்கள் பந்த ஏதுத் தன்மையை விட்டு சித்தசுத்தியைச் செய்பவையாக ஆகின்றன. இது முதியோராலும் "இங்ஙனம் கிரியாயோக மார்க்கங்களனைத்தும் சமுசாரத்திற்குக் காரணங்களாம். அவைகளே பரமேஸ்வரனிடத்திற் சமர்ப்பிக்கப்பட்டனவாய் சமுசார நாசத்திற்கு யோக்கியமாகின்றன" எனக் கூறப்பட்டு உளது. ஸ்ரீபகவானுலும் "பரமேஸ்வரப்பிரீதியின் பொருட்டுச் செய்யுங்கருமத்தினுமன்னியமான கருமத்தால் இந்த மனிதன் கட்டப்படுகின்ருன். ஆதலால் அர்ச்சுன, பரமேஸ்வரப் பிரீதியின் பொருட்டு பற்றில்லாதவனுயிருந்துகொண்டு கருமத்தைச் செய்" என்று கூறப்பட்டுளது. ஆதலால் கூறிய விசாரத்தின் அதீனமான ஞானத்திற் குசலபுருடனுக்கு அவ்வாறேயநுஷ்டிக்கப்பட்ட கருமம் பந்தத்தைச் செய்கின்றதில்லை. மற்ருே சித்தசுத்தியினையே செய்கின்றது ஆதலின் அவ்வாறே அஃது அநுஷ்டிக்கத் தக்கதாமென்பது பொருள்.

அற்றேல் இயற்கையாகவே பந்தஹேதுவான கருமத்திற்கு, ஈசுவரனிடத்தில் ஸமர்ப்பணஞ் செய்தபோதிலும் விபரீத காரியத்தின் ஹேதுத்தன்மை எங்ஙனமாம். சக்தியின் மாறுபாடு பொருந்தாமையின் என்ருசங்கித்துக் கூறுகின்ருர்.

तथा हि तत् घटते - அங்ஙனமே அஃது பொருந்துகின்றது.

### விசேஷவுரை

அங்ஙனம் என்பது திருஷ்டாந்தத்தைத் தெரிவிக்கும் பொருட்டு. எப்படி கேவலம் தயிர் விஷ முதலியவை இயற்கையாக சுரம் மரண முதலியவற்றிற்கேதுவாயினும், மது மந்திர முதலியவற்ருேடு கூடினவையாகி புஷ்டி ஜீவன முதலியவற்றிற் கேதுவாகின்றனவோ அங்ஙனம் இதுவும் பொருத்தமா மென்பது பொருள். (356)

(அ) இங்ஙனம் பகிரங்க சாதனமான எஞ்ஞ முதலியவை சொருபமாக பந்தஹேதுவாயினும் விவிதிஷையின்கண் பரியவசானமாதற் பொருட்டு ஈஸ்வரார்ப்பண புத்தியினுல் அவையநுஷ்டிக்கத் தக்கனவாமென்று கூறப்பட்டது. இப்போது அந்தரங்க சாதனத்திற்கு தத்துவஞானத்தை யுண்டுபண்ணுதற் பொருட்டு அதன் (ஈசுவரார்ப்பண புத்தியினுலே அநுஷ்டானத்தின்) அபேக்ஷையின்ருமெனயுக்தியினுற் தெரிசிப்பிக்கின்ருர்.

यदिह साधनमात्मधियः श्रुतं न च फलान्तरहेतुतया श्रुतम् ।
शमदमादिकमत्र तु कौशलं किमपि काङ्क्षितमस्ति न सिद्धये ॥

### பதவுரை

इह यत् शमदमादिकम् - சாஸ்திரத்தின்கண் யாதொரு சமம் தமம் முதலியது

आत्मधियः साधनं श्रुतम् - ஆன்மஞானத்தின் சாதனமாகக் கேட்கப்பட்டதோ

तत् फलान्तरहेतुतया - அது அந்நிய பயனிற்கு அதாவது சித்தசுத்திக்கு ஹேதுவாக

न च श्रुतम् - கேட்கப்படவேயில்லை. (ஆதலின்)

अत्र तु - சமம், தமம் முதலியவற்றினநுட்டானத்தில்

सिद्धये कौशलं किमपि - ஞானேற்பத்தியின் பொருட்டு யாதொரு சாமர்த்தியமும்

काङ्क्षितं न अस्ति - விரும்பப்பட்டதாகவின்ரும்.

விசேஷவுரை

சமம் முதலியவற்றினையுடைய புருஷனாலனுட்டிக்கப்பட்ட சிரவணாதிகட்குச் சொருபமாக பலாந்தர ஹேதுத் தன்மையின் கண் பிரமாணமின்மையின் அதனைக் (பலாந்தர ஹேதுத் தன்மையினை) கொடுத்தற் பொருட்டு ஈசுவரனிடத்து ஸமர்ப்பணத்தை யபேக்ஷியாமையின் அதனனுஷ்டானமாத்திரமே தத்துவஞானத்தின் பொருட்டு உபகாரத்தைச் செய்கின்றது என்பது பொருள். (357)

(அ) சங்க்ஷேப விஸ்தாரங்களால் கூறப்பட்ட அத்தியாயத்தினர்த்தத்தினை முடிக்கின்றார்:—

उक्तं साधनजातमत्र सकलं विद्यासमुत्पत्तये
यस्मिन् कर्मणि वैदिकेन विधिना नुन्नः परिव्राजकः ।
कर्तृत्वाद्युपमर्दनेन भवता विद्यानुकूलात्मना
कर्तव्यं तदशेषतस्तदनु ते विद्या विपाकं व्रजेत् ॥ ३५८ ॥

பதவுரை

यस्मिन् कर्मणि - எந்தக் கருமத்தின்கண்

वैदिकेन विधिना - வைதிக விதியினால்

परिव्राजकः नुन्नः - பரிவிராஜக சந்நியாசி பிரேரிக்கப் பட்டனனோ

साधनजातं सकलम् - அச்சாதனக் கூட்டமனைத்தும்

विद्यासमुत्पत्तये - ஞானத்தினுற்பத்தியின் பொருட்டு

अत्र उक्तम् - இம்மூன்றாவது அத்தியாயத்தின்கண் கூறப் பட்டது.

பரிவிராஜகன் என்பதாதியால் அந்தரங்க சாதனங்களில் சன்னியாசியே அதிகாரியாமென்பது சித்திக்கின்றது. வைதிக விதியாவது ''இவ்வான்மவுலகை இச்சிக்கின்ற பரிவிராஜகர் துறவையடைக'' என ஜிஞ்ஞாசுவைக் குறித்துக் கூறப்பட்ட சன்னியாசவிதியாம். இது ''சன்னியாசஞ் செய்துகொண்டு ஆன்மாவை விசாரிக்குக'' என்னும் ஸ்மார்த்தவிதிக்கும் உப

லக்ஷணமாம். பரிவிராஜக சன்னியாசியைக் கருத்தாவாக உடைய சிரவணுதியின் அநுஷ்டானத்தின்கண் கருமாநுஷ்டானத்தினும் பிரகார விசேஷத்தைக் கூறுகின்ருர்.

कर्तृत्वाद्युपमर्दनेन - கருத்திருத்வாதி புத்தியினைக் கெடுத்து
विद्यानुकूलात्मना - வித்தையின் அநுகூல வடிவத்தால்
भवता अशेषतः तद् - உம்மால் சம்பூர்ண சிரவணுதியும்
कर्तव्यम् - அநுட்டிக்கத்தக்கது.
तदनु ते - அதன்பின்பு உனக்கு
विद्या विपाकं व्रजेत् - ஞானம் பரிபாகத்தையடையும் பல பரியந்தமாமென்பது பொருள்.

விசேஷவுரை

அகருத்திராதிவடிவ ஆன்மாநுபவம் உத்தேசியமாதலின் அதன் ஏதுவான சிரவணுதி கருத்திருத்துவாதியினை விட்டு அநுஷ்டிக்கப் பட்டதாகி அதனநுகூலமாகின்றது. கருத்திருத்துவாதியின் அபினிவேசத்தால் அதையனுஷ்டிக்கிறே அதனுலேயே வித்தையின் பிரதிபந்தமுண்டாம். ஆதலின் யுக்திகளால் கருத்திருத்துவாதியினைப் பாதிக்கும் வாயிலாகவே சிரவணுதி அநுஷ்டிக்கத்தக்கது. அதனுல் தத்துவசாக்ஷாத்காரத்தின் பிரதிபந்தமுண்டாகாதென்பது பொருள். (358)

## கிரகஸ்தர் முதலியோருக்கும் அதிகாரமுண்டெனல்

(அ) அற்றேல் சிரவணம் முதலிய அந்தரங்க சாதனத்தின்கண் பரிவிராஜகனே அதிகாரியாயின் ஏனைய கிருகஸ்தர் முதலியோருக்கு அதன்கண் பிரவிருத்தியுண்டாகாது. என்று சங்கித்து சிரவணுதிகள் திருஷ்டபயனையுடையனவாதலின் திருஷ்டபயனையுடைய கருமத்தின்கண் சாமர்த்தியமும் நிஷேதத்தின் அபாவமும் உளதாய வழி. அதிகாரத்தை நீக்கமுடியாமையினுனும் கிருகஸ்தர் முதலியோருக்கும் ஆவசியக கருமகாலங்களினும் மிஞ்சிய சமயங்களில் சிரவணுதியின் அநுஷ்டானம் சம்பவித்தலினுனும் ‘‘சூத்திரன் யஞ்ஞத்தில் அயோக்கியன்’’ என்பது போன்று நிஷேதமின்மையினுனும் அவர்கட்கும் அதன்கண் அதிகாரமுளதேயாம்

ஆனல் அவர்கட்கு அதே ஜன்மத்தின்கண் பரிபக்குவஞானம் சிரவணுதியால் உண்டாகின்றதில்லை. மற்றே ஜன்மாந்தரத்தின்கண் உண்டாகின்றது எனக் கூறுகின்ருர்:—

वानप्रस्थगृहस्थनैष्ठिकजनैरन्यैश्च वर्णाश्रमैः
कर्मण्यध्वनिषेवितं भवति वै जन्मान्तरे पाचकम् ।
विद्यायाः श्रवणादिलक्षणमिदं न ह्येतदेषां कचि-
च्छास्त्रेण प्रतिषिद्धमीक्षितमिदं शूद्रस्य दृष्टं यथा ॥

பதவுரை

वर्णाश्रमैः- வருண தருமத்தின் கண்ணும் ஆசிரம தருமத்தின் கண்ணும் நிஷ்டையுடையவரும்

अन्यैश्च - பரிவிராஜக சன்னியாசியினும் வேருனவருமான

वानप्रस्थगृहस्थनैष्ठिकजनैः -பிரம்மசாரி கிருகத்தன் வானபிரஸ்தன் என்னும் மூன்று வருணத்தவரால்

कर्मण्यध्व निषेवितम् - ஆவசியக தத்தம் கருமங்களில்லாத காலங்களில் அநுஷ்டிக்கப்பட்ட

श्रवणादिलक्षणम् इदम्-சிரவணுதி வடிவ அந்தரங்க சாதனம்

जन्मान्तरे विद्यायाः - ஜன்மாந்தரத்தின் கண் பிரம்ம வித்தையின்

पाचकं भवति वै - பரிபக்குவத்திற்கு ஏதுவாகின்றது

கூறப்பட்ட அர்த்தத்தினைச் சாதிக்கும் நியாயத்தினைக் கூறுகின்ருர்.

शूद्रस्य इदं दृष्टं यथा-சூத்திரனுக்கு சிரவணுதியின் நிஷேதம் காணப்பட்டதுபோல

एषाम् एतद् - மூவருணத்தினருக்கு வேதாந்த சிரவணுதி

क्वचित् शास्त्रेण - சுருதியிலாவது ஸ்மிருதியிலாவது சாஸ்திரத்தால்

प्रतिषिद्धं नहि ईक्षितम्- நிஷேதிக்கப்பட்ட தாகபார்க்கப்பட வில்லை.

விசேஷவுரை

அபசூத்ராதிகரணத்தின்கண் சூத்திரனுக்கு வேதவாக்கியத்தின் சிரவணம் உச்சாரணம் தாரணம் ஆகிய இவற்றின் நிஷேதபலத்தால் சருவ வைதிக வித்தைகளிலும் அதிகாரத்தின் நிஷேதம் நிருபிக்கப்பட்டது. அதுபோல பரிவிராஜகனினும் வேறான, வேதத்தையத்தியயனஞ்செய்துள்ள மூன்று வருணத்தினற்கு வேதாந்த சிரவணாதியின் நிஷேதம் காணப் படவில்லையென்பது பொருள். (359)

(அ) அற்றேல் கிருகஸ்தர் முதலியோர்க்கும் சிரவணாதியின்கண் அதிகாரமிருக்குமாயின் அஃது ஜன்மாந்தரத்தின்கண் பாசகமாமென்று கூறப்பட்டது எங்ஙனமாம். திருஷ்டபயனையுடைய சிரவணாதியின்கண் ஜன்மாந்தரத்திற் பாசகத்தன்மை பொருந்தாமையின் அன்றேல் அதாவது ஜன்மாந்தர பாசகத் தன்மையையங்கீகரிக்கின் பரிவிராஜகனால் அநுஷ்டிக்கப்பட்ட சிரவணாதிக்கும் அத்தன்மையடைவுறும் என்று சங்கித்துக் கூறுகின்றார்:—

सर्वश्रुतिस्मृतिवचोभिरयं परिव्राण्मुण्डः शुचिः परमहंस इति प्रसिद्धः ।
ज्ञानाय साधनधनेषु नियुज्यमानः प्रायेण बुद्धिपरिपाकमवाप्स्यतीह ॥

பதவுரை

मुण्डः शुचिः परमहंस इति प्रसिद्धः } முண்டிதன் சுத்தன் பரமஹம்ஸன் என்று பிரசித்திபெற்ற

அதாவது "காஷாய வஸ்த்ரமுள்ளவனாய் முண்டிதனாய் அபரிக்ரஹனாய் சுசியாய் அத்ரோஹியாய் பிக்ஷையெடுப்பவனாய் உள்ள பரிவிராஜகன் பிரம்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டு யோக்கியனாகின்றான்" என்பது முதலிய சுருதிகளில் முண்டத்வாதி விசேஷணமுள்ளவன் பரமஹம்ஸனும் எனபிரசித்தனாகிய

अयं परिव्राट्- இச்சன்னியாசியானவன்

सर्वश्रुतिस्मृति वचोभिः - இனிக்கூறப்படும் ஸர்வ சுருதி ஸ்மிருதி வசனங்களால்

ज्ञानाय साधनधनेषु-தத்துவ ஞானத்தின் பொருட்டு அதன் ஸாதனமாயுள்ளவையும் தனதபீஷ்டத் திற்கேதுவாயுள்ளவையுமான சிரவணுதி வடிவதனங்களில்

नियुज्यमानः - பிரேரிக்கப்படுகின்றவனுய் அவைகளை யனுஷ்டித்து

प्रायेण इह-பெரும்பாலும் இந்த ஜன்மத்தின் கண்

बुद्धिपरिपाकम् अवाप्स्यति - ஞானத்தின் பரிபக்குவத்தினை யடைவன்.

## விசேஷவுரை

பரிவிராஜகனுக்கும் பிரதிபந்தமுள்ளதாய வழி சென்மாந் திரத்தின்கண் வித்தையின் பிராப்தியாம் என்பதை சூசிப்பித் தற்பொருட்டு பெரும்பாலுமென்று கூறப்பட்டது. அனேக சுருதிஸ்மிருதிகளில் பரமஹம்ஸ ஸன்னியாசத்தினை ஞானத்தின் பரிபாகத்திற்கு அங்கமாக விதித்திருத்தலாலும் பரமஹம்ஸ னுக்கு வேறு வியாபாரமின்மையினுல் ஏகாக்ரசிததத்தோடு கூடி சிரவணுதி புஷ்கள சாதனத்தை நன்ருகவனுஷ்டித்தலில் சாமர்த்யமிருத்தலானும் அவனுக்கு அதே ஜன்மத்தின்கண் பிரதிபந்தகமிலதாய வழி திருஷ்டபலவடிவ ஆன்மசாக்ஷாத் காரமுண்டாகின்றதேயாம். கிருஹஸ்தர் முதலியோர்க்கோ அதிகாரமிருந்தபோதிலும் ஆவச்யக கருமானுஷ்டானத்தில் கலங்கிய சித்தமுடைமையால் நன்ருக சாதன சமுதாயத்தை யனுஷ்டித்தற் பொருந்தாமையினுனும், சாக்ஷாத்காரத்தினங்க மான ஸன்னியாஸமின்மையினுனும், அச்சென்மத்தின்கண் தத்துவஞானத்தின் பரிபாகமுண்டாகின்றதில்லை ஆனுல் சென் மாந்தரத்தின் கண் ஸன்னியாஸமுளதாய வழி அல்பப் பிரயத் தினத்தினுலேயே அஃது சம்பவிக்கின்றது என நிச்சயிக்கப் படுகின்றது. அன்றேல் ஸன்னியாஸவிதி வியர்த்த மாம். இவ்வாருயின் தேவர் முதலியோர்க்கு ஸன்னியாஸ மின்மையின் தத்துவ சாக்ஷாத்காரமுண்டாகலாகாது என்று சொல்லற்க, கருமாதிகாரிகட்கே பிராப்தமான கருமஸன்னியா

ஸத்தினை திருஷ்டாதிருஷ்டவாயிலாக ஞானபரிபாகத்திற்கு அங்கமாக விதித்தலின், தேவாதிகட்கு ஸன்னியாசமின்றியும் சிரவணுதியினுல் தத்துவ சாக்ஷாத்காரம் பொருத்தமாம் என்பது'கருத்து. (360)

(அ) அற்றேல் ஆசிரமாந்தரத்தில் இருக்கின்ற ஜனகர் முதலிய மனிதருக்கே மோக்ஷஹேதுவான ஞானத்தினுற்பத்தி இதிகாசபுராணுதிகளில் பிரதிபாதிக்கப்படுகின்றது. ஆதலின் ஸன்னியாஸம் ஞானபரிபாகத்திற்கு எப்படி யங்கமாம். அன்றியும் கிருஹஸ்தர் முதலியோருக்கு சிரவணுதிகள் இருக்கும் போதும் அச்சென்மத்தின்கண் தத்துவசாக்ஷாத்காரத்தினுற்பத்தி நியமம் எங்ஙனமாம். என்ரு சங்கித்துக் கூறுகின்ருர் :—

जन्मान्तरेषु यदि साधनजातमासी-
त्सन्यासपूर्वकमिदं श्रवणादिरूपम् ।
विद्यामवाप्स्यति जनः सकलोऽपि यत्र
तत्राश्रमादिषु वसन्न निवारयामः ॥ ३६१ ॥

பதவுரை

सन्यासपूर्वकम् - ஸன்னியாஸவாயிலாக

श्रवणादिरूपं इदं साधनजातम्- சிரவணுதி வடிவ இந்தச்சாதன சமுதாயமானது

जन्मान्तरेषु यदि आसीत्-பூர்வஜன்மங்களில் அனுஷ்டிக்கப் பட்டதாயிருக்குமாயின்

सकलोऽपि जनः-ஸர்வஜனங்களும்

यत्र तत्र आश्रमादिषु वसन्- (இந்த ஜன்மத்தில்) எவ்வாசிரமத்திலிருப்பவராயினும்

विद्यामवाप्स्यति -ஞானத்தையடைவார்கள்

न निवारयामः - அதனை யாங்கள் தடைசெய்கின்றிலேம்

விசேஷவுரை

யோகப்ரஷ்டனுக்குக் கூறப்பட்ட நியாயத்தால் ஜனகராஜா முதலியோருக்கு பூருவ ஜன்மத்தின்கண் சன்னியாச

பூருவக சிரவணுதியின் அநுஷ்டானம் காரியபலத்தாலும் சன்னியாச விதிபலத்தாலும் கற்பிக்கப்படுகிறது. ஜன்மாந் தரத்திலுள்ள சன்னியாசத்திற்கும் அதிருஷ்டவாயிலாகவும் சம்ஸ்காரவாயிலாகவும் மறு ஜன்மத்திலுள்ள ஞானபரிபாகத் தின் அங்கத்தன்மை பொருந்துதலின். ஆசிரமாந்தரத்தில் உள்ள அப்படிப்பட்டவர்க்கும் தத்துவசாக்ஷாற்காரத்தை நிவர்த்தி செய்கின்றிலேம். மற்ருே ஜன்மாந்தரத்தின்கண் கூறப்பெற்ற சாதனமின்றியவர்கட்கே அதனை நிவர்த்திக் கின்ருேம். ஆதலின் விரோதமின்ருமென்பது பொருள். (361)

(அ) 360வது சுலோகத்தில் சருவ சுருதிஸ்மிருதி வசனங் களால் என்று கூறப்பட்ட சன்னியாசத்திற்கு ஞானுங்கத் தன்மையினை விஷயஞ்செய்கின்ற வசனங்களைத் தெரிசிப்பிக் கின்ருர். கூறப்பட்ட வசனங்களை எனக் கூட்டுக.

वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः संन्यासयोगाद्यतयः शुद्धसत्त्वाः ।
ते ब्रह्मलोकेषु परान्तकाले परामृताः परिमुच्यन्ति सर्वे ॥ ३६२ ॥

பதவுரை

वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः - வேதாந்தங்களால் உண்டான விஞ்ஞானத்தால் பிரம்ம வடிவ அர்த்தத் தினை நன்ருக நிச்சயஞ் செய்தவரும்

संन्यासयोगात् यतयः - சன்னியாஸ யோகத்தினுல் பிரயத் தினமுடையவரும்

शुद्धसत्त्वाः - இராகத்துவேஷாதியற்ற சுத்தாந்தக்கரண முடையவருமான இத்தகைய புருடரும் ஏதேனும் பிரதிபந்த வசத்தால் இந்த தேகத்தின் கண் சாக்ஷாத்காரத்தின் உற்பத்தியின்றியவராய் இருப்பராயின்

ते सर्वे - அச்சன்னியாசிகளனைவரும்

ब्रह्मलोकेषु - பிரம்மலோகங்களிற்போய்ப் போகங்களை யநுபவித்து

परान्तकाले - பிரம்மாவின் விநாசகாலத்தில்

परामृताः-மேலான அமிருத வடிவராயிருந்துகொண்டு
परिमुच्यन्ति - சருவத்தினின்றும் முத்தராகின்றனர். (362)

नैतादृशं ब्राह्मणस्यास्ति वित्तं यथैकता समता सत्यता च ।
शीलं स्थितिर्दण्डनिधानमार्जवं ततस्ततश्चोपरमः क्रियाभ्यः ॥ ३६३ ॥

பதவுரை

ब्राह्मणस्य एतादृशम्-பிராம்மணனுக்கு இப்படிப்பட்ட
वित्तं नास्ति -தனம் (அதாவது ஹிதசாதனம்) வேறின்றும்
यथा एकता - எப்படி சஹாயமின்றிய தன்மையும்
समता-சமமாகப் பார்க்குந்தன்மையும்
सत्यता - சத்திய வசனத்தைப் பேசுதலும்
शीलं स्थितिः-நல்லாசாரமும் மரியாதையைக் கடவாமையும்
दण्डनिधानम्-இம்ஸையினின்றும் நிவர்த்தியும்
आर्जवम् -குடிலத்தன்மையின்மையும்
ततस्ततः क्रियाभ्यः उपरमः - சருவக்கிரியைகளினின்றுமுபரமமும் எப்படி இதசாதனமோ அப்படி வேறின்றுமெனக் கூட்டுக. (363)

यतो यतो निवर्तते ततस्ततो विमुच्यते ।
निवर्तनाद्धि सर्वतो न वेत्ति दुःखमण्वपि ॥ ३६४ ॥

பதவுரை

यतो यतो निवर्तते -எவ்வெவ்விஷயத்தினின்றும் நிவர்த்தியாகின்றனே
ततस्ततो विमुच्यते - அதிலதினின்றும் விடுபடுகின்றன்
सर्वतो निवर्तनाद्धि -சருவத்தின் நிவிருத்தியினலேயே
अणु दुःखमपि न वेत्ति- சொற்ப துக்கத்தினையுமடைகிறதில்லை

நிவிருத்தியே சருவதுக்க சாந்தியினுபாயமாமென்பது பொருள். (364)

किं ते धनेन किमु बन्धुभिरेव वा ते किं ते दारैर्ब्राह्मण यो मरिष्यसि ।
आत्मानमन्विच्छगुहां प्रविष्टं पितामाहास्ते क्व गताः पिता च ॥

பதவுரை

हे ब्राह्मण–ஓ பிராம்மணனே

यः मरिष्यसि–யாதொரு நீ சாகப்போகின்றனையோ

ते धनेन किम्–அத்தகைய உனக்கு தனத்தால் யாது பயன்?

ते बन्धुभिरेव वा किमु–பந்துக்களாலேதான் உனக்கு யாது பயன்?

ते दारैः किम्–மனைவிமார்களால் தான் உனக்கு யாதுபயன்? அவர்களால் யாதொரு பயனுமின்றும். ஆதலின்

गुहां प्रविष्टम्–இருதய குகையின் கண் பிரவேசித்துள்ள

आत्मानम् अन्विच्छ–சாக்ஷிவடிவ பரமான்மாவை விசாரிப்பாய்

மரணமவஸ்யமாமென்பதில் பிரமாணத்தைக்கூறுகின்றூர்.

ते पितामहाः पिता च–உன்னுடைய பாட்டன்மார்களும் பிதாவும்

क्व गताः–எங்கே போனூர்கள் மரித்துப்போனூர்கள் என்பது பொருள். அதுபோல நீயுமாவாய். ஆதலின் அனித்யதன புத்திராதிகளை பரித்தியாகஞ் செய்து நித்தியவான்மாவினன்வேஷணமே அநுஷ்டிக்கத்தக்கதாம் என்க.

அன்வேஷணம் = தேடுதல். (365)

अर्थस्य मूलं निकृतिः क्षमा च कामस्य रूपञ्च वयो वपुश्च ।
धर्मस्य यागादि दया दमश्च मोक्षस्य सर्वोपरमः क्रियाभ्यः ॥ ३६६ ॥

பதவுரை

अर्थस्य मूलम् - தனப்பிராப்த்திக்குக்காரணம்

निकृतिः क्षमा च - கபடமும் பொறுமையுமாம்

कामस्य - காமப்பிராப்திக்குக் காரணம்

रूपञ्च वयो वपुश्च - அழகும் எவ்வனவயதும் தேகமுமாம்

धर्मस्य - தர்மப்பிராப்திக்குக் காரணம்

यागादि दया दमश्च - வேள்வி முதலியதும் கருணையும் அடக்கமுமாம்

मोक्षस्य - மோக்ஷப் பிராப்த்திக்குக்காரணம்

क्रियाभ्यः सर्वोपरमः - ஸர்வக்கிரியைகளினின்றுமுபரமமாம் உபரமம்-நிவர்த்தி. (366)

இங்ஙனம் ஸர்வஞ்ஞான்ம முனியால் செய்யப்பெற்ற
சங்க்ஷேப சாரீரகத்தின் சாதன லக்ஷணமெனப்
பெயரிய மூன்ருவது அத்தியாயம்
முற்றுப்பெற்றது.



உ

# சங்க்ஷேப சாரீரகம்

## 4-வது அத்தியாயம்

### ஞானத்தின் பயனை நிருபித்தல்

(அ) மோக்ஷசாதனமான ஞானத்தின் சொரூபம் விஷயத்தை நிருபித்தலாலும் காரணத்தை நிருபித்தலாலும் மூன்று அத்தியாயங்களால் நிருபிக்கப்பட்டது. அநந்தரம் அதன் பயனான மோக்ஷ சொருபத்தின் விசாரம் ஆரம்பிக்கப் படுகின்றது. ஆண்டு கரும ஜன்னியமும், உபாசனா ஜன்னியமு மான அநித்திய சொர்க்காதி பயன் தள்ளத் தக்கதேயாம். ஞானத்தின் பயனான நித்தியவான்ம வடிவ மோக்ஷமோ, அவித்தையின் திரோதான நிவர்த்தி மாத்திரத்தால் கொள்ளத் தக்கதேயாம். என்று முதற் சூத்திரத்தின் கண்ணேயே நிர்ணயிக்கப்பட்டுளது. அங்ஙனமாயினும் ஞானத்தின் பயனா கிய மோக்ஷத்தின்கண் வாதிகளின விப்பிரதிபத்தியினால் சந்தேகத்தினை யடைகின்றவராய் சொருபத்தாலும் சாதனத் தாலும் அதனவாந்தர விசேஷத்தின்கண் நிச்சயத்தினை குரு முகத்தால் அவ்வவ்வாதியின் விப்பிரதிபத்தியினை நிராகரித் தலால் திடஞ் செய்தற்கு இச்சையினையுடையவனுமான சீடனது வினாவையாரம்பிக்கின்றார் :—

उक्तसाधनसमुद्भवा सती किं प्रयच्छति फलं मुमुक्षवे ।
प्रत्यगात्ममतिरत्र मे मनस्थिता समुपजायतेऽधुना ॥ १ ॥

பதவுரை

उक्तसाधनसमुद्भवा सती-மேற்கூறிய சாதனங்களைக் காரண மாகவுடையதும் நிர்தோஷமும்

प्रत्यगात्ममतिः-பிரத்தியகபின்ன பிரம்ம ஞானமானது

मुमुक्षवे किं फलम्-முமுக்ஷுவிற்கு என்னபயனை

प्रयच्छति-கொடுக்கின்றது. அதாவது நித்திய பயனையா அநித்தியபயனையா என.

अर्थस्य मूलं निकृतिः क्षमा च कामस्य रूपञ्च वयो वपुश्च ।
धर्मस्य यागादि दया दमश्च मोक्षस्य सर्वोपरमः क्रियाभ्यः ॥ ३६६ ॥

பதவுரை

अर्थस्य मूलम् - தனப்பிராப்த்திக்குக்காரணம்

निकृतिः क्षमा च - கபடமும் பொறுமையுமாம்

कामस्य - காமப்பிராப்திக்குக் காரணம்

रूपञ्च वयो वपुश्च - அழகும் எவ்வனவயதும் தேகமுமாம்

धर्मस्य - தர்மப்பிராப்திக்குக் காரணம்

यागादि दया दमश्च - வேள்வி முதலியதும் கருணையும் அடக்கமுமாம்

मोक्षस्य - மோக்ஷப் பிராப்த்திக்குக்காரணம்

क्रियाभ्यः सर्वोपरमः - ஸர்வக்கிரியைகளினின்றுமுபரமமாம் உபரமம்-நிவர்த்தி. (366)

இங்ஙனம் ஸர்வஞ்ஞான்ம முனியால் செய்யப்பெற்ற
சங்க்ஷேப சாரீரகத்தின் சாதன லக்ஷணமெனப்
பெயரிய மூன்ருவது அத்தியாயம்
முற்றுப்பெற்றது.



உ

# சங்க்ஷேப சாரீரகம்

## 4-வது அத்தியாயம்

### ஞானத்தின் பயனை நிருபித்தல்

(அ) மோக்ஷசாதனமான ஞானத்தின் சொருபம் விஷயத்தை நிருபித்தலாலும் கரணத்தை நிருபித்தலாலும் மூன்று அத்தியாயங்களால் நிருபிக்கப்பட்டது. அநந்தரம் அதன் பயனான மோக்ஷ சொருபத்தின் விசாரம் ஆரம்பிக்கப் படுகின்றது. ஆண்டு கரும ஜன்னியமும், உபாசனா ஜன்னியமுமான அநித்திய சொர்க்காதி பயன் தள்ளத் தக்கதேயாம். ஞானத்தின் பயனான நித்தியவான்ம வடிவ மோக்ஷமோ, அவித்தையின் திரோதான நிவர்த்தி மாத்திரத்தால் கொள்ளத் தக்கதேயாம். என்று முதற் சூத்திரத்தின் கண்ணேயே நிர்ணயிக்கப்பட்டுளது. அங்ஙனமாயினும் ஞானத்தின் பயனாகிய மோக்ஷத்தின்கண் வாதிகளின் விப்பிரதிபத்தியினால் சந்தேகத்தினை யடைகின்றவராய் சொருபத்தாலும் சாதனத்தாலும் அதனவாந்தர விசேஷத்தின்கண் நிச்சயத்தினை குருமுகத்தால் அவ்வவ்வாதியின் விப்பிரதிபத்தியினை நிராகரித்தலால் திடஞ் செய்தற்கு இச்சையினையுடையவனுமான சீடனது வினாவையாரம்பிக்கின்றார் :—

उक्तसाधनसमुद्भवा सती किं प्रयच्छति फलं मुमुक्षवे ।
प्रत्यगात्ममतिरत्र मे मनसः स्थिता समुपजायतेऽधुना ॥ १ ॥

பதவுரை

उक्तसाधनसमुद्भवा सती-மேற்கூறிய சாதனங்களைக் காரணமாகவுடையதும் நிர்தோஷமும்

प्रत्यगात्ममतिः-பிரத்தியகபின்ன பிரம்ம ஞானமானது

मुमुक्षवे किं फलम्-முமுக்ஷுவிற்கு என்னபயனை

प्रयच्छति-கொடுக்கின்றது. அதாவது நித்திய பயனையா அநித்தியபயனையா என.

अत्र मे मनसि-பல விஷயத்தின் கண் எனது மனதில்
अर्थिता अधुना समुपजायते - ஜிஞ்ஞாசையிப்போதுண்டாகின்றது.

விசேஷவுரை

மேற்கூறிய சாதனமாவது நிச்சயிக்கப்பட்ட சக்திதாற்பர்யத்தினையுடையதும் புனருக்தியற்ற சாகாங்க்ஷபதத்தைப் பூரித்தலால் ஸர்வசங்கையைச் சேதிப்பதுமான வேதாந்த மஹாவாக்கியமாம் அதனையே நன்ருய் அசம்பாவனை முதலியவற்றின் நிவிருத்தியினால் காரணமாகவுடையது. நிர்த்தோஷமாவது தோஷமின்றிய காரணத்தையுடையதாந்தன்மையாலும் பாதிக்கப்படாத விஷயத்தையுடையதாந்தன்மையாலும் பரீக்ஷிக்கப்பட்டப் பிராமாண்யத்தினையுடையது. இத்தகைய பிரம்மஞானம் அதாவது தத்துவப்பதார்த்த லக்ஷியாம்ஸத்தின் உபஸ்திதியினைப் பூருவமாகவுடையதும் அகண்டப்பிரம்மாகார நிருவிகற்பக சாக்ஷாத்கார வடிவினதும் வேதாந்தப்பிரமாணத்தைக் காரணமாகவுடையதுமான மனோவிருத்திவடிவ ஞானம். முமுக்ஷுவிற்கு அதாவது ஆத்தியந்திகபந்த நிவிருத்தியையிச்சிக்கின்றவனும் அநாத்தியந்திக சருவ பயனின்கண் விரத்தியுள்ளவனுமான சாதகனுக்கு என்ன பயனைக் கொடுக்கின்றது. அதாவது ஜன்னியமாகிய ஐஸ்வர்ய வடிவப் பயனைக் கொடுக்கின்றதா அல்லது நித்தியமாகிய அவித்தையின் நிவர்த்தியாலுபலக்ஷிக்கப்பட்ட கூடஸ்த சைதன்யானந்த வடிவ பயனைக் கொடுக்கின்றதா.? முதற்பக்ஷத்தில் அது சொர்க்க விசேஷமாதலால் பந்தவடிவமாமாதலின் அதற்குப் பந்தநிவிருத்தியை விரும்புகின்ற புருடனது பயனுந்தன்மை பொருந்தாது. இரண்டாவது பக்ஷத்திலோ சம்பாத்தியத்தன்மையின்மையால் பயனுந்தன்மை பொருந்தாது. பந்தமோக்ஷங்கட்கு சமத்தன்மையும் பிராப்தியாம்.

அவித்தையின் நிவர்த்தியினுல் விசேஷமுளதெனின் அவித்தையின் நிவர்த்திக்கும் ஜன்யத்தன்மை அஜன்யத்தன்மை பக்ஷங்களில் தோஷம் சமமாதலின் ஆதலால் இரண்டு பிரகாரத்தாலும் அநுபபத்தியைக் காண்டலின் ஞானத்தின் பயனுன மோக்ஷ சொருப நிர்ணயத்தின்கண் என்னுடைய மனதில் இச்சையுண்டாகிறது. இப்போது என்பதற்கு சமன்வயாவிரோத சாதன நிருபணனந்தரம

பலநிருபணாவசரத்தில் என்று பொருள். காமம், சங்கல்பம்
என்பதாதி சுருதியினாலும், இச்சை, துவேஷம், சுகம்,
துக்கம் என்பதாதி ஸ்மிருதியினாலும், அர்த்தித்தன்மை
(ஆசை) மனதின்கண்ணதேயாம். மனமென்பதனால்
அஹமம்ஸ சாக்ஷியினும் வேறானதும் கருத்துருத்வாதி
ஸர்வானர்த்த பீஜமும் இதமம்ஸமுமான அகங்காரத்தின்
நிர்த்தேசமாம், என்னுடைய என்பதனால் அகங்காரத்தில்
நின்றும் வேறான சாக்ஷியின் நிர்த்தேசமாம் ஈண்டு தோஷ
மின்றிய என்பதனால் நிர்த்தோஷகரண ஜன்னியத்தன்மை
யால் முதலாவதத்யாயத்தினர்த்தமான சமன்வயமும் அபாதித
விஷயத்தன்மையால் இரண்டாவதத்தியாயத்தினர்த்தமான
அவிரோதமும் தெரிசிப்பிக்கப்பட்டது. மேற்கூறிய சாதனங்
களைக் காரணமாகவுடையது என்பதனால் மூன்றாவதத்தியாயத்
தினர்த்தமான சாதனம் தெரிசிப்பிக்கப்பட்டது. என்ன
பயனை என்பதனால் நான்காவதத்தியாயத்தினர்த்தம் ஆரம்
பிக்கப்பட்டது. முமுக்ஷுவிற்கு என்னும் ஏகவசனத்தால்
ஏகமுமுக்ஷுவினையுடைய ஜகத்தின் திருஷ்டியவஸ்த்தை
தெரிசிப்பிக்கப்பட்டது. பிரம்மஞான என்பதனால் தியான
விலக்ஷண பிரமைவடிவ விருத்தி தெரிசிப்பிக்கப்பட்டது.
என்ன பயனைக் கொடுக்கின்றது என்பதனால் சித்தித்த
வஸ்த்துவின் சம்பந்தாபாதனம் செய்யப்பட்டது, உண்டு
பண்ணுகின்றது என அசித்துவஸ்த்துவின் சம்பந்தப் பிரதி
பாதனமோ இன்றாம். நித்தியத்தன்மையநித்தியத்தன்மை
களின் சந்தேகமூலதாய வழி நித்தியத்தன்மையினம்ஸம்
உத்கடமாதலின். இங்ஙனம் சித்தாந்தத்தைக் கிரகித்து
வினாவின் பீஜம் கூறப்பட்டது. இதன்கண் வாதிகளின்
விப்பிரதிபத்திகள் அநேகப்பிரகாரமாயுள்ளன. அஃதெப்படி
யெனின் மாத்தியமிக பௌத்தர் சூன்யமாத்திரமாகவான்
மாவையங்கீகரிக்கின்றவராய் ஸர்வமும் சூன்யமேயாம்.
விபர்யய தெரிசனத்தினாலோ, சத்வடிவமாகத் தோன்று
கின்றது. பரமார்த்தமாகவோ யாதொன்றும் வாஸ்த்தவ
மின்றாம், என்னும் சூன்யபாவனையின் பிரகருஷ (மேன்பாடு)
பரியந்தமான தத்துவஞானத்தால் சூன்யபாவமே மோக்ஷமா
மெனக் கூறுகின்றனர். யோகாசாரரோ க்ஷணிகவிஞ்ஞான
ஸ்கந்தத்தையான்மாவாகக் கருதுகின்றவராய் சுலக்ஷண
பாவனை, க்ஷணிகபாவனை, துக்கபாவனை, சூன்யபாவனை
என்னும் நான்குவிதமான சத்தியபாவனையினால், அதனது

(விஞ்ஞானஸ்கந்தத்தின்) உபப்லவஸஹித விஞ்ஞான சந்தானத்திற்குத் தீபத்தின் நிர்வாணம்போன்று அந்திய வுபரமத்தினையாவது அல்லது உபப்லவமின்றிய விஞ்ஞான சந்தானத்தினுதயத்தினையாவது, அல்லது ஸர்வஞ்ஞசந்தானத்தினந்தர்பாவத்தினையாவது மோக்ஷமென விச்சிக்கின்றனர்.

அருகதரோ ஸ்திரவிஞ்ஞான வடிவமாய் தேகபரிமாணமுள்ளதாய் சங்கோசவிகாச சுபாவ பரிணாமியாய் ஆன்மாவினை யங்கீகரித்து புரியஷ்டகத்தால் பரிவேஷ்டிதமான அதற்கு அருகத சாஸ்திரத்திற் கூறிய தபசினாலும் ஆன்மாகார சமாதியின் மேம்பாட்டாலும் எட்டுவிதக் கருமபந்தம் துவம்ஸமாகும்போது சுகாகாரமாத்திரமான நிராவரண ஞானத்திற்கு எப்போதும் ஊர்த்துவகமனத்தையாவது அல்லது அலோக (லோகத்தினும் விலக்ஷணமான) ஆகாசகமனத்தையாவது மோக்ஷமெனக் கூறுகின்றனர். பஞ்சரமுடைந்தவழி பஞ்சரத்தின்கண்ணுள்ள கிளிக்கு சுவதந்திரத்தன்மைபோன்று. இந்த சுவதந்திரத்தன்மையே மோக்ஷமெனப் பிரசித்தமாம்.

கணாதரது பதத்தையநுசரித்தவரோ ஆன்மாவை வியாபகமாகவும் ஒன்பது விசேஷ குணங்கட்கு ஆசிரயமாகவும் கற்பிக்கின்றவராய் திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேஷம், சமவாயம் என்னும் ஆறு பதார்த்தங்களின் சாதர்மியவைதர்மியங்களால் யாதொரு தத்துவஞானமுண்டோ அதனைப் பூருவமாகவுடையதும் ஈஸ்வரனது உபாஸனையோடு கூடியதுமான ஆத்மதத்துவ சாக்ஷாற்காரத்தினால் ஒன்பது விசேஷ குணங்களின் பிராகபாவத்தோடு கூடாதத்துவம்ஸம் ஆன்மாவிற்கு மோக்ஷமாமெனக் கூறுகின்றனர்.

நையாயிகரோ பிரமாணம், பிரமேயம், சமுசயம், பிரயோஜனம், திருஷ்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிருணயம், வாதம், ஜல்பம், விதண்டை, ஏத்துவாபாசம். சலம், ஜாதி, நிக்கிரகஸ்தானம் என்னும் பதினாறு பதார்த்தங்களின் உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷையென்னுமிவைகளால் ஆன்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோஷம், பிரேத்தியபாவம், பயன், துக்கம், அபவர்க்கம் எனும் பனிரெண்டுவிதப் பிரமேயங்களின் நிச்சயத்தினால் சிரவண, மனன, நிதித்யாசன, பூருவகமான சீவான்ம பரமான்மாக்களின் சாக்ஷாற்காரத்தால் வாசனையோடுகூடிய மித்தியாஞானம் நிவர்த்தியாம். அதனால் அதன் காரியமான

இராகத்துவேஷமோகமென்னும் தோஷம் நிவர்த்தியாம். அதனால் அதன் காரியமும் பிரவிருத்திபூருவகமுமான தருமா தருமங்களின் நிவர்த்தியாம். அதனால் முன்பு சம்பாதிக்கப் பட்ட கருமங்கள் காயசமுதாய பூருவகமான போகத்தால் நசித்துவிடுவதால் அன்னிய சரீரத்தின் ஆரம்பமின்றும் அதனால் வாசனை வடிவமான இருபத்தியோரு பேதமான துக்கங் களின் அத்தியந்தத்துவம்ஸம் மோக்ஷமாமெனக் கற்பிக் கின்றனர்.

வேறு சிலர் ஏகபவிக நியாயத்தால் ஆன்மஞானமின்றியும் சருவகருமங்களின் நாசவடிவ மோக்ஷம் சுவயமேயுண்டா கின்றது எனக் கூறுகின்றனர். அதாவது நிஷித்தகருமத் தினையும் காமியகருமத்தினையும் அநுஷ்டியாமல் விடுதலாலும் நித்தியகருமங்களையநுஷ்டித்தலாலும் ஆகாமி புண்ணிய பாபம் உற்பத்தியாவதின்றும். வர்த்தமான புண்ணிய பாபம் போகத்தால் நசித்துவிடும். ஆதலால் காவியினால் சென்னிற மாயுள்ள பலாசபுஷ்பங்கள் என்னும் நியாயத்தால் ஆன்மாவின் கண்ணுள்ள ஸர்வபிராகபாவத்தின் நிவர்த்தியினால் கூறப் பெற்ற சருவகருமங்களின் வினாசவடிவ மோக்ஷம் சுயமே யுண்டாகின்றனவென்று கூறுகின்றனர்.

பிராபாகரரும் விதிக்கப்பட்டவான்மஞான பூர்வகமாக வைதிக கருமானுஷ்டானத்தால் தேஹேந்திரியாதிகளின் சம்பந்தத்திற்கு மூலத்தோடுகூட தர்மாதர்மங்களின் நாசத்தை நிமித்தமாகக்கொண்டு யாதொரு அத்தியந்தநாசமுண்டோ அதனை மோக்ஷமாமென்று கருதுகின்றனர். பட்டரோ ஞான கருமங்களின் சமுச்சயத்தினாலேயே ஜடஞான வடிவமான வான்மாவிற்கு நித்தியசுகமும் உதயமாகின்றது. அதனால் விஷய விசேஷத்தினபேக்ஷையின்மையால் நித்தியஞானத் தால் நித்தியசுகத்தினபிவியக்தி மோக்ஷமாமென்று கூறு கின்றனர்.

அவரை யனுசரித்த சில பேர்கள் மானச ஞானத்தால் நித்திய சுகத்தினபிவியக்தியாவது அல்லது தார்க்கிகர் போன்று துக்காபாவமாத்திரமாவது மோக்ஷமாமெனவும் கூறு கின்றனர்.

சாங்கியர்களோ பிரகிருதி புருஷர்களின் விவேகத்தால் அனாதியான அவிவேகம் நிவர்த்தியாகும் அப்போது அப்புருஷனைக் குறித்து அதிகாரத்தில் நின்றும் நிவர்த்தி

யடைந்த பிரகிருதிக்கு மீண்டுமவனது போகத்தின் பொருட்டான பிரவிருத்தியின்ருய் ஆதலின் மூவித துக்கத்தின் அத்தியந்த நிவர்த்தியே சுபாவமாக கேவல புருஷனுக்கு மோக்ஷமாமெனக் கூறுகின்றனர்.

பாதஞ்சலர்களோ பிரகிருதி புருஷர்களின் விவேகத்தால் அப்பியாச வைராக்கியங்களின் பரிபாகமாயுள்ளதும் இயமநியம ஆசன பிராணுயாம பிரத்தியாகார தாரணதியான சம்பிரஞ்ஞாத சமாதிகளை காரணமாக வுடையதும் பரமேஸ்வரனது பிரசாதத்தாலுண்டாவதும், ஐந்துவித சித்த விருத்திகளின் நிரோத வடிவமும் தருமமேக சப்தத்தால் சொல்லப்பட்டதுமான அசம் பிரஞ்ஞாத சமாதியினுலேயே மோக்ஷமாமெனக் கற்பிக்கின்றனர்.

திரிதண்டிகளோ (வைஷ்ணவர்களோ) ஜீவப்பிரம்மங்களுக்கு பேதாபேதத்தை யங்கீகரித்து ஞான கருமங்களின் சமுச்சயாப்பியாசத்திலுலேயே காரணுன்மக பிரம்மத்தின்கண் காரியான்மக ஜீவனுக்கு கருமவாஸனையோடு கூடிய பேதாம்ஸத்தின் நிவர்த்திவடிவலயம் மோக்ஷமெனக் கூறுகின்றனர்.

பிரம்மஸம்பந்தி பரமைஸ்வர்யத்தோடுள்ள சம்பந்தம் மோக்ஷமாமெனச் சிலர் கூறுகின்றனர்.

ஸதரங்க நிஸ்த்தரங்கபேதத்தால் சமுத்திர மிருவிதமாவது போன்று ஸவிகார நிர்விகார ரூபத்தால் பிரம்மத்திற்கு இரண்டவஸ்தையினை கற்பித்து ஞான கருமங்களின் ஸமுச்சயாப்பியாசத்திலுலேயே ஸவிகாராவஸ்தையின் பரித்தியாகத்தால் நிர்விகாராவஸ்த்தையின் பிராப்தியே மோக்ஷமாமென பலர் கூறுகின்றனர்.

பாசுபதர்களோ (சைவர்களோ) தமது சாஸ்த்திரத்திற் கூறப்பட்ட பாசுபத தருமங்களினனுஷ்டானத்தால் பசுவின் பாசநீக்கத்தால் பசுபதியின் சமீபத்திற் செல்லுதலே புனராவிருத்தியற்ற மோக்ஷமாமெனக் கூறுகின்றனர்.

இங்ஙனம் கூறப்பட்ட விஷ்ணுபக்த தருமங்களின் அநுஷ்டானத்தாலுண்டான விஷ்ணுவின் பிரசாதத்தால் விஷ்ணுலோககமனமே மோக்ஷமாமென்று வைஷ்ணவர்கள் கூறுகின்றனர்.

பஞ்சாக்னிவித்தை முதலிய வுபாசனைகளால் அர்ச்சிராதி மார்க்கத்தால் இரணியகர்ப்ப பிராப்த்தியே மோக்ஷமாமென இரணியகருப்ப வுபாசகர்கள் கூறுகின்றனர்.

ஔபனிடதர்களாகிய வேதாந்திகளோ நிரதிசயாத்துவயாநந்த போத வடிவ ஆன்மாவே அநாதியவித்தையின் நிவிருத்தியால் உபலக்ஷிக்கப்பட்டதாகி மோக்ஷமாமெனக் கூறுகின்றனர். அவித்தையும் துக்க சட அநிருத வடிவ சருவத்துவைதப் பிரபஞ்சத்தின் உபாதானமாதலால் ஆன்ம சாக்ஷாற்காரத்தால் அஃது நிவர்த்தியாகும் போது அதனையுபாதானமாகவுடைய சருவத்துவைதப் பிரபஞ்சமும் நசித்தலாலும் அநாதியாகிய அவித்தைக்கு மீண்டும் உற்பத்தியைச் சம்பாதித்தல் கூடாமையானும் ஆத்தியந்திக சருவதுக்க நிவர்த்தியும் பொருந்துகின்றது. அந்த நிவர்த்தியும் ஆன்மாவின் சொரூபமாகுங்கால் சாதனத்தின் அபேக்ஷயின்றும். அங்ஙனமாயினும் வியஞ்சகத்தன்மையால் அநாதியவித்தையின் மறப்பை நீக்குதலால் வேதாந்த மகாவாக்கியத்தைக் காரணமாகவுடைய ஆன்மாவின் சாக்ஷாற்காரமே பிரதிபந்த சதுஷ்டயமின்றியதாகி சாதனமாம். பிரதிபந்த சதுஷ்டயமாவது விஷயபோக வாசனை. பிரமாணகத அசம்பாவனை. பிரமேயகத அசம்பாவனை. பிரமிதிகத அசம்பாவனை யென்னுமிவையாம். அவற்றுள் விஷயபோக வாசனையை சிரவணத்தினங்கமான சமம் முதலியவை நிவர்த்தி செய்கின்றன. பிரமாணகத அஸம்பாவனையை சிரவணம நிவர்த்தி செய்கின்றது. பிரமேயகதாஸம்பாவனையை மனனம் நிவர்த்தி செய்கின்றது. சாக்ஷாற்கரிக்கின்றேன் என்னும் இத்தகைய வியவகாரத்திற்கு விரோதியான பிரமிதிகதாஸம்பாவனையை நிதித்தியாசனம நிவர்த்தி செய்கின்றது. ஆதலின் சமம் முதலியவற்றேடு கூடிய முமுக்ஷுவினுல் சற்குருவையடைந்து மோக்ஷசாதனமான பிரம்மான்ம ஐக்கிய சாக்ஷாற்காரத்தின் பிரதிபந்தமான அசம்பாவனை முதலியவற்றின் நிவர்த்தியின் பொருட்டு நான்கு அத்தியாய வடிவ உத்தரமீமாம்ஸையினுல் வேதாந்த வாக்கிய விசாரம் பிரதிபந்த நிவர்த்தி பரியந்தம் அங்கசகிதம் ஆவிருத்தி செய்யத்தக்கது என்க. இத்தகைய வாதிகளின் விப்பிரதிபத்தியால் வியாகுலமுற்ற எனக்கு இதர மதத்தை நிராகரித்து வேதாந்த மதத்தினையே நல்ல யுக்தியினுல் அறிவிப்பாயாக என்பது சீடனது கருத்தாம். (1)

(அ) பிரம்மவித்தை கருமத்திற்கு அங்கமாகாமலே மோக்ஷ சாதனமாயினும் அஃது பாப க்ஷயத்தை விரும்பும் புருடனுக்கு சேது தெரிசனம்போன்று அதிருஷ்டவாயிலாக சகாயாந்தரத்தை யபேக்ஷித்து மோக்ஷத்தை சாதிக்கின்றதா அல்லது சர்ப்பமாகக் கிரகிக்கப்பட்ட இரச்சுவின்கண் தோஷத்தின் நீக்கத்தால் இரச்சு ஞானம் போன்று அதிஷ்டானத்தினஞ்ஞான நிவர்த்திவாயிலாக திருஷ்டசாதனத்தினுலேயே அஞ்ஞானத்தையுபாதானமாகவுடைய பிராந்தியினை நிவர்த்திக்கின்றதாக அதனை சாதிக்கின்றதா என்று சந்தேக முற்ற சீடனது வேறு வினவை ஆரம்பிக்கின்றார்:—

किं निरस्तसहकारिकारणा केवलैव फलमर्पयेन्मतिः ।
बाह्यसाधनसहायसम्पदा वाऽन्विता फलविधायिनी भवेत् ॥ २ ॥

பதவுரை

किं निरस्तसहकारिकारणा-ஸஹகாரிகாரண மற்றதாய்

केवला एव मतिः -கேவலமான்ம ஞானமே

फलम् अर्पयेत् किम् -மோக்ஷத்தை யுண்டுபண்ணுகின்றதா

वा बाह्यसाधनसहाय संपदा अन्विता -அல்லது பாஹ்ய சாதனமாகிய சஹாயத்தோடு கூடினதாகி

फलविधायिनी भवेत् -மோக்ஷத்தையுண்டுபண்ணுகின்றதா.

விசேஷவுரை

ஸஹகாரிகாரணமற்றது எனபது கேவல என்பதன் வியாக்கியானமா மல்லது கேவலமென்பதற்கு கருமப்பிரயோகத்தில் அந்தர்பூதமாகாத என்று பொருள் ஆன்ம ஞானமானது பிரமாண விருத்தியாதலால் உத்கீத முதலிய தியான வடிவ விருத்தியினும் விலக்ஷணமாயினும் ஆஜ்யாவே லக்ஷணம் போன்று கருமத்திற்கு அங்கமாமென ,பிராப்தமாகுங்கால் கேவலமென்று கூறப்பட்டது. கருமத்திற்கு அங்கமின்றியதாகியே ஆன்மஞானம் தனது பிராமாண்யத்திற்கு அனுபயோகியான பாஹ்ய எஞ்ஞாதி பூர்ண ஸஹாயத்தோடு சமுச்சிதமாகி மோக்ஷத்தினையதிருஷ்டவாயிலாக உண்டு

பண்ணுகின்றதா, அல்லது பாஹ்ய சகாயமற்றதாகி திருஷ்ட வாயிலாகவே பலனையுண்டுபண்ணுகின்றதா என்பது சங்கையின் பொருள். பாஹ்ய என்னும் விசேஷணத்தால் சுக்தி ஞானத்திற்குப் போன்று பிராமாண்யத்தினுபயோகியான விசாரவடிவ பரீக்ஷையை யபேக்ஷிக்கினும் தோஷமின்ரும். (2)

(அ) இங்ஙனம் ஸாதனத்தின் கண்ணுள்ள சம்சயத்தினைக் கூறி அதனை நிராகரித்தற் பொருட்டு தனது பிரயத்தனத்தினை அறிவிக்கின்றவனுய் குருவைப் பிரார்த்திக்கின்ருன் :—

एतदप्यहमवैतुमुत्सहे निर्णयं कुरु कृपाविधेयधीः ।
एतदेव हि दयालुलक्षणं यद्विनेयजनबुद्धिवर्धनम् ॥ ३ ॥

பதவுரை

पतदपि – ஸாதன ஸமுசயத்தினையும், பயனையும்

अवैतुं – சந்தேகநீக்க வாயிலாக நிச்சயஞ் செய்தற்கு

अहं उत्सहे – நான் யத்தனஞ் செய்கின்றேன் அல்லது இச்சிக்கின்றேன்

निर्णयं कुरु – சமுசயத்தினைக் கெடுக்கின்ற நிச்சயத்தினை குருவே நீர் எனக்குண்டு பண்ணுவீராக உண்டுபண்ணுவீராக என்பது ஆஞ்ஞாபிக்கின்றிலன் மற்ரு பிரார்த்திக்கின்றனன் எதனுலெனின்

कृपाविधेयधीः – எனது விஷயக கிருபையினுல் வசம் பண்ணப்பட்ட சித்தமுள்ளவராயிருக்கின்றீர்

அற்றேல் கிருபையின் வசத்தால் உனக்கு ஆசீர்வாதங்களே விரும்பத்தககனவாம். உன்னேடு கூட வாக்கின் வியாபாரம் செய்யத் தக்கதன்று என்னுஞ் சங்கைக்கு குருவைத் துதிக்கின்றவனுய்ப் பெருமைப்படுத்துகின்ருன்.

विनेयजनबुद्धिवर्धनं यत् – சிஷ்யனுடைய புத்தியை விருத்தி பண்ணுதல் யாதொன்றுண்டோ

एतदेव हि दयालुलक्षणम् – அதுவே தயாளுவாகிய குருவிற்கு லக்ஷணமாம்

## விசேஷவுரை

என்போன்ற சீடர்களுக்கு ஸர்வ சம்சயங்களையும் போக்கி அறியப்படாத அவ்வவ்வஸ்த்துவின் விசேஷஞானத்தை யுண்டு பண்ணுதலே தயையுடைய குருவிற்கு சுபாவமாமாகலின் தனது தயையின் சுபாவத்தினதீனராயிருந்து கொண்டே நீர் ஆயாசத்தைச்சஹித்தும் வேறு கதியற்ற வெனக்கு ஞானத்தை யுண்டு பண்ணுதற்கு யோக்கியராயிருக்கின்றீர் என்பது கருத்து. (3)

(அ) இங்ஙனம் ஸ்துதிபூர்வக வினவினால் சந்தோஷத்தினை யடைந்த குருவானவர் இரண்டு வினவிற்கும் உத்தரத்தினைப் பிரதிஞ்ஞை செய்கின்றார் :—

**उच्यते न तमसो निवृत्तितः किञ्चिदस्ति परमात्मधीफलम् ।**
**अन्यदल्पमपि साधनान्तरं न व्यपेक्ष्य फलदायिनी च धीः ॥ ४ ॥**

## பதவுரை

**उच्यते** - உனது வினவிற்கு உத்தரம் கூறப்படுகின்றது

**तमसः निवृत्तितः** – அநாதியான வஞ்ஞான நிவர்த்தியினும் வேருக

**परमात्मधीफलम्** - பிரம்ம ஞானத்தின் பயன்

**किञ्चित् न अस्ति** – பிராகட்டிய முதலிய யாதொன்று மின்ரும்

அஞ்ஞானத்தின் நிவர்த்தியே யாண்டும் ஞானத்தின் பயனும் அஞ்ஞான காரியத்தின் நிவர்த்தியோ காரண நிவர்த்தியினாலேயே யாம் என்பது முதலாவது சங்கையின் நிர்ணயமாம்.

**धीः अन्यत् अल्पमपि साधनान्तरं व्यपेक्ष्य** – அதிஷ்டானப் பிரமையானது அன்னியமாகவற்பமாயினும் சாதனாந்தரத்தையபேக்ஷித்து

**न च फलदायिनी** - பயனைக்கொடுப்பதின்ரும் மற்ருே அபேக்ஷியாமலே பயனைக்கொடுப்பதாமென்பது பொருள்

## விசேஷவுரை

அற்பமாயினுமென்றவும்மைக்கு அத்தியந்தமபேக்ஷிக்கிறதேயில்லையென்பது பொருள். அன்னிய சப்தத்தினாலேயே பேதம்

சித்தித்தமையின் அந்தரசப்தம் அத்தியந்தம் விலக்ஷணத் தன்மையைப் பிரதிபாதித்தற் பொருட்டாம். அதனால் மிகவும் விலக்ஷணமும் பிராமாண்யத்தினனுபயோகியுமான அன்னிய சாதனத்தை அதாவது கருமத்தையாவது உபாசனையினையாவது அபேக்ஷிக்கிறதில்லை பிராமாண்யத்தினுபயோகியான பரீக்ஷையினையோ அசம்பாவனை முதலிய பிரதிபந்த நிவர்த்தியின் பொருட்டு அபேக்ஷிக்கப்படுகின்றதேயாம் என்பது கருத்து. அதனால் பிராமாண்யத்தின் பரீக்ஷை முதலியவற்றால் புஷ்டி செய்யப்பட்டிருத்தலால் பிரம்மஞானம் அசம்பாவனை முதலிய பிரதிபந்தமற்றதாய் சுக்திஞானம்போன்று திருஷ்டவாயிலாகவே தனது விஷயமான அஞ்ஞானத்தைக் கெடுக்கின்றதாய் அதன் காரியமான பிரபஞ்சத்தையும் இராஜதத்தினைப்போன்று கெடுக்கின்றதாதலின் ஞானம் யஞ்ஞாதியோடு சமுச்சிதமன்றும் என்பது இரண்டாவது வினாவின் நிர்ணயமாம். (4)

(அ) ஞானத்திற்கு அவித்தையின் நிவர்த்தியே பயனும் அதன் கண்ணும் கருமம் முதலிய சஹகாரியின் அபேக்ஷையின்றும் என இரண்டு பொருளின் கண்ணும் தனது அநுபவத்தையும் அநுமானத்தையும் பிரமாணமாக்குதற்கு திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

**शुक्तिकाविषयबुद्धिजन्मनः शुक्तिकागततमोनिवृत्तितः ।**
**नापरं किमपि दृश्यते फलं नापरं च सहकारिकारणम् ॥ ५ ॥**

### பதவுரை

**शुक्तिकाविषयबुद्धिजन्मनः** – சுக்திவிஷயக ஞானத்தினுற்பத்திக்கு

**शुक्तिकागततमोनिवृत्तितः** – சுக்தியின் கண்ணுள்ள அஞ்ஞான நிவர்த்தியினும்

**अपरं किमपि फलं न दृश्यते** – வேருக யாதோர் பயனும் காணப்படுகின்றதில்லை

**अपरं सहकारिकारणं च न** – வேறே சஹகாரி காரணமும் காணப்படுகின்றதில்லை

### விசேஷவுரை

சுக்தியினுகாரமாக உற்பன்னமான ஞானத்திற்கு சுக்தியவச்சின்ன சைதன்னியத்தின் கண்ணுள்ள அஞ்ஞான நிவர்த்தியன்றி

வேறு யாதோர் பயனும் காணப்படவில்லை கங்கா ஸ்நாநம், காயத்ரீ ஜபம் முதலிய சஹகாரி காரணமும் அதன்கண் காணப் படவில்லை ஞானத்திற்கு என்று கூறவேண்டிய இடத்தில் ஞானத்தினுற்பத்திக்கு என்று கூறினது உற்பத்தியினும் வேருக வியாபாரமின்மையைத் தெரிவித்தற்பொருட்டாம். சுக்தியின் கண்ணுள்ள அஞ்ஞானமென்றது சுக்தியவச்சின்ன சைதன்னியத் தின் கண்ணுள்ள அஞ்ஞானமென்று அபிப்பிராயமாம். ஜட பதார்த்தங்களில் ஆவரணமின்மையைப் பிரதிபாதித்தமையின். இவ்வாருகவே எது ஞானத்தின் பயனே அது அவித்தையின் நிவர்த்தி மாத்திரமும் சககாரி நிரபேக்ஷமுமாமென இரண்டின் கண்ணும் வியாப்தி சித்தித்கதென்பது பொருள். (5)

(அ) இங்ஙனம் வியாப்தி சித்தித்த வழி சுக்தி ஞானத்தின் திருஷ்டாந்தத்தால் ஆன்மஞானத்தின் கண்ணும் அவ்விரண்டும் அனுமிக்கப்படுகின்றது எனக்கூறுகின்ருர் :—

एवमात्मनि तमोनिवृत्तितो नान्यदस्ति परमात्मधीफलम् ।
नाप्यपेक्ष्य सहकारिकारणं किञ्चिदात्ममतिरर्पयेत्फलम् ॥ ६ ॥

## பதவுரை

एवं आत्मनि – சுக்தியிற்போன்று நிர்விபாக சேதனத்தின் கண்ணும்

तमोनिवृत्तितः – அதனையாசிரயமாகவும் விஷயமாகவுமுடைய யாதோரஞ்ஞான முண்டோ அதன் நிவர்த்தியினும்

अन्यत् परमात्मधीफलं नास्ति – வேருக அகண்ட வாக்கியார்த்த ஞானத்திற்கு பயன் இன்ரும்

किञ्चित् सहकारिकारणम् – யாதேனும் ஸஹகாரிகாரணத்தை

अपेक्ष्य आत्ममतिः – அபேக்ஷித்து ஆன்ம ஞானம்

फलं नापि अर्पयेत् – பயனை சமர்ப்பணஞ் செய்வது மின்ரும்

## விசேஷவுரை

ஈண்டு அஞ்ஞான நிவர்த்தி மாத்திரமும் ஸஹகாரி நிரபேக்ஷமுமாகிய விரண்டு சாத்தியத்தின் கண்ணும் ஞானத் தன்மையினையே ஏதுவாகக்காண்க அதாவது ஆன்மாவின்

யதார்த்த ஞானம் ஸாதனாந்தரத்தை யபேக்ஷியாமலேயே தனது விஷயத்தின் அஞ்ஞான நிவர்த்தி மாத்திர பயனையுடையது. யதார்த்த ஞானமாதலால், சுக்தி ஞானம் போன்று. என்னு மநுமானம் சூசிப்பிக்கப்பட்டது. ஏதுவைக் கூருமையினால் வித்துவானுடைய அனுபவமும் சூசிப்பிக்கப்பட்டது. எப்படி இது சுக்தியாயிருக்கின்றது அவ்வடிவத்தால் விளங்குகின்றது என அதனநுபவமுளதோ அப்படி நான் பிரம்மமாயிருக்கின்றேன் அவ்வடிவத்தால் விளங்குகிறேன் என அஸத்துவாவரணத்திற்கும் அபானுவரணத்திற்கும் விரோதியாகிய வித்துவானது அநுபவம் சாக்ஷிசித்தமாயிருத்தலின். (6)

(அ) அற்றேல் யதார்த்த ஞானத் தன்மையாவது தத்துவ விஷயக மனதின் பரிணாமத்தன்மையாம். மனதின் பரிணாமங்களனைத்திற்கும் ஆன்மசைதன்யத்தை விஷயஞ் செய்யுந்தன்மை யுண்மையால் தத்துவ விஷயகத்தன்மையின் வியபிசாரமின்றாம் ஆதலின் ஞானத்தன்மை மாத்திரமே ஏதுவாம். அதுவும் "கௌதம அவ்வுலகம் அக்கினி" என்பது முதலிய வாக்கியத்தாலுண்டான உபாஸனைவடிவ ஞானத்தின் கண் வியபிசாரியாம். ஆவிருத்தி செய்யப்படுகின்ற அவ்வுபாஸனை தேவயானமார்க்கத்தால் காரியப்பிரம்மத்தின் உலகப் பிராப்திக்கு ஏதுவாதலால் அஞ்ஞானத்தை நிவர்த்திக்குந் தன்மையின்றாம் ஆகலினாலும் ஆவிருத்தியின் சாபேக்ஷத்தன்மை யுண்மையினாலும் என்க. பிரமிதித்தன்மை ஏதுவாம் இவ்வாருகவே வியபிசார மின்றாம் என்று சொல்லற்க. அந்த பிரமிதித் தன்மையாவது அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்ற விருத்தித் தன்மையா அல்லது பிரமாணத்தைக் கரணமாகவுடைய விருத்தித்தன்மையா. முதற் பக்ஷத்தில் சாத்தியத்தினும் விலக்ஷணமின்மையின் அசித்தியாம். இரண்டாவது பக்ஷத்திலோ உலகம் அக்கினி என்பது முதலிய ஞானத்தின்கண் வேதம் கரணமாதலின் வியபிசாரமாம். மேலும் பிரம்மவித்தை அஞ்ஞான நிவர்த்தியாகிய பயனையுடையதன்றாம். சாஸ்திர ஜன்னிய வித்தையாதலின். உலகம் அக்கினி என்னும் வித்தைபோன்று. என்னும் சற்பிரதிபக்ஷமுமாம். சுக்தியாதி வித்தையின்கண் சாஸ்திர ஜன்னியத் தன்மையின்மையின் வியபிசாரமின்றாம். பிரமைத் தன்மையின் அபாவம் உபாதியாமென்று சொல்லற்க. அதுவும் அவ்வேதுவினாலேயே பக்ஷத்தின் கண் சாதிக்கப்படுதலின். சாண்டில்யம் தகரம் என்பன முதலிய பெயரினையுடைய சாஸ்திரீய வித்தைகள் அனைத்திற்கும் பிரமைத் தன்மையின் அபாவம் நியமமாதலின், அப்படியே பிரம்ம

வித்தை அர்ச்சிராதி மார்க்கப் பிராப்திவாயிலாக ஐஸ்வர்ய பயனையுடையது, சாஸ்த்ரீய வித்தையாதலால், பஞ்சாக்னி வித்தைபோன்று, என்னுமனுமானத்தால் பாதமுமாம். ஆதலால் கூறப்பெற்ற சித்தியின்றும் என்று ஆசங்கித்து லோகம் அக்கினியென்பதாதி வித்தையினின்றும் பிரம்மவித்தைக்கு விலக்ஷணத்தன்மையைப் பிரதிபாதித்தலால் சமாதானஞ் செய்கின்றார் :—

ब्रह्मज्ञानं प्रमाणं भवति दृढमिदं नात्र कश्चिद्विवादो
 ब्रह्मात्मा चैकरूपो न च बहुरसकस्तत्परत्वाच्छ्रुतीनाम् ।
एवं सत्यद्वयात्मप्रमितिफलमिह द्वैतमूलापनुत्ति-
 र्न ह्यज्ञानापनुत्तेरधिकमपि फलं किञ्चिदस्ति प्रमाणात् ।' ७ ॥

**பதவுரை**

इदं ब्रह्मज्ञानम् – இந்த பிரம்மவித்தை
दृढं प्रमाणं भवति – திடமான பிரமையாம்
अत्र न कश्चिद्विवादः – இதில் யாதொரு விவாதமுமின்றும்
ब्रह्म आत्मा च एकरूपः – பிரம்மமும் ஆன்மாவும் ஏகவடிவமாம்
न च बहुरसकः – அனேக வடிவமன்று
श्रुतीनां तत्परत्वात् – உபநிஷத்துக்கள் அத்துவைத பிரம்ம பரமாயிருத்தலின்
एवं सति इह – இவ்வாருகுர்போது ஆன்மாவின்சண்
अद्वयात्म प्रमितिफलम् – அத்துவயவான்ம ஞானத்தின் பயனுனது
द्वैतमूलापनुत्तिः – அஞ்ஞானத்தின் நிவர்த்தியேயாம்
अज्ञानापनुत्तेः – அஞ்ஞான நிவர்த்தியினும்
अधिकमपि किञ्चित्फलम् – அதிகமாக யாதோர் பயனும்
प्रमाणात् न हि अस्ति – பிரமாணத்தினல் இன்றும்

**விசேஷவுரை**

பிரம்மவித்தை பிரமிதியன்று. சாஸ்திரீய வித்தையாதலால், உலகம் அக்கினியாம் என்பது முதலிய வித்தைபோன்று. என்னுமநுமானம் சரியன்றும் எதனுலெனின் பிரம்மஞானம் பிரமிதியாம், தோஷமின்றிய கரணத்தால் ஜன்னியமாதலானும்

பாதிக்கப்படாத விஷயத்தையுடைமையானும் என பரீக்ஷிக்கப் படுதலின், திடமாவது—அப்பிராமாண்ய சங்கைக்கு அயோக்கிய மாம். இதில் யாதொரு விவாதமுமின்ருமென முதலாவது இரண்டாவது அத்தியாயங்களில் பெரிய யத்தினத்திஞல் பரிகரிக்கப்பட்டமையின். லோகம் அக்கினியாமென்பதாதி வித்தையோ தோஷமின்றிய வேதத்தைக் கரணமாகவுடைய தன்ரும் மற்ருே புருஷப் பிரயத்தினத்தைக் கரணமாகவுடைய தாம் பாதிக்கப்பட்ட விஷயத்தை யுடையதுமாம். உலகத்தை அக்கினிவடிவமாகச் சிந்திக்குக என்னும் ஞானமோ வேதத்தைக் கரணமாகவுடையதும் பிரமிதியுமாம். அதாவது பிரமாணத்தைக் கரணமாகவுடைய விருத்தித்தன்மையாவது அல்லது அபாதித விஷயக விருத்தித் தன்மையாவது அல்லது அஞ்ஞாத விஷயக விருத்தித் தன்மையாவது அல்லது அததுவ அவிஷயக விருத்தித்தன்மையாவது அலலது பிரயத்திஞ ஜன்னிய யதார்த்த விருத்தித் தன்மையாவது பிரமிதித்தன்மையாம். இத்தகைய பிரமிதித்தன்மை ஏதுவாமாதலின் வியபிசாரமின்ரும.

சுருதியின்கண் ஞானத்திற்கும் சங்கல்பத்திற்கும் பேதத்தைக் கூறியிருத்தலால் ஞானத்தை அபேக்ஷித்து மானஸ கரும வடிவ சங்கல்பத்திற்கு சோதனையின் அதீனமான புருஷப் பிரயத்தின சாத்தியத் தன்மையால் விலக்ஷணத் தன்மை இருத்தலின். இச்சையில்லாதவனுக்கும துர்க்கந்தம் முதலியவற்றின் ஞானம் காணப்படுதலின் ஞானத்திற்கு வஸ்துவின் பரதந்திரத் தன்மை யால் புருஷப் பிரயத்தினத்தின் அபேக்ஷையின்மையின். ஆதலால் தியானத்தின் கண ஞானத்தன்மை இன்ருயினும் பிராந்தி ஞானத்தின்கண் வியபிசாரத்தை நிவர்த்தித்தற் பொருட்டு தத்துவ பதம் அதத்துவ அவிஷயதததுவ பரமாம் அல்லது யதார்த்தத்தன்மை பரமாம். பிராந்திஞானம அவித்தையின் விருத்தி வடிவமாதலால் மனதின் விருத்தித்தனமை வடிவ ஞானத்தன்மை அதன் கண் இன்ரும் என்று கூறப்படுமாயின் அப்போது தத்துவ பதம் கொள்ளத்தக்கதேயின்ரும் ஸ்மிருதியும் அவித்தையின் விருத்தி வடிவமாதலால் ஞானமன்ரும் ஆதலின் வியபிசாரமின்ரும்.

சாஸ்திரீய வித்தியாத்தன்மை ஏதுவால் சாத்தியாபாவத் தைச் சாதித்தல் பொருத்தமன்ரும். சாஸ்திரீயத் தன்மை என்பதற்கு சாஸ்திரவிகிதத் தன்மையெனப் பொருள் கொள்ளின் அது அசித்தமாம். பக்ஷமாகிய பிரம்மவித்தையின்கண் சுக்தி ஞானத்திற்போன்று பிரயத்தின சாத்தியத்தன்மையின்மையின்.

சாஸ்திரத்தைக்கரணமாகவுடைய தாந்தன்மையெனப் பொருள் கொள்ளின் அது ஜோதிஷ்டோமாதிவிதி ஜன்னியஞானத்திற்குப் போன்று பிராமாண்யப் பிரயோஜகத் தன்மையுண்மையின் விருத்தமாம். இதனுலேயே பிரமைத தனமையின் அபாவத்தைச் சாதித்தலும் கண்டிக்கப்பட்டது. சாஸ்திரீய வித்தைத்தன்மை யால் ஐஸ்வர்ய பலத்தன்மையினனுமானமும் பொருத்தமன்ரும். சாஸ்திர விகிதத் தன்மை சித்தியாமையின் சாஸ்திரத்தைக் கரணமாகவுடையதாந்தன்மையும் ஜோதிஷ்டோமாதி ஞானத் தின்கண் வியபிசரித்தலால் என்று கூறப்பட்டமையின்.

ஆதலால் பிரம்மவித்தை அன்னிய சாதனத்தின் அபேக்ஷை யின்றியதும் அஞ்ஞானத்தின் நிவாத்தி மாத்திரப்பயனையுடையது மாம். பிரமிதித்தனமையால், என்னும் அநுமானம் பொருத்தமே யாம. "பாபம் நீங்கியுளள அவ்வதிகாரிக்கு அஞ்ஞானத்தின் பாரமாகிய பரமான்மாவை சனற்குமார பகவான் தெரிசிப்பிக் கின்ருர்" "அதனது தியானத்தாலும் யோஜன (மனன)த் தாலும தத்துவபாவ (சிரவண)த்தாலும் மீண்டும் அந்தியத்தில் விஸ்வமாயையின் நிவர்ததியாம" "என்னையே எவர்கள் சரணமடைகின்ருர்களோ அவர்கள் இந்த மாயையைக் கடக் கின்ருர்கள்" "இருதயத்தின்கண் பரமான்மா சாக்ஷாத் கரிககப்பட்டபோது விஸ்தாரமான அவித்தையைக் கடக கின்ருன்" என்பது முதலிய சுருதிகளாலுமாம்.

அற்றேல் நான் உக்தமாய் (பிராணனுய்) இருக்கின்றேன் என அறியவேணடும் என்பது போன்று நான் பிரம்மமாயிருக் கின்றேன என்பதுவும் மானசகரியை வடிவ உபாஸனையே யாகுக பிரமிதியன்ரும் அன்னியத்தின்கண் அன்னிய திருஷ்டியை வைத்தலால் சீவப்பிரம்மங்கட்கு அத்தியந்தம் பேதமிருத்தலால் அல்லது பேதா பேதமிருத்தலால். அதாவது பிரம்மவித்தை அவித்தையின் நிவிருத்தியாகிய பயனையுடையதன்ரும். சம்பத் வடிவமாதலால், நான் உக்தமாயிருக்கின்றேன் என்பதாதி சம்பத் ஞானம் போன்று, எனின் அற்றன்றெனக் கூறுகின்ருர். பிரம்ம மும் ஆன்மாவுமென. பிரம்மமே ஆன்மாவாம். அதாவது தத்துவம் பதங்களால் லக்ஷிய சுத்த வாககியார்த்தம் பிரம்மான்மாவாம். அதுவும் ஏகவடிவமாம் அதாவது பின்னமன்ரும் மற்ருே அபின்னமாம்.

பேதாமஸமும் அதன்கண் இருக்குமெனின் அன்றெனக் கூறுகின்ருர். அநேக வடிவமன்றென, அத்தியந்தம் பின்னமன்று பின்னுபின்னமுமன்றென்பது பொருள்.

இரண்டின் கண்ணுமேதுவைக் கூறுகின்றூர் உபநிஷத்துக்கள் அத்வைத பிரம்மபரமாயிருத்தலின என. உபநிஷத்துக்கள் என்னும் பன்மையானது கதிசாமானியத்தைத் தெரிசிப்பித்தற் பொருட்டாம. பிரமமபரமாவது பிரம்ம ஞானத்தின் சேஷமாம். அதுவும் உபக்கிரமம் முதலிய லிங்கத்தாலும் கதிசாமானியத் தாலும் முதலத்தியாயத்தில் நிருணயிககப்பட்டது. இவ்வாருகும் போது — அதாவது சீவப்பிரம்மங்கட்கு அத்தியந்தம் பின்னத் தன்மையும் பின்னுபின்னத தனமையும இல்லாதபோது, அத்துவய ஆன்ம ஞானத்திற்கு—அதாவது வேதாந்த வாககியத்தைக் கரணமாகவுடையதும் விசாரததின் பரிபாகத்தாற் பிரதிபந்தம் நீங்கப்பெற்றதும நான பிரமமமாயிருக்கின்றேனென அகண்ட வாக்கியார்த்தத்தினை விஷயஞ் செய்வதுமான ஞானத்திற்கு அதிஷ்டானப் பிரமைத் தனமையுண்மையால ஆன்மாவின கண் அஞ்ஞானத்தின் அத்தியந்தபாதமே திருஷ்டவாயிலாகப் பயனும் சுகதி ஞானததிற்கு அதன் அஞ்ஞான நிவாத்திபயனுவது போன்று எதன் அஞ்ஞானததிற்கு எது விஷயமோ அதன் ஆகாரபபிரமை அதன அஞ்ஞானததை நிவாததிக்கின்ற தென்னும வியாப்தி யாண்டுமிருததலின. இஃது முதியோராலும கூறப்படடுள்ளது. "ஞானம அஞ்ஞானததினையே நிவாததி செய்வதாம" என.

அற்றேல் சேதுவின் தெரிசனவடிவ பிரமைக்கு அதன அஞ்ஞான நிவர்த்தியினும விலக்ஷணமாகிய பாபநிவர்ததுயே பயனும அது போன்று ஈண்டும் அஞ்ஞான கற்பித பிரபஞ்சததின நிவாததியே பயனுக ஏனுகாது எனனுமிடததுக் கூறுகினருா. அஞ்ஞான நிவர்த்தியினுமதிகமாக யாதொா பயனுமினருமன. சேதுவின் பிரமைக்கு தனது (பிரமை) வடிவத்தால சேதுவின அஞ்ஞானநிவர்ததியே திருஷ்டபயனும. பாவததின நிவாத்தியோ பாவததை வெளிப்படையாகச் சொலலுதல முதலிய நியம சமுதாயததோடு கூடிய சேதுவின தெரிசனததிறகு விகிதக கிரியைத்தனமையால அதிருஷ்டபயனும. இதுவுமலலாமல் அஃது திருஷ்டபயன்போனறு சருவசாதாரணமனரும மற்றூ சில அதிகாரிகட்கேயாம, பிரம்மஞானத்தின பயனே சுக்தி ஞானத்தின் பயன் போனறு சருவசாதாரணமாம.

"तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत् तथर्षीणां तथा मनुष्याणाम्"

'தேவர்களுக்குள் எவர் பரமான்மாவையறிந்தனரோ அவரே அதுவானுர் அப்படியே ரிஷிகளுக்குள்ளும அப்படியே

மநுஷியர்களுக்குள்ளுமாம்' என்னுஞ்சுருதியினல் விகிதகிரியைத் தன்மையால் பிரம்மஞானத்தின் பயனை அசாதாரணமாக அங்கீகரிக்கிறே தேவர்கட்கு அஃது உண்டாகாது. அவர்கட்கு விகிதக்கிரியையின் கண் அதிகாரமின்மையின். "அந்த இவ்வான்மாவை விசாரிக்கின்றவனய் வாமதேவரிஷி அறிந்தார்" என கருப்பத்தின் கண்ணுள்ளவரும் கருமத்தின் அநதிகாரியுமான வாமதேவரிஷிக்கு அஃது (தத்துவஞானம்) கேட்கப் படுதலின். இதனலேயே அக்ஷபாதாசாரியரும் தத்துவஞானத்தினல் மோக்ஷத்தின் அடைவினைக்கூறி அஃது அதிருஷ்டவாயிலாகவா அல்லது திருஷ்டவாயிலாகவா என்று சந்தேகமுண்டாகுங்கால் மித்தியாஞானத்தின் நிவர்த்திவடிவ திருஷ்டவாயிலாகவே சுக்திஞானத்திற்குப் போன்று ஆன்மதத்துவ ஞானத்திற்கும் மோக்ஷம் பயனுமெனக் கூறுகின்ருர்.

दुःखजन्मप्रवृत्तिदोषमिथ्याज्ञानानामुत्तरोत्तरापाये तदनन्तरापायादपवर्गः

துக்கம், ஜன்மம் புண்ணிய பாவம் இராகத்துவேஷம் மித்தை ஞானம் என்பவைகளுள் பின்பின் உள்ளவை நிவர்த்தியாகுங்கால் அதன் முன்முன்னுள்ளவை நிவர்த்தியாம் அதனல் மோக்ஷமுண்டாம் என. சேது தெரிசனத்தினனந்தரம் அதன் அஞ்ஞான நிவர்த்தியினும் அதிகமாக யாதொரு பாபக்ஷயவடிவ பயனுளதோ அஃது பிரமாணத்தினல் உண்டானதன்ரும் மற்ருே அதிருஷ்டவாயிலாக உண்டானதாம் என்க. (7)

(அ) மேலும் சொர்க்கம் பிதுருலோகம் முதலிய பயனையபேக்ஷியாமலேயனுஷ்டிக்கப்பட்டதும் பரமேஸ்வரனிடத்தில் சமர்ப்பிக்கப்பட்டதும இதனலேயே அப்பயனில் நின்றும் நீங்கப் பெற்றதுமான யாதொரு விசிஷ்டசாஸ்த்ரீய கருமமுளதோ அஃது பிரம்ம ஞானத்தால் மோக்ஷததின் பொருட்டு அபேக்ஷிக்கப்படுகின்றது என்று சொல்லப்படுகின்றதா, அல்லது அதனினும் வேருன கருமம் அபேக்ஷிக்கப்படுகின்றது என்று சொல்லப் படுகின்றதா, என்று விகற்பித்து, முதலாவது பக்ஷத்தை 'யஞ்ஞத்தால் அறிய விரும்புகின்றனர்; கருமங்கள் பாவத்தை நிவர்த்தி செய்கின்றன, ஸகலகருமமும் ஹே அர்ஜுனு, ஞானத்தின் கண் முடிவையடைகின்றது என்பது முதலிய வசனத்தின் விரோதத்தால் பரிகரிக்கின்றவராய் கைமுதிக நியாயத்தால் இரண்டாவது பக்ஷத்தையும் பரிகரிக்கின்ருர் :—

**निरभिसंधि समर्पितमच्युते विहितमिष्टफलादपि निर्गतम् ।**
**यदपि कर्म तदप्यवधीरितं यदि धिया न तया परमर्थ्यते ॥ ८ ॥**

பதவுரை

**निरभिसंधि** – பலாபிலாஷையின்றியனுஷ்டிக்கப்பட்டதும்
**अच्युते समर्पितम्** – பரமேஸ்வரனிடத்தில் சமர்ப்பிக்கப் பட்டதும்
**इष्टफलादपि निर्गतम्** – இஷ்டபயனுக்கேதுவாகாததுமான
**यदपि विहितं कर्म** – யாதொரு விஹித கருமமுண்டோ
**तदपि यदि धियावधीरितम्** – அதுவும் ஞானத்தால் உபேக்ஷிக்கப்படுமாயின்
**तया परं न अर्थ्यते** – அந்த ஞானத்தினுல் அதனினும் வேருன கருமம் எங்ஙன மபேக்ஷிக்கப் படும் மற்ருே அபேக்ஷிக்கப்படமாட்டாது

(அ) ஞானகருமங்கட்கு தருசபூர்ணமாஸ மெனப்பெயரிய ஆறு யாகத்திற்குப் போன்று ஸமப்பிரதானத் தன்மையால் மோக்ஷத்தின் சாதனமாக சமுச்சயமாம் என்பது ஒர்பக்ஷம். அவற்றுள் கருமமே பிரதானம் ஞானம் பிரயாஜயாகம் ஆஜ்யாவேக்ஷணம் முதலியது போன்று குணபூதமாமென்பது மற்ெருரு பக்ஷம் ஞானமே பிரதானமாம் கருமம் சேதுவின்தெருசனம் போன்று குண பூதமாமென்பது மற்ெருரு பக்ஷம். இவ்வெல்லா பக்ஷமும் அசம்பவமாமெனப் பிரதிஞ்ஞை செய்கின்ருர் :—

**समविषमसमुच्चयो न युक्तो नहि जगदस्ति धियः प्रसूतिकाले ।**
**क्व नु बत विहितक्रियासमूहः कथमिव तत्र समुच्चयोपपत्तिः ॥ ९ ॥**

பதவுரை

**समविषमसमुच्चयो न युक्तः** – ஞான கருமங்கட்கு ஸமசமுச்சயமும் விஷம சமுச்சயமும் பொருத்தமன்ரும்

அதன்கண் ஏதுவினைக் கூறுகின்ருர்,

धियः प्रसूतिकाले – ஞானத்தினுற்பத்தி காலத்தில்

नहि जगदस्ति – ஸமஷ்டிவியஷ்டிசங்காதவடிவ ஜகத்தே யின்ரும் இங்ஙனம் கருமத்தின் காரகமான ஜகத்து இன்ருகுங்கால்

विहितक्रियासमूहः – விதிக்கப்பட்ட கருமத்தின் ஸமுதாயம்

क्नु वत – எங்கேயுளதாம் ஓரிடத்து மின்ருமென்பது பொருள்

तत्र समुच्चयोपपत्तिः – இவ்வாருகும்போது சமுச்சயத்தின் பொருத்தம்

कथमिव – எங்ஙனமாம்

## விசேஷவுரை

"எந்தக் காலத்தில் வித்வானுக்கு எல்லாமான்மாவாகவே யாயிற்ரே இருதயக்கிரந்தி கெடுகின்றது முதலிய சுருதியினுல் ஸர்வ துவைத ப்ரபஞ்சத்திற்கும் தத்துவ ஞானபாத்தியத்தன்மை பிரதீதியாதலின் தத்துவ ஞான காலத்தில் உனது ஸம்மதமான கருமங்கட்கு இருப்பே இன்ரும் இங்ஙனமாகுங்கால் ஆண்டு ஞானத்தோடு சமுச்சிதமான கருமங்கட்கு மோக்ஷஹேதுத் தன்மை எங்ஙனமாம் என்பது பொருள். (9)

(அ) மேலும் பஹிரங்க சாதனங்களைப் பரித்தியாகஞ்செய்த பரமஹம்ஸ சன்னியாசிக்கே அந்தரங்க சாதனங்களினுல் அவித்தையின் நிவர்த்தகமான வித்தையினுற்பத்தி சுருதி நியாயங்களால் உபபாதிக்கப்பட்டமையானும் ஸர்வ ஏடணைகளு மற்ற அவனுக்கு அக்னிஹோத்திராதிகளும் ஸம்பவியாமை யானும் கருமத்திற்கு மோக்ஷசாதனத் தன்மையின் ஸம்பாவனையே இன்ரும் இவ்வாருகும்போது ஞானத்தோடு ஸமுச்சயமோ வெகுதூரம் தள்ளப்பட்டதாம் என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்:-

अपि च परमहंसस्त्यक्तसर्वैषणः स-
न्ननुभवफलविद्यां साधनैर्यद्यवाप ।
कथमिव पुनरत्र प्राप्तिरस्ति क्रियाया
भवतु तदपवर्गो विद्ययैवैकयाऽस्य ॥ १० ॥

## பதவுரை

अपि च - மேலும்
त्यक्तसर्वैषणः सन् - ஸர்வாசைகளையுந்துறந்தவனுகிய
परमहंसः - பரமஹம்ச ஸன்னியாசியானவன்
साधनैः - சமம் முதலிய நிவர்த்தி சாதனங்களால்
अनुभवफलविद्यां - பிரம்மான் மாநுபவ பரியந்தமான ஞானத்தினை (சாக்ஷாற்காரமென்பது பொருள்)
यदि अवाप - அடைவாஞயின் அப்போது
अत्र पुनः - வித்தையின் பயனின் கண்
क्रियायाः प्राप्तिः - யஞ்ஞாதி கருமங்கட்கு சாதனத் தன்மையின் சம்பாவனை
कथमिव अस्ति - எங்ஙனமாம் இன்ருமென்பது பொருள்

சமுச்சயம் சம்பவியாதபோது திரண்ட பொருளைக் கூறுகின்ருர்.

तद् अस्य - ஆதலால் பரமஹம்ஸ ஸன்னியாசிக்கு
विद्यया एकया एव - தத்துவஞானமொன்றினுலேயே
अपवर्गो भवतु - மோக்ஷமுண்டாம் (10)

(அ) அற்றேல் யாண்டும் நெய்யைப் பார்த்தல் முதலிய சாஸ்திரீய ஞானத்திற்கு புருஷார்த்த ஏதுவான கருமாங்கத்தின் சம்ஸ்காரத்தன்மையால் அதன் (கருமத்தின்) அங்கத்தன்மை காணப்படுதலின் சாஸ்திரீயமான ஆன்மஞானத்திற்கும் அப்படியே அத்தகைய கருமாங்கத்தன்மையினையே கற்பித்தல் உசிதமாம். ஆதலால் சம்ஸ்கார கருமத்தின் பலசுருதிக்கு அர்த்த வாதத்தன்மை யுண்மையால் அதற்கு மோக்ஷஹேதுத்தன் மையேயின்ரும். இவ்வாருகும் போது அதற்கு நிரபேக்ஷத் தன்மை எங்ஙனமாம். என்ருசங்கித்து ஆன்மஞானத்திற்கு கருமாங்கத்தன்மையை போதிக்கும் பிரமாணமின்மையின் அங்ஙனமன்றெனக் கூறுகின்ருர் :—

यस्य प्रयोगविधिरस्ति परिग्रहीता
द्वारैदमर्थ्यविनिवेदकमस्य सर्वम् ।

श्रुत्यादिमानमिह नास्ति तदात्मबुद्धौ
तस्मादियं भवतु नः पुरुषार्थभूता ॥ ११ ॥

## பதவுரை

**यस्य** - (தனது பிரகரணத்தில் படிக்கப்பட்ட அல்லது பொதுவாகப்படிக்கப்பட்ட) எந்த பதார்த்தத்திற்கு

**परिग्रहीता प्रयोगविधिः अस्ति** – போதகமாக பிரயோக விதியுளதோ

**अस्य** – இப்பதார்த்தத்திற்கு

**सर्वं श्रुत्यादिमानम्**- சுருதி லிங்கம் வாக்யம் பிரகரணம் ஸ்தானம் சமாக்யை என்னும் பிரமாண மனைத்தும்

**द्वारैदमर्थ्यविनिवेदकम्** – இந்த வாயிலாக இந்த அருத்தம் அநுஷ்டிக்கத்தக்கது என்று போதகமாம்

**तत्** - சுருதி முதலிய அஃது

**इह आत्मबुद्धौ नास्ति** – ஈண்டு ஆன்மஞானத்தின்கண் இன்ரும்

**तस्मात्** - விநியோகப் பிரமாண மின்மையினுல்

**इयं नः** – இந்த ஆன்ம ஞானம் நமக்கு

**पुरुषार्थभूता भवतु** – புருஷார்த்தமேயாகுக

## விசேஷவுரை

அபூர்வத்தின்கண் பரியவசானமாகின்ற அங்காங்கித் தன்மை பிரமாணந்தரத்திற்கு விஷயமாகாமையின் அதன்கண் சுருதி லிங்கம் முதலியவற்றுள் ஏதேனும் ஒன்று சொல்லத்தக்க தாம். அதுவும் நிரபேக்ஷமாய் அங்கித்தன்மையை சாதிக்காது மற்ருே கிராஹகக் கிரஹணத்தை யபேக்ஷித்தே சாதிக்கும். அங்கசகித கருமத்தின் கண் அதிகாரியைப் பிரேரிப்பிப்பது பிரயோகவிதியேயாம். அதுவே பயனைக்குறித்து சமீபமாயிருத் தலால் பிரதானமாம் ஆதலால் கிராஹக மென்று சொல்லப் படுகின்றது. அதன் பிரகரணத்தில் படிக்கப்பட்ட எல்லாப் பதார்த்தங்களும் அதன் பொருட்டாமென சாமர்த்யமாக எவை

களில் அதன் சேஷத்தன்மையின் கிரகணம் முதலில் உண்டாகிறதோ பின்பு நேரே அதன் சேஷத்தன்மை பொருந்தாத போது அவைகட்கே அதன்கண் துவாரமாயுள்ள உபகாரத்தின் சேஷத்தன்மைவடிவ அர்த்தத்தினை சுருதி லிங்கம், முதலிய பிரமாணம் அறிவிக்கின்றது என்பது சித்தாந்தமாம்.

இங்ஙனமாகுங்கால் உபநிஷத்தாற்றேன்றிய ஆன்மஞானத்திற்கு பிரயோக விதியின் பிரகரணமின்மையினலும் விதியின் யோக்கியதையின்மையினலும் அதனல் கிரகிக்கப்பட்ட தன்மையேயின்றும். இங்ஙனமாகுங்கால் அதன் சேஷத்தன்மையாலும் அதனது துவாரமாயுளை உபகாரத்தின் சேஷத் தன்மை வடிவ அர்த்தத்தை யறிவிப்பதாக சுருதி முதலிய பிரமாணமெங்ஙனமாம் "यदेव विद्यया करोति" எக் கருமத்தினை ஞானத்தால் செய்கின்றனே என யாதொரு மூன்றும் வேற்றுமைச் சுருதியுண்டோ அது பிரகிருத உத்கீதவித்தைக்கு கருமபயனின் விருத்தியில் ஏதுத்தன்மையைப் போதிப்பதாம் பிரம்ம வித்தையை விஷயஞ் செய்வதின்றும். பரலோக ஏதுவான கருமப்பிரவிருத்தியானது தேகத்தினும வேறான ஆன்மஞான மின்றிப் பொருந்தாமையின் தேகத்தினும் வேறான ஆன்ம மாத்திரத்தின் ஞானத்திற்கு ஆண்டு சாமர்த்தியவடிவலிங்கமுளது

அங்ஙனமாயினும் தேகத்தினும் விலக்ஷணத்தன்மை மாத்திரமாக ஆன்மா உபநிஷத்துக்களால் பிரதிபாதிக்கத்தக்க தன்றும் மற்றே பசிதாகாதியற்ற பிராம்மணக்ஷத்திரியாதியற்ற அத்துவயப்பிரம்மவடிவத்தால் உபநிஷத்துக்களால் தாற்பரியமாக பிரதிபாதிக்கப்படுகின்றது. அதன் ஞானமும கருமத்திற்கு உபயோகியன்றும் மாறாய் அதன் விரோதியாம. ஆதலின் சாமர்த்திய வடிவலிங்கமுமின்றும். கூறப்பட்ட ஆன்ம ஞானத்திற்கு கருமத்தோடு ஜுஹூ முதலியவற்றிற்குப்போன்று அவியபிசரித (நியத) சமபந்தமுமின்றும் எதனல் வாக்கியத்தினல் பர்ணத்தன்மைப்போன்று ஆன்மஞானம் கருமாங்கமாகும் ஆதலால் கூறிய ஆன்மஞானத்திற்கு கருமசேஷத்தன்மையின்மையின் அதன் பலசுருதிககு அபூதார்த்தவாதத் தன்மை பொருந்தாமையின் அஃது எமக்கு பரமபுருஷார்த்தத்திற்கு ஏதுவாதலால் சருவத்திற்கும் சேஷியேயாமென்பது பொருள். (11)

(அ) அற்றேல் தத்துவ ஞானத்தினல் ஸாத்தியமான புருஷார்த்த மென்பது என்னை? பரமானந்த சொரூபத்தினை

மறைத்துள்ளதும் ஸர்வானர்த்தத்திற்கு காரணமாயுள்ளதுமான வஞ்ஞானத்தின் நிவர்த்தியேயாமெனின். அப்படியாளுல் அந்த நிவர்த்தியானது. ஸத்துவடிவமா, அல்லது அஸத்வடிவமா அல்லது ஸதஸத் வடிவமா, அல்லது அநிாவசனீயமா அவற்றுள் முதற்பக்ஷமும் இரண்டாவது பக்ஷமும சரியன்று ஸ்த்வபக்ஷத் திலும் அஸத்வ பக்ஷததிலும் பிரமமததிற்குப போன்றும் ஆகாச புஷ்பத்திற்குப் போன்றும் ஸாத்தியத தனமை பொருந்தாமை யானும் அநிர்வசனீயவஞ்ஞானத்தினகண் ஸத்துவமும் அஸத்துவமும் இன்மையால் அதனைப் பிரதியோகியாகவுடைய நிவர்த்தியின்கண் அஃது ஸமபவியாமையானுமெனக

மூன்ருவது பக்ஷமும சரியன்று ஸதஸதான்மகத் தன்மைக்கு ஓரதிகரணத்தின்கண் விரோதமிருத்தலால் அஸமபவமாத லாலும் முற்கூறிய தோஷத்தைப் பரிகரிககக்கூடாமையானும என்க. நான்காவது பக்ஷமும் சரியன்று அஞ்ஞானத்தினும வேருகாத அநிர்வசனீய பதார்த்தத்துற்கு அஞ்ஞானத்தினதீன மான ஸத்தையையுடையதாந் தனமை நியமமாதலால் அஞ்ஞானததின் திதியின்றி அதன நிவர்த்திக்கு அநிர்வசனீயத் தன்மை பொருந்தாமையின் திதியையங்கீகரிககின் அதன் நிவர்த்துக்கு வியாகாதம வருதலினுலும என்க. ஆதலால அஞ்ஞானத்தின் நிவிர்த்தியினையே நிருபிககக் கூடாமையின் அதற்கு தத்துவஞானத்தின் பயனுநதன்மை பொருத்தமற்ற தாம் என்ருசங்கித்து கூறிய நானகு பக்ஷத்தினும வேருக பக்ஷாந்தரததை யங்கீகரித்தலால் அங்ஙனமன்றெனக் கூறுகின்ருர் :—

सदसत्सदसद्विकल्पितप्रतिपक्षैकवपुर्निवर्तनम् ।
तमसोऽभ्युपगम्यतेऽन्यथानुपपत्त्यापतनैकहेतुतः ॥ १२ ॥

**பதவுரை**

तमसः निवर्तनम् — அஞ்ஞானத்தின் நிவர்த்தியானது

सदसत्सदसद्विकल्पितप्रतिपक्षैकवपुः — ஸத்பக்ஷத்தினும் அஸத் பக்ஷத்தினும ஸதஸத் பக்ஷத்தினும் அநிர்வசனீய பக்ஷத்தினும் விருத்தமான அசங்கீர்ண சொரூபமுடையதாக

अभ्युपगम्यते — அங்கீகரிக்கப்படுகின்றது

எப்படி பிரமாணபலத்தினுலே ஒன்றற்கு ஸத்துவமாவது அஸத்துவமாவது ஸதஸத்வமாவது அநிர்வசனீயத்துவமாவது அங்கீகரிக்கப்படுகின்றதோ அப்படி அஞ்ஞானநிவார்த்திக்கும் கூறிய நான்கு பக்ஷங்களும் பொருந்தாமையால் பஞ்சமப் பிரகாரம் அங்கீகரிக்கத்தக்கதாமென்னுங் கருத்தால் ஏதுவினைக் கூறுகிருர்.

**अन्यथानुपपत्त्यापतनैकहेतुत:** - நான்கு பக்ஷங்களும் பொருந்தாமையால் ஐந்தாவது பிரகாரத்தின் பிராப்தி வடிவ முக்கிய ஏதுவினுல் அங்கீகரிக்கப்படுகின்றதெனக் கூட்டுக. (12)

(அ) பஞ்சமப்பிரகாரமான அவித்தையின் நிவிருத்தியின் கண்ணும் அநுபபத்தி காணப்படுதலின் அந்தப்பக்ஷமும் தள்ளத் தக்கதாமென்ருசங்கித்து சத்து அசத்து முதலிய நான்கு பக்ஷங்களை முன்னிட்டதான அநுபபத்திகளே பஞ்சமப்பிரகார அவித்தையின் நிவர்த்தியின்கண் காணப்படுகின்றன என்று சொல்கின்றனையா அல்லது அன்னியமான அநுபபத்திகளே காணப்படுகின்றன என்று சொல்கின்றனையா என்று விகற்பித்து முதற்பக்ஷத்தை நிராகரிக்கின்ருர் :—

**सदसत्सदसद्विकल्पितप्रतिबद्धा न भवन्ति वर्णिते ।**
**परमात्मतमोनिवर्तनेऽनुपपत्तिप्रतिभासवृत्तयः ॥ १३ ॥**

**பதவுரை**

**वर्णिते** - பூர்வ சுலோகத்தின் கண் வர்ணிக்கப்பட்ட பஞ்சமப்பிரகாரமான

**परमात्मतमोनिवर्तने** - ஆன்மாவின் அஞ்ஞான நிவர்த்தியின் கண்

**सदसत्सदसद्विकल्पितप्रतिबद्धा** - ஸத்து அஸத்து ஸதஸத்து அநிர்வசனீயமென்னும் பக்ஷங்களில் ஸம்பந்தித்துள்ள

**अनुपपत्तिप्रतिभासवृत्तयः** - அநுபபத்தி தோற்றங்களாகிய தோஷங்கள்

**न भवन्ति** - சம்பவிக்கின்றதில்லை

## விசேஷவுரை

பஞ்சமப்பிரகாரமான வஞ்ஞான நிவர்த்தியின்கண் ஸத்துவ முதலிய நான்கு பக்ஷங்களின் பிராப்த்தியின்மையின் அவைகளை முன்னிட்டதான அனுபபத்திதோற்றங்கள் சம்பவிக்கின்றதில்லை என்பது பொருள். (13)

(அ) அற்றேல் பஞ்சமப்பிரகாரமான அவித்தையின் நிவர்த்தியும் ஆன்மாவினின்றும் பின்னமாயின் துவைதத்தினடைவுண்டாம். அபின்னமாயின் அஃது ஆன்ம மாத்திரமாகும் போது அதற்கு அனுதித்தன்மை உண்மையால் தத்துவ ஞானத்திற்கு வியர்த்தக்தன்மை பிராப்தியாம். ஆன்மாவினை அவித்தையின் நிவர்த்திவடிவமாக வங்கீகரிக்கினுே தத்துவ ஞானத்திற்கு முன்பு ஆன்மாவிற்கு அபாவம் பிராப்தியாதலால் நிராசிரய வவித்தை பொருந்தாமற்போம். அப்போது அதன் நிவர்த்தியும் பொருந்தாமற்போம். பேதாபேதங்கள் பரஸ்பரம் விரோதமாதலினுலேயே பொருத்தமற்றவையாம். பேதாபேதங்களினுலே நிர்வசனம் பண்ணத்தகாதது அவித்தையின் நிவர்த்தியாம். என்பதும் சரியன்று. அவித்தையன்னியில் அதன் (அவித்தையின் நிவர்த்தியின்) அனுபபத்தி தெரிசிப்பிக்கப் பட்டமையின். ஆதலால் பஞ்சமப்பிரகாரமான அவித்தையின் நிவர்த்தியின்கண்ணும் அன்னியமான அநுபபத்திகளிருக்கின்றன வென்னுமிரண்டாவது பக்ஷத்தினை யாசங்கித்து ஈண்டும் பஞ்சமப்பிரகாரத்தை யங்கீகரித்தலால் பேதம் முதலிய நான்கு பக்ஷங்களை முன்னிட்டதான அநுபபத்திகளும் நிரவகாசங்களேயாம் எனக்கூறுகின்றார் :—

चितिभेदमभेदमेव वा द्वयरूपत्वमथो मृषात्मताम् ।
परिहृत्य तमोनिवर्तनं प्रथयन्ते खलु मुक्तिकोविदाः ॥ १४ ॥

## பதவுரை

चितिभेदम् - அஞ்ஞான நிவர்த்தியின்கண் சேதனத்தின் பேதத்தையும்

अभेदमेव वा - அபேதத்தையும்

द्वयरूपत्वम् - பேதாபேதத்தையும்

अथो मृषात्मताम् - அநிர்வசனீயத்தன்மையினையும்

परिहृत्य - நீக்கி பஞ்சமப்பிரகாரமாக

तमोनिवर्तनम् - அவ்வஞ்ஞான நிவர்த்தியினை

मुक्तिकोविदाः - இஷ்ட சித்திகாரர் முதலிய பண்டிதர்

प्रथयन्ते खलु - கூறுகின்றனர் (14)

(அ) அவித்தையின் அதிஷ்டானமாயுள்ள ஆன்மாவே அதன் நிவர்த்தியாம் கற்பிதபதார்த்தங்கட்கு அதிஷ்டானத்தினும் வேருக அபாவத்தை நிருபிக்க முடியாமையின் ஆதலால் அவித்தையின் நிவர்த்தி சத்படிவமேயாம் என சித்தாந் இரகசியத்தினை கூறுகின்ருர்-:

अथवा चितिरेव केवला वचनोत्पादितबुद्धिवर्त्मना ।
परमात्मतमोनिवृत्तिगीर्विषयत्वं समुपैत्युपाधिना ॥ १५ ॥

**பதவுரை**

अथवा - அல்லது

केवला - ஒன்றினுல் விசேஷிக்கப்படாத

चितिरेव - நிருவிசேஷ சேதனமே அஞ்ஞானத்தின் நிவிர்த்தியாம்

அப்படியானுல் ஞானத்தினுற்பத்திக்கு முன்பும் அச்சேதனத்தின்கண் அஞ்ஞான நிவர்த்தியின் வியவகார முண்டாதல் வேண்டும் என்ருசங்கிதது ஆண்டு அதன் வியவகாரப் பிரவிருத்திக்குத துவாரமாக சேதனவிஷயக வித்தையினுற்பத்தியினை அங்கீகரித்திருத்தலினுல அதன்கண இவ்வுபாதியிருக்கும்போது தான் பின்னர் அதனை நிமித்தமாகக்கொண்டு வியவகாரத்தின் பிரவிருத்தியாம் என்று கூறுகின்ருர்.

वचनोत्पादितबुद्धिवर्त्मना उपाधिना - மகா வாக்கியத்தால் உண்டான அகண்ட பிரம்ம விஷயக ஞான மார்க்கமாகிய நிமித்தத்தால்

परमात्मतमोनिवृत्तिगीर्विषयत्वम् - அஞ்ஞான நிவர்த்தி சத்தத்தின் விஷயத் தன்மையினை

समुपैति - ஆன்மா அடைகின்றது

## விசேஷவுரை

இத்துணையால் ஞானத்திற்கும் அஞ்ஞான நிவர்த்தி சத்தத்தின் விஷயத்தன்மையாமென்னற்க. இனிக் கூறப்படும் திருஷ்டாந்தத்தால் ஞானமானது அஞ்ஞான நிவர்த்தி சத்தத்தின் பிரயோகத்தில் உபாதியாதலால் தடஸ்தமாமாதலின் என்று கருதி நிமித்தத்தால் என்று கூறப்பட்டது.

இது கூறப்பட்டதாகின்றது. தத்துவமசி முதலிய மகா வாக்கியத்தால் அகண்டைகரச பிரம்மத்தின் சாக்ஷாத்காரம் உண்டாகுமபோது அநிர்வசநீய அவித்தையும் அதன் காரியான்மக சடப்பிரபஞ்சமும் அன்வய வியதிரேகபாவத்தை விட்டு அதிஷ்டான சின்மாத்திரமாக மிஞ்சுதலால் அதுவே அதன் நிவர்த்தியாமென்று சொல்லப்படுகின்றது இவ்வாறு ஆகுமபோது அதிஷ்டானுன்மவடிவ அஞ்ஞான நிவர்த்திக்கு ஞானசாத்தியத் தன்மை பொருந்தாமையின் அதன் பயனுந் தன்மை பொருத்தமன்றுமென்று சொல்லற்க, வாஸ்தவமாக அதற்கு ஞானசாத்தியத் தன்மையின்றேனும் கிணற்றினுகா சாதியிற் போன்று சாத்தியத் தன்மையின் பிராந்தியால் அதன் சாதன ஞானசித்தியின் பொருட்டு முமுக்ஷுவிற்குப் பிரவிருத்தி பொருந்துதலின்.

இக்காரணத்தினுலேயே மோக்ஷ சாஸ்திரத்திற்கு அஞ்ஞானி விஷயகத் தன்மை ஆசாரியர்களால் கூறப்பட்டுள்ளது. அல்லது எது இருக்குங்கால் எதற்கு அனந்தரம் இருப்போ, எதனின்மையால் எதனின்மையாமோ அதுவே அதன் சாத்தியமாம் என்பது ஸ்திதியாம் (நியமமாம்). சாத்தியத்தின் பூருவாசத்துவமும் சாத்தியத் தன்மையில் உபயோகியன்றும், அசத்திற்குக் காரியத் தன்மையை நிராகரித்திருத்தலின். அதாவது தத்துவ சாக்ஷாத்காரம் உண்டாகும்போது அனந்தரம் அவித்தையின் நிவர்த்தி வடிவ அத்துவிதீய சிதான்மாவிற்கு இருப்பு உண்மையால். அதன் முன்பு அஞ்ஞான நிவர்த்தியின் அபாவ வடிவ அஞ்ஞானத்திற்கும் இருப்பு உண்மையால். தத்துவ ஞான சாத்தியத் தன்மை பொருந்துதலின் அதன் பயனுந் தன்மை நிர்த்தோஷமாகுமென்க. (15)

(அ) அற்றேல் சுக்தி முதலியவற்றின்கண் எப்படி அஞ்ஞான நிவர்த்தி சத்தத்தின பொருள் அதிஷ்டானத்தினும் வேருமோ, அப்படி ஆன்மாவின்கண்ணும் ஏனுகாது என்று

சங்கித்து திருஷ்டாந்தத்தின் சம்மதியின்மையால் பரிகரிக் கின்றார் :—

शुक्तिकाविषयबुद्धिजन्मना प्रत्यगात्मचितिरेव केवला ।
शुक्तिकागततमोनिवृत्तिरित्युच्यते दृतिहरिः पशुर्यथा ॥ १६ ॥

பதவுரை

शुक्तिकाविषयबुद्धिजन्मना - சுக்தியினை விஷயஞ் செய்கின்ற ஞானத்தினுற்பத்தியால் அதாவது சுத்திஞானத்தால்

केवला प्रत्यगात्म चितिरेव - நிருவிசேஷமான பிரத்தியக் சேதனமே

शुक्तिकागततमो निवृत्तिरिति - சுத்தியின் கண்ணுள்ள அஞ்ஞான நிவர்த்தியாமென்று

उच्यते - சொல்லப்படுகின்றது

சுத்தி முதலியவற்றிற்கும் சடத்தன்மையால் கற்பிதத் தன்மை யுண்மையின் இரஜதம் முதலியவற்றின் அதிஷ்டானத் தன்மை பொருந்தாது ஆதலால் அதனுபகித பிரத்தியக் சேதனமே அதனதிஷ்டானமாமாதலின் சுத்தியினால் விசேஷிக் கப்படாத அச்சேதனமே அதன் அஞ்ஞானஸ்திதிக்கு விரோதி யான சுத்தியாதியினை விஷயஞ் செய்கின்ற பிரமையுதயமாகும் போது அந்த பிரமையாகிய உபாதியினையபேக்ஷித்து அதன் அஞ்ஞான நிவர்த்தியா மென்று சொல்லப்படுகின்றது என்பது பொருள் அச்(கோ)சப்தப் பிரவிருத்தியினுபாதி (கோத்துவம்) அதன் அவாச்சியமாமென்பதன்கண் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

दृतिहरिः यथा पशुः - திருதி ஹரியானது எப்படிப்பசுவாமோ அப்படி

திருதி=தோற்பை, ஹரி=அதன் ஹரணகர்த்தா, (16)

(அ) திருஷ்டாந்தத்தினை விஸ்தரிக்கின்றார் :—

वाचको हरणकर्तुरिष्यते शब्द एष हि दृतेर्मनीषिभिः ।
केवलं तु पशुता निमित्ततां बाह्यतः स्थितवती व्रजेदियम् ॥ १७ ॥

பதவுரை

एषः शब्दः – திருதி ஹரி சப்தமானது

हृतेः हरण कर्तुः – தோற்பையின் ஹரண கர்த்தாவாகிய வாச்சியத்தின்

वाचको हि – வாசகமாக

मनीषिभिः – பண்டிதர்களால்

इष्यते – அங்கீகரிக்கப்படுகின்றது

इयं पशुता तु – இந்த பசுத்தன்மையோ

केवलं बाह्यतः स्थितवती – கேவலம் பாகியத்திலிருப்பதாய்

निमित्ततां व्रजेत् – நிமித்தத்தன்மையையடையும்

விசேஷவுரை

கேவலம் என்பதன் வியாக்கியானம் பாகியத்திலிருப்பதாய் என்பது திருதிஹரிசத்த வாச்சியத்தினும் புறம்பேயுள்ளது. அதன் அவாச்சியமா மென்பது பொருள் பசுத்தன்மை திருதிஹரிசத்தத்தின் வாச்சியத் தன்மையின்கண் உபாதியா மென்பதன்கண் யுத்தியினைப் பின்னர்க் கூறுவார். (17)

(அ) திருதிஹரி பசுவாக எங்ஙனமோ என எதன்கண் திருஷ்டாந்தம் கூறப்பட்டதோ அத்தார்ஷ்டாந்தத்தினை விஸ்தரிக்கின்றார் :—

एवमेव तु तमोनिवृत्तिगीः शुक्तिकाविषयबुद्धिजन्मना ।
बाह्यतः स्थितवतैव हेतुना प्रत्यगात्मचिति वर्ततेऽञ्जसा ॥

பதவுரை

एवमेव तु – இப்படியே

तमोनिवृत्तिगीः – சுக்தியின்கண் அஞ்ஞான நிவர்த்தி சப்த மானது

बाह्यतः स्थितवता – சுக்தியினும் புறம்பேயுள்ள

शुक्तिकाविषयबुद्धिजन्मना – சுக்தியினுகாராந்தக்கரண விருத்தி வடிவ

हेतुना एव – நிமித்தத்தாலேயே

प्रत्यगात्मचिति – சுத்தியவச்சின்ன பிரத்தியகான்ம சேதனத்தின்கண்

अञ्जसा वर्तते – முக்கிய விருத்தியினுல் பிரவிருத்திக்கின்றது

யோகத்திற்கு முக்கிய விருத்தித் தன்மை உண்மையின். (18)

(அ) இங்ஙனம் சுக்தி முதலியவற்றின்கண் அஞ்ஞான நிவர்த்திக்கு அதிஷ்டான சின்மாத்திர வடிவத்தன்மை இருப்பினும், ஆண்டு அதன் நிவர்த்தியின் வியவகாரமானது திருகிஹரி திருஷ்டாந்தத்தால் சுக்தியாதியினை விஷயஞ் செய்கின்ற பிரமையை யுபாதியாகவுடையதாய் அதனனந்தரமே ஆண்டுண்டாகின்றதென்று உபபாதனஞ் செய்து அத்திருஷ்டாந்தத்தினுல் சம்சாரத்திற்கு மூலமான ஆன்மதத்துவ அஞ்ஞானத்தின் நிவர்த்தி அதிஷ்டான சின்மாத்திர வடிவினதாயினும் அதன் பிரமிதி வடிவ வுபாதியினை யபேக்ஷித்து அதன் (அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தின்) வியவகாரத்திற்கு விஷயமாகின்றது, முன்னரின்றும் எனக் கூறுகின்ருர் :—

उत्पन्नशुक्तिमतिरात्मचितिर्यथैव
शुक्तेस्तमोहतिरिति प्रतिपन्नमेवं ।
आत्मापि जातनिजबुद्धिरबोधहानि-
रित्युच्यतेऽमलचिदेकरसो न पूर्वम् ॥ १९ ॥

பதவுரை

आत्मचितिरेव – சுக்தியவச்சின்னுன்ம சேதனமே

उत्पन्न शुक्ति मतिः – உற்பத்தியான சுக்தி விஷயக ஞானத்தினையுபாதியாகவுடையதாகி

शुक्तेः तमोहतिः इति – சுக்தியினஞ்ஞான நிவர்த்தியாமெென

यथा प्रतिपन्नं एवं – எப்படியறியப்பட்டதோ அப்படி

केवलचिदेकरसः आत्मापि – கேவல சைதன்யாநந்த மாத்திரமான ஆன்மாவும்

**आत्तनिज बुद्धिः** - வாக்கியத்தாலுண்டான தத்துவ ஞானத்தையுபாதியாகவுடையதாகி

**अबोधहानिः उच्येत** - அஞ்ஞானத்தின் நிவர்த்தியாமென்று சொல்லப்படும்

**न पूर्वम्** - தத்துவ ஞானத்தினுற்பத்திக்கு முன்பு அகண்டைகரசவான்மாவுளதாயினும் அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தால் வியவகரிக்கப்படுவதின்ரும்.

(அ) டசுந்தன்மை திருதிஹரி சப்தவாச்சியத் தன்மையில் உபாதியாம் என்பதன்கண் யுக்தியினைக் கூறுவாறென்று 17-வது சுலோக வியாக்கியானத்தில் கூறினோம் அதனை இப்போது கூறுகின்ரூர் :—

**दृतिहरणकरत्वं पुंसि चान्यत्र चेदं**
**दृतिहरिरिति लोके नोच्यते वर्तमानम् ।**
**अनधिकविकलं सत्कथ्यते तत्पशुस्थं**
**दृतिहरिरिति शिष्टैर्वाच्यहेतोः पशुत्वात् । २० ॥**

**பதவுரை**

**पुंसि च अन्यत्र च** - மனுஷ்யனிடத்தும் வண்டி முதலியவற்றினிடத்தும்

**इदं वर्तमानम्** - பிரத்தியக்ஷமாயிருக்கின்ற

**दृतिहरण करत्वम्** - தோற்பையை வஹிக்குந் தன்மை

**लोके** - விருத்தரது வியவகாரத்தின் கண்

**दृतिहरिः इति न उच्यते** - திருதிஹரி சப்தத்தால் சொல்லப் படுகின்றதில்லை

அப்படியாயின் திருதிஹரண கருத்துருத் தன்மையினின்றும் அதிகமாவது குறைவாவது அதன் பொருளாகுக எனின் அற்றன் றெனக் கூறுகின்ரூர்.

**अनधिकविकलं सत्** - அன்யூனுனதிரிக்தமாய்

**पशुस्थं तत्** - பசுவின் கண்ணுள்ள திருதிஹரண கருத்துருத் தன்மை (தோற்பையைத் தாங்குந் தன்மை)

दतिहरिः इति – திருதிஹரி சப்தத்தால்

शिष्टैः – சிஷ்ட புருஷர்களால்

वाच्यहेतोः पशुत्वात् – வாச்சியத்தில் நின்றும் புறம்பான பசுத் தன்மை வடிவ நிமித்தத்தால்

कथ्यते – சொல்லப்படுகின்றது

## விசேஷவுரை

हरतेः दतिनाथयोः पशौ திருதிஹரிசத்தம் பசுவின்கண் வருக என்னும் பாணினி வசனத்தின அர்த்தத்தை அறிந்தவர் ஈண்டு சிஷ்ட புருஷர் எனப்படுவர். பசுவின் கண்ணுள்ள திருதிஹரண கருத்திருத்தன்மை கூறப்படுமாயின் பசுத்தன்மையும் அதன் வாச்சியமாமென்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு வாச்சியத்தில் நின்றும் புறம்பான பசுத்தன்மை வடிவ நிமித்தத் தால் என்று கூறப்பட்டது. பசுத்தன்மையும் வாச்சியமாமேல் அதன்கண் அவயவசத்தியின்மையின் வேறு சத்தி கற்பிக்கத்தக்க தாகும். ஆதலால் அது அவாச்சியமேயாகி உபாதியாதலால் தடஸ்தமாயிருந்துகொண்டு திருதிவாஹக (தோற்பையை வஹிக்கின்ற) பசுவின் கண்ணேயே திருதிஹரி சத்தத்தின் பிரவிருத்தி நிமித்தமாகின்றது என்பது பொருள் (20)

(அ) அற்றேல் பிரத்தியகபின்ன பரமான்ம வடிவ அவித்தை யின் நிவர்த்தி ஏகமாதலால் வேறிடத்தில் அதன் வாசக சத்தத் திற்கு (அஞ்ஞான நிவர்த்தி சத்தத்திற்கு)ப் பிராப்தியின்மையின் அதன் நியமத்தின் பொருட்டு தத்துவஞான வடிவ உபாதியை வருணித்தல் வீணேயாம் என்றுசங்கித்து வித்தையினுற்பத்திக்கு முன்பு ஆன்மாவின்கண் அதன் வியவகாரமின்மையின் அதனை யுபபாதனஞ் செய்தற் பொருட்டு கூறிய உபாதியின் வருணனம் பொருளுடையதாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

अयमपि परमात्मा प्रत्यगात्मस्वभावो
वचनजनितबुद्धेः प्राक्स्वरूपे स्थितोऽपि ।
न खलु विषयभावं ध्वान्तविच्छेदवाचो
व्रजति हि तदुपाधेर्बुद्धिवृत्तेरभावात् ॥ २१ ॥

## பதவுரை

अयमपि परमात्मा – இந்த பரமான்மாவும்

प्रत्यगात्मस्वभावः – பிரத்தியகான்ம வடிவமாய்

वचनजनितबुद्धेः प्राक् - மஹாவாக்கியத்தாலுண்டான தத்துவஞ்ஞானத்திற்கு முன்பு

स्वरूपे स्थितोऽपि – தனது சொரூபத்தின் கண்ணிருப்பினும்

ध्वान्तविच्छेदवाचः – அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தின்

विषयभाव न व्रजति – விஷயத்தன்மையினையடைகின்றதில்லை

तदुपाधेः बुद्धिवृत्तेः अभावात् – அதனுபாதியாகிய புத்திவிருத்தியின்மையின்

## விசேஷவுரை

அதனுபாதி = அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தின் பிரவிருத்தி நிமித்தம். இச்சுலோகத்திலுள்ள கலுசப்தம் = லௌகிகப் பிரசித்தியைத் தெரிவித்தற் பொருட்டாம். ஹி சப்தம் = வைதிக பிரசித்தியின் பொருட்டாம். (21)

(அ) அஞ்ஞான தாகம், அஞ்ஞான நாசம், அஞ்ஞான நிவர்த்தி என்பது முதலிய சப்தங்களில் தாக முதலிய பதங்கள் அபாவவாசகங்களாதலின் அவைகட்கு பாவவடிவ சிதான்மாவின் கண் பிரவிருத்தி எங்ஙனமாம். என்றுசங்கித்து அபாவ வாசக பதத்திற்கும் அன்னிய பதத்தோடு சமாசமுண்டாகுங்கால் அவய வார்த்தத்தினைவிட்டு லக்ஷணையினுல் அதர்மாதிபதம் போன்று பாவவடிவ சிதான்மாவின் கண்ணே பிரவிருத்தி சம்பவித்தலினுல் ஆண்டும் தத்துவஞ்ஞானத்திற்கு முன்பு அதன் வியவகார மின்மையின் தத்துவ ஞானமாகிய தடஸ்த்த உபாதியை யபேக்ஷித்தே அஞ்ஞானதாக முதலிய சப்தங்கள் சிதான்மாவின் கண்ணேயே பிரவிருத்திக்கின்றன எனக் கூறுகின்ருர் :—

अज्ञानदाह इति नैकपदं समासा-
त्पूर्वोत्तरे खलु पदे पदतामुपेतः ।
ज्ञानोदयं तटगतं समुपाददान-
स्तस्मात्तमोहतिरवोऽत्र चिति प्रवृत्तः ॥ २२ ॥

## பதவுரை

अज्ञानदाह इति – அஞ்ஞான தாகம் என்பது

न पदमात्रम् – ஓர் பதமன்றும் ஒன்றன்கண் ரூடபதமன்று மென்பது பொருள்

समासात् – ஸமாசமாகிய நிமித்தத்தாலோ

पूर्वोत्तरे पदे – அஞ்ஞான மென்னும் பூர்வபதமும் தாக மென்னு முத்தர பதமுமாகியவிவை

पदतामुपेतः – ஓர்பதத்தன்மையையடைகின்றன

ஸமாசததால் ஏகபதத்தன்மை சித்தித்தவழி திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

तस्मात् तमोहतिरवः – ஆதலால் அஞ்ஞான நிவர்த்தி சப்த மானது

ज्ञानोदयं तटगतम् – ஞானத்தினுற்பத்தியாகிய தடஸ்த்த வுபாதியை

समुपाददानः – கிரகிக்கின்றதாய்

अत्र चिति प्रवृत्तः – ஈண்டு சிதான்மாவின் கண் பிரவிருத் தித்தது

ஈண்டு=லோக வேதங்களில். (22)

(அ) சமாஸத்தால் ஏகபதத் தன்மையினை அடைந்துள்ள திருதிஹரி சத்தத்திற்கு பசுவின்கண் எப்படி ரூடியோ அப்படி அஞ்ஞான நாசம் முதலிய சத்தத்திற்கும் எதன்கண் பிரவிருத்தியோ அதன்கண் ரூடி ஏனாகாது என்றுசங்கித்து திருஷ்டாந்தமே சம்மதமின்றும திருதிஹரி சத்தத்திற்கும் பசுவின்கண் நிச்சயிக்கப்பட்ட அவயவார்த்த யோகத்தாலேயே பிரவிருத்தி பொருந்துதலின். யௌகிகார்த்தத்திற்கு மநுஷியாதியின் சாதாரணத் தன்மையிருப்பினும் பசுத்தன்மை யுபாதியினால் அப்பதத்தின் பிரவிருத்திக்கு பசுவின் கண்ணேயே நியமிக்கப்பட்டிருத்தலால் அதிப்பிரசங்கமின்மையின் என்னுங் கருத்தாற் கூறுகின்றார் :—

अत्राप्यसौ दृतिहरिः पशुरित्यखण्डः
शब्दो न खल्वभिमतोऽवयवार्थयोगात् ।

धातुश्च वाचकतया हरतिः प्रसिद्धो
हीन्प्रत्ययश्च हरतेः परतः प्रसिद्धः ॥ २३ ॥

**பதவுரை**

असौ शब्दः - திருதிஹரி சப்தமும்

इतिहरिः पशुः इति – திருதிஹரி பசுவாம் என

अखण्डः न खलु अभिमतः – ரூடமாகக் கருதப்பட்டதன்றும்

अत्रापि अवयवार्थयोगात् – பசுவின் கண்ணும் அவயவார்த்தம் பொருந்துதலின்

அவயவார்த்தங்களையே பிரித்துக் காண்பிக்கின்றார்.

हरतिः धातुः – ஹிரு என்னுந்தாது

वाचकतया प्रसिद्धश्च – ஹரணவாசகமாகப் பிரசித்தமேயாம்

हरतेः परतः – ஹிருதாதுவின் பரத்திலுள்ள

इन्प्रत्ययश्च – இன்னென்னும் விகுதியும்

प्रसिद्धः हि – கருத்தாவின் வாசகமாகப் பிரசித்தமேயாம்

(அ) இங்ஙனம் தத்துவஞான உற்பத்தியினை அபேக்ஷித்து ஆன்மாவே அவித்தையினதும் அதன் காரியத்தினதும் நிவர்த்தியாமென்று சொல்லப்படுகின்றது என்று கூறப்பட்டது. ஆண்டு தத்துவஞ்ஞானத்திற்கு கடாதிபோன்று அவித்தை முதலியவற்றின் விரோதித் தன்மையை அங்கீகரியாவிடின் அதன் நிவர்ததி வியவகாரத்தில் அதனபேக்ஷையே உண்டாகாது ஆதலால் அதற்கு அதன் விரோதித் தன்மையைக் கூறவேண்டும். அவித்தை முதலியவற்றைப் பிரதியோகியாக உடையதும் பிரதியோகியின் அசத்துவத்தைச் சம்பாதிப்பதுமான ஆகந்துக துவம்ஸத்தின் ஜனகத்தன்மையின்றி தத்துவஞ்ஞானததிறகு அவித்தை முதலியவற்றின் விரோதித் தன்மை பொருந்துகின்ற தில்லை ஆன்மவடிவ அவிததையின் நிவர்த்தியும அனுதிகாலமாக அவித்யை முதலியவற்ரேடுகூட விருத்தலினுல் அவித்தை முதலியவற்றினசத்துவத்தைச் சம்பாதிபபதின்றும். ஆதலால் ஆன்மாவினும் வேருக ஆகந்துகமாய் தததுவஞ்ஞான சாததியமாய் அவிததை முதலியவற்றின் த்வம்ஸம் அங்கீகரிக்கத்

தக்கதாம். அதுவே அதன் தாக முதலிய பதங்களால் கூறத் தக்கதாம் எனின் அற்றன்று ஆகந்துக தொம்ஸத்திற்கு பிரதி யோகியின் அஸத்வத்தைச் சம்பாதிக்குந் தன்மை ஸத்காரிய வாதிகட்கு ஓரிடத்தும் சம்மதமின்மையின் "அத்விதீய வான்மாவை தெரிசிப்பவனுக்கு அக்காலத்தில் சோகமேது, மோகமேது" "ஹிருதயத்தின்கண் பரமான்மாவின் சாக்ஷாத்காரம் உண்டானபோது விசாலமான வவித்தையைக் கடக்கின்றான்" என்பது முதலிய வசனத்தால் அத்துவிதீயவ கண்டைகரஸ ஆன்ம வித்தையே அவித்தைய தன் காரியங்கட்கு அசத்துவத்தைச் சம்பாதிப்பதாம். ஆதலின் ஆகந்துக தொம் ஸததால் யாதோர் பிரயோஜனமுமின்ரும். என்னுங் கருத்தினை உடையவராய் கூறுகின்ருர் அன்றியும் வித்தையானது வேதாந்த வாக்கியத்தால் உற்பத்தியாகும் காலத்திலேயே அவித்தை முதலியவற்றை பாதிக்கின்றதா, அல்லது உற்பத்தியானபின் பாதிக்கின்றதா, என்னும் மாகாங்க்ஷையுண்டாக இவ் விசாரத்தாற் பயனென்னை யாதொன்றுமின்ரும். இரண்டு பிரகாரத்தாலுமவித்தையினால் பாதிக்கப்பட்டவ வித்தை முதலியவற்றிற்கு அனந்தரம் திதி பொருந்தாமையானும் அதனால் அதனை பாதிப்பதன்கண் வேறு எத்தனத்தனத்தினபேக்ஷை இன்மையினாலும் யாண்டும் அவ்வாறு காணப்படுதலாலெனக் கூறுகின்ருர் :—

उद्यन्निरस्यति तमश्च तदुद्भवं च
वेदावसानवचनादथ चोदितः सन् ।
ऐकात्म्यवस्तुविषयोऽनुभवोऽत एव
कंचित्सहायमनपेक्ष्य निवर्तकोऽसौ ॥ २४ ॥

பதவுரை

ऐकात्म्यवस्तुविषयोऽनुभवः — அகண்டகரஸவான்மவிஷயக ஞானமானது

वेदावसानवचनात् — வேதாந்த வாக்கியத்தினால்

उद्यन् अथ च उदितः सन् — உற்பத்தியாகின்றதாகியே அல்லது உண்டானதாகியே

तमश्च तदुद्भवं च — அஞ்ஞானத்தினையும் அதன் காரியத்தினையும்

निरस्यति – நிவர்த்தி செய்கின்றது.

अत एव – ஞானத்தாலதனை பாதிப்பதன்கண் விலம்ப மின்மையினுலேயே

कंचित्सहायमनपेक्ष्य– கரும முதலியவோர் சகாயத்தினை யபேக்ஷியாமலேயே

असौ निवर्तकः – ஞானம் நிவர்த்தகமாம்.

விசேஷவுரை

உதயமாகின்றதாகியே நிவர்த்திக்கின்றது என்பது வாஸ்த்தவம். அஸத் காரிய வாதத்தை அங்கீகரியாமையினுலும் அன்னியத்தை யபேக்ஷியாமையினுலும் எனக் காண்க. (24)

(அ) வித்தைக்கு அவித்தை முதலியவற்றை பாதிப்பதன் கண் நிரபேக்ஷத் தன்மையும அவிலம்பமும் விவாதயோக்கியங் களாமென. அதாவது நிர்விவாதமாமென திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துகின்ருர்.

दीपस्तमस्तिरयतीह भवन्नुतस्वि-
दुभूत्वा क्षणव्यवधिमात्रमपेक्ष्य नात्र ।
कश्चिद्विवादपदवीमुपयाति वादी-
तद्वत्प्रतीच्यवगतौ तमसोऽपहन्त्र्याम् ॥ २५ ॥

பதவுரை

इह दीपः- அந்தகாரமுடைய பிரதேசத்தில் தீபமானது

भवन् तमः तिरयति - உற்பத்தியாகின்றதாகியே அந்தகாரத்தினை நிவர்த்திக்கின்றது.

उतस्वित् भूत्वा - அல்லது உற்பத்தியாகி

क्षणव्यवधिमात्रमपेक्ष्य - க்ஷணகால வியவதானமாத்திரத்தை அபேக்ஷித்து அந்தகாரத்தை நிவர்த்திக்கின்றது

अत्र – அன்னியத்தை யபேக்ஷியாமையின்கண்

कश्चिद्वादी - யாதொரு வாதியும்

विवादपदवीं न उपयाति – விவாத விஷயத் தன்மையினை அடைகிறதில்லை. விவாதம் செய்கின்றதில்லை என்பது பொருள்.

तद्वत् प्रतीच्यवगतौ - அதுபோன்று பிரத்தியகான்ம விஷயக ஞானத்தின்கண்

तमसः आहन्त्याम् - அஞ்ஞானத்தை பாதஞ்செய்வதன்கண் விவாதம் செய்யத்தக்கதன்று.

**விசேஷவுரை**

உற்பத்திக்ஷணத்தினுமனந்தாக்ஷணம் க்ஷணகாலசப்தத்தின் பொருளாம் மாத்திரசப்தத்தால் மூன்ருவது முதலிய க்ஷணத்தினபேக்ஷை நிவர்த்திக்கப்படுகின்றது (25)

(அ) உற்பத்தியாகின்றதாகியே நிவர்த்திக்கின்றது என்னுமிப்பக்ஷமே சிறந்தது என்று கருதி ஆன்மதத்துவஞானம் தனதுற்பத்தியினும் வேருனவற்றை அபேக்ஷியாததாகியே அதன் வித்தை முதலியவற்றின் நிவர்த்தகமாம். வாஸ்தவ அபரோக்ஷ ஞானமாதலால் சுத்தி முதலியவற்றின் வாஸ்தவ ஞானம் போன்று என ஞானகரும சமுச்சய பக்ஷத்தினையும் நிவர்த்திக்கின்ருர்.

उत्पत्तिरेव हि धिया स्वफलं प्रदातु-
माकाङ्क्षिता न च ततोऽपरमर्थनीयम् ।
यत्कारकं तदिह काङ्क्षति जन्ममात्रा-
दन्यन्न धीः किमपि काङ्क्षति जन्म लब्ध्वा ॥ २६ ॥

**பதவுரை**

धिया स्वफलं प्रदातुम् - வாக்கியஜந்நியத்துவ அஞ்ஞானத்தால்தனது பயனைக் கொடுத்தற்கு

उत्पत्तिरेव हि आकाङ्क्षिता - தனதுற்பத்திமாத்திரமே அபேக்ஷிக்கப்பட்டது.

ततः अपरं नच अर्थनीयम् - உற்பத்தியினும் வேருனது அபேக்ஷிக்கத்தக்கதாகவின்ரும்.

தத்துவஞ்ஞானம் தனது பயனைபயப்பதில் தனதுற்பத்தியினும் வேருனவற்றின் அபேக்ஷையினையுடையது ஸாதனமாதலால் காஷ்ட முதலியவற்றினைப் போன்று என்ரு சங்கித்து இவ்வனுமானத்தின் கண் காரகத்தன்மையுபாதியாம். ஸாதன வியாபகத்தன்மையுமின்ரும். தத்துவஞ்ஞானத்திற்கு வியஞ்சத்

கத்தன்மையால் காரகத்தன்மையின்மையின் காரகத்தன்மை யாவது தனது விஷயத்தின் உற்பத்தி முதலியவற்றுள் ஒன்றனனு கூலமான கிரியையின் ஏதுத்தன்மையாம். விஞ்ஞானத் தன்மையோ தனது விஷயத்தின் கண் இருக்கிறது விளங்கு கிறது என்பது முதலிய வியவகாரத்தின் பிரதிபந்தகமாத்திரத்தை நிவர்த்திச்குந்தன்மையாம் என இங்ஙனம் அவ்விரண்டிற்கும் பேதமுளது என்னுங்கருத்தினராய்க் கூறுகின்றூர்.

इह यत्कारकं तत् - இவ்வுலகின்கண் எது காரகமோ அது

जन्ममात्रात् अन्यत् - தனதுற்பத்திமாத்திரத்தினும் வேருனதை

काङ्क्षति - அபேக்ஷிக்கின்றது.

धीः जन्म लब्ध्वा - தத்துவஞ்ஞானமானது, உற்பத்தியினை அடைந்து

किमपि न काङ्क्षति - யாதொன்றினையும்அபேக்ஷிக்கிற தில்லை.

(அ) எதார்த்த ஞானம் தனது பயனை பயப்பதன் கண் தனதுற்பத்தியினும் வேருனதைய பேக்ஷிக்கின்றதில்லை என்பதன் கண் பிரத்தியக்ஷத்தின் லக்ஷணத்தை போதிக்கின்றன. ஜமினி பகவானது சூத்திரத்தின்கண்ணுள்ள ஜன்மபதத்தின் ஸாமர்த் தியம் லிங்கமாமெனக் கூறுகின்றூர்.

प्रत्यक्षसूत्र इदमेव निवेदयिष्यन्
न्यायेन जैमिनिरुवाच विदग्धबुद्धिः ।
सत्संप्रयोग इति तत्र च बुद्धि जन्म-
शब्दस्य नान्यदिह किंचन कृत्यमस्ति ॥ २७ ॥

பதவுரை

विदग्धबुद्धिः जैमिनिः-குசலபுத்தியுடையவரான ஜைமினி பகவான்

सत्संप्रयोग इति प्रत्यक्षसूत्रे:-ஸத்சம்பிரயோகமென்னும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் லக்ஷண சூத்திரத்தில்

इदमेव-தனது பயனை பயப்பதில் உற்பத்தியினும் வேருன தின் அனபேக்ஷத்தன்மையினையே

न्यायेन निवेदयिष्यन् -நியாயத்தால் போதிக்கின்றவராய்

उवाच- கூறியுள்ளார்

तत्र हि- அச்சூத்திரத்தின்கண்

बुद्धिजन्मशब्दस्य-ஞானத்தினுற்பத்தியென்னும் பதத்திற்கு

इह अन्यत् किंचन कृत्यम् -இலக்ஷணத்தின்கண்யாதோர் பிரயோஜனமும்

न अस्ति-இன்றாம்.

**விசேஷவுரை**

"सत्संप्रयोगे पुरुषस्येन्द्रियाणां बुद्धिजन्म तत्प्रत्यक्षम्"

இச்சூத்திரத்திற்குப் பொருள் இந்திரியங்கட்கு யதார்த்த விஷயங்களோடு சம்யோகமுண்டாகும்போது அல்லது நிர்த்தோஷ சம்யோகமுண்டாகும்போது புருடனுக்கு யாதொரு ஞானத்தினுற்பத்தியுண்டோ அது பிரத்தியக்ஷமாம். என்பது இதன் கண்ணுள்ள உற்பத்திபதத்திற்கு லக்ஷணத்தில் உபயோகமின்மையினாலும் வியர்த்தத்தன்மை பொருந்தாமையானும் அதனால் (அப்பதத்தால்) தத்துவஞானம் தனது பயனைப்பயப்பதன் கண் தனது உற்பத்தியினையே அபேக்ஷிக்கின்றது பிறவற்றை அபேக்ஷிக்கிறதன்றதில்லையென அறிவிக்கப்படுகின்றது என்பது பொருள். (27)

(அ) தனது உற்பத்திமாத்திரத்தினால் ஞானத்திற்கு அவித்தையதன் காரியங்களைப் பாதிக்குந்தன்மையிருப்பினும் தன்னைப் பாதிக்குந்தன்மை பொருந்தாமையின் அதற்கு (ஞானத்திற்கு) வேறு பாதகம் சொல்லவேண்டும் அதனால் அனவஸ்தையுண்டாம் ஞானத்தினை அபாத்தியமென அங்கீகரிக்கின் துவைதத்தினடை உண்டாமென்று சங்கித்து தானும் அவித்தையின் காரியமாதலால் தானே தன்னைப் பாதிப்பதாம் ஆதலால் அதிஷ்டான சைதன்ய மாத்திரம் மிஞ்சுதலால் துவைதத்தின் அடைவு இன்றாம் அனவஸ்தையுமின்றாமென்னும் கருத்தாற் கூறுகின்றார்.

वेदान्तवाक्यजनिता मतिवृत्तिरेव-

मुत्पत्तितः सकलमेव भवार्णवाम्बु ।

पीत्वा स्वयं च खलु शाम्यति दग्धलोह-

पीतं यथाम्बु चितिमेव तु शेषयित्वा ॥ २८ ॥

### பதவுரை

वेदान्तवाक्यजनिता – வேதாந்த மஹாவாக்கியத்தால் உண்டான

मतिवृत्तिः - அத்துவைத பிரம்மவிஷய கவந்தக்கரண விருத்தியானது

एवं उत्पत्तितः - இங்ஙனம் கூறிய நியாயத்தினுல் தனது உற்பத்திமாத்திரத்தினுல்

सकलमेव भवार्णवाम्बु पीत्वा - ஸம்பூர்ணமான ஸம்சார ஸாகரத்தின் ஜலத்தினை குடித்து

चितिमेव तु शेषयित्वा – சின்மாத்திரத்தினையே மிஞ்சும்படி செய்து

स्वयं च शाम्यति – தானும் நிவர்த்தியாய்விடுகின்றது.

ஞானத்திற்கு சுவபர விரோதித்தன்மையின் கண்ணும் வஸ்துவின் பரிசேஷத்தின் கண்ணும் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.

यथा दग्धलोहपीतमम्बु – காய்ந்த இரும்பு குடித்த ஜலம்போல

### விசேஷவுரை

காய்ந்த இரும்பில் விடப்பட்ட ஜலமானது தாஹத்தைச் சாந்தி செய்கின்றதாய் தானும் சாந்தியாகின்றது இரும்பினை மிஞ்சவைக்கின்றது அதுபோன்று தத்துவஞ்ஞானமும் அவித்தையை தன்காரியப்பிரபஞ்சத்தை நிவர்த்திக்கின்றது. தானும் அவித்தையின் காரியத்தினுள்ளடங்கினமையின் நிவர்ந்தியாகின்றது சின்மாத்திரான் மதத்துவத்தையும் மிஞ்சவைக்கின்றது என்பது பொருள்.

(அ) இங்ஙனம் அவித்தையின் நிவர்த்திக்கு பஞ்சமபிரகாரத் தன்மை பக்ஷத்திலும் சிதாத்ம மாத்திரத்தன்மை பக்ஷத்திலும் வித்தையினுற்பத்திமாத்திரத்தின் தீனத்தன்மையை பிரதிபாதித்தலால் முத்தியின் கண் ஞானகருமங்களின் சமுச்சயப் நிராகரிக்கப்பட்டது.

இப்போது பிரம்மத்தையறிந்தவன் பிரம்மமேயாகின்றான் என்பது முதலிய சாஸ்த்திரத்தால் சித்தித்த பிரம்மான்மத் தன்மைவடிவ முத்தியின் கண்ணும் நான்குவித கிரியையின் பயன்

சம்பவியாமையின் கருமத்திற்குப் பிரவேசமின்மையினால் சமுச்சயம் பொருந்துவதின்றும் என்னும் கருத்தையுட் கொண்டு அதற்கு (மோக்ஷத்திற்கு) கூட ஸ்தத நித்தியத் தன்மையினை அனுமானத்தால சாதிக்கின்றார்.

कूटस्थनित्यैव तु मुक्तिरेषा
विद्याफलत्वादिह यद्यदेवम् ।
तत्तत्तथा दृष्टमशेषमेव
यथा हि शुक्त्यादिपदार्थसंवित् ॥ २९ ॥

**பதவுரை**

एषा मुक्तिः - பிரம்மவடிவ மோக்ஷமானது
कूटस्थनित्या एव - கூடஸ்த நித்யமேயாம்.
विद्याफलत्वात् - வித்தையின் பயனாதலால்
इह यद्यदेवम् - இவ்வுலகில் எது எது வித்தையின் பயனோ
तत्तदशेषमेव - அவ்வெல்லாமும்
तथा दृष्टम् - அப்படி கூடஸ்த நித்தியமாகவே காணப்பட்டுளது.
यथा शुक्त्यादिपदार्थसंवित् - சுத்தி முதலிய பதார்த்தத்தின் சம்வேதனம் போன்று

**விசேஷவுரை**

கூடஸ்த நித்தியமென்பதற்கு எப்போதும் சருவ விகாரா யோக்கியமாமென்பது பொருள். வித்தையின் உத்தேசியபயனா தால் என்பது ஏதுவின் பொருளாம் அதனால் பஞ்சமப்பிரகார அவித்தையின் நிவர்த்தியின்கண் வியபிசாரமின்றாம். சுத்திரச்சு முதலிய பதார்த்தாகாரமான அபரோக்ஷ அந்தக் கரண விருத்தி வடிவவித்தைக்கு சுத்திரச்சு முதலியவற்றால் வனைப்பட்ட ஆன்ம ஸம்வேதனமே அவ்வியத்தமாகு பயனாம். இயற்கையாக உற்பத்தியாதியினை உடைய சடத்தினையாவது சுவப்பிரகா வியவஸ்தை அதன்பயனாக நிருபித்தற்கு முடியாதென பிரதிகரும சத்தினையாவது முதலியவற்றில் நிருபிக்கப்பட்டது. ஆதலால் திருஷ்டாந்தத்தின் கண் சாத்தியவை கல்யசங்கைக்கு அவகாச மின்றுமென்பது பொருள், பிரதி கருமவியவஸ்தை என்பது அத்வைத சித்தியிலுள்ள ஒரு பிரகரணம்.

(அ) மேலும் பிரமாணத்தின் (பிரமையின்) பயனாகவுள்ள சம்வித்திற்கு சுவாபாவிக ஜன்மம் முதலியவற்றைச் சாதிப்பதாக யாதொன்றுமின்மையினாலும் அஃது கூடஸ்தநித்தியமேயா மெனக்கூறுகின்றார்.

जन्मादिषड्भावविकारहीना
शुक्त्यादिवस्तूपनिविष्टसंवित् ।
न प्रागभावाद्यनुभूतिरस्याः
स्वतः प्रमाणादपि युज्यते हि ॥ ३० ॥

பதவுரை

शुक्त्यादिवस्तूपनिविष्टसंवित् - சுக்தி முதலிய வஸ்துவினாலே வளைபட்ட ஸம்வேதனமானது

जन्मादिषड्भावविकारहीना - உற்பத்தி முதலிய அறுவகை விகாரமுமற்றதாய் கூடஸ்த நித்தியமாம்.

ஸம்வித்தானது தானே தனது உற்பத்திய முதலிய விகாரத்தினைச் சாதிக்கின்றதா, அல்லது பிரமாணாந்தரமதன் உற்பத்தி முதலியவற்றை சாதிக்கின்றதா, என்றாசங்கித்து இரண்டு பிரகாரத்தாலுமெவ்வின்றெனக் கூறுகின்றார்.

अस्याः प्रागभावाद्यनुभूतिः - சம்வித்தின் பிராகபாவ முதலியவற்றினனுபவமானது

स्वतः नहि युज्यते - தன்னாற்பொருந்துவதின்றாம்.

प्रमाणादपि नहि युज्यते - இதர பிரமாணத்தாலும் பொருந்துவதின்றாம்.

விசேஷவுரை

முன்னில்லாதிருந்துண்டாதல் வடிவ ஜன்மம் (பிராகபாவ) உற்பத்தி சபதத்தின் பொருளாம. ஸமவிததினாலேயே ஸமவிதது னுற்பத்தி ஞானமின்றாம். முன்பு இல்லாதிருந்து உண்டாதல் வடிவ உற்பத்தினை முன்பு இல்லாமையின் கிரஹணமின்றி கிரஹித்தற்குக் கூடாமையின் அப்போது (தனது உற்பத்திக்கு முன்பு) தானில்லாமையினாலேயே தன்னால் தனது பிராகபாவத்தின் கிரஹணம் கூடாமையின் அதனோடு கூடிய (பிராகபாவத்தோடு கூடிய) தனது ஜன்மத்தைக கிரஹித்தற் சம்பவியாமையின். ஸம்வித்தானது தனது துவம்ஸத்திற்கும்

சாதகமன்றும், துவம்ஸ காலத்தில் தான் இன்மையினாலும் தனது காலத்தில் துவம்ஸம் இன்மையினாலும், தன்னால் தனது துவம்ஸத்தைக் கிரஹித்தல் சம்பவியாமையின் ஸம்வித்திற்கு ஜன்மநாசங்கள் சித்தியாதபோது இடையிலுள்ள விகாரங்கள் உற்பத்தி நாசத்தால் வியாபிக்கப்பட்டமையின் அவற்றின பாவமும் சித்தமேயாம். வேறு பிரமாணமும் சுசப் பிரகாச ஸம்வித்திற்கு ஜன்ம முதலிய விகாரத்தைச் சாதிப்பதற்குச் சமர்த்தமன்றும்.

அஃது அதன் யோக்கியமாதலால் என்பது ஹிசப்த்தத்தின் பொருளாம். (௩0)

(அ) ஸர்வத்திற்கும் சாக்ஷியாயுள்ள ஆன்மாவே ஸம்வித்தின் உற்பத்தி முதலியவற்றைச் சாதிக்கின்றது என்று ஆசங்கித்து ஸம்வித்தை அறியாததாகியே அதனதுற்பத்தி முதலியவற்றைச் சாதிக்கின்றதா, அல்லது அறிகின்றதாகி சாதிக்கின்றதா, முதற்பக்ஷம் சரியன்று. தருமியைக் கிரகிக்காத போது அதன்கண் தருமசம்பந்தத்தைக் கிரஹித்தல் பொருந்-தாமையின் என்று கூறுகின்றார்.

अबुध्यमानो नहि संविदं तत्-
संबन्धि किं चित्प्रतिपत्तुमीशः ।
न बुध्यमानोऽपि तथा तदा हि
न संविदेषा विषयत्वहेतोः ॥ ३१ ॥

**பதவுரை**

संविदं अबुध्यमानः -தர்மியாகிய ஸம்வித்தினை அறியாததாகி

तत् संबन्धि किञ्चित् - அதன் சம்பந்தியாகிய ஜன்மமுதலிய வற்றை

प्रतिपत्तुं नहि ईशः - அறிதற்கு ஆன்மா சமர்த்தமின்றும்

இரண்டாவது பக்ஷத்தின கண்ணும் ஸம்வித்திற்கும் கடாதி போன்று திருசியத் தனமையினை யங்கீகரிக்கின் ஜடத்தன்மை பிராப்தியாதலால் ஸம்வித்து சாக்ஷி விஷயமன்றும் மற்றேசுயமே கூடஸ்த்தாத விதீயசாக்ஷி வடிவமாம் அதனினுமன்னியமன்றும் என்னும் கருத்தாற் கூறுகின்றார்.

तथा बुध्यमानोऽपि न – அப்படியே ஸம்வித்தினை யறிகின்றதாகியும் அதன் ஜந்மமுதலியவற்றை கிறகித்தலிற் சமர்த்தமின்றும்

அதனை கண்ணேது வினேக்கூறுதல்.

तदा हि एषा संवित् न – அப்போது இஃது ஸம்வித்தேயாவதின்றும்.

विषयत्वहेतोः – விஷயத்தன்மை வடிவஹேதுவால் ஜடத்தன்மை பிராப்தியாதலின் (31)

(அ) இங்ஙனம் தனது சித்தாந்தத்திற் சித்சித்த அந்வய திருஷ்டாந்தத்தினல் மோக்ஷத்திற்குக் கூடஸ்த்த நித்தியத் தன்மையினைச் சாதித்து கூறிய பிரதிஞ்ஞை யேதுக்களினனுவாதத்தால் வியதிரேக திருஷ்டாந்தத்தாலும் அதனைச் சாதிக்கின்றர்.

जन्या न मुक्तिर्घटते कुतश्चि-
द्विद्याफलत्वादिति पूर्वहेतोः ।
यद्यद्धि जन्यं जगति प्रसिद्धं
तत्तन्न विद्याफलमम्बरादि ॥ ३२ ॥

பதவுரை

मुक्तिः कुतश्चित् जन्या न घटते - மோக்ஷமானது ஒரு சாதனத்தினல் ஜந்னியமாதற்கு யோக்கியமன்றும்

विद्याफलत्वादिति पूर्वहेतोः – வித்தையின் பயனுதலினல் என முற்கூறிய ஹேதுவினல்

जगति हि यत् यत् जन्यं प्रसिद्धम् – உலகின்கண் எது எது ஜன்னியமாகப் பிரசித்தமோ

तत्तद् विद्याफलं न– அது அது வித்தையின் பயன் அன்றும்

अम्बरादि – ஆகாசாதி போன்று (32)

மோக்ஷத்தில் கருமங்கட்கு உபயோகமின்மையைக் கூறுதல்

(அ) இங்ஙனம் பிரம்மபாவ வடிவ மோக்ஷத்திற்கு கூடஸ்த நித்யத்தன்மையினைச் சாதித்து அதன்கண் கருமத்திற்கு

உபயோகமின்மை பொருளாற் சித்தித்ததாயினும் முற் கூறிய ஏதுவினாலேயே அகனை நேரேசாதிக்கின்றார், ஞான கருமங்களின் சமுச்சயத்தைக் கெடுத்தற் பொருட்டு.

मोक्षस्वरूपो विफलक्रियोऽसौ
विद्याफलत्वादिह यद्यदेवम् ।
तत्तत्तथा दृष्टमशेषमेव
यथैव रज्ज्वादितमोनिवृत्तिः ॥ ३३ ॥

## பதவுரை

असौ मोक्षस्वरूपः — இந்த பிரம்மபாவ வடிவ மோக்ஷசொரூபம்

विफलक्रियः — கருமத்தின் பயனன்றும்

विद्याफ़लत्वाद् - வித்தையின் பயனாதலின்

इह यद्यदेवम् - இவ்வுலகில் எது எது வித்தையின் பயனோ

तत्तद् अशेषमेव — அவ்வெல்லாமுமே

तथा दृष्टम् — கருமத்தின் பயன் அன்றுமென காணப்பட்டுளது

यथैव रज्ज्वादि तमोनिवृत्तिः-இரச்சு முதலியவற்றின் அஞ்ஞான நிவர்த்தி போன்று.

## விசேஷவுரை

மோக்ஷ சாதன வித்தையின்கண் கருமங்கட்கு உபயோகத்தினை அங்கீகரித்தலால் மோக்ஷ சொரூபமெனப்பட்டது. 33

(அ) அற்றேல் "எவனுக்கு இந்த நாற்பத்தியெட்டு சம்ஸ்காரங்களுள்ளனவோ அவன் பிராமணன் அவன் சாயுஜ்யத்தினையும் சாலோக்கியத்தினையும் அடைகின்றான்" என்பது முதலிய ஸ்மிருதியினால் சாயுஜ்யாதி வடிவ மோக்ஷத்திற்கு கரும பலத்தன்மை யறியப்படுதலின் அந்தஸ்மிருதியினால் அநுமானத்தின் விஷயம் பாதிக்கப்படுதலின் கூறிய அநுமானம் அப்பிரமாணமாமென்று சங்கித்துக் கூறுகின்றார்—

सायुज्यादि विवादगोचरपद निःश्रेयसं नो भवे-
त्कार्यत्वादिह यद्यदीदृशमदो निःश्रेयसं नेक्षितम् ।
यद्वत्कुड्यघटादि तादृशमिदं तस्मादिदं तादृशं
युक्तं कल्पयितुं न तद्विसदृशं तादृङ् न दृष्टं यतः ॥ ३४ ॥

## பதவுரை

विवादगोचरपदम् -விவாதத்திற்கு விஷயமான

सायुज्यादि-ஸாயுஜ்ய முதலியவை

निःश्रेयसं नो भवेत् -மோக்ஷமாவதின்றும்

कार्यत्वात् -காரியமாதலால்

इह यत यत् ईदृशम -ஈண்டு எது எது காரியமாமோ

अदः निःश्रेयसम् -அதுஅது மோக்ஷ வடிவமாக

न ईक्षितम् -பார்க்கப்படவில்லை

यद्वत् कुड्यघटादि-சுவர் குடமுதலியவை போன்று

इदं तादृशम -ஸாயுஜ்ய முதலியவையும் காரியமாம்

तस्मात् इदम -காரியமாதலால் ஸாயுஜ்ய முதலியவையும்

तादृशं कल्पयितुं युक्तम् -மோக்ஷத்தினும் விலக்ஷணமாகக் கற்பித்தல் பொருத்தமாம்

न तत विसदृशम् -அதனினும் விலக்ஷணமாக அதாவது மோக்ஷ வடிவமாகக் கற்பித்தல் பொருத்தமன்றும்.

तादृक् न दृष्टं यतः -காரியத்திற்கு மோக்ஷ வடிவத்தன்மை காணப்படாமையின்.

## விசேஷவுரை

பிரம்மபாவமே ஸாயுஜ்யமா, அல்லது அதன் சரீரத்திலேயே சரீரத்தையுடைய தாந்தன்மை ஸாயுஜ்யமா, அல்லது அதன் ஸமானமான சரீரத்தையுடைய தாந்தன்மை ஸாயுஜ்யமா முதற்பக்ஷம் சரியன்று முன்வடிவம் இருக்கும் போதாவது, நசித்தபோதாவது, வாஸ்தவமாக ஒன்றற்கு மற்றோர் வடிவத்

தன்மை சம்பவியானமாயின் அஞ்ஞேயாயிரங் கருமத்தாலும் சாதித்தற்குக் கூடாமையின், கருமஸாத்தியத்திற்கு அநித்தியத் தன்மை நியமமாதலால் அதற்கு முத்தித்தன்மை பொருந்தாமை யாலும், பிரம்மபாவத்திற்கு அநாதித்தன்மையினை யங்கீகரிக் கினுே பிரம்மத்திற்குப் போன்றே கருமஸாத்தியத் தன்மை ஸம்பவியாது. சங்கை கருமங்கட்கு நித்தியசித்தப் பிரம்மபாவத் தின் பிவியஞ்சகத் தன்மையுண்மையாலும் கருமஜன்னியமான தற்கு அநித்தியத்தன்மை நியமமாதலால் மோக்ஷத்தன்மை பொருந்தாமையாலும் அநாதியாகிய பயனின் கண் ஹேதுத்துவமாமெனின் அற்றன்று அனிர்வசனீய அவித்தையின் நிவர்த்திவடிவ அதன்பிவியக்திக்கு ஞானமொன்றினுலேயே ஸாத்தியத்தன்மையுண்மையால் கருமங்கட்கு அதன்பிவியஞ்சகத் தன்மை சம்பவியாமையின்; ஆதலால் நித்திய சித்தப்பிரம்ம பாவத்தின் அபிவியஞ்சக ஞானவாயிலாக கருமங்கட்கு பிரம்ம பாவவடிவ ஸாயுஜ்யத்தினுபயோகத் தன்மை கூறிய ஸ்மிரு தியால் விவக்ஷிக்கப்பட்டது. இதனுனேயே ஆண்டு கருமங்களில் ஸம்ஸ்கார சப்தம் பிரயோகிக்கப்பட்டது. பல ஸாதனத்தினங் கத்திலுள்ள அதிசய ஹேதுவான கருமத்தின் கண்ணேயே ஸம்ஸ்கார சப்தத்தை பிரயோகித்தலால் ஸ்மிருதிக்கும் அனு மானத்திற்கும் விரோதமின்ரும். இரண்டாவது பக்ஷமும் சரியன்று 'பரமான்மாவிற்கு தேகமும் இந்திரியங்களுமின்ரும்' 'காய மற்றது விரணமற்றது' 'தூலமற்றது அணுவற்றது' 'இதுவு மல்ல இதுவுமல்ல' என்பது முதலிய சுருதிக்கு விரோதம் வருதலால் பிரம்மத்திற்கு வாஸ்த்தவமாக சரீரம் ஸம்பவியாது அதனுல் அதனேக சரீரத்தன்மை வடிவ ஸாயுஜ்வம் பொருந் தாமையானும் சரீரத்தோடு கூடிய முக்தி நிராகரிக்கப்பட்டமை யானும், என்க, இதனுலேயே மூன்ருவது பக்ஷமும் சரியன்று ஸமான சரீரத்தன்மையினையே ஸாயுஜ்ய வடிவமாகக்கொள்ளின் அதற்கு ஸாருப்யவடிவமுத்தியினும் விசேஷாபாவம் (ஸமத் தன்மை) பிராப்தியாமாதலின் மேலும் நித்திய சித்த பிரம்ம பாவத்தினும் வேருன ஸாயுஜ்ய முதலியவைகட்கு காரியத் தன்மையவஸ்யமிருத்தலால் அநித்தியத்தன்மை நிச்சயமாமாதலின் அஃது மோக்ஷமன்ருமென்பது தாற்பரியார்த்தம் விவாதத்திற்கு விஷயமான என்னும் விசேஷணம்—நித்திய சித்த பிரம்மபாவ வடிவ ஸாயுஜ்யத்தினை விலக்குதற்பொருட்டாம் ஈண்டு—லோக—வேதங்களில். ஸாயுஜ்ய முதலியவை காரியமென்பது உபநயம் காரியமாதலால் மோக்ஷமன்ருமென்பது நிகமனம். (34)

(அ) மேலும் கருமஸாத்தியமானமுத்தி ஒரு பதார்த்தத்தினுற்பத்திவடிவமா, அல்லது ஒருபதார்த்தத்தின் நாசவடிவமா, அல்லது அனிர்வசனீயவஸ்த்துவடிவமா, முதற்பக்ஷம் சரியன்று உற்பத்திக்கு முனபு காரியத்திற்கு சத்துவ பக்ஷத்திலும் அசத்துவபக்ஷத்திலும் உற்பத்தியினசம்பவம் கூறப்பட்டமையின் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

सदसदुद्भवनं न विमुक्तता सदसदुद्भवनानुपपत्तितः ।
सदसतोर्नशनं न विमुक्तता सदसतोर्नशनानुपपत्तितः ॥ ३५ ॥

பதவுரை

सदसद्भवनम् - ஸத்தினுற்பத்தியாவது அஸத்தினுற்பத்தியாவது

न विमुक्तता-மோக்ஷமன்றும்.

सदसदुद्भवनानुपपत्तितः-ஸத்திற்கும் அஸத்திற்கு முற்பத்தி பொருந்தாமையின்

இரண்டாவது பக்ஷமும் சரியன்று. நாசத்திற்கு முன்பு ஸத்தாகவேனு மஸத்தாகவேனுமிருப்பதற்கு நாசத்தின சம்பவமும் உபபாதனஞ் செய்யப்பட்டமையின் எனக்கூறுகின்றார்.

सदसतोः नशनम् -ஸத்தினது நாசமாவது அஸத்தினது நாசமாவது

न विमुक्तता-மோக்ஷமன்றும்

सदसतोः-ஸத்வஸ்த்துவிற்கும் அஸத்வஸ்த்துவிற்கும்.

नशनानुपपत्तितः-நாசம் பொருந்தாமையின். (35)

(அ) மூன்றுவது பக்ஷமும் சரியன்று அனிஷ்டமாதலானும் அனுபபன்னமாதலானுமெனக் கூறுகின்றார்.

नच तमोमयजन्म विमुक्तता
नहि तदिष्टमनिष्टतरं हि तत् ।
न खलु कल्पितजन्म विमुक्तता-
समुपगच्छति तद्वितथं यतः ॥ ३६ ॥

### பதவுரை

**तमोमयजन्म**- அனிர்வசனீயவஸ்த்துவினுற்பத்தி

**नच विमुक्तता**-மோக்ஷமன்ரும்

**नहि तदिष्टम्** - அஃது விரும்பப்படாமையின்

**तत् अनिष्टतरं हि**- அஃது அத்தியந்த மனிஷ்டமேயாமாதவின்

அனிர்வசனீய வஸ்துவிற்கு தத்துவஞான பாத்தியத்தன்மை யால் மித்தியாத்தன்மையுண்மையின், அத்தகைய மோக்ஷத் தினைபெவருமங்கி கரியாமையின் என ஏதுவினைக்கூறுகின்ருர்.

**कल्पितजन्म**-அனிர்வசனீயவத்துவினுற்பத்தி

**विमुक्ततां न खलु समुपगच्छति**-விமுக்தத்தன்மையினையடை கின்றதில்லை மோக்ஷமாகின்றதில்லையென்பது பொருள்

**तत् वितथं यतः**-அஃது மித்தையாதலின் (36)

(அ) ஸத்திற்காவது அஸத்திற்காவது விநசம் ஸம்பவியா விடினும் அவித்தையின் காரியமாகிய வனிர்வசனீய பந்தத்தின் அத்தியந்தநாசம் மோக்ஷமாமென வேறு கதியற்றவனது சங்கை யினையனுவதிக்கின்ருர்.

अथ तमोमयविश्वविकल्पना-
विलयनात्मकमभ्युपगम्यते ।
सकलदूषणजातविवर्जितं
तदिह मोक्षपदं न निवार्यते ॥ ३७ ॥

### பதவுரை

**मोक्षपदम्** –மோக்ஷசொரூபமானது

**तमोमयविश्वविकल्पनाविलयनात्मकम्** -அனிர்வசனீய ஸர்வ கற்பனையின் நிவர்த்திவடிவமாக

**इह अथ अभ्युपगम्यते**-சமுச்சய மதத்தின் கண் ணங்கீகரிக்கப் படுமாயின்

**सकलदूषणजातविवर्जितं तत्** -ஸர்வதோஷமுமற்றவஃது

**न निवार्यते**-எம்மால் நிவர்த்திக்கப்படுகின்றதில்லை

## விசேஷவுரை

ஸர்வதுவைத நிவிர்த்திவடிவம் மோக்ஷமாமென்னுமிப் பக்ஷத்தில் பிரத்தியகான்மாவிற்கு பிரம்மபாவம் நித்தியசித்த மாதலானும் அனிர்வசனீய பந்தத்தின் நிவர்த்தி தததுவஞ் ஞானமாத்திரத்தின தீனமாதலானும் கருமங்கட்கு அதனி கண் உபயோகமின்மையால் சமுச்சயத்தின் சித்தியின்ரும் என்னுங் கருத்தால் அந்த மோக்ஷமகீகரிக்கப்பட்டது. (37)

(அ) அற்றேல் தத்துவஞானமாத்திரத்தினுல் பந்தநிவர்த்தி சம்பவிக்கின்றதில்லை. தத்துவவேத்தாக்கட்கும் சரீர முதலிய பந்தங்காணப்படுதலால் என்ருசங்கிதது 'வித்துவான் நாமரூபங் களின்றும் விடுபட்டவனுகின்ருன்' 'இங்ஙனமே இநத வித்வா னுடைய பதினறு கலைகளும் புருஷனேவாசிரயமாகவுடையனவாய் புருஷனையடைந்து அஸ்த்தமனத்தையடைகின்றன' என்பது முதலிய சாஸ்த்திரப் பிரமாணத்தினுலும், உலகின் கண் வித்தைக்கு அவித்தையை நிவர்த்திப்பதன்கண் நிரபேக்ஷ சாதனத்தன்மை இருந்தாலும், தத்துவசாக்ஷாத்காரமுடைய வனுக்கு உடனே விதேககைவல்பமுண்டாகின்றது. எவனுக்கு தேகாதிபந்தங்காணப்படுகின்றதோ அவன் தத்துவ சாக்ஷாத் காரமுடைவனன்று எனநிச்சயிக்கப்படுகின்றது. என்னுங்கருத் தால் ஸத்யோ (உடனே) முக்திமதததினை தெரிசிப்பிககின்ருர்'

सम्यग्ज्ञानविभावसुः सकलमेवाज्ञानतत्संभवं
सद्यो वस्तुबलप्रवर्तनमरुद्व्यापारसंदीपितः ।
निर्लेपेन हि दंदहीति न मनागप्यस्य रूपान्तरं
संसारस्य शिनष्टि तेन विदुषः सद्यो विमुक्तिर्ध्रुवा ॥ ३८ ॥

## பதவுரை

सम्यग्ज्ञानविभावसुः - தத்துவஞ்ஞானமாகிற நெருப்பு

वस्तुबलप्रवर्तनमरुद्व्यापारसंदीपितः - வஸ்த்துவாகிய பலமுள்ள பிரவர்த்தன வாயுவின் வியாபாரத்தால் ஜொலிக்கப்பட்டதாகி

सकलमेवाज्ञानतत्संभवम् - அஞ்ஞான அதன் காரிய மனைத்தையுமே

निर्लेपेन हि-நிஸ்சேஷமாகவே

सद्यो दंदहीति-உடனே தஹிக்கின்றது

अस्य संसारस्य- இந்தச் சம்சாரத்தின்

मनागपि रूपान्तरम् -சொற்ப வடிவத்தினையும்

न शिनष्टि-மிஞ்சவைக்கின்றதில்லை

तेन विदुषः-அதனால் வித்துவானுக்கு

सद्यो विमुक्तिः ध्रुवा-ஸத்தியோ மோக்ஷமானது நிச்சயமாம்.

### விசேஷவுரை

வஸ்த்து=விஷயபூதபரமார்த்த ஸத்பிரம்மம், அதுவே பலமாம். அதுவே விருத்தி ஞானத்திற்கு அவித்தை முதலிய வற்றை தஹிக்குந் தன்மையில பிரயோஜகமாதலின் பிரவர்த்தனவாயுவாம். அதன் வியாபாரமாவது விருத்தியின்கண் பிரதிபவிததல். அதனால் ஜொலிக்கப்பட்டது என்பது பொருள் (38)

## ஜீவன் முக்திக்கு அர்த்தவாதத்தன்மையைக் கூறுதல் :-

(அ) அற்றேல் தத்துவ ஞானிக்கு உடனே விதேக கைவல்யத்தினையங்கீகரிக்கின் "வித்வானுககு பிராரத்தகருமம் உள்ளவரையிருப்பாம் பின்னர் மோக்ஷத்தையடைவன்" "எப்போது மனதிலுள்ள ஸர்வகாமங்களேயும் பரித்தியாகம் செய்கின்றனே ஏ அர்ஜுனு அப்போதுஆன்மாவின் கண்ணேயே தன்னுல் சந்துஷ்டனுய் திதப்பிரஞ்ஞனென்று சொல்லப்படுகின்றுன்" என்பது முதலிய ஜீவன்முக்தியினைப் பிரதிபாதிக்கும் சாஸ்த்திரம் நிர்விஷயமாம் என்ருசங்கித்து அஃது அர்த்தவாதமாதலால் சுகர்வாமதேவர் முதலியோரின் முக்திசாஸ்திரத்தினைப் போன்று உத்கிருஷ்ட அறிவாளிகளால் கற்பிக்கப்பட்ட ஜீவன்முக்தியை யனுவதித்தலால பிரம்மவித்தையின் ஸ்துதிபரமாம். ஆதலால் அதற்கு விரோதமின்ரும் என்னுங்கருத்தசற் கூறுகின்ருர்.

जीवन्मुक्तिप्रत्ययं शास्त्रजातं
जीवन्मुक्ते कल्पिते योजनीयम् ।
तावन्मात्रेणार्थवत्त्वोपपत्तेः-
सद्योमुक्तिः सम्यगेतस्य हेतोः ॥ ३९ ॥

## பதவுரை

**जीवन्मुक्तिप्रत्ययम्**-ஜீவன் முக்தியினை போதிக்கின்ற

**शास्त्रजातम्**-கூறிய சாஸ்த்திர சமுதாயமானது

**कल्पिते जीवन्मुक्ते**-கற்பித ஜீவன் முக்தியில்

**योजनीयम्**-பொருத்தத்தக்கதாம்

**तावन्मात्रेण**-அத்துணையானே

**अर्थवत्त्वोपपत्तेः**-துதிவடிவ பிரயோஜனமுடையதாந் தன்மை பொருந்துதலின்.

**एतस्य हेतोः** - இக்காரணத்தால் அதாவது ஜீவன் முக்தி சாஸ்த்திரத்திற்கு அன்னிய விஷயகத் தன்றை வடிவ ஏதுவாய்

**सद्योमुक्तिः सम्यग्**-ஸத்தியோ முக்தி நலமுடையதாம் (39)

ஸத்தியோ = உடனே

ஜீவன்முக்தியைக் கூறுதல்:—

(அ) சீவன்முக்தியைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்திற்கு அர்த்தவாதத் தன்மையிருப்பினும் அதன் அர்த்தத்திற்கு வேறு பிரமாணத்தோடு விரோதமின்மையினல் பூதார்த்தவாதத் தன்மை பொருத்தமாம ஆதலால் சீவன் முக்தி சித்தித்தது அதனை நிவர்த்தித்தற்குக் கூடாது. வித்தையின் சாமர்த்தியத்தால் சேஷமின்றி அவித்தை நிவர்த்தியாகும் போது அது பொருத்த மற்றதாம் என்று சொல்லற்க. "**अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः**" காரியத்தை யாரம்பிக்காததும் பூருவ ஜன்மத்திலும் இந்த ஜன்மத்திலும் செய்யப்பட்டதுமான கருமத்தை ஞானம் நிவர்த்தி செய்கின்றது. ஞானிக்குப் பிராரத்தகருமம உள்ள வரை இருப்பை சாஸ்திரம கூறுதலின் என்னும் சூத்திரத்திற் கூறப்பட்ட நியாயத்தால் வித்தைக்கு பிராரப்த பயனையுடைய புண்ணிய பாவங்களை நிவர்த்திக்குந் தன்மை பொருந் தாமையால் அவற்றின் இருப்பிற்கேதுவாகக் கற்பிக்கப்பட்ட அவித்தையின் லேசவசத்தால் வித்துவானுக்கும் பிராரத்த கருமம் க்ஷயமாகும் பரியந்தம சரீராதியின் தாரணம் பொருந்துதலின் என வேறுமதத்தினைக் கூறுகின்ருர்

यद्वा विद्वद्गोचरं योजनीयं तस्या विद्यालेशवत्त्वोपपत्तेः ।
तस्याभीष्टा निर्निमित्ता निवृत्तिर्यद्वा विद्यासंततिर्हेतुलेशम् ॥ ४० ॥

பதவுரை

यद्वा विद्वद्गोचरं योजनीयम्–அல்லது வித்துவானை விஷயஞ் செய்வதாக ஜீவன் முக்தி சாஸ்த்திரம் பொருத்தத்தக்கதாம்

तस्य अविद्यालेशवत्त्वोपपत्तेः–அவனுக்கு அவித்தையின் லேச முடையதாந் தன்மை பொருந்துதலின்

அப்படியானல் வித்தைக்கு அவித்தையின் லேசத்தை நிவர்த்திக்குந்தன்மையினல் அவித்தையின் லேசம் நிவர்த்தியாகாது என்ருசங்கித்து பிராரத்த கருமங்கட்கு போகத்தாலேயே நாசமுண்டாகும்போது பிரயோஜனமின்மையினல் அது தானே நிவர்த்தியாகின்றது எனக் கூறுகின்ருர்.

तस्य निवृत्तिः–அவித்யாலேசத்தின் நிவர்த்தி

निर्निमित्ता अभीष्टा–நிமித்தமின்றியேயுண்டாமென வங்கீகரிக்கப்பட்டுளது

அவித்தையின் லேச நிவர்த்திக்கும் நிவர்த்தியத்தினும் வேருகவே நிமித்தத்தினைக் கூறவேண்டும். அற்றேல் அவ் விலேசத்திற்கு க்ஷணிகத் தன்மை பிராப்தியாமாதலின் என்று ஆசங்கித்துக் கூறுகின்ருர்.

यद्वा विद्यासंततिः–அல்லது வித்தையின் சந்ததியானது

हेतुलेशम्–அவித்தையின் லேசத்தை நிவர்த்திக்கின்றது.

விசேஷவுரை

விருத்தி சாக்ஷாத்காரத்தால் அபிவியக்தமான சொருப சைதன்யமே அனுவிருத்திக்கின்றதாய் வித்தையின் சந்ததி எனப்படுகின்றது. அதுவே பிராரப்தகருமங்கட்கு போகத்தால் க்ஷயமுண்டாகுங்கால் ஜீவன்முக்திக்கு ஏதுவான அவித்தையின் லேசத்தை நிவர்த்திக்கின்றதென்பது பொருள். (40)

(அ) அற்றேல் வித்தையினுல் சிதான்மா பிரம்மவடிவமாக அபிவியக்தமாகும்போது அதன்கண் அவித்தையின் லேசமும் சம்பவியாமையின் அதனதீனமான ஜீவன்முக்தி எங்ஙனம் பொருந்தும்? மேலும் சிலர் அவித்தையின் கந்தத்திற்கும், வேறு சிலர் அவித்தையின் சாயைக்கும், மற்றுஞ்சிலர் அவித்தையின் சம்ஸ்காரத்திற்கும் ஜீவன்முக்தியின் கடகத் தன்மையினை (ஏதுத் தன்மையை)க் கூறுகின்றனர். அவர் கூற்றுக்கு விரோதம் வருதலாலும் அவித்தையா லேசத்தின் அதீனமாக ஜீவன்முக்தி சித்திப்பதின்றும் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

जीवन्मुक्तिव्यापृतेः प्रापको य-
स्तस्याविद्यालेशगन्धादिभाषा ।
नाविद्याया नापि भागस्य तस्या-
स्तस्मिन्पक्षे दुर्घटत्वाद्विमुक्तेः ॥ ४१ ॥

பதவுரை

जीवन्मुक्तिव्यापृतेः-ஜீவன் முக்தியின் வியாபாரத்தினை

प्रापकः यः तस्य-அடைவிக்கின்ற யாதொரு சாதன முண்டோவதற்கு

अविद्यालेशगन्धादिभाषा-அவித்தையின் லேசம் அவித்தையின் கந்த முதலிய நாமங்கள் வித்துவான்களால் செய்யப்பட்டனவாம்.

“அனுருதத்தால் வஹிக்கப்பட்டனர்” “அவிவேகத்தால் நாஞவித சிந்தையையடைகின்றவனுகி தீனத்தன்மையால் சோகிக்கின்ருன்” என்பது முதலிய சுருதியினுல் அவித்தையினது ஆவரண விக்ஷேபவடிவ காரியத்வயத்தினையனுசரித்து ஆவரண சக்தியினையுடைய அவித்தையினம்சம் நாசமாயினும் ஜிவன்முக்தனது சம்பந்தியான காரியகரணங்களின் வியாபாரத்தை அடைவிக்கின்ற விக்ஷேபசக்தியோடு கூடிய அவித்தையின் அம்ஸம் வலுவுள்ள பிராரப்த கருமத்தோடு கூடியதாகி ஜீவன்முக்திக்கு ஏதுவாதலால்! அதுவே எல்லோராலும் லேசம் கந்த முதலிய சப்தங்களால் சொல்லப்படுகின்றது.

ஆதலால் ஜீவன்முக்தனது பிரம்மவடிவமாக அபிவியக்த ஆன்ம சொருபத்தின்கண்ணும் விக்ஷேப சக்தியினையுடைய அவித்தியா லேசத்தினனுவிருத்தியானது பிராரப்த கருமம் நசிக்கும்வரை பொருந்துகின்றது. ஆதலின் அதற்கு ஜீவன்முக்தி சடகத் தன்மையில் யாதொரு தோஷமுமின்றுமென்பது கருத்து. கடகத்தன்மை = உள்ளிருக்குந்தன்மை அல்லது எதுத்தன்மை. அற்றேல் சம்பூர்ணவவித்தையே அல்லது அதன் ஆவரண சக்தியினையுடைய பாகமே லேச முதலிய சப்தங்களால் கூறத் தக்கதாமெனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

न अविद्याया:-லேச முதலிய சப்தம் அவித்தையின் வாசகமன்றும்

नापि तस्या: भागस्य-அதன் பாகவாசகமுமன்றும்.

तस्मिन्पक्षे-அந்தப் பக்ஷத்தில், அதாவது லேசம் முதலிய சப்தம் அவித்தை அல்லது அதன் பாகத்தின் வாசகமாமென்னும் பக்ஷத்தில்

विमुक्ते: दुर्घटत्वाद्-மோக்ஷம் பொருத்த மற்றதாமாதலின்

விசேஷவுரை

மோக்ஷத்திற்குப் பூருவாவஸ்தையினும் விசேஷமின்மையின் அப்போது சீவித்திருப்பவனுக்கு மோக்ஷமே துர்க்கடமாமென்பது பொருள். (41)

(அ) அற்றேல் பாஷியக்காரர் முதலியோரால் அவித்தை முதலியவற்றின் பாதிதாநுவிருத்தியினல் சீவன்முக்தனது பிக்ஷாடனதி வியாபாரமாம் என ஒவ்வோரிடத்து கூறப்படு கின்றது. அது கந்தம் சாயை முதலிய பதத்தால் கூறத்தக்க லேச பக்ஷத்தினும் வேருமோ எனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

गन्धच्छायालेश संस्कार भाषा
विज्ञातव्या भाष्यकारीय तन्त्रे ।
स्वाविद्याया बाधिताया: प्रतीते:-
पौर्वापर्येणार्थमालोच्य बुध्या ॥ ४२ ॥

### பதவுரை

भाष्यकारीय तन्त्रे-பாஷ்யகாரரால் இயற்றப்பெற்ற கிரந்தத்தின் கண்

बुद्ध्या पौर्वापर्येण अर्थमालोच्य-நுண்மை மதியினுல் முன்பின் பொருள்களை விசாரித்து

बाधितायाः स्वाविद्यायाः प्रतीतिः-வித்தையினுல் பாதிக்கப்பட்ட தனது அவித்தையின் அனுவிருத்தியானது

गन्धच्छायालेश संस्कार भाषा-கந்தம் சாயைலேசம் சம்ஸ்காரம் என்னும் பெயருடையதாக

विज्ञातव्या-அறியத்தக்கது.

### விசேஷவுரை

நிமித்தமின்றி பாதிதானுவிருத்தியும் சம்பவியாமையால் அதன் நிமித்தமாகக் கூறப்பட்ட அவித்தையின் லேசம் அவஸ்யமங்கீகரிக்கத்தக்கதாம் அதனுல் அதுவே பிராதிபாஸிக விக்ஷேப வடிவத்தால் அனுவர்த்திக்கின்றதாய் அங்ஙனம் சொல்லப்படுகின்றதென்பது பொருள். (42)

(அ) அற்றேல் வித்வானுக்கும் வைதது தெரிசனமுளதாயின் அதனதீனமாக பயம் சோக முதலிய வடிவ பந்தம் அவஸ்யமுண்டாதலின் ஜீவன்முக்தியெங்ஙனம் சித்திக்கும்? அன்றியும் ஜீவிக்குங்காலத்திலேயே முக்தியினை யங்கீகரிக்கின் துவைதத்தின் தெரிசனமெங்ஙனமுண்டாம் என்று சங்கித்து இரண்டும் வித்வானுடைய அனுபவ சித்தமாயிருத்தலின் விரோதமின்றுமெனக் கூறுகின்றார்.

जीवन्मुक्तिस्तावदस्ति प्रतीते-
द्वैतच्छाया तत्र चास्ति प्रतीतेः ।
द्वैतच्छाया रक्षणायास्तिलेश
स्तस्मिन्नर्थे स्वानुभूतिः प्रमाणम् ॥ ४३ ॥

## பதவுரை

प्रतीतेः-அனுபவ பலத்தால்

जीवन्मुक्तिस्तावदस्ति-ஜீவன் முக்தியானது உளதேயாம்

तत्र द्वैतच्छाया चास्ति ஜீவன் முக்தியவஸ்த்தையில் துவைத தெரிசன முமுளது

प्रतीतेः-அனுபவம் காணப்படுதலின்

அதன்கண் உபபத்தியினைக் கூறுகின்றார்.

द्वैतच्छाया रक्षणाय-துவைத தெரிசனத்தை ரக்ஷிக்கும் பொருட்டு

लेशः अस्ति-அவித்தையின் லேசமுளது

பிராதிபாஸிக விக்ஷேப சக்தியினையுடைய அவித்தையினம்ஸம லேசசப்தத்தின் பொருளாம். அதன்கண் வித்துவானுடைய அனுபவத்தைப் பிரமாணமாக்குகின்றார்.

तस्मिन् अर्थे-அப்பொருளின் கண்

स्वानुभूतिः प्रमाणम्-தனதனுபவமே பிரமாணமாம். (43)

(அ) அற்றேல் வித்துவானுக்கும் அஞ்ஞானத்தின் லேசமுளதாயின் அப்போது முன்போன்று பிரம்மமில்லை விளங்கவில்லை என்னும் வியவகாரமுண்டாதல் வேண்டும் என்றாசங்கித்து அவ்வியவகாரம் முன்பு அவித்தையினாற் செய்யப்பட்ட ஆவரணத்தினதீனமாயிருந்தமையினாலும், இப்போது ஆவரணாம்சம் தத்துவ ஞானத்தினால் நசித்தமையானும், ஞான காலத்தல் அவ்வியவகாரம பொருந்தாமையின் நான பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் வியவகாரமே பொருந்துகின்றது. அங்ஙனமாயினும் முக்தாவஸ்தையில் நானென்றும் என்னுடையதென்றும் வியவகாரம் காணப்படுதலின் அது பொருந்தும் பொருட்டு விக்ஷேப சக்தியினையுடைய அவித்தையின் லேசம் அங்கீகரிக்கத் தக்கதாமெனக் கூறுகின்றார்.

ब्रह्मात्मत्वं सान्तरायं पुरस्ता-
द्बोधोत्पत्तौ ध्वस्तमोहान्तरायम् ।

यद्यप्येवं द्वैतलेशानुवृत्तेः
प्रत्यक्षत्वान्मोहलेशोऽभ्युपेयः ॥ ४४ ॥

பதவுரை

पुरस्तात्-ஞானத்திற்குப் பூர்வம்

ब्रह्मात्मत्वम्-தனது சுவாபாவிக பிரம்ம வடிவத் தன்மை

सान्तरायम्-அவித்தையினுல் மறைப்புற்றிருந்தது

बोधोत्पत्तौ-ஞானேற்பத்தி காலத்தில்

ध्वस्त मोहान्तरायम्-அவித்தையினுவரணம் நசிக்கப் பெற்றுளது

यद्यपि एवम्-இங்ஙனமவித்தை நசித்ததாயினும்

द्वैतलेशानुवृत्तेः प्रत्यक्षत्वात्-துவைதத் தோற்றத்தினனுவிருத்தியானது பிரத்தியக்ஷமாகக் காணப்படுதலின்

मोहलेशोऽभ्युपेयः-அவித்தையின் லேசம் அங்கீகரிக்கத் தக்கதாம். (44)

(அ) வித்துவானுக்கும் நான் எனது என்பது முதலிய வியவகாரத்தை அங்கீகரிக்கின் அதனை நிமித்தமாகக்கொண்டு வேறு புண்ணிய பாவத்தினுற்பத்தி சம்பவித்தலால் அதனதீனமாக தேகாந்தரம் அவஸ்யமுண்டாம் ஆதலின் விதேககைவல்யம் பொருந்தாது என்னுஞ் சங்கையினை நிராகரிக்கின்றவராய் ஜீவன் முக்தியினை முடிக்கின்றுர்.

तस्माज्जीवन्मुक्तरूपेण विद्वा-
नारब्धानां कर्मणां भोगसिध्यै ।
स्थित्वा भोगं ध्वान्तगन्धप्रसूतं-
भुक्त्वाऽत्यन्तं याति कैवल्यमन्ते ॥ ४५ ॥

பதவுரை

तस्मात्-பிராரப்த கருமத்தால் தடுக்கப்பட்ட வித்தையினுல் அவித்தையின் லேசம் நாசமாகாமையின்

विद्वान्-ஞானியாகிய புருடன்

आरब्धानां कर्मणां भोगसिध्यै-பிராரப்த கருமங்களின் போக சித்தியின் பொருட்டு

जीवन्मुक्तरूपेणस्थित्वा-ஜீவன் முக்தனுயிருந்துகொண்டு

ध्वान्तगन्धप्रसूतम् - பாதிக்கப்பட்ட அவித்தையினனு விருத்தி மாத்திரத்தால் தோற்றுவிக்கப்பட்ட

भोगं भुक्त्वा-போகங்களைப் புஜித்து

अन्ते-போகத்தினவஸான காலத்தில்

अत्यन्तं कैवल्यं याति-விதேக கைவல்யத்தினையடைகின்ருன்

### விசேஷவுரை

பிராரப்த கருமத்தின் க்ஷயமாத்திரத்தினை யபேக்ஷித்து வியவகரித்துக் கொண்டிருக்கிற வித்துவானுல், வேறு கருமம் ஆரம்பிக்கப்படாமையினுலும், கருமத்தின் வலிமையினுல் உண்டாகாநின்ற வியவகாரமும் சொப்பனப் போலிறு ஆன்மானு பவத்தினுல் ஒவ்வொரு க்ஷணமும் பாதிக்கப்படுகின்றதாகி, அதிருஷ்ட ஜனகமன்ருதலினுலும் போகத்தால் பிராரப்தகருமம் நாசமாகுங்கால், தடையற்ற வித்தையினுல் அவித்தையின் லேசமும் நாசமாதலாலும், வித்துவானுக்கு தேகாந்தரம் பொருந்தாமையின், வர்த்தமானதேக வீழ்ச்சியினனந்தரம் விதேக மோக்ஷம் சித்திக்கின்றதென்பது கருத்து. 45

(அ) வர்ணிக்கப்பட்ட இருவித மோக்ஷத்தின்கண் சுவே தாஸ்வதர சுருதியினைப் பிரமாணமாக்குகின்ருர்.

क्षरं प्रधानममृताक्षरं हरः
क्षरात्मानावीशते देवः एकः ।
तस्याभिध्यानाद्योजनात्तत्त्वभावा-
द्भूयश्चान्ते विश्वमाया निवृत्तिः ॥ ४६ ॥

### பதவுரை

प्रधानं क्षरम्- அவ்யாகிருதம் விநாசமுடையதாம்

விநாசமென்பதனுல் அதன் நித்தியத்தன்மை நிவர்த்திக்கப் பட்டது அப்படியானுல் நித்திய வஸ்த்துவேயின்ரும் என்னுஞ் சங்கையுண்டாகக் கூறுகின்ருர்.

हरः अमृताक्षरम्-ஈஸ்வரன் அமிர்த நித்திய வடிவராம்.

ஸர்வ காரியத்தினையும் சம்மாரஞ் செய்கின்ற ஈஸ்வரனது ஸம்மாரத்தில் காரணமின்மையின் அவரே மரணம் அபக்ஷய முதலியவையற்ற நித்திய வஸ்த்துவாமென்பது பொருள். அப்படியானுல் பிரதானமும் புருஷனும் அவனைச் சம்மரிப்பவர் களாக ஆவார்கள் என்ருசங்கித்து. அவர்கள் அவ்விஸ்வரனுல் நியமிக்கப்பட்டு அவரது பரதந்திரராமிருத்தலால் அங்ஙனமன்று என்னுங் கருத்தாற் கூறுகின்ருர்.

एकः देवः-ஈஸ்வரனெருவனே

क्षरात्मानावीशते-பிரதானத்தையும் புருஷனையும் ஆளுகின்ருர்

அப்படியானுல் துவைதத்தினடைவுண்டாம் என்ருசங்கித்து ஈஸ்வரனை விஷயஞ்செய்கின்ற தத்துவ ஞானத்தால் பிரதான பதத்தின் வாச்சியமாகிய மாயை காரியத்தோடுகூட பாதிக்கப் படுதலானும், புருஷன் ஈஸ்வர வடிவமாகவே நிற்றலானும், அத்துவைத வஸ்த்துவே மிஞ்சுகின்றது என்னுங் கருத்தாற் கூறுகிருர்.

तस्य अभिध्यानात्-அவ்வீசனுடைய தியானத்தினுல்

योजनात्-தியான பரிபாக சாக்ஷாத்காரத்தினுல்

तत्त्वभावात्-பரிபூர்ண பிரம்மான்மத் தன்மையினுல்

भूयश्च अन्ते-மீண்டும் பிராரப்தத்தின் முடிவில்

विश्वमायानिवृत्तिः-ஸர்வ மாயையின் நிவர்த்தியாம்.

## விசேஷவுரை

ஈஸ்வர சப்தத்தாற் சொல்லப்பட்ட பிரம்மத்தின் அபிமுகமாக நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் வடிவினதாகிய ஆதார பூர்வகம் நிரந்தர நெடுங்கால தியானத்தினுல் துவைத சத்தியத் தன்மை பிராந்திக்கு ஏதுவான மாயையின் லேசம் நிவர்த்தி

ஆகின்றது. அதன்பின்பு தியானத்தின் பரிபாக சாக்ஷாத் காரத்தினால் துவைதத்தின் கண் வியாவகாரிக சத்தியத்வ பிராந்திக்கேதுவான மாயையின் லேசம் நிவர்த்தியாகின்றது. மீண்டும் அனுவிருதபூர்ண பிரம்மான்மத் தன்மை வடிவ தத்துவ பாவனையினால் பிராரப்த கருமங்கட்கு போகத்தால் நாசம் உண்டாகும்போது, துவைதத்தின் கண் பிராதி பாசிகத்தன்மை பிராந்திக்கு ஏதுவான அவசிஷ்ட மாயாலேசத்தின் நிவர்த்தியாம். என இங்ஙனம் பிரபஞ்ச மாயையின் நிவர்த்தி தத்துவ ஞானத்தாலுண்டாகின்றது என்பது பொருள். ஈண்டு பிராரப்தத்தின் முடிவில் விஸ்வமாயையின் நிவர்த்தியாமென்று கூறினமையின் முன்பும் ஸாவசேஷ மாயையின் நிவர்த்தி பிரதீதி ஆகின்றது. ஆகலின் இச்சுருதி இருவித முக்தியின்கண் பிரமாணமாமென்பது கருத்து. 46

(அ) அற்றேல் ''सूर्यद्वारेण ते विरजाः प्रयान्ति यत्रामृतः सः पुरुषो ह्यव्ययात्मा'' கருமத்தினையும் உபாஸனையையுமனுஷ்டிக் கின்றவர்கள் கல்மஷமற்றவர்களாய் உத்தராயண மார்கத்தால் சத்தியலோகத்தினை அடைகின்றனர். எவ்வுலகின்கண் பிரதம சரீரியாகிய இரணியகருப்பனென்னும் அப்புருடன் ஸம்ஸாரம் உள்ளவரை நிலைபெற்றுள்ளானோ அந்த சத்தியலோகத்தினை எனக் கூட்டுக. ''तत्र प्रयाताः गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः'' பிரம்மத்தினையுணர்ந்த புருஷர்கள் ஆண்டு சென்றவராகி பிரம்மத்தினையடைகின்றனர் என்பது முதலிய சாஸ்திரத்தினால் அர்ச்சிராதி மார்கத்தினால் மேலுலகையடைந்த வித்துவான் கட்கே முக்தியையடையுந்தன்மையுண்மையின் ஜீவித்திருக்கும் வித்துவானுக்கு மோக்ஷமெங்ஙனமாம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

ब्रह्मादीनामस्ति मुक्तिः श्रुतिश्च-
स्तेषामेषा नार्चिराद्या गतिर्वः ।
तस्मादस्या निर्गुणब्रह्मविद्या-
संबन्धित्वं नेषितव्यं भवद्भिः ॥ ४७ ॥

பதவுரை

ब्रह्मादीनाम्-பிரம்ம தேவன் முதலானோர்க்கும்
मुक्तिः अस्ति-மோக்ஷமுளதாமென

श्रुतिभ्यः-சுருதி ஸ்மிருதிகளால் அறியப்படுகின்றது

तेषा मेषा अर्चिराद्या गतिः न - அவர்கட்கு இந்த அர்ச்சிராதி மார்க்கமின்ரும் என்பது

वः-உங்கட்கும் சம்மதமாம்

तस्मात् अस्याः-ஆதலால் அர்ச்சிராதி மார்க்கத்திற்கு

निर्गुण ब्रह्मविद्या संबन्धित्वम्-நிர்க்குண பிரம்ம வித்தையின் பலப்பிராப்தியின் துவாரத் தன்மை

भवद्भिः न एषितव्यम्-உங்களாலங்கீகரிக்கத்தக்கதன்று

## விசேஷவுரை

"तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत् ब्रह्मणा सह ते सर्वे सम्प्राप्ते प्रतिसञ्चरे, परस्यान्ते कृतात्मानः प्रविशन्ति परं पदम्"

தேவர்களுக்குள் எவரெவர் பரமான்மாவை அறிந்தனரோ அவரே அதுவாவர். பிரம்மலோகத்தில் சாக்ஷாற்காரமுடைய ராய் பிரமாவின் அந்தியகாலத்தில் பிரளயம் பிராப்தமாகும் போது அவ்வுலகிலுள்ள அனைவரும் பிரமாவோடுகூட பரம பதத்தை அடைகின்றனர்" என்பது முதலிய வசனங்களால் பிரமலோக வாசிகளான நிர்க்குணப்பிரம்ம வித்தையினையுடைய பிரமன் முதலானோர்க்கும் மோக்ஷமுளதேயாம். அவர்கட்கு மோக்ஷப்பிராப்திமின்கண் அர்ச்சிராதி மார்க்கமோ இன்ரும் இஃது உங்கட்கும் சம்மதமாம். பிரம்மலோகத்தின் கீழேயே அர்ச்சிராதி மார்க்கமிருத்தலின். ஆதலால் இந்த அர்ச்சிராதி மார்க்கத்திற்கு நிர்க்குணப் பிரமவித்தையின் பலப்பிராப்தியில் துவாரத்தன்மை மனிதர்களுக்குங்கூட அங்கீகரிக்கத்தக்கதன்ரும். அன்றியும் "कार्यं बादरिरस्यगत्युपपत्तेः" "காரியசகுணப் பிரமத்தினையே உபாசிக்கின்ற புருஷர்களை அமானவபுருடன் அடைவிக்கின்ருன் என்று வாதராயணாசிரியர் கருதுகின்றனர் அதற்கு அடையத்தக்க தாந்தன்மை பொருந்துதலின்" என்று கூறப்பட்ட நியாயத்தால் சகுணவித்தையின் பயனுயுள்ள காரியப் பிரம்மப் பிராப்தியின் துவாரத்தன்மையே அதற்கு அங்கீகரிக்கத் தக்கதாம். இவ்வாருகவே சூரியத்துவாரத்தால் (உத்தராயண மார்க்கத்தால்) என்பதாதி வசனமும் சகுண வித்தையினையுடைய புருடனை விஷயஞ் செய்வதாக அங்கீகரிக்கத்தக்கது என்பது கருத்து. (47)

(அ) அற்றேல் "तयोर्ध्वमायन्नमृतत्वमेति" மூர்த்தன்ய (சிரசிலுள்ள) சுழுமுனை நாடிவாயிலாக ஊர்த்துவகமனத்திற்கு அமிருதத்துவப்பிராப்தியின் உபாயத்தன்மை கேட்கப்படுதலால் மனிதர்கட்கும் ஊர்த்வகமனமின்றி அமிருதத்துவப் பிராப்தி யின்றாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

प्राणोत्क्रान्तिर्नास्ति मूर्धन्ययैषां-
नाड्या तस्माद्यत्रयत्रैव विद्या ।
तत्रैवस्यान्मुक्तिरित्यभ्युपेयं-
गत्युत्क्रान्ती तेन विद्यान्तरेषु ॥ ४८ ॥

பதவுரை

एषाम्-பிரம்ம ஞானிகளுக்கு
मूर्धन्यया नाड्या-சிரசிலுள்ள சுழுமுனை நாடியினால்
प्राणोत्क्रान्ति नास्ति-பிராணன்கள் மேற் கிளம்புதலின்றாம்

சொரூபமாக அபரிச்சின்ன ஆன்மாவிற்கு வாஸ்தவமாக சுழுமுனை நாடி வாயிலாக ஊர்த்துவகமனம் பொருந்தாமையின் பிராணன்மக லிங்கதேகத்தின் கமனத்தை உபாதியாகக் கொண்டு கமனஞ் சொல்லவேண்டும். அஃது பிரம்மஞானிகட்குப் பொருந்துவதின்றாம், "न तस्य प्राणा उत्क्रामन्ति ब्रह्मैवसन् ब्रह्माप्येति" வித்துவானுடைய பிராணன்கள் வெளிக்கிளம்பு கின்றதில்லை, பிரம்மமாகவிருந்தே பிரம்மத்தையடைகின்றான் என்பது முதலிய சுருதியினால் வித்துவானுடைய பிராண கமனத்தை நிஷேதித்தலால் அதனை (பிராணனை) யுபாதியாக உடைய கமனஞ் சம்பவியாமையினாலும் அடையத்தக்க பிரம்மம் பரிபூர்ணமாயிருத்தலால் அதன் பிராப்திவடிவ அமிர்தத் தன்மைக்கு கமனாதியின் அபேக்ஷ யின்மையினாலும் என்பது பொருள்.

तस्मात्-ஆதலால்
यत्र यत्रैव विद्या-எந்த தேசத்தில் எந்தக் காலத்தில் ஞான முண்டாகின்றதோ
तत्रैव-அந்த தேச காலங்களிலேயே அதாவது

मुक्तिः स्यात् इति-தேகம் ஜீவித்திருக்குங் காலத்திலேயே மோக்ஷமுண்டாமென

अभ्युपेयम्-அங்கீகரிக்கத்தக்கது.

अत्र ब्रह्म समश्नुते-ஈண்டே பிரம்மத்தையடைகின்றான் என்னுஞ்சுருதியினால்.

அப்படியானால் சுழுமுனை நாடியால் மேல் செல்கின்றவன் என்பதாதி சுருதிக்கு வியர்த்தத் தன்மையாம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

तेन-பரப்பிரம்ம வித்தையின்கண் கமனத்தை நிஷேதித்தலால்

विद्यान्तरेषु-ஸகுண வித்தைகளில்

गत्युत्क्रान्ती-செல்லுதல் கிளம்புதல் முதலியவையங்கீகரிக்கத் தக்கனவாம். (48)

(அ) இங்ஙனம் மோக்ஷத்திற்கு உத்தராயணமார்க்கத்தின் அபேக்ஷையின்மையினைச் சாதித்து கருமத்தினபேக்ஷையினையும் நிராகரிக்கின்றவராய் அதற்கு கேவல வித்தையினதீனத் தன்மையைக் கூறுகின்றார்.

देवादीनां नास्ति कर्माधिकारो-
विद्या तेषां केवला मुक्तिहेतुः ।
पारम्पर्यात्कर्मणामस्यहेतो-
विद्याङ्गत्वं सर्ववर्णाश्रमाणाम् ॥ ४९ ॥

**பதவுரை**

देवादीनाम्-தேவர் முதலியோருக்கு

कर्माधिकारः नास्ति-கருமத்தின் கண் அதிகாரமின்றாம்

तेषां केवला विद्या-அவர்கட்கு கேவலம் ஞானமே

मुक्तिहेतुः-மோக்ஷத்திற்குக் காரணமாம்

அங்ஙனமாயினும் கருமத்தின்கண் அதிகாரமுள்ள மனிதர்களுக்கு கருமத்தினை அபேக்ஷித்து மோக்ஷமுண்டாம் அங்ஙனம்

அங்கிகரியாவிடின் "सर्वापेक्षा च यज्ञादिश्रुतेः" ஸர்வ கருமங்களை யும் அபேக்ஷிக்கின்றது. ஆன்மாவை எஞ்ஞ முதலியவற்றால் அறிய விரும்புகின்றனர் என்பதாதி சுருதியினால் என்னுஞ் சூத்திரத்திற்கு விரோதமாம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

उक्तहेतोः- கூறிய ஹேதுவினால்

सर्ववर्णाश्रमाणां कर्मणाम्-ஸர்வவர்ணா சிரமங்களைக் குறித்து விதிக்கப்பட்ட கருமங்கட்கு

पारम्पर्यात्-பரம்பரையாக

विद्याङ्गत्वम्-சாக்ஷான் மோக்ஷ ஹேதுவான ஞானத்தைக் குறித்து அங்கத்தன்மையாம்.

### விசேஷவுரை

கருமங்களின் அபேக்ஷையை உடன்படின் "अत एव च अग्नीन्धनाद्यनपेक्षा" வித்தைக்கு புருஷார்த்த ஹேதுத்தன்மை உண்மையினாலேயே கருமத்தின் அபேக்ஷையின்றும். என்னும் முதற் சூத்திரத்தோடு விரோதமுண்டாம் ஆதலின், கூறிய ஏதுவால் என்பதற்குப் பொருள் வருமாறு மனிதர்கட்கும் ஞான பரிபாகத்தின் அங்கமாக சன்னியாசம் அவசியம் வேண்டியதாய் இருத்தலானும் ஞானம் உண்டாகுங்கால் கருமம் பாதிக்கப் படுதலானும் கருமத்தாலன்று பிரஜையாலன்று என்பதாதி சுருதிக்கு விரோதம் வருதலானும் நேரே கருமங்கட்கு மோக்ஷ ஏதுத்தன்மை பொருந்துவதின்றும் என்க. (49)

(அ) எந்த வாயிலாக பாரம்பரியமாம் என்னுமாகாங்க்ஷை உண்டாகக் கூறுகின்றார்.

पारम्पर्यं शुद्धिहेतुत्वहेतोर्यज्ञादीनां श्रूयते स्मर्यते च ।
साक्षादेषां मोक्षहेतुत्वमेव मन्विच्छन्तोऽप्यागमान्नप्रतीमः ॥ ५० ॥

### பதவுரை

यज्ञादीनाम्-எஞ்ஞ முதலியவைகட்கு

शुद्धिहेतुत्वहेतोः- அந்தக்கரண சுத்திக்கும் விவிதிஷைக்கும் ஏதுத் தன்மை வடிவ ஏதுவினாலேயே

पारम्पर्यम्-பரம்பரா சாதனத் தன்மை

श्रूयते स्मर्यते च-சுருதியிலும் ஸ்மிருதியிலும் கேட்கப்படுகின்றது

"येन केन च न यजेतापि दर्वीहोमेन अनुपहतमना एव भवति" "तमेतं वेदानुवचनेन"

"எந்தச் சாதனத்தால் - யஜிக்கின்றவனுயினும் தருவிஹோமத்தால் தடுக்கப்படாத மனமுடையவனுகவே ஆகின்ருன்" அந்த இவ்வான்மாமை வேதானு வசனத்தால் என்பது முதலிய சுருதியும்.

"योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये" "कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते,"

"யோகிகள் அந்தக்கரண சுத்தியின் பொருட்டு ஆசையினை விட்டு கருமத்தினைச் செய்கின்ருர்கள்" புண்ய கருமங்களால் பாவம் நிவர்த்தியாகும்போது பின்பு ஞானமுண்டாகின்றது என்பது முதலிய ஸ்மிருதியும் கூறிய பரம்பராசாதனத் தன்மையின் கண் பிரமாணமாமென்பது பொருள். கூறிய பிரகாரத்தால் கருமங்கட்கு பரம்பரையாக மோக்ஷத்தின்கண் உபயோகமிருப்பதுபோன்று சாக்ஷாத் சாதனத்தின்கண் பிரமாணமின்மையின் சமுச்சயத்தின் சித்தியின்ரும் என்னும் கருத்தாற் கூறுகின்ருர்.

एषां साक्षान्मोक्षहेतुत्वम्-எஞ்ஞாதி கருமங்கட்கு நேரே மோக்ஷ காரணத் தன்மையினை

एवम् अन्विच्छन्तोऽपि-இங்ஙனம் விசாரம் செய்கின்றவராயினும் யாம்

आगमात् न प्रतीमः-சாஸ்த்திரத்தினுல் அறிகின்றிலேம். (50)

(அ) நிருபிக்கப்பட்ட பிரமேய சமுதாயம் ஸ்வகபோலகற்பிதமாதலால் அப்பிராமாணிகமாம் என்னுஞ் சங்கையினையும் கீர்த்திப் பிராப்தியின் பொருட்டு இந்த கிரந்தமியற்றப்பெற்றது என்னும் புத்தியினையும் நிராகரிக்கின்றவராய் பிரகரணத்தின் பொருளை முடிக்கின்ருர்.

इति बहुश्रुत भाषितमुच्चकैः श्रुतिशिरोवचनानुगतं महत् ।
समुपदिष्टमिदं कृपया मयाप्रियमतीव हितं च मुमुक्षवे ॥ ५१ ॥

## பதவுரை

इति उक्तैः-இங்ஙனம் தாற்பரியத்தால்

बहुश्रुतभाषितम्-பண்டிதர்களால் நிரூபிக்கப்பட்டதும்

श्रुतिशिरोवचनानुगतम् - வேதாந்த வசனத்தாலனுசரிக்கப்பட்டதும்

महत् प्रियम्-மஹத்தானதும் மிக்க பிரியமானதும்

अतीव हितं च-மிக்க ஹிதமானதுமான

इदम्-இவ்வான்ம வஸ்துவானது

मुमुक्षवे-முமுக்ஷுவின் பொருட்டு

कृपया मया-கிருபையினுல் என்னுல்

समुपदिष्टम्-உபதேசிக்கப்பட்டது.

## விசேஷவுரை

ஈண்டு பண்டிதர் என்பதனுல் சூத்திரக்காரர், பாஷியக்காரர், டீகாகாரர் (பதமபாதாசாரியர்) வார்த்திகக்காரர்களைக்கொள்க.

மஹத் = திரிவித பிரிச்சேதசூன்ய பிரத்தியகபின்ன பிரம்மமாம். நிரதிசயானந்த வடிவமாதலால் மிக்க பிரியமாம். ஸர்வானர்த்த சம்பந்தமுமின்மையின் மிக்க ஹிதமாம். (51)

(அ) அற்றேல் ஈண்டு பிரம்மம் மாத்திரம் நிருபிக்கப்பட்டதன்றும் சமன்வயம முதலியவையும் நிருபிககப்பட்டமையின் எனிரு சங்கித்து அவற்றின் நிருபணம் பிரம்மஞானத்தின் பொருட்டாதலரல் பிரம்மமே பிரதானமாக நிருபிக்கப்பட்டதாம் என்று கருதி அதன் ஞானத்திற்கு சத்தியோ முத்தியாகிய பயன் முக்கியாதிகாரியாகிய சிஷ்யனது அநுபவசித்தமாமெனக் கூறுகின்றவராய் சுவாநுபவதலதை வெளிப்படுத்துகின்ற அவனது வசனத்தை ஆரம்பிககின்ருர்.

एवं समन्वयविरोधनिरासविद्या-
निष्पत्ति साधनफला निगुरोः क्रमेण ।
विज्ञाय वेदफलमात्मनि सर्वमेव-
पश्यन्नुवाच कृतकृत्यमतिः स शिष्यः ॥ ५२ ॥

பதவுரை

समन्वयविरोधनिरासविद्यानिष्पत्तिसाधनफलानि - ஸமன்வயம் அவிரோதம் ஞானஸாதனம், பயன், என்பவைகளை

एवं क्रमेण-இங்ஙனம் கிரமமாக

गुरोः विज्ञाय-குருவினிடத்தில் நின்றுமறிந்து

वेदफलं सर्वमेव-ஞானத்தின் பயனனைத்தையுமே

आत्मनि पश्यन्-தன்னிடத்தில் காண்கின்றவனாய்

कृतकृत्यमतिः-கிருதகிருத்தியனாய்

सः शिष्यः उवाच-அச்சீடன் சொல்லத் தொடங்கினான்.

ஞானத்தின் பயன் மோக்ஷமாம். அனைத்துமென்றது ஸர்வ துவைத பாதமும் சுக துக்க ப்ராபதி பரிகார வடிவமுமாம். (52)

(அ.) சீடனது வாக்கியங்களையே ஆறு சுலோகங்களால் தெரிசிப்பிக்கின்றார்.

विद्याविग्रहमग्रहेण पिहितं प्रत्यञ्चमुच्चैस्तरा-
मुत्कृष्योत्तमपूरुषं सुनिधिया मुञ्जादिषीकामिव ।
कोशात्कारणकार्यरूपविकृतात्पश्यामि निःसंशयं-
क्वासीदस्ति भविष्यतिक्वनुगतः संसारदुःखोदधिः ॥

பதவுரை

विद्याविग्रहम्-சொப்பிரகாசசிதேக ரசமும்

अग्रहेण उच्चैस्तरां पिहितम्-அனிர்வசனீயவஞ்ஞானத்தாலத்தியந்த மறைக்கப்பட்டதும்

उत्तमपूरुषं प्रत्यञ्चम्-பரமான்ம வடிவனுமான பிரத்தியகான்மாவை

सुनिधिया - சுருதியினனுகூலமான மனனத்தால் கூர்மை செய்யப்பட்ட புத்தியினால்

मुञ्जात् इषीकामिव-முஞ்சப் புல்லில் நின்றும் அதன் நடுவிலுள்ள தண்டையெடுப்பது போன்று

कारणकार्यरूपविकृतात्–காரணகாரிய ரூபத்தால் விகாரத்தை யடைந்துள்ள

कोशात् उत्कृष्य-பஞ்சகோசங்களினின்றும் வேருக்கி

निःसंशयं पश्यामि–சம்சயவிபர்யயமின்றியனுபவிக்கின்றேன்

பஞ்சகோசங்களினின்றும் வேறு பிரிக்கப்பட்ட ஆன்மாவினை பிரம்மவடிவமாகக் காண்டலின் பயனை வெளிப்படுத்துகின்ருர்.

संसारदुःखोदधिः–ஸம்சார துக்கமாகிய சமுத்திரம்

क आसीत् अस्ति भविष्यति–எங்கே இருந்தது இருக்கின்றது இருப்பது.

कनुगतः எங்கே போயிற்று மூன்று காலத்திலுமில்லை யென்பது பொருள்.

**விசேஷவுரை**

உத்தம புருடனாகிய பரமான்மா பிரத்தியகான்மாவினின்றும் வேருயிருத்தலினுலேயே விளங்குவதில்ருர். அவித்தையால் மறைபட்டமையானன்று எனினுஞ் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு பிரத்தியகான்மாவெனப்பட்டது. மறைப்பின் கண்ணுத்தியந்திரத்தன்மையாவது ஆயிர மெத்தனங்களாலும் பேதிக்கப்படாத் தன்மையாம். முஞ்சம் = இஷீகையை மறைக்கின்ற வெளித்தோல் இஷீகை = தண்டு. காரண காரிய வடிவம் = உட்புறம்பாந்தன்மை. (53)

(அ) அங்ஙனமாயினும் துவைதாபாஸம் அசம்பாவிதமாயினும் (பொருந்தாததாயினும்) பிரதீதியாதலின் ஜீவிக்கின்றவனுக்கே மோக்ஷ மனுபவ சித்தமாமெனக் கூறுகின்ருர்.

पश्यामि चित्रमिव सर्वमिदं द्वितीयं-
तिष्ठामि पुष्कलचिदेकव पुष्यनन्वै ।
आत्मानमद्वयमनन्तसुखैकरूपं-
पश्यामिदग्धरशनामिव च प्रपञ्चम् ॥ ५४ ॥

**பதவுரை**

सर्वमिदं द्वितीयम्–ஸம்பூர்ணமான இந்த துவைதப் பிரபஞ்சத்தினை

चित्रमिव पश्यामि-ஓவியத்தினைப் போன்று காண்கின்றேன்

अनन्ते पुष्कलचिदेकवपुषि तिष्ठामि அபரிச்சின்ன பூர்ண சிதேக ரச ஆன்மாவின் கண் நிற்கின்றேன்

अद्वयम् अनन्त सुखैकरूपम्-அத்துவயமாகவும் அபரிச்சின்ன ஆனந்த மாத்திர வடிவமாகவும்

आत्मानं पश्यामि ஆன்மாவினையனுபவிக்கின்றேன்

दग्धरशनामिव-தஹிக்கப்பட்ட கயிற்றினைப் போன்று

प्रपञ्चं च (पश्यामि)-பிரபஞ்சத்தினையும் காண்கின்றேன்.

## விசேஷவுரை

தோற்றுகின்ற துவைதப்பிரபஞ்சத்திற்கு அர்த்தக்கிரியையின் சாமர்த்தியம் தஹிக்கப்பட்ட கயிறென்பதால் நிவர்த்திக்கப்பட்டது. (54)

(அ) அற்றேல் அத்துவைத தெரிசனமுண்டானபோது அதன் விருத்தமான துவைத தெரிசனத்தின் அநுவிருத்தி எங்ஙனமுண்டாம் அஃதில்லாதபோது (துவைத தெரிசனத்தின் அநுவிருத்தி இல்லாதபோது) சீவன் முக்திதான் எங்ஙனம் உண்டாம் என்று சங்கித்து அத்துவைதம் வாஸ்தவமாகவும் துவைதம் அவாஸ்தவமாகவும் அநுபவிக்கப்படுதலால் அற்பமாவது பொருந்தாமையின்றுமெனக் கூறுகின்றார்.

अद्वैतमप्यनु भवामि करस्थबिल्व-
तुल्यं शरीरमहिनिर्ल्वयनीव वीक्षे ।
एवं च जीवनमिव प्रतिभासमानं
निःश्रेयसोधिगमनं च मम प्रसिद्धम् ॥ ५५ ॥

## பதவுரை

अद्वैतमपि-அத்துவைதத்தினையும்

करस्थबिल्वतुल्यम्-உள்ளங்கையிலுள்ள வில்வக்கனி போன்று

अनु भवामि-அபரோக்ஷமாயனுபவிக்கின்றேன்

அத்துவைதத்தினை அபரோக்ஷமாய் அனுபவிக்கின்ற வித்துவானுக்கு ஓர்போது துவைதம் தோற்றினும் முன்போல் தோன்றுவதில்லை என்பதன்கண் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.

अहिनिर्ल्वयनीव - ஸர்ப்பம் தனது தோலினைக்காண்டல் போல

शरीरं वीक्षे-தேகாதி துவைதத்தினைக் காண்கின்றேன்

எப்படி ஸர்ப்பத்தின் தோலானது தியாகத்திற்கு முன்பு ஸர்பத்தினால் நானென்றே அறியப்பட்டதாகி தியாகத்தின் அந்தரம் அதன் அபிமானமற்றதாகியே பிரதீதியாகின்றதோ அப்படி தேகாதி வடிவ துவைதத்தின்கண் முன்போன்று நான் என்னுடையது என்னும் அபிமானத்தை விட்டு பொய்யாகவே இஃது தோற்றுகின்றது என காண்கின்றேன் என்பது பொருள். பொய்யாக நிச்சயிக்கப்பட்ட துவைத தெரிசனத்தின் அனுவிருத்தி சித்தித்தபோது திரண்ட பொருளைக் கூறுகின்றார்.

एवं च-இவ்வாறாகவே

प्रतिभासमानं जीवनम् தேகஸம்பந்தியாகத் தோற்றாநின்ற ஜீவனமும்

निःश्रेयसोऽधिगमनं च-மோக்ஷத்தினடைவும்

मम प्रसिद्धम्-எனக்கு பிரசித்தமாம்.

சுலோகத்திலுள்ள இவசப்தம் பாதிதானுவிருத்தியை உணர்த்துதற் பொருட்டாம். (55)

(அ) வித்தையின் மஹிமையினால் எனது அபகாரியான துவைதம் அடியோடேயே நாசமாயிற்றென அதனைத் துதிக்கின்றார்.

अद्वैतबाधकमभून्मम यद् द्वितीय-
मद्वैतमस्य बत बाधकमद्य जातम् ।
मोहाद्द्वितीयमपबाधकमस्य विद्या-
सामर्थ्यतोद्वयनिबर्हणमद्वितीयम् ॥ ५६ ॥

பதவுரை

अद्वैतबाधकम् அத்துவைதத்தினை பாதிப்பதாக

मम यद् द्वितीयमभूत् -எனக்கு யாதொரு துவைதமிருந்ததோ

अस्य-அந்த துவைதத்திற்கு

अद्वैतमेव बाधकम् जातम्-அத்துவைதமே பாதிப்பதாக ஆயிற்று

இப்போதும் (ஞானகாலத்திலும்) முன்போலவே துவைதமே அத்துவைதத்தினை பாதிப்பதாக ஏறுகாது. என்றுசங்கித்து துவைதத்திற்கு அப்பிரகாச அஞ்ஞான வலிமையை ஆசரியிப் பதினால் அத்துவைதத்தை பாதிப்பதன்கண் அத்துவைத்திற்கோ பரமார்த்த வஸ்துவை விஷயஞ் செய்கின்ற வித்தையின் சாமர்த்தியத்தினை ஆசிரியிக்குந் தன்மையால் வலிமையின் மையின் அங்ஙனமன்று என்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

मोहात् द्वितीयम् - அஞ்ஞானத்தினையாசிரயித்து துவைதமானது

अस्य अपबाधकम्--அத்துவைதத்தினை பாதிப்பதாம்

विद्यासामर्थ्यतः--வித்தையின் சாமர்த்தியத்தினையாசிரயித்து

अद्वितीयंद्वयनिबर्हणम्-அத்துவைதமானது துவைதத்தை பாதிப்பதாம். (56)

(அ) பந்தத்தில் நின்றும் விடுபட்டவான்மாவினை கண்டு முன்பு அனுபவித்த ஸம்ஸாரத்தினை ஸ்மரிக்கின்றவனாய் அதன் கண் தனக்குண்டான ஆச்சரிய புத்தியினை வெளிப்படுத்து கின்றார்.

आश्चर्यमद्य मम भाति कथं द्वितीयं-
नित्ये निरस्त निखिलाशिवचित्प्रकाशे ।
आसीत्पुरेति किमिमाः श्रुतयो न पूर्वं-
येनद्वितीयम भवत्तिमिर प्रसूतम् ॥ ५७ ॥

பதவுரை

नित्ये निरस्त निखिला शिवचित्प्रकाशे - நித்தியமும் ஸர்வ அசுபமு மற்றதுமான சுயம்பிரகாச வஸ்துவின் கண்

द्वितीयं पुराआसीदिति कथम् भाति-துவைதப்பிரபஞ்சம் முன்பு இருந்தது என எவ்வாறு தோற்றும் என

मम अद्य आश्चर्यम् -எனக்கு இப்போது ஆச்சரியமுண்டாகின்றது

ஈண்டு ஆச்சரியமென்னை வாஸ்த்தவமாகக் கூறிய வடிவமுள்ள பரமாத்மாவினிடத்தில் அஞ்ஞானத்தினால் துவைத வடிவானர்த்தம் பொருந்துதலின் என்று சங்கித்து அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்ற தத்துவ ஞானத்தையுண்டு பண்ணுவதன்கண் நிரபேக்ஷகாரணங்களான வேதாந்த வாக்கியங்கள் அநாதிகாலமாக சித்தித்திருக்கும்போது ஞானத்தின் பாவத்தினால் அஞ்ஞானத்தினனுவிருத்தியாம். அதனால் துவைதத்தினனுவிருத்தியாம் என்னுமிதுவும் ஆச்சார்யமேயாமெனக் கூறுகின்றார்

इमाः श्रुतयः- தத்துவஞானத்தினேதுவான இந்த வேதாந்த வாக்கியங்கள்

पूर्वं किं न-முன்பு இல்லையா

येन तिमिरप्रसूतम्-எதனால் அஞ்ஞானத்தாலுண்டானதாகி

द्वितीयमभवत्- துவைதப்பிரபஞ்சமிருக்கும். (57)

(அ) இப்போது முன்பு சுருதிவாக்யங்களிலிருந்த போதிலும் அன்வயவ்யதிரேகங்களால் தத்துவஞானத்தினபாவத்தின்கண் காரணத்தினை நிச்சயித்தது. இந்த ஞான முதலியவற்றை சம்பாவனை செய்கின்றவனாய் ஆச்சரியமதியினை விடுகின்றான்.

त्वत्पादपङ्कजसमाश्रयणं विना मे-
सन्नप्यसन्निव परः पुरुषः पुरासीत् ।
त्वत्पादपद्मयुगलाश्रयणादिदानीं
नासीन्नचास्ति न भविष्यति भेदबुद्धिः ॥ ५८ ॥

### பதவுரை

पुरा त्वत्पादपङ्कजसमाश्रयणं विना मे -முன்பு தேவரீரது திருவடித் தாமரையை சரணடையாமையினால் எனக்கு

परः पुरुषः-பரமான்ம வஸ்த்துவானது

सन्नपि असन्निव आसीत्-இருந்தும் இல்லாததுபோல் இருந்தது

इदानीम्-இப்போது

त्वत्पादपद्मयुगलाश्रयणात्-தேவரீரது உபயதிருவடித் தாமரையினை சரணடைந்திருத்தலின்

भेदबुद्धिः न आसीत्-துவைத ஞானம் இருந்ததில்லை

न च अस्ति न भविष्यति-இருக்கின்றதுமில்லை இருப்பதுமில்லை

### விசேஷவுரை

முன்பு ஸம்ஸாரத்தில் வைராக்கிய பூர்வகம் உம்மைப் போன்ற குருவை சரணடையாமையினால் வேதாந்த வாக்கியங்கள் இருந்தபோதிலும் குருவின் உபதேசத்தின் தீனமான தத்துவஞானமின்மையின் அஞ்ஞானத்தினதீனமான துவைதத்தினகண் அபினிபிவேசத்தால் அத்துவைதம் பரமார்த்தமாக இருந்தபோதிலும் இல்லாதது போலிருந்தது இப்போதோ குருவின் அனுக்கிரஹத்தாலடைவுற்ற தத்துவ ஞானத்தினால் அத்துவைத ஆன்மதத்துவமே எப்போதுமிருக்கின்றது. பிராந்திமாத்திரத்தால் சித்தித்ததுவைதமோ மூன்று காலத்திலும் அசத்தாமென நிச்சயிக்கப்பட்டதென்பது பொருள். (58)

(அ) ஆன்மலாபத்தினும் மேலானலாபமின்மையின் அவ்வான்மாவினையடைவித்த குருவிற்கு அதற்கு (ஆன்மாவினையடைவித்தலுக்கு) சமானமானபதிலுபகாரமின்மையின் பக்திபூர்வகம் குருவின் உபாசனையே ஆயுளுள்ளவரை என்னால் செய்யத்தக்கது அத்துணையானும் அவருக்கு சந்தோஷமுண்டாகும் எனக் கருதிக் கூறுகின்றார்.

यस्मात्कृपापरवशो ममदुश्चिकित्सं
संसाररोगमपनेतुमसि प्रवृत्तः ।
त्वत्पादपङ्कजरजः शिरसादधान-
स्त्वामाशरीरपतनादहमप्युपासे ॥ ५९ ॥

### பதவுரை

यस्मात्-யாதொரு காரணத்தினால்

कृपापरवशः-தயையின் அதீனராயிருந்துகொண்டு தேவரீர்

ममदुश्चिकित्सम्-எனது நிவர்த்திக்கத்தகாத

संसाररोगम् – ஸம்ஸாரமாகிய வியாதியினை

अपनेतुं प्रवृत्तोऽसि – நிவர்த்தித்தற்கு பிரவிருத்தித்தவரா யிருக்கின்றீரோ அதனால்

त्वत्पादपङ्कजरजः – தேவரீரது திருவடித்தாமரையின் தூளியை

शिरसा दधानः – சிரசினால் தரிக்கின்றவனாய்

अहमपि त्वां – நானும் உம்மை

आशरीरपतनात् – சரீர வீழ்ச்சி பரியந்தம்

उपासे – சேவிக்கின்றேன். (59)

(அ) அதிகாரி விஷயப் பிரயோஜனத்தோடு கூடிய தனது கிரந்தத்தை முடிக்கின்றவராய அதற்கு முமுக்ஷுக்களால் கொள்ளத்தக்கதாந் தன்மையினை சூசிப்பிக்கின்றவராய் பொருளோடு கூடிய பெயரைக் கூறுகின்றார்.

संक्षेपशारीरकमेवमेत-
त्कृतं परिव्राजकमुक्तिहेतुः ।
गुरुप्रसादात्परिलभ्य तत्त्वं
त्रयीशिरस्तत्त्वनिवेदनाय ॥ ६० ॥

**பதவுரை**

गुरुप्रसादात् – குருவின் அனுக்கிரஹத்தால்

तत्त्वं परिलभ्य – உண்மைப்பொருளையுணர்ந்து

त्रयीशिरस्तत्त्वनिवेदनाय – உபநிஷத்துக்களின் ரஹஸ்யத்தினை வெளிப்படுத்துதற் பொருட்டு

परिव्राजकमुक्तिहेतुः – ஸந்நியாசிகட்கு மோக்ஷத்திற்குக் காரணமாக

एवमेतत् संक्षेपशारीरकं कृतम् – இங்ஙனம் இந்த சங்க்ஷேப சாரீரகமென்னும் கிரந்தம் என்னாலியற்றப்பெற்றது. (60)

(அ) இந்த கிரந்தத்தினை கங்கைக்குச் சமமாகத் துதிக்கின்றவராய் இதற்கு மங்களத்தினைப் பிரார்த்திக்கின்றார்.

